உத்தரகாமிகம், ஆசாரியாபிஷேக
விதிப்படலம், சுலோகம் - ௨௫.

𑌶𑍈𑌵𑌾𑌰𑍍𑌥𑌦𑍇𑌶𑌿𑌕𑍇 𑌹𑌿𑌤𑍍𑌵𑌾 𑌸𑌾𑌰𑌂 𑌸𑌨𑍍𑌤𑌤𑌂 𑌨𑌰𑌃।
𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌨𑍍𑌯𑌾𑌸𑌂 𑌦𑍁𑌰𑍍𑌮𑌤𑌿𑌂 𑌚 𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍॥

சைவார்த்ததேஹிகே ஹித்வா ஸாரம் சந்ததம் நர:|
யோந்யத்ர குருதே ந்யாஸம் துர்மதிஞ்ச விவர்ஜயேத்||

இதன் பொருள்

சைவாகமப்பொருளை அறிந்த ஆசிரியனை விடுத்து மனிதன் எப்பொழுது அன்னியகுருவிடத்தில் நூல் ஆராய்ச்சி செய்கின்றானோ, மனசைச் செலுத்துகின்றானோ அந்தத் துர்ப்புத்தி உடையவனை நீக்கிவிட வேண்டும்.

# சிவஞானபோதமும்,

## வார்த்திகப்பொழிப்பும்,

# சிவஞானபாடியமும்.



## இப்புத்தகம் அச்சிட்டு வெளியிடுதற்குப் பொருளுதவி புரிந்தோர் பெயர் முதலியன.

தேவகோட்டைச் சிவாகம சித்தாந்த சங்கம்,

திருவாளர், அரு. அரு. சோம. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள்;
திருவாளர், மெ. அரு. நா. இராமநாதன் செட்டியார் அவர்கள்;
இவர்கள் இப்புத்தகம் அச்சிடுதற்கு முக்கிய சாதனமாகிய காயிதம் இருபத்தொன்பது (றீம்) கட்டு உதவினார்கள்;
அதன் கிரயம் ... ... ரூபா கஉ00.

சிவஞானயோகிகள் மரபின் வழித்தோன்றலாகிய அம்பாசமுத்திரம் வக்கீல்,
திருவாளர், க. அ. சிவஞானம்பிள்ளை அவர்கள் ... ரூபா உ௭0.

சென்னை, நியாயகலாசாலைப் பேராசிரியர்,
திருவாளர், கா. சுப்பிரமணிய பிள்ளை எம்.ஏ., எம்.எல்., அட்வகேட் அவர்கள் ... ... ... ரூபா ருo.

பெரியகுளம், சைவசித்தாந்த சபையார் ... ரூபா அசச

சிவில் அசிஸ்டெண்டு சர்ஜனும், இராயபுரம் மெடிகல் ஸ்கூல் போதகருளொருவருமாகிய திருவாளர், செ. சின்னசாமிபிள்ளை எம். பி. சி. எம். அவர்கள் இப்புத்தகத்திலுள்ள திருவுருப்படங்கள் செய்வித்து உதவினார்கள்.





சிவஞானபோத உபதேசம்.

திருநந்தி தேவர்.

ஸ்ரீகண்டமுதல்வர்.

SOLDEN & CO., MADRAS, S. E.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



திருவெண்ணெய் நல்லூர்

# ஸ்ரீ மெய்கண்டதேவர்

அருளிச்செய்த

# சிவஞானபோதமும்,

வார்த்திகப் பொழிப்புரையும்,

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து

ஸ்ரீ மாதவச்

சிவஞானயோகிகளருளிச்செய்த

# சிவஞானபாடியமும்.



இவை

சூரியனார்கோயி லாதீனத்து மகாசந்நிதானமாகிய

ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரதேசிகசுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி,

மேற்படி ஆதீனத் திருக்கூட்டத்தினரால் பரிசோதித்து,

சிவஞானயோகிகள் மரபினராகிய

அம்பாசமுத்திரம் வக்கீல்

திருவாளர், க. அ. சிவஞானம் பிள்ளை அவர்கள்

விரும்பியபடி,

ஷை சூரியனார்கோயி லாதீன சீடர்களுளொருவராகிய

பெரியகுளம் அப்பாப்பிள்ளை யென்னும்

மு. பால்வண்ணம் பிள்ளையால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

தர்மஇ௵ மார்கழி௴.

# இப்புத்தகத்திலடங்கியவை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சென்னை நியாயகலாசாலைப் பேராசிரியர்

திருவாளர். கா. சுப்பிரமணியபிள்ளை, எம்.ஏ., எம்.எல்.,

அட்வகேட் அவர்கள் எழுதிய

# முன்னுரை.

கண்ணகன்ஞாலத்தே பெறலரும் மக்கட்பிறவிபெற்றோர் முதற்கண் இவ்வுலக வாழ்க்கையில் தாம் சிறந்தநிலைபெற்று ஓங்கவேண்டுமென்னும் அவாவின்லே கடவுள்வணக்கமுதலிய தம் முயற்சியாவும் அதன்பொருட்டே செய்தொழிவது யாவர்க்கும் வெளிப்படை. திருவள்ளுவ நாயனர் "நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்—புல்லறி வாண்மை கடை" என்றருளிச்செய்த உண்மையைத் தமது அநுபவத்தில் நன்குணர்ந்தபின்னர் அன்னோர் என்றும் நிலைத்த இன்பம் எய்துதற்குரிய நெறி யாது? என ஆராயப் புகுவர். அங்ஙன மாராயுமிடத்து, உடலும் உயிரும் வேறு? உடல் நீத்த பின்னரும் உயிர் நிலையுறுமா? உயிர் தானே அழியாத இன்பத்தைத் தேடித் துய்க்குமா? அன்றி ஒரு முதல்வனது திருவருளை வேண்டிநிற்குமா? உயிர்க்கும் உடலுக்கும் இறைவனுக்குமுள்ள தொடர்புகள் யாவை? இறைவனை அறிவது யாங்ஙனம்? என்னும் இன்னோரன்ன வினக்கள் எழுவதியல்பே. இவற்றிற்கு விடைகூற வெழுந்த நூற்றொகுதிகளுக்கு அளவில்லை. அவ்வா றெழுந்த பன்னூல்களின் முடிவுகளையும் தனது உறுப்புக்களாகக்கொண்டு தலையாய உண்மைப்பொருளைத் தன்னகத்து நன்கு விளக்கி முழுமுதற்கடவுளை அங்கைநெல்லியெனக் கண்டு கலந்து எல்லையற்ற பேரின்பம் எளிதாகத் துய்த்தற்குரிய நெறி ஈதெனக் காட்டுவதில் இணையற்ற பெருமைவாய்ந்த அருணூற்றொகையே சைவசித்தாந்தமாகும்.

இச்சைவசித்தாந்த நூற்பயிற்சி குன்றிய காலத்தே அதன் ஒளியை எங்கும் பரவச்செய்யும்வண்ணம், தமிழ்நாடுசெய்த பெருந்தவப்பயனாகிய ஸ்ரீ மெய்கண்டதேவநாயனர் என்னும் அருண்ஞானச்செம்மல் தோன்றிச், சித்தாந்தநூற் பெருங்கடலுட் கடைந்தெடுத்த ஆராவமுதமாகிய சிவஞானபோதத்தைத் திருவாய்மலர்ந்தருளினர். அதன் பன்னிரண்டு சூத்திரங்களும் சைவசித்தாந்தத் தேனமுதம் நிறைந்துள்ள பன்னிரண்டு பொற்கல

சங்கள்போலாம். அவ்வருந்தமிழ்நூலின் விழுமிய நுண்பொருளை விரித்துரைக்கவெழுந்தநூல்கள் பலவும் செய்யுள்வடிவினவாகவிருந்தமையால் அறிவின்மாட்சிபெறுத பலர் திண்ணிய தெளிபொருள்கொள்ள வியலாது மயங்கினர். ஆதலால் சிவஞானபோதப்பொருளை விரிவாகவும் தெளிவாகவும் அளவைமுறைக்கேற்பவும் விளக்கும் உரைநடை நூலொன்று இன்றியமையாததாயிற்று.

அப்பெற்றித்தாகிய பேருரைப்பெருநூலைத் தமிழ்மக்களுக் களித்தருளிய வள்ளல், வேளாண்குலமுதல்வராய்த் தோன்றித் தமிழ்நூற்கடலும் வடநூற்கடலும் நிலைகண்டுணர்ந்த சிவாநுபூதிச்செல்வராகிய துறைசை மாதவச் சிவஞானயோகிகளாவார். இந்நூலானது பண்டைமறைப்பொருள் கிளக்கும் திருவள்ளுவர், பன்னிருதிருமுறை, பிற அறிவர்நூல் என்னும் இவைகளின் கனிந்த பொருள்நலத்தையும், வடமொழி வேதாகமப் பொருட்டிட்பமும், இருமொழிச் சைவநூற்பொருளொருமையு மறிதற்குரிய தெளிவினையும் ஒருங்கே கொண்டுள்ளது. இந்நூல் இனிய செந்தமிழ்நடையி லுள்ள உரைநூல்களுள் தலையாயது. இதிலுள்ள ஒவ்வொரு சொற்றொடரிலும் தமிழ்ச்சுவை பொங்கித் ததும்பும் பான்மையது. வடசொற்களும் வடமொழிச் சுலோகங்களும் அம்மொழியிலுள்ளவாறே எழுதப்பெறுமல் தமிழ்ச்சுவைக் கேற்றவண்ணம் திரிக்கப்பெற்றும் மொழிபெயர்க்கப்பெற்றும் அமையப்பெற்றுள்ளன. அளவைநூலாட்சியில் இதற்கு இணையாய தமிழ்நூல் வேறியாதுமில்லை. எப்பொருளும் முன்னொடுபின் முரணுதலின்றித் திறம்பெற விளக்கப்பட்டுள்ளது. உலகத்தின்கண்ணே பல்சமயத்தவரும் தமது அறிவிற்கேற்பக் கூறும் சமயக்கொள்கைகள் எழுந்துநிலவும் முறைமையும், அவைகள் தம்முள் முரண்கொண்டுநிற்கும் நிலைமையும், அவைகள் தமது தத்துவவுணர்வின் வளர்ச்சிக்குத் தக்கவாறு ஆன்மாக்கள் பற்றுமுறைமையும், சமயாதீதமான பரம்பொருள் நிலைமையும், வகுத்துச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் அறிவுறுத்தும் மாண்பு இந்நூலுட் புலனாவதொப்ப எந்நூலுள்ளும் காண்பதரிது. சமயங்களை அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்னும் நாற்கூறுகப் பிரித்து, ஒவ்வொருகூற்றையும் அறுவகையாக வகுத்து ஆராய்ச்சி செய்த பெருமை இவ்வாசிரியருக்கே நன்குரியது. ஒற்றுமை வேற்றுமை நயவுணர்ச்சியாலும், உடன்பாட்டெதிர்மறைமுறையாலும், அகப்பக்கமாகவும் புறப்பக்கமாகவும் சமயதத்துவப் பொருள்நுட்ப மாராயப்புகும் மேலைநாட்டுக் கலைவாணருக்கு இந்நூல் தக்க வழிகாட்டியாகும். விளக்கும் பொருட்கு ஏற்ற மேற்கோளை வேண்டிய அளவு எடுத்துக்காட்டும் திட்பம் நம்மாசிரியரிடமே செவ்விதாக அமைந்துள்ளது. இங்ஙனம் சைவசித்தாந்தப் பொருளை இனிதுவிளக்கவல்ல பெருநூல் தென்மொழியிலும் வடமொழியிலும் இஃதொன்றேயெனக் கோடற்கு யாதும் ஐயமில்லை. கற்பவ

ருள்ளத்தைக் கவரும் இந்நூலின் நலங்கள் எண்ணில. அவை கற்பவர் தாமே கண்டின்புறற்பாலன. பேருரைசெய்யப் புகுவார்க்கெல்லாம் சிறந்த தோர் எடுத்துக்காட்டாக என்ஞான்றும் திகழ்தற்குரிய கதிர்மணிநூல் ஈதேயாமெனக் கருதற்பாலது.

சிவம்பழுத்த இச்செந்தமிழ் மாண்பெருநூல் இதுவரை முழுதும் அச்சியற்றப்படாதிருந்தமை நமது தவக்குறையே. அக்குறையை நிரப்பிச் சைவவுலகுக்குப் பெரும்பயனளிக்கத் திருவுளங்கொண்ட அருள்வள்ள லாகிய சூரியனார்கோயிலாதீனத்து மகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ முத்துக் குமாரதேசிகமூர்த்திகள் தமது அருமைமாணவர்க்கு இப்பெருநூற்பொ ருளை விளக்கி அன்னோர்வாயிலாக இது வெளிப்படுதற்குரிய முயற்சிகள் யாவும் தமது வாழ்நாளிலேயே செய்தருளினர்கள். அப்பேரறிவாளர் செய்த பெருமுயற்சியினாலேதான் இந்நூல் வெளிவரலாயிற்று. முன்னா ளிலே சைவத்திருநெறித்தலைவர்களது திருமுறைகளை மீள்வித்து உலகுக் கீந்தருளிய ஆதிசைவப் பரமாசாரியப் பெருந்தகையா ரொப்ப இந்நாளிலே இவ்வருமையாய உரைநூலை இத்துறவறமுதல்வர் எம்மனோர்க் களித்த வள்ளன்மை எம்மனோருள்ளத்தே எழில்பெறவிளங்கும் வற்றாத சிவானந்த இன்பவூற்றாகத் திகழற்பாலது.

அவ்வாதீனத்துத் திருக்கூட்டத்தாருள் ஒருவராய்க் கல்வியறி வொழு க்கங்களாற் சிறந்த ஸ்ரீமத் முத்துக்குமாரத்தம்பிரான்சுவாமிகள் தமது ஞானப்பேராசிரியர் தந்த ஆணையைச் சென்னிமேற்கொண்டு தாம் வரைந்து வைத்த சிவஞானபாடியச் சுவடியை ஆராய்ச்சிசெய்து சைவநன்மக்க ளுய்யும்வண்ணம் அச்சூர்தி ஏற்றுவித்தார்கள். இப்பெரியார் இவ்வருஞ் செயல் முடித்தற்பொருட்டு,

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்

என்ற மூதுரைக்கு எவ்வகையினுஞ் சிறந்ததோர் எடுத்துக் காட்டாக உழைத்த பெருநன்றிக்குத் தமிழுலகஞ்செய்யுங் கைம்மாறு யாதுளது?

இந்நூலை அச்சிடும்வண்ணம் அதன் பரிசோதனைமுதலிய முயற்சிகளை நன்கியற்றிய ஸ்ரீமத் செப்பறைச் சிதம்பரசுவாமிகள், ஸ்ரீமத் வேலாயுத சுவாமிகள், ஸ்ரீமத் திருச்செந்தூர் ஆறுமுகசுவாமிகள், காலஞ்சென்ற ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகள், ஸ்ரீமத் தக்ஷிணாமூர்த்திசுவாமிகள், ஸ்ரீமத் அண் ணாமலைச்சுவாமிகள் என்னும் அரனன்பர்கட்கு யாம் என்றுங் கடமைப் பாடுடையேம்.

இப்பெருநூல் வெளியீட்டிற்காகப் பலவகையினும் உதவிபுரிந்த பச்சையப்பன் கலாசாலைத் தமிழாசிரியர் ஸ்ரீமத் தி. த. கனகசுந்தரம்பிள்ளை பீ.ஏ., அவர்கள் முதலிய தமிழ்தேர்நண்பர்கள் யாவரும் சிவபெருமானது திருவருட்பேற்றிற் குரியாரென்பதனை நினைதொறும் நினைதொறும் உள்ளங் களிக்கின்றது.

சைவசமயநூல்களை அச்சியற்றி உலகுக்குதவுவதே தமது பெருவாழ்வெனக் கருதிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களது கல்விச்சாலை அச்சியந்திரசாலைமுதலிய அறநிலையங்களுக்கு அதிபதியாய் விளங்கும் திருவாளர் விசுவநாதபிள்ளை அவர்கள் இப்பெருநூல் வெளியீட்டின்வைத்த ஆர்வமிகுதியால் இடையூறுகளொன்றையும் பொருட்படுத்தாது தமது இயந்திரசாலையில் பதிப்பித்துதவிய பெருநன்மை சைவநன்மக்கள் என்றும் பாராட்டுஞ் சீர்மைத்து.

பெறற்கரும்பெற்றித்தாய இத்தமிழ்மாண்சைவப் பெருநூலைச் சைவசித்தாந்தப் பளிக்குமாடத்தின் நடுவண் இறைவற்கமைத்த முழுமணிப்பீடமெனக்கொண்டு போற்றுதல் சைவநன்மாந்தர் யாவர்க்கும் ஒருதலையாய கடமையாகும்.

இங்ஙனம்

கா. சுப்பிரமணியம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சிதம்பரம் சிவஞானத் திருத்தளி

# ஸ்ரீமெய்கண்டதேவருரைமாணுக்கர்

செப்பறை

## ஸ்ரீமத் சிதம்பரசுவாமிகளவர்களியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

வழிபாடு பலவே றன்ன வழிபாட்டின் மாந்த ராக்கை
வழிபாட்டுக் குரிய வாய்மைப் பெரும்பயன் வழங்கு மாற்றான்
வழிபாட்டிற் றலைய தீசன் மலரடி மலர்நீ ரன்ன
வழிபாடு கூறுங் கூற்று மற்றைநூற் றமம தாமே. (க)

அற்றன்று சிவாக மங்க ளவைதம்முண் முரணு மென்னி
னற்றன்றங் கவைக்கச் சாணி யாஞ்சிவ ஞான போத
மற்றன்று பொருளொன் றன்ற ததன்பொரு ளநேக மென்னி
னற்றன்று சிவமெய்ஞ் ஞான பாடிய மதுத னுனே. (உ)

சிவஞான மின்றிச் சீவன் செல்லுநற் கதிய தென்றற்
குவமான மாகா யத்தி னுரியுரித் துடுப்ப தென்ப
சிவஞான பாடி யத்தைத் தேர்ந்துடன் றெளியா தன்ன
சிவஞான முண்மை யின்மை சிவஞானத் துணிபு மன்னே. (ங)

பாடியம் பல்ல சொல்லும் பாடியஞ் செல்லா தென்னி
னீடிய தெய்வம் பல்ல நீள்சிவஞ் செல்லா தேகொ
ணடிய தெய்வந் தாரந் தமஞ்சிவ மென்னி னன்றாந்
தேடிய சிவமெய்ஞ் ஞான பாடியத் தேனு மற்றே. (ச)

இத்துணையும் யாமோது மோத்தி னுனு
மின்னுமின்னே ரன்னபிற வாற்றி னுனு
மொத்தலுயர் பவைநீத்திட் டுயரு மன்ன
நயநூலச் சிட்டுலகுக் குதவி னுற்
சித்தமுறு தூய்மைசிவ தீக்கை யோதுஞ்
சிவாகமத்தி னெழுக்கிழுக்கி னித்தா னித்தச்
சித்தினுட னுளதாதற் கச்ச மாநற்
றிருமுத்துக் குமாரமுனி யினிதின் மாதோ. (ரு)

சிறப்புப்பாயிரமுடிந்தது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ மெய்கண்டதேவர் சரித்திரச்சுருக்கம்.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாங்
கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெ மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

நடுநாட்டிலே திருத்தூங்கானைமாடம் என்னுஞ் சிவாலயத்தைத் தன்னகத்தேகொண்ட பெண்ணாகடம் என்னும் ஊரிலே வேளாளர் குலாதிபருஞ் சைவத் திருநெறியாளருஞ் சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவருமாகிய அச்சுதர்களப்பாளர் என்பவரொருவர் இருந்தார். அவர் கல்விச்செல்வம் பொருட்செல்வம் என்னுமிரண்டானுஞ் சிறப்புற்று விளங்கியும் புத்திரப்பேறின்மையால் மனந்தளர்ந்து, தமது குலகுருவாகிய சகலாகமபண்டிதர் என்னுங் காரணப்பெயருடைய திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியர் பாற் சென்று வணங்கிநின்று தமதுகுறையை விண்ணப்பஞ் செய்தனர்.

அதுகேட்ட சகலாகமபண்டிதர் தமது ஆன்மார்த்தபூசையை முடித்துக்கொண்டு தேவாரத்திருமுறையை விதிப்படி அருச்சித்து வணங்கி, அச்சுதர்களப்பாளரை அத்திருமுறையிற் கயிறுசாத்தும்படி ஆஞ்ஞைசெய்தார். அச்சுதர்களப்பாளர் எட்டுறுப்பும் பூமியிலே தோயும்படி அத்திருமுறையைப் பன்முறை நமஸ்கரித் தெழுந்து சிவபிரானைத் துதித்து அத்திருமுறையிலே கயிறுசாத்தினர். சாத்துதலும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் அருளிச்செய்த "கண்காட்டு நுதலானும்" என்னுந் திருவெண்காட்டுத் திருப்பதிகத்திலே,

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே

என்னும் இரண்டாவது திருப்பாடல் உதயமாயிற்று. ஆதலும், சகலாகமபண்டிதர் மிகமகிழ்வுற்று, அத்திருப்பாடலின் பொருளையும், திருவெண்காட்டின் மான்மியத்தையும், அங்கேயுள்ள 'முக்குளதீர்த்தத்தின்'

பெருமையையும், அதிலே ஸ்நானஞ்செய்து சுவாமிதரிசனஞ் செய்யவேண்டிய விதியையும், அச்சுதர்களப்பாளருக்கு உபதேசித்துத் திருவெண்காட்டுக்குப் பிரயாணமாகும்படி அவருக்கு ஆஞ்ஞை செய்தனர்.

அச்சுதர்களப்பாளர் ஆசிரியரைவணங்கி விடைபெற்றுத் தமது மனைவியாரோடும் வழியிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவெண்காட்டை யடைந்து விதிப்படி முக்குளதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, சுவேதவனப்பெருமானையும் பிரமவித்தியாநாயகியாரையுங் காலந்தோறுந் தரிசித்து வழிபட்டு அங்கே வசித்துவருவா ராயினர்.

இங்ஙனம் வைகும் நாளிலே ஒருநாள் சுவேதவனப்பெருமான் அச்சுதர்களப்பாளர் சொப்பனத்திலே தோன்றியருளி, "அன்பனே! உனக்கு இப்பிறவியிலே புத்திரப்பேறு அரிதாயினும் எமக்கு மிகவும் பிரீதியுள்ள தாய் மெய்யன்போடு தன்னை ஓதுவோர்க்குச் சகலபேறுகளையுந் தருவதாயுள்ள தேவாரத் திருப்பதிகத்தையே உண்மைப்பிரமாணமாக நம்பிவந்து வழிபாடுசெய்கின்றாய் ஆகலின், அத்தேவாரங்களைப் பாடிய ஞானசம்பந்தன் போலவே அத் தேவாரத் திருப்பதிகங்களின் மெய்ப்பொருளை விளக்கி மெய்ந்நெறியாகிய சைவசமயத்தை ஸ்தாபனஞ்செய்யவல்ல ஒரு சற்புத்திரனை உனக்குத் தந்தோம்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர்.

உடனே அச்சுதர்களப்பாளர் விழித்தெழுந்து பெருமகிழ்வுற்றுத் திருவெண்காட்டிறைவர் திருவருளைத் துதித்து, நிகழ்ந்தசெய்தியைத் தமது மனைவியாருக்குத் தெரிவித்து, அவரோடு தாமும் ஆலயம்புகுந்து சுவேதவனப்பெருமானையும் பிரமவித்தியாநாயகியாரையும் மிக்க பேரன்போடு வழிபட்டனர். இங்ஙனம் நாடோறுஞ் சிவதரிசனஞ் செய்துகொண்டு அங்கு வசித்துவரும்நாளிலே அவர் மனைவியார்பால், எந்நாட்டினுந் தென்னாடே சிறப்பவுஞ் சித்தாந்தசைவத் திருநெறி தழைப்பவுந் திருவெண்காட்டீசர் திருவருளால் கருப்போற்பத்தியாகிய பெரும்பேறு உளதாயிற்று.

அஃதறிந்த அச்சுதர்களப்பாளர் திருவருளைப் புகழ்ந்து துதித்துப், பத்துமாசங்களினுஞ் செய்யவேண்டிய சடங்குகளைச் சிவாகமவிதிப்படி செய்து பெருமகிழ்ச்சியுற் றிருக்கும் நாளில், அருக்கன்முதலிய கோள்களெல்லாம் அழகிய உச்சங்களிலே பெருக்கவலியுடன் நிற்ப நல்ல சுப முகூர்த்தத்திலே ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ் செய்தார். அச்சுதர்களப்பாளர் பேருவகையுற்றுச் சாதகன்ம முதலியவற்றை விதிப்படிசெய்து, சுவேதவனப் பெருமான் றிருவருளால் அவதரித்தமையால் அப்புத்திரர்க்குச் சுவேதவனப்பெருமாள் என நாமகரணஞ் செய்தனர்.

பின்பு அச்சுதர்களப்பாளர் தம் மனைவியாரோடும் அரும்பெறற் புதல்வரோடுந் திருவெண்காட்டிறைவனை இறைவியோடும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு திருப்பெண்ணாகடத்தை அடைந்தனர். அச்செய்திகேள்வியுற்ற அவ்வூருளா ரனைவரும் அச்சுதர்களப்பாள ரில்லத்திற்கு வந்து தெய்வத் திருவருளால் அவதரித்த அக்குழந்தையைத் தரிசித்துப் பெருங்களிப்புற்றுச் செல்வாராயினர். அத்திருக்குமாரர் பாலசந்திரன்போல வளர்ந்து

வருங்காலத்தில், திருவெண்ணெய்நல்லூரில் வசித்த அவருடைய நன்மாமனுர்வந்து தரிசித்து, அவரைத் தம்மில்லத்திற் கொண்டுசென்று பெருங்காதலோடும் வளர்த்துவந்தனர்.

இங்ஙனம் வளருநாளில் அப்புதல்வருக்கு இரண்டாம் ஆண்டு நிறைவுறலும் அவர் பரம்பொருளை உள்ளவாறுணரும் மெய்யுணர்வு நிறைந்து ஞானபாநுவாய் விளங்கினர்.

அஞ்ஞான்று பரமேசுரன் எழுந்தருளியிருக்குந் திருக்கயிலைப் பெருங்காவல்பூண்ட திருநந்தி யருண்மரபில் அகச்சந்தானத்து நான்காங்குரவராகிய ஸ்ரீபரஞ்சோதிமாமுனிவர் திருவெண்ணெய்நல்லூருக்கு எழுந்தருளிவந்து, அங்கே பண்டைநற்றவத்தால் அவதரித்து மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் விளங்கிய சுவேதவனப்பெருமாளையடைந்து, திருவருள்செய்து சிவஞானபோதத்தை அளித்தருளி, "இதனை ஈண்டுள்ளார் உணர்ந்துஉய்தற்பொருட்டுத் தமிழில் மொழிபெயர்த்துப் பொழிப்புமுரைக்க" என்றருளிப், பொழிப்புரைக்குமாறுஞ் சத்தியஞானதரிசனிகள்பால் தாம்கேட்டவாறே வகுத்தருளிச்செய்து,பொய்ச்சமயங்களின் பொருள் இது இது என்று கண்டு கழிப்பித்துச் சித்தாந்தசைவத் திருநெறியின் மெய்ப்பொருள் காட்டும் வித்தகத் திறமைக்கும், சத்தியஞானதரிசனிகள் என்னுந் தமது குரவர்திருநாமத்துக்கும் இணங்க **மெய்கண்டான்** எனச் சிறப்புத்திருநாமஞ் சாத்தி நீங்கினர்.

பின்பு மெய்கண்டதேவர் அத்திருவெண்ணெய்நல்லூரிலுள்ள அருட்டுறை என்னுஞ் சிவாலயத்துள் எழுந்தருளியிருக்குஞ் சுயம்புமூர்த்தியாகிய பொல்லாப்பிள்ளையாருடைய சந்நிதியிலே சிவஞானபோதத்தைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடிச் சிவாநந்தாநுபூதி கைவரப்பெற்றுச், சிவபிரான்றிருவருளையுந் தமது குரவராஞ்ஞையையுந் திருவுளங்கொண்டு, இத்தமிழுலகம் உய்யுமாறு சிவஞானபோதத்தைச் செந்தமிழில் மொழிபெயர்த்து வார்த்திகப்பொழிப்புரையுஞ் செய்து, பரசமயவிருளகற்றும் அருண்ஞானபாநுவா யெழுந்தருளியிருந்து, பரிபாகமுடையராய்த் தம்மையடைந்த பல மாணுக்கர்களுக்கு ஞானோபதேசம்புரிந்து விளங்கினர்.

இவர் இங்ஙனம் விளங்குதலைக் கேள்வியுற்ற சகலாகமபண்டித ரென்னும் அருணந்திசிவாசாரியர் திருவெண்ணெய்நல்லூரை யடைந்து மெய்கண்டதேவரைச் சந்தித்துச் சைவாகமங்களிற்கூறும் பதி பசு பாசங்களைப் பற்றிய சில வினுக்களை நிகழ்த்தினர். நிகழ்த்துதலும், மெய்கண்டதேவர் திருப்புன்முறுவலோடும் அவர்பால் அருணோக்கம்வைத்தருளினர். அருளுதலுஞ் சகலாகமபண்டிதர் தம்வசமற்று மெய்கண்டதேவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி யெழுந்து அனலிடைப்பட்ட வெண்ணெய்போல உள்ளமுருக ஆநந்தக்கண்ணீ ரருவிபெருக நின்று, "அருட்பெருங்கடலே! அடியேன் தெருமாலுளத்தாற் றேராதுரைத்த பிழையைத் திருவுளங்கொள்ளாது தமியேனையும் உய்யக்கொண்டருளித் தேவரீரது பேரா வின்பப்பெருங்கடலைதனு ளாரா வின்ப மளித்தருள் புரிக" என் றிரந்துநின்றனர்.

அவ்வா றிரந்துநின்ற சகலாகமபண்டிதரது தீவிரதர பரிபாகத்தைத் திருவுளம்பற்றிய மெய்கண்டதேவர் அவருக்குத் திருவருள்பாலித்துத் தாமியற்றியருளிய சிவஞானபோதத்தை நல்கி, "இதனை ஈண்டுள்ளார் எளிதி னுணருமாறு விரித்துரைக்க" எனத் திருவாய்மலர்ந்தனர்.

இங்ஙனஞ் சித்தாந்தசைவப் பிரதிட்டாசாரியரா யெழுந்தருளியிருந்த ஸ்ரீமெய்கண்டதேவர் அத் திருவெண்ணெய்நல்லூரின்கண்ணே நெடுங்காலஞ் சிவாநந்தநிட்டையில் வீற்றிருந்தருளி ஐப்பசிமாசத்துச் சுவாதிநக்ஷத்திரத் திலே அகண்டாகார நித்தவியாபக சச்சிதாநந்தப் பிழம்பாகிய பரமசிவ னொடு பிறிவறியாத பரிபூரணநிலையை அடைந்தனர்.

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கண் மலமகற்றும்—வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டா னென்றொருகான் மேவுவரேல் வேறின்மை
கைகண்டா ருள்ளத்தின் கண்.

மெய்கண்டதேவர்சரித்திரச்சுருக்கம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

சந்தானசாரியர்திருநக்ஷத்திரம்.

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதன்னில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மாதவச்

# சிவஞானயோகிகள் சரித்திரச்சுருக்கம்.

கருணைபொழி திருமுகத்திற் றிருநீற்று நுதலுங்
  கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
  பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்க ளகலாத ஞானமே வடிவாம்
  வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தா
ளொருபொழுது நீங்காம லெமதுளத்திற் சிரத்தி
  லோதிடுநா வினிலென்று முன்னிவைத்தே யுரைப்பாம்.

சீர்தரு பாண்டித் திருநாட் டின்கண் ஏர்தரு பொதியத் திருந்தண் சாரலிற் பாவநா சத்திருப் பதியின் பாங்கர் மேவுறும் விக்கிரமசிங்கபுரத்திலே ஏழுதலைமுறைவரையும் அருட்புலமைநிரம்புமாறு அகத்தியமுனிவர்பால் வரம்பெற்ற பரம்பரைச் சைவவேளாளர்குலத்திலே, கல்வியுஞ் செல்வமுங் கனிந்துமல்கிச் சிவபத்தி அடியார்பத்தியிற் சிறந்துவிளங்கிய ஆநந்தக்கூத்தர் என்பவருக்கு, அவர் மனைவியாராய வலம்புரி யீன்ற வான்முத்தென்ன நலங்கனிந்தோங்கிய நற்குணம் வாய்ந்து பொற்பினுங் கற்பினும் புரையற விளங்கிய மயிலம்மையாரது திருவயிற்றிலே ஏழாவதுதலைமுறையாக ஒருசற்புத்திரர் திருவவதாரஞ்செய்து, முக்களாலிங்கர் எனப் பிள்ளைத் திருநாமம்பெற்று, அவ்விளம்பருவத்திற்றானே கூர்த்தநுண்ணறிவும், சீர்த்த செம்மொழியும், குலவிய அன்பும் நிலவிய அருளுமாகிய உயர்பெருங் குணங்களெல்லாம் முற்செய்தவத்தால் ஒருங்கே வாய்க்கப்பெற்றுப், பெற்றோரும் மற்றோருங் கண்டு கண்ணுமுளமுங் களிப்ப வளர்வாராயினர்.

இங்ஙனம் வளரும் நாளில் ஐந்தாவது ஆண்டு நிரம்பியவுடன் அவர் வித்தியாரம்பஞ் செய்யப்பெற்றுப் பாடசாலையிற் சென்று கல்விபயின்று வந்தனர்.

இவ்வாறு கல்விபயின்றுவரும் நாளில் ஒருநாள் முக்களாலிங்கர் பாடசாலையினின்றும் வரும் வழியிலே, திருவாவடுதுறை ஆதீனத்தினின்றுஞ் சிவஸ்தல யாத்திரையாகப்போந்து விக்கிரமசிங்கபுரத்து வீதியில்வந்த சில முனிவர்களைக் கண்டனர், கண்டலும் விரைந்துசென்று அம்முனிவர்களை வணங்கிச், "சுவாமிகள்! அடியேன் வீட்டிற் கெழுந்தருளித் திருவமுது கொண்டருள வேண்டும்" என்று அன்பளைந்த இனியமொழிகளாற் பிரார்த்தித்தனர். அதற்கு அம்முனிவர்கள் உடன்படலும், ஆண்டின் இளைஞரும்

அறிவின் முதியருமாகிய முக்களாலிங்கர் அவர்களைப் பெருவிருப்புடன் வீட்டிற்கு அழைத்துச்சென்று ஆசனத்திருத்தித் தாயாரிடஞ்சென்று, அம்மையே! நம் வீட்டிற்குச் சிவனடியார் சிலர் எழுந்தருளினர்; அவர்களுக்கு அமுதளித்தல்வேண்டும் என வேண்டினர். அதுகேட்ட அவ்வம்மையார் தம் அருமைப்புதல்வரது அரும்பெருஞ்செய்கையைக் கண்டு மனம் மிக மகிழ்ந்து அப்பெரியோர்களை வணங்கித் திருவமுதளித்தனர். அப்போது முக்களாலிங்கர்,

"அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றுந்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
யானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு
மானந் தவாத மயில்"

என்னும் வெண்பாவைக் கூறினர். திருவமுதுகொண்டருளிய முனிவர்கள், முக்களாலிங்கரது இளமையும், கல்விப்பெருமையும், பெற்றோரைப்பேணுஞ் சற்குணமேன்மையுங் கண்டு மகிழ்ந்து அவரைப் புகழ்ந்து, அவர்க்குப் பல ஆசிமொழிகூறி, விடைபெற்றுச்சென்று ஆங்குள்ளதொரு திருமடத்தி னுற்று வைகினர். தமது அருந்தவப்புதல்வரைப் பெரியோர் புகழ்ந்தமை கேட்ட மயிலம்மையார் அவரைப் பெற்றஞான்றினும் பெரிது மகிழ்ந்திருந்தனர்.

அப்பொழுது புறம்பேசென்றிருந்து தம்வீடுபுக்க ஆநந்தக்கூத்தர் அங்கு நிகழ்ந்தவற்றை அறிந்து அடங்காத பேருவகையுற்றுத் தம்புதல்வரை மார்புறத் தழுவி, "நங்குலஞ் செய்த நற்றவக் கொழுந்தே! திருவமுது கொண்டருளிய முனிவர்கள் எங்குச்சென்றனர்?" என்று வினவித் தம் புதல்வரொடு முனிவரிருந்துழிச் சென்று அவர்களை வணங்கிநின்றனர்.

அவ்வேலையில் முக்களாலிங்கர், "பிறவியால் வருவன கேடுள வாதலாற் பெரிய வின்பத் துறவியார்க் கல்லது துன்பநீங்காதெனத்" திருவருளால் தம்முளத்துட்கொண்டு, "இம்முனிவர்களோடு சென்று ஞானகுருவைச் சரணடைந்து பிறப்பறுப்பேன்" எனத் துணிந்து, அக்கருத்தைத் தந்தையார்க்குணர்த்தினர். தந்தையார் தமது அருந்தவப்புதல்வரைப் பிரிதற்கு ஆற்றுதவராய் உளந்தளர்ந்து, பின் ஒருவாறு தேறி, மகனுரை முனிவர்பால்விடுத்துத் தம் மில்லத்திற் கேகினர்.

தந்தையார் நீங்கியபின் முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களுடன் அவ்வூரைநீங்கி, வழியிலுள்ள சிவாலயங்களை வணங்கிக்கொண்டு சென்று, சோழநாடுசேர்ந்து, திருவாவடுதுறையை அடைந்து, திருமடத்திற் புகுந்து, அவ்வாதீன பரமாசாரியமூர்த்திகளான ஸ்ரீ நமச்சிவாயதேசிகர் சந்நிதியி னுற்று வணங்கித் தரிசித்து, அக்குருமுதல்வரது கிருபாநோக்கம் பெற்று, அஞ்ஞான்று சின்னப்பட்டத்தி லெழுந்தருளியிருந்த ஞானாசிரியராகிய பின்வேலப்பதேசிகசுவாமிகளை ஒடுக்கத்திற்சென்று வணங்கித் தரிசித்து அக்குரவரருள்பெற்று அவர் திருவுளப்பாங்கின்படி ஒழுகிவந்தனர்.

பின்னர் அந்த ஞானாசாரியரிடத்திலேயே சிவதீக்ஷையும், சைவசந்நியாசமும், சிவஞானயோகி என்னுந் தீக்ஷாநாமமும், பெற்றுச், சிவாகமங்களிற் கூறப்படுஞ் சரியைகிரியாயோகங்களை ஆராயும் நூல்களையெல்லாங் கற்றுத் தெளிந்து, பின் மெய்கண்டசாத்திரங்களையும், பண்டாரசாத்திரங்களையும் அந்த ஞானாசாரியரிடத்திற்றானே ஐயந்திரிபறக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, வடமொழிக்கடல் தென்மொழிக்கட லிரண்டனையும் நிலைகண்டுணர்ந்து சைவசித்தாந்தவழிதேறி, அதீதவாழ்வு கைவரப்பெற்று விளங்கினர்.

இந்தப் பின்வேலப்பதேசிகர் திருப்பெருந்துறையிற் பரிபூரணநிலையடைந்த பின்வேலப்பதேசிகர் காலத்தில் துவிதீயகுரவரா யெழுந்தருளியிருந்தவரென்பது, அக்குரவரால் இயற்றியருளப்பெற்றதும், நிற்குமுறையும் ஓதுமுறையும் விளங்கத் தேற்றுவதுமாகிய பஞ்சாக்கரப்பஃறொடையில்,

"...சுவேதநதி— வேகமாய்
வந்து வணங்கு மதில்சூழ் பெருந்துறையே
யந்தநாள் வந்திருந்த வாட்சியான்—பந்தமக
லூரென்று நாடி யுலவாத வின்பமருட்
சீரொன்று வேலப்ப தேவனெனப்—பேர்கொண்
டறியாமை யானீங்கி யன்புருவ மாகப்
பிறியாதே நிற்கும் பெரிய—வறிவே
யுருவா யமர்ந்திருந்த வுண்மை யுளத்துண்
மருவா வகையான் மகிழ்ந்து"

என வருதலான் விளங்கும். இவர் சிவஞானசுவாமிகட்கு ஞானாசிரியரென்பது சுவாமிக ளியற்றிய காஞ்சிப்புராணத்தில்,

"எவ்வெவகோட் படுபொருளு மஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி
மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை யோதுமுறை விளங்கத் தேற்றி
யவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்"

என்றோதுதலாற் றெளியப்படும்.

சிவஞானயோகிகள், இலக்கணம், இலக்கியம், தருக்கம், சித்தாந்த சாத்திரம்முதலியனபற்றிப் பலநூல்களும் உரைகளும் இயற்றிப் பல நன்மாணவர்களுக்கு வித்தியாதானமுஞ் செய்துகொண்டு வீற்றிருந்தனர்.

அஞ்ஞான்று, திருநாவுக்கரசுநாயனார் கல்லேதோணியாகக் கடலினின்றுங் கரையேறிய திருப்பாதிரிப்புலியூர்ச் சிவாலயத்திலே கல்வியாளரும் பொருளாளருமாகிய பலர்கூடிய சபையிலே ஒருபிரபு நூறுபொன்னைக் கிழியாகக் கட்டிவைத்து, "கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியு மோர் கதியுண் டாமோ, என்பதை ஈற்றடியாகவைத்து ஒருசெய்யுள்செய்வோர் இப்பொற்கிழியை எடுத்துக்கொள்க" என்றனர். அச்சபையிலிருந்த புலவர்கள் அவ்வாறு ஒருசெய்யுள்செய்ய வியலாது மயங்கினர்.

அச்சமயம் யாத்திரையாகப் போந்து அவ்விடத்துற்ற சிவஞானமுனிவர் பால் ஓர் ஏழைப்பிராமணன் வந்து அந்நிகழ்ச்சியைத் தெரிவித்தனன். அம்முனிவர் பெருமான் ஒருநொடிப்பொழுதின்கண்,

''வரையேற விட்டமுதஞ் சேந்தனிட வுண்டவனைவல் வினமென் றூலு
முரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென் னுரைக்கி னென்று
நரையேற விட்டமுத னளவனுக் கொண்டுநறும் புலிசை மேவுங்
கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ''

என ஒருசெய்யுள்செய்து சமஸ்யையை முடித்துப் பிராமணனிடங் கொடுத்து அதனைக் கொண்டுபோய் அவையத்தாரிடங் காட்டிப் பொற்கிழியைப் பெறும்படி அநுமதிசெய்தனர். பின்னர்ச் சிவதரிசனஞ்செய்துகொண்டு அங்குநின்றும் நீங்கித் தொண்டைநாட்டிற் சென்றனர்.

சுவாமிகள் தொண்டைநாட்டிற் காஞ்சீபுரத்திலே வாசஞ்செய்துகொண்டிருக்குங் காலத்திலே அங்கேயுள்ள வைணவர்சிலர் கம்பராமாயண மொன்றுமே தமிழிற் குற்றமின்றிச் சிறந்தகாவிய மெனத் தருக்கிக்கூறுதலும் அதுகேட்ட முனிவர்பெருமான் அக் கம்பராமாயணத்தின்,

''நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கு
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே''

என்னும் நாந்திச் செய்யுளை எடுத்துக்கொண்டு, அதிற் பல குற்றங் கூறிச் சங்கைசெய்தவழி, அவற்று ளொன்றற்கேனும் அவ்வைணவர்கள் உத்தரங்கூறவறியாது செருக்கொழிந்து தலைவணங்கித் ''தெரியாது பிதற்றினேம் பொறுத்தருள்க'' என இரந்து வேண்டினர். பின்னர்ச் சுவாமிகள் அச் சங்கைகளுக்கெல்லாந்தாமே உத்தரங்கூறி அவ்வைணவரைக் களிப்பித்தனர். அச்சங்கையும் உத்தரமும் அடங்கிய நூல் **கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி** என வழங்குகின்றது.

இம்முனிவர்பெருமான் காஞ்சிப்புராணம்பாடி அரங்கேற்றிய காலத்தில் காஞ்சிநகர் வாசிகளாகிய புலவர்கள் சிலர் ஒருங்குகூடிச் சுவாமிகள்பால் வந்து முத்திக்ஷேத்திரமாகிய இத்தலபுராணஞ்செய்யப் புகுந்த நீவிர் கடவுள் வாழ்த்துக்கூறும்வழி,

''சங்கேந்து மலர்த்தடங்கைப் புத்தேளு மலர்க்கோவுந் தழல்கால் சூல
மங்கேந்து மம்மானுந் தத்தமது தொழிறலைநின் றுற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப விருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மம்பலத்துக் குனித்தருளும் பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்''

என்னுஞ் சபாநாயகர்துதியை முன்னர்வைத்து,

''தணந்தபெருந் துயர்க்கடன்மீக் கூர்தலினுன் மலைபயந்த தாள மூரற்
கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந் தரியாம விடையே கம்பை

*யணங்கினைத் தூதெனவிடுத்து வலிந்திறுகத் தழீஇக்கொள்ள வமையாக் காதல்
மணந்தருளிக் குறிபூண்ட வொருமாவிற் பெருமானை வணக்கஞ் செய்வாம்''*

எனத் தலநாயகராகிய ஏகாம்பரநாதர்துதியைப் பின்னர்வைத்தமை தவறென்று வாதித்தனர். சுவாமிகள் தம்மாணுக்கரால் அப்புலவர் செருக்கடக்கத் திருவுளங்கொண்டு, அந்நாளிற் சென்னைமாநகரில் வைகிய கவிச்சக்கிரவர்த்தியாகிய கச்சியப்பமுனிவரை அங்கு வருவித்துப் புலவர்கள் ஆக்ஷேபித்தமையைக் கூறி அவர்க்குத் தக்கவாறு விடைகூறுக எனப் பணித்தனர். உடனே கச்சியப்பமுனிவர் காஞ்சிப்புராணத்திற் கடவுள் வாழ்த்துக் கூறியமுறையைப்பற்றிப் புலவர்கள் நிகழ்த்திய ஆக்ஷேபங்களுக்குச் சமாதானங் கூறுவதாகச் சொல்லி, ஏகாம்பரநாதர் ஆலயமண்டபத்தில் ஒருபெருஞ்சபை கூட்டி, அத்தல ஓதுவாரைநோக்கி ''இத்தலத்துத் தேவாரப்பதிகத்தை ஓதுக'' என்றுகூறினர். ஓதுவார் ''திருச்சிற்றம்பலம்'' என்று தொடங்குதலும், முனிவர் கையமர்த்திப், புலவர்களை விளித்து, இத்தலத்து ஓதுவார் இத்தலநாயகர்க்குரிய திருப்பதிகம் ஓதப்புகுந்து, ''திருச்சிற்றம்பலம்'' எனத் தொடங்குகின்றாரே. இது நுங்கட்குச் சம்மதந் தானா? ''பிருதிவியம்பலம்'' எனச் சொல்லவேண்டாவா? என்று வினாவினர். புலவர்கள் நாணமுற்றுத் தலைகுனிந்து தத்தம் வீடுநோக்கிச் சென்றனர்.

சிவஞானயோகிகள், திருவாவடுதுறை, காஞ்சீபுரம், தொட்டிக்கலை, சென்னை முதலிய இடங்களிலே, கச்சியப்பமுனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர், இலக்கணஞ் சிதம்பரநாதமுனிவர் முதலிய பன்னிரு மாணவர்களோடும் வீற்றிருந்து, அகத்தியமுனிவர்போலச் செந்தமிழுஞ் சித்தாந்தநெறியும் எங்கணும் விளங்குமாறு பரவச்செய்தனர். அக்காலத்தில் அவர் செய்தருளிய நூல்கள் பல. அவை வருமாறு:—

## இலக்கணம்.

க. தொல்காப்பியச் சூத்திரவிருத்தி.
உ. இலக்கணவிளக்கச் சூறாவளி.
ந. சங்கரநமச்சிவாயப்புலவர் நன்னூல்விருத்தியுரைத் திருத்தம்.

## இலக்கியம்.

ச. காஞ்சிப்புராண முதற்காண்டம்.
ரு. சோமேசர் முதுமொழிவெண்பா.
சு. குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.
எ. இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி.
அ. கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி.
கூ. கச்சி ஆநந்தருத்திரேசர்பதிகம்.
க0. திருவேகம்பர் ஆநந்தக்களிப்பு.
கக. கலைசைச் செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ்.
கஉ. குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்.

கங. செப்பறைப்பதி இராசை அகிலாண்டேசுவரிபதிகம்.
கச. திருவேகம்பரந்தாதி.
கரு. திருமுல்லைவாயிலந்தாதி.
கசு. திருத்தொண்டர்திருநாமக்கோவை.
கஎ. பஞ்சாக்கரதேசிகர்மாலை.
கஅ. கம்பராமாயணமுதற்செய்யுட் சங்கோத்தரவிருத்தி.

## தருக்கம்.

கக. தருக்கசங்கிரகமும் அன்னம்பட்டியமும்.

## சித்தாந்தசாத்திரம்.

உ0. சிவஞானபாடியம்.
உக. சிவஞானபோதச்சிற்றுரை.
உஉ. சிவஞானசித்திப்பொழிப்புரை. (சுபக்கம்)
உங. சித்தாந்தப்பிரகாசிகை.
உச. என்னையிப்பவத்தில் என்னுஞ்செய்யுட் சிவசமவாதவுரைமறுப்பு.
உரு. எடுத்து என்னுஞ் சொல்லுக்கிட்டவைரக்குப்பாயம்.
உசு. சிவசமவாதவுரைமறுப்பு.

## சமயம்.

உஎ. அரதத்தாசாரியர்சுலோகபஞ்சகமொழிபெயர்ப்பு.
உஅ. சிவதத்துவவிவேகம்.

## சாம்பிரதாயம்.

உக. சித்தாந்தமரபுகண்டன்கண்டனம், முதலியன.

சிவஞானயோகிகள் சென்னைக் கணித்தாயுள்ள தொட்டிக்கலையில் வசித்து இற்றைக் கேறக்குறைய இருநூறு வருடங்களாகின்றனவெனத் தெரிகிறது. இஃது அவரியற்றியருளிய கலைசைச் செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழின் சிறப்புப்பாயிரத்தால் விளங்கும். அது வருமாறு:—

இலகுசக னீரெட்டு நூற்றுநாற் பத்தேழி னிற்கரங் கும்பமிருபத்
தேழிரே வதிவெள்ளி பூர்வபக் கத்துதியை யேர்க்கவுல வஞ்சுப்பிரம்
கலவியுறு சுபதினங் கன்னிலக் கினமதிற் கலைசைப் பதிக்குள்வாழ்செங்
கழுநீர் விநாயகர்த மீதுபிள் ளைத்தமிழ்க் கவிபாடி வாஞேருண
அலைமலிக டற்கடைந் தமுதூட்டு மாலென்ன வவனியிற் புலவர்செவியா
லார்ந்திடத் துறைசைவாழ் சிவஞான தேசிக னரங்கேற்றி ஞனுதலால்
நலசுகுண மணிகுவளை யணிபுயன் வீரப்ப னல்குமக ராசயோக
னங்கள்கே சவபூப னநுசர்சேய் சுற்றமு நன்மைதரு வாழ்வுறுகவே.

இதன்பொருள், தொட்டிக்கலை வேளாண்குலத் துதித்த வீரப்பமுதலி யார் குமாரன் கேசவமுதலியா ராதரவில் திருவாவடுதுறைச் சிவஞான தேசிகர் சகாப்தம் ஆயிரத்தறுநூற்று நாற்பத்தேழுக்குச் சரியான கரவரு

டம் மாசிமாதம் இருபத்தேழாந்தேதி பூர்வபக்கத் துதியையும் இரேவதி நக்ஷத்திரமுங் கவுலவகரணமுஞ் சுப்பிரயோகமுங் கூடிய சுக்கிரவார சுப தினத்தில் கன்னிலக்கினத்திலே, கலைசைச் செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத் தமிழை அரங்கேற்றினா ரென்பது.

இங்ஙனம் உலகோபகாரமாகப் பலநூல்களையும் உரைகளையும் பலகண்டனங்களையுஞ்செய்து பல நன்மாணுக்கர்களுக்குப் போதித்துச் செந்தமிழ் மொழியுஞ் சித்தாந்தநெறியும் இத்தென்னாடெங்கும் விளங்கச்செய்து சிவாநுபூதிமானாக நெடுங்காலம் வீற்றிருந்தருளிய திராவிடமாபாடியகர்த்த ராகிய சிவஞானயோகிகள் திருவாவடுதுறையிலே,*சாலிவாகன சகாப்தம், கஎ௦அ-க்குச்சரியான விசுவாவசுவருடத்துச் சித்திரைமாசம் எட்டாந்தேதி ஆதிவாரத்தில் ஆயிலிய நக்ஷத்திரத்திலே சிவபரிபூரணநிலை அடைந்தனர்.

---

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
திருமேனி நீங்குந் தினம்.

---

† திண்ணவின்பச் சேவடியுந் திருவிழியுந் திருமார்புஞ் செல்வக் கையு
நண்ணுமன்பர்க் கருள்கருணைத் திருமுகமும் பசுங்குழவி நடையே யாகிப்
புண்ணியத்தின் பொலிவாகி யற்புதக்கோ லக்கொழுந்தாய்ப் புலைநா யேற்குக்
கண்ணைவிட்டு நீங்காத சிவஞான சற்குருவே கருணை வாழ்வே.

† ஓதரிய வாய்மைச் சிவாகமங் கட்கெலா
  முற்றபே ராகரமதா
யோங்குதிரு வாவடு துறைப்பதியி லற்புதத்
  தொருவடிவு கொண்டருளியே
பேசமுறு சமயவா திகளுள மயக்கைப்
  பெயர்க்கும்ரச குளிகையாகிப்
பிரியமுட னேவந் தடுத்தவர்க் கின்பப்
  பெருங்கருணை மேருவாகி
யாதரித் தடியேங்க ளுண்ணத் தெவிட்டாத
  வமிர்தசா கரமாகியே
யழகுபொலி கலைசைச் சிதம்பரே சுரரடிக்
  கதிமதுர கவிதைமாரி
மாதவர் வழுத்தப் பொழிந்தருளி யென்றுமவர்
  மன்னிவளர் சந்நிதியிலோர்
மணிவிளக் கெனவளர் சிவஞான மாதவன்
  மலர்ப்பதம் வணங்குவாமே.

---

* கி. பி. கஎஅரு௵ ஏப்பிரல்மீ கஎஉ ஞாயிற்றுக்கிழமை பகல் க - ச௦ மணிக்குமேல்.

† இவ்விருசெய்யுளும், இச்சரித்திரமுகத்துள்ள "கருணைபொழி" என்னுஞ் செய்யுளும் இப்பாடியகாரர் மாணவருளொருவராகிய தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவ ரியற்றின.

* கலைதேர் நமச்சி வாயகுரு கருணைக் கடலிற் றிளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக் காமத் தறியை யறவீழ்த்தி
யலையுஞ் சமயத் தருக்களைக்கி ழடிவே ரோடு மகழ்ந்தெறிந்திட்
டருளின் படாத்தை முகமேற்கொண் டாதி வேதா கமங்களெனுந்
தொலையா மணிக ளிருமருங்குந் தொனிக்கச் சைவ மதம்பொழிந்து
துங்க மோடு முலகமுற்றுஞ் சுற்றும் வெற்றி வாரணமே
மலையா தருளு முனிவர்சிகா மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான வள்ளால் வருக வருகவே.



## சிவஞானயோகிகள்சரித்திரச்சுருக்கம்

## முற்றிற்று.



* இச்செய்யுள், பொ. பாண்டித்துரைத்தேவரவர்கள் இயற்றியது.



சூரியனார் கோயிலாதீனத்து மகாசந்நிதானம்
ஸ்ரீ லஸ்ரீ முத்துக்குமாரதேசிக சுவாமிகள்.

SOLDEN & CO., MADRAS, S. E.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சூசீபத்திரம்.





ச *



உ. இலக்கணவியல்.





## உ. உண்மையதிகாரம்.

### ௩. சாதனவியல்.



---

### ௪. பயனியல்.

# திருவெண்பாத்தொகை.



## சூத்திரத்தொகைமுதலியன வுணர்த்துஞ்செய்யுள்.

நேரிசை வெண்பா.

சூத்திரமீ ராறினுக்குச் சூரணிமுப் பானென்பா
னேத்தவெண்பா வெண்பா னிரண்டனைத்துஞ்—சேர்த்ததொகை
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னுய்ந்துணர்ந்தோர்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு.

### அதிகரணவெண்பாத்தொகை.

நேரிசை வெண்பா.

ஐயொருப தேழேழு மாங்கமைந்த நாலாறு
மையொன்ப தோரெட்டோ டாறுறுந்—துய்யவெட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

### அதிகரணத்தொகை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபி னிரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்று நன்றாய் முடிந்தபி னிரண்டி ரண்டே
யேன்றநான் கீறு தாமே யிவையீரா றிலகத் துள்ளே
யேன்றமுப் பானென் பானே யெனக்கர னிரங்கி னானே.

### சூத்திரக்கருத்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முதற்பதி யரனே யைந்து முன்னத்து விதமி ரண்டே
யிதற்பினே யனுமா னத்தா லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
யதற்பினே யவத்தை நான்கே யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற் றெளிவித்த லுயிரை யொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே யழுந்தலே சிவத்தி லொன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி.

---

சிவமயம்.

# திருச்சிற்றம்பலம்.

## வடமொழிச் சிவஞானபோத மூலம்.

𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌜𑍍𑌜𑌗𑌤𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 ।
𑌅𑌸𑍍𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸 𑌹𑍃𑌤𑍍𑌵𑍈𑌤𑌤𑍍𑌸𑍃𑌜𑌤𑍍𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍍𑌹𑌰𑌃 ॥ (௧)

𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌸𑌨𑍍𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌤𑌿𑌤𑍋𑌽𑌨𑌨𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑌰𑍍𑌮𑌾𑌨𑍁𑌸𑌾𑌰𑌤𑌃 ।
𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑌂𑌸𑍃𑌤𑌿𑌂 𑌪𑍁𑌂𑌸𑌾 𑌮𑌾𑌜𑍍𑌞𑌯𑌾 𑌸𑌮𑌵𑍇𑌤𑌯𑌾 ॥ (௨)

𑌨𑍇𑌤𑌿𑌤𑍋 𑌮𑌮𑌤𑍋𑌦𑍍𑌰𑍇𑌕𑌾𑌦𑌕𑍍𑌷𑍋𑌪𑌰𑌤𑌿𑌬𑍋𑌧𑌤𑌃 ।
𑌸𑍍𑌵𑌾𑌪𑍇 𑌨𑌿𑌰𑍍𑌭𑍋𑌗𑌤𑍋 𑌬𑍋𑌧𑍇 𑌬𑍋𑌦𑍍𑌧𑍃𑌤𑍍𑌵𑌾𑌦𑌸𑍍𑌤𑍍𑌯𑌣𑍁𑌸𑍍𑌤𑌨𑍌 ॥

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌾𑌦𑌨𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌵𑌿𑌤𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌿𑌵𑌦𑍍𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌅𑌵𑌸𑍍𑌥𑌾𑌪𑌞𑍍𑌚𑌕𑌸𑍍𑌥𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌮𑌲𑌰𑍁𑌦𑍍𑌧𑌸𑍍𑌵𑌦𑍃𑌕𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌃 ॥ (௪)

𑌵𑌿𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌾𑌣𑌿 𑌪𑍁𑌂𑌸𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌨 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌸𑍋𑌽𑌪𑌿 𑌶𑌂𑌭𑍁𑌨𑌾 ।
𑌤𑌦𑍍𑌵𑌿𑌕𑌾𑌰𑍀 𑌶𑌿𑌵𑌶𑍍𑌚𑍇𑌶 𑌕𑌾𑌨𑍍𑌤𑍋𑌽𑌯𑍋𑌵𑌤𑍍𑌸 𑌤𑌨𑍍𑌨𑌯𑍇𑌤𑍍 ॥ (௫)

𑌅𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌚𑍇𑌦𑌸𑌦𑍍𑌭𑌾𑌵𑍋 𑌦𑍃𑌶𑍍𑌯𑌂 𑌚𑍇𑌜𑍍𑌜𑌡𑌿𑌮𑌾 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌶𑌂𑌭𑍋𑌸𑍍𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑍇𑌕𑍇𑌣 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌰𑍂𑌪𑌂 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌬𑍁𑌧𑌾𑌃 ॥ (௬)

𑌨𑌾𑌚𑌿𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑍌 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌨𑍍𑌨 𑌵𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑍇 𑌉𑌭𑍇 𑌶𑌿𑌵𑌃 ।
𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌶𑌿𑌵𑌯𑍋𑌰𑍍𑌵𑍇𑌤𑍍𑌤𑌾 𑌯𑌸𑍍𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌤𑌯𑍋𑌃 𑌪𑍃𑌥𑌕𑍍 ॥ (௭)

𑌉𑌷𑌿𑌤𑍍𑌵𑌾 𑌸𑌹𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌵𑍍𑌯𑌾𑌧𑍈𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌂 𑌨 𑌵𑍇𑌤𑍍𑌸𑍀𑌤𑌿 𑌬𑍋𑌧𑌿𑌤𑌃 ।
𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌵𑍈𑌤𑌾𑌨𑍍𑌗𑍁𑌰𑍁𑌣𑌾𑌨𑌨𑍍𑌯𑍋 𑌧𑌨𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌤𑌤𑍍𑌪𑌦𑌮𑍍 ॥

𑌚𑌿𑌦𑍍𑌦𑍃𑌶𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌦𑍃𑌷𑍍𑌟𑍇𑌶𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌮𑌰𑍀𑌚𑌿𑌕𑌾𑌮𑍍 ।
𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌶𑌿𑌵𑌪𑌦𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌂 𑌧𑍍𑌯𑌾𑌯𑍇𑌤𑍍𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑍀𑌂 𑌸𑍁𑌧𑍀𑌃 ॥ (௯)

𑌶𑌿𑌵𑍇𑌨𑍈𑌕𑍍𑌯𑌂 𑌗𑌤𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌸𑍍𑌤𑌦𑌧𑍀𑌨𑌸𑍍𑌵𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌃 ।
𑌮𑌲𑌮𑌾𑌯𑌾𑌦𑍍𑌯𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌸𑍍𑌵𑌾𑌨𑍁𑌭𑍂𑌤𑌿𑌮𑌾𑌨𑍍 ॥ (௧௦)

𑌦𑍃𑌶𑍋𑌰𑍍𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑌾 𑌚𑌾𑌤𑍍𑌮𑌾 𑌤𑌸𑍍𑌯 𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑌾 𑌶𑌿𑌵𑌃 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌪𑌰𑌾𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌦𑌾𑌤𑍍𑌮𑍋𑌪𑌕𑌾𑌰𑌕𑍇 ॥ (௧௧)

𑌮𑍁𑌕𑍍𑌤𑍍𑌯𑍈 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌸𑌤𑌸𑍍𑌤𑍇𑌷𑌾𑌂 𑌭𑌜𑍇𑌦𑍍𑌵𑍇𑌷𑌂 𑌶𑌿𑌵𑌾𑌲𑌯𑌮𑍍 ।
𑌏𑌵𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑌿𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑍋𑌧𑍇 𑌶𑍈𑌵𑌾𑌰𑍍𑌥𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑌮𑍍 ॥ (௧௨)

சிவமயம்.

# சூர்ணிக்கொத்து.

## முதற்சூத்திரம்.

க.—சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலையுடையது.

உ.—அது அரனாலே உடையது.

௩.—மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

## இரண்டாஞ்சூத்திரம்.

க.—அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.

உ.—உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.

௩.—உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.

ச.—அரன் சருவ வியாபகன்.

## மூன்றாஞ்சூத்திரம்.

க.—இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.

உ.—எனது உடல் என்று பொருட்பிறிதின்கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிர் உண்டு.

௩.—ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றைமாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

ச.—கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக்கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

ரு.—நித்திரையினும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.

சு.—மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

எ.—எல்லாத்தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு,

## நான்காஞ்சூத்திரம்.

க.—அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

உ.—மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

ங.—உயிர் மூன்றவத்தைப்படும்.

---

## ஐந்தாஞ்சூத்திரம்.

க.—உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்.

உ.—அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

---

## ஆறாஞ்சூத்திரம்.

க.—உயிரறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அழியும்.

உ.—அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

---

## ஏழாஞ்சூத்திரம்.

க.—அரன் பாசத்தை அநுபவியான்.

உ.—பாசம் அரனை அநுபவியாது.

ங.—உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்.

---

## எட்டாஞ்சூத்திரம்.

க.—உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்.

உ.—உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

ங.—உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.

ச.—உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.

---

## ஒன்பதாஞ்சூத்திரம்.

க.—உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும்.

உ.—உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன்.

ங.—பஞ்சாக்ஷரசெபம் பண்ணினால் வாசனாமலம் போம்.

---

## பத்தாஞ்சூத்திரம்.

க.—அரனுடன் ஒன்ருகி நில்.
உ.—உன்ருெழிலெல்லாம் அரன் பணியென்று கொள்.

---

## பதினோராஞ்சூத்திரம்.

க.—ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.
உ.—அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கியமாய்ப் போவன்.

---

## பன்னிரண்டாஞ்சூத்திரம்.

க.—மும்மலங்களையுங் களைக.
உ.—சிவஞானிகளுடனே கூடுக.
ங.—சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.
ச.—வழிபடாமையை ஒழிக.

ஆகூ சூத்திரம் கஉ-க்குச் சூர்ணிக்கொத்து. ஙகூ.

முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபாடியம்.

## திருப்பாசுரம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

---

## திருவாசகம்.

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
ஏக னநேக னிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத வின்ப மருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையு ணின்ற வதனால்
அவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

### திருக்குறள்.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

---

### கற்பகவிநாயகர்துதி.

பொற்பொதுக் குட்பாற் பொற்புற நடிக்குங்
கற்பகத் திருதாள் கற்பவர் நமரே.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

---

### குருமரபுவாழ்த்து.

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்ப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம். திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

சைவாகமங்களின் உளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞான பாதத்தோதிய பொருளை ஆராயும் ஆராய்ச்சி இந்நூலின்கண் எடுத்துக் கொள்ளப்பட்டது. இவ்வாராய்ச்சிக்குப் பயன் யாதோவெனவும், இது கேட்டற்குரியார் யாவரெனவும், இதனால் நுதலப்படும்பொருள் யாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலையான் உணர்தற்பாலது யாதெனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயர் யாதெனவும், இஃது யாண்டுவழங்குவதெனவும், இதன்முதனூல் யாதெனவும், இந்நூல் செய்தார் யாவரெனவுங் கேட்போர்க்குப் பலவாற்றான் ஆசங்கை நிகழுமன்றே; அவர்க்கு அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சிசேறற்பொருட்டு இந்நூன்முகத் துரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம்:—

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகெண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னுன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே

எனவரும்.

இதன் பிண்டப்பொழிப்பு உரைத்துக்கொள்க. இப்பாயிரப்பொருள் நூலிறுதியின் 'எந்தைசனற்குமரன்' என்னும் வெண்பாவாற் பெறப்படுதலின் ஈண்டுங்கூறுதல் கூறியது கூறலாம் பிறவெனின்,—ஆகாது; எந்தை சனற்குமர னென்பதனாற் பெறப்பட்டதனையே மாணாக்கர்க்கு நூன்முகத்து

உணர்த்துதற்பொருட்டு ஈண்டுத் தந்துரைத்ததுகலானென்பது. மிருகேந்திரத் திறுதியிற்கூறும் வரலாற்றினை நாராயண்கண்ட ஆசிரியர் நான்முகத்துத் தந்துரைத்ததூஉம் இக்கருத்தேபற்றியென்க. அல்லதூஉம், பொதுவியல்பு சிறப்பியல்பென இருதிறப்படுத்து உணர்த்தியது இந்நூல் என்னும் பாகுபாடு ஆண்டுப் பெறப்படாமையின், அது கூறப்புகுந்தார் ஏனையவும் உடன்கூறினரென்றலு மொன்று.

நிலவுலகமுழுதும் பரந்த விருளென அதன் பெருமைகூறுவார், மலர் தலையுலகின்மாயிருள் என்றார். மா-பெருமை. ஆகாரமுன்னும் யகரவுடம்படு மெய் சிறுபான்மை அருகிவருதலை * "மாயிருஞாலம்" என்றாற்போலக் கொள்க. மாயாதவிருளினீக்குதற்கு மாயிருளென்றாரென, வினைத்தொகையாக்கலுமொன்று. இவ்விருளென்னும் பொருளதியல்பும், இதன்றோற்றமும், கண்ணிந்திரியத்தினியல்புரைப்புழிக் † காட்டுதும். ஒன்றோடொன்றொவ்வாத எல்லாச்சமயத்தாரானும் புகழப்படுதலிற் பலர்புகழ்ஞாயிறு என்றார். முற்றும்மை விகாரத்தாற்றொக்கது.

ஏனை ஒளிகளான் மடங்காது யாண்டும் பரந்த புறவிருளை ஒருபாலெழுந்த ஞாயிறு துமிப்பதுபோல, ஏனைச்சமயநூல்களான் மடங்காது யாங்கணும் நிறைந்த அகவிருளை ஒராகமத்தின் ஒருபடலத்தினெழுந்த பன்னிரு சூத்திரந் துமிக்குமென்பது குறிப்பான்விளக்குதற்குப் படரின் என்றார். அல்லதையென்பது, ‡ "தன் மனைக் கிழத்தி யல்லதை பிறர்மனை—யன்னையிற் றிரா நன்ன ராண்மை" என்றாற்போல அன்றியென்னும்பொருள்பட வந்த வினையெச்சக்குறிப்பு ஐயீற்றுடைக்குற்றுகரம். படரிற் காண்டல்செல்லுங் கண் எனற்பாலதனை எதிர்மறைமுகத்தாற் கூறினர், இன்றியமையாமை விளக்குதற்கு; "வாராமையில்லை" யென்றாற்போல்வனவுந் தேற்றப்பொருள்பயப்ப வந்தவாறு காண்க. இது வடமொழிமதம். இப்பொருள் விளங்குதற்பொருட்டுக் கண்மேல்வைத்துக் கூறினரேனும், உவமேயப் பொருட்கேற்பக் கண் காண்டல்சேறற்குப் படர்ந்த ஞாயிறுபோல் என ஞாயிற்றின்மேல்வைத்துரைத்தல் கருத்தாகக் கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பஞ் சவிகற்பமென்னும் இருவகைக் காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறுபோல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதியென்னும் இருவகை யுணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந்நூலென்பார், துமியப் படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல் நாடித் தீர்ந்து கண்டு மயர்வற அளித்த சிவஞான போதம் என்றார். எனவே, புறவிருணீக்கிக் காட்டுதற்குப் பன்னிருவகைப் பட்ட ஞாயிறுபோல, அகவிருணீக்கி யுணர்த்துதற்குச் சூத்திரத்தாற் பன்னிருவகைப்பட்டது இந்நூலென்பதூஉ மாயிற்று. இவ்வாறன்றி, ஞாயிற்றைக் கடவுட்கு உவமையாக்குவாருமுள்ளர். நூலுட் கூறியவதனைப் பாயிரத்துட்

* திருநாவுக்கரசுநாயனார் தேவாரம், திருவாவடுதுறை, க.

† பக்கம், கஎஅ. ‡ ஞானமிர்தம்—கஎ, அடி—கக.

கூறவேண்டாமையானும், ஈண்டைக்காவதோர் பயன்றாமையானும், அஃது உரையன்மை யறிக.

**பெரும்பெயர்க்கடவுள்** என ஏனையமொன்றே பெரும்பெயர்க்குப் பொருளாகக் கூறினர்; ஏனையவற்றைத் தன்னுளடக்கிநிற்றலிற் றலைமைபற்றியென்றுணர்க. பெரும்பெயரெனினும், மகாவாக்கியமெனினும், ஒருவார்த்தையெனினும் ஒக்கும். பெரும்பெயர்ப்பொருளே அஞ்செழுத்திற்கும் ஆதலின், பெரும்பெயரோடு அஞ்செழுத்திடை வேற்றுமையின்மையுணர்க. ஈண்டிய **பெரும்பெயர்** - எல்லாநூற்பொருளுந் திரண்டுகூடிய பெரும்பெயரென்க. * "அருணூலு மாரணமு மல்லாது மஞ்சின்—பொருணூ றெரியப் புகின்" என்பதனானுமுணர்க. **கண்ணிருள்** வினைத்தொகை. புறவிருள்போலப் புலனாகாது கருதலளவையான் அறியப்படுவதென வேற்றுமைகூறுவார் கண்ணிருளென்றார். **குரம்பையின்** - இன் ஏதுப்பொருட்கண்வந்த ஐந்தாமுருபு. "புக்கில்போலன்றென்பது உணர்த்துதற்கு அருந்துயர்க்குரம்பையெனப்பட்டது. அது, † "புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்—டுச்சி லிருந்த வுயிர்க்கு" என்பதனானும் அறிக.

தலைமைபற்றி அருந்துயர்க்குரம்பையி னென்றாரேனும், இனமாதல்பற்றிக் கரணம் புவனம் முதலாயினவும் உடன்கொள்ளப்படும்; படவே, உடம்பு முதலியவற்றான் ஆன்மாவை நாடுதலாவது, இவ்வுடம்பு சடமாதலின், இதன்கண் இன்பத்துன்பங்களை அறிந்து நுகர்தற்கு இதனின் வேறாய் ஆன்மாவென்றொரு பொருள் உண்டென்றும்; ஒருடம்பின் நிகழும் இன்பத்துன்பங்கள் மற்றோருடம்பின் அறியப்படாமையின், உடம்புதோறும் ஆன்மாக்கள் வெவ்வேறு உண்டென்றும்; அவை இவ்வுடம்பிற் கட்டுற்று நிற்றற்கு மூலமாய் ஒருபந்தம் அநாதியே யுடையவாதல் வேண்டுமென்றும்; வேண்டவே, மூன்றவத்தை யுளவாமென்றும்; நாடோறும் நனவும் கனவும் உறக்கமும் பேருறக்கமும் உயிர்ப்படங்குதலுங் காணப்படுதலான், உடம்பினும் ஐந்தவத்தைப்படுமென்றும்; புலன்களையுணரும் நனவிடத்தும் நினைப்பும் மறப்பும் முறையானே மாறிமாறி நிகழ்தலின் ஆண்டும் ஐந்தவத்தைப்படுமென்றும்; இவ்வான்மாக்கள் உடம்பிற் கட்டுண்டு தம்வயத்தனவன்றி நிற்றலின், இவற்றிற்கு உடம்பு முதலியவற்றைப் படைத்து நடாத்தியொடுக்குதற்குப் பரமான்மா ஒருவன் உண்டென்றும்; அவன் இம்மூன்றனுள் ஒரோவொருதொழில் செய்யும் கடவுளர்க்கு மேலாய் இவர்களையுந் தொழிற்படுத்தி நிற்பனென்றும்; அவன் உலகத்தைப் படைக்குங்கால் விகாரமின்றி யுடனாய்நின்று தனது சமவேதசத்தியான் இருவினைகட்கேற்ப மாயையென்றொரு சடசத்தியினின்றும் தோற்றுவித்தொடுக்குவனென்றும்; இதனானே அவனும் இலயம் போகம் அதிகாரமென்னும் மூன்றவத்தை யுடையனென்றும்; அஃது அவனுக்கு உபசாரமேயென்றும்; அவன் அமலனாய் நின்றே இவ்வான்மாக்களுக்கு இன்பத்துன்பங்களைக் கருவிகளின்வழியான் நுகர்விப்பனென்றும்; அவன் அழிபொருள்போலச் சுட்டியறியப்படுவானுமன்றிப், பொய்ப்பொருள்போல அறியப்படாதவனு

* திருவருட்பயன், ஐந்தெழுத்தருணிலை—௧. † திருக்குறள், நிலையாமை—௰.

மன்றி, வேருயறியப்படுவனென்றும்; அங்ஙனம் அறிகின்றவன் ஆன்மாவென்றும்; ஆகமவளவைசார்பாகத் தலைநின்று வழியளவையான் ஆராய்ந்து பொதுவியல்புதுணிதல். வழியளவையெனினும், கருதலளவையெனினும், அநுமானமெனினும் ஒக்கும். ஆன்மாவென்பது பொதுச்சொல்லாகலிற், பரமான்மாவுங் கொள்ளப்பட்டது.

இனிப், பெரும்பெயர்க்கடவுளிற் காண்டலாவது: அங்ஙனந் தன்னையுந் தலைவனையும் பொதுவிலக்கணத்தானுணர்ந்து மலநீங்கிய பின்னர்ப், பெரும்பெயர்ப்பொருளே சிறந்தெடுத்தோதும் ஆகமவளவை சார்பாகத் தலைநின்று, அழுந்தியறிதலே அனுபவித்தலென்னுஞ்சொற்குப் பொருளாகலின், அவ்வநுபவமெனப்படுவது மேற்பொதுவியல்பாற் பெறப்பட்ட முப்பொருள்களுள் அழுந்தாதுநின்றறியும் பரமான்மாவுக்கும் அறிவில்லாத சடமாகிய பாசத்திற்குங் கூடாமையின் அவ்விரண்டின் வேருய்ச் சர்வஞ்ஞானேத்தரத்தினேதியவாறு தன்னுற் பற்றப்பட்டபொருளின் அதுவதுவேயாக அழுந்துமியல்புடைய ஆன்மாவே அவ்விரண்டினையும் அநுபவிக்குமென்றும்; எனவே, மாசுநீங்கியவழி ஆடையின்குணமாகிய வெண்மை ஆடைமுழுதினும் விளங்கினற்போல, மலநீங்கியவழித் தன்வியாபகமுற்றும் விரிந்துவிளங்கு மியல்புடைமை மாத்திரையேபற்றி முன்விளங்கிய ஏகதேசவறிவை நோக்கி முற்றறிவெனப்படும் ஆன்மாவின் அறிவு, ஒன்றின் அழுந்துங்கால் மற்றொன்றினை அறியுமாறின்மைபற்றி முழுவதும் ஒருங்கேயறியும் பேரறிவாகிய பரமான்மாவினறிவை நோக்கிச் சிற்றறிவெனப்படுமென்றும்; சார்ந்ததன் வண்ணமாய் அழுந்தியறிவதாதலின், யாண்டும் தனக்கு வியஞ்சகமாய் அறிவிக்கும் அறிவையின்றி அமையாதென்றும்; சில ஆன்மா வீடுபேறெய்தினவாகச், சில எய்தாநிற்பனவாகச், சில எய்துவனவாகக் காணப்படுதலான், அவ்வாருதற்கு ஏதுவாய்த் தத்தங் காலவெல்லைகளில் நீங்குவனவாகிய மலசத்திகள் பலவுளவென்பது பெறப்படுதலின், அதுபற்றி ஆன்மாக்களும் பலவாதல் பெறப்படுமென்றும்; பலவாதல் பெறப்படவே, இலக்கணத்தால் அவற்றிற்குத் தம்முள் வேற்றுமையாவது தத்தமறிவு தத்தமக்குரிய சோபானமுறையிற் றூலமுஞ் சூக்குமமுமாய் நிகழ்தல்பற்றி யறியப்படுமென்றும்; இதனனே ஆன்மாக்களுக்குப் பக்குவாபக்குவ பேதங்களுளவாமாறும், அவற்றாற் பெத்தமுத்திப் பேதங்களாமாறும், செயற்கை யியற்கைகளாமாறும், ஆகவே, முத்தியும் பெத்தமும் ஒன்ருகக் காணப்படுமாறும் எல்லாமினிதுவிளங்குமென்றும்; இவ்வான்மாக்களின் வேருகிய பரமான்மாவின் அறிவு இதுபோல் அழுந்துதலின்றிநின்றறியுஞ் சுதந்தரவறிவாதலின், வியஞ்சகம் வேண்டாது முழுவதுந் தானே அறிந்தும் அறிவித்தும் நிற்கும் பேரறிவாமென்றும்; அதனல் இதுகாறும் உயிர்க்குயிராய் நின்று உணர்த்திவந்த பரமான்மாவே இப்பொழுது குருவுமாய் வந்து, இது பகை இஃது உறவு என்றுணர்த்தி விடுவிக்குமென்றும்; அதனையுணர்தற்குத் தவங்காரணமென்றும்; பகையைப் பகையென்றுணரவே உறவோடு கூடுமென்றும்; அது சிவஞானமொன்றனே உணரப்படுமென்றும்; அது பாசப்பற்று அற்றாலன்றி விளங்காதென்றும்; அப்பற்று, முத்திபஞ்

சாக்கரத்தின் முறைமையறிந்து உச்சரிக்கவே பற்றறக்கழியுமென்றும்; மாணிக்கத்தைச் சார்ந்த படிகம் மாணிக்கமாயொழியாது மாணிக்கத்தின் ஒளியும் நிறமும் பெற்றுத் தன்னொளி அதுவாயடங்கி அம்மாணிக்கத்துக்குச் சமமாய் நிற்குமாறுபோலப், பரமான்மாவினுடைய எண்குணங்களுமே தன்குணமாகக்கொண்டு தன்குணம் அவையேயாயடங்கிப் பரமான்மாவே போல ஒற்றித்துநின்று, அப்பரமான்மாவேதனக்கு விடயமாக அயராவன்பு செய்யிற் சிவாநந்த அநுபவம் பெறுவனென்றும்; அடிமை என்றும் அடிமையே யென்றுந் திருவருள்கண்ணாக அனுபூதியிற்கண்டு சிறப்பிலக்கணம் உணர்தல்.

பெத்தத்தினின்ற நிலைபற்றிக்கூறும் இலக்கணம் ஆகந்துகமாகலிற், பொதுவியல்பென்றும்; முத்தியினின்ற நிலைபற்றிக்கூறும் இலக்கணஞ் சகசமாகலிற், சிறப்பியல்பென்றும் ஆயின. புடைநூலாசிரியர் முதற்கட் * "பொதுவுண்மை யெனக்கருதி" யென்றெடுத்துக்கொண்டு, முடிவின்கட் † "பெத்தமுத்திகண்மதித்தாமன்றே" யென முடித்தமையின், ஈண்டுக் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்புகளுக்கு இவையே பொருளாதல் அறிக. ஆகவே, பலபொருட்குப் பொதுவாய இலக்கணம் பொதுவியல்பென்றும், ஒருபொருட்கேயுரிய விலக்கணஞ் சிறப்பியல்பென்றும், அளவைநூலாற் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு; தடத்தலக்கணம் சொரூபலக்கணம் என்னும் வடசொற்குப் பரியாயப்பெயராய் ஈண்டுக் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறெனத் தெரிந்துணர்ந்துகொள்க. இவ்விரு வேறுவகைக்குஞ் சொல்லொருமை மாத்திரைப்பற்றியே மயங்கற்க.

அற்றேல், அஃது அங்ஙனமாக; ஆகமங்களின் இங்ஙனம் இருவகைப் படுத்துக் கூறவேண்டியது என்னை? சிறப்பியல்பு ஒன்றே கூற அமையுமாலோவெனின், அமையாது; ‡ "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச்சிரம—வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்—சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்—திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்றோதுதலின், ஆன்மாக்கள் அங்ஙனந் தத்தமக்குரிய சோபானமுறையின் அறிந்துவருந் தன்மைக்கேற்பத் தூலாருந்ததிநியாயமாக உணர்த்தவேண்டும் ஆகலினென்க.

தூலாருந்ததி நியாயமாவது, அருந்ததிமீனை அறியாதானுக்கு இஃது அருந்ததிமீனெனக் காட்டின் அது மிகவும் நுண்ணிதாகலிற் காண்டல் அரிதாகலான், அதனுடன்றோன்றுவதோர் பெருமீனை இஃது அருந்ததியெனக் காட்டி, அதனை உற்றுநோக்கியுணர்ந்தபின்னர் அருந்ததிமீன் அஃதன்று, அதன்மருங்கே தோன்றுநின்றது பார் எனக்காட்டி உணர்த்துதல்போல்வதோர் முறைமை.

* சிவப்பிரகாசம், பாயிரம்—கக. † சிவப்பிரகாசம், உண்மை—சக.

‡ சிவஞானசித்தி, எட்டாஞ்சூத்திரம்—கக.

அவையாவன:— * "காரணங் கழறல் வேண்டுவ லாரண—மறியோ னமல ஞதற் கத்த—பொறிதீர் புற்கலன் விழுமலம் புணர்தற்கு" என வினுவ வழி, † "அற்றே சொற்ற தனுதி மற்றவர்க்—கெற்றெனி லாதி யியையிற் குற்றமில்—காரணங் கழறுவ லம்ம சீருணங்—திகழொளிப் பளிங்கு போலப் புகழு—மிறைபுற் கலனுக் கென்றனன் குறைவின்—றறைகழ லருளொலி பரந்த—பொறைவளர் சார லறவ ஞேனே" என்றெடுத்துக் காட்டி, உளங்கொளற்பொருட்டுத் தூலமாக விடைகூறிப், பின்னர்ச், சீருணம் தான்பிறந்த நிலத்தியல்பாற் களிம்புற்றதாகலின் அது காரணமின்மைக்கு எடுத்துக்காட்டாமாறென்னையென்றுசங்கித்து, ‡ "ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேலிடிலொன்—றொளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்—தெளிக்கு மறிவு செறிந்துள தேனுந் திரிமலத்தே—குளிக்கு முயிரருள் கூடும் படிகொடி கட்டினனே" என்றெடுத்துக்காட்டி, வேறுவினுயவழி, உண்மையான் விடைகூறி உணர்த்துதலும்; § "வினையோ வன்றிச்—சொல்லிவரு மாயையோ வணுவை முந்தச் சூழ்ந்த" தென வினுயவழி, "மலமுளதா வொழிந்த வெல்லாம்—நெல்லின் வரு தவிடுமிபோ லநாதியாக நிறுத்திடுவ" ரெனவும், "வித்தும் மரமும் போலு" மெனவும் எடுத்துக்காட்டி உளங்கொளற்பொருட்டுத் தூலமாக விடைகூறிப், பின்னர்த், தவிடும் உமியும் ஒன்றற் கொன்று காரணகாரியமாகாமையின் அவை ஒருங்கே நெல்லின்கண் உளவாதல்கூடும், வித்தும் மரமும் ஒன்றற்கொன்று காரணகாரியமாயினும் அவற்றிற்கு மூலகாரணமாகிய பூதங்கள் உண்மையின் அப்பூதங்களினின்று முதற்சிருட்டியில் மரமாதல் வித்தாதல் இரண்டிலொன்று முந்தித்தோன்ற அதன்பின் ஒன்றற்கொன்று காரணகாரியமாகத் தோன்றுதல் கூடுமாகலின், அவற்றை ஈண்டு எடுத்துக்காட்டி அநவத்தைப்படவிடுத்தல் விடையாமாறு யாங்ஙனம் என வினுயவழி, அநவத்தையாகாதவாறு உண்மையான் விடைகூறி உணர்த்துதலும் போல்வனவாமென்க.

பொதுவியல்புணர்த்தும் நூல்கள் பொதுவெனவும், சிறப்பியல்புணர்த்தும் நூல்கள் சிறப்பெனவுங் கூறப்படும். சிறப்பியல்பு சகசமாயுள்ளதாதலின் உண்மையெனவும்படும். ஏனைச்சமயத்தார்கூறும் சிறப்பியல்பெல்லாம் போலியென்பது உணர்த்துதற்கும் இஃது உண்மையெனப்படும். பவுட்கரம் மிருகேந்திரம் மதங்கம் முதலிய சிவாகமங்கள் பெத்தத்தினின்ற நிலைபற்றி இலக்கணங்கூறுதலின் அவை பொதுவெனவும், சர்வஞ்ஞானேத்தரம் முதலிய சிவாகமங்கள் முத்தியினின்ற நிலைபற்றி இலக்கணங்கூறுதலின் அவை உண்மையெனவுங் கூறப்படுமாகலின், பவுட்கரமுதலியவற்றின் பொருளுக்கேற்பச் சர்வஞ்ஞானேத்தர முதலியவற்றிற்குப் பொருள்கொள்ளாது சர்வஞ்ஞானேத்தரமுதலியவற்றின் பொருளுக்கேற்பப் பவுட்கரமுதலியவற்றிற்குப் பொருள்கொள்வர் திருவருள்கிடைத்த நுண்ணறிவினோரென்றுணர்க.

---

* ஞானமிர்தம்—உ. † ஞானமிர்தம்—உ.

‡ கொடிக்கவி—க. § சிவப்பிரகாசம், பொது—கஉ.

அன்றியும், பவுட்கரமுதலிய சிவாகமங்கள் முனிவர்முதலாயினோர்க்கு அருளிச்செய்தது. சர்வஞ்ஞானோத்தரமுதலிய சிவாகமங்கள் கந்தன் கணபதி முதலாயினோர்க்கு அருளிச்செய்தது. கந்தன் முதலாயினோரை நோக்க முனிவர்முதலாயினோர் பரிபாகத்திற் குறைந்தவராதலின், அவர்க்கருளிச்செய்த பவுட்கரமுதலியவற்றிற்கேற்பக், கந்தன் முதலியோர்க்கு அருளிச்செய்த சர்வஞ்ஞானோத்தரமுதலியவற்றிற்குப் பொருள்கோடல் பொருந்தாமையும், முனிவர் முதலாயினோரை நோக்கக் கந்தன் முதலாயினோர் பரிபாகத்தின் முதிர்ந்தவராதலின், அவர்க்கு நுட்பப்பொருளை உள்ளவாறருளிச்செய்த சர்வஞ்ஞானோத்தர முதலியவற்றின் பொருளுக்கேற்ப, முனிவர்முதலாயினோர்க்கு அருளிச்செய்த பவுட்கரமுதலியவற்றிற்குப் பொருள்கோடல் பொருத்தமுடைமையுந் தெற்றென வுணர்ந்துகொள்க. இன்னும், இவற்றிற்குத் தம்முள் வன்மைமென்மைகள் பொதுவதிகாரத்திறுதியிற் காட்டுதும். இக்கருத்தறியாத அகோரசிவாசாரியர் முதலியோர் சர்வஞ்ஞானோத்தரமுதலியவற்றிற்குச் செய்த வியாக்கியானம் போலியுரையென்றொழிக.

உபநிடதங்களினுஞ் சுபாலமுதலிய உபநிடதம் உலகந் தோன்றியொடுங்குமுறைமையும், தோற்றியொடுக்குதற்கு ஒருகருத்தாவுண்டென்னுமாத்திரையும்போல்வன உணர்த்துதலிற் பொதுவெனப்படும். சாந்தோக்கிய முதலிய உபநிடதம் இருவகையுங் கூறுதலிற் பொதுவுஞ் சிறப்புமாம். அதர்வசிகை அதர்வசிரம் சுவேதாச்சுவதரம் கைவல்லியம் முதலிய உபநிடதங்கள் முத்திநிலையேபற்றிச் சாதகமும் பயனுங் கூறுதலின் உண்மையெனப்படும். ஆகலான், அதர்வசிகைமுதலிய உபநிடதப்பொருள்பற்றிச் சுபால முதலிய உபநிடதங்களுக்குப் பொருள்கொள்வதன்றிச், சுபால முதலியவற்றின் பொருள்பற்றி அதர்வசிகை முதலியவற்றிற்குப் பொருள்கோடல் பொருந்தாதென்பது நுண்ணறிவான் உணர்ந்துகொள்க. இக்கருத்தறியாத இராமாநுசர் முதலியோர் கூறும்பொருள் போலியென்றொழிக.

இனி, அதர்வசிகை முதலிய உபநிடதங்களிற் கூறும் பொருள்களுஞ் சிவாகமப்பொருளை நோக்கும்வழிச், சூத்திரமும் பாடியமும்போலத் தூலாருந்ததிமுறைமையாதலின், வேதம் பொதுநூலெனவும், ஆகமஞ் சிறப்புநூலெனவுங் கூறப்பட்டன. * "வேதாந்தத் தெளிவாஞ்சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்" என்றதூஉம் இம்முறைமை தெரிந்துணர்ந்துகோடற்கென்க. † "வேதப்பயனாஞ்சைவமும்போல்" என்பதும் அது. இவ்வுண்மையுணர்ந்துகொள்ளமாட்டாதார் உபநிடதங்கள் ஒன்றோடொன்று முரணுமெனவும், உபநிடதமுஞ் சிவாகமமுந் தம்முள் முரணுமெனவும், சிவாகமத்துள்ளும் ஒன்றோடு ஒன்று முரணுமெனவும் மயங்கி, ஒன்றன்பொருளைபற்றி ஏனையவற்றை இகழ்வர்; தொன்றுதொட்டுவருங் கேள்வியான் அநுபவமுடைய தேசிகன்றிருவருள் பெறுமையான் என்பது. ‡ "சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன—மாத்திரத்தே

* சிவப்பிரகாசம், பாயிரம் - எ. † பெரியபுராணம், சண்டேசுரநாயனார் - கூ.

‡ திருக்களிற்றுப்படியார் - கூ.

வாய்க்குநலம் வந்துறுமோ—வார்த்தகடற்—றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ—தெண்ணீர்மை யாயிதனைச் செப்பு" என்றதூஉம் இக்கருத்து நோக்கி யென்க.

இனி, மொழிபெயர்த்துக்கூறும் நூல்களினும் ஞானமிர்தமுதலியன பெரும்பாலும் பொதுவியல்பு மாத்திரையே கூறுதலிற் பொதுவெனவும், திருவுந்தி திருக்களிற்றுப்படியார் முதலியன சிறப்பியல்பு மாத்திரையே கூறுதலின் உண்மையெனவுமாமென்பது.

பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தான் உணரப்படும். சிறப்பியல்பு சாதனமுகத்தானும் பயன்முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென நான்குவகையான் உணரப்படும். சிறப்பியல்பு எனினுந் தன்னியல்பு எனினும் ஒக்கும். நாடி என்றதனல் வழியளவையான் என்பதூஉம், கண்டு என்றதனல் அநுபூதியினல் என்பதூஉந் தாமே விளங்கும். அநுபூதி தன்வேதனைக்காட்சி என்பன ஒருபொருட்கிளவி. பெரும்பெயர்க் கடவுளிற் காண்டற்கு மலத்தீர்வும், மலத்தீர்விற்கு அருந்துயர்க்குரம்பையினுன்மாநாடலும் ஏதுவென்பது விளக்குதற்கு அம்முறையே கூறினர்; கூறினரேனும், பொருளுக்கேற்ப மாறுதல் கருத்தெனக்கொள்க.

அற்றேல், மயர்வறுதல் பெரும்பெயர்க்கடவுளிற் காண்டற்பயனுதலின் அம்முறைபற்றி அதனை முற்கூறுகவெனின், அங்ஙனமாயினும் இது சிறந்தபயனென்பது விளக்குதற்கும், அளித்தவென்பதனேடு இயைதற்கும் ஆண்டுக் கூருது பிற்கூறினரென்க.

இஃது என்சொல்லியவாறேவெனின், இவ்விருவகையியல்பும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது ஒரோவொன்றேபற்றி ஐக்கியவாதமுதற் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முள் மாறுகொண்டு மயங்குவார்க்கு, அங்ஙனம் மயங்காது அவற்றின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்தது இந்நூலென்றவாறாயிற்றென்பது. இஃது அறியாதார் எல்லாவாகமப்பொருள்களையும் பன்னிருசூத்திரத்தாற்றொகுத்து விளக்குதற்கெழுந்தது இந்நூல் என்று உரைப்ப. மிருகேந்திரத்தின் முதற்கண்ணதாகிய ஒருசூத்திரத்தானே எல்லாவாகமப்பொருளுந்தொகுத்து விளக்கப்பட்டனவென்பது ஆண்டே அறியக்கிடத்தலானும், மற்றும் அங்ஙனந் தொகுத்துக்கூறும் ஆகமங்கள் பலவுள ஆதலானும், அதுபற்றி இதன்கட்போந்த விசேடமின்மையானும், **நாடிக் கண்டு மயர்வற அளித்த சிவஞானபோதம்** என்றதற்குத் தாற்பரியம் அஃதாகாமையானும், அவருரைப்பனவெல்லாம் போலியென்றொழிக.

**சிவஞானபோதம்** என்றதூஉம் இக்காரணத்தாற் பெற்ற பெயர். அஃது எவ்வாறெனின், *"உயர்ஞான மிரண்டா மாறு மலமகல வகலாத மன்னுபோதத்—திருவருளோன் றென்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமமென்

* சிவப்பிரகாசம், பாயிரம் - ௧௦.

நுலைநறியச் செப்புநூலே" என்பதாகலின், பரஞானம் அபரஞானம் இரண்டுஞ் சிவஞானமெனப்படும். அவற்றுள், பரஞானத்தைப் போதிப்பது எல்லாவபரஞானங்கட்கும் பொதுவாதலின், ஈண்டுச் சிவஞானம் என்றது அவ்வபரஞானமாகிய சிவாகமமேயாம். போதித்தல் - அவற்றின் நிச்சயப்பொருள் இதுவென உணர்த்துதலாம். ஆகவே, சைவாகமங்களின் பொருணிச்சயம் உணர்த்துவது சிவஞானபோதம் எனக் காரணக்குறியாயிற்றென்று உணர்க. இப்பொருள் வடமொழிச் சிவஞானபோதத்துப் பன்னிரண்டாஞ் சூத்திரத்துப் * பிற்பாதியிற் கூறியவாறுபற்றி உரைக்கப்பட்டது.

சிவஞானமெனப் பொதுப்படக் கூறினுந் தலைமைபற்றி ஞானபாதமே கொள்ளப்படும். ஞானபாதத்திற்குந் தலைமை † "கிரியையென மருவுமவை யாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்" என்பதனானும் அறிக.

அற்றேல், ஏனை மூன்றுபாதப் பொருள்களை ஆராயும் நூல்கள் யாவையெனின், அவை சோமசம்புசிவாசாரியர் செய்த கிரியாகாண்டக்கிரமாவலி முதலியனவாமென்க. அற்றேல், ஞானபாதப் பொருளாராய்ச்சி நூலும் பிற்காலத்து ஆசிரியன்மாரே கூறவமையும்; ஆகமத்துட் கூறவேண்டாம்பிற வெனின், ஆசிரியன்மார் அவை அநுட்டிக்குமுறைமை ஆராயப் புகுந்தாரன்றி அவற்றிற்குப் பொருளொருமை ஆராயப் புகுந்தாரல்லர். அவை சிறுபான்மை தம்முள் வேறுபாடுடையவென்றும், "யார்யார் எவ்வாகமத்தின் முறையேதீக்கைபெற்றார் அவரவர் அவ்வாகமத்தின் முறையே அநுட்டிக்க" என்றும், × "எக்கோயிலின் எவ்வாகமத்தின் முறையே பிரதிட்டை செய்யப்பட்டது அக்கோயிலுக்கு அவ்வாகமத்தின் முறையே பூசை விழா முதலிய நடாத்துக" என்றும், மாறிச்செய்யிற் குற்றமென்றும் ஆகமங்களே கூறுதலின் அவற்றிற்குப் பொருளொருமை காட்டலாகாமையிற், கற்பபேதத்தானும், ஆன்மாக்கள் கருத்து வேறுபாட்டானும், அவ்வவற்றிற்கேற்பப் பொருள்கூறல் பொருத்தமுடைத்து என்பதுபற்றி, அவற்றைக் கூறும் ஆகமங்கள் சிறுபான்மை அங்ஙனம் வேறுபட நிகழ்ந்தன. இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை உணர்த்துவதாகலின் ஆண்டு வேறுபடுதல் பொருந்தாதாயினும், ஆன்மாக்களின் மலபரிபாக தாரதம்மியத்திற்கேற்பத் துலாருந்ததிமுறைமைத்தாக உணர்த்துதல் மரபு என்பதுபற்றி, அங்ஙனங் கூறும் ஆகமங்களை நோக்குவோர் அவை ஒன்றோடொன்று முரணுவனபோலக் கருதி மயங்குவர். அங்ஙனம் மயங்காமைப் பொருட்டு ஞானபாதப்பொருள்களையெல்லாம் பொது உண்மை என இருவகைப்படுத்து ஆராய்ச்சிசெய்து ஒருதலையான் உணர்த்தவேண்டுதலின், அஃது ஏனையோரான் ஆகாமையின், வேண்டுமென்க.

அங்ஙனம் முரணுவனபோலத் தோன்றுவன யாவையெனின், சுவாயம்புவம் முதலியவற்றிற் பதார்த்தம் ஏழென்றலும், ✝ பவுட்கரம் # மதங்கம்

* ஶைவம் விஜ்ஞாநவஜ்ஜ்ஞேயம் ஶைவாகம விநிர்ணயம்॥ இ-ள். இவ்வாறே சிவஞானபோதத்திற் சைவாகமங்களின் பொருணிச்சயத்தை அறிக.

† சிவப்பிரகாசம், பாயிரம்—௧௦.

× காமிகம், உத்தரம்

முதலியவற்றின் ஆறென்றலும், பராக்கியை முதலியவற்றின் ஐந்தென்றலும், சர்வஞ்ஞானோத்தரம் முதலியவற்றின் நான்கென்றலும், இரௌரவம் மிருகேந்திரம் முதலியவற்றின் மூன்றென்றலும் போல்வனவாமென்க. அவையெல்லாம் மூன்றென்றதனுள் அடங்குதலின் முப்பொருளென்றலே எல்லாவாகமங்கட்குந் துணிபெனக் காட்டுதல்போல்வன பொருளொருமை கூறுதலாமென்பது.

அஃது அங்ஙனமாக; இந்நூல் நந்திபெருமான் பெறுதற்கு வரலாறு என்னையெனிற், கூறுதும்:—மகாசங்காரகால முடிவின்கண் உலகங்களை மீளப் படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பராசத்தி குடிலையை நோக்கியவழி, வேதாகமங்கள் குடிலையினின்றும் நாதவடிவாயும், அதன்பின் விந்துவடிவாயும், அதன்பின் அக்கரவடிவாயும் முறையே தோன்றின. பின் அவற்றைச் சொற்றொடர்ப்படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க்கு அருளிச்செய்தற்பொருட்டுப் பரமசிவன் ஈசானமுதலிய பஞ்சப்பிரம மநுக்களாகிய சத்திகளே திருமுடி முதலிய அவயவங்களாகச் சகளநிட்களத் திருமேனி கொண்டருளிச் சதாசிவமூர்த்தியாய்நின்று, தற்புருடமுதலிய நான்கு திருமுகங்களான் வேதங்களைத் தோற்றுவித்து, மேற்கண்ணதாகிய ஈசான முதலாகிய ஐந்து திருமுகங்களானுங் காமிகம் முதலிய இருபத்தெட்டு ஆகமங்களையுந் தோற்றுவித்து, வேதங்களை அநந்த தேவர்வழியானே பிரமனுக்கு அருளிச்செய்து, சிவாகமங்களைப் * பிரதிசங்கிதை முறையானே பிரணவர் முதலிய பதின்மரும் மகாருத்திரர் முதலிய பதினெண்மருமாகிய இருபத்தெண்மருக்குஞ் சிவபேதம் உருத்திரபேதமெனப் பகுத்து ஒரோவொன்று ஒவ்வொருவருக்கு அருளிச்செய்து, பின்பு † மகௌகமுறையானே அவ்விருபத்தெட்டினையும் வித்தியேசர் எண்மரின் முதல்வராகிய அநந்ததேவருக்கு அருளிச்செய்தான். அவற்றை அநந்த தேவர் நூற்றுப்பதினெட்டு உருத்திரரின் முதல்வராகிய சீகண்டருத்திரருக்கு அருளிச்செய்தார். அவற்றைச் சீகண்டருத்திரர் கணங்கட்குந் தேவர்க்கும் முனிவர்க்கும் அளித்தற்பொருட்டு முதற்கண் நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார். இது சிவாகமம் வந்த வரலாறு என்றுணர்க. இன்னும் இதனை விரிப்பிற் பெருகும்; ஆகமங்களிற் கண்டுகொள்க.

அங்ஙனம் ஆகமங்களெல்லாங் கேட்டருளிய நந்திபெருமான் சீகண்ட முதல்வரை வணங்கிநின்று, சிவாகமந்தோறுஞ் சரியை முதலிய நாற்பாதங்களுஞ் சிறுபான்மை வேறுவேறாகக் கூறப்பட்டன. அவற்றுள், உண்மையாவது இதுவென்று அருளிச்செய்யவேண்டுமென இரந்து விண்ணப்பஞ்செய்து வினவியவழிச், சீகண்டமுதல்வர் கருணைகூர்ந்து "நன்றே வினவினாய்! அநந்ததேவர் எமக்கு அருளிச்செய்தவாறே கூறுகின்றோம்; கேட்பாயாக" என்றருளிக், "கற்பந்தோறும் படைப்பு வேறுபாடுங் கேட்போர் கருத்து வேறுபாடும்பற்றி அவற்றிற்கு இயையச் சரியைமுதலிய மூன்றுபாதங்க

---

* பிரதிசங்கிதை முறை - ஒருவிடயத்தை வேறுவேறு வகுத்துக்கூறுதல்.

† மகௌகமுறை - வேறுவேறு வகுக்கப்பட்ட பலவற்றைத் திரட்டிக் கூறுதல்.

# மதங்கம், ஞானபாதம், கையெழுத்துப்பிரதி 112-ம் பக்கம்:- ஆறு பதார்த்தம் தொகுத்துக் கூறுதல்.

[illegible] ।
[illegible] ॥

இதன் பொருள்

நன்றாகச் செய்யப்பட்டதும், நன்றாகப் பகுக்கப்பட்ட அங்கங்களை உடையதும் ஆறுபதார்த்த சொரூபமாய் உள்ளதும், இன்பத்தைச் செய்கின்ற நான்கு பாதங்களோடு கூடியதும், விரிவு உடையதும், ஞானமிர்தமாயும் உள்ளது இந்த ஆகமம்.

ளும் ஆகமங்களின் வெவ்வேறாகக் கூறப்பட்டன. ஆகலான், அவற்றுள், எவ்வாகமத்தின்வழி யார் தீக்கைபெற்றார், அவ்வாகமத்தின்வழி அவர் ஒழுகற்பாலர். இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை உணர்த்துவதாகலான் அதுபலதிறப்படுதல் பொருந்தாமையின், அவையெல்லாந் தூலாருந்ததி முறைமைபற்றிக் கூறப்பட்டனவன்றி மாறுகோளல்லவென்பது வருத்துணர்த்துதற்பொருட்டு, இரௌரவாகமத்துட் பன்னிருசூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞானபோதம் என்பதோர் படலம். அதுகேட்டார்க்கு எல்லாவாகமப்பொருள்களும் மாறுகோளின்றி இனிது விளங்கும்'' எனக் கூறி, அச்சிவஞானபோதத்தை நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார்.

நந்திபெருமானும் அதுகேட்டதுணையானே எல்லா ஐயமும் நீங்கி மெய்ப்பொருள் தெளிந்து, பின்னர் அதனைத் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சனற்குமாரமுனிவர்க்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதிமாமுனிகட்கு அருளிச்செய்தார். அவர் தமிழ்நாடு செய்த தவத்தானே திருவெண்ணெய்நல்லூரின் அவதரித்தருளி மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் எழுந்தருளியிருந்த மெய்கண்டதேவர்பால் வந்து சிவஞானபோதத்தை நல்கி, "இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்து உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புமுரைக்க'' என்று அளித்தருளிப் பொழிப்புரைக்குமாறுஞ் சத்தியஞானதரிசனிகள்பால் தாம்கேட்டவாறே வகுத்தருளிச்செய்து நீங்க, அவரும் அவ்வாறே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளித், தம்முடைய மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த அருணந்திகுரவர்க்கு அளித்தருளினார். இது நூல்வந்தவரலாறெனக்கொள்க.

இப்பொழிப்புரையை வடநூலார் வார்த்திகம் என்பர். பொழிப்பு எனினுங் காண்டிகை எனினும் ஒக்கும். பொழிப்புரை இருவகைப்படும்; அது முன்னர்க்கூறுதும்.

**உயர்சிவஞானபோதம்** என்றது ஏனை மூன்றுபாதத்தை ஆராயும் நூல்கட்கு மேற்பட்ட சிவஞானபோதம் என்றவாறு; எனவே, அந்நூல்கள் உணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்பது பெற்றாம்; பெறவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை ஓதி அதன்பின் ஏனை மூன்றுபாதங்களை ஆராயும் நூலை முறையே கேட்டு அவ்வாறு ஒழுகி மனந் தூயராய் நித்தியாநித்திய உணர்வுதோன்றிப் பிறவிக்கு அஞ்சி வீடுபேற்றின் அவா மிக்குண்டாயவழி, அவர்க்கு இந்நூல் உணர்த்துக என்பது போந்ததெனக் கொள்க.

அற்றேல், முற்பிறவியிற் சரியை கிரியை யோகங்களைச் செய்து முற்றுப்பெற்று அறியாமையின் நீங்கினார்க்கு இப்பிறவியின் அவை செய்ய வேண்டாமையிற், சரியைநூல் முதலிய மூன்றும் ஆராய்ந்தபின்னர் இந்நூல கேட்கற்பாற்றென்பது ஒருதலையன்றாலெனின், அற்றன்று; * "ஆயைர்

* இந்நூல், கஉ-ம் சூத்திரம்.

தானு மரனெனத் தொழுமே" எனவும், * "மண்முதனுளம்" எனவும், * "குண்டலியிற் செய்தோமங் தோதண்டஞ் சானிக்கில்" எனவுங் கூறுதலின் ஞானநிலையின் நிற்போர்க்கும் மயர்வறுத்தற்குச் சாதகமாகச் சரியைமுதலியன செய்யவேண்டுதலின், அந்நூல்கள் ஒருதலையான் முன்னர் ஆராயவேண்டுமென்க. அகன்ற, புணர்ந்த என்னும் பெயரெச்சங்கள் முறையே காரியப்பெயரும் ஏதுப்பெயருங்கொண்டு முடிந்தன.

உயர்சிவஞானபோதமென்பதனால் யாப்புங் கேட்போரும் நுதலியபொருளும் நூற்பெயரும், நாடித் தீர்ந்து கண்டு மயர்வற வென்பதனால் நுதலியபொருளின்வகையும் பயனும், நந்தி முனிகணத்தளித்தவென்பதனால் வழியும், வெண்ணெய்ச் சுவேதவனன் மெய்கண்டதேவன் என்பவற்றால் ஆக்கியோன்பெயரும், தமிழ் வழங்கு நிலமே இந்நூல் வழங்குநிலமென எல்லையும் உணர்ந்துகொள்க. ஈண்டுக் கூறும் பயன்முதலாயின ஏனையாகமங்களுக்கு ஏலாமையின், இவ்வொருநூற்கே உரிய சிறப்புப்பாயிரமாய வாறு உணர்க. வடநூலார் யாப்பை ஆநந்தரியமென்றும், நுதலியபொருளை விடயமென்றும், கேட்போரை அதிகாரிகளென்றும், பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. யாப்புச் சம்பந்தமென்பாரும் உளர்.

இஃதறியாது வழியின்வகையாயடங்குந் தொகுத்தன்முதலியவற்றை யாப்பென்றும், நூல் அரங்கேறும் அவைக்களத்துள்ளோரைக் கேட்போரென்றும் உரைப்பாருரையெல்லாம் போலியென்பதும் பிறவுந் தொல்காப்பியப் பாயிரவிருத்தியுள் விரித்துரைத்தாம்; † ஆண்டுக்காண்க.

## ‡ சைவாகமப்பிராமாணியம்.

அற்றேல், அஃது அங்ஙனமாக; வேதங்கள் ஒருவராற் செய்யப்படாது நிலைபேறு உடைமையானும், ஆன்றோரால் தழுவப்படுதலானுங் குற்றமின்றிப் பிரமாணமாம் என்பது துணியப்படும். ஆகமங்கள் அவ்வாறு நித்தமன்றி ஒருவராற் செய்யப்பட்டமையானும்; பிரமப்பொருள் வேதமொன்றானே § உணர்த்தப்படும் என்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையானும்; அங்ஙனமாயினும் மிருதிநூல் முதலியனபோல வேதம் முதனூலாகக் கொண்டு ஆகமங்கள் செய்யப்பட்டனவெனின், அது நும்மனோர்க்குக் கொள்கை அன்மையானும்; அங்ஙனங் கொள்ளின் வேதப்பொருள் உணர்ந்து நூல்செய்த மனுமுதலியோர்போல, ஆகமஞ்செய்த இறைவனுக்கு முற்றுணர்வின்மை பெறப்படுதலானும்; அவ்வாறன்றி முற்றுணர்வு இயல்பாகவுடைய இறைவனாற் செய்யப்பட்டமையின் ஆகமங்கள் பிரமாணமெனக்கூறின், முற்றுணர்வுடைய இறைவனுண்மை துணிந்தபின்னர் அவனாற் செய்யப்பட்டமையின் ஆகமம் பிரமாணமெனத் துணியப்படும், ஆகமம் பிரமாணமெனத் துணிந்தபின்னர் அதனால் இறைவனுண்மை துணியப்படுமென, "ஒன்றனையொன்றுபற்றுதல்" என்னுங் குற்றமாமாகலானும் ஆகமம் பிரமாணம் என்பது தெளியப்படாதாம்.

---

* இந்நூல் கூ-ம் சூத்திரம், ௩-ம் அதிகரணம். † தொல்காப்பியப் பாயிரவிருத்தி, பக்கம்—கஉ. ‡ இதனைச் சிவாக்கிரபாடியத்தினும், க-ம் சூ-ம், ௫சு முதல் கூஉ-ம் பக்கம் வரையுங் காண்க. § உணரப்படும் என்பதும் பாடம்.

அல்லதூஉம், வாசிட்டலைங்கத்திற் "பாஞ்சராத்திரம் புகழ்ந்தெடுத் தொருசிலர் பகர்வார்" என்பது முதலாகத் தந்திரவழி ஒழுகுவோரை எடுத்துக்கூறி "அவர் மா மூடர்" எனவும், பாத்மபுராணத்தில் வசிட்டனுக்குந் திலீபனுக்குங் கூற்று நிகழ்வுழித் "திராவிட தேசந் தன்னிற் சித்திர சேனனென்பான்" என்று எடுத்துக்கொண்டு, "சித்திரசேனன் என்னும் அரசன் பாசண்டர்கூற்றே பற்றி வைதிக ஒழுக்கத்தைக் கைவிட்டுப் பாசுபத வழி ஒழுகி நரகத்தில் வீழ்ந்தான்" எனவும், வாசிட்டலைங்கத்திற் "சாண்டில்லியன் என்பான் ஒருவன் தறுகண்ணனாய்ப் பிறர்மனை நயந்து வாசுதேவனைத் தீங்குநெறியானே வழிபட்டு நிரயத்தில் வீழ்ந்தான்" எனவுஞ், சூதசங்கிதையில், "மொழிபாஞ்ச ராத்திரங்கா பாலங் காளா முகஞ்சாத்தம் பவுத்தமா ருகதந் தன்னிற்—கழிபாசு பதநூல்சாம் பவத்திற் றீக்கை காதலிப்பீர் வேதியரிற் கடையர் காணீர்" என்றற்றொடக்கத்தால் "தந்திரவழி ஒழுகுதல் பொய்த்தொழில் உணர்ந்து வெகுண்ட கவுதமன் சாபப்பயன்" எனவுங், கூர்மபுராணத்தில், "அனைவரு மரன்றனை யரியையுண்மி" என்று எடுத்துக்கொண்டு * "அறுமுனிவர் இட்ட சாபவயத்தானே வேட்பித்தல் முதலியவற்றின் அதிகாரமின்மையான் விருத்தியின்றி வருந்துவோர்க்கு விருத்தியின்பொருட்டுத் தந்திரஞ் செய்யப்பட்டது" எனவும், அதனுள், "மோகநூ லிருவேமுஞ் செய்வோம் விடைக்கொடியாய்" என்பதனால் ஆகமங்கள் மோகிப்பிக்கும் நூல் எனவுங் கூறுதலால், ஆகமம் பிரமாணமல்ல என்பதே தெற்றெனவிளங்குமாகலின், அவை வீடுபேறுமுதலிய மறுமைப் பயன் பயப்பிக்குமாறு என்னையெனிற், கூறுதும்:—

வேதம் நித்தம் என்பதற்குப் பிரமாணம் இன்மையானும், தோற்றக் கேடுகள் காணப்படுதலான் அநித்தம் என்பதே துணியப்படுதலானும், "அந்தக் ககரமே இது" என்னும் மறித்துணர்வு "அந்தச் சுடரே இது" என்பதுபோலச் சாதியொருமைபற்றி நிகழ்வதேயாம் ஆகலானும், அவ்வாறன்றி எழுத்துக்கள் நித்தமெனக் கொள்ளினும் அவை ஒன்றோடொன்று தொடர்ப்பாடுற்றுவருஞ் சொற்கள் அநித்தமே ஆகலானும், உலகத்திற்குத் தோற்ற ஒடுக்கங்கள் உண்மையிற் பிரவாகநித்தம் என்பதும் பொருந்தாமையானும், எல்லாவுயிர்கண்மாட்டும் பேரருளுடைய பரமசிவனாற் செய்யப்பட்டமை பற்றியே வேதங்கட்குப் பிரமாணமுண்மை கொள்ளப்படும். அம்முறையானே சிவாகமங்களும் பிரமாணமாதல் துணியப்படும். அது வேதமுதல் உலகாயதநூல் இறுதியாகிய எல்லா நெறியும் பரமசிவனாற் செய்யப்பட்டமையிற் பிரமாணமாமெனச் சூதசங்கிதையிற் கூறியவாற்றானும் அறிக.

ஒருவன் இன்னேன் வந்தேன் என்புழி, அவனும் அவன் வாய்மொழியும்போல, முதல்வனும் முதல்வனாற் செய்யப்படும் வேதாகமங்களுந் தம்முட் காரக ஏதுவும் ஞாபக ஏதுவுமாகிய வேறுபாடுடைமையின், இன்னோரன்னவை "ஒன்றனை யொன்று பற்றுதல்" என்னுங் குற்றமாகா என்க. இனி அன்னோரால் தழுவப்பட்டமைபற்றி வேதஞ் சிவாகமம் இரண்டும்

* அறுமுனிவராவார் - துருவாசர் ததீசி கௌதமர் கண்ணுவர் பிருகு உபமன்னியு என்னுமிவர்.

" - காரக ஏது — [illegible]. ஞாபக ஏது — [illegible].

பிரமாணமெனத் துணிந்தபின்னர் அவற்றானே அவை பரமசிவனாற் செய்யப்பட்டன என்பது துணியப்படும் ஆகலானும் ஒன்றனையொன்றுபற்றுதல் ஆகாமை உணர்க. ஆன்றோரால் தழுவப்படுதல் ஆகமப்பகுதியின் இன்றாலெனின், அற்றன்று; "துறக்கம் வேண்டியோன் சோதிட்டோமத்தான் வேட்க" என்றற் றொடக்கத்துச் சுருதிகட்கு அவை வேட்குமாறு வகுத்துக் கூறுஞ் சுருதிகளும் அத்தன்மையவாகிய கற்பசூத்திரங்களும் இன்றியமையாது வேண்டப்படுமாறுபோல, வேதத்துள் விதிக்கப்படுஞ் சிவபூசை முதலிய விதிகட்கும் அவற்றை வகுத்துக் கூறுங் காமிகம் முதலிய சிவாகமங்கள் இன்றியமையாது வேண்டப்பட்டுநிற்றலின், அவை ஆன்றோரால் தழுவப்படுதல் ஒருதலை; ஆகலான் என்க. இது சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் அரதத்தாசாரியர் கூறியவாற்றான் அறிக.

அங்ஙனமாயினுந் தீக்கைப்பேறு ஆன்றோரால் தழுவப்படாமையின், அப்பகுதிப் பிரமாணமாமாறு என்னையெனின், அற்றன்று; சுவேதன் உபமன்னியன் அகத்தியன் முதலியோர்க்குத் தீக்கைப்பேறு காண்டலான் என்க. உபமன்னியன் அகத்தியன் முதலியோர்பாற் கண்ணன் இராமன் முதலியோர்க்குத் தீக்கைப்பேறு அரிவஞ்சம் பாரதம் பாத்மபுராணம் முதலியவற்றின் விரித்துக் கூறியவாறுங் காண்க. அஃது எல்லாரும் பெறாமை, எல்லாருக்கும் மலபரிபாகம் இன்மையாற், * பரமகஞ்ச சந்நியாசம்போல, அதற்கு உரிய அதிகாரிகள் சிலரேயாகலான் என்பது.

அற்றேல், வாமநூல் முதலாயினவும் பரமசிவனாற் செய்யப்பட்டமையின், காமிகம் முதலியவற்றோடு ஒப்பப் பிரமாணமாதல் வேண்டப்படும் பிறவெனின், படாது; அவற்றுட் கூறுஞ் சுரைக்குடந் தாபித்தல் முதலிய ஆசாரங்கள் வேதத்துள் எடுத்தோதி விலக்கப்பட்டமையின், சவுத்திராமணி யாகத்தில் சுரை ஏற்றல் வேதத்துள் விதிக்கப்பட்டதாயினும் ஏனையோர்க்கே ஆயவாறுபோல, அவையும் ஏனையோர்க்கே உரிய என்பது பெறுதுமாகலான், அவையும் அவற்றிற்கு உரிய அதிகாரிகள் வேறுபாட்டாற் பிரமாணமாம் எனக் கொள்ளப்படும் என்க. அங்ஙனமாயின், அது வேதவிதியோடு முரணுமாலோவெனின், அவற்றுட் கூறுங் கிரியைகட்கு வேதநெறியில் தப்பிய மாந்தர் அதிகாரிகள் எனப் பிரித்துவைத்தலான் முரணாதென்க. இது காந்தத்துட் கூறப்பட்டது.

இனிப், பொருள்கள் முரணியவழி வலியவற்றான் மெலியவை கண்டிக்கப்படும் எனக்கொள்க. எல்லாநெறியும் இறைவனாற் செய்யப்பட்டமையான் விசேடம் இன்மையின், அவற்றுள், ஒன்றற்கொன்று வன்மை மென்மை கூறின், இதுவே மாறுகொளக்கூறலாமால் எனின், அற்றன்று; அவற்றைப் பின் வழிப்படுத்து நூல்செய்தோர் தாரதம்மியத்தானே அவற்றிற்கு வன்மை மென்மை கூறுதல் அமையுமாகலின். பின்னூல் செய்தார் அவ்வந்நெறியிற் கூறும் பொருள்களை அம்மொழியின் தாற்பரியம் அறியாது

* பரமகஞ்சசந்நியாசம்—குடீசகம் பெகூதகம் ஹம்ஸம் என்னும் மூன்றினும் மேலாய் நான்காவதாய் உள்ளது; அது நிட்டை புரியும் பக்குவர்க்கு உரியது.

மயங்கி அவற்றோடு மாறுகொளத் தொகுத்தும் விரித்துஞ் செய்தாராகலின், அவை மென்மை எனப்பட்டன. மாறுகோளில் கூற்றின் எல்லாம் பிரமாணமேயாம் என்க.

இனி, வேதத்தினுஞ் சிவாகமத்தினும் இந்திரன்முதலியோர் அவ்வாறு வழிப்படுத்து வேறு நூல் செய்யாது, வேதத்திற்கு வியாசர் முதலியோரும் ஆகமத்துக்குப் பிரணவர் முதலியோரும் போலச் சம்பிரதாயமாத்திரமே விளக்கினாராகலின், அவ்விரண்டனுள் வன்மை மென்மைகள் கூறுதல் பொருந்தாமையின், அவற்றுள் ஒரோவழி மாறுகோள்போலத் தோன்றியவழி, வேதவாக்கியங்கள் தம்முள் மாறுபட்டவழிக் கருத்துவேறுபாடுபற்றிக் கூறியதெனத் தெரிந்துரைத்துக் கொள்வதுபோல, அவை முரணுதவாறு தெரிந்துரைத்துக்கொள்வதன்றி அவை ஒன்றுனென்றுமறுக்கப்படா என்க.

இவ்வாறன்றி, இன்னும் ஒருவாற்றான் விடுக்குமாறு:—சாருவாகம் முதலிய எல்லாச் சமயமும் பரமசிவனாற் செய்யப்பட்டமையிற் பிரமாணமேயாமாயினும், அவற்றுள், முதற்கண் மிகவும் மந்த உணர்வினராய் உலக இன்பமே பெரும்பயன் எனவுந், தமக்குப் புறம்பாகிய மக்கள் முதலியோரே ஆன்மா எனவும் அபிமானஞ் செய்து உழலும் அதிகாரிகளுக்குப் பரமசிவன் இரங்கித், துன்பம் முதலியவற்றோடு விரவுதலான் உலக இன்பம் பேருறுதிப்பயனன்று எனவும், மக்கள் முதலியோர் ஆன்மா அல்லர் எனவும் உணர்த்தி, அவர்களுணர்வு அவ்வளவின் நிலைபெறுதற்பொருட்டு, நுட்பப் பொருள் உணர்த்தப்புகிற் கொள்ளமாட்டாமையால் தூலவுடம்பே ஆன்மா எனவும், அவ்வுடம்பு நசித்தலே பேருறுதிப்பயன் எனவும் அறிவுறுத்தருளினன். பின்பு அங்ஙனம் அறிவுறுத்த நெறியே ஒழுகிப் பரமசிவன் திருவருட்கு உரியராய் மலசத்தியிற் சிறிது நீங்கி, உடம்பே ஆன்மா உடம்பு நசித்தலே பேருறுதிப்பயன் என்பவற்றின் ஐயப்பாடு தோன்றிய அதிகாரிகளுக்கு, உடம்பு முதலியன ஆன்மாவல்ல என்று மறுத்தற்பொருட்டுப் புத்த நூல் அறிவுறுத்தருளினன். இவ்வாறே மேலுஞ் சோபானமுறையான் உபதேசித்தருளியதென மாறுபாடின்மை உணர்ந்துகொள்ளப்படும்.

இங்ஙனஞ் சாருவாகம் முதலிய நூல்களைச் சோபானமுறையாற் கொள்ளவே, அதிகாரி தாரதம்மியத்தான் மேலுள்ள நூல்கள் கீழுள்ள நூல்களை மறுக்குமுகத்தால் தோன்றினவாகலின், மாறுகோளில்லை என்பதூஉம், அவையும் ஒருவாற்றாற் பிரமாணமேயாம் என்பதூஉம் போந்தமை உணர்க.

இது, தைத்திரியத்தில் அதிகாரிபேதம்பற்றி "அன்னமய கோசம் பிரமம்" என்றும், அதனை மறுத்து மேல் அதனிற் சூக்குமமாகிய "பிராணமய கோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "மனோமய கோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "விஞ்ஞானமய கோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "ஆனந்தமய கோசம் பிரமம்" என்றும், ஒன்றற்கொன்று சூக்குமமாய் உணர்த்துதல் போலவும், கவுசிதக உபநிடதத்தில் அதிகாரிபேதத்தால் இந்திரன் தைத்தியனுக்குத் தன்னையே பிரமமாகக் கூறியதுபோலவும் கொள்க. அங்ஙனம் புல்லை எதிரே காட்டி ஆக்களைப் பிடிக்குமாறு போலச், சோபான

முறைமை பற்றிக் கூறியது என்பதூஉம், அவை எல்லாம் ஒருவாற்றாற் பிரமாணம் என்பதூஉஞ் சூதசங்கிதையிற் காண்க.

இங்ஙனங் கூறியவாற்றானே, வேதமுஞ் சித்தாந்த சைவாகமமும் என்னும் இரண்டுமே உத்தமநூல் எனவும், ஏனைச் சாருவாகமுதற் பாஞ்சராத்திரம் இறுதியாகிய நூல்களெல்லாம் இவ்விரண்டனோடும் மாறுபட்டவழி மறுக்கப்படும் எனவும், அவற்றுள்ளும் வழிநூல் செய்தார் தாரதம்மியத்தாற் கீழ்க்கீழ் நூல்கள் மேன்மேல் நூல்களான் மறுக்கப்படும் எனவும், உணர்ந்துகொள்க.

இனித், "தந்திரவழி ஒழுகினோர் மூடர்" எனவும், "நிரயத்தில் வீழ்ந்தார்" எனவும், "அவை சாபப்பயன்" எனவும், "விருத்திப் பொருட்டு" எனவும், "மோகநூல்" எனவும் புராணங்களிற் கூறியது வேதப்பொருளோடு மாறுகொளக் கூறும் பாசுபதம் பாஞ்சராத்திரம் முதலிய புறச்சமயங்களையேயாம்; வேதப்பொருளையே விரித்துக்கூறப் புகுந்த வேதசாரமாகிய சித்தாந்த சைவாகமங்களை அன்றென உணர்க. இதுவும் வாயவ்வியசங்கிதை சனற்குமாரசங்கிதை கூர்மபுராணம் மகுடாகமம் முதலியவற்றுட் கூறியவாறு.

இனிப், புறச்சமயவழி ஒழுகினோரை அங்ஙனம் இழித்துக் கூறியதூஉம் அந்நெறி ஒழுகுதல்பற்றி அன்று; மற்றென்னெனின், அவற்றையே பொருளாகக்கொண்டு வேதநெறியை நிந்தித்தமைபற்றி என்க. அதுவும் ஆண்டே கூறப்பட்டது. புறச்சமயநூல்கள் விருத்திப்பொருட்டுச் செய்யப்பட்டன என்பதூஉம் உடலோம்புதற் பொருட்டென்றதன்று; விருத்தி ஒழுக்கமுமாமாகலிற் சாபத்தால் வேதநெறியின் நீங்கினோர் ஆசரித்தற்பொருட்டு என்றவாறும். மோகநூல் என்றதூஉம் மணிமந்திர மருந்து முதலியவற்றான் விம்மிதம் பயக்கும் நூல் என்றவாறேயாம்.

இனி, வேதமுஞ் சிவாகமமும் ஒன்றேயாயினும் இருபகுதிப்பட்டது, வேதம் மூன்று வருணத்தாருக்குஞ் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் பொதுவாதல் பற்றி யாதலாற் சிவாகமங்கள் பிரமாணம் என்பது தெற்றென உணர்க. இங்ஙனஞ் சைவாகமங்களுக்குப் பிராமாணியம் பவுட்கரவுரையின் உமாபதிசிவாசாரியர் காட்டியவாறே காண்க.

நீலகண்டபாடியத்திற் பதியதிகரணத்திற் காட்டுமாறு:—

"சிவாகமங்களில் ஒருசாரன பரப்பிரமங் கேவலம் நிமித்தகாரணம் எனக் கூறும்; அதனை மறுத்தற்கு எழுந்தது இவ்வதிகரணம் என்று உரைப்பாருமுளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத்திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் வேதமுஞ் சிவாகமம் என வழங்கப்படும்; ஆதலாற் சிவாகமம் மூன்று வருணத்துக்கே உரித்தாயதும் நான்குவருணத்துக்கே உரித்தாயதும் என இருவகைப்படும். அவற்றுள், முன்னையது வேதம் எனவும் பின்னையது சிவாகமம் எனவும் வழங்கப்பட்

டனர்; இவ்விரண்டுஞ் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம்; இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் கூறப்பட்டது; பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிராசாதமுதலிய மந்திரங்களும், பதி பசு பாசமுதலிய பொருள் வழக்கமும், திருநீற்றின் உத்தூளனம் திரிபுண்டரம் உருத்திராக்கந்தரித்தல் சிவலிங்கபூசை முதலிய தருமங்களும் பிறவும் வேதஞ் சிவாகமம் இரண்டினும் ஒப்பக்காண்டலான், அவ்விரண்டும் பிரமாணமே ஆகலானும், கருத்தா ஒருவனே ஆகலான் அவ்விரண்டற்கும் பொருள் ஒன்றேயாகலின் அவற்றுள்ளும் மாறுபாடின்மையானும், இவ்வதிகரணங் கேவலம் நிமித்தமாத்திரமே இறைவன் எனக்கூறும் இரணியகருப்ப நூலாகிய யோகசாத்திரத்தை மறுத்தற்கு எழுந்ததெனவே யாங் கூறுதும்'' என்று இவ்வாறு நீலகண்டசிவாசாரியரால் காட்டப்பட்டது. இதனை விரித்துச் * சிவாதித்தமணிதீபிகை சிவதத்துவவிவேகமுதலிய நூலுடையார் சிவாகமங்கட்குப் பிராமாணியங் காட்டியவாறும் அந்நூல்களுட் காண்க.

"வேதஞ் சிவாகமம் என இருபகுதிப்பட்டது, மூன்றுவருணத்திற்கும் உரிமையாதலும் நான்குவருணத்திற்கும் உரிமையாதலும் பற்றி'' என நீலகண்டபாடியத்திற் கூறப்பட்டது.

† "வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க—ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலா—நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபாதர்க்கு நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்—தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்தமாகும்'' எனவும், ‡ "உலகியல் வேதநூ லொழுக்க மென்பது—நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்'' எனவுங் கூறுபவாகலின் அங்ஙனந் தூலாருந்ததி முறைமைபற்றிக் கூறுதலின் இருபகுதிப்பட்டது எனவே யாங் கோடும்.

இனிச், சைவரில் ஒருசாரார் சைவாகமங்களில், * "உலகநூல், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம்'' என நூல்களை ஐவகைப்படுத்து, "மாந்திரம் ஒழிந்த நான்கும் புறநூல்'' என வைதிகத்தினையும் அவற்றுடன் விலக்குதலானும், * "வேதாந்தத்தில் ஏகனே ஆன்மா'' என வேதாந்தத்தைப் புறச்சமயங்களோடு எடுத்தோதி மறுத்தலானும், வேதம் பிரமாணமன்று என்பர். அது பகுத்துணர்வில்லாதார் கூற்றேயாம் என்று மறுக்க; என்னை? "ஆண்டு வைதிகம் என்றது மீமாஞ்சைநூலும் வைசேடிகநூலும் நையாயிகநூலும் என்னும் மூன்றுமேயாம்*'' எனவும், புறச்சமயங்களோடுவைத்து எண்ணிய வேதாந்தமாவது * "ஏகான்மவாதங்கூறும் வியாசநூல்'' எனவுஞ் சித்தாந்தப்பிரகாசிகையிற் சர்வான்மசம்புசிவாசாரியர் கூறுதலான், அது வேறென்பது தெற்றென விளங்குமாகலின், ஆண்டு வேதம் என்றதூஉம் மீமாஞ்சைநூலே எனக் கொள்க; வேதத்துள் விதித்த கரும

* அப்பயதீக்ஷிதசுவாமிகள். † சிவஞானசித்தி, அ-ம் சூ. கரு. ‡ பெரியபுராணம், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், அஉ0.

காண்டத்தை ஆராய்ச்சிசெய்தலின், அதற்கும் அப்பெயராயிற்று. அங்ஙனங் கொள்ளாக்கால், "வேதசாரஞ் சிவாகமம் ஆகலாற்சைவாசாரத்திற்குரியோன் வைதிகன்" எனவும், "வேதாந்தப்பொருளைத் தெளித்துக் கூறுவது சித்தாந்தம்" எனவும், "பிறநூல் பிறபொருள்களைக்கூறும்" எனவும் வேதத்தோடு ஒற்றுமை யுடைமை பற்றியே சிவாகமங்கட்குப் பிரமாணமாதல் கூறும் வசனங்களோடுமுரணுமாறு அறிக.

"பாசுபதம்" என்பது * யோகப்பெயராற் சைவாகமங்கட்கும் † உருடிப் பெயராற் பாசுபதாகமங்கட்கும் ஆமாறுபோல, "வேதாந்தம்" என்பது யோகப்பெயரான் வேதத்தின் முடிபாகிய உபநிடதங்களைக் கூறும்; உருடிப்பெயரான் அவற்றை எடுத்துச் செய்த ஏகான்மவாதநூலைக் கூறும்; ஆதலின், அவ்விருவேறுவகையுந் தெரிந்துணர்ந்து கொள்க.

## சிவதீக்கை.

வேதம் ஓதுதற்கண்ணும் வைதிகாசாரத்தின்கண்ணும் உபநயனப்பேறுடையார்க்கன்றி அதிகாரமின்மைபோலச், சைவாகமம் ஓதுதற்கண்ணுஞ் சைவாசாரத்தின்கண்ணுஞ் சிவதீக்கைப்பேறுடையார்க்கன்றி அதிகாரம் இல்லையெனக் கொள்க.

அத்தீக்கை நிராதாரஞ் சாதாரமென்று இருவகைப்படும். அவற்றுள், நிராதாரமாவது விஞ்ஞானகலர் பிரளயாகலருக்குத் தீவிரந் தீவிரதரமுமென்னும் இருவகைச் சத்திநிபாதத்தாற் பரமசிவன், ஆசான்மூர்த்தியை அதிட்டித்துநின்று செய்வதன்றித், தானே முன்னின்று செய்வது. அஃது உயிர்க்குயிராய்நின்று செய்வதுஞ் சதாசிவமூர்த்தமாய்நின்று செய்வதுமென இருவகைப்படும். அவற்றுள், முன்னையது விஞ்ஞானகலருக்கும் பின்னையது பிரளயாகலருக்குமெனக் கொள்க. இன்னும் நிராதாரதீக்கை இருவகைப்படும். அவற்றுள், ஒன்று தீவிரசத்திநிபாதத்தான் அநந்ததேவர் முதலியோர் பதங்களை உதவுவது; ஒன்று தீவிரதரசத்திநிபாதத்தான் வீடுபேறே உதவுவதாம்.

இனிச், சாதாரதீக்கையாவது சகலருக்கு நிலவுலகத்தின் ஆசான்மூர்த்தியை அதிட்டித்துநின்று நால்வகைச் சத்திநிபாதத்தாற் செய்வது. அதுவுந் திருநோக்கமுதற் பலவகைப்படும். அவற்றுள் சிறந்தது ஒளத்திரிதீக்கை. அது சபீசம் நிர்ப்பீசமென்று இருவகைப்பட்டுச், சாதிகாரை நிரதிகாரையென்று இருவகைப்படும்.

அவற்றுள், சபீசமாவது சைவாசாரத்தின் வழுவாதொழுகும் ஆற்றலுடையோர்க்குச் சைவாசாரகன்மத்தை நிறுத்தி மற்றவற்றைச் சுத்திசெய்வது. அஃது, அசத்தியோநிர்வாணத்தின் விசேடமாய்ச் சிவதருமிணி உலகதருமிணியென்று இருவகைப்படும். நிர்ப்பீசதீக்கையாவது சைவாசாரம் அநுட்டிக்கும் வலியில்லோர்க்குச் சைவாசாரகன்மத்தையும் ஓமத்தாற் சுத்திசெய்து செய்யுந்தீக்கை. அது சபீசமல்லாத அசத்தியோநிர்வா

* யோகம் - காரணம். † உருடி - இடுகுறி.

உத்தரகாமிகம், ஆசார்யாபி
ஷேகவிதிப்படலம்
சுலோகம், க௪.

---

ஶிவாஜ்ஞா வேதஸாரஸ்யாத் தஸ்மாத் வைதிக ஹிஷ்கு/
ஶிவாஜ்ஞாஹிதா ஆசாரா வைதிகாஸ உதாஹ்ருதா ||

இதன் பொருள்.

வேதசாரம் சிவாகமம்; பிறநூல் பிற பொருளைக் கூறும்; (ஆகலான்) சைவாசாரத்துக்கு உரியோன் வைதிகன்

சித்தாந்தம் வேதசாரமாய் உள்ளது; பிறநூல் வேதப்பொருள் அல்லாததைக் கூறும்; சித்தாந்தமாகிய சிவாகமத்தில் விதிக்கப்பட்ட ஆசாரம் வைதிகாசாரம்

உத்தரகாமிகம் ௸
சுலோகம், ௧௦௭, ௧௦௮.

ஶைவம் வைதிகமேவோக்தம் வைதிகம் ஶைவமேவ வா/
வைதிகாந்தர்பஹிர்பூதம் ஶைவம் ஶைவாந்தரேவ ஹி/
ததைவ வைதிகாத்ருஷ்டம் ஶைவம் ஶைவாந்தரேவ ஹி||

இதன்பொருள்

சைவம் வைதிகம் என்று சொல்லப்படும்;
அல்லது வைதிகம் சைவம் என்று சொல்லப்ப

டும்; வைதிகத்தை விட்டுச் சைவம் வேற
~~(...)~~ ன்று; சைவத்தை விட்டு வைதிகம் வேற
ன்று; அங்ஙனமாயினும் வைதிகத்தினும் சைவ
ம் மேலானது; சைவத்துக்கு மேலானது இல்லை.

வை காமிகம், சுலோகம், உ௬.

காமிகாதி சிவஜ்ஞானம் வேதாச்ச ஜ்ஞானமேவ து /
மோஹம் பேதம் ஹ்ருத ஜ்ஞானம் உபயோர் ந ஸமம் வதேத் //

இதன் பொருள்

சிவஞானமாகிய காமிகமுதலிய ஆகமங்கள் வேதா
ர்த்தஞானமாய் உள்ளன; மோகத்தினாலே வே
தாகமங்களுக்குச் சமமாக வேறொரு நூல் உண
டென்று சொல்பவர்களைச் சகலபிராயச்சித்தத்
தாலும் நீக்கிவிட வேண்டும்.

சிவாகமங்கள் சிவஞானம் எனப்
படுதற்குப் பிரமாணம்
பூர்வ காமிகம், தந்திராவதாரப்படலம், சுலோகம் 15, 16

உத்தரோத்தர மத்ரோக்தம் ப்ரதிபாத்யம் யதஸ்ததம் /
சிவப்ரகாசகம் ஜ்ஞானம் சிவஜ்ஞானம் பரம் ஸ்ம்ருதம் /
வேதாதிகம் அபரம் ஜ்ஞானம் பசுபாசாத்மகம் ததஃ /
பயமாவிருக்திணம் அக்ஷரஃ க்ஷபாயாம நுஷிதோதை

இதன் பொருள்

பரம் அபரம் என்னும் பேதங்களாய்ப் பதி பசுக்க
(பாசங்) களின் பொருள்களை விளக்குகிற சிவஞான

மானது இரண்டுவிதம் ஆகும்; (அவற்றுட் பரம் என்றும்) சிவத்தைப் பிரகாசிக்கச் செய்யுஞ் சிவஞானமானது மேலான சிவஞானமாக நினைக்கப் படுகின்றது; பசு பாச பதிகளின் அர்த்தத்தை விளக்குகின்ற அபரஞானமானது வேதமுதலியன; மனிதனுடைய கண்ணும் பூனையினுடைய கண்ணும் இராத்திரியில் எவ்வாறு வெவ்வேறாக விளங்குகின்றனவோ, அப்படியே இப்பராபரஞானங்களும் விளங்குகின்றன.

பவுட்கரம், பதிபடலம்

சுலோகம், ௭.

ஶிவஸ்ய ஸமவேதா யா ஶக்திர்ஜ்ஞாநாத்மிகா த்ருவா |
ஸைவ ஜ்ஞாநமிதி ப்ரோக்தம் ஶாஸ்த்ரம் தத்போதகம் மதம் ||

இதன் பொருள்

சிவபெருமானுக்குச் சமவாய சம்பந்தத்தால் பிரிக்கப்படாத ஞானமேயமாயும் நின்மலமாயும் இருக்கின்ற அந்தச் சக்தியே (பர)ஞானம் என்று சொல்லப்பட்டது; ஆகமாதி ஞானம் அந்தப் பரஞானத்தை அறிவிக்கிற அபரஞானமாம்

ணமுஞ் சத்தியோநிர்வாணமுமென்று இருவகைப்படும். சபீசதீக்கைப் பேறுடையார் சாதகரும் ஆசிரியருமாய் நித்தியத்தும் நைமித்திகத்துங் காமியத்தும் அதிகாரிகளாவராகலின், அவ்வதிகாரத்தைப்பயக்குஞ் சபீசநிர்வாணமும், அதற்கு அங்கமாகச் செய்யப்படுஞ் சமயவிசேடங்களுஞ் சாதிகாரை எனப்படும். நிர்ப்பீச நிர்வாணமுடையார்க்கும் ஏனைச் சமயவிசேடதீக்கையுடையார்க்கும் நித்தியமாத்திரத்தினன்றி நைமித்திகத்துங் காமியத்தும் அதிகாரமின்மையின் நிர்ப்பீசநிருவாணமும் ஏனைச் சமயவிசேடங்களும் நிரதிகாரை எனப்படும். சாதிகாரை நிரதிகாரையென்னும் இவை இரண்டுங் கிரியாவதியென்றும் ஞானவதியென்றும் ஒவ்வொன்று இருவகைப்படும்.

அவற்றுள், கிரியாவதியாவது குண்டமண்டலாதி அனைத்தும் புறத்தே நிலவுவித்துக் கிரியைசெய்வது. ஞானவதியாவது அவையனைத்தும் மனத்தாற் கற்பித்துக்கொண்டு பாவனையாற் கிரியைசெய்வது. இவை புறப்பூசையும் அகப்பூசையும்போலக் கொள்க.

இவ்வாறு சோமசம்புசிவாசாரியர் முதலியோர் சாதிகாரை நிரதிகாரை இரண்டும் ஞானங் கிரியை என வெவ்வேறு இருவகைப்படுமெனப் பகுத்து முதற்கண்வைத்துக்கொண்டு, மேற் சமயமுதலியனவாகச் செய்யுமுறையெல்லாம் விரித்துக் கூறுதலின், அங்ஙனம் மேற்கூறும் விதிகளெல்லாம் இவ்விரண்டற்கும் பொதுவென்பது தானேபோதரும்; போதரவே, மனத்தாலியற்றுங்கால் நாபித்தானமே குண்டமும், ஆண்டுறும் அங்கியே அங்கியும், விந்துத்தானத்தமிழ்தமே நெய்யும், இடையுஞ் சுழுமுனையுமே சுருவமுஞ் சுருக்குமாகலான், அவை எஞ்ஞான்றுந் தூயனவேயாகலின், அவற்றைத் தூய்மைசெய்யவேண்டாமையிற் புறத்தே குண்டமுதலியவற்றில் தூய்மைசெய்தற்கு விதித்த கிரியைகளும் மற்றுமவைபோல்வனவும் மீமாஞ்சை நூலிற் பத்தாமத்தியாயத்திற் கூறும் நியாயத்தானே விலக்கப்படுதலின் அவையொழித்து ஒழிந்தவையெல்லாம் மனோபாவனையாற் செய்யப்படும் என்பதூஉம், குண்டமுதலியவற்றை அவாவாது மாணுக்கனுடம்பில் தூய்மைசெய்தற்குரிய நிரீக்கணமுதலிய கிரியைகள் புறத்தே செய்யப்படும் என்பதூஉம் பெற்றும். புறத்தங்கி குண்டலியங்கியோடும் விந்துவங்கியோடுஞ் சார்த்தி வாங்கி வாகீசுவரிகருப்பநாடியிற் புகுவித்துப் பிறப்பிக்கும் பாவனையானன்றித் தூய்மைபெறுதலுஞ் சிவாக்கினியாதலுங் கூடாமையானும், குண்டலியங்கி விந்துவங்கி இவ்வாறு வேண்டாது இயல்பானே தூய்மையுற்றுச் சிவாக்கினியேயாய்ப் புறத்தங்கியினையுந் தூய்மைப்படுத்தும் ஆற்றலுடைமையானும், புறத்துச்செய்யும் அங்கிகாரியத்தினும் அகத்துச் செய்யும் அங்கிகாரியஞ் சிறந்ததென்பது தெரிந்துணர்ந்துகொள்க. குண்டலியங்கி தூய்மைசெய்யவேண்டாது இயல்பானே சிவாக்கினியாமாயினும் அதனைப் "பூரகத்தானே சுழுமுனைவழியான் வாங்கித் துவாதசாந்தத்தின் ஞானவனலோடுங் கூட்டி மீளக்கொணர்ந்து குண்டலித்தானத்தின் வைத்துக் கிரியைசெய்க" என விதித்தது ஞானமயமாக்குதற் பொருட்டெனக்கொள்க.

சிவஞானசித்தியினும், *"ஔத் திரியிரண்டு திறனு மிலருளா ணங் கிரியை" என முதற்கண் எடுத்தோதி, முடிவினும், † "அழிவிலாக் கிரி யையினு ளுதல்சத்தி மத்தா ளுதல்" என முடித்தமையின், இடைக்கட்பட் டனவெல்லாம் இரண்டற்கும் பொதுவென்பது கண்டுகொள்க. "மனத்தா லியற்றுவது கிரியை" என்பதனை "மனத்தாற் கிரியையியற்றுவது" என மாறிப் பொருளுரைத்துக்கொள்க. அங்ஙனங் கொள்ளாது கிரியையென்ப தனை மேலேகூட்டின் மனத்தால் எத்தையியற்றுவது எனக் கடாயினார்க்கு விடையின்மை அறிக. அங்ஙனங் கொள்ளவே, "கிரியாவதிதான்" என்னும் எழுவாய் "நிலவுவித்துச் செய்தல்" என்னும் பயனிலைகொண்டு முடிந்த தென்க; எனவே, "நிர்ப்பீசஞ் சபீசமென விரண்டாகி நிகழும்" என்பதற்கு எழுவாய் "அவ்விரண்டும்" என்பது பெற்றாம். அற்றாகலினன்றே இறுவாயி னும் "அழிவிலாக் கிரியையினு ளுதல்சத்தி மத்தா ளுதல்" என அவ் விரண்டனையும் எடுத்தோதி முடித்ததூஉமென்க.

இஃதறியாதார் தமக்கு வேண்டியவாறே உரைப்ப. அது, சோமசம்பு சிவாசாரியர் முதலியோர் பத்ததிகளையும், அவற்றிற்கு மூலமாகிய சிவாகம வசனங்களையும் ஒதியுணராத மடவோர் நாத்திகமதம்பற்றி உரைக்கும் உரை யாகலின், அது பொருளாகவைத்து மறுக்கற்பாற்றன்று என்றொழிக. "அழிவிலாக் கிரியையினு ளுதல்சத்தி மத்தா ளுதலத்து வாசுத்தி பண்ணி" என்பதனால் இவ்விருவகையுள் ஒன்றானே அத்துவசுத்திபண்ண அமையு மெனக் கூறுதலானும், இவ்வாறு சோமசம்புசிவாசாரியர் முதலியோர் நூலினுஞ் சிவாகமங்களினுங் கூறுதலானும், "அத்துவசுத்தி செய்தபின் னர் மந்திரங் கிரியை பாவனைகளின் குறைபாடு தீர்தற்பொருட்டு விஞ்ஞான தீக்கை செய்யப்படும்" என்றது சாம்பவதீக்கையெனவுஞ் சத்திதீக்கை யெனவுந் தெரிந்துணர்ந்துகொள்க. எனவே, ஞானதீக்கை இங்ஙனம் இரு வகைப் படும் என்பதாயிற்று.

அஃதாக; தீக்கைபோலப் பிரதிட்டையும் இருவகைப்படும் என்றற்கு ஒத்திலாமையிற் சிவலிங்கப் பிரதிட்டை புறத்தங்கி காரியத்தானன்றி அகத் தங்கி காரியத்தாற் செய்தல் பொருந்தாதெனின்; அற்றன்று. பரார்த்த விதிக்கு அஃதொக்கும்; ஆன்மார்த்தபூசை தீக்கைப்பின் செய்யும் ஆசார மாகலின் ஆன்மார்த்தலிங்கப்பிரதிட்டை தீக்கையுள் வியாப்பியமாய் அடங் குதலின், அது தீக்கைசெய்த முறைபற்றியே செய்யப்படுமென்பது கூறா மையே விளங்குமென்று உணர்க.

ஞானவந்தியேட்டி.

இனி, ஞானதீக்கையுடையார்க்கு அந்தியேட்டி செய்யுமாறுவது; துறந் தோர்க்குக் ‡ கனனமே விதித்தலின் அவரையொழித்து, ஏனை நைட்டிகப் பிரமசாரியமுதலிய நிலையினின்று ஞானதீக்கைப்பேறுடையராய் ஒழுகினோர் இறந்துழிப் புறத்துடம்பினை வாளா புறத்தெரியிற் பெய்து அடக்கி ஈமக்

* சிவஞானசித்தி, அ-ம் சூத்திரம் ௩.  † சிவஞானசித்தி, அ-ம் சூத்திரம் ௬.

‡ கன்னம் - நிலத்தில் குகைசெய்து அடக்குதல்.

கடன் முற்றிய பின்னர், அவ்வான்மாவை மாசாலப்பிரயோகத்தாற் கொணர்ந்து சந்தனமுதலியவற்றுள் ஓர் ஆதாரத்தின் வைத்து முன் போல எல்லாவிதியும் மனோபாவனையாற் சங்காரமுறைபற்றிச் செய்து சமய தீக்கையுடையாரை உருத்திரலோகத்தினும், விசேடதீக்கையுடையாரை ஈசுரலோகத்தினும், நிருவாணதீக்கையுடையாரைப் பரமசிவன்றிருவடியி னுஞ் சேர்ப்பிப்பதாம் எனக்கொள்க.

## சமயதீக்கை.

இனி, அவற்றின் விரிவாகிய சமயமுதலியவற்றுள், சமயதீக்கையா வது மண்டப பூசை செய்து விதிமுறையே மாணக்கனை வழிபடுவித்துச் சம்பாத ஓமத்தாற் சுத்திப்படுத்துவது. இதனாற் சைவாசாரத்திற்கு அதி காரியாவன்.

## விசேடதீக்கை.

விசேடதீக்கையாவது அவ்வாறு சமயதீக்கை செய்து குண்டத்தில் வாகீசுரனையும் வாகீசுவரியையும் ஆவாகித்து மாணக்கனான்மாவை வாங்கி வாகீசுரனால் வாகீசுவரி கருப்பநாடியிற் செலுத்திக் கருப்பாதானமுதலிய கிரியைகளை மும்மூன்று ஆகுதியின் நிரப்பிக் கருமுதிர்ந்து பயந்ததாகப் பாவித்துக் குண்டத்தினின்றும் ஆன்மாவை மீளவாங்கி மாணக்கனிதயத் தானத்திலே தாபித்து இவ்வாறு சிவபுத்திரனாகச் செய்வது. இதனானே சிவபூசை முதலியவற்றிற்கும் யோகநெறிக்குஞ் சிவாகமம் ஓதுதற்கும் அதிகாரியாவன்.

## நிருவாண தீக்கை.

நிருவாணதீக்கையாவது இவ்வாறு சமயவிசேடம் இரண்டுஞ் செய்து ஆன்மாக்கள் * மூன்று திறத்தாற் செய்யுங் கன்மங்கட்கு இடமாகிய அறு வகை அத்துவாக்களின் தன்மைகளும் அவை ஒன்றினொன்று அடங்கு முறைமையும் அறிந்து, மந்திரமுதல் ஐந்தினையுங் கலையைந்தினும் பகுத்து அடக்கி, நிவிர்த்தி முதலிய ஐந்தையும் ஒவ்வொன்றாகச் சோதித்து, அவற் றினின்றும் நீங்கிய மாணக்கனான்மாவை வாங்கிப் பிராசாதநெறியானே பரமசிவனிடத்தில் ஒடுக்கி, ஒடுங்கியவழி, மாணிக்கத்தைச் சார்ந்த படிக வொளிபோலத் தற்போதம் அடங்கிப் பரமசிவனுடைய அறுவகைக் குணங் களுந் தன்குணமாகத் தன்மாட்டு மிக்குவிளங்கிச் சிவானந்தம் மேலிடும்படி ஒவ்வொருகுணங்களை மும்மூன்று ஆகுதியால் தோற்றுவித்து, முப் பொருள்களின் பொதுவியல்பு உணர்த்துமுகத்தானே மலத்தைநீக்கி உண்மைஞானம் விளங்கச்செய்வது. இதனானே சிவாகமங்களின் உண்மைப் பொருள் ஆராய்தற்கு அதிகாரியாவன். அங்ஙனம் உண்மைப்பொரு ளாராய்ச்சியாற் சிவஞானம் விளங்கிச் சிறப்பியல்புணர்ந்து சிவம்பிரகா சித்து வாசனை நீங்கி வீடுபேறு அடைவன். இது † "அத்து வாசுத்தி பண்ணிமல மகற்றி—யொழிவிலாச் சிவம்பிரகா சித்தற்கு ஞான முதிப் பித்துற் பவந்துடைப்பன்" எனவும்; ‡ "ஞானத்தால் வீடென்றே நான்

* மூன்று திறம் - மனம் வாக்குக் காயம். † சிவஞானசித்தி, அ - ம் - சூத்தி ரம் - சு. ‡ சிவஞானசித்தி, அ - ம் சூத்திரம் உஎ.

மறைகள் புராண நல்லவா கமஞ்சொல்ல'' எனவுங் கூறுந் திருவாக்குக்களானும், இவ்வாறே கூறுஞ் சிவாகமவசனங்களானும் அறிக. அத்துவாக்களினியல்பு * முன்னர்க்காட்டுதும்.

இனிப் † "பொருவினிருவாணம்.........அறுவகையு மொருவிநினைவரிதாம் பரபதத்து ளுயிர்விரவப் பயிற்று'' மென்றற்போலுஞ் சிவாகமவசனங்களைப்பற்றி அவற்றின் கருத்துணராது தீக்கையே வீடுபேறுதவும் ஞானம்வேண்டாமெனவும், "ஞானத்தால் வீடென்றே'' என்புழி, ஞானமென்பதும் ஆகுபெயரால் தீக்கையை யுணர்த்துமெனவும் முரணிக்கூறுவாருமுளர். பவுட்கரத்தில் "ஆசிரியத்தன்மையினதிகாரமும் மலநீக்கமுஞ் சிவவிளக்கமும் ஞானத்தாற் பெறற்பாலனவாகலான், ஞானபாதத்தையே எமக்குத் தெரித்தருளுக'' என முனிவர் வேண்டிக்கோடலானும், அவை வேறுபொருள்படுதற் கேலாமையானும், மதங்கமுதலியவற்றினும் இவ்வாறே கூறுதலானும், தீக்கையென்னுஞ் சொற்குப் பொருள் மலத்தைக் கெடுத்து ஞானத்தைக் கொடுக்குமென்று ஆகமங்கள் கூறுதலானும், தீக்கையாவது சிவாகமங்களிற் கூறும் நித்தியமுதலியவற்றின் அதிகாரமும் ஆகமக்கேள்வியின் அதிகாரமு மென்னும் இரண்டனுள் ஒரதிகாரத்தை முற்றுவிக்க வல்லதாகிய பரமசிவனுடைய ‡ வியாபாரசத்தியாமென்பது தீக்கைக்கெல்லாம் பொதுவிலக்கணமாகலானும், பிறவிக்குருடனுக்குப் படலத்தை நீக்கிய துணையானே பொருள்களைக் காட்டினலன்றிக் காண்டல் கூடாமையானும், § கந்தகாலோத்தரஞ் சிவதருமோத்தரந் தேவிகாலோத்தரஞ் சருவஞ்ஞானோத்தரம் ஞானதிலக முதலியவற்றினெல்லாம் ஆன்மா ஞானமொன்றானே வீடெய்தற்பாற்றென வரையறுத்துக் கூறுதலானும், தீக்கைமாத்திரத்தானே சிவப்பேறு கூடுமென்றல் பொருந்தாதென மறுக்க.

இனி, ஒளியானன்றி இருணீங்காதவாறுபோல ஆணவமும் ஞானத்தானன்றித் தீக்கைமாத்திரத்தானே நீங்காதெனவும், அத்துவசுத்தியின் அத்துவாக்கண் நிரம்பிக்கிடந்த சஞ்சிதகன்மமாத்திரையே நீங்குமெனவும், அதனானே ஞானத்திற்கு உரியனுவனெனவுங்கொள்க. இன்னும் விஞ்ஞானகலர்க்கு முதல்வன் உண்ணின்றவாறே தீக்கையென்னும் இயற்கைப்பெயருடைய தனது கிரியாசத்திசங்கற்பமாத்திரையானே மலநீக்குவதன்றி ஒளத்திரிதீக்கையான் அன்றென்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததாகலாற், கண்ணின்படலம் மருத்துவன்செய்யுந்தொழிலானன்றி நீங்காதவாறுபோல ஆன்மாவின்கண்ணதாகிய மலமுங் குரவன் செய்யும் ஒளத்திரிதீக்கையானன்றி நீங்குதல் கூடாதென்பார்க்கு அஃது யாண்டுஞ் செல்லாமையான் யாண்டுஞ் செல்வதாகிய முதல்வனது கிரியாசத்தி சங்கற்பமொன்றே மலநீக்கத்திற்குக் காரணமெனவும், கிரியாசத்தியும் ஞானசத்தியுந் தம்முள் வேறன்மையான் உபசாரத்தாற் றீக்கையெனப் பெயர்பெறும் ஒளத்திரி முதலியவை சஞ்சிதவினையை நீக்கி உரிமைப்படுத்துமுகத்தானே ஞானத்திற்கு அங்கமாவதன்றிச் சுதந்திரமாகாதெனவுந் தெற்றென உணர்க. முதல்வனது சங்கற்ப

* இரண்டாஞ்சூத்திரம் மூன்றும் அதிகரணத்திற்காண்க. † சிவப்பிரகாசம், பாயிரம் - கூ. ‡ வியாபாரசத்தி-கிரியாசத்தி. § இவ்வாகமவசனங்களும் இன்னோரன்னபிறவுஞ் சிவாக்கிரபாடியத்தினும் எட்டாஞ் சூத்திரம், நகூக - ம் பக்கமுதற்காண்க.

மொன்றே உண்மையாற் றீக்கையெனப்படுமாகலின் அதுவே மலநீங்குதற்குக் காரணமெனக் கூறுதும் என்பையாயின், அது சித்தசாதனமாகலான் அதனான் உனக்குப் போந்ததொன்றில்லையென்றொழிக. "பொருவினிரு வாணம்......பரபதத்து ளுயிர்விரவப் பயிற்று" மென்றது ஞானவழியான் ஏதுவாதல்பற்றியென்க.

இனி, நிருவாணதீக்கை சத்தியோநிருவாணதையென்றும் அசத்தியோ நிருவாணதையென்றும் இருவகைப்படும். அவற்றுள், சத்தியோநிருவாணதை அதிதீவிர சத்திநிபாதமுடையார்க்குத் தீக்கைசெய்த மாத்திரையே பொருளின் சிறப்பியல்பு புலப்படவுணர்த்திக் கண்ணுக்குப் பகல்விளக்குப் போல உடம்போடற்றுநீங்கச்செய்வது. அசத்தியோ நிருவாணதையாவது மந்தமுதலிய சத்திநிபாதமுடையார்க்குத் தீக்கைசெய்தபின் உடம்புமுகந்து கொண்ட வினைப்பயன் நிற்குங்காறும் உடம்போடுநின்று உடம்பு நீங்கிய பின்னுதல், பதமுத்திகளின் வைகிக் காலாந்தரத்தினுதல் முத்தியடையச் செய்வது. இவ்வசத்தியோ நிருவாணதையின் விசேடம் உலகதருமிணி எனவுஞ் சிவதருமிணி எனவும் இருவகைப்படும்.

அவற்றுள், உலகதருமிணியாவது அதன்மமாத்திரையே சுத்திசெய்யுந் தீக்கை. பௌதிக தீக்கையென்பதும் இது.

இனிச், சிவதருமிணியாவது தன்மமும் அதன்மமுமாகிய எல்லாக் கன்மங்களையுஞ் சுத்திசெய்யுந் தீக்கை. நைட்டிகமென்பதும் இது.

பௌதிகதீக்கை பௌதிகப் பிரமசாரிகட்கும் இல்வாழ்வார்க்கும் வானப்பிரத்தர்க்குஞ் செய்யப்படும். நைட்டிகதீக்கை நைட்டிகப்பிரமசாரிகட்குந் துறவறத்தினின்றோர்க்குஞ் செய்யப்படும்.

பௌதிகப் பிரமசாரியாவான் காலவரையறையிற் பிரமசரியவிரத முடித்து இல்லறத்திற் செல்வோன். நைட்டிகப் பிரமசாரியாவான் அவ்வாறன்றி மரணாந்தம் பிரமசரியவிரதம் பூண்டுகொண்டோன். அவன் அங்கிவேட்டல் முதலிய கன்மங்களைத் துறவாமையின் மனஞ்சலித்ததாயின் ஆசாரியன் அநுஞ்ஞைபெற்று விரதவுறுப்புக்களை விதிமுறையானே மாற்றி இல்லறத்திற் சேறலும் ஒரோவழிக் கூடும். துறவறத்தினின்றோன் அங்கிவேட்டல் முதலிய கன்மங்களையுந் துறந்தமையின் அவனுக்குக் கூடாது. இவை அவ்விருவர்க்குந் தம்முள் வேற்றுமையென்பது. நைட்டிகப் பிரமசாரிகளுந் துறவறத்தினின்றோரும் நைட்டிகதீக்கைக்கு உரியராகலின் நைட்டிகர் எனவும், ஏனையோர் பௌதிகதீக்கைக்கு உரியராகலிற் பௌதிகர் எனவும் பெயர்பெற்று, இவ்வாறு நான்காச்சிரமத்தோருந் தீக்கைவேறுபாட்டான் இருதிறத்தராய் அடங்குவர் என்க.

## சைவசந்நியாசம்.

இங்ஙனந் தீக்கைவேறுபாடுபற்றி இருவகையாக அடக்கிக்கூறுங் கருத்துணராதார் சைவத்தின் இரண்டே ஆச்சிரமம், நான்கில்லையெனப் பிதற்றுவர். சௌசவிதி நியாசவிதி முதலியவை நான்காச்சிரமங்கட்கும் வெவ்வே

ருகச் சைவாகமங்களிற் கூறுதலானும், அசிந்தியவிசுவசாதாக்கிய முதலியவற்றிற் சைவசந்நியாசங் கொடுக்கு முறைமையும், தபசுவி விவிதுசுவித்துவான் என்னுஞ் சைவசந்நியாசத்தின் பாகுபாடும், அவற்றினின்றோர் அநுட்டிக்குமுறைமையும், அவர்க்கு இறந்துழிக் கனனஞ்செய்யுமுறைமையும் பிறவும் விரித்தோதுதலானும், வேதமுஞ் சிவாகமமும் ஒன்றே யென்பது மேற்காட்டினுமாகலின், வேதவழக்கோடு முரணுதலின்மையானும், அது வேதவழக்கோடுஞ் சிவாகமவழக்கோடும் மாறுகொள்ளுவார் கூற்றேயாமென மறுக்க.

## ஆசிரியத்தன்மையினதிகாரம்.

அற்றாயினுந் துறவறத்தினின்றோர்க்கு ஆசாரியாபிடேகம் விலக்கப்பட்டமையின் தீக்கைசெய்தற்கு அதிகாரம் இன்றெனின், அங்ஙனம் விலக்கியது தபசுவியென்னுஞ் சன்னியாசிக்கே ஆகலானும், நைட்டிகருக்கென்று எடுத்துக்கூறப்பட்டனவெல்லாம் நைட்டிகப்பிரமசாரிகளுஞ் சந்நியாசிகளுமென்னும் இருவருக்கும் பொதுவாகலானும், வித்துவானென்னுஞ் சன்னியாசிக்கு அங்கிகாரியமன்றி அபிடேகஞ் செய்யுமாறு அசிந்தியவிசுவசாதாக்கியத்தில் விதந்தெடுத்தோதுதலானும், அங்ஙனமாயினுஞ் சாம்பவதீக்கை மாத்திரைக்கே அதிகாரம் உண்டெனக்கோடுமெனின், அங்ஙனம் விதந்தோதாமையின் அது பொருளன்மையானும், அதுவும் வேதவழக்கோடுஞ் சிவாகமவழக்கோடும் முரணுவார் கூற்றேயாமென மறுக்க.

அங்ஙனமாயினுஞ் சைவத்தில் தீக்கை முதன்மையாகலின் வருணம் ஆச்சிரமம் பற்றித் தாரதம்மியங் கூறுதல் பொருந்தாதெனின்,—தீக்கைப்பின் விதிக்கப்படும் ஆசாரங்களெல்லாம் வருணமும் ஆச்சிரமமும் பற்றியே தாரதம்மியம் ஓதுதலானுஞ், சிவதீக்கை ஆன்மாவுக்கேயன்றி வைதிகச்சடங்கு போல உடம்புமுதலியவற்றிற்கு அன்றெனச் சித்தாந்தசாராவலி முதலியவற்றிற் கூறுதலின், அத்தீக்கையால் ஆன்மாவின்கண்ணதாகிய பசுத்துவம் நீங்கியதன்றி உடம்பின்கண்ணதாகிய சாதி நீங்காமையானும், சாதியுந் தீக்கையாற் கழியுமாயின் ஆதிசைவம் மகாசைவம் அநுசைவம் அவாந்தரசைவம் என்னும் பகுப்பு ஏலாமையானும், மகாசைவர்க்கு விதித்த ஆசாரம் அவாந்தரசைவராற் செய்தல் கூடாமையானும், * "வேதியர் நான்குவருணத்தார்க்குங் குரவராவார், அரசர் மூன்றுவருணத்தார்க்குங் குரவராவார், வணிகர் இரண்டுவருணத்தார்க்குங் குரவராவார், சூத்திரர் சூத்திரர்க்கே

* ப்ராஹ்மண꞉ க்ஷத்ரியாதீநாம் க்ஷத்ரியோ வைஶ்யஶூத்ரயோ꞉ । வைஶ்ய ஶூத்ரஸ்ய தீக்ஷாயாம் ஸ்வஜாதௌ விஶிஷ்யதே । ஸாமந்யஶ்ச வஶிஜஸ்ய ப்ரதிஷாயாஞ்ச்ரயஸ்ஸ꞉ । ஶூத்ரோபி ஶூத்ர தீக்ஷாயாம் ஸாமந்யஶ்ச ஸஂஜ்ஞகே । பாணிஜோ க்ஷணேவாபி ஸாவகோயஜிநைஷ்டிக꞉ । ஸநாதநாவிஶேஷ்ஞேயஷ ஶிவஜ்ஞாநே விஶேஷத꞉ । ஶூத்ரஸ்யாபி ஶ்ரூஹஸ்ய நித்யஷாவேவயோக்யதா । ததாபி நாதநஹிதேதஶ்ஞோ மேவ ப்ரகீர்த்திதா । கஹிஷேகேக்ஷயோக்யாயம் கிம் பாநஸ்ய நாதிஷ ॥ இவை காமிகாகம வசனங்கள்.

குரவர்'' என விதந்தோதுதலானும், "பிராமணர் முதலிய மூன்றுவருணத்தின் நான்காச்சிரமத்துள்ளோருங் குரவராவார், சூத்திரரின் நைட்டிகரே குரவராவார், பிரணவமுதலிய மந்திரங்கட்குந் தாபனமுதலியவற்றிற்கும் உரியராவார், சூத்திரரின் இல்வாழ்வார்க்கு நித்தியமாத்திரத்தினன்றி நைமித்திக முதலியவற்றின் அதிகாரம் இல்லை''யென்றும், "நித்தியத்தினும் மந்திரங்கள் பிரணவம் ஒழியவே கொள்ளப்படு'' மென்றும், "அவர் அபிடேகத்திற்கே உரியரல்லர் மற்றுத்தாபனமுதலியவற்றிற் கூறவேண்டுவதென்னை'' யென்றும் ஆகமங்களுக்கெல்லாந் தலையான காமிகத்துள்ளே விதந்தெடுத்து ஓதுதலானும், இதனானும் ஆச்சிரமங்கட்குத் தாரதம்மியந் தானேவிளங்குதலானும், பௌதிகர்க்கு உலகதருமிணியும் நைட்டிகர்க்குச் சிவதருமிணியுமென ஆச்சிரமங்கட்குத் தீக்கையினுந் தாரதம்மியம் உண்மையானும், சிவதருமிணி இல்வாழ்வார்க்கும் ஆமென்றற்கு மூலவசனம் இன்மையானும், ஆகாதெனவே சிவாகமங்கடோறும் விலக்குதலானும், "நைட்டிகன் நைட்டிகனுக்கும் பௌதிகனுக்குந் தீக்கைசெய்க, பௌதிகன் பௌதிகனுக்கே தீக்கைசெய்க'' என விதித்தலானும், வருணத்தினும் ஆச்சிரமத்தினுந் தாரதம்மியம் உண்மை தெற்றென உணரப்படுமாகலின், அதனை இல்லையென்றலும் வேதவழக்கோடுஞ் சிவாகமவழக்கோடும் மாறுகொள்வார் கூற்றேயாமென மறுக்க.

சிவாகமங்களின் இல்வாழ்வார்க்கு உயர்ச்சிகூறும் வசனங்களெல்லாம் பரார்த்தபூசைக்கண் ஆதிசைவரைக்குறித்துக் கூறியதேயாமென்பது தெரிந்துணர்ந்துகொள்க. "பிரமசாரி கிருகியென்னும் இருவருமே குரவராவார், ஏனை இருவருங் குரவராகார்'' என்றதூஉம் பரார்த்தபூசைக்கண் ஆதிசைவரைக்குறித்துக் கூறியதெனக் கொள்க. கிரியாவதி செய்தற்கண் அவ்விருவருமே குரவர், ஏனை இருவருங் குரவராகார் என்னுங் கருத்தான் ஓதியதென்றலும் ஒன்று. இங்ஙனங் கொள்ளாக்கால் ஏனைச் சிவாகமங்களோடு முரணுமாறு அறிக.

அற்றேல், "நான்குவருணங்களினும் இலிங்கிகட்கும் இல்வாழ்வார்க்கும் ஆசிரியத்தன்மை உண்டெனச் சிவாகமங்களிற் கூறுதலிற் காமிகவசனம் ஒன்றே பற்றிச் சூத்திரரின் இல்வாழ்வார்க்கு ஆசிரியத்தன்மை இன்றெனக் கோடல் பொருந்தாதெனின்,—அற்றன்று; நான்குவருணத்தினும் விரத்தர்க்கும் இல்வாழ்வார்க்கும் ஆசிரியத்தன்மை உண்டென்றது ஏனையோரிற் சாவகாசமுடைமையிற் பொதுவிதி. காமிகத்திற் சூத்திரரின் இல்வாழ்வாரை விதந்தெடுத்தோதி விலக்கியது வேறு சாவகாசமின்றி நிரவகாசமாய் நிற்றலின் அபவாதமாகிய சிறப்புவிதியாகலாற், பொதுவிதி ஆயிரங் கூடினும் விதந்தெடுத்தோதுஞ் சிறப்புவிதி ஒன்றுனே விலக்கப்பட்டு அஃதொழிந்தவற்றின்மேற் செல்லுமென்னும் நியாயம் எல்லாநூலார்க்கும் ஒப்பமுடிந்ததாகலிற் காமிகவசனம் வலியுடைமையானென்க.

அற்றேல், காமிகவசனம் அங்ஙனங் கூறியது சூத்திரரிற் சாமானிய மாகிய இல்வாழ்வாரைநோக்கியெனக் கொள்ளாமோவெனின்,—கொள் ளாம்; என்னை? நான்குவருணத்தினுஞ் சாமானியமாயினார்க்கு ஆசிரியத் தன்மை இல்லையென்பது ஆசிரியவிலக்கணங் கூறும்வழிப் பெறப்பட்ட தாகலின் வேறெடுத்து விதந்தோதவேண்டாமையானும், அங்ஙனங் கொள் ளிற் சூத்திரரின் நைட்டிகரும் ஏனை மூன்றுவருணத்து இருதிறத்தாருஞ் சாமானியராயினும் ஆசிரியத்தன்மைக்கு உரியரெனப் பொருள்பட்டு, ஆசாரியவிலக்கணங் கூறிய விதிகளெல்லாம் பயனிலவாய் முடியும் ஆகலா னும் என்பது.

இனி, நைட்டிகதீக்கை இல்வாழ்வார்க்கும் ஆமெனக்கொண்டு சூத்திர ரின் நைட்டிகர் ஆசிரியரெனப் பொதுவாகக் கூறுதலான் நைட்டிகதீக்கை யுடைய இல்வாழ்வார்க்கும் ஆசிரியத்தன்மை உண்டென்று பொருள் கொண்டு சூத்திரரின் இல்வாழ்வார்க்கு அபிடேகமுதலியன இல்லையென விலக்கியதூஉம் மற்றைப் பௌதிகரையெனக்கொள்ளிற் படும் இழுக்கு என்னையெனின்,—நைட்டிகதீக்கை இல்வாழ்வார்க்கும் உண்டென்பது சிவா கமவழக்கோடு முரணிக்கூறுவார் கூற்றேயாமாகலிற் பொருந்தாதென்க. இதனானே முற்காலத்துச் சூத்திரரின் ஆசிரியராயினாரெல்லாம் நைட்டிகர் எனவும், அங்ஙனம் ஆசிரியராய் நைட்டிகப் பிரமசரியவிரதத்தினின்றோரிற் சிலர் விரதந்தாங்கும் ஆற்றலின்றி இல்லறம்பூண்டு விருத்திப்பொருட்டு ஆசிரியத்தன்மையும் விடாதுகொண்டு மக்கண்முறைமையினும் ஆசிரியத் தன்மை வைத்தாரெனவுங் கொள்க. அஃது அவர்மரபின் தொன்மைகள் ஆராயின் இனிதுவிளங்கும். சிவாகமங்களின் ஆதிசைவர்க்கேயன்றி ஏனை யோர்க்கு மக்கண்முறைமையினும் ஆசிரியத்தன்மை விதியாமையும் அறிக.

இச்சமயமுதலிய தீக்கைப்பேறு மறையோர் முதலிய மூன்றுவருணத் தார்க்கும், சற்சூத்திரருக்கும், அநுலோமருக்குமேயாமென உணர்க. ஏனையோர் திருநோக்கமுதலிய தீக்கைக்கேயன்றி ஔத்திரிதீக்கைக்கு உரிய ரல்லர் என்க. திருநோக்கமுதலியன சுதந்திரதீக்கையாயும் ஔத்திரிக்கு அங்கமாயும் இருவகைப்படும். சமயவிசேடங்களும் அவ்வாறு சுதந்திர தீக்கையாயும் நிருவாணதீக்கைக்கு அங்கமாயும் இருவகைப்படும். இன் னும் இவற்றின் விரிவெல்லாஞ் சிவாகமங்களுட் காண்க. ஈண்டு உரைப்பிற் பெருகும்.

சற்சூத்திரர் அசற்சூத்திரர் என்னும் வேறுபாடு சிவாகமங்களினும், பராசரமிருதி முதலிவற்றினும், புராணங்களினும், "சூத்திராணும்" என் னும் பாணினிசூத்திரத்தின் மாபாடியங் கையடங்களினும், பிறவற்றினுங் கண்டுகொள்க. இவ்வேறுபாடு அறியாதார் சூத்திரர் என்னும் பொதுப்பெ யரேபற்றிச் சற்சூத்திரரையும் அசற்சூத்திரரோடுவைத்தெண்ணி இகழ்வர்;

மனிதர் என்னும் பொதுப்பெயரேபற்றி மறையோரையும் அவ்வாறு சூத்திரரோடுவைத்தெண்ணி இகழ்வர்போலும் என்றொழிக.

அல்லதூஉம், மாலயனோடு குணதத்துவத்தின் வைகுஞ் சங்காரருத்திரனுக்குஞ், சதாசிவதத்துவத்தின் வைகும் மகாசங்காரருத்திரனாகிய சதாசிவக் கடவுளுக்கும் இவ்வேறுபாடு வேதங்களெல்லாம் முழங்கவும் அவ்வேறுபாடு உணராது உருத்திரனென்னும் பொதுப்பெயரேபற்றி ஒன்றாக வைத்து மூவரென்று எண்ணியும், வேதப்புறமாகிய பாசுபதம் பாஞ்சராத்திரமுதலியவற்றிற்கும், கற்பசூத்திரம்போல வேதவிதியை வகுத்துக் கூறுங் காமிகமுதலிய சிவாகமங்கட்கும் இவ்வேறுபாடு வாயவ்வியசங்கிதை முதலிய புராணங்களின் முழங்கவும் அவ்வேறுபாடு உணராது தந்திரமென்னும் பொதுப்பெயரேபற்றிச் சித்தாந்தசைவாகமங்களையுஞ் சமயநூல்களோடுவைத்தெண்ணியும் இகழும் புல்லறிவாளர் சற்சூத்திரர் அசற்சூத்திரரென்னும் வேறுபாடு அறியாது ஒன்றாகவைத்தெண்ணி இகழ்தல் வியப்பன்று என்க.

சிறப்புப்பாயிரமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



ஆசாரியவிலக்கணபடலம், உகஅ-ம் சுலோகம். (53-ம் பக்கம்)

சற்சூத்திரர் அசற்சூத்திரர்

[illegible]

சுப்பிரபேதம், ஜாதிபேதவிதிபடலம்

சுலோகம், கக.

[illegible]

கல் ஆல் — கைலாசமலையிலுள்ள அருள்வடிவாகிய ஆல மரம் என்றது பொருந்து. "இடறும்வாலியிற்சேக்கி" என்றதனின் இடந்தாயமை தோற்றிப்பார் இங்ஙனம் கூறினார். கல் — மலை; ஈண்டுக் கைலாயம்.

உருபும் பயனு முடன்தொக்கதொகை.

வினைத்தொகையாகக் கொண்டு சனகாதி முனிவர்கள் ஞானபாதப் பொருளைக் கேட்டற்கு இடமாகிய ஆலவென்ற மரம். கற்றல் கூறவே கற்பித்தலும் அடங்கும்; அடங்கவே அறம் முதல் இடம் அதுவே யென்பது தானே போதரும்.

சைவசமய நெறியாசிரியரும் இம்மங்கலவாழ்த்துப் பின்னீரடியுற்றி,

"நல்லார் தொழும்வெண்ணெய் நல்லூர்ச் சிவாலயத்துப்
பொல்லார்தாள் யாம்வணங்கும் போது."

என்றருளிச் செய்த நயமிங்குச் சிந்திக்கற்பாலது. நல்லார் தொழும் பொல்லார் என்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபாடியம்.

## மங்கலவாழ்த்து.

காமிகம் முதலிய சைவாகமங்களுள் ஞானபாதப்பொருளின் இகலறுத்து அவற்றின் பொருளுண்மை போதித்தற்கு இரௌரவாகமத்தில் எழுந்த சிவஞானபோதநூலினைத் தமிழுலகம் உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச்செய்து பொழிப்புரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், சாக்கிரத்தே * அதீதத்தைப்புரியுந் தமக்கு இடையூறு சிறிதுமணுகாமை அறிந்தாராயினும், ஆன்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணுக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டும் முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்:—

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே

எனவரும்.

வாழ்த்தும் வணக்கமும் பொருளியல்புரைத்தலும் என மங்கலவாழ்த்து † மூவகைப்படும். அவற்றுள், இது பொருளியல்புரைத்தல் எனக்கொள்க.

நந்திபெருமானுக்கு இந்நூலறிவுறுத்தருளிய முதலாசிரியரென்பது உணர்த்துதற்குக் கல்லானிழல் என இடங்கூறினர். ஆண்டெழுந்தருளியிருந்து, சிவாகமப்பொருள்கள் ஒன்றோடொன்று முரணுவனவாக மலைந்து வினவிய நந்திபெருமானுக்கு, இந்நூலான் மலைவு தீர்த்தருளினர் என்பார் மலைவில்லார் என்றார். இல்லார் - இல்லாகச் செய்தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர்.

---

* சாக்கிராதீதத்தின் இயல்பை, "பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவிலாமைச்—சொற்பெறு மதீதம் வந்து தோன்றுமே தோன்றி நின்ற—சிற்பர மதனுளுள்ளச் செயலறுத் திடவு திக்குந்—தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே" என்னுஞ் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தானுணர்க.

† இவற்றை வடநூலார் முறையே ஆசி, நமஸ்காரம், வஸ்து நிர்த்தேசம் என்பர்.

இனி, மலைவில்லார் என்பது மேருவை வில்லாகவுடையர் எனக் கொண்டு, கல்லானிழலில் எழுந்தருளியிருந்து வீடுபேறும், மலையை வில்லாக வளைத்துப் பகைவரை வென்று போகமும் அளித்தருளியோர் எனினும் அமையும். எனவே, ஐந்தொழிற்கும் வினைமுதல் என்றவாறாயிற்று.

அருளிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; * "உண்ணியபுகில்" என்றாற்போல. அது புனைவர் என்னும் பிறவினைமுதல் வினைகொண்டு முடிந்தது. அருளுதல் - புனைந்தமைபற்றிக் கல்லானிழலில் வீற்றிருந்து மலைவு தீர்த்தருளிய ஆசிரியர் கருணைமீக்கூர்தல். அருளிய பொல்லார் எனப் பெயரெச்சமுடிபாகவைத்து உரைத்தலும் ஒன்று.

பொள்ளார் பொல்லார் என மரீஇயிற்று: சுயம்புமூர்த்தி என்றதாம்.

இணைமலர் - பண்புத்தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித் தொகையாய்த் திருவடியை உணர்த்திற்று. இணை என்பதனைத் திருவடிக்கு அடையாக்கி இருபெயரொட்டாகுபெயர் என்றலும் ஒன்று. இவற்றியல் பெல்லாஞ் † சூத்திரவிருத்தியுள் உரைத்தாம்; ஆண்டுக்காண்க. புனைவர் என்றதற் கேற்பத் திருவடியை மலராக உருவகஞ் செய்தாரென்றலும் ஒன்று.

நல்லார் - கேட்டுச் சிந்தித்துத் ‡ தெளிந்து முதிர்ந்தோர். புனைதல் - § "தாடலைபோல்" அடங்கிநிற்றல். ஏகாரம் ஈற்றிசை; தேற்ற மெனினும் அமையும்.

இப்பாட்டு வஞ்சித்துறை. இது கல் என்பது முதல் ஏ என்பதிறுவாய்ப் பன்னிருசொற்களாற் கூறவே, இந்நூல் பன்னிருசூத்திரத்தாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுள் மும்மூன்று சொற்கள் ஒவ்வோரடியாக வைத்து நான்கடியாகக் கூறவே, இந்நூலும் அவற்றுள் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோரியலாகவைத்து நான்கியலாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுள் முன்னீரடியும் ஒருவினைமுடிபும் பின்னீரடியும் பிறிதோர் வினைமுடிபுமாக இருவகைப்படுத்துச் செய்யவே, முன்னாறுசூத்திரமும் ஓரதிகாரமும் பின்னாறு சூத்திரமும் வேறோரதிகாரமுமாக இந்நூல் இரண்டதிகாரத்தாற் செய்யப்பட்டதெனவுங் குறிப்பானுணர்த்தியவாறு காண்க. இரண்டாமோத்தின் முதற்சூத்திரம் "இதுவுமது" என முதலோத்தின் இறுதிச் சூத்திரத்தோடு மாட்டெறியப்படுவதென்பது உணர்த்துதற்கு 'மலைவு' என்பதனை ஈரடியினுஞ் சாரவைத்தார். 'கல்லானிழல்' என முதலடியில் இடங்கூறவே முதலோத்துப் பிரமாணங் கூறுவதென்பதூஉம், இரண்டாமடியில் 'மலைவில்லாரருளிய' எனச் செய்கைகூறவே இரண்டாமோத்து இலக்கணங் கூறுவதென்பதூஉம், மூன்றாமடியிற் 'பொல்லாரிணைமலர்' எனத் திருவடி கூறவே மூன்றாமோத்துச் சாதனங் கூறுவதென்பதூஉம், நான்கா

* திருநாவுக்கரசுநாயனார் தேவாரம், நமச்சிவாயத்திருப்பதிகம் - ௯. விண்ணுற.
† தொல்காப்பியச் சூத்திரவிருத்தி. ௪௪ - ம் பக்கம். ‡ தெளிந்த முதியோர் எனவும் பாடம். § திருவருட்பயன், இன்புறுநிலை, ௪.

மடியில் 'நல்லார் புணைவர்' எனப் பேறுகூறவே நான்காமோத்துப் பயன் கூறுவதென்பதூஉங் குறிப்பாற் பெறப்படும். பிறவும் இவ்வாறோர்ந்துணர்க. இங்ஙனம் நானுதல் பொருளெல்லாங் குறிப்பாற் றன்னகத்தடக்கிநிற்றல் மங்கலவாழ்த்துக்கு இலக்கணமென்றுணர்க. இவ்வாறு நால்வகைப்படுத் தோதியது இந்நூலின்பது, * "ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி - முறைமைகளும் பெத்தமொடு முத்தியெல்லாம்" என வழிநூலாசிரியர் வகுத்தோதியவாற்றானுங் கண்டுகொள்க.

மங்கலவாழ்த்து முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.

# அவையடக்கம்.

மங்கலவாழ்த்துக் கூறுமுகத்தான் ஈண்டைக்கு இறைவனுவான் இவனென்பது உணர்த்தி, இனி அவையடக்கங் கூறுமுகத்தான் அவ்விறைவனால் இயம்பப்படும் நூல் உணர்ந்தாரது உயர்வும் ஏனைச் சமயநூல் உணர்ந்தாரது இழிவும் உணர்த்துகின்றார்:—

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்

எனவரும்.

உணர்ந்து எனவே குருமுகத்தாற் கேட்கப்படுஞ் சிவாகமநூல்பற்றி யென்பது வருவித்து உரைத்துக்கொள்ளப்படும். தமையுடையதன் எனவே தாம் தலைவனுக்கு உடைப்பொருளென்பதூஉம், எம்மையுடைமை எனவே யாம் தமக்கு உடைப்பொருளென்பதூஉம் பெறப்பட்டன. உடைப்பொருள் அடிமையும் உடைமையுமென இருவகைப்படும். அவற்றுள், உயிர்வருக்கமெல்லாம் இறைவனுக்கு அடிமை எனவும், மாயை கன்மங்களும் அவற்றின் காரியங்களும் உடைமை எனவும் உணர்ந்துகொள்க.

தன்னுணர்வார் என்புழி இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. உடைமையின் என ஏதுப்பொருட்கண் வரும் இன்னுருபும், புணராமை யான் என்னும் ஆனுருபுந் தொக்கு நின்றன.

எமையிகழார் என்பது எம்மைத் † "குற்றங்கணீக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவா"ரன்றி இகழ்தல் செய்யாரென்க. எனவே, எம்மாற் செய்யப்

* சிவஞானசித்தி, பரபக்கம், பாயிரம். ௧௦: இறைவனை. † இது திருவாசகம், திருவம்மானை. ௨௦-ம் திருப்பாசுரத்துள்ளது. கோதாட்டல் - சீராட்டல்.

படும் நூலையும் அவ்வாறு கைக்கொள்வர் என்பது குறிப்பெச்சம். தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார் எனவே, தம்மையுணர்ந்தன்றித் தலைவனை உணர்தல் கூடாதென்பது பெற்றாம்.

அற்றேல், * "தன்னாலே தனைய றிந்தாற்—றன்னையுந் தானே காணும்" எனவும், † "அதிலறி வடங்கி—மன்னிட வியாபி யாய வான்பயன் றோன்றும்" எனவுந் தலைவனையுணர்ந்தன்றித் தம்மையுணர்தல் கூடாதென்னுஞ் சார்புநூல் இதனோடு முரணும்பிறவெனின்,—முரணாது; அஃது ஆண்டுச் சிவரூபத்தான் ஆன்மதரிசனமுஞ் சிவதரிசனத்தால் ஆன்மசுத்தியு மாமாறு கூறிற்றெனவும், இஃது ஆன்மசுத்திப்பின் சிவப்பேறுமாறு உணர்த்துகின்ற தெனவுந் தெரிந்துகொள்ளப்படுதலின். ‡ "அரன்—றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்" என்பதனோடு முரணாமையும் இவ்வாறே உணர்ந்துகொள்க.

இதனானே, 'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்'ஆவார் ஆன்மலாபப் பேறுடையார் என்பது பெற்றாம். அவர் சிவமேயாகலின் எம்மையுடைமை என்றார். உடைமை - உடையராந்தன்மை. எம்மையுடைமையென இரண்டாவது குறிப்புப்பெயர் கோடல் அமையுமென்பது, § "இரண்டாகுவதே" என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையர் "புகழையுடைமை" என உதாரணங்காட்டி யாப்புறுத்தமையானும் அறிக.

தம்மையுணரார் எனப் பொதுப்படக் கூறுதலானே, தாமொருபொருளுண்டென்பதை உணராத உலகாயதரும், தம்மைக் குணிப்பொருளென்று உணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு அடிமையென்று உணராத ஏனைச்சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளுஞ் சிவாத்துவிதசைவருந் தம்மை உடைப்பொருளெனக் கொள்ளினும், அவருட் பாஞ்சராத்திரிகள் உடைப்பொருளாகிய தமக்கு அணுபரிமாணங் கோடலானும், உடையானல்லாதானை உடையானென மயங்கிக் கோடலானும், உடையானுக்குப் பரிணாமங் கூறுதலானும், சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணாமங் கூறுதலானும், பிறவாற்றானும் அவருந் தம்மையுணரார் எனக் கொள்க.

'தம்மையுணர்ந்து தன்னுணர்வார்' எனவே, 'தம்மையுணரார்' தன்னுணரார் என்பது தானே போதருமென்பதுபற்றி உணரார் என்றொழிந்தார். முன்னின்ற 'உணரார்' எதிர்மறை வினைப்பெயர்.

அவர் உடங்கியைந்து தம்மிற் புணராமையாவது, பிறவிக்குருடர் பலர் குழீஇக்கொண்டு வேழங்காண்டல்விருப்பான் அது நின்றுழிச் சென்று கையினால் ஒவ்வோருறுப்பினைத் தைவந்து, வேழமாவது முறம்போல்வதென்றும், உரல்போல்வதென்றும், உலக்கைபோல்வதென்றும், மலைபோல்வதென்றுந் தம்முண் மாறுகொண்டு ஒருவரையொருவர் மறுத்துக் ¶ கலாம்

* சிவப்பிரகாசம், உண்மை - உஉ. † மேற்படி உண்மை உஅ.

‡ இந்நூல் கூ-ம் சூத்திரம், க-ம் அதி. நாடியோ. § தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல். கo-ம் சூத்திரம். ¶ கலாம் - கலகம்.

*முன்னின்ற உணரார் என்றது, தம்மை உணரார் என்பதனை.

*மேலும், தம்மையுணர்ந்து ... (handwritten marginal note)

விளைத்தல்போலச், சித்தாந்தசைவநெறிநின்று ஆசான்றிருவருள் பெறுதார் தத்தம் உணர்விற்கேற்பச் சமயநூல்களில் ஒவ்வொன்றனை ஆராய்ந்து அவற்றிற்கூறும் ஏகதேசப்பொருள்களைபற்றிக் கூறி, ஒருவரையொருவர் மறுத்துத் தம்முண் மாறுகொண்டு கலாம்விளைத்தல். அங்ஙனங் கலாய்க்கின்றுழிக் கண்ணுடையானொருவன் நோக்கி, இவர் செவிமுதலிய ஓரோருறுப்புக்களைபற்றிக் கூறிக் கலாம் விளைக்கின்றாரெனவும், வேழத்தினியல்பு வேறெனவுந் தெரிந்துணர்ந்து அவர்க்கு அதனை உணர்த்தலுறின், * "கொடிறும் பேதையும்" போலத் தாங்கொண்டதேபற்றி அவனையுந் தம்முளொருவனாகவைத்து இழித்துக்கூறி, மாறுகோடலேயன்றிப் பொருளெனக் கொள்ளமாட்டார். அதுபற்றி அவன் வெகுளாது இவரதியல்பு இதுவென நகையாடி ஒழிந்துவிடும். அதுபோல, ஒவ்வொருசமயநூல்பற்றி அங்ஙனம் பிணங்குவாரை அவையெல்லாம் ஒவ்வோரேகதேச இயைபுபற்றிக் கூறினவாகலான், அவைபற்றிப் பிணங்கற்க எனவும், பொருட்டன்மை வேறெனவும் யாம் இந்நூலானுணர்த்தப்புகின், அவர் அதனைக் கொள்ளமாட்டாது பயிற்சிவயத்தால் தாங்கொண்டதேபற்றி எம்மையுந் தம்முளொருவராகவைத்து இகழ்ந்துரைப்பாராகலின், அவ்வழி அவர்வெள்ளறிவு இதுவென்றொழிவதேயன்றி அதனைக் கொள்ளாமென்பார் கேளாம்புறன் என்றார். கேட்டல் - பொருளாகக்கோடல். அது "ஊறுகேளாது" என்பதனானும், † "கேளாரும்-வேட்ப மொழிவதாம்" என்பதனானும் அறிக.

புறன்-புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்கும் மொழியும், புறங்கூற்றுமொழியுமென்பது இரட்டுறமொழிதலாற் கொள்க. புறங்கூற்றுமொழியாவது புறச்சமயிகளல்லாத பாடாணவாதசைவர்முதலியோர் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்துகூறும் மொழி.

இச்சமயங்களெல்லாம் புறப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச்சமயமும், அகச்சமயமுமென நான்குவகைப்படும். அவற்றுள், புறப்புறச்சமயம் உலகாயதம், நால்வகைப்பௌத்தம், ஆருகதமென அறுவகைப்படும். புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரமென அறுவகைப்படும். அகப்புறச்சமயம் பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கியவாதசைவமென அறுவகைப்படும். ‡ அகச்சமயம் பாடாணவாதசைவமுதற் சிவாத்துவிதசைவமீறாக அறுவகைப்படும். இவையெல்லாம் அகம் புறம் என்று இரண்டாய் அடங்குமாறும் ஓர்ந்துணர்க.

இவ்வாறிரண்டாய் அடக்கியும், அவற்றைத் தம்முள் வேறுபாடுநோக்கி நான்காக வகுத்துக்கூறுதலும் அமையுமென்பது, தொல்காப்பியத்தில் அகம் புறம் என்றிரண்டாய் அடக்கிக் கூறியபொருளைத் தம்முள் வேறுபாடு

* இது திருவாசகம், போற்றித்திருவகவல், ௬௩-ம் அடியிலுள்ளது. கொடிறு என்பதை இக்காலத்தார் குறடு எனவழங்குப. † திருக்குறள், ௬௪-ம் அதி, சொல்வன்மை. ௩, கேட்டார்ப். ‡ அகச்சமயம் ஆறுவன:—பாடாணவாதசைவம், பேதவாதசைவம், சிவசமவாதசைவம், சிவசங்கிராந்தவாதசைவம், ஈசுவரவவிகாரவாதசைவம், சிவாத்துவிதசைவம் என்பன.

நோக்கிப் பன்னிருபடலத்தில் அகம் அகப்புறம் புறம் புறப்புறமென நான்காகப் பகுத்தோதியவாற்றானுமுணர்க. இஃதறியாதார், தொல்காப்பியமும் பன்னிருபடலமுந் தம்முண் முரணுவனவாகக் கருதி, அவற்றுள் ஒரு நூலையேபற்றி மற்றொன்றனை இகழ்வர்.

ஈண்டுக்கூறிய சமயத்தாருள், உலகாயதர்முதல் ஆருகதரீறாகிய அறுவரும், வேதஞ் சிவாகமமிரண்டனையும் நிந்திக்கும் நாத்திகராயினும், ஒரு நூலென்றும் பிரமாணமென்றுங்கொண்டு ஒருநெறிக்கண்ணே நிற்றலான் அவர் சமயம் புறப்புறச்சமயமென வேறுவைத் தெண்ணப்பட்டன.

தார்க்கிகர்முதற் பாஞ்சராத்திரிகளீறாகிய அறுவரும், வேதம் பிரமாணமெனப் பொதுவகையாற்கொள்ளினும், அவருள் தார்க்கிகர், * தன்னாற் பிராமாணியங் கொள்ளாமையானும், வேதப்பொருளோடு முரணிப்பொருட்டன்மை கோடலானும், மீமாஞ்சகர் கருமகாண்டமாகிய வேதமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு ஞானகாண்டமாகிய உபநிடதங்களை இகழ்தலானும், ஏகான்மவாதிகள் ஞானகாண்டமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு கருமகாண்டத்தை இகழ்தலானும், ஏனைமூவரும் வேதவாக்கியங்களில் தத்தம் மதத்திற்குப் பொருந்துவனமாத்திரையே எடுத்துக்கொண்டு ஏனையவற்றிற்குப் பிரமாணங்கொள்ளாமையானும், வேதப்புறமாகிய நூல்களைப் பிரமாணமெனக் கோடலானும், இவ்வறுவருஞ் சிவாகமநிந்தகராகலானும் இவர்சமயம் புறச்சமயமென வேறுவைத் தெண்ணப்பட்டன.

பாசுபதர் முதலிய ஐவரும், வேதஞ்சிவாகமமிரண்டற்கும் பொதுவகையாற் பிரமாணங்கொள்ளினும், அவ்விரண்டற்கும் புறமாகிய பாசுபதமுதலிய நூல்கட்குச் சிறப்புவகையாற் பிரமாணங்கோடலானும், வேதஞ் சிவாகமமிரண்டினும் ஆகா என விலக்கப்பட்டனவற்றை ஆசரித்தலானும், ஐக்கியவாதசைவர் வேதஞ் சிவாகம மிரண்டற்கும் சிறப்புவகையாற் பிரமாணங்கொண்டு, அவற்றில் விலக்கியன ஒழித்து விதித்தவழி ஒழுகுவாராயினும் எல்லாப்பெருங்கேட்டிற்கும் மூலகாரணமாகிய ஆணவமலத்துண்மை கொள்ளாமையானும், அதனுண்மைசாதிக்குஞ் சிவாகமவாக்கியங்களை இகழ்தலானும் அவ்வறுவகைச்சமயமும் அகப்புறச்சமயமென வேறுவைத் தெண்ணப்பட்டன.

ஏனைப்பாடாணவாதசைவர் முதலிய அறுவரும் பொருளுண்மையெல்லாஞ் சித்தாந்தசைவரோடொப்பக் கொள்ளும் அந்தரங்க உரிமையுடையராயினும், அவ்வப்பொருள்கட்குக் கூறுந் தன்னியல்பு பொதுவியல்பு மாத்திரையின் முரணுதலான் அவர்சமயம் அகச்சமயமென வேறுவைத் தெண்ணப்பட்டன.

இவ்வாறு நால்வகைச்சமயங்கட்குஞ் சித்தாந்தசைவத்தோடுளதாகிய வேற்றுமைத் தாரதம்மியங் கண்டுகொள்க.

அகச்சமயமாறனுட் சிவாத்துவிதசைவமாவது நிமித்தகாரணத்துக்குப் பரிணமங் கூறுவதாகலின், அது நிமித்தகாரணபரிணமவாதம் எனவுங்கூறப்

* இதனைத் தருக்கசங்கிரகவுரையிற் சத்தப்பிரமாணங் கூறும்வழிக் காண்க.

படும். அங்ஙனங்கொண்ட சிவாத்துவிதசைவா கருத்துணராதார் சிவாத்துவிதசைவமாவது யாதோவெனவும், *"நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்—குலவினரளவளாவர்" என்றமையின், இறுதிக்கண் எடுத்தோதப்படுஞ் சுத்தசைவம்போலுமெனவும் மயங்குவர். சுத்தசைவம் நுட்பப்பொருளுணராமைமாத்திரையேபற்றி வேறுவைக்கப்பட்டதன்றிக் கருத்துவகையாற் சித்தாந்தசைவத்தின் வேறன்மையிற் சுத்தசைவஞ் சித்தாந்தசைவத்துள் அடங்குமென றுணர்க. அற்றாகலினன்றே, *"நிலவுலகாய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்—குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி" என ஏனைச்சமயங்களை எடுத்தோதி விலக்கிச் சுத்தசைவத்தை அங்ஙனம் விலக்காதொழிந்ததூஉ மென்க.

இனி, இவ்வாறன்றிப் பாடாணவாதத்திற்கும் பேதவாதத்திற்குந் தம்முள் வேறுபாடு சிறிதாகலின், அவ்விரண்டனையும் ஒன்றாகவைத்தெண்ணிச் சுத்தசைவத்தையுமுடன்கூட்டி அகச்சமயமாறெனக் கோடலுமொன்று. இங்ஙனமாகலான் †"மெய்தரு சைவ மாதி யிருமூன்றும்" என்றதூஉம் பாடாணவாதமுதலிய அறுவகைச் சைவங்களையுமெனக் காண்க. பாசுபதர் முதலியோர் கலைக்கு மேலுள்ள தத்துவங்களை உணராமையின், அவர் †"வித்தையாதி—யெய்துதத் துவங்க ளேய்வர்" எனக் கோடல் பொருந்தாமை அறிக. ஐக்கியவாதசைவர் கலைக்குமேலுள்ள தத்துவங்களுண்டெனக் கொண்டாராயினும், மூலமலம் உண்டென்பதறியாமையின் மூலமலநீங்கிய முத்தர்க்கன்றிச் சுத்ததத்துவபுவனங்களிலெய்துதல் கூடாமையின், அவர்க்கு முத்தித்தானம் மோகினிக்குமேற் சுத்தவித்தைக்குக் கீழ் விஞ்ஞானகலர்க்குரிய தானமேயாமாகலின், ஏனைப்பாடாணவாதசைவர் முதலியோரே †"வித்தையாதி......தத்துவங்களேய்வர்" என்றறிக. ‡"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்" என்புழியும் அகச்சமயமென்றது, §"ஏக னனேக னிருள்கரும மாயையிரண்டு" என்னும் ஆறுபொருளுங்கொண்ட பாடாணவாதமுதலிய அறுவகைச் சைவங்களையேயா மெனவும், புறச்சமயமென்றது அங்ஙனம் பொருளுண்மை கொள்ளாத ஏனை மூவகைப் புறச்சமயங்களையுமெனவும் உணர்ந்துகொள்க.

---

# புறப்புறச்சமயம்.

---

## ௧ உலகாயதம்.

புறப்புறச் சமயமாறனுள் ¶ உலகாயதமாவது:— காண்டலளவை ஒன்றே பிரமாணம்; காணப்படும் நிலம் நீர் தீ வளியென நான்கே தத்துவங்கள்; இவை நித்தப்பொருள்கள்; இவற்றின் கூட்டமே உடம்பு; பாகடை

---

* சிவப்பிரகாசம், உண்மை, ௪௯. † சிவஞானசித்தி, ௨-ம் சூத்திரம். ௭௩. ‡ சிவப்பிரகாசம், பாயிரம், ௭. § திருவருட்பயன், அறியுநெறி, ௨. ¶ இவ்வுலகாயதமதம் சாருவாகமதமெனவும் பெயர்பெறும்.

யுஞ் சுண்ணும்புங் கூடியவழிச் செவ்வண்ணம் பிறக்குமாறுபோல இவற்றின் கூட்டரவின் ஒருணர்வுண்டாம்; அவ்வுணர்வு உடம்பு வளரவளரும் தேயத் தேயுமாகலின், உடம்பிற்கு வேறே உயிரென்பதும் பொய்; உடம்பிற்கு இன்பத்துன்பங்கள் இயல்பாயுள்ளன; இவற்றிற்குக்காரணம் வினை யென்பதும் பொய்; மயிலைச் சித்திரித்தாரையுங் குயிலைக் கூவுவித்தாரையுங் காணுமையிற் கடவுளுண்டென்பதும் பொய்; இம்மையின் மங்கைப் பருவத்து மகளிரோடு மணந்து உண்டுடுத்து வாழ்வதே துறக்கவின்பம்; அதுபெறுது பகைவரால் நோயால் வறுமையால் நூல்களாற் பிறவாற்றுல் வருந்துவதே நிரயத்துன்பம்; வேறே துறக்கநிரயமுள என்பதும் பொய்; நான்கு பூதக்கூட்டரவிற் பிராணவாயு ஒன்று நீங்கில் உணர்விழந்து உடம்பு நாசமாம்; அதுவே வீடுபேறு; வேறே வீடுபேறுண்டென்பதும் பொய்; இவ்வுண்மை யுணராத மடவோர் மறுமையுண்டெனக்கொண்டு தவங்கள் பட்டினி முதலியவற்றுன் வருந்துவர்; கற்பு முதலிய * சங்கேதநூல்கள் மதுகையின்றி மதியுடையோராற் செய்யபட்டன; பொன் நிலம் உணவுமுதலிய தானங்களை உயர்த்துக்கூறும் நூல்கள் பசியான் வருந்தி நல்கூர்ந்தோராற் செய்யப்பட்டன; தேவகுலந் தண்ணீர்ப்பந்தர் கூவல் பொய்கை சோலை முதலியன செய்தலை உயர்த்துக் கூறும் நூல்கள் வழிச்செல்வோராற் கூறப்பட்டன; ஆகலான் இவற்றைக் கைவிட்டு, உழவு பசுக்காவல் வாணிகம் செங்கோன்முறைமை முதலியனவாக ஆன்றோர்காட்டிய நெறியினின்று இம்மையின்பங்களை நுகர்ந்து வாழ்தல் உறுதிப்பயன் என்பதாம்.

இவ்வுலகாயதநூல் செய்தோன் † பிருகற்பதி யென்றுணர்க. இவ்வுலகாயதர் தேகான்மவாதிகளும், இந்திரியான்மவாதிகளும், பிராணன்மவாதிகளும், அந்தக்கரணன்மவாதிகளுமெனப் பலதிறப்படுவர்.

## பௌத்தம்.

இனிப் பௌத்தமாவது:— உலகத்துப் பிறந்திறந்துழன்று சில முதலியவற்றுன் நல்லுணர்வு தோன்றி முழுதுணர்ந்து முத்திபெற்றுத் தன்னைப்போற் பிறருமுணர்ந்து உய்தற்பொருட்டுக் கருணையினுற் பிடக நூல் செய்தவன் புத்தக்கடவுள்; அந்நூலிற் கூறும் பொருள்களாவன ஞானமே ஆன்மா எனப்படும்; அது நீரோட்டம்போலச் ‡ சந்தானமாய்க் கணந்தோறுந் தோன்றி அழியும்; அங்ஙனம் தோன்றியழியுங்கால் § மான்மதநாற்றம்போல முற்கணத்தின் அழிவெய்தும் ஞானத்திற்றேன்றிய வாசனை, பிற்கணத்திற்றேன்றும் ஞானத்திற் பற்றுதலான் அறிவு முதலாயின நிகழும்; மற்றும் உள்பொருளெனப்பட்டவையெல்லாங் கணந்தோறுந் தோன்றியழியும்; இந்த ஞானத்திற்றேன்றிய வாசனை அழிவதே முத்தி என்பதாம். ஞானங்கூடக் கெடுதல் முத்தி என்பாருமுளர்.

* சங்கேதம் - நியமனம். † பிருகற்பதி - தேவகுரு. ‡ சந்தானமென்பது தொடர்ச்சி. § முன் மான்மதம் வைத்தெடுக்கப்பட்டொழிந்த பெட்டியில் பின்வைக்கப்படும்பொருளிலும் அதன்வாசனை பற்றுதல் போல என்க.

*மற்றுமுள பொருளெல்லாம் கணந்தோறும் தோன்றியழியும். என்ற பாடமே சரி; கணபங்கவாதிக்கு உள்பொருள் உடம்பாடின்று; ஆகலான் என்க.

இப்பௌத்தமதத்தர் மாத்தியமிகர், யோகாசாரர், சௌத்திராந்திகர், வைபாடிகரென நால்வகைப்படுவர். இந்நால்வரும், முறையே எல்லாப் பொருளுஞ் சூனியமெனவும், புறப்பொருள் சூனியமெனவும், புறப்பொருளுண்மை வழியளவையான் அறியப்படுமெனவும், புறப்பொருள் காட்சிப் பொருளாமெனவுங் கூறுப. இந்நால்வரும் ஆதிபுத்தனுடைய மாணாக்கர்.

**மாத்தியமிகர்.**

இவருள், மாத்தியமிகராவார்:—உலகத்துப்பொருள்கள் உள்பொருளாயின் அழியா; இல்பொருளாயின் தோன்றா; உள்ளவுமில்லவுமாமெனின் முரணும்; இரண்டுமல்லவெனின் உணர்ச்சி கூடா; ஆகலின் இந்நான்கு பகுதியுமின்மையான் எல்லாப்பொருளுஞ் சூனியமே; மயக்கத்தாற் காட்சிப்பொருள்போலப் புலப்படுகின்றனவென ஆசிரியன் பிடக நூற்பொருள் உணர்த்தியவழி அதனை உண்மையாகக்கொண்டு மேல் வினவாதார்.

ஆசிரியன் மொழிந்தது பொருளெனக் கோடலிற் றலைமாணாக்கர், அதற்குமேல் வினநிகழ்த்தாமையிற் கடைமாணாக்கரென இரண்டும் ஒருங்குற்று நின்றமையின், மத்தியமமாணாக்கராய் மாத்தியமிகர் எனப் பெயர் பெற்றார் என்பது.

**யோகாசாரர்.**

இனி, யோகாசாரராவார்:—அங்ஙனம் ஆசிரியன் உணர்த்தியவழிப் புறப்பொருள் பாழென்பதனை உடம்பட்டு ஞானமும் அவ்வாறு சூனியமாயின் வழங்கற்பாடு கூடாதன்றே? என வினவியினார்க்கு, நன்றேவினவினீர்! ஞானமாத்திரம் உள்ளது; அந்தஞானம் சாகாரம் நிராகாரம் என்று இருவகைப்படும்; அவற்றுள், வட்டம் சதுரம் கறுப்பு சிவப்பு முதலிய வடிவிற்றாய் அகத்தே தோன்றும் ஞானம் சாகாரமெனவும், பந்தம் நீங்கியவழி அங்ஙனம் வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் எழுவதாகிய ஞானம் நிராகாரமெனவுங் கூறப்படும். இத்தன்மைத்தாகிய ஞானமேயன்றிப் பொருளென வேறில்லை; கனவின்கட் புறப்பொருளை அவாவாது கேவலஞானத்தானே வழங்கக் காண்டலான் நனவின்கண் வழங்குவதும் அவ்வாறேயாம்; அவ்வுணர்வு அகத்தின் நிகழ்வதேயாயினும் அநாதிவாசனைவயத்தாற் புறத்தே காணப்படுவதுபோலத் தோன்றா நின்றதெனக்கொள்க என்று ஆசிரியனுணர்த்தினன். அங்ஙனம் உணர்த்தப் பட்டோர், ஆசிரியன் மொழிந்ததனை உடம்பட்டு அதற்குமேல் வினவியினாராகலின் யோகாசாரரென்றாயினர் என்பது.

பௌத்தமதத்தில் ஆசிரியன்மொழி உடம்படுதலை ஆசாரமெனவும் அதற்குமேல் வினவுதலை யோகமெனவுங் குறியிட்டு வழங்குபவாகலான், அவ்விரண்டானும் பெற்ற பெயர் என்றுணர்க.

**சௌத்திராந்திகர்.**

இனிச், சௌத்திராந்திகராவார்:—அங்ஙனம் ஆசிரியனுணர்த்திய வழிப் புறப்பொருண் முழுவதுஞ் சூனியம் என்பதென்னை? யான் இது

கண்டேனென்று உணர்வுழி யான் என்னும் ஞானம் அகத்துப்பொருளும் இது என்று சுட்டியறியப்படுவது புறத்துப்பொருளுமாகலான் அவற்றிற்கு வேறுபாடு தெற்றென விளங்குதலானும், இரண்டும் ஒருங்குணர்தலேபற்றி ஒன்றென்றல் பொருந்தாமையானும், இரண்டுமொருங்குணர்தல் எனவே, வேறுபாடுண்மை தானே பெறப்படுதலானும், ஞானமே குடம் படம் முதலியனவாகத் தோன்றுகின்றதெனக் கோடல் பொருத்தமன்று என வினவினார்க்கு, நன்றே வினயினீர்! புறத்துத் தோன்றுவனவும் உள்பொருளேயாம்; அவை காட்சிப்பொருளல்ல; குடவடிவிற்றாகிய ஞானமுணர்ந்தபின்னன்றிக் குடமுணர்தல் கூடாமையிற் கணத்திற்றோன்றியழியுங் குடமுதலாயின அங்ஙனம் உணருங்காறும் நிலைபெறுதலின்மையாற் குடமுதலாயின தத்தம் வடிவினை ஞானத்தின்வைத்திட்டழிந்தபின்னை, ஞானத்துட் பற்றிய வடிவானே அங்ஙனம் இறந்துபோய குடமுதலாயின வழியளவையின்வைத்து உணரப்படும். இவற்றிற்குக் காரணம் என்னையெனின், புறம் அகம் என்னும் இருவகைச்சமுதாயமாம். அவற்றுட் புறச்சமுதாயம் நிலமுதலாயின. அவற்றிற்குக் காரணம் பரமாணுக்கள். அவை, நிலவணு நீரணு தீயணு வளியணு என நால்வகைப்படும். அவை ஒருங்குபலதொக்கவழிப் புறச்சமுதாயந் தோன்றும். இனி, அகச்சமுதாயம் சித்தமுஞ் சித்தப்பகுதியுமாம். அவற்றிற்குக் காரணம் ஐவகைப்படுங் கந்தங்கள்; அவை, உருவம் வேதனை ஞானங் குறி வாசனை என்பனவாம். கந்தமென்பது சமூகம் என்னும் பொருட்டு. அவற்றுட் சித்தத்தாற் சிந்திக்கப்படுஞ் சத்தமுதலாயின உருவக்கந்தம். இவை புறத்துள்ளனவாயினும் அகத்திற் சித்தத்தாற் சிந்திக்கப்படுதலின், அகச்சமுதாயத்துள்வைத்து எண்ணப்பட்டன. இனி, அகச்சமுதாயத்துட்பட்ட உடல் பொறி முதலியவற்றை உருவக்கந்தம் என்றலுமொன்று. அவ்வுருவக்கந்தத்தை உணருமுணர்வு ஞானக்கந்தம்; அது சாகாரம் நிராகாரம் என்னும் வேறுபாட்டாற் * பிரவிருத்திவிஞ்ஞானமென்றும் † ஆலயவிஞ்ஞானமென்றும் இருவகைப்படும். சாகாரஞ் சவிகற்பமாம். நிராகாரம் நிருவிகற்பமாம். இனி, இவ்வுணர்வாற்றோன்றும் இன்பத்துன்பநொதுமல்கள் வேதனைக்கந்தம். சாத்தன் கொற்றன் முதலிய பெயர்கள் குறிக்கந்தம். அப்பெயர்களாற் பகுத்துணருஞ் சவிகற்பவுணர்வு குறிக்கந்தமெனவும், நிருவிகற்பமொன்றே ஞானக்கந்தமெனவுங் கோடலுமொன்று. அவற்றின் வாசனை வாசனைக்கந்தமாம். வாசனையெனினுஞ் செய்கையெனினும் ஒக்கும். குறியெனினுஞ் சஞ்ஞையெனினும் ஒக்கும். இவ்வைந்தும் ஒருங்கே தொகுதலான் அகச்சமுதாயந்தோன்றும். இவற்றுள், உருவக்கந்தம் புறச்சமுதாயத்துள் வைக்கப்படும், ஏனை நான்குமே சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச்சமுதாயம் என்பாருமுளர். சகமுழுதும் இவ்விருவகைச் சமுதாயத்துள் அடங்குமென்று ஆசிரியன் உணர்த்தினன். அதுகேட்ட மாணக்கர், இங்ஙனம் மாணக்கர் வினவிய கடாவிற்கேற்ப அறிவுறுக்குஞ் சூத்திரங்

* பிரவிருத்தி விஞ்ஞானம் - சவிகற்பமாய் விரியும் ஞானம். † ஆலயவிஞ்ஞானம் - அங்ஙனமன்றி ஒடுங்கும் ஞானம்.

கள் எவ்வளவின் முடிவுபெறுமெனக் கடாயினர். அவ்வழி ஆசிரியன் சூத்திராந்தங் கடாவிய நீர் சௌத்திராந்திகரெனப் பெயர்பெறுக என்றமையின், அவர்க்கு அது பெயராயிற்று.

### வைபாடிகர்.

இனி, வைபாடிகராவார்:—ஆசிரியன் அங்ஙனம் உணர்த்தியவழி அதுகேட்ட மாணாக்கர், புறப்பொருள் ஞானத்தால் அநுமித்தறியற்பாற்றென்றதென்னை? ஞானமே தனக்குக் காட்சிப்பொருளாகலானும், காட்சிப்பொருள் ஒன்றுமின்றாயின், * வியாத்தியுணர்தற்கு இடமின்மையான் வழியளவை நிகழாதாகலானும் இது மாறுகோளுரைபோலுமெனக் கடாயினராகலின், அவர் வைபாடிகர் எனப்பட்டார். மாறுகோளுரை எனினும் விபாடை எனினும் ஒக்கும். அவர்க்குப் புறப்பொருள் காட்சிப்பொருளாம் எனவும் ஆசிரியன் உணர்த்தினன்.

இங்ஙனம் வினயினர் கருத்துக்கேற்ப நால்வகைப்படுத்துச் செவியறிவுறுப்பினும், கணபங்கமுதலியவற்றை உடம்பட்டுக்கோடலான் எல்லாரும் முறையானே முழுதுஞ் சூனியம் என்று கோடற்குரியர் என்பது ஆசிரியன் கருத்து. அங்ஙனமாயினும் வினயினர்கருத்துக் கேற்ப ஆசிரியன் கூறிய விடைப்பொருளை உறுதியாகக் கோடலின், மதம் வேறுபட்டு நால்வராயினர். இங்ஙனம் பௌத்தமதம் நான்குங் கண்டுகொள்க.

### ஆருகதம்.

இனி, ஆருகதமாவது:—சீவனும் அசீவனும் ஆச்சிரவமும் சமுவரமும் நிர்ச்சரமும் பந்தமும் வீடுமெனப் பதார்த்தங்கள் ஏழுள. இவற்றுட் சீவன் அநாதிசித்தனும் முத்தனும் பெத்தனுமென மூவகைப்படும். இவற்றுள், அநாதிசித்தன் அருகக்கடவுள். முத்தன் † மோகமுதலிய பந்தத்தின் நீங்கினவன். பெத்தன் அவற்றுட் கட்டுண்டவன். இச்சீவன் எடுத்த உடம்பளவின் வியாபகமாய் உடம்புதோறும் வெவ்வேறாம்.

இனி அசீவன், புற்கலமும் ஆகாயமும் தன்மமும் அதன்மமுமென நான்குவகைப்படும். அவற்றுள் உருவப்பொருளான நிலமுதலிய நாற்பெரும் பூதமும், மரம் புல்லு முதலிய நிலையியற்பொருளும், பைமுட்டை முதலியவற்றிற் பிறக்கும் இயங்கியற்பொருளுமெனப் புற்கலம் அறுவகைப்படும். இவற்றிற்குக் காரணம் பரமாணுக்கள். உலகாகாயமும் உலகங்கடந்த ஆகாயமுமென ஆகாயம் இருவகைப்படும். உலகங்களுக்கு உட்படுமாகாயம் உலகாகாயமெனவும், உலகங்கட்குப் புறத்தே எல்லையின்றியுள்ளது உலகங்கடந்தவாகாயமெனவும் உணர்க. தன்மம் புற்கலத்தின் வேறாய் நன்மையைப் பயப்பது. அதன்மம் தீமையைப் பயப்பது. அசீவபதார்த்தவகை நான்கும் இங்ஙனங் கண்டுகொள்க. இவையெல்லாம் அத்திகாயமென்னும் வாய்பாடுகூட்டி வழங்கப்படும்.

---

* வியாத்தி - நியதமான உடனிகழ்ச்சி. † மோகம்முதலியன:—மோகம், அந்தராயம், கோத்திரம், நாமம், ஆயுஷ்யம், வேதனீயம், தரிசனாவரணீயம், ஞானாவரணீயம் என்பன.

இனி ஆச்சிரவமாவது, பொறிவழிச்சேறல்; கன்மத்தொடர்ச்சி யென்பாரும் உளர்.

சமுவரமாவது, அங்ஙனஞ் செல்லாமற்றடுத்து முத்திக்குக் காரணமாவது. அது நிலத்தின் எறும்புமுதலியன சாவாது வழிநோக்கி மெல்ல மெல்ல வியங்குதலும், இனியவைகூறுதலும், நியமவுணவும் முதலாயினவாம்.

நிர்ச்சரமாவது, சுடுபாறையிற்கிடத்தல் தலைமயிர்பறித்தன்முதலிய தவம்.

பந்தமாவது, இருப்புக்குடம்பை தன்னகப்பட்ட சுரைப்பழத்தை நீர் நிலையிற் கீழ்ச்செலுத்துமாறுபோலச் சீவனுடைய சுதந்திரத்தை அடக்கிப் பிறவியிற் சுழல்விக்கும் மோக முதலிய எண்குணங்களுமாம்.

வீடாவது, இருப்புக்குடம்பை தகர்ந்தவழிச் சுரைப்பழம் மேலெழுமாறுபோலச் சீவன் மோகமுதலியவற்றின் நீங்கிச் சுதந்திரம்பெற்று உலகங்கடந்து எல்லையின்றியுளதாகிய ஆகாயத்தின் மேனோக்கியேசேறல். மேலெல்லைக்கண் இருத்தல் முத்தி யென்பாரும் உளர்.

இவ்வெழுவகைப் பதார்த்தங்களும் அநேகாந்தவாதத்தாற் கூறப்படும். அஃதாவது, உடம்பெடுத்தற்குமுன் சீவனுண்டோ? இல்லையோ? என்று வினாவழி, உண்டாம், இல்லையாம், உண்டுமில்லையுமாம், சொல்லொணாததாம், உண்டுமாஞ்சொல்லொணாததுமாம், இல்லையுமாஞ்சொல்லொணாததுமாம், உண்டுமில்லையுமாஞ்சொல்லொணாததுமாமெனஎழுவகையான் இறுத்தல். வினாயவையெல்லாம் இவ்வாறே இறுக்கப்படும். ஆம் என்பது ஈண்டுச் சற்றென்னும் பொருட்டாயதோ ரிடைச்சொல். சொல்லொணாதது என்பது உளதுமிலதுமல்லாதது என்னும் பொருட்டென்பது. எனவே, உள்ளதும் இல்லதும் உளதிலதும் இரண்டுமல்லதுமென நான்குபக்கமாய், இரண்டுமல்லதென்னும் பொருட்டாகிய சொல்லொணாததென்பதனோடு உள்ளதும் இல்லதும் உளதிலதும் என்னும் மூன்றுங்கூட்ட * ஏழுபக்கமாயின வெனக் காண்க.

பொருளியல்பு இவ்வெழுவகையுள் ஒன்றாகச் சொல்லவும்படுஞ்சொல்லவும்படாது என்பது கருத்தாகலின், முரணுமையுமறிக இவ்வெழுவகையுள் ஒவ்வொன்றேபற்றிக் கூறும் ஏனைச்சமயத்தார் கோட்பாடெல்லாம் உள்ளடக்கிநிற்றலின், இங்ஙனம் அநேகாந்தவாதங் கூறுஞ் சமயமே மேற்பட்ட சமயம் என்பது அவர்கருத்து. ஆருகதம் முடிந்தது.

இவருள், உலகாயதன் காட்சிவாதியெனவும், பௌத்தன் கணபங்கவாதியெனவும், ஆருகதன் அநேகாந்தவாதியெனவும், பௌத்தருள்ளும் மாத்தியமிகன் சூனியவாதியெனவும், யோகாசாரன் விஞ்ஞானவாதியெனவும், ஏனை இருவருஞ் சமுதாயவாதிகளெனவும் உணர்க. இவ்வாறு புறப்புறச் சமயமாறுங் கண்டுகொள்க.

---

* வடநூலார் இதனைச் சப்தபங்கமென்றும் சப்தபங்கமாகக் கூறுவதைச் சப்தபங்கி நியாயமென்றுங் கூறுவர். இதனை நீலகண்டபாடியத்தினுங் காண்க.

# புறச்சமயம்.

## தருக்கம்.

இனிப் புறச்சமயமாறனுள் தருக்கமாவது:—வைசேடிகமும் நையாயிகமுமென இருவகைப்படும். அவற்றுள், வைசேடிகநூலிற் கூறும் பொருளாவன, திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மையெனப் பதார்த்தம் எழுவகைப்படும்.

அவற்றுள் திரவியம், நிலம் நீர் தீ வளி ஆகாயம் காலம் திசை ஆன்மா மனமென ஒன்பது வகைப்படும். அவற்றுள், நிலமுதலிய நான்கும் அநித்தப்பொருள்கள் அவற்றின் காரணங்களாகிய நால்வகைப் பரமாணுக்களும் ஆகாயமுதலிய ஐந்தும் நித்தப்பொருள்கள். அவற்றுள், ஆகாயம் காலம் திசை மூன்றும் ஒரோவொன்றேயாய் வியாபகமாயுள்ளன. ஆன்மாக்கள் வியாபகமாய் எண்ணிறந்தனவாம். மனம் அணுவளவிற்றாய் ஆன்மாக்கடோறும் வெவ்வேறாயிருக்கும். ஆன்மா பரமான்மா சீவான்மாவென இருவகைப்படும். பரமான்மா முற்றுணர்வுடையவன்; எல்லாம் வல்லவன்; அவனிச்சைவயத்தானே உலகந் தோன்றி ஒடுங்கும்; அவனாற் செய்யப்பட்டது வேதம். இனிச் சீவான்மாக்கள், சிற்றறிவினவாய் வினைக்கீடாகப் பிறந்திறந்து இன்பத்துன்பங்களை நுகர்வனவாம். ஆன்மாக்களுக்கு மனத்தோடு கூடாதவழி அறிவில்லை. இங்ஙனந் திரவியம் ஒன்பதுங் கண்டுகொள்க.

இனிக் குணங்களாவன, திரவியம் பற்றுக்கோடாக நிகழ்வன. அவை, உருவம் சுவை நாற்றம் ஊறு முதலியனவாக இருபத்துநான்குவகைப்படும். அவற்றுள், புத்தி இன்பம் துன்பம் விருப்பு வெறுப்பு முயற்சி அறம் பாவம் என்னும் எட்டுக்குணமும், * பாவனை யென்னும் வாதனையுஞ் சீவான்மாக்களுக்குச் சிறப்புக்குணங்கள். இவற்றுள், புத்தி விருப்பு முயற்சி மூன்றும் பரமான்மாவுக்குச் சிறப்புக்குணங்கள். பரமான்மாவின் குணங்களாகிய புத்திமுதலிய மூன்றும் நித்தியம். சீவான்மாக்களின் புத்திமுதலிய மூன்றும் அநித்தியம். ஏனையவும் ஓர்ந்துகொள்க.

தொழிலாவன, எழும்பல் வீழ்தல் வளைதல் நிமிர்தல் நடத்தலென ஐவகைப்படும்.

சாதியாவது, பலபொருட்குப் பொதுவாகிய தன்மை. அது பரம் அபரமென இருவகைப்படும்.

விசேடமாவது, ஒவ்வொருபொருட்கே உரிய தன்மை. அவை, நிலவணுமுதலிய பரமாணுக்களும் ஆகாயமுதலிய ஐந்துமாகிய நித்தப்பொருள்களின் வேறுபாடுணரநிற்பனவாய்ப் பலவாம்.

சமவாயமாவது, அவயவமுதலியவற்றிற்கு அவயவி முதலியவற்றோடு நீக்கமின்றி உளதாகிய இயைபு. அஃது ஒன்றேயாம்.

---

* பாவனை - அநுபவத்தின் காரியமாய் நினைவிற்குக் காரணமாயுள்ளது.

7 இன்மையாவது, முன்னின்மையும் அழிவுபாட்டின்மையும் என்று மின்மையும் ஒன்றினொன்றின்மையுமென நான்குவகைப்படும்.

(ஆத) இங்ஙனங்கூறும் எழுவகைப் பொருள்களின் சிறப்பியல்பு பொதுவியல்பு வேற்றியல்புகளை உணரவே உடம்பு முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவினியல்பு விளங்கும்; விளங்கவே, உடம்பு முதலியவற்றை நானென்று எண்ணிய மித்தையுணர்வு கழியும்; அது கழியவே, முயற்சியின்மையின், அறம்பாவங்கள் இல்லையாய்ப் பிறவி ஒழியும்; ஒழியவே, வரக்கடவனவாகிய துன்பங்களின்மையின், உடம்பு முகந்துகொண்ட வினைப்பயன் நுகர்ச்சியாற் கழிவுழி இறுதித் துன்பங்கெட்டு மனத்தோடு கூடுதற்கேதுவின்மையின், அறிவின்றிப் பாடாணம்போற் கிடப்பதே முத்தியென்பதாம். வைசேடிகநூல் செய்தவன் கணதமுனிவன்.

இனி 2 நையாயிகமாவது:—வைசேடிகநூலிற் கூறியவற்றைச் சிறுபான்மை வேறுபடுத்துப் பிரமாணம் பிரமேயமுதலாகப் * பதினாறுவகையான் விரித்துக் கூறுவதாம். நையாயிகநூல் செய்தவன் அக்கபாதமுனிவன்.

இங்ஙனம் இருவேறுவகைப்படுந் தருக்கநூலார் சிலவற்றிற்குக் கணபங்கங் கோடலின் † அத்தவைநாசிகரெனவும், புத்தநூலார் எல்லாப் பொருட்குங் கணபங்கங்கோடலின் முழுவைநாசிகரெனவும் உணர்க. தருக்கநூலார் சிலவற்றிற்குக் கணபங்கங் கூறுமாறுவது, உண்டவுணவின் சாரமே அவயவங்களாய்ப் பரிணமித்துக் கணந்தோறும் வளர்ந்துந் தேய்ந்தும் வேறுபடுதலின், அவயவியாகிய உடம்பும் வளர்ந்துந் தேய்ந்துங் கணந்தோறும் பிறிதுபிறிதாம்; அங்ஙனங் கணந்தோறும் வளர்ந்துந் தேய்ந்தும் வருதல் காணப்படாதாயினும், மழைத்தாரையால் நிறையும் பொய்கைநீரும் இறைப்பக் குறையுங் கூவனீரும்போல முடிவின்கட் காணப்படுதலின், கணந்தோறும் வளர்தலுந் தேய்தலுமுடைமை பெற்றாம். இவ்வாறே மண்டொடுதல் பூரித்தல் முதலியவற்றால் நிலமும், யாற்றுநீர்ப் பெருக்கு முதலியவற்றாற் கடலும், கணந்தோறும் நிறைவுகுறைவுடைமையான் இன்னோரன்னவையெல்லாங் கணபங்கமாய்ப் பிறிதுபிறிது தோன்றுமெனக் கொள்வர்.

சௌத்திராந்திகரும் வைபாடிகருஞ் சமணருந் தார்க்கிகரும் பரமாணுகாரணவாதிகளாயினும், அவருட் சௌத்திராந்திகரும் வைபாடிகரும் சமணரும் பரமாணுக்கள் ஒருங்குபலதொக்குக் காரியமாமென்பர்; தார்க்கிகர் இறைவனிச்சைவயத்தாற் பரமாணுக்களிற் கிரியைதோன்றி, இவ்விரண்டு பரமாணுக்கள் தம்மிற்சேர்ந்து இரட்டையணுவாய், அவை மும்மூன்று தம்முட்சேர்ந்து மும்மையணுவாய், அவை நந்நான்கு தம்முட்சேர்ந்து

* பதினாறுவகையாவன—பிரமாணம், பிரமேயம், ஐயம், பிரயோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தர்க்கம், நிர்ணயம், வாதம், செற்பம், விதண்டை, ஏதுப்போலி, சலம், சாதி, தோல்வித்தானமென்னும் இவை. இவற்றின் விரிவைத் தர்க்க பரிபாஷையிற் காண்க. † அத்தம்—பாதி. வைநாசிகர் - விநாசங்கொள்பவர். விநாசம் பங்கம் அழிவு என்பன ஒருபொருட்சொற்கள்.

X சமணரில் சிலர்கள் "நில நீர் தீக்காற்று என்னால் வகையின" நான்கணுக்கள் சொல்லுவாரென்



நான்மையணுவாய், இவ்வாறே ஒன்றற்கொன்று சினையும் முதலுமாய் முறையே தோன்றிக் காரியப்படுமென்றும், ஒடுங்குங்காலும் இறைவனிச்சைவயத்தான் அம்முறையே ஒடுங்குமென்றுங் கொள்வர்.

தார்க்கிகருஞ் சௌத்திராந்திகரும் வைபாடிகரும் நிலவணு நீரணு தீயணு வளியணுவெனப் பரமாணுக்கள் நால்வகைப்படுமெனக்கொள்வர். X சமணர் அவ்வாறு கொள்ளாது பரமாணுக்களெல்லாம் ஒருதன்மையனவே என்பர். இவை தம்முள் வேற்றுமை.

இங்ஙனமாயினுந் தார்க்கிகர், வேதநெறியினொழுகி வேதத்திற்குப் பிரமாணங் கோடலின், புறப்புறச்சமயிகளாகிய நாத்திகரோடு சேராது வைதிகருள்வைத் தெண்ணப்பட்டாரென்க. தார்க்கிகமதம் முடிந்தது.

## மீமாஞ்சை.

இனி மீமாஞ்சையாவது:—வேதத்திற் கருமகாண்டவாராய்ச்சி செய்தற்கெழுந்த நூலாகலின், அதுவும் வேதமெனப்படும். அது, பன்னிரண்டத்தியாயமாகச் சைமினி முனிவனாற் செய்யப்பட்டது.

அந்நூலுட் கூறும் பொருளாவது:—வேதம் ஒருவராற் செய்யப்பட்டதன்றி அநாதியே*சுயம்புவாயுள்ளது; அங்ஙனமாகலின் வேதம் பிரமாணமெனப்படும்.

வேதத்துள்ளும் "நீராடுக," "வேள்விசெய்க," "வழிபடுக" என்னுற்போலத் தொழிற்படுத்துவனவாகிய சோதகவாக்கியங்களே பிரமாணமாம். உலகத்துச் சொற்பொருளுணரும் அவாவினராகிய இளையோர், "ஆவினை யாக்க" "மேதியை விடுக்க" என ஏவும் முதியோன் கூறும் மொழி கேட்டும், அதுபற்றி இயற்றும் முதியோன் செய்யுந் தொழிலினைக் கண்டும், பின்பு "மேதியை யாக்க" "ஆவினை விடுக்க" என மாறிக்கூறிய வழி அங்ஙனஞ் செய்யுந் தொழிலினைக்கண்டும், இச்சொற்கு இதுபொருள் இச்சொற்கு இதுபொருளெனவும், இங்ஙனஞ் சொற்பொருளெல்லாந் தொழிற்படுத்துஞ் சொல்லானே உணர்தற்பாலன எனவும் உணர்ந்து கொள்வாராகலின், வேதத்தினும் அவ்வாறு தொழிற்படுத்துஞ் சொற்களே பொருள்விளக்கிப் பிரமாணமாமென்பது தெளியப்படும்.

அங்ஙனமன்றி, "உலகந் தோன்றி யொடுங்கும்" என்றும், "தோற்றி யொடுக்குதற்கோரிறைவனுண்டு" என்றும், "இந்திரன்முதலிய கடவுளர் உளர்" என்றும், "அவர் இவ்வியல்பினர்" என்றும் பொருளியல்புகூறும் வாக்கியங்கள் பிரமாணமாகாவாயினும், அவை தொழிற்படுத்துவனவாகிய சோதகவாக்கியங்கட்குப் புனைந்துரைவகையான் உபகாரமாதல்பற்றிப் பிரமாணமெனக் கொள்ளப்படும்.

"இந்திராயசுவாகா," "வருணாயசுவாகா" என்றற்போலும் வேதமந்திரங்களும் பொருளுடையவல்லவாயினும் விதிவாக்கியங்கட்கு உபகாரமாதல்பற்றிப் பிரமாணமெனப்படும்.

---

* சுயம்பு அன்றென்று மறுக்கப்பட்டமை ௩௬-ம் பக்கத்துத் திரண்டாம் பரிவிற் காண்க.

"சோதிட்டோமம்" "பரிமேதம்" என்றற்போலும் வேள்விப்பெயர்களும், வேள்விகளின் வேறுபாடு முதலியன உணரநிற்றலிற் பிரமாணமாம்.

இங்ஙனம் வேதத்தின் விதிவாக்கியமல்லாதனவும் ஒருவாற்றான் விதிக்கு உபகாரப்படுதல்பற்றிப் பிரமாணமென்று உபசரித்துக் கொள்ளப்படும்.

வேதமெல்லாம் இங்ஙனம் விதியும்* புனைந்துரையும் மந்திரமுங் குறியீடுமென நான்குவகைப்படும். இவற்றுள், விதி அங்கியும் ஏனைமூன்றும் விதிக்கு அங்கமுமாம். விதிவாக்கியம் விதித்தலும் விலக்குதலுமென இருவகைப்படும். அவைபற்றிச் செய்யும்வினையும் அறமும் பாவமுமென இருவகைத்து.

"ஆன்மாவை அறிக" என விதித்தலின் ஆன்மாக்கள் பலவாய் நித்தமாய் வியாபகமாய்ப் பிறந்திறந்து வினைகளைச்செய்து வினைப்பயன்களை நுகர்ந்துவரும்.

வினைசெய்தவர்க்கு வினையே துறக்கமுதலிய பயன்களை உதவும். காமியப்பயன்களைக்குறித்து வினைசெய்யின் அவ்வினை அவ்வப்பயன்களை உதவும். காமியம் வேண்டாது, விலக்கியனவும் ஒழித்து, வேள்வி செய்யின் அவ்வினை முத்தியை உதவும்.

இவ்வான்மாக்களுக்கு வேறாய்ப் பரமான்மா ஒருவன் உண்டு என்பதூஉம், உலகந் தோன்றி அழியும் என்பதூஉம் பொய்; உலகம் என்றும் இவ்வாறே நிலைபெறும் என்பதாம்.

இங்ஙனஞ் செய்யப்பட்ட சைமினிசூத்திரங்கட்குப் பாடியஞ் செய்தான் சபரமுனிவன். சூத்திரத்திற்கும் பாடியத்திற்குஞ் சிறுபான்மை வேறுபாடு கொண்டு பட்டாசாரியன் சூத்திரமதம்பற்றி வழிநூல் செய்தான். பட்டன் மாணாக்கனாகிய பிரபாகரன் பாடியமதம்பற்றி வழிநூல்செய்தான். இங்ஙனமாகலின் மீமாஞ்சைமதம் இருவகைப்பட்டது.

பட்டாசாரியன், கன்மமே பயன்கொடுக்குமென்றும் முத்தியில் நையாயிகர்போல ஆனந்தமுண்டு என்றுங் கொள்வன். பிரபாகரன், கன்மநாசத்தில் அபூர்வமென ஒன்று தோன்றிநின்று பயன்கொடுக்குமென்றும், வைசேடிகர்போலப் பாடாணம்போற் கிடப்பதே முத்தியென்றுங் கூறுவன்; பொருட்டன்மைகளினுஞ் சிறுபான்மை பட்டாசாரியனில் வேறுபடக்கூறுவன். பிரபாகரமதமெனினுங் குருமதமெனினும் ஒக்கும்.

மீமாஞ்சைநூல் பன்னிரண்டத்தியாயத்துள்:- [1]முதலத்தியாயம், முதற்பாதத்திற் கருமங்களுக்கு நேரே பிரமாணமான விதிவாக்கியங்கட்குப் பிரமாணம் இல்லையென வாதிகள் கூறுஞ் சங்கைகளை மறுத்து வேதஞ் சுயம்புவாகலிற் பிரமாணமாமென்றும், [2]இரண்டாம் பாதத்திற்* புனைந்துரைவாக்கியங்களும் மந்திரங்களுமாகிய இரண்டும் விதிக்கு வேண்டப்படுந் திரவியங்களுந் துதிகளும் முதலியவற்றைத் தெரிவித்தலிற் பிரமாணமாமென்றும், [3]மூன்றும் பாதத்தில் வேதத்தோடு முரணாது மனு முதலிய ஆன்றோராற்

** புனைந்துரை - விதியை வழங்குவதற்கு பொருட்டு விதிப்பயனை உள்ளதனாலும் இல்லதனாலும் வருணித்துக் கூறுவது. இதனை வடநூலார் அர்த்தவாதம் என்பர்.

* தாருகாவனத்திருடிகள் கொண்ட மதம் இதுவே

செய்யப்பட்ட மிருதி முதலியவற்றிற்கு மூலவேதம் உண்டென்று வழியளவையான் உணரப்படுதலின் அவை பிரமாணமாமென்றும், நாலாம் பாதத்தில் விதிவாக்கியத்தில் அகப்பட்ட வேள்விப்பெயர்கள் கருமவேறுபாடும் மாட்டேற்றும் அநுவாதமும் முதலியன உணரநிற்றலானும் கருமத்திற்குப் பெயராகலானும் பிரமாணமாமென்றும் இவ்வாறு பிரமாணமாமாறு உணர்த்துதலின், "பிரமாணவியல்" என்னும் பெயர்த்து.

இரண்டாமத்தியாயம், அங்ஙனம் பிரமாணமாகிய வேதத்திற் பெறப்பட்ட கருமங்கள், வேதவாக்கியங்களிற் கூறும் பகுதிவினை வேறுபடுதலும், ஒருவினை பலகாற்கூறுதலும், தொகைகூறுதலும், வெவ்வேறு குறியிடுதலும், குணவேறுபாடு கூறுதலும், வேறுபிரகரணத்திற் கூதுதலுமாகிய இவற்றுள் ஒன்றற்கொன்று வேறுபாடுடைமை தெரிவித்தலின், "கருமபேதவியல்" என்னும் பெயர்த்து.

மூன்றாமத்தியாயம், அங்ஙனம் பலவேறுவகைப்பட்ட கருமங்கட்குச் சுருதி இலிங்கம் வாக்கியம் பிரகரணம் தானம் குறியீடு என்னும் இவற்றானே இதற்கு இஃது அங்கமெனவும், இஃது அங்கியெனவும், அங்கமுமங்கியுமாமுறைமை கூறுதலின், "அங்காங்கியியல்" என்னும் பெயர்த்து. தலைமைப்பொருள் அங்கியும் தலைமையில் பொருள் அங்கமுமெனக்கொள்க.

சுருதி முதலியவற்றுட் சுருதியாவது, வேறொன்றனை அவாவாது தான் கருதிய பொருளைத் தானே தெரிவிப்பது. அது விதிக்குஞ்சொல்லுங் குறியீட்டுச்சொல்லும் விவகரிக்குஞ்சொல்லுமென மூவகைப்படும்.

இலிங்கமாவது, ஆற்றலாற் பொருளை உணர்த்துவது. அது சொல்லாற்றலும் பொருளாற்றலுமென இருவகைப்படும். ஒருமந்திரத்தின்வருந் தொழில்பற்றி அத்தொழில்நிகழுங் கருமத்திற்கு அம்மந்திரம் அங்கமென்பது சொல்லாற்றலாற் பெறப்படும். அவியினைக் கருவியாற் சுருவத்தாற் கையால் வாங்குக எனப் பொதுப்படக் கூறியவழி, கருவி இறைச்சிக்குஞ் சுருவம் நெகிழ்ந்தபொருட்குங் கை * புரோடாசமுதலியவற்றிற்கும் அங்கமென்பது பொருளாற்றலாற் பெறப்படும்.

வாக்கியமாவது, இங்ஙனஞ் சுருதியும் இலிங்கமுமன்றிச் சொற்றொடர்பு பற்றி உணரவருவது.

பிரகரணமாவது, "சோதிட்டோமம் வேட்க" என்றாற்போலும் விதிவாக்கியங்களாற் பொதுப்பட உணர்ந்து, சிறப்பானறியப்படாத கன்மங்களான் அவாவப்பட்டு இவ்வாறு செய்யற்பாற்றென வகுத்துக்கூறுவது. அது பெரும்பிரகரணமென்றும் இடைக்கட்பட்ட பிரகரணமென்றும் இருவகைப்படும்.

தானமாவது, நிரனிறையிடமும் அண்மையிடமுமென இருவகைப்படும். அவற்றுள் அண்மை, சொல்லினண்மையும் அநுட்டானத்தினண்மையுமென இருவகைத்து.

* புரோடாசம் - யாகத்திற்கொடுக்கும் ஒருவகையவி.

குறியீடாவது, காரணத்தான்வரும் பெயர். அது வேதமரபுபற்றிய பெயரும் உலகமரபுபற்றிய பெயருமென இருவகைப்படும்.

இவ்வாறு சுருதிமுதலியவற்றின் இயல்பு உணர்ந்துகொள்க.

நாலாமத்தியாயம், இங்ஙனம் அங்கமும் அங்கியுமாகியகன்மங்களை அனுட்டிப்பிக்கும் பிரயோகமாமாறு கூறுதலின், "பிரயோகவியல்" என்னும் பெயர்த்து. அங்கம் பிழைத்தவழி அங்கியின்பொருட்டு வேறங்கம் வேண்டப்படும்; அங்கி பிழைத்தவழி அங்கத்தின்பொருட்டு வேறங்கி வேண்டப்படுவதின்று. அங்கம் பிழைத்தவழி அதற்கு அங்கி பலவுள வாயின், யாதொன்றற்கு அங்கமாயே மற்றொன்றற்கு அங்கியாம் அதன் பொருட்டே வேறங்கம் வேண்டப்படும்; மற்றொன்றன்பொருட்டு வேண் டப்படுவதின்று என்றாற்போலத் தெரிவிப்பது பிரயோகமுறைமை என்க.

அஞ்சாமத்தியாயம், ஒருபிரயோகத்துட்பட்ட அங்காங்கிகளை அநுட் டிக்கும் முற்பிற்பாட்டு முறைமையைச், சுருதிமுறைமை பொருண்முறைமை பாடமுறைமை முதலியனபற்றித் தெரிவித்தலின், "முறைமைப்பாட்டியல்" என்னும் பெயர்த்து.

இங்ஙனம் இரண்டாவதின், உற்பத்திவிதியான் அறியப்படுங் கரும பேதமும், மூன்றாவதின், உபகரிக்கும்விதியான் அறியப்படும் அங்காங்கி யியல்பும், நான்கினும் ஐந்தினும், பிரயோகிக்கப்படுவனவற்றின்விதியான் அறியப்படும் பிரயோகமும் முறைமைப்பாடுந் தெரித்துணர்த்தியபின், ஆறா மத்தியாயம், பயன்கூறு மு்கத்தான் அதிகாரிகளாவாரைத் தெரிவித்தலின், "பயனியல்" என்னும் பெயர்த்து; அதிகாரவியலெனினுமாம்.

இங்ஙனம் நால்வகைப்படும் எடுத்தோத்துவிதிகளை ஆராயுமாறு ஆறத் தியாயத்துள் உணர்த்தி, மேல் ஏழாவதுமுதற் பத்தாவதிறுவாய் நான் கத்தியாயங்களான் மாட்டேற்றுவிதி ஆராயுமாறு உணர்த்தப்பட்டது. இவ்வாறு செய்யற்பாற்று என எடுத்தோதுவது எடுத்தோத்துவிதியென வும், அதுபோலச் செய்க என மாட்டெறிவது மாட்டேற்றுவிதியென வும் உணர்க.

அவற்றுள் ஏழாமத்தியாயம், "அதுபோலச் செய்க" என்னும் வச னத்தானும், அங்ஙனம் வசனமில்லனவற்றிற்குப் பெயரொருமையானும், அதுவுமில்லனவற்றிற்கு இதுசெய்க என விதித்தலான் அது செய்யுமாறு யாதானும் ஒன்றனோடு மாட்டெறியும் வசனமுண்டென வழியளவையா னுணரப்படும்விதியானும் மாட்டெறியுமாறுணர்த்தி, எட்டாமத்தியாயம், அங்ஙனம்பொதுப்பட வழியளவையான் உணரப்படுவனவற்றுள் எது போல் எது செய்யப்படுமென்று அவாயவழிச் சொல்லொப்புமை பொரு ளொப்புமைபற்றி இன்னதுபோலின்னது செய்யப்படுமெனத் தெரிந்தெடுத் துணர்த்துதலின், ஏழாவதும் எட்டாவதும் "மாட்டேற்றியல்" என்னும் பெயரினவாம்.

ஒன்பதாமத்தியாயம், அங்ஙனம் மாட்டெறிந்தமைபற்றிப் பகுதிப் பொருளிற் செய்யுங்காரியம் விகுதிப்பொருளிற் செய்வுழிப் பகுதியிற்

கூறும் மந்திரமுஞ் சாமமுந் தொழிலும் விகுதிப்பொருளுக்கேற்ப வேறு படக்கொள்ளுந்திறம் நியாயம்பற்றி ஊகிக்குமாறு உணர்த்துதலின், "ஊகவியல்" என்னும் பெயர்த்து.

பத்தாமத்தியாயம், அங்ஙனம் ஊகித்தபின்னர் மாட்டெறிந்தவற்றுள் ஆண்டைக்கு உரியனவாகாதவற்றை நியாயம்பற்றி விலக்குமாறு உணர்த்துதலின், "விலக்கியல்" என்னும் பெயர்த்து.

இங்ஙனம் பத்தத்தியாயத்தினும் எடுத்தோத்துவிதியினும் மாட்டேற்று விதியினுந் தெரித்துணர்த்த வேண்டியவற்றைத் தெரித்துணர்த்தியபின்னர், ஏனை இரண்டத்தியாயத்தினும் இவ்விருவகைக்கும் பொதுவாகிய தந்திரமும் பிரசங்கமுமாமாறு உணர்த்துதலின், பதினோராமத்தியாயம் "தந்திரவியல்" என்னும் பெயர்த்து; பன்னிரண்டாமத்தியாயம் "பிரசங்கவியல்" என்னும் பெயர்த்து.

தந்திரமாவது, கருமஞ்செய்யுங்காற் றலைமைவினை பலவுளவாய் ஒரு தேசமும் ஒருகாலமும் ஒருகருத்தாவுமாயவழி, அவ்வற்றிற்கெல்லாம் பொதுப்பட அங்கவனுட்டானம் ஒருகாற்செய்யவமையும் என்றாற்போல்வது. அங்ஙனமன்றி மறித்துஞ் செய்யற்பாலதாதலை அவாபம் என்பர். பிரசங்கமாவது, முதற்கண்வந்த ஆசிரியன் அமுதுசெய்தற்கட்ட அறுசுவையடிசில் ஆசிரியனையன்றியும் ஒருதலையான் அங்ஙனம் அட்டிடுதற்குரியனுப் பின்புவந்த மருகனுக்கும் உபகாரமாதல்போல, ஒன்றன்பொருட்டுச் செய்தவினை மற்றொன்றற்கும் உபகாரமாதல். ஆசிரியனுக்கட்ட அடிசில் ஆசிரியனுடன்வந்தவர்க்கும் உபகாரமாதல் பிரசங்கமன்றென்பது.

மீமாஞ்சைநூலிற் பன்னிரண்டத்தியாயமும் நுதலிய பொருள் இங்ஙனந் தொகுத்துணர்த்தப்பட்டது. இவற்றிற்கு உதாரணம்விரிப்பிற் பெருகும். நையாயிகநூலிற் கூறுந் தருக்கமும், மீமாஞ்சைநூலிற் கூறும் நியாயங்களும் எல்லாநூல்கட்கும் உபகாரமாமெனக் கொள்க. மீமாஞ்சை மதம் முடிந்தது.

## ஏகான்மவாதம்.

ஏகான்மவாதமாவது:—மாயாவாதமும், பாற்கரியவாதமும், கிரீடாப் பிரமவாதமும், சத்தப்பிரமவாதமுமென நான்குவகைப்படும்.

### மாயாவாதம்.

அவற்றுள், மாயாவாதமாவது:—சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பது பிரமம்; பரமார்த்தத்தில் அஃதொன்றே மெய்ப்பொருள்; ஏனையவெல்லாம் பிரமத்தின்விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினாற் காணப்படுவனவாகலிற் பொய். இங்ஙனந் தோன்றும் உலகத்திற்கு முதற்காரணமாகிய மாயை பிரமம்போலச் சத்துமன்றி முயற் கோடுபோல அசத்துமன்றி அநிருவசனமாயிருக்கும். அநிருவசனம் என்பது சொல்லொணாதது என்னும் பொருட்டு. இந்தமாயைக்கு வேறாகிய பிரமரூபமே யான் என வேதாந்தஞானத்தால் அறிவதே முத்தியென்பதாம்.

### பாற்கரியவாதம்.

பாற்கரியவாதமாவது:—முன்கூறப்பட்ட பிரமமே சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய்ப் பரிணமித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினாற் பந்தமாயிற்று. பரமார்த்தத்தில் ஒருபொருளே. வேதாந்த ஞானத்தான் உடம்பிற்கு வேறாகிய ஆன்மரூபம் விளங்கும். அதுவே பரப்பிரமம் என்றறிந்து அதன்கண் இலயித்தலே முத்தியென்பதாம்.

### கிரீடாப்பிரமவாதம்.

கிரீடாப்பிரமவாதமாவது:—முன்கூறப்பட்ட பிரமமே நான். யான் ஒருபடித்தன்றிப் பலவேறுவகைப்பட்ட விகாரப்பொருள்களோடுகூடிப் பலவாற்றான் விளையாடுகின்றேன் என்று இவ்வாறறிவதே முத்தியென்பதாம்.

### சத்தப்பிரமவாதம்.

சத்தப்பிரமவாதமாவது:—காரணமாகிய பரப்பிரமம் இறுதிக்காலத்திற் சத்தவடிவிற்றாயிருக்கும். அஃது அவிச்சையினாற் சடமுஞ் சித்துமாய உலகங்களாய் விரியும். முடிவின்கட் சத்தமாத்திரையே உள்ளது என்று இங்ஙனமறிவதே முத்தி யென்பதாம். இங்ஙனம் நால்வேறுவகைப்பட்ட ஏகான்மவாதநூல் செய்தவன் வியாதமுனிவன்.

### நிரீச்சுரசாங்கியமதம்.

இனிச், சாங்கியமதமாவது:—மூலப்பகுதி, நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப்பொருட்குங் காரணமாய் முக்குணங்களும் ஒப்பநின்ற அவதரமாய் அருவாய் உள்ளது. இஃது இருபத்துநாலாந் தத்துவம். இதன்கட்டோன்றுங் காரியம் புத்திமுதல் நிலமீறாக இருபத்துமூன்று தத்துவமுள. இத்தத்துவம் இருபத்துநான்கிற்கும் வேறாய் நித்தமாய் வியாபகமாய் அருவாய்ப் பலவாய் அறிவதுஞ் செய்வதுமின்றி அறிவுமாத்திரமாய் ஒன்றற்குக் காரணமாதலுங் காரியமாதலுமின்றிநிற்கும் ஆன்மாக்கள் இருபத்தைந்தாந் தத்துவமெனப்படும். இவ்விருபத்தைந்தாந் தத்துவமாகிய புருடன் முத்தியினும் பெத்தத்தும் ஒருதன்மையனேயாம். புருடனுக்கு மலினமென்பதில்லை. தாமரையிலைநீர்போல் ஒட்டற்று நிற்பன். அநாதியே புத்தியைச் சார்ந்த அவிச்சைவயத்தாற் பெத்தனெனப்பட்டு இன்பத்துன்பவுணர்வு தோன்றுகின்றது. புத்தியாவது மூலப்பகுதியின் பரிணாமம்; அதுவே மான் என்றும் அந்தக்கரணம் என்றுங் கூறப்படும். அது பொறிவழியான் ஞானமாய்ப் பரிணமித்து விடயத்திற் செல்லும். புருடன் செய்வானென்பதும் புத்தி அறியுமென்பதும் வேற்றுமையுணராமையான் என்பது. மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரவே அவிச்சை நீங்கும்; அதுவே முத்தி எனப்படும். ஆன்மாக்களுக்கு வேறாய் இறைவனொருவன் உண்டென்பது பொய் என்பதாம். இந்நூல் செய்தவன் கபிலமுனிவன். இதனுட் கூறுஞ் சற்காரியவாதம் சைவமுதலிய சற்காரியவாத நூல்கட்கெல்லாம் உபகாரமாம். இதனுட் கூறும் அத்தியாசவாதம் மாயாவாதத்துக்கு உபகாரமாம். சாங்கியமதம் முடிந்தது.

## யோகமதம்.

யோகமதமாவது:—நிலமுதற் புருடனீறாகிய இருபத்தைந்து தத்துவமும் பெத்தமுத்திகளும் நிரீச்சுரசாங்கியர் கூறியவாறேயாம். மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரும் விவேகவுணர்வுபோல எண்வகையுறுப்பிற்றாகிய யோகமும் முத்திக்கேதுவாம். இருபத்தாறாந் தத்துவம் இறைவனொருவனுளன். அவன், முற்றுணர்வுடையனாய்ச் சாத்திரங்களை அருளிச்செய்து புருடருக்கு ஞானநதை அறிவுறுப்பனாகலின், இவ்வான்மாக்களுக்கு வேறென்றுணரப்படும் என்பதாம். இந்நூல் செய்தவன் பதஞ்சலிமுனிவன். யோகமதம் முடிந்தது.

## பாஞ்சராத்திரமதம்.

இனிப், பாஞ்சராத்திரமதமாவது:—இருபத்துநாலாந் தத்துவமாகிய குணதத்துவத்தின்மேல் இருபத்தைந்தாந் தத்துவம் வாசுதேவனென்று ஒருவனுளன். அவனே பரம்பொருள். அவனிடத்தினின்றுங் கண்ணனும், அநிருத்தனும், மகரத்துவசனும், இரௌகிணேயனுமென நால்வர் உலகங்களைப் படைத்தற்பொருட்டுத் தோன்றினர். இந்த நால்வகை வியூகங்களாற் சடமுஞ் சித்துமாகிய எல்லாவுலகமும் படைக்கப்பட்டனவாகலான், எல்லாம் வாசுதேவன் பரிணாமமேயாம். இங்ஙனங்கூறும் பாஞ்சராத்திரத்தினன்றி வேதங்களின் உறுதிப்பயனுண்டாகாது; ஆதலாற் பாஞ்சராத்திர முறையே தீக்கைபெற்று வாசுதேவனைவழிபட்டு வாசுதேவனுருவில் இலயமாதலே முத்தி என்பதாம். இந்நூல்செய்தவன் வாசுதேவன் என்க. பாஞ்சராத்திரமதம் முடிந்தது. இவ்வாறு புறச்சமயமாறுங் கண்டுகொள்க.

# அகப்புறச்சமயம்.

## பாசுபதம்.

இனி, அகப்புறச்சமயமாறனுட் பாசுபதமாவது:—ஆன்மாக்கள், பலவாய் நித்தமாய் வியாபகமாய்க் காரியகாரணக் கூட்டரவாற் றோன்றும் ஞானத்தாற் றனித்தனி வேறாயுள்ளன. இவ்வான்மாக்களுக்கு ஆணவமலம் என்பதொன்றில்லை. மாயை கன்மம் என்றிரண்டாற் பந்தமுற்று இன்பத் துன்பங்களை அனுபவிக்கும். இவற்றின் உவர்ப்புத்தோன்றிச் சாத்திரமுறையானே தீக்கைபெற்றவன்பால் ஈசனுடைய ஞானம் போய்ப் பற்றும். அப்போது, குடும்பத்தின்பாரம் புத்திரர்பால் வைத்தொழித்துத் துறவறத்திற் செல்வார்போல, ஈசனுந் தன்னுடைய குணங்களை அவன்பாற் பற்றுவித்துத் தான் அதிகாரத்தினொழிவுபெற்றிருப்பன் என்பதாம்.

## மாவிரதம்.

மாவிரதமாவது:—மேற்கூறிப்போந்த இயல்பையுடைய ஆன்மாக்கள் அவ்வாறே பந்தமுற்றுச் சுகதுக்கங்களை அனுபவிக்கும். சாத்திரத்திற்கூறும் முறையே தீக்கைபெற்று எலும்புமாலையணிதன் முதலிய சரியைகளின் வழு

வாறொழுகினவர் முத்தராவார். முத்தருக்குச் சிவனோடு சமமாக எல்லாக் குணங்களும் உற்பத்தியாம் என்பதாம்.

## காபாலம்.

காபாலமாவது:—ஆன்மாக்களியல்பும் பந்தவியல்பும் மாவிரதர் கொண்டவாறேயாம். சாத்திரமுறையே தீக்கைபெற்றுப் பச்சைக்கொடி யொன்று கைக்கொண்டு நாடோறும் மனிதர்தலையோட்டில் ஐயமேற்றுண் பவர் முத்தராய்ச், சிவனுவேசித்தலால் எல்லாக்குணங்களும் பெற்றுச் சிவசமமாவர் என்பதாம்.

இம்மூவரும், முறையே சங்கிராந்தசமவாதியெனவும், உற்பத்திசம வாதியெனவும், ஆவேசசமவாதியெனவும் உணர்க. இம்மூன்றுமதமுஞ் செய்தார் முறையே மாயை வித்தை காலமென்னுந் தத்துவங்களின் வைகும் உருத்திரர்மூவரெனக் கொள்க.

## வாமம்.

இனி, வாமமாவது:—பாற்கரியன் கூறியவாறே சடமுஞ் சித்துமா கிய அனைத்துலகுஞ் சத்தியின் பரிணாமமே. வாமநூலில் விதித்த முறையே ஒழுகிச் சத்தியில் இலயித்தலே முத்தி என்பதாம். இந்நூல் செய்தார் சித்த புருடர். சத்திதத்துவத்தின் வைகும் ஓரான்மாவாற் செய்யப்பட்டது சுத்த சாத்தம் என்றறிக.

## வைரவம்.

இனி, வைரவமாவது:—பெரும்பாலும் வாமமதத்தோடொத்துச் சிறுபான்மை ஆசாரங்களான் வேறுபட்டு வயிரவனே பரம்பொருளெனக் கொண்டு வைரவபதத்திற் சேர்வதே முத்தி என்பதாம்.

## ஐக்கியவாதசைவம்.

இனி, ஐக்கியவாதசைவமாவது:— * "இன்மைமல மாயைகன்ம மென்றிரண்டே யிறைதா னிலங்குபல வுயிர்களுமுன் புரிந்தவிரு வினையின்—றன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனந் தந்திடுமிங் கிதனாலே யிரு பயனுஞ் சார்ந்து—கன்மமெலா நேராக நேராதன் மருவக் கடவுளரு ளாலெவையுங் கழித்திடுவ னதனாற்—பின்மலமா னவையணுகா பெரு கொளிமுன் புளதே பெற்றிடும்" என்பதாம். இவ்வாறு அகப்புறச்சமயமா றுங் கண்டுகொள்க. காளாமுகம் சாம்பவம் முதலியனவும் இவற்றின் பகுதியாய் அடங்கும்.

இனிப், பாடாணவாதமுதலிய அகச்சமயங்களாறன் கருத்துச் சங்கற்ப நிராகரணத்தில் விரித்தோதியவாற்றானறிக; ஈண்டும் வந்துழிவந்துழிக் காட்டுதும். ஈண்டுக் கூறாத சமயங்களும், கூறியவற்றின் பகுதியவாய் இவற் றுள்ளே அடங்கும். அஃதறிந்து அடக்கிக்கொள்க.

அவையடக்கம் முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.

* சிவப்பிரகாசம், பொது. உ௨.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொதுவதிகாரம்.

## பிரமாணவியல்.

### முதற்சூத்திரம்.

ஈண்டு வடமொழிச் சிவஞானபோதத்துட் கூறியவாறே பொது உண்மை என்று இரண்டதிகாரமாகப் பகுத்துக்கொண்டு, பிரமாணம் இலக்கணம் சாதனம் பயனென நான்குதிறத்தாற் பொருளியல்புரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், அவற்றுள் முப்பொருளின்வைத்து முதற்கட் பதியுண்மைக்குப் பிரமாணங் கூறும் முதற்சூத்திரத்துக்கு வார்த்திகமாகிய பொழிப்புரைப்பான் புகுந்து, சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச் செய்கின்றார்:—

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்

எனவரும்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு, என்பது சூத்திரமெனக்காட்டி, இனி அதன் கருத்துரைக்கின்றார்:—

என்பது சூத்திரம்; என்னுதலிற்றோவெனின், சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதனுதலிற்று

எனவரும்.

சங்காரம் ஐவகைப்படும், அவற்றுள் முதலாவது, * நிவிர்த்திகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; இரண்டாவது, பிரதிட்டாகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; மூன்றாவது, வித்தியாகலையிலடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; நான்காவது, சாந்திகலையி

* இவற்றினியல்பை இரண்டாஞ் சூத்திரம் மூன்றாம் அதிகரணத்திற் காண்க.

லடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; இறுதியது, சாந்தியதீதகலையி லடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்.

அவற்றுள், ஈண்டைக்கேற்புடையது இறுதிக்கண்ணதாகலின், ஈண்டுச் சங்காரகாரணன் என்றது சுத்தமாயாபுவனுந்தஞ் சங்கரிக்குஞ் சங்கார காரணனாகிய பரமசிவனே; அயன்மாலொடுங்கூட்டக் குணதத்துவத்தின்வைகிப் பிரகிருதிபுவனந்தஞ் சங்கரிக்குங் குணிருத்திரனையன்றென உணர்க. என்னை? அவன் பிரகிருதியின் மேற்பட்ட புவனங்கட்குச் சங்காரகாரண னன்மையானும், பரமசிவன் இலயம் போகம் அதிகாரமென்னும் மூன்றவத் தையினும் முறையே அருவம் அருவுருவம் உருவமென்னும் மூன்று திரு மேனிகொண்டு, சத்தன் உத்தியுத்தன் பிரவிருத்தனெனவும், சிவன் சதா சிவன் மகேசனெனவும் பெயர்பெற்றுநிற்பனென்றும், இங்ஙனந் தொழி லான் வேறுபட்டதன்றிப் பொருளான் வேறுபாடில்லையென்றும், பசுவர்க் கத்திற் பிரளயாகலரிற் பக்குவமுடையவன் சீகண்டருத்திரனென்றுஞ் சைவாகமங்களெல்லாம் ஓதுதலின், மகேசுரமூர்த்தியிறுவாயான திரு மேனியே பரமசிவனுக்குச் சுதந்திரவடிவம், ஏனையவை அன்னவல்ல வென் பது பெறப்படுதலானும் என்பது. இவ்வேறுபாடுணர்த்தற்கன்றே பொதுப் படச் சங்காரகாரணனை என்றொழியாது சங்காரகாரணனையுள்ள முதலையே என விதந்தோதியதூஉமென்க.

இவ்வேறுபாடுணராது மகாருத்திரனாகிய பரமசிவனைக் குணிருத்திர னாகவைத்தெண்ணுவோரை நோக்கி, * "நம்மவரவரே—மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணிவிண் ணுண்டுமண்மேற்—றேவரென் றேயிறு மாந் தென்ன பாவந் திரிதவரே" என வாதவூரடிகள் இரங்கிக் கூறிய திருவாக் கும் அறிக. இன்னும், † தேவரி லொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்—மூவராய் நின்ற தோரார்" எ-ம். ‡ தேவராயு மசுரராயுஞ் சித்தர் செழு மறைசேர்—நாவராயு நண்ணுபாரும் விண்ணெரி கானீரு—மேவராய விரைமலரோன் செங்கண்மா லீசனென்னு—மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே" எ-ம். § "வரியாய மலரானும் வையந் தன்னை—யுரி தாய வளந்தானு முள்ளூ தற்கங்—கரியானு மறியாத கள்ளின் மேயான்—பெரியானென் றறிவார்கள் பேசு வாரே" எ-ம். ¶ "மாவை யுரித்ததள் கொண் டங்க மணிந்தவனை வஞ்சர் மனத்திறையு நெஞ்சணு காதவனை—மூவரு ருத்தனதா மூல முதற்கருவை" எ-ம். o "படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை" எ-ம். ** "தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும் பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை—மூவர்கோ னாய்நின்ற முதல் வன்" எ-ம். †† "முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்—சிந்துரச்

* திருவாசகம், திருச்சதகம், ௪. † சிவஞானசித்தி, ௧-ம் சூத்திரம், ௪௧. ‡ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், திருமுதுகுன்றம், பழந்தக்கராகம், ௧. § மேற்படி, திருக்கள்ளில், ௯. ¶ சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம், திருக்கானப் பேர், ௭. o திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், திருப்பிரமபுரம், திரு வெழுகூற்றிருக்கை, ௪-ம் அடி. ** திருவாசகம், திருச்சதகம், ௯௦. †† மேற் படி குயிற்பத்து, ௫.

சேவடி யானே'' எ-ம். * "முந்திய முதனடு விறுதியு மானுய் மூவரு மறிகிலர்'' எ-ம். † "அரியாகிக் காப்பா னயனுய்ப் படைப்பா—னரனு'யழிப்பவனுந் தானே'' எ-ம். ‡ "வீரனயனரி......யாரு மறியா வகையெங்களீசர் பரிசுகளே'' எ-ம். வரும் திருவாக்குக்களானும் ஓர்ந்துணர்க. இதுவே சுருதி மிருதி புராணம் இதிகாசம் எல்லாவற்றிற்குங் கருத்தென்பது, சிவதத்துவவிவேகமுடையார் § "குணதீதன்'' என்னுஞ் சுலோகத்திற் கடாவிடைகளான் விரித்துக்காட்டியவாற்றான் அறிக.

இங்ஙனமாயினும், சிகண்டருத்திரன் அயன்மால்போலச் சகலரினன்றிப் பிரளயாகலரிற் பக்குவமுடையோனுய்க் கட்டுநீங்கி முத்திபெற்ற கடவுளாகலானும், ¶ பரமசிவனுக்குரிய எல்லாப் பெயர்களும் வடிவமுந் தொழிலும் பெற்றுடையவனுகலானும், சைவாகமங்களை அறிவுறுக்குங் குரவனுகலானும், அயன்மாலிருவர்க்கும் மேலாய்ச், சைவத்தினெய்திச் சமயதீக்கை பெற்றோரால் வழிபடப்படுங் கடவுளாயினுனென்க.

இங்ஙனங் கருத்துரைத்துக் கண்ணழித்துரைப்பான் புகுந்து ஈண்டு முதற்கண் உரைவகையாமாறு உணர்த்துகின்றார்:—

## இதன்பொழிப்பு உரைத்துக்கொள்க

எனவரும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொருள் X முன்னர்க் கண்ணழித்துரைக்கும் உரைபற்றி உரைத்துக்கொள்க என்றவாறு. எனவே, பொழிப்புரை இங்ஙனம் இருவகைப்படும். அவற்றுள், கண்ணழித்துரைக்கும் பொழிப்புரை மாத்திரையே யாம் ஈண்டுரைக்கின்றும். பிண்டமாகக்கொண்டுரைக்கும் பொழிப்புரை இதுபற்றி உணர்ந்துகோடல் எளிதாமாகலின், அஃது யாமுரைக்கின்றிலமென மாணுக்கர்க்கு அறிவுறுத்தவாறுயிற்று.

இங்ஙனம் பொழிப்புரை இருவகைப்படுமென்பது: ० "பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப்—பிண்ட மாகக் கொண்டுரைப் பதுவே'' எ-ம். ** "பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை—நாடிற் றிரிபில வாகுதல் பொழிப்பே'' எ-ம். ஓதியவாற்றானறிக.

* திருவாசகம், திருப்பள்ளியெழுச்சி, அ. † பதினொராந்திருமுறை, திருக்கைலாயஞானவுலா, கூ-ம் அடி. ‡ மேற்படி பொன்வண்ணத்தந்தாதி, கரு. § கங-ம் சுலோகம். ¶ இது, சிவபுராணத்தில் சங்காரருத்திர மான்மியங் கூறும்வழி, ஸர்வஜ்ஞத்வாதிகஞ்ஸர்வம் ஸம்ஸாரீஜாநாயச । ஸநாதநோ ஹ்யநாதிச் ஸ்வயமேவ ஸ்வதஸ்ஸதா । ஸதாஶிவஸ்ய யந்நாம ஸதாஶிவ ஸ்வாமிதா । தத்ஸர்வம் ப்ராப்தவாந் விஷ்ணோ சக்திமான் பரமேஶ்வர: ॥ தஸ்யைவ காரணத்வேந வ்யவஹாரஸ்ய ததா ஜாயதே பரமேஶ: । என வருதல் காண்க. ० திவாகரம், ஒலிபற்றியபெயர்த்தொகுதி, சூத்திரம், கூ0. ** தொல்காப்பியத்துச் சிறப்புப்பாயிரம் நச்சினர்க்கினியருரை மேற்கோள்; பக்கம், கஉ.

X முன்னர்க்கண்ணழித் துரைக்குமுறை என்றது "ஈண்டு ஏவல் திருத்தியென்று.... உள்ளது எ-ம், [illegible] சங்காரருத்திரனாய்.... இவ்வ எ-ம், [illegible] எனும் வருவன.

இஃது, ஏனைச் சூத்திரங்களினும் உய்த்துரைத்தற்பொருட்டு முதற் கண்வைக்கப்பட்டது. பிண்டப்பொருளெனினும் பதப்பொருளெனினும் ஒக்கும்.

உரைத்துக்கோள்க என்புழிக் 'கொள்' என்பது, தற்பொருட்டுப் பொருட்கண் வந்த விகுதியாய்ப் பகுதியோடியைதற்குரிய துச்சாரியை பெற்று உரைத்துக்கொள் என நின்றவழி, அதுவும் பகுதித்தன்மைப்பட்டு மேல்வரும் வியங்கோள்விகுதி ஏற்றுத் தற்பொருட்டுப்பொருள் இனிது விளங்குதற்பொருட்டு உரைக்க என்னும் பொருளாய்நின்றது. இது சூத்திரவிருத்தியுள் உரைத்தாம். * ஆண்டுக் காண்க.

இங்ஙனம் ஆசிரியர் ஆணைதந்தமையிற் கண்ணழித்துரைபற்றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும்:—

அவனவளது....என்மனர் புலவர் என்பது ஆண் பெண் அலி என்றாற் போலும் உலகத்தொகுதி, தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழி லுடைமையான், ஒருவனாற்றோற்றப்பட்டு நின்று உள்ளதேயாம். அற்றேல், அஃது யாவனினுளதாமெனின், தானொடுங்குதற்கு நிலைக்களமான கடவுளி னின்றும் உளதாம். ஒடுங்கியவாறே ஒழியாது மீள உளதாவது எதனா லெனின், சகசமான ஆணவமலந்தீர்ந்தொடுங்காமையான் உளதாம். இங் ஙனமாகலின், சங்காரத்தொழிலைச் செய்யுங் கடவுளே முதற்கடவுளென்று கூறுவர் அறிவுடையோர் என்றவாறு.

எனும் என்பது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சமாய், இவ் வாறு என்னும் பொருள்குறித்து நின்றது. வடமொழிச்சூத்திரத்தில் † "ஆதி" என்றதும் அப்பொருட்டு. அவை என்பது தொகுதி; அஃறிணைப் பன்மைச்சுட்டுப்பெயரெனக் கொள்ளின், உள எனப் பிரித்துப் பயனிலையாக் கித், தாம் என்பது அசையாகக் கொள்க. வினைமை-வினையுடைமை. உடை மை-உடைத்தாந்தன்மை.

அவ்வக்காலத்தன்றி மூவினையும் ஒருகாலத்துப்படுதல் கண்டிலம் என் பாரை நோக்கித் தன்மையின்வைத்து ஓதினர்.

தோற்றிய எனப் பிறவினை வாய்பாட்டானோதுதலின், அதற்குரிய வினைமுதல் வருவித்துரைக்கப்பட்டது. தோற்றிய என்புழிப் படுசொற் றொக்குநின்றது; ‡ "இல்வாழ்வான் என்பான்" என்புழிப்போல. திதிப் படும் உலகத்தைத் திதி எனவும், அந்தத்தைச் செய்யுங் கடவுளை அந்தம் எனவும் உபசரித்தார்.

காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மைகூற வேண்டுதலின், தோற்றிய திதியே யொடுங்கி யுள்தாம் என உலகின்மேல் வைத்துக் கூறினர். சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து

* தொல்காப்பியச்சூத்திரவிருத்தி, சக, சஉ-ம் பக்கம். † ஸ்ரீவாஜஞவாம லகாதிக்வாக | ‡ திருக்குறள், ரு-ம் அதி, இல்வாழ்க்கை, க.

இவ்வுலகம் என்றதும் இக்கருத்தேபற்றி என்க. * "தோற்றுவானொருவனுளன்; அவன் ஒடுக்கி உளதாக்குவன்" எனக் கடவுளின்மேல்வைத்தோதிய வடமொழிச் சூத்திரத்திற்குந் தாற்பரியம் இதுவேயெனக்கொள்க.

ஏகாரம் தேற்றம். ஒடுங்கி என்பது பெயர். ஒடுங்கி என்புழி இன்னுருபும், மலத்து என்புழி ஆனுருபுந்தொக்குநின்றன. ஆம் என்பதனை முன்னுங் கூட்டுக. என்மனார் என்பது செய்யுண்முடிபாயதோர் ஆரீற்று முற்றுச்சொல். மன் எதிர்காலவிடைநிலை. அது † "உயர்திணையென்மனார் மக்கட்சுட்டே" என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையருரையானும் அறிக.

ஈண்டுப் புலவர் என்றது அளவையினியல்புணர்ந்தோரை.

இதனுள், அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின் என்பது ஓரதிகரணம்; தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம் என்பது ஓரதிகரணம்; அந்த மாதி என்பது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க. இம்மூன்றும், ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வருதலின், ஒருசூத்திரத்தாற் கூறினர். வருஞ் சூத்திரங்களினும் இவ்வாறே கண்டுகொள்க.

தன்னாற் கூறப்படும் ‡ பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனைமறுத்துக்கூறுஞ் சித்தாந்தத்துணிபும், இயைபும் என்னும் இவற்றிற்கு நிலைக்களம் ஈண்டு அதிகரணம் எனப்படும். இவற்றுள் இயைபு, நூலியைபும் அதிகாரவியைபும் ஓத்தியைபும் பாதவியைபும் அதிகரணவியைபுமென ஐவகைப்படும். அவையெல்லாம் ஆண்டாண்டுக் காட்டுதும்.

---

## முதலதிகரணம்.

இம்முதலதிகரணத்தாற் கூறப்படும் பொருளாவது, மேற் கருத்தாவினுண்மை சாதித்தற்பொருட்டு உலகிற்கு முத்தொழிலுண்மை சாதித்தலாம்.

அதற்கு அவை உளவோ இலவோ என்று இரட்டுறத்தோன்றும் ஐயப்பாடு.

ஈண்டு மீமாஞ்சைநூலாரும் உலகாயதநூலாரும் உலகந் தோன்றுதலும் அழிதலுமின்றி என்றுமிவ்வாறே நிலைபெறுவதாகலின், உலகம் காரியப்பொருளாதலில்லையெனவும், எனவே இதுகொண்டு கருத்தாவினுண்மை சாதித்தல் "முயல் கோடுடைத்து; ஆன்வயிற்றுப்பிறத்தலான்" என்பதனோடு ஒக்குமெனவுங் கூறுவர்.

அவருள் மீமாஞ்சைநூலார் கூறுமாறுவது: உலகந்தோன்றிநின்றிழியுமென்பது காட்சியளவையாற் பெறப்படுவதுமன்று; அவிநாபாவமாகிய ஏதுக்காணாமையின், வழியளவையாற்பெறப்படுவதுமன்று; வேதத்துட்கூறப்

---

* ஸ்ருஷ்ட்வா ஸ ஹ்ருத்வா ஸ்ருஜதி|| † தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம். க. ‡ இவற்றை வடநூலார் முறையே விடயம், சம்சயம், பூர்வபக்கம், சித்தாந்தநிர்ணயம், சங்கதி என்பர்; அத்ர ஸ்ரீகண்டபாடியம் முதலதிகரண ஆரம்பத்தினுங் காண்க.

படுதலாற் பெறுதுமெனின், வேதத்தில் “நடாத்துக,” “நிறுவுக,” “செய்க” என்றாற்போலத் தொழிற்படுத்தும் வாக்கியங்களே சொற்பொருளுணரும் வேட்கையாளர்க்கு அங்ஙனம் ஏவுவோர் சொற்கேட்டு இயற்றுவோர் செய்யுந்தொழிலானே அவ்வச்சொற்பொருளுணரநிற்றலிற் பிரமாணமாம்; அவ்வாறன்றிப் பொருளியல்புகூறும் வாக்கியங்களாற் சொற்பொருளுணரப்படாமையின் அவை பிரமாணமாகாவாயினும், தொழிற்படுத்தும் வாக்கியங்கட்கு யாதானுமொருவாற்றான் உபகாரமாதலுடைமையான் உபசரித்துப் பிரமாணமெனக் கொள்ளப்படுதலான், அதுபற்றி உரையளவையாற் பெறப்படுமென்பதும் இன்று; ஆகலான், உலகிற்கு முத்தொழிலுண்மை பெறப்படாது என்பதாம்.

இவ்வாறு ஆசங்கைநிகழ்ந்தவழி, அதனை நீக்குதற்குக் கண்ணழித்து எடுத்துக்கொண்ட மேற்கோள்:—

ஈண்டு உளதாய் ஒருவனொருத்தி யொன்றென்று சுட்டப் பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்றது

எனவரும்.

ஈண்டு என்றது இவ்வதிகரணம் மூன்றனுள்வைத்து முதற்கண் என்பதாம்.

அவயவப் பகுப்புடைமையான் முத்தொழிலுடைமை துணியப்படுமென்றுணர்த்துவார் ஒருவ னொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் எனச் சூத்திரத்தி னோதியவாறே *உடம்பொடுபுணர்த்து ஓதினார். எனவே, “உலகந் தோன்றி நின்று அழியும், அவனவளது வென்று இவ்வாறு பகுக்கப்படும் அவயவப்பகுப்புடைமையின், ஆடைபோலும்” என்னும் அனுமானத்தானே மூவினையுடைமை துணியப்படுமென்பதாயிற்று.

சொற்பொருளுணர்ச்சி, தொழிற்படுத்துஞ் சொன்மாத்திரையானே துணியப்படுமென்னும் வரையறையின்றித், தாய் தந்தை முதலியோர் இச்சொற்கு இதுபொருள் இச்சொற்கு இதுபொருளெனத் தெரிவித்தலானும், நிகண்டுநூன்முதலியவற்றானுந் துணியப்படுமாகலின், அதுபற்றிப் பொருளியல்புகூறும் வாக்கியங்கள் பிரமாணமல்லவென்றல் பொருந்தாமையின், உரையளவையே பிரமாணமென்றோதவுமையும்; அமையுமாயினும், அவர் மதமேபற்றி அவரை மறுத்தற்பொருட்டு மூவினையுடைமையும் வழியளவையாற் சாதித்தார்.

ஈண்டு அவயவமென்றது, ஆடையின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படும் நூல்கள்போல ஒரு பொருளின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படுந் தகுதியுடையவற்றை. நிலம் மலை கடல் முதலியவற்றின் ஏகதேசமாகிய மண் சிலை நீர் முதலியன தொடுதல் போழ்தல் முகத்தல் முதலிய தொழில்களானே தனித்தனி பிரித்தற்குரியவாமாறு காண்க. சில ஆணவ

* உடம்பொடுபுணர்த்தலென்பது ஒருத்தி: அது பிறிதொருகருத்தையும் அடையொடு புணர்த்தோதல்; இதனை வடநூலார் சாபிப்பிராய விசேடணமென்பர்.

மலத்தின் ஏகதேசத்தை நீக்கிக் கிரியையை எழுப்புமெனவும், பரமசிவன் சுத்தமாயையின் ஏகதேசத்தைக் கலக்கிச் சுத்ததத்துவங்களைத் தோற்றுவிப்பனெனவும், அநந்ததேவன் அசுத்தமாயையின் ஏகதேசத்தைக் கலக்கிக் கலைமுதலியவற்றைத் தோற்றுவிப்பனெனவும் வழங்குவதுபற்றி அவயவம் எனப்படா; வேறுவேறு பிரித்தற்குரியனவன்மையின் இவற்றை நீக்குதற்கன்றே ஒருபொருளின் ஏகதேசமென்றொழியாது வேறுவேறு பிரித்தற்குரியன அவயவம் என்றதூஉமென்க.

இங்ஙனமாயினும், தார்க்கிகர்மதத்திற் பரமாணுக்கள் அவயவமுடையனவல்லவாகலான் அவை தோன்றி நின்று அழியும் என்பது பெறப்படாமையின், அவயவமுடைமை காரியப்பாட்டிற்கு ஏதுவென்றல் யாண்டுஞ் செல்லாதாலெனின்,—அற்றன்று; அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் இவ்வாறு சடமுமாய்ப் பலவுமாய் உரைக்கப்படுவனவெல்லாந் தோன்றிநின்றழியுமென்பது கருத்தாகக்கொள்க.

* "இன்னுழை கதிரின் றுன்னணு"க்களே பரமாணுக்களாம். அவற்றை மும்மையணுவெனக்கொண்டு அவற்றினும் நுண்ணியவாய்க் கட்புலனாகாதன உள என்றற்குப் பிரமாணமின்மையின், பரமாணுக்களும் அவயவமுடையனவேயாம். அல்லவெனக் கொள்ளினும், அவை சடமுமாய்ப் பலவுமாகலாற் றோன்றி நின்று அழிவனவேயாம் என்க. ஆணவமலஞ் சடமாயினும் பலவன்று; ஆன்மாக்கள் பலவாயினுஞ் சடமல்ல; ஆகலான் அவற்றின்கட் செல்லாமை அறிக.

இங்ஙனமாயினும், மாயை சுத்தமாயை அசுத்தமாயையென இரண்டாய்ச் சடமுமாகலான் அவை காரியப்பொருளாவான் செல்லும். அவை தனித்தனி ஒன்றேயாமெனிற் குடமுதலியனவுந் தனித்தனி ஒன்றேயாகலாற் பலவாதல் யாண்டையது என்பதாய் முடியுமாலோவெனின்,—அற்றன்று; அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு சுட்டியறியப்படுவனவெல்லாந் தோன்றி நின்று அழியும் என்பதே சித்தாந்த முடிபெனக்கொள்க. இது விளங்குதற்பொருட்டன்றே ஆண் பெண் அலி என்றுதல், ஒருவன் ஒருத்தி ஒன்று என்றுதல் ஓதாது, அவனவளது எனச் சுட்டுப்பெயர்களான் ஓதியதூஉமென்க. இதற்கிதுவே பொருளாதல் உணர்த்துதற்கன்றே *ஒருவனொருத்தியொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென உரைசெய்து எடுத்துக்கொண்டதூஉமென்க. ** "அசத்தாஞ்சுட்டியுணர்பொருளான வெல்லாம்" † "அறிவினு லறிந்த யாவு மசத்தாதலறிதி" என்னுந் திருவாக்குக்களானும் இதுவே இதற்குச் சிறந்த ஏதுவாதல் கண்டுகொள்க.

அற்றேல், ‡ "அவனேதானே" எனவும், ¶ "அவனிவனுய் நின்றமுறை" எனவும், § "அவனிவனனது" எனவும், ο "அது நானனே

* திருவாசகம், திருவண்டப்பகுதி. ரு-ம் அடி. ** சிவஞானசித்தி, ௯-ம் சூ. ௨.
† சிவப்பிரகாசம், உண்மை. ரு. ‡ இந்நூல். ௧௰-ம் சூ. ¶ சிவஞானசித்தி, ௧௰-ம் சூ. ௧. § திருவுந்தியார், ௪௰. ο சிவஞானசித்தி, ௯-ம் சூ. ௭.

னென்று பாவிக்கச் சொல்லுவது'' எனவுங் கூறுமாற்றால் நித்தப்பொருள் களுஞ் சுட்டியறியப்படுமாலோவெனின்,—அற்றன்று; அவை அங்ஙனம் பொதுமையிற் சுட்டியறியப்படுமாயினும் அநுபவநிலையிற் சுட்டி அறியப் படாவென்பது, * "உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே" எனவும், † "அறிவிறந்தங் கறிந்திடீர்'' எனவும், ‡ "பாவனை யிறந்து நின்று-பாவிக்கப்படுவ தாகும்'' எனவும், § "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்பும்—கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா'' எனவும், ¶ "ஏதுக்க ளாலு மெடுத்தமொழி யாலு மிக்குச்—சோதிக்க வேண்டா'' எனவும் ஓதுவனவற்றான் அறிக.

பிரபஞ்சம் அவ்வாறன்றிச் சிறப்பியல்புபற்றி அநுபவமாய் உண்மை யாற் சுட்டப்படும் என்னுங் கருத்தானன்றே, ஒருவன் ஒருத்தி ஒன்றேன்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென்றொழியாது, உளதாய் என விசேடித்ததூஉ மென்க. நித்தப்பொருள் சுட்டியறியப்படாதென்பது ஆறாஞ்சூத்திரத்திற் காண்க.

இங்ஙனம் வழியளவையானே உலகந் தோன்றி நின்று அழியுமெனச் சாதித்து மீமாஞ்சைநூலாரை மறுத்தவழி, உலகாயதநூலார் காட்சியளவை ஒன்றே பிரமாணமன்றி வழியளவை முதலியன பிரமாணமல்லவாகலான் அவற்றாற் சாதிப்பன பொருள்படாவாம் என்பர். வழியளவையின்றாயின், மேல்வரும் பயனைக் குறித்து முயற்சி செய்வாரில்லையாதல் வேண்டும். o "இம்மையின் முயற்சி யாலே யிருநிதி யீட்'' டப்படும் என்பதே அவர் கொள்கையாகலான் வழியளவையும், அதுபற்றி உரையளவையும் பிரமாண மெனக் காட்டியவழி, அவரும் அதனானே மறுக்கப்படுவாராயினும், அவர் மதமேபற்றி அவரைமறுத்தற்பொருட்டுத், தோன்றியழிதல் கண்கூடாகக் காட்டுவார், வேறுமோர் ஏதுக் கூறுகின்றார்:—

தோற்றமுமீறும் உள்ளதன்பாலே கிடத்தலின்

எனவரும்.

ஈண்டு உள்ளது என்றது திதியினை. கிடத்தல்-அதனோடு உடனிகழ்தல். அஃது எங்ஙனமெனின்,—ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டுவது உதாரணம் என்றறிக.

வார்த்திகப் பொழிப்பாவது உரைச்செய்யுளானும் பாச்செய்யுளானுஞ் செய்யப்படுமென்னும் வடமொழிமதம்பற்றிக், கருத்துரையும் மேற்கோ ளும் ஏதுவும் உரைச்செய்யுளான் உரைத்து, உதாரணம் பாச்செய்யுளான் உரைக்கின்றார்:—

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ

* திருவாசகம், கோயிறதிருப்பதிகம், ௩. † சிவஞானசித்தி, கூ-ம் சூ. ௩. ‡ மேற்படி கூ-ம் சூ. எ. § திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், பொது, திருப்பாசுரம், ச. ¶ மேற்படி திருப்பாசுரம், ரு. o சிவஞானசித்தி, உ-ம் சூத்திரம், எ.

வொன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து

எனவரும்.

ஈறும் முதலுந் துணைக்காரணமாகக் கொண்டே திதி நிகழும். அற்றாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் கண்டிலமாலெனின்,—ஒவ்வொரு கால விசேடத்திற் சாதிபற்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிவதனைக் காண்டலால், என்றாயினும் அதற்குரிய காலம்வருமென்று உலகத்திற்கும் அங்ஙனமாதலுண்டென்று அக்காட்சிபற்றி அறியப்படும் என்பதாம்.

பூதாதி-அன்மொழித்தொகை. பூதாதிக்கு என நான்கனுருபு விரித்துரைக்க. ஆகும் என்பது முற்றுவினை. பெற்றிமை என்றது ஈண்டுச் சாதியை. ஓகாரம் - எதிர்மறை. ஒன்றொன்றினென்பது, * "ஒன்றொன்றாப் பார்த்துணர்வதுள்ளமே" என்புழிப்போல அடுக்குமொழி. கண்டும் என்னும் உம்மை சிறப்பு. பெற்றிமையின் ஒன்றொன்றிற்றோன்றி யுளதா யிறுதலாவது, † "பயில்வித் தெல்லாங்-காரிடமதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனில்" என்றதுபற்றி உணர்ந்துகொள்க. இங்ஙனஞ் ‡ சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சமென்னும இரண்டனுட் பொருட்பிரபஞ்சந் தோன்றி நின்று அழியுமென்பது ஏதுக்களாற் சாதிக்கப்பட்டது.

இனி இரட்டுறமொழிதலால், அவனவள் என்பதனாற் பெறப்படும் உயர்திணையும், அது என்பதனாற் பெறப்படும் அஃறிணையுமென்னும் இரு திணைப்பகுதித்தாய சொற்பிரபஞ்சம், இங்ஙனம் அவயவப்பகுப்புடைமையானும், சடமுமாய்ப் பலவுமாகலானும், சுட்டியறியப்படுதலானும், திதியின்பால் ஏனையிரண்டுங் காணப்படுதலானும் தோன்றிநின்றழிதலுடைத்து எனவும் பொருளுரைத்துக்கொள்க.

அற்றேல், வேதம் நித்தியம் என்னுஞ் சுருதிகளோடு முரணும்பிறவெனின்,—முரணாது; நித்தனாகிய பரமசிவனாற் செய்யப்பட்டமையானும், இறுதிக்காலத்துப் பரமசிவனிடத் தொடுங்கிய வேதம் படைப்புக்காலத்து முன்போலவே தோன்றுதலானும் நித்தமென்று உபசரித்துக் கூறப்படுமாகலின். சிவாகமங்களை நித்தமென்பதும் இக்கருத்தேபற்றி என்க. அங்ஙனமல்லாக்கால், § வேதம் "பரமசிவனாற் செய்யப்பட்டது" என்னுஞ் சுருதிக

---

* இந்நூல், கக-ம் சூ, க-ம் அதி. † சிவஞானசித்தி, க-ம் சூ, கூ. ‡ சொற்பிரபஞ்சமாவது - மந்திரம் பதம் வன்னம். பொருட்பிரபஞ்சமாவது - புவனம் தத்துவம் கலை. § இதனை, பிருகதாரணியகம், அத்-உ, பிராம்மணம் ச. அஸ்ய மஹதோ பூதஸ்ய நிஶ்வஸிதமேதத்யத்ருக்வேதோ யஜுர்வேத³ ஸாமவேதோऽதர்வாங்கிரஸ இதிஹாஸ: புராணம் வித்³யா உபநிஷத³: ‖ சுவேதாசுவதரம், அத், சூ, யோ ப்³ரஹ்மாணம் வித³தா⁴தி பூர்வம் யோவை வேதா³ம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை ‖ எனவருஞ் சுருதிகளான் அறிக.

ளோடும், *"அட்டாதச வித்தைக்கும் முதற்கருத்தாவாகிய சூலபாணி" என்றற்றொடக்கத்துப் புராணவசனங்களோடும், ஈண்டுக் கூறும் வழியளவையோடும் முரணுமாறறிக.

† வித்தை பதினெட்டாவன:—இருக்குமுதலிய வேதம் நான்கும், சிக்கை கற்பசூத்திரம் வியாகரணம் நிருத்தம் சந்தோவிசிதி சோதிடமென்னும் அங்கமாறும், புராணம் நியாயநூல் மீமாஞ்சை மிருதியென்னும் உபாங்கம் நான்கும், ஆயுள்வேதம் வில்வேதம் காந்தருவவேதம் அருத்தநூலென்னும் இருக்குமுதலியவற்றிற்கு உபவேதம் நான்குமென இவை.

இவற்றுள், வேதம் நான்கும் பிரமகாண்டமும், பிரமஞானத்திற்கு நிமித்தமான கருமகாண்டமும் உணர்த்துவனவாம். சிவாகமங்களும் பிரமகாண்டமாயடங்குமென்க.

வேதங்களை எடுத்தல் படுத்தல் முதலிய இசைவேறுபாட்டான் உச்சரிக்குமாறு உணர்த்துவது சிக்கை.

வேதங்களிற் கூறுங் கருமங்களை அனுட்டிக்குமுறைமை உணர்த்துவது ‡ கற்பசூத்திரம்.

வேதங்களின் எழுத்துச்சொற்பொருளியல்பு உணர்த்துவது வியாகரணம்.

வேதங்களின் சொற்பொருள் உணர்விப்பது நிருத்தம்.

வேதமந்திரங்களிற் காயத்திரி முதலிய சந்தங்களின் பெயரும் அவற்றிற்கு எழுத்து இனைத்தென்றலும் உணர்த்துவது சந்தோவிசிதி.

வேதத்திற் சொல்லப்படுங் கருமங்கள் செய்தற்குரிய காலவிசேடங்களை உணர்த்துவது சோதிடம். இங்ஙனமாகலின் இவையாறும் வேதத்திற்கு அங்கமெனப்பட்டன.

பரமசிவன் உலகத்தைப் படைக்குமாறு முதலாயின கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்து விரித்துணர்த்துவது புராணம். இதிகாசமும் ஈண்டு அடங்கும்.

வேதப்பொருளை நிச்சயித்தற்கு அநுகூலமான பிரமாணமுதலியவற்றை உணர்த்துவது நியாயநூல்.

---

* சைவபுராணம் வாயுசங்கிதை, பூர்வபாகம், முதலாம் அத்தியாயம், அஷ்டாதஶாநாம் வித்யாநாம் ஶ்ரோதஸாம் ஶிவபத்திநாம் | ஶூலிகர்த்தா கவிஸ்ஸாக்ஷாத் ஶூலபாணி ரிதிஶ்ருதி: | † மேற்படி அத்தியாயம், அங்காநி வேதாஶ்சத்வாரோ மீமாம்ஸா ந்யாயவிஸ்தர: | புராணம் தர்மஶாஸ்த்ரம் ச வித்யாஹ்யேதாஶ்சதுர்தஶ | ஆயுர்வேதோ தநுர்வேதோ காந்தர்வஶ்சேத்யநுக்ரமாத் | அர்த்தஶாஸ்த்ரம் பரம் தஸ்மாத் வித்யா ஹ்யஷ்டாதஶ ஸ்ம்ருதா: || ‡ ஆசுவலாயநீயம், போதாயநீயம் முதலியன.

வேதப்பொருளின் தாற்பரியம் உணர்தற்கு அநுகூலமான நியாயங் களை ஆராய்ச்சி செய்து உணர்த்துவது மீமாஞ்சை. அது பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை என்றிருவகைப்படும். அவற்றுள், முன்னையது மீமாஞ்சை யெனவும், வேதமெனவும், பின்னையது வேதாந்தமெனவும் வழங்கப்படும்.

அவ்வவ்வருணங்கட்கும் நிலைக்கும் உரிய தருமங்களை உணர்த்துவது மிருதிநூல். புராணமுதலிய நான்கும் வேதத்திற்கு உபாங்கம் எனப்படும்.

எல்லாம் அநுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலை பெறச் செய்வது ஆயுள்வேதம்.

பகைவரான் நலிவின்றி உலகங் காத்தற்கு வேண்டப்படும் படைக்கலம் பயிறலை உணர்த்துவது வில்வேதம்.

எல்லாக்கடவுளர்க்கும் உவகைவரச்செய்யும் இசை முதலியவற்றை உணர்விப்பது காந்தருவவேதம்.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏதுவாகிய பொருள்களை ஈட்டும் உபாய முணர்விப்பது அருத்தநூல். இவை நான்கும் உபவேதமெனப்படுமென் றுணர்க.

முதலதிகரண முடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

முதலதிகரணத்திற் பிரபஞ்சம் நித்தியமெனக்கொண்ட மீமாஞ்சை நூலாரையும் உலகாயதநூலாரையும் மறுத்துச், சொல்லும் பொருளு மென்று இருவகைப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்க கருத்தாவினுண்மை சாதித்தற்கோதிய ஏதுவை ஏதுக்களாற் சாதித்தவழி, ஏது உண்டு; சாத்தியம் இல்லையெனப் பிணங்கும் புத்தர் முதலியோரை மறுத்துப் பொதுவகையானுஞ் சிறப்புவகையானுங் கருத்தாவுண்மை சாதித் தற்கு எழுந்தது இரண்டாம் அதிகரணம். அதிகரணவியைபும் இதனானே விளங்கும்.

இனி என்றது அதிகரணவியைபுணர்த்துதற்பொருட்டு. முன்வரும் அதிகரணங்களினும் இவ்வாறே கண்டுகொள்க.

### இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை யென்றது

எனவரும்.

சூத்திரத்தின் ஒடுங்கி என உலகவினைமேல்வைத்தோதினமையின், அதற்கேற்ப ஈண்டும் ஒடுக்கின என்னுது ஒடுங்கின என உலகவினைமேல் வைத்துரைத்தார். சங்காரகருத்தாவைச் சங்காரம் என்று உபசரித்தார். அல்லதில்லை என எதிர்மறைமுகத்தாற் கூறினர், ஏனைக்கடவுளரிற் செல் லாமை அறிவுறுத்தற்பொருட்டு.

அற்றேல், உலகம் ஒரிடத் தொடுங்கி நின்று மீள உளதாமென்றது என்னை? உள்ளதாயின் உண்டாகவேண்டுவதில்லையாகலான், இல்லது உண்டாம்; உள்ளது அழியும்; இல்லவை தோன்றுங்காற் சந்தானமாய்க் கணந்தோறுந் தோன்றியழிவனவற்றுள், முற்கணத்தினின்றழியும் பொருள் பிற்கணத்திற் றோன்றும் பொருட்குச் சார்பாகலின், அவை அவ்வச்சார்பிலே வித்தின் கேட்டின் அங்குரம்போற் றோன்றும்; இதற்கொரு கருத்தா வேண்டுவதில்லையெனப் புத்தர் கூறுவர். அதனை மறுத்து மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

இல்லதற்குத் தோற்றமின்மையின்

எனவரும்.

அற்றேல், உள்ளதற்கு உண்டாகவேண்டுவதென்னை யென்றற்றொடக்கத்து ஆசங்கைகளை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும்

எனவரும்.

உள்ளதற்கு உண்டாகவேண்டுவதென்னையென்னும் ஆசங்கையை நீக்குதற்கு இலயித்தது இலயித்த தன்னில் ஆம் என்றும், அற்றேல், இலயித்தது இலயித்தவாறே ஒழியாது மீள உண்டாக வேண்டா, வேண்டுமாயின் முன் இலயித்தலின்றி நிலைபெறவே அமையுமென்னும் ஆசங்கையை நீக்குதற்கு மலத்தால் என்னும், நசித்தலேயன்றி ஒடுங்கினின்று மீள உண்டாமென்றற்குப் பிரமாணம் என்னையென்பாரை நோக்கி இலயித்தவா றுளதாவேண்டும் என்றுங் கூறினர். இலயித்தவாறன்றி உளதாகாதென்னும் நியமமில்லையாயின், நெற் கழுகாய் நீளாது நெல்லாயே நீளுதற்கு ஏதுவென்னையென்னுந் தருக்கமுகத்தானே அஃது அறியப்படுமென்பதாம்.

## சற்காரியவாதம்.

உற்பத்திக்கு முன்னுங் காரியம் உள்ளதென்று கொள்ளாக்கால், முயலின்கட் கோடுதோன்றாதவாறுபோல, மண்முதலியவற்றிற் குடமுதலியன தோன்றாதொழிதல் வேண்டும்.

அற்றேல், முன்னுங் காரியம் உள்ளதாயிற் காரகமுயற்சிகளாற் பயனென்னையெனின்,—கூவன் முதலியவற்றின் முயற்சிகளாற் புனல் வெளிப்படுமாறுபோலக் காரியம் வெளிப்படுதல் பயனென்க. அற்றேல், ஈரிடத்தினும் ஒப்பக் காரியம் உள்ளனவாயிற் கூவன்முதலியவற்றின் மண்டொடுதன்முதலிய முயற்சிகளாற் புனல் வெளிப்பட்டதென்னும் உணர்வுநிகழ்ச்சிபோல, மண்முதலியவற்றினுங் குடம் வெளிப்பட்டதென்னும் உணர்வு நிகழ்தல்வேண்டும். அங்ஙனமன்றி மண்ணிற் குடம் உண்டாயிற்றென்றும், கூவலிற் புனல் வெளிப்பட்டதென்றும் வெவ்வேறாய் உணர்வு நிகழ்தல்

பொருந்தாதாலெனின்,—அற்றன்று; முன்னர்த் தூலவடிவிற்றாய்நின்று பின் வெளிப்பட்டதன்கண் வெளிப்பட்டதென்னும் உணர்வும், முன்னர்ச் சூக்கும்வடிவிற்றாய்நின்று பின்னர்த் தூலவடிவிற்றாய் வெளிப்பட்டதன்கண் உண்டாயிற்றென்னும் உணர்வும் நிகழ்தல் பொருந்துமென்க.

இன்னும், காரணமாய்நின்ற அவத்தையானன்றி வேற்றுப்பொருளாற் றடைப்பட்டு வெளிப்பட்டதன்கண் வெளிப்பட்டதென்னும் உணர்வு நிகழும். காரணமாய்நின்ற அவத்தைமாத்திரையானே தடைப்பட்டுநின்று வெளிப்பட்டதன்கண் உண்டாயிற்றென்னும் உணர்வு நிகழும். கூவன்முதலியவற்றிற் புனல், அவத்தையன்றி வேற்றுப்பொருளாகிய மண்ணே தடைசெய்துநிற்றலின், ஆண்டு வெளிப்பட்டதென்று வழங்கப்படும். அல்லுழிக் குடமுதலியவற்றை மண்முதலியனவாய் நின்ற சூக்குமாவத்தையே தடைசெய்து நிற்றலின், ஆண்டுத் தோன்றினவென்று வழங்கப்படுமென்பது. குயவன்முதலியோர்முயற்சிக்கு முன்னும் மண்முதலியவற்றின்கட் குடமுதலியன உளவெனக்கொள்ளின் அப்பொழுது காணப்படுகவென்பதூஉம் இதனானே மறுக்கப்பட்டது; மண்முதலியனவாய்நின்ற அவத்தையானே மறைபட்டு நிற்குமெனக்கோடலின்.

அற்றேல், கூவன்முதலியவற்றிற் புனன்முதலியனவுண்மை பிரமாணத்தான் அறியப்படுதலின், ஆண்டு வெளிப்படாமைக்குக் காரணம் வேற்றுப்பொருளாற் றடைப்பட்டுநிற்றலென்பது பெறுதும். ஈண்டு அத்தன்மைத்தாகிய பிரமாணமின்மையின், மண்முதலியனவாய்நின்ற காரணவத்தையே தடைசெய்து நிற்குமென்பது பொருந்தாது; அவை இல்லையாகலாற் காணப்படவில்லையென்பதே பொருத்தமுடைத்தெனின்,—அற்றன்று; "குடம் மண்ணின்கண் முன்னும் உள்ளது; ஆண்டுத் தோன்றுதலின், யாது யாண்டில்லை அஃது ஆண்டுத்தோன்றாது; வெண்மணலிற் றைலமும், முயலின்சென்னியிற் கோடும்போலும்" என்னும் அநுமானப் பிரமாணத்தானே முன்னுங் குடமுதலியன உண்மை ஒருதலையாற் றுணியப்படுதலின், அது வெளிப்படாமைக்குக் காரணம், மண்முதலிய காரணவத்தையாற் றடைப்பட்டு நிற்றலேயென்பது பெறுதுமாகலின்.

அற்றேல், இங்ஙனஞ் சற்காரியவாதத்தின் வெளிப்படுதற்கு முன்னும் உளதெனக்கோடலின், வேறுவேறு நிகழுங் காரகமுயற்சிகள் பயனிலவாய் முடியும்பிறவெனின்,—முடியா; சூக்குமவடிவினவாயுள்ளவை தூலரூபமாய் வெளிப்படுதற்பொருட்டு அவ்வவற்றிற்குரிய காரணமுயற்சிகள் ஒருதலையான் வேண்டப்படுமாகலின். அல்லதூஉம், காரணத்தோடு இயைபுடைத்தாயன்றிக் காரியம் பிறவாமையின், முன்னுங் காரியம் ஒருதலையான் உள்ளதென்று உணரப்படும். காரணத்தோடியையபு வேண்டாவாயின் எல்லாக்காரணத்தும் எல்லாக்காரியமுந் தோன்றாமைக்கு ஏதுவென்னை யென்க. அவ்வச் சத்தியுடையவற்றிற் றோன்றுமெனிற் சத்தியுங் காரியத்தோடு இயைபுடைத்தாயன்றித் தோற்றுவியாது; தோற்றுவிக்குமெனின்,

முற்கூறியகுற்றம் ஒழியாமை அறிக. * இது ஞானமிர்தநூலினுங் கூறப்பட்டது:—

† "தந்து முதல காரக மைந்துறக்
கோட லாடை யின்றெனி னுடை
யுளதேற் காரக மென்னை யென்ன
வளையாக் காரக மசத்துற் பத்திக்
குண்டே யாக வாயிடை யாவினுந்
தண்டா தியாருந் தாம்வேண் டியமன்
கண்டோ ராயின் மன்ற கண்டில
மன்ன தாயி னதினஃ துண்டென
வென்னை நியம மிதினுள திவ்வலி
யென்னிற் சித்த சாதன மன்றே
வன்றெனிற் காரகக் குழுவும் வென்றி
தாரா தோடு மோட வேரிசை
யெல்லா முடையு முடைய நல்லோய்
சொல்லை யாகு நிற்க வல்லே
யுற்பா திக்கும் வலியுண் டில்லைச்
சத்தி ரூப மாகிக் கரும
மென்றிடின் விசேட நின்ற தொன்றிடைக்
கண்டில மொன்றும் வென்றியோ டொன்றக்
காரக மதற்குப் பேரிசை நியம
மாகத் தோற்று விக்குஞ் சீரிசை
வலியந் நுவய வெதிரே கத்து
மொலிகெழு முரூடி யானுங் கலிகொள
வறிய லாகு மவ்வெளிப் படுத
லொலிகெழு தோற்ற மதனுற் கலிகெழு
தந்துமுதல காரகம் வந்தி லாமையிற்
புடமடி மறைத்த தடமலிந் தகன்ற
வேம முதல் தாமினி தகற்றத்
தூமடி விளங்கு மியாங்கு மாமரு
கடமிக மறைத்த படங்கட மகற்ற
விடமிக விளங்கி யாங்கு வடிவுற
வெல்லாக் காரக முறினு முயற்கோ
டில்ல தில்ல தாகலின் வல்லே
கலைமுதன் மாயையி னிவண
நிலைமலி புடைய நினையுங் காலே."

இதனனே இல்லதுமுள்ளதுமல்லாதபொருள் தோன்றுமென்னுஞ் சூனியவாதிகளையும், இல்லதுமுள்ளது மானபொருள் தோன்றுமென்னும் அநேகாந்தவாதிகளையும் மறுத்தவாறுயிற்றென்க.

* இங்ஙனங்கூறிய சற்காரியவாதஞ் சிவாக்கிரபாடியத்தினுங் காண்க; (இரண்டாஞ் சூத்திரம், உகக-ம் பக்கம்.) † ஞானமிர்தம், கரு.

இங்ஙனம் இல்லதற்குத் தோற்றமின்மையின் என்னும் ஏதுவானே புத்தர்முதலியோரை மறுத்துச் சற்காரியவாதத்தான் ஒடுங்கின சங்காரத்தி னல்லது உற்பத்தியில்லை என்னும் மேற்கோளைச் சாதித்தவழிப், பாஞ்சராத்திரிகள் முதற்காரணத்தோடு இயைபுடைத்தாய்க் காரியந்தோன்றி அதன்கண் ஒடுங்குமென்பதே பொருத்தமுடைத்தாகலின், உலகிற்கு முதற்காரணம் மூலப்பகுதியாகலான் மூலப்பகுதி வாசுதேவனே யாகலின், வாசுதேவன்பானின்றுந் தோன்றிவிரிந்த உலகம் ஆண்டு ஒடுங்குமென்பதே பொருத்தமுடைத்து; பரமசிவன் நிமித்தகாரணமாத்திரையேயன்றி முதற்காரணமாமென நும்மனோர் கொள்ளாமையின், நிமித்தகாரணத்தில் ஒடுங்குமென்றல் பொருந்தாதென்பர். அதனை மறுத்து மேற்கோளிற்போந்த * குறிப்பேதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு

எனவரும்.

சித்தாகிய வாசுதேவனைச் சடமாகிய மூலப்பகுதியென்று நீ கொள்ளினும், மூலப்பகுதிக்குக் கீழுள்ள ஏகதேச மாத்திரையேயன்றி அதன்மேலுள்ள புவனங்களும் உள்ப்பட முற்றும் ஆண்டு ஒடுங்காதென்பார் அழியாதவை எனவும், முற்றும் ஒடுங்குமிடம் இதுவென்பார் அழிவ தத்திதியு மாதியுமா மங்கு எனவுங் கூறினர்.

† "செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபு—மையப்பா டின்றி ‡ யமையுமா—மைதீரொற்—றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு—குன்றுமே லொற்றளபுங் கொள்" என்பது போலவே இவ்வெண்பாவினை இருதொடராக்கி வேறுவைத்துரைத்து இங்ஙனம் இருவகை யதிகரணப் பொருள்தருமாறு கண்டுகொள்க. ஈண்டு இலயித்த எனவும், தன்னிலில எனவும், யித்ததாம எனவும், லத்தா எனவும் வகையுளியாக வைத்துச் சீர்செய்து வெண்டளை சிதையாது தளையறுத்துக்கொள்க. அன்றி இதனை வெண்டுறைப்பாற் படுத்தினும் இழுக்காது. இலயித்த தன்னிலில யித்தது என்புழி, இலயித்ததென்பது ஏதுப்பொருண்மையுணரநின்ற பெயர். இலயித்ததெனச் சற்காரியவாதங்கூறவே இலயித்தவவத்தையின் அவ்வக்காரிய சத்திகளெல்லாமுடைய சமூகமாய்ச் சூக்குமமாய் நிற்பதொன்றுண்டு; அதுவே முதற்காரணமெனப்படும் எனப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையதுண்மையும் பெறப்பட்டது. அவை என்றது மாயாகாரியத் தொகுதியை. அஃறிணைப்பன்மைப் பெயரெனக் கொள்ளின் அழியாது அழிவது என்னும் ஒருமைகளோடு இயையாமை அறிக. ஆமங்கு என்பது பெயரெச்சமுடிபு. இரணியகருப்ப மதத்

* குறிப்பேது—ஆண்டு ஒடுங்குதலின், என்பது. † இது "நீட்டம்வேண்டின்" என்னும் எழுத்ததிகாரச் சூத்திரத்து நச்சினார்க்கினியர் உரைமேற்கோள். ‡ அணையுமாமென்பதும் பாடம்.

செய்யுட்கள் என்பது முதல் அமையுமாம் என்றுவரை ஒரு தொடர். மைதீரொற்—றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு—குன்றுமே லொற்றளபுங் கொள் என்பது ஒருதொடர்.

தையும் மறுத்தற்பொருட்டுப் படைப்புக்கடவுளையும் உடன்கூறினர்; கூறவே, இவரோடு ஒருங்கெண்ணப்படுஞ் சங்காரக்கடவுளும் இவரோடு தோன்றியழிவனெனப் பாசுபதர் முதலியோரையும் இதனானே மறுத்தவா றாயிற்று. * இம்மூவரையுந் தோற்றுவிக்குங் காரணக்கடவுள் மகாசங்கார காரணனாகிய பரமசிவனென்பது அதர்வசிகையுபநிடத முதலியவற்றுட் காண்க.

நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகட்கும் அதிதெய்வமான பிரமன்முதலிய ஐவருள், பிரகிருதி மாயைகாறும் வியாபித்துநிற்கும் பிரதிட்டாகலைக்கு மாயோன் அதிதெய்வமாகலின் அப்பிரகிருதிமாயைக்கு அபிமானதேவதை யென்னும் ஒற்றுமைபற்றிப் பிரகிருதிமாயையே வாசுதேவனெனவும், அதன்காரியம் அவன்வடிவெனவும், உபசரித்துக் கூறப்படும். அவ்வாறன் றிச் சித்தாகிய வாசுதேவனைச் சடமாகிய பிரகிருதியென்றற்குப் பிரமாண மின்மையானும், ஒற்றுமைபற்றிக் கொள்ளினும் பிரகிருதிக்கு மேலுந் தத்துவங்களுண்மை † முன்னர்க் காட்டுதுமாகலின், அவை ஆண்டொடுங் குதல் கூடாமையானும், திதிக்கடவுளே முழுவதுஞ் சங்கரிக்குமாயின் திதிக்கடவுள் சங்காரக்கடவுள் படைப்புக்கடவுள் என்னும் பகுப்பேலாமை யானும், சங்காரக்கடவுள் முழுவதுஞ் சங்கரிக்குங்காற் சிலரையொழித்துச் சங்கரிப்பனென்பது பொருந்தாமையானும், சங்காரக்கடவுள் முழுவதுஞ் சங்கரித்தவழித் தானொருவனே நின்றமையிற் புனருற்பத்தி அவன்க ணின்றே ஆகற்பாலதென்பது பொருத்தமுடைமையானும், பிரமன் முத லிய மூவரையும், ‡ சாக்கிரமூர்த்தி சொப்பனமூர்த்தி சுழுத்திமூர்த்தியெனக் கூறிப், § பரமசிவனைத் துரியமூர்த்தியென உபநிடதங்களெல்லாம் மூவரின் வேறாகவைத்துக் கூறுதலானும், இவ்வாறு ஏனையோரைக் கூறாமையானும், சங்காரகாரணனுள்ள முதல்வனேமுதல்வன்; உலகமுழுவதும் அவன்பா லொடுங்கி அவனிடத்தினின்றே தோன்றுமென்பது போந்தவாறு அறிக. நிமித்தகாரணனாகிய முதல்வன் உலகிற்கு முதற்காரணம் அல்லனாயினும் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய்நிற்றலின் உலகம் ஆண்டொடுங்கி

* ப்ரஹ்மவிஷ்ணுருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹபூதைர்ந காரணம் காரணாநாம் த்யாதா காரணம் த்யேய: ஸர்வைஸ்வர்யஸம்பந்ந: ஸர்வேஸ்வர: ஸம்புராகாஸமத்யே ॥ இது அதர்வசிகை வசனம். † இரண்டாஞ்சூத்திரம், இரண்டாம் அதிகரணம். ‡ ஜாக்ரதி ப்ரஹ்மா ஸ்வப்நே விஷ்ணு: ஸுஷுப்தௌ ருத்ரஸ்துரீயமக்ஷரம் ॥ எனப் பிரம்மோபநிஷத்தினும், பரப்பிரம்மோபநிஷத்தினும்; § சதுர்த்தம் சதுஷ்டயம் ப்ரஹ்மவிஷ்ணுருத்ராதீதமேகம் ஸாஸ்வதம் தேவம் ஸிவம் | எனப் பஸ்மஜாபாலோபநிஷத்தினும், ஸர்வஸ்யாத்யமதீதம் துரீயம் ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம் | ப்ரஹ்மவிஷ்ண்வாதிபி:ஸேவ்யம் ஸர்வேஷாம் ஜநகம் பரம் | ஓம்ஸாந்தம் பரமம் வித்யாத் ॥ எனப் பஞ்சப் பிரம்மோபநிஷத்தினும் வருதல்காண்க.

ஆண்டுநின்று தோன்றுதல் அமையுமென்பது வித்துண்டாமூலம் என வருகின்ற வெண்பாவிற் காட்டுதுமாகலின், அதுபற்றி ஆசங்கையின்மை உணர்க. இன்னும்,

"உயர்கா யத்திரிக் குரிப்பொரு ளாகலிற்
றசரதன் மதலை தாபித் தேத்தலிற்
கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப்
புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலிற்
றனது விழியுட ளொராயிரங் கமலப்
புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலி
னுங்கவற் கிரங்கி யாழியீந் தருடலி
னங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலி
னமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலிற்
றென்றிசைத் தலைவனைச் செருத்துயிர் பருகலி
னவுணர் முப்புர மழியவில் வாங்கலிற்
றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலிற்
றனஞ்செயன் றனக்குத் தன்படை வழங்கலின்
மாணுட மடங்கல் வலிதபக் கோறலின்
மாயோன் மகடூஉ வாகிய காலைத்
தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலி
னூழ்கடல் வரைப்பி னுன்றோ ரனேக
ரன்புமீ தூர வருச்சனை யாற்றலி
னுன்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலி
னையிரு பிறப்பினு மரியருச் சித்தலி
னிருவரு மன்னமு மேனமு மாகி
யடிமுடி தேட வழற்பிழம் பாகலிற்
பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையிற்
கங்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பிற்
பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்
முப்புர மிறுப்புழி முகுந்தப் புத்தேள்
மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலி
னயன்சிர மாலை யளவில வணிதலின்
ஞானமும் வீடும் பேணினர்க் குதவலிற்
பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவு
ளும்பர்க ளெவர்க்கு முயர்ந்தோ
னென்பது தெளிபு வியல்புணர்ந் தோரே" என்றிங்ஙனம்

அரதத்தாசாரியர்கூறிய இவ்விருபத்திரண்டு ஏதுக்களானும் பரமசிவனே பரம்பொருளென்பது தெளியப்படுதலின், அவனே முழுவதும் ஒடுக்கி உளதாக்குஞ் சருவகாரணனென்பது உணர்ந்துகொள்க. இவற்றை நாத்திகம்பேசி மறுத்துப் பாஞ்சராத்திரிகள் செய்த கிரந்தத்திற்கு மூலவசனம் இல்லையென்றொழிக.

இன்னும் பாஞ்சராத்திரிகள் * சிவபுராணந் தாமதபுராணமாகலின், சாத்துவிக இராசத புராணமாகிய இரண்டு புராணங்களோடும் முரணியவழிப் பிரமாணமாகாவெனவும்; நான்முகனுடைய ஒவ்வொருநாள் கற்பமெனப் பெயர்பெறும், அவற்றுள், ஒருகற்பத்திற் பிரமன் சாத்துவிககுணத்தான் மேற்பட்டிருப்பன், ஒருகற்பத்தில் இராசதகுணத்தான் மேற்பட்டிருப்பன், ஒருகற்பத்தில் தாமதகுணத்தான் மேற்பட்டிருப்பன், ஒருகற்பத்தின் முக்குணங்களின் † சங்கீரணத்தான் மேற்பட்டிருப்பன் ஆகலின் அவ்வக் கற்பங்களின் அவ்வக்குணங்களையுடைய கடவுளர்புராணம் அவனால் விரித்துக் கூறப்பட்டனவாகலின், அவற்றுள், தாமதகுணத்தினையுடைய சிவன் பெருமைகூறிய புராணந் தாமதபுராணமென்பது துணியப்படுமெனவும்; இதற்கு மூலவசனம் மச்சபுராணத்திற் காணப்பட்டதெனவும் பிதற்றுவர். அது பகுத்தறிவில்லார் கூற்றேயாமென மறுக்க; என்னை? அவ்வக்கற்பங்களின் அவ்வக்குணங்களான் மேற்பட்டிருப்பன் நான்முகக்கடவுளென மச்சபுராணத்திற் கூறுமையின். ஒவ்வொருகற்பங்களின் ஒவ்வொருகுணம் மேற்பட்டுநிகழும் என்றதுமாத்திரையேபற்றி, நான்முகனும் அவ்வக் குணங்களான் மேற்பட்டிருப்பனென்றல் பொருந்தாமையின், கார் கூதிர் பனிமுதலியவற்றுள் ஒவ்வொன்று ஒவ்வொருகாலத்தின் மிக்குநிகழ்தலும், அதுபற்றி அவ்வக்காலங்களும் அவ்வப்பெயர் பெறுதலும், கார் கூதிர் முதலியனபற்றிச் செழிப்பனவாகிய பூவும் புள்ளும் முதலாயின அவ்வக் காலங்களின் மிக்குத்தோன்றுதலும், அதுபற்றிக் காப்பியங்களின் அவற்றை வருணித்தலும்போலச், சாத்துவிகமுதலிய குணங்களின் ஒவ்வொன்று ஒவ்வொருகற்பத்தின் மிக்குநிகழ்தலும், அதுபற்றி அவ்வக்கற்பங்களும் அவ்வப்பெயர்பெறுதலும், அவ்வக்கற்பங்களின் அவ்வக்குணமுடைய கடவுளர் மேன்மை மிக்குத்தோன்றுதலும், அங்ஙனம் மிக்குத்தோன்றுதல்பற்றி அவ்வவர் புராணங்களின் அவ்வவர்மேன்மை கூறுதலும் பொருந்துமாறுணர்க.

அற்றேல், இங்ஙனங் கற்பங்களைப் பகுத்தோதிய மச்சபுராண வசனத்திற்குப் பயன் வேறின்மையின், அது பயனில்கூற்றாய் முடியுமாலோ வெனின்,—அற்றன்று; புராணங்கள் ஒன்றற்கொன்று மாறுபடக்கூறுதலின், இவற்றுள் யாது பிரமாணம், யாது அப்பிரமாணமென்னும் ஆசங்கையை நீக்கி, அவ்வக்குணம் மிக்குடைய கற்பங்களின் அவ்வக்குணமூர்த்திகளின் மேன்மை மிக்குத்தோன்றுதல்பற்றி அவ்வப்புராணங்கள் அவ்வாறு கூறுதலிற் கற்பவேறுபாடுபற்றி எல்லாப்புராணங்களும் பிரமாணமேயாமென்று உணர்த்துதற்கெழுந்ததாகலின், அதுவே பயனென்க.

அற்றேல், மச்சபுராணத்திற் கற்பங்களின் இயல்புவகுத்தோதிய வசனம்பற்றிக் கோடற்கு ஒரியைபில்லையாயினும், தாமதகுணமுடைய உருத்திரன் மேன்மை கூறுதல்பற்றிப் பிரமனுந் தாமதகுணமுடையன் என்னுமோவெனின்,—என்னும்; அங்ஙனங் கொள்வுழித், தாமதகுணமுடைய

* இதுமுதற் பாஞ்சராத்திரமதமும் மறுப்புமாகக் கூறப்படும் விஷயங்களுட் பெரும்பாலன சிவாக்கிரபாடியத்தினுங்காண்க. (முதற்சூத்திரம், க௨கூ-ம் பக்கமுதல் க௪0-ம் பக்கம் வரை.) † சங்கீரணம் - கலப்பு.

அரக்கர் பெருமை ஆண்டாண்டுக் கூறுதல்பற்றி வியாசர்முதலியோரையுந் தாமதகுணமுடையரென வேண்டுதலின். இதுவுங் குணமூர்த்திகளை நோக்கிக் கூறியது. துரியமூர்த்தியாகிய பரமசிவன் முக்குணங்கடந்தவனுகலின் அவ்விறைவன்பெருமை எல்லாக்கற்பத்தும் ஒப்பநிகழ்தலின், ஆண்டு ஆசங்கையின்மை உணர்க.

இனிச், சங்காரவுருத்திரனுஞ் சங்கரித்தற்றெழிலின்பொருட்டுத் தாமத குணத்தை மேற்கொண்டதல்லது இயல்பாகவுடையனல்லன் என்க. தாமதகுணத்தின் காரியமாகிய துயில் மயக்கம் வஞ்சனைமுதலியன அவன் கண் இன்மையின். மாயோனுக்குச் சாத்துவிககுணங் கூறியது காத்தற் றெழிலின் மாத்திரைக்கேயெனக் கொள்க. இன்னோரன்னவை யெல்லாம் "பிரமதருக்கத்தவம்" என்னும் வடநூலுள் விரித்துக் காட்டியவாற்றான் அறிக. இதனானே வைணவம் நாரதீயம் கருடம் பாகவதம் பாற்மம் வராக மென்னும் ஆறும் சாத்துவிகபுராணமெனவும், பிரமம் பிரமாண்டம் பிரம கைவர்த்தம் மார்க்கண்டேயம் பவுடிகம் வாமனமென்னும் ஆறும் இராசத புராணமெனவும், இலிங்கம் சைவம் ஆக்கினேயம் காந்தம் கூர்மம் மச்ச மென்னும் ஆறும் தாமதபுராணமெனவும் பகுத்துக்கூறுதல் பொருந்தாமை அறிக. என்னை? புராணங்களெல்லாம் பரமசிவன் அருளிச்செய்யப் பெற்று, நான்முகனுல் ஒருங்கே விரித்துக்கூறப்பட்டனவன்றி, அவ்வக்கற்பங்களின் அவ்வப்புராணங் கூறப்பட்டனவென்றற்கு ஒத்திலாமையின், அவ்வக் குணமூர்த்திகளின் மேன்மைகூறும் புராணங்களை அவ்வக்கற்பங்களின் விளக்குவித்தான் என்பதுமாத்திரையேபற்றி அங்ஙனங் கோடல் பொருந் தாமையின்.

இனிச், சத்துவகுணமுதலியன உடைய கடவுளரைக் கூறுதல்பற்றி அங்ஙனம் பகுத்தாமெனின்,—அதனான் எமக்கு வருவதோர் இழுக்கின்று; எம்முடையகடவுள் முக்குணங்களுங் கடந்தவனென்பது * வேதஞ் சிவா கமம் புராணம் இதிகாசம் எல்லாவற்றினும் முழங்குதலானென்க.

அல்லதூஉம், அவர் சாத்துவிகபுராணமெனக் கொண்ட கருடபுரா ணத்திற் சிவரகசியத்தினும், பாற்மபுராணத்திற் சிவகீதையினும், இன்னும் பலவிடங்களினும் பரமசிவன் பெருமையை விரித்தெடுத்து இலிங்கபுராண முதலியவற்றினும் அதிகமாகக் கூறுதலின், இங்ஙனம் பகுத்ததனானும் அவர்கருத்து நிரம்பாமை அறிக.

இனி, உண்மையான் நோக்குவார்க்குச் சிவபுராணங்களெல்லாம் வேதத்திற்கு உபப்பிருங்கணமாய் வேதப்பொருளையே விரித்து எடுத்தோது தலிற் சிறந்த பிரமாணமாமெனவும், ஏனைய புராணங்கள் அங்ஙனம் அல் லாமையின் இவற்றோடு முரணியவழி, முரணுதவாறு உய்த்துணர்ந்து பொருள்கொள்ளப்படுமெனவும், அவற்றுள், ஒரோரிடங்களின் மாயோ

* ஸாக்ஷீ செதா கேவலோ நிர்குணஶ்ச | என்பது சுவேதாசுவதரம்.
ஸாத்த்வம் நிர்குணம் ஶாந்தம் தத்வாதீதம் நிரஞ்ஜநம் | சுவிஹாவ்யஂ ஸர்வஜ்ஞம்ஸர்வஶ்ரீநிஶாந்தம் || என்பது சிவாகமம்.

னுக்கும் பிரமனுக்குந் தாழ்வாக உருத்திரனைக் கூறுவனவெல்லாங் காத்தற்றொழிலும் படைத்தற்றொழிலும் இனிது நடாத்துதற்பொருட்டுச் சங்கார வுருத்திரன்கூறாய் அவர்பாற் றோன்றிய நீலலோகிதன்முதலிய அவதார மூர்த்திகளை அவர்க்குப் புதல்வரென்னும் உபசாரமேபற்றிக் கூறியனவாமெனவும் ஓர்ந்துணர்க.

பாரதத்தினும் ஒரோரிடங்களின் அங்ஙனங் கூறுவனவற்றையும் இவ்வாறே பொருளுரைத்துக்கொள்க; அல்லுழியெல்லாம் பாரதஞ் சிவன் பெருமையே விளக்குதலின். அது "பாரததாற்பரியசங்கிரக"த்துட்காண்க.

இங்ஙனமன்றி, "நாராயணன் நான்முகனைப் படைத்தான் நான்முகன் உருத்திரனைப் படைத்தான்" என்பது முக்கியப்பொருளென்பாரை, "நாராயணன்பானின்றும் பிரமன்றோன்றினன் நாராயணன்பானின்றும் உருத்திரன் றோன்றினன்" என்புழி, உருத்திரனென்றது யாரையெனவும், "நாராயணன்பானின்றும் உருத்திரன்றோன்றினன்" என்பது முக்கியப் பொருளெனக் கொள்வாரை "நான்முகன் உருத்திரனைப் படைத்தான்" என்புழி, உருத்திரனென்றது யாரையெனவுங்கடாவி மறுக்க.

அதர்வசிகைமுதலிய உபநிடதங்களிற் கூறும் பரமசிவன் "மும்மூர்த்திகளையும் படைத்தான்" என்றதுபோலக் குணமூர்த்திகளை இவ்வாறு கூறுது, தம்மையொழித்தொழிந்த இருவரையும் படைத்தாரெனவே கூறுதலாற் புராணங்கட்கும் அதுவே பொருளெனக் கொள்க.

"அயனை முன்படைத் திடுமொரு கற்பத் தரியை முன்படைத் திடுமொரு கற்பத்—துயரு ருத்திரன் றனைமுனம் படைப்ப னொருகற்ப மற்றொரு கற்பந் தன்னின்—முயனு மூவரை யொருங்குடன் படைப்பன் முன்பிறந்தவர் மற்றிரு வரையுஞ்—செயலி னற்படைக் கவுமருள் புரிவன் சிவபிரானெனி லேற்றமிங் கெவனோ" எனச் சிவதத்துவ விவேகத்திற் கூறியதனையும் ஈண்டு விரித்துரைத்துக்கொள்க.

பாரதத்தில் *"அளவில் பேரொளிப் பகவனு †முருத்திரற் கச்சுதனன்மா" வாமெனச் சிவனுக்கு விண்டு ஆன்மாவென்றது அபேதமென்னும் பொருள்பட உபசரித்துக்கூறியது. சரீரமென்னும் பொருட்டு எனினும் அமையும். இவ்வாறன்றி, ஆண்டு ஆன்மாவென்றது அந்தரியாமியென்னும்பொருட்டு எனக்கொள்ளின், "அளவில் பேரொளிப்பகவன்" என்று உயர்த்திக் கூறியதோடு முரணுமாறறிக. பாரதத்தின் மோக்கதருமத்தின், "ஆதலா லெனக்கான் மாவே யாமுருத் திரனை முன்னர்க்—காதலா லருச்சிக் கின்றேன் யான்" எனக் கண்ணன்கூறும் வாக்கியத்திற் சிவனைத் தனக்கு ஆன்மாவென்றது அந்தரியாமியென்னும் பொருட்டேயாம்; தன்னாற் பூசிக்கப்படுங் கடவுளாதற்கு உரியபொருள் அதுவேயாகலானென்க.

இனி, ‡ வேதத்துட் கருமகாண்டத்தின் "விண்டு பரமன், அங்கிஅவமன், அவ்விருவர்க்கும் இடையே யெல்லாத் தேவரும்" என்றது ஆண்டுச்

* விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ: | † சிவனுக்கு எனவும்பாடம். ‡ இது சிவாக்கிரபாடியம், முதற்சூத்திரம், கஙஎ-ம் பக்கத்திற்காண்க.

செய்வதொரு வேள்வி விசேடத்தின் அவிர்ப்பாக மேற்குமுறையின் "விண்டு முந்தினவன் அங்கிபிந்தினவன் அவ்விருவர்க்கும் இடையே ஏனைத்தேவரெல்லாம்" என்னும் பொருட்டாகலின், ஆண்டுப் "பரமம் அவமம்" என்பன "ஆதி அந்தம்" எனவே பொருள்படுமாறு காண்க. இவ்வாறன்றி ஆண்டுப் "பரமன்" என்றதற்கு விண்டு எல்லாக் கடவுளர்க்கும் மேற்பட்டவனென்றும், "அங்கி அவமன்" என்றதற்கு அங்கி எல்லாக் கடவுளர்க்குங் கீழ்ப்பட்டவனென்றும் பொருள்கொள்ளின், * "அங்கி கடவுளர்க்குள் மேற்பட்டவன்" என்று ஆண்டாண்டுக் கூறுஞ் சுருதி மிருதி புராணங்கள் பலவற்றோடும் முரணுமென்றொழிக. இவ்வாறு முன்னொடுபின் முரணுமைப் பொருள்கொள்ள அறியாது "விண்டு ஆன்மா" என்றதுபற்றியும், "விண்டு பரமன்" என்றதுபற்றியும் விண்டுவுக்கு முதன்மைகோடல் பொருந்தாமை யறிக. இன்னும் வருவனவெல்லாம் இவ்வாறே ஓர்ந்துணர்க.

பாஞ்சராத்திரிகள் இன்னுங் கூறுமாறு:—அரசன் உலாப்போதுங் காலைத் தொகுதி தொகுதியாகச் செல்வாருள் அரசனுவான் இவனென்பது ஆடை அணி யானை குதிரைமுதலிய வைபவம்பற்றித் துணியப்படாதாம்; என்னை? அவை அமைச்சர் படைத்தலைவர் முதலியோர்க்கும் பொது; அல்லதூஉம், அரசன் உவகையுற்றுழி அமைச்சர் முதலாயினோர்க்குத் தன்னினும் மிக்கவரிசைகள் அளித்தலுமுண்டு ஆகலின். அதுபோல, வேதத்துட் கூறப்படுங் கடவுளருட் பரப்பிரமப்பொருளாவான் இவனென்பது ஏனைப் பெருமைகளாற் றுணியப்படாதாம். மற்றுக் கிரீடங்கவித்து வெண்கொற்றக் குடைநிழற்கீழ்வருத லொன்றேபற்றி அரசனுவான் இவனென்பது துணியப்படுமாறுபோலக், காரணவாக்கியங்களுட் படைப்பு முதலியவற்றிற்குக் காரணமாகக் கூறப்படுதலொன்றேபற்றி அவனே பரப்பிரமமென்பது துணியப்படும். காரணப்பொருளாவான் நாராயணனேயென்பது சுபாலமுதலிய உபநிடதங்களிற் காணப்படும்.

அற்றேல், சிலவுபநிடதங்களிற் காணப்படுங் காரணப்பொருள் "சத்து" என்றும், "பிரமம்" என்றும், "ஆன்மா" என்றும், இங்ஙனம் பொதுவகையானும்; "இரணியகருப்பன்" என்றும், "சிவன்" என்றும், "உருத்திரன்" என்றும் இங்ஙனஞ் சிறப்புவகையானும் வெவ்வேறு பெயரான் எடுத்தோதவும் படுமாலோவெனின்,—அற்றன்று; சுபாலமுதலியவற்றுட் காரணப்பொருள் நாராயணனென்றது உலகந்தோன்றுமுறைமை எடுத்துக்கொண்டவழிக் கூறப்பட்டதாகலின் அதுவே உண்மைப்பொருளெனவும், "சத்து" "பிரமம்" "ஆன்மா" என்றற்றொடக்கத்துப் பொதுப்பெயர்கள் † சாக பசு நியாயம்பற்றி நாராயணனையே உணர்த்திநிற்கும்; இரணியகருப்பன் முதலிய சிறப்புப்பெயர்களுங் காரணப்பெயராய் நாராயணனையே உணர்த்திநிற்கும்; அங்ஙனமன்றி இடுகுறிப்பெயர் காரணத்தை விலக்கு

---

* அக்நிர்முகம் ப்ரதமோ தேவதாநாம் || † சாகபசு நியாயமாவது, முன்னர்ப் பசுவெனப் பொதுப்பெயராற் கூறிப் பின்னர்ச் சாகபசுவெனச் சிறப்புப் பெயரடையாற் பொதுநீக்கிக் கூறுதலான் முன்னர்க் கூறிய பசுவுஞ் சாகமேயெனப் பொருள்கொள்ள நிற்பதோர் முறைமையாம்; சாகம் - வெள்ளாடு.

மெனக் கொள்ளினும் ஆகுபெயராய்த்தான், மாயோனுடைய ஆயிரம் பெயர்க்குட் சிவன்முதலிய நாமங்களும் எடுத்தோதுதலின், இடுகுறியாய்த் தான், நாராயணனையே உணர்த்திநிற்குமெனவுங் கொள்ளப்படுமென்க.

அற்றேல், நாராயணன்முதலிய மாயோன்பெயர்களுங் காரணக்குறி யாய்ச் சிவனையே உணர்த்திநிற்குமாகலின், காரணப்பொருள் சிவனென் னும் உபநிடதங்களே வலியுடையவென மாறிக்கொள்ளிற்படும் இழுக்கு என்னையெனின்,—அற்றன்று; மாயோன் பெயருள் ஏனையவெல்லாங் கார ணக்குறியாய் வேறொரு கடவுளை உணர்த்துமெனக் கொள்ளினும், நாராயண னென்னும் பெயர் இடுகுறிப்பெயராதலேயன்றி ஏனைப்பெயர்கள்போலக் காரணப்பெயருமாமென்றற்கு ஏலாது. அஃது எங்ஙனமெனின்;—நாரமென் பது நீர், அயனமென்பது இடம், நாரம் அயனமாகவுடையவன் நாராயண னென அன்மொழித்தொகையாய், இருமொழியும் புணர்ந்தவழி, "ரகரத் தின்முன் வந்த நகரம் ஒருமொழிக் கண்ணதாயின் ணகரமாய்த்திரியும்; உயி ரெழுத்துக்களும் யகரவகரங்களும் ககர பகர வருக்கங்களும் இடையே நிற் பினும் அங்ஙனந்திரியும்; ரகரம் நிலைமொழிக்கண்ணதாக நகரம் வருமொ ழிக்கண்ணதேல் இடுகுறிப்பெயராயின் ணகரமாய்த் திரியும்" என்பது பாணினிசூத்திரமாகலின், நாராயணனென்பதனைக் காரணக்குறியாக்கு வார்க்கு நகரம் ணகரமாய்த் திரியுமென்றற்கு ஒத்தில்லையென்பது. அற்றா கலினன்றே சிவன்முதலிய பெயர்போல அவயவப்பொருள்பற்றிக் காரணக் குறியாய் மற்றொருகடவுளை உணர்த்துதல்பெறாத நாராயணனென்னுஞ் சிறப்புப்பெயராற் சுபாலமுதலியவற்றின் எடுத்தோதியதூஉமென்கவென்று இங்ஙனம் பிதற்றுவர். இவை அனைத்துஞ் சுவேதாச்சுவதரமுதலிய உப நிடதங்களை ஓதியுணராத மடவோர் கூற்றேயாமென மறுக்க.

படைப்புமுதலியவற்றிற்குக் காரணமாதல் ஒன்றே பிரமத்திற்குச் சிறந்த இலக்கணமென்பது ஒக்கும். அதுபற்றியன்றே பரப்பிரமப்பொருள் பரமசிவனேயெனத் துணிந்தாமென்க. சுபாலமுதலிய உபநிடதங்கள் உல கந் தோன்றியொடுங்குமுறைமை உணர்த்தப்புகுந்தனவன்றிக், காரணப் பொருளை உணர்த்தப் புகுந்தனவல்ல. இடையே இயைபுபற்றிக் காரணப் பொருளும் உடன்கூறப்பட்டது. சுவேதாச்சுவதரத்தின் அவ்வாறன்றிச், சுபாலமுதலியவற்றுட் பொதுவகையான் உணர்ந்த காரணப்பொருளைச் சிறப்புவகையான் உணர்த்தற்பொருட்டுக், * "காரணமாகிய பிரமம் யாது" எனமுனிவர் வினவும் வினாவை முதற்கண் எடுத்துக்கொண்டு, உபநிடதமுழு வதும் பரமசிவனுக்குரிய சிறப்புப்பெயர்களாற் பரமேசுவரன் பெருமையை விளங்கக் கூறுதலானும், இவ்வாறு ஏனையுபநிடதங்களுண் முதற்கண் எடுத் துக்கொள்ளாமையானும், ஏனையுபநிடதங்களினுஞ் சுவேதாச்சுவதரம் வலி யுடைத்தாகலான் அதனுட் கூறப்படுங் காரணப்பொருளாகிய பரமசிவனே பரப்பிரமமெனவும், ஏனைக்காரணவாக்கியங்களுட் கூறும் பெயர்களெல் லாஞ் சாகபசுந்யாயத்தாற் பரமசிவனையே உணர்த்திநிற்குமெனவும், இர ணியகருப்பன் நாராயணன்முதலிய சிறப்புப்பெயர்களும் அவயவப்பொ

* கிம் காரணம் ப்ரஹ்ம || சுவேதாச்சுவதரம், க. க.

ருள்பற்றிக் காரணப்பெயராய்த்தான், அங்ஙனமன்றி ஆகுபெயராய்த்தான், பரமசிவனையே உணர்த்திநிற்குமெனவும் உணர்க. எல்லாப்பெயரும் பரமசிவன் பெயரென்பதே வேதத்தின் துணிபென்பது ஆண்டுக்காண்க.

நாராயணனென்னும் பெயர் மாயோனுக்கு இடுகுறியாகலினன்றே இயைபுபற்றிப் பரமசிவனை உணர்த்தும்வழி ஆகுபெயரெனக் கொண்டாமென்பது. கங்கையின் இடைச்சேரியென்புழிக், கங்கையென்பது இடுகுறியாய் வெள்ளத்தினையே உணர்த்திநிற்றலானன்றே கரையையுணர்த்தும்வழி இயைபுபற்றி ஆகுபெயராமெனக் கொண்டதூஉமென்க. கரையினையுணர்த்தும்வழியும் ஆற்றலானுணர்த்துமாயின், ஆகுபெயரென்றற்கு ஏலாமை அறிக. இங்ஙனம் நாராயணனென்பது மாயோனுக்கு இடுகுறிப்பெயராய் நின்றே கங்கையின் இடைச்சேரியென்புழிப்போல இயைபுபற்றி ஆகுபெயராய்ப் பரமசிவனையே உணர்த்துமெனக் கோடலின், ஆண்டு ணகரமாய்த் திரிதற்கு இழுக்கின்மையின், நாராயணனென்னுஞ்சொல் அவயவப்பொருள் பற்றிக் காரணக்குறியாதற்கு ஏலாதெனக் கொண்டவழியும் நின்கருத்து நிரம்புமாறில்லையென்க.

இனி, உண்மையானோக்குங்கால் நாராயணனென்பது அவயவப்பொருள்பற்றிக் காரணப்பெயராய்நின்றே பரமசிவனை உணர்த்துமென்பது காட்டுதும்:—* நரருடைய தொகுதி நாரம் எனத் "தொகுதிப்பொருள் பற்றி அண் விகுதிவரும்" என்னும் பாணினி சூத்திரத்தால் அண்விகுதி பெற்றுநிற்ப, அதன்மேல் ஆசாரப்பொருளுணர்த்துங் ககர நகர இத்துக்களையுடைய யகர விகுதி வந்து அயனீண்டு நாராய் என நின்றவழி, அதுவும் பகுதித்தன்மைப்படுதலின், அதன்மேல் வினைமுதற் பொருண்மையையுணர்த்தும் லகர டகர இத்துக்களையுடைய யுகரவிகுதி அந எனத் திரிந்து நாராயந என நின்றவழி, "வினைப்பெயர் விகுதியினின்ற நகரம் ணகரமாய்த் திரியும்" என்பதனால் அங்ஙனந்திரிந்து நாராயணனென ஒருமொழியாய் உயிர்த்தொகுதியை ஒத்து நிற்பனென்னும் பொருட்டாய்க் காரணக்குறியாயவாறு காண்க. இங்ஙனம் நாராயணனென்பது லகர டகர இத்துக்களையுடைய யுகரவிகுதியீற்றுச் சொல்லாகலினன்றே பெண்பாலின் நாராயணீயென நகர பகர இத்துக்களையுடைய ஈகாரவிகுதியீற்றான் யாண்டும் வழங்குவதூஉமென்க. யுகரவிகுதியீற்றுச்சொல்லெனக் கொள்ளாக்கால் நாராயணீயென ஈகாரவிகுதி பெறுதற்கு விதியின்மை உணர்க. நாராயணனென்னும் வடமொழிக்கு இங்ஙனம் விகுதிமேல் விகுதிபுணர்த்துச் செய்கை செய்வனவெல்லாம் வடமொழி வியாகரணம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இன்னும் விரிப்பிற் பெருகுமென்றொழிக. இத்தாவது செய்கைசெய்தன்முதலியவற்றிற்குக் கருவியாக முதனூலாசிரியனாற் படைத்திட்டுக் கொள்ளப்பட்ட கருவிச்சாரியை. இரணியகருப்பன் காரணப்பொருளென்பாரையும் இவ்வாறே கூறி மறுக்க.

இங்ஙனம் இல்லதற்குத் தோற்றமின்மையின் என்னும் வெளிப்படை ஏதுவானும், மேற்கோளில் ஒடுங்கின சங்காரம் என்னும் பெயர்விசேடத்

* இது சிவார்க்கபாடியத்தினுங்காண்க.—(முதற்சூத்திரம், கஉஉ-ம் பக்கம்.)

ஆசிரியர் - சிவபிரானும் அவனருள் வழிப்பட்ட பாணினி முதலியோரும் என்க.

தாற் பெறப்பட்ட குறிப்பேதுவானும் முறையே புத்தரையும் பாஞ்சராத்திரிமுதலியோரையும மறுத்துச் சிறப்புவகையான் முதற்கடவுளதுண்மை சாதித்தவழிச், சாங்கியநூலார் இல்லதற்குத் தோற்றமின்மையின் என்னும் ஏதுவை உடம்பட்டுச் சாத்தியமில்லையென்பர். அவரையும் மறுத்து மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்

எனவரும்.

இதன்பொருள், மண்முதலியவற்றின் உள்ளதாகிய குடமுதலிய பொருட்குக் குயவன்முதலிய செய்வோரையின்றி வனைதன்முதலிய செய்தொழில் நிகழாமையின் ஒடுங்கின சங்காரத்தினல்லது உலகிற்கு உற்பத்தியில்லை என மேற்கொண்டதென்றவாறு.

ஈண்டு, ஒடுங்கின சங்காரத்தினல்ல துற்பத்தியில்லை என்றது மேற்கோள். பொதுப்பட, உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையில்லை என்றது ஏது. அற்றேல், ஏதுவும் பொருளும் ஒருங்குநிற்பினன்றே பொருளுண்மை துணியப்படும். அவ்வாறின்றி, இல்லதற்குத் தோற்றமின்மையின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்புழி, ஏதுக்கள் இல்லதன்கண்ணும் உள்ளதன்கண்ணும், துணிபொருள் உலகின்கண்ணுமாய் வேறு நிற்றலின், அவற்றான் அது துணியப்படுமென்பது பொருந்தாது. அன்றியும், செய்வோரின்றிச் செய்வினையில்லை என்பதும், சங்காரத்தினல்ல துற்பத்தியில்லை என்பதும் பொதுவுஞ் சிறப்பும் மாத்திரையேயன்றிப் பொருளான் வேறன்மையின், "மலை தீயுடைத்து, நெருப்புடைமையான்" என்புழிப் போல, அநுமானமாதற்கேலாதாம். இன்னும், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையில்லை என்பதனான் உலகிற்குச் செய்வோனொருவன் உண்டென்பது மாத்திரையே பொதுவகையாற் றுணியப்படுமன்றிச், சிறப்புவகையாற் சங்காரக்கடவுளென்பது அதனாற் றுணியப்படாதாம். இங்ஙனமாகலின், ஈண்டுக் கூறும் ஏதுவும் பொருளுந் தம்முள் இயையாவாம் பிறவெனின்,—சொற்பல்காமைப்பொருட்டுத் துணிந்ததாகவைத்து அவ்வாறு கூறினாராயினும், "உலகம் உள்ளது; அது தோற்றமுடைமையின், யாது இல்லது, அது தோன்றாது; முயற்கோடுபோலும்" என்னும் எதிர்மறை யநுமானத்தாற் சூத்திரத்துத் "திதி" என்றதனாற் பெறப்படும் உள்ளதாதலைச் சாதித்துப், பின்னர் "உலகஞ் செய்வோனை யுடைத்து, உள்ளதாய்க் காரியப்படுதலின்; யாது உள்ளதாய்க் காரியப்படுவது, அது செய்வோனையுடைத்து; குடம்போலும்" என்னும் உடம்பாட்டநுமானத்தானே தோற்றிய என்னும் பிறவினைவாய்பாட்டாற் பெறப்படுங் கருத்தாவொருவனைப் பொதுவகையாற் சாதித்தவழி, அவன் யாவனென்னும் அவாய்நிலையை நீக்குதற்கு ஒடுங்கியுளதாம் என்றதனை எடுத்துக்கொண்டு, "உலகஞ் சங்காரகாரணனால் உற்பத்தியாம்; ஆண்டொடுங்குதலின்; யாது யாண்டொடுங்கும், அஃது அதனில் உற்பத்தியாம், மண்ணிற் குடம்போலும்" என்று இம்முறையே மூன்றதிகரணமாகவைத்துப் பொருள்செய்தல் ஆசிரி

யர் கருத்தென்பது முன்னர்க் கூறப்படும் வெண்பாக்களின் பொருளான் அறியக்கிடத்தலின், இயையுமென்க.

அற்றேனும், "யாது யாண்டொடுங்கும்; அஃது ஆண்டுத்தோன்றும்" என்னும் அவிநாபாவத்தான் உலகம் மாயையினொடுங்குதலின், மாயையே உலகத்தைத் தோற்றுவிக்கும்; நீர் உண்டெனக்கொண்ட இறைவன் நிமித்த காரணமென்பதன்றி முதற்காரணமென்னுமையின், முதற்காரணம் மாயையேயாகலின் நிமித்தகாரணத்தொடுங்குமென்றல் பொருந்தாமையின்.

அல்லதூஉம், ஒருதன்மையானன்றிப் பறவை பசு நரர் முதலியனவாகவும், சிலர் செல்வராகவும், சிலர் வறியராகவும் இங்ஙனங் காணப்படுதலின், இவ்வாறு தோற்றுவிப்பான் ஓரிறைவன் உண்டெனின், அவன் யாவர்மாட்டும் ஒப்ப அருளுடையனாதலின்றி, விருப்பு வெறுப்புடையனும்; ஆகலின், எம்மனோர்களின் ஒருவனுவன். அங்ஙனந் தோற்றுவிப்பது அவரவர் வினையாலெனின், தன்வயத்தானன்றி வினைவயத்தாற் றோற்றுவிப்பான் இறைவனாகான். அன்றியும், இங்ஙனந் தோற்றுவித்தற்கு ஏதுவான வினையே அமையும்; இறைவன் வேண்டா. வினையும் மாயையுஞ் சடமாகலான் அவற்றைத் தொழிற்படுத்தற்கு வேறோரிறைவன் வேண்டுமெனின்,--அற்றன்று; பால் சுரந்து கன்றினை வளர்ப்பவும், காந்தம் இரும்பை வலிப்பவுங் கண்டாமாகலின், சடத்துக்குஞ் செய்தியில்லையென்பது பொருந்தாது. இன்னும், குடத்தைவனையுங் குயவன் அவிச்சையாற் கட்டுண்டு சிற்றறிவனாய் வினைவயத்தனாய் வடிவுடையனாயிருத்தலின், இவ்வுவமையாற் றுணியப்படுங் கடவுளும் இவ்வாறாய்ப், படைப்புமுதலியன செய்யுங்கால் விகாரமெய்தி அதனிற் கட்டுற்றுநிற்பன். அல்லதூஉம், குடத்தையும் அதனைவனையுங் குயவனையும் ஓரிடத்து ஒருங்குகண்டான், அல்லுழிக் குடத்தைக்கண்டு, இதுவும் வனைதற்கு ஒருகருத்தாவையுடைத்தென அநுமித்துணர்வதுபோல, இவ்வுலகம் படைத்தற்கு ஒருகருத்தா உண்டென வழியளவையான் உணர்தற்கு முன் ஒருலகத்தையும் அதனைப் படைப்பானொரு கடவுளையும் ஒருங்குடன் கண்டதின்மையின் அவிநாபாவமறிதல் கூடாமையான், அநுமானமே ஈண்டைக்கேலாதாம். இங்ஙனமாகலின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் என்னும் ஏதுவான் முதற்கடவுள் உண்டெனத் துணிதல் பொருந்தாதாலென்னும் ஆசங்கையை நீக்கி, ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்றூ ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனுமப்புழுப்போல்வேண்டுருவைத்தான்கொடுத்துக்
கூட்டானே மண்போற் குளிர்ந்து

எனவரும்.

நிலங்குளிர்ந்தவழி அதன்கண்ணதாயன்றி வித்து முளையாதவாறுபோல, மாயையுந் தனக்கு ஆதாரமாய்நிற்கும் இறைவன்சத்தியின்கண்ண

"வேட்டுவன்வாய்ப் பட்டபுழு வேட்டுவனாந் தன்மைபோல் நாட்டங்கொள் ... நற்சிவமே யென்றனரே" ...

தாய்நின்று, அச்சத்தி சங்கற்பித்தவழியே வித்தகமாம். ஆகலின், மாயையினொடுங்கித் தோன்றும் உலகம் அதற்கு ஆதாரமாகிய இறைவன் சத்தியின் ஒடுங்கி, அதன்கணின்றுந் தோன்றியதேயாமென்பார், மண் குளிர்ந்து வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா மத்தன்றாணிற்றல் வித்தக மாம் என்றும், ஒருபடியன்றிப் படைத்தல் துணைக்காரண வேறுபாட்டான் ஆகலின், அதுபற்றி அவனதருளுடைமைக்கும் நடுவுநிலைமைக்கும் இழுக்கில்லையென்பார், அவர்வினையால் வித்தகமாம் என்றும், வேண்டுவார் வேண்டும் உருவினைக் கொடுத்துச் செய்வினைப் பயனைக் கூட்டுதல்பற்றிச் சுதந்தரத்திற்கு இழுக்கில்லையென்பது உவமையின்வைத்துக் காட்டுவார், வேட்வேனு மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக் கூட்டானே என்றுங் கூறினார்.

இடத்தினிகழ் பொருளின்கட் படுவதனை இடத்தின்மேலேற்றிக் கூறுதல் அமையுமென்பது கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையைப் பங்கய மென்பதனானும் அறிக.

இவ்வியையுடைமை நோக்கியன்றே * "உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பால்" எனவும், † "உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடும்" எனவும் வழிநூலாசிரியர் ஓதியதூஉம், உலகவ னுருவிற் றோன்றி யொடுங்குமாறு வாதுளாகமத்தின் வகுத்தெடுத் தோதியதூஉம் என்க.

இதுபற்றிச் சிவாத்துவிதசைவர் நிமித்தகாரணனாகிய இறைவன் மாயையோடுங்கூடி முதற்காரணமாம் என்பர். அங்ஙனங் கூறுதல் வாய்பாடு மாத்திரையே யென்பது ‡ இருவினையதிகரணத்திற் காட்டுதும்.

இறைவன் ஆதாரமும் மாயை ஆதேயமுமாதல் வியாபகமும் வியாப்பியமுமாயவாற்றான் உணர்க. வியாபகமாதல் முப்பொருட்குஞ் சமமாயினும், அவை தண்ணீரும் எண்ணெயும்போலத் தம்முள் தூலமுஞ் சூக்குமமுமாய் நிற்றலின், தூலப்பொருள் வியாப்பியமுஞ் சூக்குமப்பொருள் அதற்கு வியாபகமுமாய் நிற்குமென்பது.

முப்பொருள்களுந் தம்முள் தூலசூக்குமங்களாய் நிற்குமாறும், அதுபற்றியே வியாப்பிய வியாபகமாமாறும் § முன்னருங் காட்டுதும்.

உவமவினை பொருளினும் பொருளடை உவமையினுஞ் சென்றியையும்.

உண்டாகவெனச் சற்காரியவாதத்தை வலியுறுத்தமையின், வித்தில்வழி நிலத்தினின்றும் அங்குரந் தோன்றுதவாறுபோல, மாயையில்வழிப் பிரமத்தினின்றும் உலகந் தோன்றுதெனப் பரிணாமவாதிகளையும், மாயை அநிர்வசனமென்னும் மாயாவாதிகளையும் மறுத்தவாறாயிற்று.

மண்போல் என்புழிப் போல் என்பது அசை. வித்துண்டா மூலமுளைத்தவாபோல் எனக் கூட்டியுரைப்பாரும் உளர். வித்துண்டாக அம்மூலத்தினின்றும் முளைத்தவாறென்று உணர்க.

---

* சிவஞானசித்தி, க-ம் சூ. ௩௨. † மேற்படி, க-ம் சூ. ௪அ. ‡ இரண்டாஞ் சூத்திரம், இரண்டாம் அதிகரணம். § ஷை சூத்திரம் ஷை அதிகரணம்.

X உரைப்பார் - பாண்டிப் பெருமாள்.

மூலம் - காரணம். குளிர்ந்தவழி என்பது குளிர்ந்து எனத் திரிந்துநின்றது. நிற்றலால் என உருபு விரித்துரைக்க. மேலைவெண்பாவின் இலயித்த என்றதனுன் மாயை பெறப்படுதலின், அஃது ஈண்டைக்குத் தோன்று எழுவாயாய் வருவித்துரைக்கப்பட்டது. அவரவர்செய்த வினையால் வித்தகமாதலும், வினையுண்மைக்குப் பிரமாணமும், அதுபற்றி முதல்வன் சுதந்தரத்திற்குக் கேடின்மையும் இருவினையதிகரணத்துட் பெறப்படும்.

அற்றேல், வினையே அமையும்; இறைவன் வேண்டாமெனின்,—அற்றன்று; வினையும் மாயைபோலச் சடமாகலிற் கூட்டுவானையின்றி அமையாதென்க. பால்சுரந்து கன்றினை வளர்ப்பவும், காந்தம் இரும்பை வலிப்பவுங் காண்டலிற் சடமுங் கூட்டுவானையின்றி அமையுமென்பது பொருந்தாது; பால்சுரந்து வளர்க்குமாயின் உயிர்நீங்கிய ஆன்முலையினும் பால் சுரத்தல் வேண்டும். அஃதின்மையிற் சேதனமாகிய ஆவையின்றி அமையாமை உணர்க. காந்தம் இரும்பைவலித்தலும் அவ்விரண்டனையும் இயைவிக்குஞ் சேதனனையின்றி அமையாமை உணர்க.

அற்றேல், உயிர்கள் சேதனமாகலின் அவையே அமையும், இவற்றின் வேறாய் இறைவனுண்டென்பதற்குப் பிரமாணமில்லையெனின்,—அற்றன்று; உயிர்கள் மலத்தாற் கட்டுற்றுச் சுதந்தரமின்றித் தம்முடைச்செயற்குங் குடம்போல வேறொரு கருத்தாவை அவாவிநிற்றலானென்பது.

அற்றேல், மலந்தீர்ந்த முத்தரே அமைவராலெனின்,—நன்று சொன்னாய்! முத்தராவார் ஆதிமுத்தரோ? அநாதிமுத்தரோ? கூறுவாயாக. அநாதிமுத்தரெனின், அதுவே எமது சித்தாந்தமாகலின், * சித்தசாதனம். ஆதிமுத்தரெனின் அவருக்கும் முத்தியளிப்பவன் முன்னரேயுளனாதல் பெறப்படுமாகலின், அநாதிமுத்தனாகிய இறைவனுண்டென்பது தெற்றெனவுணர்க. இது † "பதியுள வளவை மதியோர் வரத" என்னும் ஞானமிர்தத்தினுங் காண்க. இவை அனைத்துங் கூட்டானே என்னும் ‡ இசையெச்சத்தால் வருவித்துரைக்கப்பட்டன.

ஏகாரம் - எதிர்மறை. கூட்டரனே எனப் பாடமோதுவாருமுளர்; அதனால் ஈண்டைக்குப் பொருள் சிறவாமையுஞ் சொன்முடிபிற்கு இயையாமையும் உணர்ந்துகொள்க.

இனிக், குடத்தைவனையுங் குயவன் அவிச்சையாற் கட்டுண்டு சிற்றறிவனாய் வினைவயத்தனாய் வடிவுடையனாயிருத்தலின், இவ்வுவமையாற் றுணியப்படுங் கடவுளும் இவ்வாறாய்ப் படைப்புமுதலியன செய்யுங்கால் விகாரமெய்தி அதனிற் கட்டுற்றுநிற்பனென்றதனை மறுத்து ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—னாக்காதே

---

* சித்தசாதனம் - பரனுடம்பட்டதாய்ச் சித்தித்ததனை மறித்துஞ் சாதித்தல். † ஞானமிர்தம், ௫௧. ‡ இசையெச்சமாவது, தன்னைமுடிக்கும் பிறசொல்லை அவாய்நில்லாது சொல்லுவார் குறிப்பான் எஞ்சிநின்ற பொருளை யுணர்த்துவது.

× ஏதுவாருமோர் எனவருமிடங்களோறும் மூர்க்கூறப்பட்ட அசிரியரேயெனவுணர்க.

கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனி லிற்றின்றாங் கட்டு

எனவரும்.

நீ அங்ஙனங் கூறியதொக்கும். இஃது இவ்வாறாகவென எண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் செய்வதூஉம், கரணத்தாற் செய்வதூஉமென வினைமுதல் இருவகைப்படும். குயவன் கரணத்தாற் செய்வதன்றிச் சங்கற்ப மாத்திரையாற் செய்யமாட்டான். இறைவன்சத்தி அவ்வாறன்றிச் சங்கற்ப மாத்திரையானே எல்லாத்தொழிலுஞ் செய்யுமாகலாற் சங்கற்பமாத்திரத்தாற் செய்யுஞ் செய்திக்குப் பகைப்பொருளாகிய அவிச்சையாற் கட்டுண்டன்முதலிய குற்றங்கள், கரணத்தாற் செய்யுங் குயவன்முதலியோர்மாட்டுப்போல ஆண்டு உளதாவதற்கோர் இயைபில்லையென்பார், இறைவன் அன்றே காலத்திற் றாக்காதே நின்று ஆக்காதே கண்டும் நோக்காது நோக்கியும் நொடியாது நொடித்துங் கட்டின்றாதல் உளத்திற்கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக் கண்டவனி லிற்று என்றார்.

செய்யுளாகலின் இவ்வாறு கொண்டுகூட்டியுரைக்க. ஆக்குதல்--படைத்தல். காண்டலும் அது. நோக்குதல்--காத்தல். நொடித்தல்--அழித்தல்; அது * "நொடித்தான்மலை" என்பதனானும் அறிக.

ஆக்காது நோக்காது என்றமையான் நொடியாது என்றதூஉம் வருவித்துரைக்கப்பட்டது.

கரணத்தால் ஆக்காது நோக்காது நொடியாது, சங்கற்பமாத்திரையான் முத்தொழிலுஞ் செய்யுமென்றுரைக்க.

நொடித்தலால் என்பது நொடித்து எனத் திரிந்துநின்றது; அது இன்றென்னும் வினைக்குறிப்பு முற்றுக்கொண்டு முடிந்தது. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. இன்றாங் கட்டு என்பது † "அருங்கேடன்" என்றாற்போல நின்றது.

இவ்வாறு வினைமுதல் இருவேறுவகைத்தாகவுங் குயவனை இறைவனுக்கு எடுத்துக்காட்டியது வினைமுதலாதற் பொதுமையான் ஒருபுடையொத்தல் பற்றியே பிறிதில்லையென்பது கருத்து.

அற்றாயினும் முத்தொழில் செய்யும் இறைவன் உருவுடையனாதல் வேண்டும்; உடம்பின்றி வினைசெய்தல் கூடாமையானெனின்,--அற்றன்று; தன்னுடம்பினை இயக்குவதாயவுயிர்க்கு வடிவின்மையின், இறைவனும் அவ்வாறு உருவின்றிநின்றே தன்னுருவமாகிய உலகத்தைத் தொழிற்படுத்துதல் அமையுமென்க. இஃது உணர்ந்துகோடற்கன்றே ‡ "உலகமே யுருவ மாக யோனிக ளுறுப்ப தாக---விலகுபே ரிச்சா ஞானக் கிரியையுட்

* சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம், ஸ்ரீகைலாயம் - க. † திருக்குறள், உக-ம் அதி, தீவினையச்சம், க௦. ‡ சிவஞானசித்தி, ரு - ம் சூத்திரம், எ.

கரண மாக—வலகிலா வுயிர்ப்பு லன்கட் கறிவினை யாக்கி யைந்து—நலமிகு தொழில்க ளோடு நாடக நடிப்ப துதன்'' என்றார் வழிநூலாசிரியர். அன்றி, இறைவன் உருவமுடையவனே யென்னின்,—உருவமெல்லாங் காரியப் பொருளாகலின், அவ்வுருவினைத் தருவான் வேறோரிறைவன் வேண்டும்; வேண்டவே, அவனுக்கும் வேறோரிறைவன் வேண்டுமென்று அநவத்தையாய் முடியும்.

அல்லதூஉம், உருவமாவது எல்லாத்தொழிலுஞ் செய்யும் ஆற்றலைத் தடுப்பதாகலின், முதற்கண் இறைவன் அருவம் உருவம் என்னும் இருவகைவடிவும் இன்றிநின்றே தனது சத்தியால் விந்துவைக் கலக்கி நாதமுதலியவற்றைத் தோற்றுவித்துப், பின்னர்த் தனது இச்சைவயத்தால் வடிவமுங் கொள்வனென்று உணர்க. இது *''விந்துவவத்தை விசேடத் தெந்தை'' என்னும் ஞானமிர்தத்தினுங் காண்க.

இனிக், குடத்தையும் அதனைவனையுங் குயவனையும் ஓரிடத்து ஒருங்கு கண்டான் அல்லுழிக் குடத்தைக்கண்டு, இதுவும் வனைதற்கு ஒரு கருத்தாவையுடைத்தென அநுமித்துணர்வதுபோல, இவ்வுலகம் படைத்தற்கு ஒருகருத்தாவுண்டென வழியளவையான் உணர்தற்கு முன் ஒருலகத்தையும் அதனைப் படைப்பானொருகடவுளையும் ஒருங்குகண்டதின்மையின் அவிநாபாவமறிதல் கூடாமையான், அநுமானமே ஈண்டைக்கேலாதென்றாய்! ஈண்டு வினவுதும். அட்டிலிற் புகையுந் தீயும் ஒருங்குடன் கண்டான் மற்றோரட்டிலிற் புகைகண்டவழித் தீயுண்டெனத் துணிதல் கூடும். மலைமேற் புகை கண்டவழி, ஆண்டுத் தீயுண்டென அட்டிலிற் புகையை எடுத்துக்காட்டித் துணிதல் கூடாதாகல்வேண்டும்; என்னை? சிறிதாகிய அட்டிற்புகைக்குப் பெரிதாகிய மலையிற்புகை வேறுபாடுடைமையின், ஆண்டுத் துணிபுநிகழ்ந்தவாறு என்னையென்பது. ஆண்டுத் துணிபு நிகழாதென்பையாயின், நீ அநுமானங்கொண்டவனல்லை. வேறுபாடுடைத்தாயினும் புகையென்னுஞ் சாதிசாமானியம்பற்றித் துணிந்தேன் என்பையாயின், ஈண்டும் அஃது ஒக்கும். செயப்படுபொருளையுஞ் செயலையுஞ் செய்வோனையும் ஒருங்குடன் கண்டவன் அல்லுழிச் செயப்படுபொருளைக் கண்டவழிச், சாதிசாமானியம்பற்றி, இதுவுஞ் செய்வோனையுடைத்தென்று அநுமானத்தாற் றுணிதல் பொருந்துமென்றொழிக. இது †''பூபூதராதி'' என்னும் ஞானமிர்தத்தினுங் காண்க. இன்னுங் கடாவிடைகளான் விரிப்பிற் பெருகும்; அவையெல்லாம் வடமொழிச் சிவாகமங்களுட் காண்க.

இரண்டாமதிகரண முடிந்தது.

---

* ஞானமிர்தம் - ருரு. † மேற்படி - ருo.

## மூன்றுமதிகரணம்.

இரண்டாமதிகரணத்தின் உலகந் தானேதோன்றி யழியுமென்னும் புத்தர்முதலியோரையும், காரணக்கடவுளுளன் அவன் சங்காரகருத்தாவின் வேறென்னும் பாஞ்சராத்திரிமுதலியோரையும் மறுத்துச் சங்காரகருத்தாவே முத்தொழிற்குங் காரணமெனச் சாதித்தபின்னர், இங்ஙனமாகலிற் சங்காரகருத்தாவே முதற்கடவுளெனச் சாதித்தற்கெழுந்தது மூன்றுமதிகரணம்.

அற்றேல், எய்தாததனை எய்துவிக்கின்றன்றே சாத்திரம் பயன்படுவது; ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லையெனவே, சங்காரகருத்தாவே முதற்கடவுளென்பது பெறப்பட்டமையின், அதனை வேறோரதிகரணமாக வைத்தோதுதல் பயனுடைத்தன்றாம்பிறவெனின்,—விதியெல்லாம் எய்தாததனை யெய்துவிப்பதூஉம், ஒருகாலெய்தி ஒருகாலெய்தாதாகற்பாலதனை அவ்வழியும் இகந்துபடாமற்காத்து நியமமாக எய்துவிப்பதூஉம், ஈரிடத்தெய்தற் பாலதனை ஒருமருங்கு மறுப்பதூஉமென மூவகைப்படும். அவற்றுள், இஃது எய்தியதனை ஒருமருங்கு மறுத்தற் கெழுந்ததாகலின், ஆகாதென்க.

அஃதாமாறு:—சிவபூசை செய்யற் பாற்றென்பது விதியாக்காற் சிவபூசை செய்தல் வேறோராற்றாற் பெறப்படாமையின், இங்ஙனம் விதிப்பது எய்தாததெய்துவிப்பதாம். சிவபூசை செய்யுங்கால் இருந்துசெய்தல் வேண்டுமென்பது விதியாதொழியினும், இருந்து செய்தல் சிவபூசை செய்யற்பாற்றென்னும் பொதுவிதியான் எய்திற்றேயாம். ஓரோவழி நின்று செய்தலுங் கூடுமாகலின், அவ்வழி இருந்துசெய்தல் எய்தாமையானும், அதனை வரையறுத்து எய்துவிப்பது நியமவிதியாம். வேதாகமங்களிற் * "சிவனென்னுநாமஞ் சிவனுக்கேயுரித்து" எனச் செவியறிவுறுத்தாதவழிப் பொதுவகையான் மங்கலப்பொருள்பற்றி ஏனைப்பொருள்களினுஞ் செல்லுமாகலின், அதனை நீக்குதற்கு அங்ஙனஞ் செவியறிவுறுப்பது எய்தியதொருமருங்கு மறுப்பதாமென்க.

அற்றேல், இருந்துசெய்ய வேண்டுமென்பதனான் நின்றுசெய்தன்முதலியன விலக்கப்பட்டன. சிவனென்னுநாமஞ் சிவனுக்குரித்தென்பதனான் ஏனையோர்க்குரித்தாதல் விலக்கப்பட்டதாகலின், ஈரிடத்தும் விலக்குதலே பயனாகலானும், இருந்துசெய்தலே வேண்டும்; சிவனுக்கேயுரித்து என ஈரிடத்தினும் ஏகாரம் பிரிநிலைப்பொருளே தந்து நின்றதாகலானும், இவை தம்முள் வேற்றுமையில்லையாலோவெனின்,—அஃதொக்கும். இங்ஙனமாயினும் நின்று செய்யப் புகுங்கால் இருந்துசெய்தல் பெறப்படாமையின், அவ்வழியும் அதனை எய்துவித்தன்றி ஏனையது விலக்குதல் கூடாமையானும், விதிப்பொருள் முற்படத் தோன்றுதலானும், அதுவே அதற்குப் பயன்; விலக்குதல் அதன்பின்னாக வந்த பயனென்பது.

* "சிவனெனு நாமந் தனக்கே யுரியசெம் மேனி யெம்மான்" என்னுந் திருவாக்கும் ஈண்டுச் சிந்திக்கற்பாற்று; திருநாவுக்கரசுநாயனார் தேவாரம், பொது, தனித்திருவிருத்தம், ௧.

இனிச், சிவனென்னுநாமம் ஈரிடத்தும் ஒப்பச்சேறலின் ஒருவாற் ருனும் எய்துவிக்கவேண்டாமையின், ஆண்டு விலக்குதன்மாத்திரையே பய னும் ஆகலின், ஈரிடத்தினும் முறையே பிரிநிலை ஏகாரம் இயைபின்மை நீக்குதற்கண்ணும், பிறிதினியைபு நீக்குதற்கண்ணும் வந்ததாகலின், வேறு பாடுண்மையுணர்க.

எய்தாததனை எய்துவித்தன்முதலிய மூன்றனையும் வடநூலார் முறையே அபூர்வவிதி, நியமவிதி, பரிசங்கியாவிதியெனக் கூறுப. அவை யெல்லாம் மீமாஞ்சைநூலுட் காண்க.

அற்றேல், அஃதாக; **சங்காரமே முதல்** என்னும் அதிகரணம் எய்திய தொரு மருங்கு மறுத்தற் கெழுந்ததாமாறு யாங்ஙனமெனின், கூறுதும்:— **ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை** யாகலாற் சங்கார கருத்தாவே முதற்கடவுளென்றல் பொருந்தும். அங்ஙனமாயினுந் தேர்முதலாயின பலர் கூடிச் செய்யக் காண்டலின், அவற்றினும் அதிவிசித்திரமான உலகம் ஒரு வனுற்செய்யப்படுமென்றற்குப் பிரமாணமின்மையாற் காரணவாக்கியங் களிற் கூறப்படும் மாயோன் முதலியோரும் முதற்கடவுளரெனல் வேண்டும். அற்றாகலினன்றே வேதத்துள் நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அங்கி சூரியன் முதலியோரையும் ஆண்டாண்டு முதற்கடவுளரெனப் புகழ்ந் தெடுத்தோதியதூஉமென்பது. அல்லதூஉம், குடமுதலியவற்றிற்குக் குய வன் முதலியோரே கருத்தாவென்பது கண்கூடாகக் காண்டலிற் சங்காரக் கடவுளொருவனே முதற்கருத்தாவென்றல் பொருந்தாது. குயவன்முதலி யோர் செய்யுஞ் செயலுஞ் சங்காரக்கடவுள்செயலேயாகலின், அதுபற்றி யிழுக்கில்லையென்னிற் குயவனை உவமைகூறல் பொருந்தாது. ஒருபொருளே உவமானமும் உவமேயமுமாதல் செல்லாமையின். இன்னுஞ், சைவாகமங் களிற் சிவசமமாதலே முத்தியெனக் கூறுதலின், முத்தரெல்லாஞ் சங்கார கருத்தாவோடொப்ப முதற்கடவுளாவரென்பது நும்மனோரும் ஒருதலை யாகக் கோடல்வேண்டும். இங்ஙனமாகலின், **ஒடுங்கினசங்காரத்தி னல்லது உற்பத்தியில்லை** எனச் சிறப்புவகையாற் சாதித்ததனுற் போந்த பய னென்னையென்று ஆசங்கித்தவழி, ஏனையோர் முதற்கடவுளரல்லரென மறுத்தற்கெழுந்தது மூன்றுமதிகரணமெனக் கொள்க. இவையனைத்துந் தோன்றுதற்கன்றே இனி யென்றாரென்பது.

இனிச் சங்காரமே முதலென்றது

எனவரும்.

ஏகாரம் பிறிதினியைபு நீக்குதற்கண்வந்த பிரிநிலை.

அஃதெங்ஙனமெனின்,—மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்றசங்
காரத்தின்வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்

எனவரும்.

உலகிற்குச் சுதந்திரமின்மையுஞ் சங்காரகருத்தாவுக்குச் சுதந்திரமுண்மையும் விளக்குதற்குச், சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் எனவும், சுட்டுணர்வின்றிநின்ற சங்காரம் எனவும் ஈரிடத்திற்கும் அடைகொடுத்தோதினர்.

சுட்டுணர்விற்றாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் என்று உபசரித்துரைக்கப்பட்டது.

ஈண்டுப் பிரபஞ்சமென்றது சேதனப்பிரபஞ்சத்தை; பிரிநிலையேகாரத்தான் விலக்குதற்குரியது அதுவேயாகலின்.

X இஃதறியாதார் சுட்டியுணரப்பட்ட பிரபஞ்சமென்றுரைப்பர். சேதனப்பிரபஞ்சஞ் சுட்டியறிதலும், சங்காரமுதல்வன் சுட்டாதறிதலும் உண்மையதிகாரத்திற் பெறப்படும்.

தேர்முதலாயின பலராற் செய்யப்படினும் பலரும் ஒருவனேவல்வழிநின்றே செய்வர்ஆகலானும், முதற்கடவுளில்லையென்பார்க்குக் காட்சிப்புலனாதல்பற்றிக் குடத்தைவனையுங் குயவனை எடுத்துக்காட்டி முதற்கடவுளதுண்மை அநுமானத்தாற் சாதித்தபின்னர்க், குயவனுஞ் சுட்டுணர்வுடையனாய் அவிச்சையாற் கட்டுற்றுச் சுதந்திரமின்றி நிற்றலின், அவனைத் தொழிற்படுத்துவானும் அவ்வியல்பில்லாதமுதற்கடவுளேயாமெனப் பிறிதோரநுமானத்தாற் சாதித்தல் பொருந்துமாகலின், ஆண்டு இழுக்கின்மையானும், செய்துஞ் செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாகிய முதற்கடவுள் சங்காரகாரணனொருவனே என்பது கருத்து.

காரணவாக்கியங்களின் நாராயணன் இரணியகருப்பன் முதலியோரைக் கூறியது குயவன்போல அவாந்தர காரணமாதல்பற்றியேயாகலின், அவையெல்லாம் ஆகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே உணர்த்தி நிற்குமெனக் கொள்க. இது சுவேதாச்சுவதரம் மூன்றாமத்தியாயத்து மந்திரத்தானும் உணர்க.

அற்றாயினும், சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற்போலச் சுட்டுணர்வின்றிநின்ற சங்காரமும் பலவாகுக. ஒன்றேயென்றற்குப் பிரமாணமென்னை? அல்லதூஉம், சுட்டுணர்வினராகிய ஆன்மாக்கள் முத்தியிற் சிவசமமாவரெனக் கூறுதலின் அவிச்சைநீங்கியபின்னர்ச் சுட்டுணர்வின்றி நிற்பராகலின், அவ்வழி அவரும் முதற்கடவுளராவராலோவென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

ஒன்றலா வொன்று ளுளதாகி நின்றவா
றென்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு

எனவரும்.

X இஃதறியாதார் - பாண்டிப் பெருமாள்.

இது * சொற்பொருட் பின்வருநிலை. காரியப்பிரபஞ்சஞ் சடமாகலானும், சேதனப்பிரபஞ்சம் அவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற்றாய் நிற்றலானும், இவற்றைத் தொழிற்படுத்துதற்கு இவற்றின் வேறாகிய முதற்கடவுள் உண்டென்பது பெற்றாம். பெறவே, பிரபஞ்சம் விசித்திரகாரியமாய்க் காணப்படுதலின், இங்ஙனஞ் செய்யும் முதற்கடவுள், அளவிலாற்றலும் முற்றுணர்வும் பேரருளுமுதலிய குணங்களுடையனென்பதூஉம் பெறப்பட்டது. படவே, அத்தன்மையனாகிய முதற்கடவுள் ஒருவனே அமையும்; ஆகலின், வேறும் அத்தன்மையர் உண்டெனக்கொள்ளின், மிகையென்னுங் குற்றமாம்.

அல்லதூஉம், இலக்கணத்தான் வேறுபாடில்வழி இலக்கியம் பலவாதல் செல்லாதென்னுங் கருத்தான் ஒன்றலாவோன்று என வரையறுத்தோதினார். ஒன்றலா என்பது உருவும் அருவுமாகிய இருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்றல்லாத என்றவாறு. ஒன்றேன்பது இலக்கணத்தான் வேறுபாடில்லது என்னும் பொருட்டு. † "எந்தை யாரவ ரெவ்வகை யார்கொலோ" என்றதும் அது.

ஈண்டு அவை என்றது சேதனப்பிரபஞ்சத்தொகுதியை. அது நித்தமாகலிற் றோன்றி யழிதலின்றாயினும் உடம்பொடுகூடி உளதாய் நின்று ஈறுதல் பொருந்துமென்க. ஈறுதல் - ஈறுதலாலென விரிக்க. ஈறுசெய்வதனை ஈறென்றார். ஈறேமுதல் என்றது "முடிந்தது முடித்தல்."

அதனி னீறலாவோன்று பலவாறே தோழும்பாகு மங்கு என்றது அச்சங்காரக் கடவுள்போல அழிவின்றி நித்தமாகிய சேதனப்பிரபஞ்சம் பலவாற்றானுஞ் சங்காரக்கடவுளுக்கு அடிமையேயாம் முத்தியின்கண்ணும் என்றவாறு.

அங்கும் என்னும் இறந்ததுதழீஇய எச்சவும்மை தொக்குநின்றது. பலவாற்றானுந் தொழும்பாதல்— ‡ "சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்றா மென்னிற் சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித் தவன்றான்— பவங்கெடு புத்திமுத்தி பண்ணுஞ்சித் தவற்றிற் படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றா—னவன்றானே யறியுஞ்சித் தாதலினு லிரண்டு மணைந் தானு மொன்றாகா தநகியமா யிருக்கு—மிவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி யிதுவசித்தென் றிடிலவனுக் கிவனுமசித் தாமே;" § "பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற் றாகும்;" ० "உள்ளத்—தோன்றிய வுணர்வு தம்பா லுள்ளது நிகழ்த்து மீசன்—றன்றொழி னடத்து மேனி தனக்கெனக் கொண்டு தானே" என்பவற்றான் அறிக. முத்தியிற் சிவசமமாமென்பதற்குப் பொருள் இவ்வதிகாரத்திறுதியிற் காட்டுதும்.

* இது "முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயிற்—பின்வரு மென்னிற் பின்வருநிலையே" என்னுந் தண்டியலங்காரச் சூத்திரத்தான் உணர்க. † திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், பொது, திருப்பாசுரம், ரு. ‡ சிவஞானசித்தி, ககம் சூ. கக. § மேற்படி, க - ம், சூ. சுச. ० சிவப்பிரகாசம், உண்மை, உஎ.

இதனானே முத்திபெற்றோரும் முதற்கடவுளராவாரென்னுஞ் சிவசமவாதி, சங்கிராந்தவாதி, உற்பத்திவாதி, ஆவேசவாதிமுதலியோர் மதமும் மறுக்கப்பட்டவாறு அறிக.

## ஆணவமலத் துண்மை.

பதியுண்மைக்குப் பிரமாணங் கூறுவார் **மலத்துளதாம்** எனப் புனருற்பவத்துக்கு ஏதுக்கூறுமுகத்தான் மலத்தினதுண்மைக்குப் பிரமாணமும் உடன்கூறினார்.

அற்றேல், **மலத்துளதாம்** என்பதனை வேறோரதிகரணமாகவைத் தோதாமை குன்றக்கூறலாம் பிறவெனின்,—ஆகாது; அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியனவெல்லாம் *"சகசமலத்துணரா"தென அதனிலக்கணங் கூறும்வழிப் பெறப்படுதலின், ஈண்டு வேறோதல் வேண்டாமையின்.

அற்றேல், வடமொழி முதற்சூத்திரத்தில் "மலத்தால்" என்பதில்லையாலோவெனின்,—அற்றன்று; நாலாம் பாதத்தில் "இதனால்" என்பது மலத்தாலென்னும்பொருட்டு. ஆண்டுச் † "சிருட்டிப்பன் இதனால்" என்பதனை "இதனாற் சிருட்டிப்பன்" என மாறிப் பொருளுரைக்க. அற்றேல், சுட்டுப்பெயர் முன்வந்ததனைச் சுட்டுவதேயாகலின், அங்ஙனம் வாராத மலத்தைச் சுட்டுமாறு என்னையெனின்,—அற்றன்று; சுட்டுப்பெயர் முன்வந்ததனையே சுட்டுமென்னும் நியமஞ் செய்யுளுக்கின்மையானும், சூசிப்பது சூத்திரமாதலானும் நாலாஞ்சூத்திரத்து வருவதனை ஈண்டுச் சுட்டுப்பெயராற் சூசிப்பித்தாரெனக் கொள்க. இஃதுணராதார் ஆண்டு "இதனால்" என்பதற்கு "இங்ஙனமாகலின்" எனப் பொருளுரைப்ப. அது கூறாமையே பெறப்படுமென்றொழிக. அற்றாகலினன்றே ஆசிரியர் "இங்ஙனமாகலின் அந்தமாதி" என்றோதாது வாளாகூறியொழிந்ததூஉமென்க.

## முதற்சூத்திரத் தொகைப்பொருள்.

இச்சூத்திரத்தாற் போந்த தொகைப்பொருளாவது:—தோற்றக்கேடுகளதுண்மை காட்சிமுதலிய அளவைகளான் அறியவாராமையின், பிரபஞ்சம் நித்தப் பொருளேயாம்; அன்றித் தோன்றியழிவதாயினும், இல்பொருட்குத் தத்தஞ் சார்பிற் றோன்றியழிதல் இயற்கையெனவமையும்; செயற்கையெனின் அதற்கோர் ஏதுவேண்டுதலின்; மற்று உள்பொருளாயின், அதுவேயமையும், இறைவன் வேண்டா; இரண்டுள்பொருள்கோடல் மிகையாகலின்; வேண்டுமாயினும் மாயோன்முதலிய கடவுளரில் ஒருவரேயமையும்; அவரையொழித்துச் சங்காரகருத்தா முதற்கடவுளென்றற்குப் பிரமாணமென்னை? பிரமாணமுண்டாயினும், அதிவிசித்திரமாகிய பிரபஞ்சம் ஒருவனாற்செய்தல் கூடாமையின், மற்றும் அவ்வியல்பினராகிய முதற்கடவுளர் உளராதல் வேண்டுமென உலகாயதர் மீமாஞ்சைநூலார் புத்தர் சமணர் சாங்கியர் பாஞ்சராத்திரிகள் அநேகேசுரவாதிகண்முதலியோர்

---

* நான்காஞ்சூத்திம். † ஸ்ருஜதி க்ஷ்லாக்ஷ என்பதனை, க்ஷ்லாக்ஷ ஸ்ருஜதி எனமாறிப்பொருள்கொள்க.

* இஃதுணராதார் - சிவாக்கிரயோகிகள்.

மதம்பற்றிப் பூர்வபக்கம் நிகழ்ந்தவழி, அவரை மறுத்துத் தோற்றக்கேடுகளதுண்மைக்கு ஆகமவளவையேயன்றி வழியளவை காட்சியளவைகளும் பிரமாணமாகலின், பிரபஞ்சம் நித்தப்பொருளன்றெனவும்; அன்றாகவே, இல்பொருட்கு முயற்கோடுபோலத் தோற்றக்கேடுகள் இன்மையானும், மாறுபட்ட இரண்டுதன்மை ஒருபொருட்கு இயற்கையாதல் உலகத்தின்மையானும், ஒடுங்குதற்கும் உளதாதற்குங் காரணம் மூலமலமொன்றுண்டு ஆகலானும், பிரபஞ்சம் உள்பொருளென்பதூஉம், தோன்றியொடுங்குதல் செயற்கையென்பதூஉம் பெற்றாம்; பெறவே உள்பொருட்குக் குடமுதலியனபோலச் செய்வோரையின்றிச் செய்தொழிற்பாடு இன்மையினாற் கருத்தாவுண்மை பெறப்பட்டது; படவே, முழுவதுமொடுங்கின சங்காரகருத்தாவினன்றிப் புனருற்பத்தி கூடாமையானும், திதிக்கடவுள் முதலியோரின் முழுவதுமொடுங்குமென்றல் பொருந்தாமையானும், முழுவதுமொடுக்கின சங்காரகருத்தாவே முத்தொழிற்குங் கருத்தாவாமெனவும்; முற்றுணர்வும், அளவிலாற்றலும், பேரருளுஞ், சுதந்திரமு முதலிய குணங்களுடைமையின், அதிவிசித்திரமாகிய உலகத்தைத் தொழிற்படுத்துதற்கு அவன் ஒருவனே அமையும்; அக்குணங்களின்மையின் ஏனையோரெல்லாம் அவ்விறைவனுக்குத் தொழும்பராதலேயன்றி முதற்கடவுளராகாரெனவுஞ் சித்தாந்தஞ் செய்து வழியளவையான் முதற்கடவுளதுண்மை பொதுவகையானுஞ் சிறப்புவகையானுங் கூறியவாறென்று உணர்க.

இங்ஙனம் மூன்றதிகரணமும் ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வந்தவாறு காண்க. வருஞ்சூத்திரங்களினும் இவ்வாறு உரைத்துக்கொள்க.

மூன்றாமதிகரணமுடிந்தது.



சிவஞானபோதத்திற்குப்
பிரமாணவோத்தின் முதற்பாதமாகிய

## முதற்சூத்திரமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# இரண்டாஞ்சூத்திரம்.

இங்ஙனம் முதற்சூத்திரத்திற்கு வார்த்திகப்பொழிப்புரைத்த ஆசிரியர் இனி இரண்டாஞ்சூத்திரத்திற்கு அஃதுரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச்செய்கின்றார்:—

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே

எனவரும்.

இவ்வாறு பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு, என்பது சூத்திரமெனக் காட்டி, இனி அதன் கருத்துரைக்கின்றார்:—

எ-து. சூ-ம். எ-னின். புனருற்பவம் வருமாறுணர்த்துத னுதலிற்று

எனவரும்.

மேலையதிகரணத்திறுதியின் அந்தம் என்று உத்தேசமாயெடுத்துக் கொண்ட இறைவனுக்கு இலக்கணங் கூறுமுகத்தானே துணைக்காரணமுதலியன இன்மையின் இறைவன் உலகிற்கு நிமித்தகாரணனென்றல் சாலாதென்னும் ஆசங்கையை நீக்கி, ஒடுங்கியினின்றும் மீள உளதாமாறு வகுத்துணர்த்துதல் பிரமாணவோத்தின் இரண்டாம் பாதமாகிய இவ்விரண்டாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

இதனுள், உத்தேசங்கூறியபின்னர் இலக்கணங்கூறுதல் முறைமையாகலின், அது முறைமைபற்றியவியைபெனவும்; துணைக்காரணமுதலியன வுண்மைக்குப் பிரமாணங்கூறுதவழி, இறைவன் நிமித்தகாரணனுதல் சாலாமையின், அஃது ஆசங்கைபற்றியவியைபெனவும்; ஒடுங்கியினின்றும் மீள உளதாமாறு வகுத்துக்கூறுதவழி, ஒடுங்கியின் எவ்வாறு உளதாமென்று அவாய்நிற்றலின், அஃது அவாய்நிலைபற்றியவியைபெனவும் உணர்ந்துகொள்க.

இவற்றுள், அவாய்நிலைபற்றிய இயைபு சிறந்ததாகலின், அதுவே பற்றிப் புனருற்பவம் வருமாறுணர்த்துத னுதலிற்று என்றாரேனும், இவ்வாறு பொருள்கோடல் ஆசிரியர் கருத்தென்க.

முறைமைபற்றியவியைபான் அதிகரணவியைபும், அவாய்நிலைபற்றிய வியைபாற் பாதவியைபும், ஆசங்கைபற்றியவியைபான் ஓத்தியைபும் பெறப்பட்டன. அதிகாரவியைபு பெத்தத்தினின்ற நிலைபற்றி இலக்கணங்கூறுதல் மூன்றுசூத்திரத்திற்கும் ஒக்கும். நூலியைபு ஞானபாதப்பொருளி

யல்பாராய்தல். இவையிரண்டுங் கூறுமையே விளங்கும். இங்ஙனம் ஐவகையியையுங் கண்டுகொள்க.

அற்றேல், அஃது அங்ஙனமாக; மேலைச்சூத்திரத்தின் **அந்தம்** என்றது உத்தேசமாயின்றே அதன்பின் இலக்கணங்கூறுதல் முறைமைபற்றிய வியைபென்றதமையும், உத்தேசமாவது, பெயர்மாத்திரையாற் பொருள் புலப்படச் சொல்லுதலென்பது நியாயநூலார் துணிபாகலின், ஈண்டுப் பெயர்மாத்திரையானன்றி, ஆதி என்பதனுல் விசேடிக்கப்படுதலானும், **அந்தம்** என்றதும் வாளாபெயராய் நில்லாது, அந்தத்தைச்செய்யுங் கடவுளெனக் காரணக்குறியாய் ஏனையோரிற் பிரித்து இலக்கணந்தோன்ற நிற்றலானும், அதனை உத்தேசமென்றல் அமையாதாலெனின்,—அற்றன்று; * "பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப் பதிபசுபா சந்தெரித்தல்" என்புழிப், பதி பசு பாசமென்னும் உத்தேசம் தெரித்தலை விசேடித்து நின்றது; † "பசுபா சத்தொடு பதியாய் பெற்றி" என்புழி, ஆய்தற்குச் செயப்படுபொருளாய் நின்றது. இங்ஙனம் யாதானுமொன்றான் விசேடிக்கப்பட்டாதல் விசேடித்தாதல் நிற்றலன்றி, வாளாபெயராய்நிற்றல் யாண்டுமின்மையான், முன்னர்க் கூறப்படுவதாகிய இலக்கணத்தை அவாய்நிற்பதாய் எடுத்துக்கோடலே உத்தேசமெனப்படுமாகலின், **அந்தம்** என்றது உத்தேசப்பொருளென்றற்கு இழுக்கின்மை அறிக.

இதனை உத்தேசமன்றென்பார்க்கும் உத்தேசஞ்செய்யுங்காரியஞ் செய்தல்பற்றி உத்தேசமாகவைத்து இயைபுகோடல் பொருந்துமென்பது. உத்தேசஞ்செய்யுங் காரியமாவது முன்னர்க் கூறப்படும் இலக்கணத்தை அவாய்நிற்றலேயாமென்றுணர்க.

அற்றேல், ஒடுங்கியுளதாம் அந்தமாதி எனவே, முத்தொழிற்கும் வினைமுதலாதல் இறைவனுக்கு இலக்கணமென்பதூஉம் பெறப்பட்டமையின், ஈண்டு அவாய்நிற்றல் யாண்டையதெனின்,—நன்று சொன்னாய்! அதனாற் போந்ததாயினுந் துணைக்காரணமுதலியன உண்மைக்குப் பிரமாணங்கூறுதவழி வினைமுதலாதலே பெறப்படாமையின், அஃது இலக்கணமன்றாய் முடியும்; ஆகலின், அங்ஙனம் பொதுவகையான் எய்தியதனைச் சிறப்புவகையான் அவாய்நிற்றல் ஒருதலையென்க. யாண்டும் பொதுவகையான் உணர்ந்து சிறப்புவகையான் உணராததற்கே இலக்கணங்கூறப்படும். பொதுவகையான் உணராக்கால் இலக்கணத்தை அவாவுமாறில்லை; சிறப்புவகையான் உணர்ந்தவழி இலக்கணத்தாற் பயனில்லையாகலானென்றுணர்க.

அற்றேல், பிரமாண வோத்துள் இலக்கணங்கூறுதல் முறைமையன்றாம்பிற வெனின், மேலைச் சூத்திரத்தான் நிமித்தகாரணம் உண்மைக்குப் பிரமாணங்கூறி, ஈண்டுத் துணைக்காரண முதற்காரணங்களது உண்மைக்குப் பிரமாணங்கூறிய தொடங்கினார்; அவை நிமித்தகாரணனாகிய இறைவனுக்குக் குணமும் உடைமையுமாய் இலக்கணக்கூற்றின் அகப்பட்டுநிற்றலின் வேறோதலாகாமையான் இலக்கணமும் உடன்கூறினாராகலின், ஆகாதென்க.

* சிவப்பிரகாசம், பொது, க. † ஞானமிர்தம், க, அடி - ந.

அவ்விலக்கணம் பொதுவியல்பு சிறப்பியல்பென இருவகைப்படும். முகிற்படலத்தின் மறைந்து சிறிதே தோன்றும் இரண்டாநாளைப் பிறையைக் காணலுறுவார்க்கு நுனிக்கொம்பின்கண்ணது திங்களென்றல் பொதுவியல்பு. அதுபற்றி ஆண்டு உற்றுநோக்கியவழிப் பேரொளியாற் றண்ணென்ற கிரணங்களையுடையது திங்களென்பது சிறப்பியல்பு. இங்ஙனம் பொருடோறுங் கண்டுகொள்க.

அவற்றுள், ஈண்டுக் கூறப்படும் இலக்கணம் பொதுவியல்பென்க.

அஃது அங்ஙனமாக; முதலுற்பவம்வருமாறுணர்த்தாது புனருற்பவம்வருமாறுணர்த்துவது என்னையெனின், பிரபஞ்சம் அநாதியாகலின், அம்முதற்கோடி நம்மனோரான் அறியவாராமையானும், ஒடுங்கியின் மீள உளதாமாறே ஈண்டு அவாய்நிலையான் உணர்த்தநின்றதாகலானும் அதுவே கூறினாரென்பது.

அற்றாயினும், முதற்கணுற்பவமாமாறு இவ்வியல்பிற்றென்பது, * "பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்—முற்பாற்—றநுகரண மும்புவன முந்தந் தவற்றான்—மனமுதலாய் வந்தவிகா ரத்தால்—வினையிரண்டுங்—காட்டி" என்பதனான் அறிக. ஈண்டுத் "தநு" என்றது சூக்குமதேகத்தை. "மனமுதலாய்" - மனங்காரணமாயென்க. † "விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" எனவும், † "விண்ணு மண்ணகமுழுதும் யாவையும்—வைச்சு வாங்குவாய்" எனவும் ஓதிய திருவாக்கானும் இவ்விருவேறுவகையுங் கண்டுகொள்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—மேலைச் சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட சங்காரகாரணனாகிய முதல்வன் கலப்பினால் உடலின் உயிர்போல அவ்வான்மாக்களேயாய்ப், பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல அவற்றின் வேறுமாய், உயிர்க்குயிராதற்றன்மையானே கண்ணொளியின் ஆன்மபோதம்போல உடனுமாய்நின்று, ஆணையென்னும் பரியாயப்பெயருடைய தனது சிற்சத்தியான்வரும் இருவினைகளான் அவ்வான்மாக்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரியும்வண்ணம் அவ்வாணையிற் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பனென்றவாறு.

அவையேதானேயாய் என்பதனை இரட்டுறமொழிதலான் அவையேயாய்த் தானேயாய் அவையேதானேயாய் எனக் கூறிப் பொருளுரைக்க.

ஆய் என்பது யாண்டுங் கூட்டப்பட்டது.

வழிநூல்செய்த ஆசிரியரும் இக்கருத்தேபற்றி ‡ "உலகெலா மாகி வேறா யுடனுமாய்" என்றார். ஒடுங்கியுளதாம் என்றதற்கேற்ப ஈண்டும் போக்கினை முற்கூறினார்.

புரிதல் - எப்பொழுதும் மேற்கோடல்.

* போற்றிப்பஃறொடை, அடி - உஉ.  † திருவாசகம், திருச்சதகம், கஙு.
‡ சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், க.

ஆணையின் என்பது சிங்கநோக்காய் இருவினையின் என்பதனோடும், நீக்கமின்றி நிற்கும் என்பதனோடும் இயைந்து பொருடந்துநின்றது. ஆண்டு இன் உருபு இருவினை என்பதனோடு இயையுங்கால் ஏதுப்பொருட்கண்ணும், நீக்கமின்றி என்பதனோடு இயையுங்கால் நீக்கப்பொருட்கண்ணும் வந்தது. இன் என்பது சாரியையெனக் கொண்டு ஈரிடத்தும் ஏற்குமுருபுகள் விரித்துரைத்தலும் ஒன்று. அன்றே - அசை; அநாதியே இவ்வாறு நிற்குமெனினும் அமையும். ஆய்ப் புரிய நிற்கும் எனக் கூட்டுக.

ஆய்ப் புரிய நிற்கும் எனவே, அங்ஙனம் நின்று ஐந்தொழில்செய்யுங் கருத்தாவாதல் முதல்வனுக்கு இலக்கணமென்பதூஉம், ஆணையின் இருவினையின் எனவே, தனது சிற்சத்தி துணைக்காரணம், இருவினை அதன் வழித்தாய துணைக்காரணம், இருவினையின் எனவே, இருவினைக்குப் பற்றுக்கோடுண்மையும் பெறப்பட்டமையின், அது முதற்காரணமென்பதூஉம், இருவினையிற் போக்குவரவு புரிய எனவே, ஒடுங்கியின் மீளவுளதாங்கால் இருவினைகட்கேற்பப் பலவேறுவகைப்பட்டு விரியுமென்பதூஉம் போந்தவாறு உணர்க.

படைப்புமுதலிய ஐந்தனுள் ஒன்றற்கு வினைமுதலாதல் முதல்வனுக்கு இலக்கணமெனல் அமையுமேனும், ஏனையவற்றின் ஐயப்பாடு நீக்குதற்கு ஐந்தொழிற்கும் வினைமுதலாதல் இலக்கணமென்றார்.

தோற்றம் நிலை இறுதி மறைப்பு அருளென்னும் ஐந்தொழிலும் தூலம் சூக்குமம் அதிசூக்குமம் என்று மூவகைப்படும்.

அவற்றுள், தூலமாகிய தோற்றமும் இறுதியும் பிரபஞ்சத்தின் தோற்றமும் ஒடுக்கமுமென்பது வெளிப்படை. நிலை - தோன்றியபிரபஞ்சம் ஒடுக்கம் வருங்காறும் நிலைபெறுதல். மறைப்பு அருள் என்பன பந்தமும் வீடுமென்று உணர்க.

அற்றேல், தோற்றமுதலியனபோல நிலைத்தொழிலும் முதல்வன் காரியமென்றது என்னை? தோற்றிய பிரபஞ்சஞ் சங்கரிக்கப்படுமளவுந் தானேநின்று நிலைபெறும். இதற்கு இறைவன் வேண்டா. * தன்னொடு பகைவரால் அழிவின்றி நிலைபெறுத்துதல் அரசன்றொழிலானாற்போலப், பிரபஞ்சத்தைச் சங்கரிப்பார் வேறு உளராயினன்றே அவரைத் தடுத்துப் பிரபஞ்சத்தை நிலைபெறுத்துதல்வேண்டும். முதல்வன் சங்கரியாது நிற்குமளவும் வேறு சங்கரிப்பாரின்மையின், நிலைத்தொழில் முதல்வன்காரியம் அன்றாலோவெனின்,—நன்று சொன்னாய். ஒருகாலத்து ஒருங்குதோன்றிய பொருள் இரண்டனுள் ஒன்று நெடுங்காலநிற்றலும், ஒன்று சிறிதுகால நிற்றலுமாகிய நிலைவேறுபாடுண்மையின், இந்நிலைவேறுபாடு இதற்கேதுவாகிய வினைவேறுபாட்டான் † ஆயிற்றென்னும். அவற்றுட் சேதனப்பிரபஞ்சத்திற்குத் தம்முள் நிலைவேறுபாடு தத்தம் வினைவேறுபாட்டானாயதெனவுங் கொள்ளப்படும். அவ்விருவேறுவினையும் முதல்வ

* தன்னூறு எனவும் பாடம். † ஆயிற்றென்றல் அமையும் எனவும் பாடம்.

ணையானன்றி வாராமையான் நிலைத்தொழிலும் முதல்வனாற்செய்யப்படுங் காரியமாதல் அறிக.

இன்னும், தண்ணீர்க்குடம் நிலைபெறுதல் அதனைத் தாங்கிச் செல்வோனது முயற்சியின்றி அமையாதவாறுபோலத் தோன்றியபிரபஞ்சம் ஒடுங்குமளவும் நிலைபெறுதலும் முதல்வனது முயற்சியின்றி அமையாதென்றுணர்க. அம்முயற்சியாவது தோன்றியபிரபஞ்சம் ஒடுக்கம்வருங்காறும் நிலைபெறுக என்னும் ஆணையாகிய சங்கற்பமேயெனக் கொள்க.

இனிப், பிரபஞ்சத்துட்பட்ட உயிர்ப்பொருளும் உயிரில் பொருளும் முதல்வனாணையால் ஏவப்படுந் தத்தங்காரியத்தினெல்லையைக் கடவாமனிற்றல் நிலையென்பாரும் உளர். அதுவும் நிலையென்பதனால் அடங்கும்.

அஃது அங்ஙனமாக; மறைப்பாவது அநாதியாய மூலமலத்தின் காரியமாதலின், அது முதல்வனாற் செய்யப்படுங் காரியமென்பது என்னையெனின், கூறுதும்: முதல்வனுவான் முற்றுணர்வுடைமையின், உலகத்துயிர்கள்படுந் துன்பமுழுவதும் உணர்ந்தோனாகியும்; பேராற்றலுடைமையான், உயிர்களையெல்லாம் ஒருங்கே வீடுபேறடைவிக்க வல்லனாகியும்; சிவன் சங்கரன்முதலிய பெயர்களானும் அறியப்படுவதாய், விருப்பு வெறுப்பின்றி, எல்லாவுயிர்கண்மாட்டும் ஒப்ப நிகழ்வதாய்த், தொடர்புபற்றாது, பிறர் துன்பங்கண்டுழி அதனை அக்கணமே நீக்குதற்கு விளையும் மனவெழுச்சியாகிய பெருங்கருணையுடைமையான், அவற்றை ஒருங்கே வீடுபேறடைவித்தற்கண் ஒருப்பாடு மிக்குடையனாகியும்; இத்தன்மைகளெல்லாமுடைய இறைவன் உயிர்களால் அநாதிமுதல் ஈட்டப்பட்டுப் பலவேறுவகைப்பட்ட துன்பங்களையெல்லாம் விளைவிக்கும் வினைவலியினையும், எல்லாப்பெருங் கொடுமைக்கும் மூலமாகிய சகசமலசத்திகளையும், அவற்றான்வருந் துன்பங்களையுங் கெடுத்து, எல்லாவுயிர்களையும் ஒருங்கே வீடுபேறடைவியாமைக்குக் காரணம்: உடங்கையினேந்திய தீயின்சூட்டினை நிகழவொட்டாது தனக்கு மாறாகிய மந்திரமுச்சரிக்குங்காலுந் தடுத்துநிற்குங் குளிகைபோல, அம்முதல்வனைச் சிறப்பியல்பான் உணரும் மெய்யுணர்வு தோன்றுங்காறும் அவனது பெருங்கருணை உயிர்கண்மாட்டு ஒருங்கே நிகழாதவண்ணந் தடுத்துநிற்கும் உயிர்க்குற்றமாகிய அவ்வம் மலசத்தியின்வழி நின்று அவற்றை நடாத்துவதாகிய அவனது சங்கற்பமேயன்றிப் பிறிதில்லையென்பது பெறப்படுதலின், அங்ஙனம் நடாத்துவதாகிய முதல்வனது சங்கற்பமே ஈண்டு மறைப்பெனப்படும். * "பந்தமு மாய்வீடு மாயினருக்கு" என்புழிப் பந்தமென்றதூஉம் அது. இங்ஙனமாகலான் மறைப்பு முதல்வன் செய்யுங் காரியமாதல் அறிக. அது முதல்வன் றொழிலாகலானன்றே உயிர்களுக்கு அறிவுந் தொழிலும் இடையிடையே விளங்கியும் அடங்கியுஞ் சோபானமுறையான் மேற்பட்டு நிகழ்வதூஉமென்க.

இனி, ஒருசாரார் இழிந்தனவாகிய விடயங்களின் அவ்விழிபினை மறைப்பது திரோபாவமென்பர். காண்போனை மறைக்கும் மலமாயை

* திருவாசகம், திருப்பொற்சுண்ணம், ௨௰.

மறைத்தல் - மலத்துக்கடை.

கன்மங்களின் வேறாய்க் காட்சிப்பொருளை மறைப்பதொன்று உண்டென்பதற்குப் பிரமாணமின்மையின், விடயங்களினுளதாகிய இழிபினை உணராமைக்கேதுவாய்க் காண்போனைமறைப்பதே அவ்வாறு வழங்கப்படுமாகலின், அது பொருளான் வேறன்மை உணர்க. மலத்தை மறைப்பது திரோபாவமென்பாரும் உளர். அஃது அருளென்னுந் தொழிலின் வேறன்மை உணர்க. இன்னும் அவரவர் கூறுவனவெல்லாம் பொருந்தாமை ஓர்ந்துணர்க. * "ஏயுமும் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந்—தூயவன் றனதோர் சத்தி திரோதான கரியது" என்பவாகலான், ஈண்டு யாங் கூறியதே ஆசிரியர் கருத்தாதல் காண்க.

அருளென்பது வெளிப்படை.

இனிச், சூக்குமமாகிய ஐந்தொழிலாவன, சங்கரித்தபின்னர் மேற் செய்யக்கடவனவாகிய தூலவைந்தொழிற்கு யோக்கியமாம்படி கேவலத்தின்கண் நிகழ்த்துவனவாம். அது † மிருகேந்திர ஞானபாதத்தின் நான்காம் படலத் திறுதியிற் காண்க. அதிசூக்குமமாகிய தோற்றமுதலிய ஐந்தும் அவ்வவ் விடயநுகர்ச்சிதோறும் நிகழ்தல் கண்டுகொள்க. அவையெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும்.

அற்றேல், மேலைச்சூத்திரத்தின் மூவினைமை என்றெழிந்தார். ஈண்டுப் போக்குவரவுபுரிய என்றெழிந்தார். ஆகமங்களினும் முதல்வனுக்கு இலயம் போகம் அதிகாரமெனவும், ஆரணி ஜநநி ரோதயித்திரியெனவும் முத்தொழில்பற்றி மூன்றவத்தையும் மூன்றுசத்தியுமே கூறப்பட்டன; ஆகலான், மறைப்பும் அருளும் உடன்கூட்டி ஐந்தொழிலென்பது யாண்டுப் பெற்றுமெனின்,—நன்றுசொன்னாய்! மறைப்பாவது வினைநுகர்ச்சிக்கண் அதன்வழிநின்று நடாத்துவதாகிய முதல்வனது சங்கற்பமேயாகலின், அது திதியின்கண்ணும், வீடுபேறுவது மீட்சியின்றி இலயித்தலேயாகலின், அது சங்காரத்தின்கண்ணும் அடங்குமென்பதுபற்றி, முத்தொழிலெனத் தொகுத்துக் கூறப்படும். மறைப்பினுள் ஏனையமூன்றும் அடங்குதல்பற்றிப், ‡ "பந்தம் வீடு தரும் பரமன்" என இரண்டுதொழிலாகவும் வைத்து ஓதப்படும். விரித்துக் கூறுங்கால் ஐந்தொழிலென்றலே எல்லாவாகமங்கட்குந் துணிபென்க.

---

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், அஎ. † ஸாவெவ்யாவெஷு வொயயநு வொயயொஹ்யாநு ரொயஹ்யாநு ஈஹநு வாவயநுகஹி-கூ௨-௶ ஊயாஶக்தீவ-ஹ்யாக்தியொஹ்யா: வ ரகூவ-நு வஶ்யநு ஸவ-ம் யக்ஷ்யா வஷூ ஜாதழ || என்பது மிருகேந்திர ஞானபாதத்தின் நான்காம்படலத்திறுதிச்சுலோகம். இ - ள். ஒடுங்கியகாலத்தினும், அறிவித்தற்குரியாரை அறிவித்தும் மறைத்தற்குரியாரை மறைத்தும் உயிர்களின் வினையைப் பக்குவப்படுத்தியும் மாயாசத்திகளை வெளிப்படுதற்குரியனவாகச் செய்தும் இங்ஙனந் தூலமாகத் தோன்றுதற்குரிய எல்லாப் பொருள்களையும் நோக்கிநிற்பன் முதல்வன் என்பதாம். இச்சுலோகம், வைஷம்மிய நைர்க்கிருண்ணியாதிகரணத்திறுதியிற் சிவார்க்கமணி தீபிகையினுங் காட்டப்பட்டது. ‡ பெரியபுராணம், தடுத்தாட்கொண்டபுராணம், கஙூ.

இதனுள், அவையே தானேயாய் என்பது ஓரதிகரணம். ஆணையி னிரு வினையின் என்பது ஓரதிகரணம். போக்கு வரவு புரிய என்பது ஓரதிகரணம். ஆணையி னீக்கமின்றி நிற்கும் என்பது ஓரதிகரணம். ஆக நான்கதிகரணத் தது இச்சூத்திரமென்றுணர்க.

அவற்றுள்
முதலதிகரணம்.

~~அவற்றுள், முதலதிகரணம்.~~

ஈண்டு இவ்வான்மாக்கள்பலவும் முதல்வன் ஆணையாய் நிற்குமென்றது

எனவரும்.

அவையே தானேயாய் என்புழிச் சுட்டுப்பெயர் பொதுச்சொல்லாய் மேல்வந்ததொன்றனைச் சுட்டிநிற்பதன்றித் தனக்கெனப் பொருளுடைத் தன்றாகலின், அவை என்றது மேலைச்சூத்திரத்தின் அவ னவ ளதுவெனு மவை என்றதனாற் பெறப்படுஞ் சடப்பொருளும், அதனையொட்டித் தோன் றுஞ் சேதனப்பொருளுமென்னும் இருகூற்றுப் பிரபஞ்சத்தினையுஞ் சுட்டி யதோ? அன்றி முற்படத்தோன்றுஞ் சடப்பொருண்மாத்திரையே சுட்டி யதோ? என்னும் ஆசங்கையை நீக்குதற்கு இவ்வான்மாக்கள்பலவும் என விதந்துரைத்தார். அணிமைக்கட் கூறிப்போந்த அந்தமாதி என்ற அதி கரணத்தானே விலக்கப்பட்டுநின்ற சேதனப்பொருணிற்ப அதனையொழித் துச், சேய்மைக்கட் கூறிப்போந்த அவனவளது வெனுமவை என்பதனைச் சுட்டுமென்பது பொருந்தாமையின் ஆசங்கை நிகழாதாயினும், சிவாத்து விதசைவர் தமது மதத்திற்கேற்பச் சடப்பொருண்மேல்வைத்துப் பொருள் கொள்வர்; அதனை மறுத்தற்பொருட்டு இவ்வான்மாக்கள்பலவும் என்று ரென்க. முதல்வன் என்றது மேலைச்சூத்திரத்தினின்றும் எடுத்துக்கொள் ளப்பட்டது. ஈண்டும் இவ்வான்மாக்கள்பலவுமாய்த் தானேயாய் இவ்வான் மாக்கள்பலவுந் தானேயாய் என்றுரைத்துக்கொள்க.

அற்றேல், அவை என்பது, சடப்பொருளைச் சுட்டியதாயின், புனருற் பவஞ் செய்யுங்காற் காரணரூபமாய்நின்ற அப்பிரபஞ்சத்துடன் ஒன்றாயும் வேறாயும் உடனாயுநின்று செய்வனெனப் புனருற்பவம் வருமாறுணர்த் திப் பயன்படுமென்பது பெறுதும். அங்ஙனமன்றிச் சேதனப்பொருளைச் சுட்டிவரின் ஒருவாற்றானும் ஈண்டைக்காவதோர் பயன்படாமையின், இவ் வதிகரணம் வெற்றெனத் தொடுத்தலாய் முடியுமாலெனின்,—அறியாது கடாயினாய்; மேலைச்சூத்திரத்தின் முழுவதுஞ் சங்கரிக்குஞ் சங்காரகாரணன் யாவன், அவனே ஐந்தொழிலுஞ்செய்வன்; அவ்வைந்தொழில் செய்வோன் உலகிற்கு முதற்கடவுளென்பது போந்தது; ஆண்டு இவ்வாறு ஆசங்கை நிகழும்:—

முதல்வன் ஐந்தொழில்செய்தல் தன்பொருட்டோ? பிறர்பொருட் டோ? வீணோ? தன்பொருட்டெனின்,—வரம்பிலின்பமுடைய முதல்வ

னுக்கு இச்செய்கையான் வரக்கடவதோர் பயனில்லை. உயிர்களின்பொருட்டெனின்,—உயிர்களும் அவனும் அபேதமோ? பேதமோ? பேதாபேதமோ? பொன்னும் பணியும்போல் அபேதமாயின், அது தன்பொருட்டேயாம். இருளும் வெளியும்போற் பேதமாயின், அவ்வுயிர்களின்பொருட்டு ஐந்தொழில்செய்தற்கு ஒருவாற்றானும் இயைபில்லை. சொல்லும் பொருளும்போற் பேதாபேதமெனின், அபேதமும் பேதமுமாமென்றல் சமணர்கூறும் அநேகாந்தவாதமாம். சொல்லும்பொருளும் வேறேயாயினுஞ் சொல்வந்தெழலும் பொருடோன்றுதல்பற்றி அபேதமென்பார் மதத்தை ஒருவாற்றான் உடம்பட்டுப் பேதாபேதமென்னுந் துணையேயன்றி, ஒருபொருட்கு இரண்டுதன்மைகோடல் பொருந்தாமையின், அது போலியேயாம். இங்ஙனமாகலின், பிறர்பொருட்டென்பது பொருந்தாது. இனி, அவ்வாறன்றி வினையெனின்,—பித்தர்செய்யுந் தொழிலோடொக்கும். பித்தரேயன்றி, அறிவான்முதிர்ந்த அரையர்முதலியோரும் வேட்டையாடுதல் சூதாடுதல் உயிர்த்தல் இமைத்தல் ஆவித்தல் தும்முதல் முதலிய வீண்டொழில் செய்யக்காண்டலின், முதல்வனும் அவ்வாறு கொன்னேசெய்தல் அமையுமெனின்,—வேட்டையாடுதல் புலிமுதலிய விலங்குகண்மிக்கு நாடு நலியாமைப் பொருட்டாதல், தமக்கு மடிமைவாராமைமுதலியவற்றின் பொருட்டாதல், உணவின்பொருட்டாதல் யாதானுமொரு பயன்குறித்தன்றிச் செய்யாமையானும்; சூதாடுதல் வஞ்சனையாற் பகைவரை வெல்லுதற்கு உபாயமறிதற்பொருட்டாதல், பணையம்பேசிப் பொருளீட்டற்பொருட்டாதல் யாதானுமொரு பயன்கருதியன்றிச் செய்யாமையானும்; உயிர்த்தல் உயிர்நிலையின்பொருட்டாகலானும், இமைத்தல் விழியைப் பாதுகாத்தற் பொருட்டாகலானும், ஆவித்தல் தும்முதல் முதலாயின தங் குறிப்பினன்றிக் காரணத்தான் நிகழ்தலானும், இளஞ்சிறார்செய்யுஞ் சிறுதேருருட்டல் சிற்றிலிழைத்தல் முதலிய விளையாடற்றொழிலும் போர்முகத்திற் றேர்நடாத்துதல் அட்டிற்றொழில்வன்மை முதலியன சோபானமுறையாற் பயிலுதற்பொருட்டு இருமுதுகுரவர் முதலியோராற் செலுத்தப்பட்டு நிகழ்தலின், அவை அப்பெரும்பயனுடையவாய், அவ்விளமைப்பருவ மாத்திரையின் மகிழ்ச்சிமீதூர்தலாகிய அற்பபயனும் உடையவாகலானும், அவையெல்லாம் வீண்டொழிலன்மையின், வீண்டொழிலெல்லாம் பித்தர் முதலியோர் செய்யுந் தொழிலேயாம். இங்ஙனமாகலின், ஐந்தொழில்செய்வோன் முதல்வனென்றல் இலக்கணவழுவாமென்று ஆசங்கை நிகழ்ந்தவழி, அதனை நீக்கி, வேறாயினுங், கலப்பினால் அவையேயா மியைபுடைமையின், உயிர்களின்பொருட்டே முதல்வன் ஐந்தொழில்செய்வன்; ஆகலான், இலக்கண வழுவாமாறு யாண்டையதென்று ஒருதலையான் இறுக்கவேண்டுதலின், அங்ஙனமிறுத்தற் பயத்ததாய்ப் போந்த அவையே தானேயாய் என்பது ஈண்டைக்குப் பயன்படாமை யாண்டையதென்க.

* "முன்னவன் விளையாட் டென்று மொழிதலுமாம்" எனவும், † "ஏற்றவிவை யரனருளின் றிருவிளையாட் டாக வியம்புவர்கள்" எனவும்,

* சிவஞானசித்தி, முதற்சூத்திரம், ௩௬. † சிவப்பிரகாசம், பொது, ௬.

* "காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி" எனவும் பிறண்டும் இவ்வாறே ஐந்தொழில்செய்தல் † விளையாட்டென்றது ஐங்கலப்பாரம் பொறுத்தல் சாத்தனுக்கு விளையாட்டென்பதுபோல அத்துணை எளிதிற் செய்யும் ஆற்றலுடைமைபற்றியே பிறிதில்லையாகலின், அஃதறியாது விளையாட்டென்றதே பற்றி வீண்டொழி லென்றல் சிறிதும் ஏலாமையறிக.

இன்னும், ஒரு விடயத்தைக் காணுங்கால் ஆன்மபோதம், கண்ணொளியெனத் தானென வேறின்றி, உடனாய்நின்று காணுமாறுபோல, முதல்வன் ஐந்தொழில்செய்யுங்கால் உயிர்களினுடனாய்நின்று செய்வனெனப் புனருற்பவம் வருமாறுணர்த்துதலையும் பயந்தமை காண்க. அவையேயாய்த் தானேயாய் என்பதனால் இலக்கணவழுவின்மையும், அவையே தானேயாய் என்பதனாற் புனருற்பவம் வருமாறுணர்த்துதலும் பயத்தற்கன்றே ஆசிரியர் இங்ஙனம் இரட்டுறமொழிந்ததூஉமென்க.

வடமொழி இரண்டாஞ் சூத்திரத்தினும், ‡ "புமான்களுக்கு" என்று எடுத்துக்கொண்டமையின், ஆண்டு இயைபில்லாத சடப்பொருளை வருவித்துரைத்தல் பொருந்தாமையறிக.

அல்லதூஉம், "அது நீயாகின்றாய்" எனவும், "அதுவானேன்" எனவும், "அது இது" எனவும், "அது நான்" எனவும், பொருள்படுந் "தத்துவமசி" முதலிய மகாவாக்கியங்களின் பொருளே ஈண்டு எடுத்தோதினாராகலின், ஆண்டைக்கியைபில்லாத சடப்பிரபஞ்சத்தை வருவித்துரைத்தல் பொருந்தாமை அறிக. மகாவாக்கியப்பொருளாகலானன்றே பயனோத்துள், § "அவனே தானே யாகிய வந்நெறி" என இதனை அநுவதித்துச் சுட்டியதூஉமென்க.

இன்னும், ஆன்மாக்களின் முதல்வன் நிற்குமாறுகூறவே அவ்வான்மாக்களின் வியாப்பியமான மாயை கன்ம மாயேயங்களினும் அவ்வாறே நிற்பனென்பது போதருமாகலின், அது வேறுகூறவேண்டாமையும் உணர்க.

அற்றேல், முதல்வன் இங்ஙனம் மூன்றுவகையுமாய் நிற்பனென்றற்குப் பிரமாணமென்னையெனின், மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நியநாத்தியை யுணர்த்துமாயிட்டு

எனவரும்.

இதன்பொருள், வேதத்துள் அத்துவிதம் என்ற சொல்லே இம்மூன்றற்கும் பிரமாணம். அஃது எவ்வாறெனின், "துவிதம்" என்பது இரண்டென்னும் பொருட்டு. "அ" என்னும் "நகரம்" அப்பிரகாசமென வருமொழிப்

* திருவாசகம், திருவெம்பாவை, கஉ. † இது, நீலகண்டபாடியத்தில், லீலாகைவல்லியாதிகரணத்துச் சிவார்க்கமணி தீபிகையினுங்காண்க. ‡ [illegible]

§ இந்நூல், பத்தாஞ்சூத்திரம்.

பொருளின் இன்மையினையும், அதன்மமெனை வருமொழிப் பொருளின் மறுதலையினையும், அப்பிராமணனென வருமொழிப்பொருளின் அன்மையினையும் உணர்த்திநிற்கும். அவற்றுள், ஈண்டு இன்மைப்பொருள்பற்றி இரண்டில்லையெனப் பொருள்கொள்ளின் இரண்டின்மை ஒன்றின்கண்ணேயாதலின், ஒன்றெனப் பொருள்படும். மறுதலைப் பொருள்பற்றி இரண்டற்கு மறுதலையாகிய ஒன்றெனப் பொருள்கொள்ளின், மறுதலை இருபொருட்கண்ணதாகலின், அதன் மறுதலையாகிய இரண்டாவதுண்மையும் பெறப்படும். படவே, இரண்டு, ஒன்று என்பது பதிப்பொருள் ஒன்றன்றென்னுங் கருத்தேனப் பொருள்படும். அன்மைப்பொருள்பற்றி இரண்டல்லவெனப் பொருள்கொள்ளின், இருபொருள்களும் வேறன்றி உடனாய் நிற்குமெனப் பொருள்படும். இம்மூன்றனுள் இன்மைப்பொருள் சிறந்தமையின் அதுபற்றி ஒன்றென்றல் பொருத்தமுடைத்தெனின், தானே தன்னை ஒன்றெனக் கருதல் வேண்டாமையின் அங்ஙனங் கருதும்பொருள் வேறொன்று உண்டென்பது பெறப்படுமாகலானும், எண்ணுப் பெயர்மேல் வந்த நகரம் அன்மைப்பொருண் மாத்திரையேயுணர்த்திப் பொதுமையினிற்பதன்றி, ஏனைச் சொற்களின்மேல் வந்த நகரம்போல இன்மை மறுதலைப் பொருள்களையும் உணர்த்துதல் வழக்கின்கணின்மையின், அத்துவிதமென்ற மொழிதானே பிறிதுகாரணம் வேண்டாது வேறன்மையை உணர்த்திநிற்குமாகலானும், ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் றனேயாய் நிற்கும் என மேற்கொண்டதென்றவாறு.

ஆகலானென்பது ஆய் எனத் திரிந்துநின்றது; மழைபெய்து குளநிறைந்தது என்புழிப்போலென்க. *"நெஞ்சம் பிளந்திட்டு" என்புழிப் போல இட்டு என்பது பகுதிப்பொருள் விகுதி. வார்த்திகமாகிய பொழிப்புரையுஞ் செய்யுளாகலின், அங்ஙனங்கூறினர். ஆகலானென்பதற்கு ஆயிட்டென்பது அக்கால வழக்கென்றலும் ஒன்று. அற்றாகலினன்றே * "நீயோ செய்யாய் நின்மலனயிட்டு" என்றார் வழிநூலாசிரியரும்.

எண்ணும்மை விரித்துரைக்க.

வேறின்றி யுடனுமென்பது பெறப்படவே; பொருண்மையாற் பேதமென்பதூஉம், கலப்பினால் அபேதமென்பதூஉந் தாமே போதருமென்பது கருத்து. "கலப்பினால்" "பொருண்மையால்" "உயிர்க்குயிராதற் றன்மையால்" என்னும் ஏதுக்கள், † "அரக்கொடுசேர்த்தி" என்னும் வெண்பாவில் "உடங்கியைந்து" எனவும், "நின்று" எனவும், "பிரிப்பின்றி" எனவும் மூவகைப்படுத்தோதிய சொற்குறிப்புப்பற்றி எடுத்துக்கொள்ளப்பட்டன.

அற்றேல், இங்ஙனம் மூன்றுவகையாகக் கூறுதல் அநேகாந்தவாதமாமெனின், ஆகாதென்பது உவமைமுகத்தான் உணர்த்தி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணங்களுள், அவையேயாதலை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

* இருபாவிருபஃது, ச - அடி. உசு. † இந்நூல், பக்கம், ௧0௩.

† "இலக்கண மிலக்கிய முறையைப் பெயர்பட் டுரைக்குமென் றன்றாக செய்யுளியல்பே" என்ப தறு மிலக்கிறிக.

கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள
மிட்டதொரு பேரழைக்க வென்னென்றுங்—கொட்டி
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு

எனவரும்.

இருவர் கைகோத்துநின்றுழியும் அவருள் அழைக்கப்பட்டோனே யன்றி ஏனோன் என்னையென்றல் உலகத்தின்மையின், உடம்பிற்கிட்ட பெயரான் அழைத்தவழி உயிர் என்னென்றற்குக் காரணம் பிறிதோராற்றாற் பெறப்படாமையின், அவ்வுயிர் உடம்பெனத் தானென வேறுபாடின்றி அபேதமாய்நிற்றல் பெற்றாம். அதுபோல முதல்வனும் உயிர்களின் அபேதமாய் நிற்பனென்பார், கட்டுமுறுப்புங் கரணமுங் கொண்டுள்ள மிட்டதொரு பேரழைக்க வென்னென்றுங் கொட்டி என்றும், அங்ஙனம் ஒன்றாயவழியும் ஒன்றாகாமைக்கு அநுபவங்காட்டுவார், அவனுளமாகில்லா னுளமவனு மாட்டா தவனுளமா யல்லனுமா மங்கு என்றுங் கூறினார்.

கட்டுமுறுப்பு - நரம்புமுதலியவற்றாற் கட்டப்படும் உடம்பென்க. உறுப்பு-ஆகுபெயர். என்னென்பது என்னென மரீஇயிற்று. ஒட்டி என்பது பெயர். வினையெச்சமெனினுமமையும். அங்கு-அதுபோல.

இதனானே அவையேயாதல் வலியுறுத்தப்பட்டவாறு காண்க.

அற்றேல், வேதத்துள் அத்துவிதமென்றதூஉமன்றி, * "ஏகமே" எனவும் ஓதுதலின் அது வேறுபொருள்படாமையான், அதற்கு மறுதலையாய் உயிர்களோடு ஒட்டிநிற்பனெனப் பேதப்படக்கூறுதல் பொருந்தாதாலெனின், அச்சொற்குத் தாற்பரியங்கூறித் தானேயாய் என்பதனை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளைகா—ணொன்றின்றா
லக்கரங்க ளின்றா மகர வுயிரின்றே
லிக்கிரமத் தென்னு மிருக்கு

எனவரும்.

வேதத்துள் "ஏகம்" என்றசொல் வேறுபொருள் படாதென்பார், ஒன்றென்றதொன்றே என்றும், அதற்குத் தாற்பரியங் கூறுவார், † "விண்ணும் மண்ணுந் தோற்றுவிக்குந் தேவன் ஒருவனே" என்றும், ‡ "ஒருவனே யுருத்திரன் இரண்டாம் முதற்கடவுளில்லை" என்றும், § "பிரமப்

* ஏகமேவாத்விதீயம் | சாந்தோக்கியம். ௬. ௨. ௧. † த்யாவா பூமீ ஜநயந் தேவ ஏகஃ | சுவேதாச்சுவதரம், ௩. ௩. ‡ ஏகோ ஹி ருத்ரோ ந த்விதீயாய தஸ்தே | ஷை, ௩. ௨. § ப்ரஹ்மவா இதமக்ர ஆஸீதேகமேவ | பிருகதாரணியகம், ௧ - ௪ - ௧௧.

பொரு ளொன்றே" என்றும் ஓதுகின்ற அச்சுருதிப்பொருளைபற்றி ஒன்றேபதி என்றும், பதியோடு உயிர்களிடை வேற்றுமைகூறுவார், பசுவா மோன் றென்றநீ என்றும், பசுவாதற்குக் காரணங் கூறுவார், பாசத்தோடுளே காண் என்றும், * "பிரமப்பொரு ளில்லையாயின் ஒருபொருளுமில்லை" என் பதோர் சுருதிப்பொருள் இதனோடு முரணாமை அதன் தாற்பரிய முணர்த்து முகத்தான் அங்ஙனம் வேறுயினும் வேறன்மைக்கு அநுபவங்காட்டுவார், ஒன்றின்று லக்கரங்க ளின்று மகர வுயிரின்றே லிக்கிரமத் தேன்னு மிருக்கு என்றுங் கூறினர்.

இதனல் தானேயாதல் வலியுறுத்தப்பட்டவாறு காண்க.

மெய்கள் அகரமொடு சிவணியன்றி இயங்காமையானும், இகர ஈகார உகர ஊகாரங்கள் அகரத்திற்குரிய அங்காப்புமுயற்சியொடு சிவணியன்றிப் பிறவாமையானும், ஏகார ஓகாரமுதலாயின முன் அகரக்கூறும் பின் இகர உகரக்கூறுகளுமாய் இயைந்தன்றிப் பிறவாமையானும், அவையெல்லாம் அகரமாகிய உயிரையின்றி யமையாமை பெற்றும். அதுபோலப் "பிரம மில்லையாயின் ஒருபொருளுமில்லை" என்றதூஉம் * பிரமத்தையின்றி யமை யாமைப் பொருட்டென்பார், அக்கரங்க ளின்று மகர வுயிரின்றே லிக்கிரமத் தேன்னு மிருக்கு என்றார். அகரவுயிர் நாதமென் றுரைப்பாருமுளர்.

இன்றுனலென்பது இன்றல் என மரீஇற்று; "என்னுனுமொன்று" என்றாற்போல. இக்கிரமத்து - இக்கிரமத்தாலென விரிக்க. இன்று என்னு மொருமை அப்பண்பின்மேனின்றது. காண் என்பதனைப் பசு என்பதனோ டுங் கூட்டுக. ஆம் என்பது அசை. ஏகாரமுதலிய அன்னவாதல் மாபாடி யங் கைபடங்களின் வெளிப்படை. அது † சூத்திரவிருத்தியுளுரைத்தாம் ஆண்டுக்காண்க.

அற்றேல், ஏகமாகிய பிரமத்தை ஏகமென்றல் பொருந்தும். யாண்டும் அவ்வாறே ஏகமென்னது சிலவிடங்களில் "பிரமம் அத்துவிதம்" எனவும் பேதங்கூறியதென்னை? அத்துவிதம் இருபொருட்கண்ணதெனக் கொள் ளின் ஒருபொருளை அத்துவிதமென்றல் பொருந்தாதாலெனின்,—அவ் வாசங்கை நீக்குமுகத்தான் அவையேதானேயாய் என்பதனை வலியுறுத்து தற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண் ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்னு
தத்துவித மென்றறையு மாங்கு

எனவரும்.

---

* இது, வராவராழி ஜக-ெநாம ஶிமெவகஃ வ்ராண உவ்மெத। தംவிநாந வ்ரவ்ர்திஸ்ர ாரக்ஷாணாகோாவக । என்பதனுன் அறிக.

† தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, பக்கம், உரு.

ஆண்டுப் "பிரமம் அத்துவிதம்" என்றது பிரமம் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதென்னும் பொருட்டாகலான், அஃது "ஏகம்" என்பதனோடு முரணுமாறில்லை யென்பதாம்.

பண்ணை என்னும் ஐகாரம் பகுதிப்பொருள்விகுதி. பண் - பாலைப்பண் முதலாயின. ஓசை - எடுத்தல் படுத்தல் நலிதல் முதலாயின. ஆதல் - ஆதலானென்க. இதனானே அவையே தானேயாதல் வலியுறுத்தப்பட்டவாறறிக.

எங்குமா மண்ணருள் என விசேடித்தது குணமுங் குணியும்போல உடனாயும் அவ்வாறுடனாகாமைக்கு அநுபவங்காட்டியவாறு. வியாப்பியமும் வியாபகமுமாத லொப்புமை மாத்திரையேபற்றிக் குணகுணிகளை உவமை கூறினாரென்பது.

அற்றேல், இங்ஙனம் வேறுவேறு உவமைகூறுதல் ஏகாந்தவாத மன்றென்பார்க்கு ஏகாந்தவாதமாதல் உவமைமுகத்தாற் கூறி மூன்றனையும் ஒருங்கே வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப னின்று

எனவரும்.

கலப்பாய் நிற்றலான் உலகேயாம் என்பார், உடங்கியைந்து எனவும், பொருட்டன்மையான் வேறுநிற்றலால் தானேயாம் என்பார், நின்று எனவும், உயிர்க்குயிராய்நிற்றலால் தானேயுலகாம் என்பார், பிரிப்பின்றி எனவுங் கூறினார்.

ஈண்டும் இரட்டுற மொழிந்துகொள்க. உலகென்றது ஈண்டு உயிர்களை. இலனாகலானென்பது இன்றியெனத் திரிந்துநின்றது. இதனான் மூவகையும் ஒருங்கு கூறுதற்கு எடுத்துக்காட்டியவாறறிக.

அற்றேல், * வாமதேவ முனிவன் முதலியோர் "யானே உலகமாயினேன்" எனக் கூறுதலானும், சர்வஞ்ஞானோத்தரத்தின், † "யானே எல்லாமாய் நின்றேனும், யானே எல்லாவற்றினையுங் கடந்துநின்றேனும்,

* வாமதேவமுனிவர், சிவோகம்பாவனைபற்றி யானே உலகெலாமாயினேனென்றது, [Grantha text] என்றற்றொடக்கத்துச் சுருதிவசனங்களான் அறிக; இது, "[Grantha text] ॥" என்னுஞ்சூத்திரத்து நீலகண்டபாடியத்தினுங் காண்க.

† இது, [Grantha text] । [Grantha text] । எனவருஞ் சர்வஞ்ஞானோத்தரத்துச் சிவாநந்திய சாக்ஷாத்காரப் பிரகரண வசனங்களான் அறிக.

யானே எல்லாவற்றினையும் படைத்தளித் தழிப்பேனும்'' என்று ஆன்மாக் கண்மேல்வைத்துக் கூறுதலானும் முதல்வனோடொப்ப உயிர்களும் அவ் வியல்பினவாம்போலு மென்னுங் கடாவை ஆசங்கித்துத் தமியேனுளம் புகுதல்யானே யுலகேன்பனின்று என்றார். அம்முதல்வன் பாசக்கூட்டத்தி னீங்கித் தனியாய்நின்ற என்னகத்துச் சோகம்பாவனையாற் புகுந்து வேற் றுமையின்றித் தோன்றலான் யானே யுலகெல்லா மென்பேனாயினேன் இம்முத்திக் காலத்தென்க.

எனவே, வாமதேவமுனிவன் முதலியோர் "யான் மநுவாயினேன் ஆதித்தனாயினேன்'' என்றிங்ஙனங் கூறியதூஉம், சர்வஞ்ஞானோத்தரத்தின் ஆன்மாவை அவ்வாறு பாவிக்கச் சொல்லியதூஉம், அவ்வொற்றுமைபற் றியேயன்றிப் பிறிதின்மையின், அதுபற்றி உயிர்களும் அவ்வியல்பின வாவான் செல்லாதென்றவாறாயிற்று. இவ்வொற்றுமைபற்றியன்றே அருச் சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த கண்ணன் * "யானே யுலகமெல்லா'' மென்றதூஉம், † முதல்வனது விச்சுவரூபத்தைத் தான் காட்டியதூஉம், ‡ ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக'' என்றதூஉம், "அதனை உறுதியாகக் கொண்டே'' னென்ற அருச்சுனன் அவன் கூறிய கருத் துணர்ந்து சாங்காறுஞ் சிவபூசை செய்ததூஉம், § கண்ணன்மேலிட்ட போதுகள் முதல்வன் றிருமுடிமேற் கண்டதூஉமென்க.

கண்ணன் உபமன்னியுமுனிபாற் சிவதீக்கைபெற்றுத் தன்னையுந் தலை வனையும் உணர்ந்தோனாதலிற் சிவோகம்பாவனையைத் தலைப்பட்டோனாதல் அறிக.

புகுதல் - புகுதலானெனவிரிக்க. இன்று - இம்முத்திக்காலத்து. தமியே னுளம்புகுதல் யானே யுலகேன்பனின்று என்பது கூறுக்கால் அவையே தானேயாய் என முதல்வனுக்கோதிய விலக்கணம் வாமதேவமுனிவன் முத லிய உயிர்கண்மாட்டுஞ் சென்று வழுவாய் முடியும்; அதனை நீக்குதற்கு அதிகரணத் திறுதியின் இவ்வாறு கூறினர்.

இக்கருத்தறியாது இதனை முழுவதும் ஒருதொடராக்கி யுரைப்பிற் பொருளியைபுபடாமை அறிக. பொருளியைதற்பொருட்டு "யான் முதல் வன் உலகாமின்று'' என்றுரைப்பாரும் உளர். 'தானேயுலகா' மென்றதனை

* இது, பகவற்கீதை, க0-ம் அத். சஉ-ம் சுலோகம், "விஷ்டப்⁴யாஹமித³ம் க்ருத்ஸ்ந மேகாம்ஶேந ஸ்தி²தோ ஜக³த் | என்பதனால் அறிக. † ஷை கக-ம் அத். அ-ம் சுலோகம், தி³வ்யம் த³தா³மி தே சக்ஷு: பஶ்ய மே யோக³மைஶ்வரம் | என்பத னால் உணர்க. ‡ ஷை, கஅ-ம் அத். சுசு-ம் சுலோகம். ஸர்வத⁴ர்மாந்பரித்ய ஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ | என வருதல் காண்க. § பாரதம், துரோணபரு வம், அக, உ. தம் வொவஹாரம் ஸ்ருக்தம் நெமஸ்யநேத்ரகேஸரிநம் | ததஶ்ச ரந்த்ரவகாஹ்யாஶ வாஸுதேவே நிவேதிதம் || என்பதனாற் கண் ணன்மேலிட்ட போதுகள் முதல்வன் திருமுடியிற் கண்டது தெளியப்படும்.

மீட்டுங்கூறுதல் கூறியது கூறலாமாகலானும், பிறவாற்றானும் அது போலி யுரையென்றொழிக.

இவ்வதிகரணத்தாற் பொன்னும் பணியும்போல் அபேதமென்னும் மாயாவாதி முதலியோரையும், சொல்லும் பொருளும்போற் பேதாபேத மென்னும் பரிணாமவாதிகளையும், இருளும் வெளியும்போற் பேதமென்னும் ஏனைச்சமயத்தாரையும் மறுத்து மூவகையுமாகிய அத்துவிதத்தினுண்மை ஏதுக்களானும் உவமைகளானும் உணர்த்தியவாறு காண்க.

இவ்வதிகரணப் பொருளைபற்றிப் * "புறச்சமயத் தவர்க்கிருளா யகச் சமயத் தொளியாய்ப் புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்— பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற் பேதா பேதமுமின்றிப் பெருநூல் சொன்ன—வறத்திறனால் விளைவதா யுடலுயிர் கண் ணருக்க னறிவொளிபோற் பிறிவருமத் துவித மாகுஞ்—சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்" என்று வகுத்தோதினார் புடைநூலாசிரியருமென்க.

ஈண்டுப் "புறச்சமயத்தவர்" என்றது மூக்கூற்றுப் புறச்சமயத்தவ ரெனக் கொள்க. அவரெல்லாஞ் சித்தாந்தசைவரோடு ஒப்ப † "ஏகனநேக னிருள்கரும மாயையிரண்டு" என்னும் ஆறுபதார்த்தங்களுங் கொள்ளா மையின், அவ்வறுவகைப் பதார்த்தங்களின் இயல்பைக் கொளுத்தினுங் கொள்ளமாட்டா ரென்பார், "புறச்சமயத் தவர்க்கிருளாய்" என்றார்.

சங்கற்பநிராகரணத்திற் கூறப்படும் அகச்சமயத்தவராகிய பாடாண வாதசைவர் முதலியோர் சித்தாந்த சைவத்தோடொப்ப ஏகன் முதலிய ஆறுபதார்த்தங் கொண்டமையின், அவ்வாறுபதார்த்தங்கட்கும் பொது வியல்பு சிறப்பியல்பு கூறும் ஆகமங்களின் தாற்பரியம் இதுவே யென்று எடுத்துக் காட்டிச் சித்தாந்தசைவப் பொருளுண்மையைக் கொளுத்திற் கொள்ள வல்லுவரென்பார், "அகச்சமயத் தொளியாய்" என்றார். கொளுத் தினாற் கொள்ளவல்லுவரெனவே, அகச்சமயத்தவருந் தாமே கொள்ள மாட்டாரென்பது கருத்தாகலின், ‡ "சிவாத் துவிதாந் தத்துக்—குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி" என்பதனோடு முரணாமை அறிக.

சிவாத்துவிதமாவது நிமித்தகாரண பரிணாமவாதமென அவையடக்கத் துள் உரைத்தாம்; கடைப்பிடிக்க.

‡ "சிவாத் துவிதாந் தத்துக் - குலவின ரளவ ளாவாக் கொள்கை யதாகி" என இறுவாயெண்ணு முறைமைக்கண் நின்ற சுத்தசைவரை யொழித்து ஒழிந்த சமயத்தாரையெல்லாம் விலக்கவே, சுத்தசைவர் இந் நூல் கேட்டதுணையானே தாற்பரியம் இனிதுணர்ந்து சித்தாந்தப்பொருள் கைக்கொள்வரென்பது பெறப்பட்டது. அத்துணை அணிமையராகலா னன்றே சித்தாந்தசைவத்தைச் சாரவைத்தா ரென்பது.

---

* சிவப்பிரகாசம், பாயிரம், எ.   † திருவருட்பயன், சூ-கூ, அறியுநெறி, உ.
‡ சிவப்பிரகாசம், உண்மை, சக.

இக்கருத்தறியாதார் "சிவாத்துவிதாந்தத்" தென்றமையிற் சிவாத்து விதமாவது இறுதிக்கணெடுத்தோதப்படுஞ் சுத்தசைவம்போலுமென மயங்குப. நிமித்தகாரணனாகிய முதல்வன் மாயையோடுங் கூடி முதற் காரணமுமாய்ப் பரிணமிப்பனென்பதே சிவாத்துவிதசைவர் கொள்கை யென்க. இது சுத்தசைவர்க் கேலாமையும் அறிக.

இனித், தார்க்கிகர் முதலியோர் காட்சிமுதலிய பிரமிதிக்குப் பொறி முதலியனவே பிரமாணமென்பர். பிரமாணம் பிரமேயப்பொருளாதல் செல்லாமையிற் பொறிமுதலாயினவும் ஏனையபோலப் பிரமேயமாய் அளந்தறியப்படும்பொருளேயாதலின், அவற்றைப் பிரமாணமென்றல் பொருந்தாது; மற்றுச் சிவஞானமுணர்த்த உணர்வதாகிய ஆன்மசிற்சத் தியே அவர் பிரமாணமெனப் புகலும் இந்திரியமுதலியவற்றை அளந்தறியும் பிரமாணமாம்; பொறிமுதலியன அதற்கு வாயிலாதல் பற்றிப் பிரமாண மென்று உபசரித்துக் கூறப்படுவனவேயாமென்பது சைவசித்தாந்த மென் பார், "புகலளவைக் களவாகி" என்றார்.

பொற்பணிபோல் அபேதமும், இருள்வெளிபோற் பேதமும், சொற் பொருள்போற் பேதாபேதமுமாமாறும், அவை பொருந்தாமையும் மேலே யுரைத்தாம்.

சைவசித்தாந்தத்தின் எய்துதற்கு அருமைகூறுவார், "பெருநூல் சொன்ன வறத்திறனல் விளைவதாய்" என்றார். எனவே, அஃதில்வழி விளை யாதென்பதாம். "உடலுயிர் கண்ணருக்க னறிவொளிபோற் பிறிவருமத் துவித" மாமாறும் ஆண்டேயுரைத்தாம்.

அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருள்கூறுவார், "பிறிவருமத்து விதம்" என்று உடம்பொடுபுணர்த்தோதினர்.

இஃது ஏனையோர்கூறும் பொருள்போலன்றிச் சிறந்ததென்பார், "சிறப்பினதாய்" என்றார்.

*வேதாந்தமுஞ் சித்தாந்தமும் வேறென்பாரை மறுத்துப் பலபொருள் படுஞ் சூத்திரத்தை அங்ஙனம்படாமைத் தெளித்துரைக்கும் பாடியம்போல வேதாந்தத்தைத் தெளித்துரைப்பதே சைவசித்தாந்த மென்பார், * மகு டாகமமுதலியவற்றுள் ஓதியவாறே "வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந் தத் திறன்" என்றார். ஈண்டு வேதாந்தமென்றது வேதத்தின் முடி புகளாகிய உபநிடதங்களை; வேதாந்தமெனப் பெயர்பெற்ற ஏகான்மவாதநூலை யன் றென உணர்த்துதற்கு † "வேதத் தலைதருபொருளாய்" என விறுதியினுங் கூறினர். ஆகலான், அது கூறியது கூறலன்மை உணர்க.

திறன் - பொது உண்மையென்னும் வகை. இங்கு - இந்நூலின். முத னூல் வழிநூல்களிற் பொதுவுண்மையென வகுத்துக்கொண்டு ஓதினும்

* [illegible] | என்பது மகுடா கமம். † சிவப்பிரகாசம், உண்மை, ௨௯.

* வேதமொடாகமமெய்யாமிறைவனூ
லோதும்பொதுவுஞ்சிறப்புமென்றுள்ளன
நாதனுரையவைநாடிலிரண்டந்தம்
பேதமதென்னிற் பெரியோர்க்கபேதமே.

எடுத்தோதாமையான் அவ்வகை தெரிவரிதாகலான், அது தெரியுமாறு பொதுவுண்மையென்று எடுத்தோதி, அந்நூல்களின் கருத்து ஈண்டுத் தெரியச் செய்துமென்பார், "சைவசித்தாந்தத் திறனிங்குத்தெரிக்கலுற்றும்" என்றார். "சைவசித்தாந்தம்" என்றது சுத்தசைவமுதலியவற்றிற் செல்லாமைப்பொருட்டு.

"அறிவொளிபோல்" என்பதற்குப் பொருள்காணாது, "அறிவை" ஆன்மாவிற்கு ஆகுபெயராக்கி அறிவிற்கும் மற்றொன்றனை ஆகுபெயராக்கி ஆன்மாவும் ஆன்மபோதமும் போலென்று உரைப்பாரும், பொற்பணி போல் அபேதமென்பார் முதலிய மூவரையும் மறுத்தற்கு முறையே இம் முத்திறத்துவமையும் ஓதினரென்பதும் உணராது, சொற்கிடக்கை முறையும் பாராது, உடலுமுயிருங் கூடியவிடத்து அறிவும், கண்ணும் அருக்கனுங் கூடியவிடத்து ஒளியும்போலென்று உரைப்பாருமாய் இடர்ப்படுவர்.

இன்னும், அவர் * "ஒளியான திருமேனி" என்னுஞ் செய்யுளின் "மான" என்னும் எழுவாய்ப்பன்மைக்கேற்ப "ஆகும்" எனவும், "நினையா" எனவும் பயனிலைகளும் பன்மையாற் கூறிய கருத்துணராது, கூடுதற்குச் செயப்படுபொருளாகிய "வினையை" "நினையா" என்னும் பயனிலைக்கு எழுவாயாகக் கொண்டுரைத்து "வலிது" என்னும் ஒருமையோடு இயையாமை நோக்கி ஒருமைப்பன்மை மயக்கமென்று இடர்ப்படுவர். இன்னோரன்னவை ஒருமைப்பன்மை மயக்கமாதற்கேலாமை உணர்க. "வினையை" எழுவாயாக்குவார்க்கும் "வலிதாயவினை" என்பதனை வலியினைக் கடந்தவினை என்றுரைப்பிற் பால்வழுவாது. அங்ஙனம் உரைக்குமாறும் உணர்ந்திலர். இவ்வாறே ஆண்டாண்டுச் சொற்கிடக்கைமுறை உணராது உரைசெய்தல் அவரியல்பென்க.

முதலதிகரணமுடிந்தது.

---

## † இரண்டாமதிகரணம்.

முதலதிகரணத்தின் முதல்வன் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பனென்றதனால் அவ்வியல்புபற்றி உயிர்களின்பொருட்டே ஐந்தொழில் செய்வனென்பது போந்தமையின், அது முதல்வனுக்கு இலக்கணமென்பது வலியுறுத்தப்பட்டது. அங்ஙனமாயினும், ‡ சிலரைவாழ்வித்துஞ் சிலரைத் தாழ்வித்துஞ் சிலரைத் துறக்கத்துய்த்துஞ் சிலரை நரகத்துய்த்துஞ் சிலரை உயர்ந்தசாதியிற் பிறப்பித்துஞ் சிலரை இழிந்தசாதியிற் பிறப்பித்துஞ் சிலருக்கு ஆயுளைநீட்டிப்பித்துஞ் சிலருக்குக் குறைப்பித்தும், இவ்வாறு ஐந்தொழில்செய்வான் எல்லாவுயிர்களையும் ஒப்பநோக்காமையும் அருளின்மையும் உடையனாகலான் முதல்வனாவான்செல்லாமையின், அஃது இலக்கணவழுவாமென மீளவும் ஆரங்கைநிகழ்ந்துழி, அதனை நீக்கு

* சிவப்பிரகாசம், மங்கலவாழ்த்து. † இதனை, இருவினையதிகரணமென வழங்குப. ‡ இதனை நீலகண்டபாடியத்தின் வைஷம்மிய நைர்க்கிருண்ணியாதிகரணத்தினுங் காண்க.

முகத்தாற் றுணைக்காரணங்களதுண்மைக்குப் பிரமாணங்கூறி, ஒத்தியைபு பற்றிய ஆசங்கையை நீக்குதற்கு எழுந்தது இரண்டாமதிகரணம்.

இனி என்றது இவ்வியைபுணர்த்தி நின்றது.

இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனாணை யின் வருமென்றது

எனவரும்.

இருவினை முதல்வனாணையின் வருமெனவே, ஆன்மாக்களுக்கென்பது தானே போதருமாயினும், சாங்கியர் இருவினையீட்டலும் நுகர்தலும் மூலப் பகுதியிற் றோன்றிய புத்திதத்துவத்துக்கேயன்றிப் புருடனுக்கில்லையென் பர். உலகாயதர்முதலியோர் உடம்புமுதலியவற்றுக்கென்பர். அவர் மதங் களின் மறுப்புத் தோன்ற இவ்வான்மாக்களுக்கு என்றுரைத்தார். வரு மதிகரணத்திற் கூறியதும் அது.

இவ்வான்மாக்கள் - முதல்வன் இவ்வாறு மூவகையுமாய் நிற்றற்கு உரி மையுடைய ஆன்மாக்கள். ஈண்டு இருவினை என்றது பலபிறவிகளினும் ஈட் டப்பட்டுச் சஞ்சிதமாய்க் கிடந்த புண்ணியபாவங்களை யென்க. எனவே, அவரவர்செய்த வினைக்கேற்ப அவ்வாறு ஐந்தொழில்செய்யும் முதல்வனை எல்லாவுயிர்களையும் ஒப்பநோக்காமையும் அருளின்மையும் உடையனென் றல் பொருந்தாமையின், இலக்கணவழுவாமாறு யாண்டையதென்பதாம்.

அற்றேல் இருவினைக்கு முதன்மையன்றி அவற்றின்வழிநின்று செய் வானுக்கு முதன்மையில்லையெனப்பட்டு, மீளவும் இலக்கணவழுவாய் முடி யும்; இது * "சுற்றிப்போயுஞ் சுங்கத்துறையில் வந்துகூடிய முறைமைத்" தாலோவென்னும் ஆசங்கையை நீக்குதற்கு ஆணையின் என்றார். முதல்வ னாணையானே வருவனவன்றி இருவினை தாமேவருஞ் சுதந்திரமுடையவன்மை யின், அதுபற்றி இழுக்கின்மையான் ஐந்தொழில்செய்தலே முதல்வனுக் கிலக்கணமென வலியுறுத்தவாறு.

அற்றேல், வினையுண்டெனக்கொள்ளின், அதுவே அமையும்; முதல்வ னதுண்மை பெறப்படாது. முதல்வனுண்டெனக்கொள்ளின், அவனே அமையும்; வினையுண்மை பெறப்படாது; இரண்டுங்கோடல் மிகையாகலா னென, ஒருதாளூன்றி ஒருதாளைத் தூக்கிநின்றாடும் † "மயிற்கூத்தின் முறைமை" த்தாமென்னும் ஆசங்கையை உவமைமுகத்தான் மறுத்து மேற் கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

ஒருநகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினையாகலான்

எனவரும்.

* இதனை வடநூலார், கட்டகுடிப்பிரபாதநியாயம் என்பர். † இதனை வட நூலார், மயூரநிர்த்தனநியாயம் என்பர்.

உலகத்து வேந்தரெல்லாம் பாடிகாவலாளன்மாட்டுத் தம்மாணையை வைத்து அவனைக்கொண்டு, அத்தொழில்செய்வித்தலேயன்றித், தாமே முன்னின்று அத்தொழில்செய்யார். அவ்வாறே முதல்வனுந் தன்னாணையை இருவினையின்மாட்டுவைத்து அவற்றைக்கொண்டு அப்பயன் நுகர்வித்தலே முறையாகலின், மிகையாதல் யாண்டையதென்பதாம்.

முதல்வன்செய்யுஞ் செய்தியெல்லாம் உலகத்தோடொப்ப நிகழ்வன வாகலின், ஈண்டைக்கு அரசன்செய்தி உவமையாயிற்று. இவ்வுவமைப் பொருளேபற்றி, * "வையகங் காப்பான் செல்கை வழக்கன்றே வூர்காப் பான்போல்" என்றார் வழிநூலாசிரியரும். பாடிகாவல் என்பது நெறியின் வழிஇயினாரை வழக்குவினாய் ஒப்பநாடிச் செய்யுந் தண்டத்தொழிலுணர்த்து வதோர் சொல். † "கோடி காவனைக் கூறீரேற் கூறினேன்—பாடி காவலிற் பட்டுக் கழிதிரே." ‡ "கோடி காவனைக் கூறாத நாளெல்லாம்—பாடி காவ லிற் பட்டுக் கழியுமே" எனத் திருப்பாட்டோதியதூஉம் அது.

இனி, வினையில்லையென்னும் உலகாயதர்முதலியோரை மறுத்து வினை யுண்மையும், அவற்றின்பயனை ஆன்மாவே நுகருமாறும், நுகர்ந்தவழி மேலைக்கு வினைவிளையுமாறும், அவற்றை முதல்வன் தருமாறும், வினைக்குச் சுதந்திரமின்றாமாறும் உணர்த்தி, ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக் காட்டும் உதாரணம்:—

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று

எனவரும்.

மேலைச் சூத்திரத்தினோதிய சற்காரியத்தின் இயல்புபற்றி வினையுண்மை சாதிப்பார், உள்ளதேதோற்ற என்றும், உள்ளதாகிய சஞ்சிதவினை தோற் றப்பட்ட இன்பத்துன்ப நுகர்ச்சிக்கு நிலைக்களமாகிய உடம்பிற் பொருந்தி அவற்றை அநுபவிப்பது சடமாகிய புத்திதத்துவமேயாமென்னுஞ் சாங்கி யரை மறுப்பார், உயிரணையு மவ்வுடலின் என்றும், முற்செய்வினையை ஈண்டு அநுபவித்தொழிந்தால் மேலைக்குவருமாறு என்னையென்னுங் கடாவை விடுப்பார், முற்செய்வினை யுள்ளடைவே யுள்ளதாம் என்றும், வினை தானே பயனுகவரும்; இறைவன் எற்றுக்கென்னும் மீமாஞ்சகரை மறுப்பார், செய்பவர் செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோல் வள்ளலவன் செய்வன் செயல் சேன்றணையா என்றுங் கூறினார்.

ஏகாரம் - முன்னையது தேற்றம். பிரிநிலையுமாம். நடுவணது ஏழாம் வேற்றுமைப் பொருட்கண் வந்தது. பின்னையது அசை.

* சிவஞானசித்தி, பரபக்கம், பாஞ்சராத்திரிமறுப்பு, கக. † திருநாவுக்கரசு நாயனார் தேவாரம், திருக்கோடிகா, திருக்குறுந்தொகை, உ. ‡ ஷை பதிகம், கூ.

முற்செய்வினை என்புழிச் செப்பலோசையிற் சிதைவின்மையான் எழுத்திற்கு மாத்திரைகோடல் இசைபற்றியே யாகலான், * "மாத்திரை வகையாற் றளைதமகெடா" என்பவாகலின், மாத்திரைபற்றி, "நேர்நிரைநேர்" எனச் சீர்செய்து வெண்சீர் சிதையாமற் கண்டுகொள்க. † அம்மைதிருவந்தாதி முதலியவற்றினும் இவ்வாறு வருதல் காண்க. இதனை வெண்டுறைப்பாற் படுத்தினும் இழுக்காது. உள்ளடைவு - உள்ளுதற் கேதுவாகிய முறைமை. உள்ளுதல் - ஈண்டு அநுபவித்தல். அதற்கேதுவாகிய முறைமையாவன அநுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள். அவற்றின்கண் உண்டாமாறு ‡ முன்னர்க் காட்டுதும்.

முதல்வனுக்கு வினை வேண்டப்படுமென்றுணர்த்துதற்கு மேல் அரசனை உவமைகூறினர். வினை முதல்வனையின்றி யமையாதென்பது உணர்த்துதற்கு ஈண்டு உழவுதொழிலை உவமைகூறினர். இன்னும், இதன்கட்படுங் கடாவிடைகளெல்லாஞ் சிவஞானசித்தியில், § "இருவினை யின்பத்துன்பம்" என்னுந் திருவிருத்தமுதலாக விரித்தோதுதலின், அவையெல்லாம் ஆண்டே காண்க. சிவஞானசித்தியில் விரித்தோதப்பட்டனவெல்லாம் ஆண்டே அறியக்கிடத்தலின், ஈண்டு விரிக்கின்றிலமென்றுணர்க.

அற்றேல், வினை சடமாகலிற் சென்றணைய மாட்டாதாயினும் ஆன்மாக்கள் சேதனமாகலின் அவையே வினைப்பயன்களை அறிந்தெடுத்துக்கொண்டு நுகரும்; இதற்கொரு முதல்வன் வேண்டாவாகலின், வள்ளல்செய்வன் என்றல் பொருந்தாதென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானி னுகராரே
லார்தா மறிந்தணைப்பா ராங்கு

எனவரும்.

ஆன்மாக்களுக்குத் தமக்கென வறிவின்மையானும், வினை சடமாகலானும், மாயை "தாரகமாமத்தன்றுணிற்ற" லெனப் போந்தமையானும், முதல்வனே அறிந்தணைப்பனெனப் பாரிசேடப் பிரமாணங் கூறுவார்,

* இது யாப்பருங்கலவிருத்தியினும், எழுத்தோத்து, உ-ம் சூத்திரத்து மேற்கோளாகக் காட்டப்பட்டுளது. † பதினொராந்திருமுறை, அற்புதத்திருவந்தாதி, "எளிய திதுவன்றே யேழைகாள் யாது—மளியீ ரறிவிலீ ராவா—வொளிகொண்மிடற்—றெந்தையராப் பூண்டுழலு மெம்மானை யுண்ணினைந்த—சிந்தையராய் வாழுந் திறம்" (சகூ). "விருப்பினு னீபிரிய கில்லாயோ வேறு—விருப்பிடமற் றில்லையோ வென்னே—பொருப்பன்மகண்—மஞ்சுபோன் மால்விடையாய் நிற்பிரிந்து வேறிருக்க—வஞ்சுமோ சொல்லா யவள்" (கூச) என்னும் வெண்பாக்களின், "முற்செய்வினை" என்புழிப்போல வருதல் காண்க. ‡ பன்னிரண்டாஞ்சூத்திரம், முதலதிகரணத்து உதாரணவெண்பாப்பொருள்கூறும்வழிக் காண்க. § சிவஞானசித்தி, இரண்டாஞ் சூத்திரம், ச.

அவ்வினையைப் பேராமலூட்டும் பிரானி னுகராரே லார்தா மறிந்தணைப்பார் என்றார்.

* "இங்கிவை பொதுவி யம்பும்" என்புழிப்போல அங்கவ்வினை என்பது அவ்வினையென்னும் பொருட்டாய் நின்றது. யாவர் என்னும் பலரறிசொல் வகரங்கெட்டு யார் என நின்று பின் ஆர் என மரீஇயிற்று.

காந்த பசாசம்போல் அவ்வினையைப் பேராமலூட்டும் பிரானின் அவ்வினைஞர் அவ்வினையைச் செய்வதனில் அவ்வினையைச் சென்று நுகராரேல் ஆர்தாம் ஆங்கு அறிந்து அணைப்பார் எனக் கூட்டுக.

செய்தற்கிடனாய உடம்பைச் செய்வது என்றுபசரித்தார்.

இது சொற்பொருட்பின் வருநிலை.

அற்றேல், இவ்வினை ஆதியோ? அநாதியோ? ஆதியாயின், முன்னில்லது இடையே தோன்றுமென்பது சற்காரியவாதத்திற்கேலாது, அநாதியாயின், ஒருவர் கூட்டவேண்டுவதில்லை யென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்

எனவரும்.

புதிதன்று என்பதனைத் தனித்தனி கூட்டுக. தொன்மையினுள்ளவற்றைத் தோன்மை என்றுபசரித்தார்.

இஃது எடுத்துக்காட்டுவமை. ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

மாயை இறைவனுக்குப் பரிக்கிரகசத்தியாகலின், வல்லி என்றார். இஃதறியாதார் மகடூஉ முன்னிலையாக்கி யுரைப்ப. வினைக்குத் தொன்மை கூறுவார், இனம்பற்றி மாயை மலங்கட்குத் தொன்மையும் உடன் கூறினார். இருவினையுண்மைக்கோதிய பிரமாணமே அவற்றிற்குப் பற்றுக்கோடாகிய மாயையுண்மைக்கும் பிரமாணமாமென்பதனானும், மேலைச் சூத்திரத்திற் கூறிய சற்காரியவாதத்தானும், மாயையுண்மை பெறப்பட்டது. மலமுண்மைக்குப் பிரமாணமும் மேலைச்சூத்திரத்திற் பெறப்பட்டது.

## மும்மலகாரியம்.

அவற்றின் காரியங்களாவன:—

மூலமலங் காரிய வேறுபாட்டான் எழுவகைப்படும். அவையாவன மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பனவாம்.

* சிவப்பிரகாசம், உண்மை, க.

மரங்கம் - 1069 ஆம் பக்கம். பௌஷ்கரம் - 296 ஆம் பக்கம்



இவற்றுள் மோகம், மதமுதலிய அறுவகைக் காரியங்கட்கும் ஏதுவாய்க் கட்டு நீங்குங்காறும் ஆன்மாக்களோடு சகசமாயுள்ளது. மோகமில் வழி ஏனை மதமுதலியன நிகழாமையின், அது முதன்மைத்தாதல் அறிக. அம்மோகமாவது, கொள்ளற்பாலது இது நீக்கற்பாலது இதுவென நூன்முகத்தான் உணர்ந்தும், அரிவையர்முதலிய விடயங்களின் மயங்குதற் கேதுவாயது.

மதமாவது, தன்னுலெய்தப்படும் அரிவையைத் தானே கொண்டாடிப் புகழ்ந்து இவளின்மேற்பட்ட மகளிர் உலகத்தில்லையென மதித்தற்கேதுவாயது.

அராகமாவது, அவள்பால் மேன்மேலும் ஆசைமிகுதற் கேதுவாயது.

கவலையாவது, ஊழ்வலியால் அவளைத் தணந்தவழிக் கண்ணீர்விட்டு அழுது பெரிதுந் துன்பமுற்றுக் கவலுதற் கேதுவாயது.

தாபமாவது, அதனுல் உள்வெதும்பித் தபித்தற்கேதுவாயது.

வாட்டமாவது, அங்ஙனம் அலறியும் ஆற்றியும் உள்வெதும்புதலான் மூர்ச்சையுற்று உள்ளமும் உடம்பும் வாடுதற்கேதுவாயது. அரிவையர்மேல் வைத்துக் காட்டியது உபலக்கணமாகலின், விடயந்தோறும் இவ்வாறு கண்டுகொள்க.

விசித்திரமாவது, தான் பெற்ற உலகவாழ்க்கையை நோக்குந்தோறும் இவர் எமக்கு உரிமைச் சுற்றத்தார், இவள் உரிமையுடைய மனைவி, ஆடை அணி பொன் முதலிய செல்வங்களிற் குறைவில்லை. மனை கழனிமுதலிய நிலங்களிற் குறைவில்லை, ஆகலான் எனக்கு இனிப் பெறக்கடவதென்னையெனவும், என் குடும்பத்தைப் புரப்போர் யாவரெனவும் இவ்வாறு பலவேறுவகைப்படச் சிந்தைசெய்தற்கேதுவாயது.

இனி, வினையின் காரியமாவன, இன்பத்துன்ப முதலாயின.

மாயையின் காரியமாவன, தநுகரண முதலாயின.

வள்ளலாலாம் எனவே, திரோதான சத்தியதுண்மையும் பெற்றும். அது பாகம் வருதற்பொருட்டு மலத்தின்வழிநின்று மோகமுதலியவற்றைத் தொழிற்படுத்துதலாகிய சிவசங்கற்பத்திற் கேதுவாகலின், மலமென்று உபசரித்துக் கூறப்படும். இதனுற் பஞ்சமலங்களுங் கண்டுகொள்க.

## இருவினையுண்மை.

* அஃது அங்ஙனமாக; வினையுண்டென்பதற்குப் பிரமாணமென்னை? முதல்வன் செய்திக்குத் துணைக்காரணம் அவனது ஆணையேயமையும். வினையுந் துணைக்காரணமெனின், வினையின்வழி நடாத்துவான் றனக்கெனச்

* இதனை இவ்வாறே சிவாக்கிரபாடியத்திலும், "ஒருசாரார் இங்ஙனங் கூறுவர்" என்று எடுத்துக்கொண்டு கடாவிடைகளான் விரித்துரைத்தல் காண்க. (இரண்டாஞ்சூத்திரம், கசு௨-ம் பக்கம்.)

சுதந்திரமுடையனல்லனெனப்பட்டு முதன்மைக்கு வழுவாமாலோவெனின்,—அற்றன்று; முதல்வன் செய்திக்கு வினையுந் துணைக்காரணமேயாம். அஃதில்லையாயின், எல்லாவுயிர்களையும் ஒப்பநோக்குதலும் பெருங்கருணையுமுடைய முதல்வன் இன்பத்துன்பமுதலியவற்றைக் கூட்டுதல் பொருந்தாதாய் முடியுமென்க.

அவ்வவர் குணங்குற்றங் கண்டு அவ்வவற்றிற்கேற்ப அருளுந் தண்டமுஞ் செய்யும் வேந்தற்கு அதுபற்றிச் சுதந்திரமுடைமைக்கு இழுக்கில்லாதவாறும், வேட்டுவனுதலைவிரும்பும் புழுவிற்கு அவ்வேண்டுமுருவினைக் கொடுத்தல்பற்றி வேட்டுவனுக்கு அத்தொழிற்கணுள்ளதாகிய சுதந்திரமுடைமைக்கு இழுக்கில்லாதவாறும்போல, வினைவழி நடாத்துதல்பற்றி முதல்வன் சுதந்திரத்திற்குச் சிறிதும் இழுக்கின்மையுணர்க.

அன்றியும், குயவன் வனைதற்குத் தன்னுடைமையாகிய திகிரிமுதலிய துணைக்காரணங்களை வேண்டினும், பிறரேவல்வழிநின்று வனையவேண்டாமைபற்றிச் சுதந்திரமுடையனெனப்படும்; ஆகலின், ஈண்டும் அவ்வாறே கொள்க.

இன்னும், காரியங்களெல்லாம் ஒருங்கே தோன்றாது அடைவே தோன்றுதற்குக் காரணம் வினையேயன்றிப் பிறிதின்மையானும் வினையுண்மை துணியப்படும்.

அற்றேல், தேவர் மனிதர் விலங்குமுதலிய யோனிகளை எய்துவிக்கும் வினைகள் முற்பிறவிகளின் ஈட்டப்பட்டு ஒருங்கே கிடந்தனவெனக் கொள்வார்க்கும் அவை ஒருங்கே கிடத்தலின் அவ்வவ்யோனிக்கேய்ந்த உடம்பெல்லாம் ஒருங்கே தோன்றவேண்டுமாலோவெனின்,—அற்றன்று; அவை ஒருங்கே கிடப்பினும், அவற்றுட் பக்குவமான வினையடைவேபற்றி அவ்வவற்றிற்கேற்ப முதல்வன் தோற்றுவிப்பனென்க.

அற்றேல், பக்குவமாவதென்னை? காய் பழமாதல்போல அவத்தைவேறுபடுதலெனின், அஃது அருவமாகிய வினைக்குப் பொருந்தாது. நெடுங்காலங்கிடத்தலே அதற்குப் பக்குவமெனின், நெடுங்காலத்துளவாகிய வினைநிற்ப அணிமைக்கட் செய்தவினைமிக்கதாயின், அஃது அப்பொழுதே பயனுய்வருமென்றல் பொருந்தாதாய் முடியுமாலெனின்,—அற்றன்று; அவ்வப்பயன்களைத் தோற்றுவித்தற்குரிய துணைக்கருவிகளெல்லாவற்றோடுங் கூடுதலே பக்குவமென்னுஞ் சொற்குப் பொருளென்றறிக.

இன்னும், வினையில்லையாயின், விதித்தனசெய்து விலக்கியனவொழிதலாற் பயனின்றாய் முடியும்; ஆகலானும், வினையுண்மை துணியப்படும்.

அற்றேல், விதியின் வழுவாது வேள்விமுதலியன ஆற்றியவழியும், தக்கன்முதலியோர்க்கு முதல்வன் அருளாமையான் அவை பயன்படாதொழிந்தமை புராணங்களிற் கூறப்படுதலின், வினையுண்டென்பார்க்கும் முதல்வன்றிருவருள் ஒருதலையான் வேண்டப்படுதலின், விதித்தவழிநின்றமைபற்றி முதல்வன் கருணைகூர்தலே அதற்குப்பயனாதலின், அதுபற்றி

வினையுண்டென்றல் பொருந்தாதெனின்,—அற்றன்று; தக்கன்முதலியோர் செய்தவினை அவர் அகங்காரத்தான் நசித்துப்போதலின், பயன்படாதாயிற்று. அங்ஙனமல்லாக்கால், முதல்வன்பணியாகிய வேதவிதியினின்றோர்க்கு முதல்வன் அருளாதொழிதல் பொருந்தாமையறிக.

இக்காலத்துவேந்தர் தம் ஏவலின் ஒழுகினோர்மாட்டும் ஒரோவழி அருளாமையும், ஒழுகாதார்மாட்டும் ஒரோவழி அருளுதலுங்கண்டாமாகலின், முதல்வனும் அவ்வாறுசெய்தல் பொருந்துமெனின்,—அற்றன்று; உலகத்துவேந்தர் கருத்துணராமையானுதல், ஊழ்வலியானுதல், அங்ஙனஞ்செய்தல் பொருந்தும். முதல்வன்மாட்டு அது பொருந்தாதென்பது உணர்க.

அற்றேல், ஈண்டுக் கூறிப்போந்த முறைமைபற்றிச் சுத்ததத்துவபுவனங்களினும் வினையுண்டென்றல் வேண்டும். ஆண்டும் உண்டெனக்கொள்ளின், * "சுத்தாத்துவாக்களின் வினையில்லை" எனவும், "விஞ்ஞானகலர் ஆணவமலமொன்றேயுடையர்" எனவுங் கூறிய ஆகமங்களோடு முரணும் பிறவெனின்,—முரணாது; † "காலமுதல் நிலமீறாகிய தத்துவங்களெல்லாம் அசுத்தமாயையிற்போலச் சுத்தமாயையினும் உள; அவை இவைபோலன்றிச் சுத்தமாயுள்ளன" என்னும் பவுட்கரவசனத்தான் அசுத்ததத்துவபுவனங்களினுள்ளன அனைத்துஞ் சுத்ததத்துவபுவனங்களினுஞ் சுத்தமாயுளவாமென்பது போதருதலானும், ‡ "சுத்ததத்துவபுவனங்களினுள், அவ்வப்பதங்களை விழைந்து அவற்றிற் செல்லுதற்குரிய மந்திரங்களைக் கணிப்போரும், அவ்வப்பதங்களின்வைகும் மந்திரேசுரர் வித்தியேசுரர் சதாசிவர் முதலியோரை வழிபடுவோரும், அவ்வப்பதங்களைப் பெறுவர்" என்னும் ஆகமவசனங்களானும், "அசுத்தம் மிச்சிரம் சுத்தமென்னும் வேறுபாடுபற்றி, § உலகமும் வைதிகமும் அத்தியான்மிகமும் அதிமார்க்கமும் மாந்திரமுமென வினைகள் ஐவகைப்படும்" எனவும், "அவை முறையே ஒன்றற்கொன்று ஏற்றமாய் நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளின் அடங்கி, அசுத்தம் மிச்சிரம் சுத்தமாகிய போகங்களைப் பயப்பிக்கும்" எனவுங்கூறும் ஆகமவசனங்களானும் ஆண்டுச் சுத்தவினையுண்டென்பது உணர்ந்துகொள்க. "சுத்தாத்துவாவின் வினையில்லை" என்பதற்குத் தாற்பரியம் அசுத்தகன்மம் ஆண்டில்லையென்பதாம். அவ்வாறுகொள்ளாக்கால், ஈண்டுக்கூறிய வசனங்களோடு முரணுமாறறிக.

அற்றேல், இன்பத்துன்ப முதலியவற்றிற்குக் காரணம் நல்வினை தீவினையாகிய தொழில்களே அமையும். அவற்றான்வரும் அபூர்வமாகிய புண்ணிய

---

* இங்ஙனங்கூறும் ஆகமவசனமுதலியன சிவாக்கிரபாடியம், ௩௯௮-ம் பக்கத்திற் காண்க. † யதாஶுத்தே காலமுகாநி ஸந்தி தத்வாநி யோநயா | கிந்து தாநி அத்ர ஶுத்தாநி ஸந்தி பைந்தவாநி விஶேஷத: || என்பது பவுட்கரவசனம். ‡ இவற்றைச் சிவாக்கிரபாடியத்துங்காண்க; எட்டாஞ்சூத்திரம், பக்கம், ௩௯௯, ௪௦௦. § இது, லௌகிகம் வைதிகம் சைவ வாத்யாத்மிகமதிமார்க்கிகம் | மாந்த்ரஞ்ச பஞ்சதா கர்ம நிவ்ருத்த்யாதிகபோகதம் || என்னுஞ் சுலோகத்தான் அறிக.

பாவங்களுங் காரணமெனக்கோடன் மிகையாகலின், அவற்றதுண்மைக்குப் பிரமாணமில்லையாலோவெனின்,—அற்றன்று; வேள்விமுதலிய வினைகள் செய்தபொழுதே அழிவனவாகலின் நெடுங்காலஞ்சென்று வருவனவாகிய காரியங்களைப் பயப்பித்தற்கு அவை வருந்துணையும் நிலைபெற்றுடைய தொன்றனைத் தோற்றுவித்தன்றித் தாமே காரணமாதல் பொருந்தாமை யின், அதுபற்றி அபூர்வமாகிய புண்ணியபாவங்களதுண்மையுந் துணியப் படுமென்க.

அற்றேல், அழிவுபாட்டபாவம் வேள்விக்கு மறுதலையாகலின், வேள்வி முதலிய வினை அழிந்தவழி, அவ்வழிவுபாட்டபாவம் நிலைபேறுடைமை யின், அதுவேயமையும்; வேறொன்று கற்பித்தல் மிகையாமெனின்,— வேள்வியின் அழிவுபாட்டபாவம் வேள்வியின் பயனைத்தோற்றுவித்தல் பொருந்தாமையின், அமையாதென்க.

அற்றேல், வேள்விமுதலியவற்றான் இந்திரன்முதலிய கடவுளர்க்கு உவகைபிறத்தலின், உபவாசந் தீர்த்தயாத்திரை முதலியவற்றினும் அவற் றிற்கபிமானிகளாகிய கடவுளர்க்கு உவகைபிறத்தலின் அக்கடவுளருவகை நிலைபேறுடைமையின், அதுவேயமையுமெனின்,—அற்றன்று; வேள்வி முதலியன செய்தபொழுதே இந்திரன்முதலியோர்க்கு உவகைபிறத்தலின் உவகையுற்றுழி நீட்டித்தல் பொருந்தாதாகலின், அப்பொழுதே பயன்றரல் வேண்டும். அஃதின்மையான், நீட்டித்துப் பயன்றருதற்கேதுவாகிய சஞ் சிதவினையுண்டென்பது துணியப்படும்.

அற்றேல், வேறொன்று கற்பித்தலின் வேள்விமுதலிய தொழில்களே நிலைபேறுடையவெனக்கோடல் பொருத்தமுடைத்து. அஃதாயின் மூன்றாங் கணமுதலியவற்றினுங் காட்சிக்குப் புலனாதல் வேண்டுமெனின், இரண்டாங் கணத்திற்குமேல் எல்லாஞ்சூக்குமமாய் நிற்குமாகலின், காட்சிக்குப் புலப் படாதெனக் கோடுமெனின்,—நன்று சொன்னாய்! அவை சூக்குமமாய் நின்ற வவத்தையே அபூர்வமாகிய சஞ்சிதவினையென்பது சித்தாந்தமென்க.

சற்காரியவாதத்திற் றூலமாய்நின்ற அவத்தையினீங்கிச் சூக்குமமாய் நின்ற அவத்தையே அழிவுபாடென்னுஞ் சொற்குப்பொருளென மேலைச் சூத்திரத்தினுரைத்தாம். முன்னருங்காட்டுதும். கடைப்பிடிக்க.

அற்றேல், விதித்தன செய்யாதவழிப் பாவமுண்டாதற்கு முன்னர்த் தூலமாய்நின்று அழிவுபட்டதென்னை? செய்யாமைக்கு அழிவில்லையாலெ னின்,—அற்றன்று; நாளைவிதித்தவற்றை இன்று செய்யாமையாற் பாவ மின்மையின், அவ்வக்காலங்களோடுகூடிய விதித்தனசெய்யாமையே பாவத் துக்கேதுவாகலான், அவ்வக்காலங் கழியவே அவற்றோடுகூடி விதித்தன செய்யாமையும் அழியுமாகலின், அஃதழிந்து சூக்குமமாய்நின்ற அவத் தையே பாவவினையாமென்றொழிக.

இங்ஙனங் கூறிப்போந்தவாற்றாற் பெறப்பட்ட வினை ஈட்டப்படுங்கால் மந்திரமுதலிய அத்துவாக்களிடமாக முறையானே மனம் வாக்குக் காய

மென்னும் மூன்றான் ஈட்டப்பட்டுத் தூலகன்மமாய் ஆகாமியமெனப் பெயர் பெறும். பின்னர்ப் பக்குவமாங்காறுஞ் சூக்குமகன்மமாய்ப் புத்திதத்துவத்தினிடமாக மாயையிற்கிடந்து, சாதி ஆயுப் போகமென்னும் மூன்றற்கும் ஏதுவாகி, முறையே சனகம் தாரகம் போக்கியமென மூவகைத்தாய், அபூர்வஞ் சஞ்சிதம் புண்ணியபாவமென்னும் பரியாயப்பெயர் பெறும். அது பின்னர்ப் பயன்படுங்கால் ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகமென்னும் முத்திறத்தாற் பலதிறப்பட்டுப் பிராரத்தமெனப் பெயர் பெறுமென்றுணர்க.

மந்திரமுதலிய அத்துவாக்களினியல்பு * முன்னர்க் காட்டுதும். மனம் வாக்குக் காயங்களான் வினை ஈட்டப்படுமாறு:—

† "பொய்ப்பொறி புணர்க்கு முப்பொறி யுள்ளு
முள்ளச் செய்தி தெள்ளிதிற் கிளப்பி
னிருடீர் காட்சி யருளொடு புணர்தல்
பெரும்பொறை தாங்கல் பிறன்பொருள் விழையாமை
செய்தநன் றறிதல் கைதவங் கடிதல்
பால்கோ டாது பகலிற் றேன்றன்
மான மதாணி யாணிற் றுங்க
லழுக்கா றின்மை யவாவிற் றீர்த
லருந்துய ருயிர்கட் கிருந்த காலை
யழறோய் வன்ன ராகி யானுக்
கழலு நெஞ்சிற் கையற் றினைதல்
பன்னருஞ் சிறப்பின் மன்னுயிர்த் தொகைகட்
கறிவும் பொறியுங் கழிபெருங் கவினும்
பெறற்கருந் துறக்கமு மிறப்ப வூங்குத்
தம்மினும் வேண்டுமென் றெண்ணரும் பெருங்குணம்
வாக்கொடு சிவணிய நோக்கின் மீக்கொள
வறம்பெரி தறைதல் புறங் கூறாமை
வாய்மை கல்வி தீமையிற் றிறம்ப
லின்மொழி யிசைத்தல் வன்மொழி மறத்த
லறிவனூல் விரித்த லருமறை கழற
லடங்கிய வறிதல் கடுஞ்சொல் விடுத்தல்
பயனின்ற படித்தல் படிற்றுரை விடுத்தல்
காயத் தியைந்த வீயா வினையு
ளருந்தவந் தொடங்க றிருந்திய தானங்
கொடைமடம் படுதல் படையுடன் படாமை
யமரர்ப் பேண லாகுதி யருத்த
லொழுக்க மோம்பும் விழுப்பெருங் கிழமை
யுடம்பிடி யேந்தி யுடறடிந் திடுமா
ரடைந்த காலை யவணிய றுயரந்

* இச்சூத்திரத்து மூன்றும் அதிகரணம். † ஞானாமிர்தம். கள.

தேரா ரல்லர் தெரிந்து மாருயிர்
பெரும்பிறி தாக விரும்பிண மிசைஞரி
ஞேராங்குப் படாஅ மாசில் காட்சி
யைம்பெரும் பாதகத் தாழி நீந்த
லிந்தியப் பெரும்படை யிரிய நூறும்
வன்றறு கண்மை வாளிட் டாங்கு
நோவன செய்யினு மேவன விழைத
றவச்சிறி தாயினு மிகப்பல விருந்து
பாத்தூண் செல்வம் பூக்கம ழிரும்பொழி
றன்மனைக் கிழத்தி யல்லதை பிறர்மனை
யன்னையிற் றீரா நன்ன ராண்மை
கார்கோ ளன்ன கயம்பல கிளைத்தல்
கூவ றொட்ட லாதுலர் சாலை
யறங்கரை நாவி னன்றோர் பள்ளி
கடவுள் கண்ணிய தடவுநிலைக் கோட்ட
மினையவை முதல நினைவருந் திறத்த
புரத்தன் மாதோ வறத்துறை மறத்துறை
யிவற்றின் வழிப்படா தெதிர்வன கெழீஇ
யுஞற்றன் மொழிப வுணர்ந்திசி னோரே" என்னும் ஞானா
மிர்தத்திற் காண்க. இன்பொருள் எழுதுக.

இனி, ஆத்தியான்மிக முதலிய மூன்றும்:—

* "ஆதி தைவிக மாதி பௌதிக
மாதி யாத்தியான் மிகமென வோதிய
துக்க மூன்றினு ளாத்தி யான்மிக
மெய்யின் மனத்தி லையமி லிரண்டே
வளியிற் பித்தின் விளியா வீளையி
னூனுகு தொழுனையி னுதகக் கொட்டின்
வெப்பிற் சூலையின் மக்களின் விலங்கி
னலகையிற் கள்வரிற் பறவையி னிருதரின்
மைந்தர் மகளிர் மணந்திடை தணப்பிற்
பேரறம் வளர்ப்பிற் பெருந்திரு நுகர்விற்
சீரிய யாக்கை மாதுயர் மாசு
மனத்துறு துயர நினைப்பருஞ் சோக
மறிவுரு வாக்க மடையுநர்ப் பொருமை
மான மாக்கலம் பூணது மறுத்த
லிச்சையி னிசைத லிருஞ்சின மிகுத்த
லினையவை முதல நினைவருந் திறத்த
வாதி பௌதிகஞ் சீத மாமழை
யுருப்பவிர் வேனி லுட்குவரு கடுங்கா

* ஞானாமிர்தம், கக.

விருள்கிழி மின்னுப் பெருவிற லசனி
மன்னுயிர்க் குறுகண் டுன்னியா றருந்த
லாதி யாய வீவருந் திறத்த
வாதி தைவிகம் பேதையர் வயினக்
கருக்குழி யழுங்கல் பிறப்பிறும் பூது
திரைவருந் தீமை வரைவில் பேதைமை
மடங்க லாருயிர் தொடங்கினன் வெளவல்
யாவரும் விழையாக் கோள்வாய் நிரயத்து
வீழ்ந்தன ரெழாஅ வான்கழி துன்ப
மினைய மாலைய துயரிடை வினைகர்க்
கருங்கைக் கயமைக் களிறுகைத் திரும்புலப்
பெரும்படை விரிந்து சூழத் திருந்தா
நாற்கதிப் பவனி யுலாஅ
யர்த்தவிழ் திறம்பிற போற்றுமதி புரிந்தே" என்னும்
ஞானமிர்தத்திற் காண்க. பிரள் பொருள் எழுபட.

இவ்வினை புத்திதத்துவத்தைப் பற்றிநின்று சங்காரகாலத்திற் புத்தி தத்துவம் மாயையினொடுங்கியவழி, அம்மாயை பற்றுக்கோடாகநின்று, புனருற்பவத்தில் தநுகரணமுதலியவற்றிற்கேதுவாய் வருமெனக் கொள்க.

* இன்னும், உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரமெனவினை ஐவகைப்படும்.

அவற்றுள், உலகவினையாவது கூவல் குளம் தண்ணீர்ப்பந்தல் முதலியன செய்தலான் உண்டாவதாய் நிவிர்த்திகலையிலடங்கிய புவனபோகங்களைப் பயப்பிப்பது.

வைதிகமாவது வேதத்துள் விதிக்கப்படும் அக்கினிட்டோமமுதலிய வேள்விமுதலியவற்றான் உண்டாவதாய்ப் பிரதிட்டாகலையிலடங்கிய புவன போகங்களைப் பயப்பிப்பது.

அத்தியான்மிகமாவது வேதநெறியாற் செய்யும் பூசனை தறவு முதலியவற்றான் உண்டாவதாய் வித்தியாகலையிலடங்கிய புவனபோகங்களைப் பயப்பிப்பது.

அதிமார்க்கமாவது இயமம் நியமம் முதலிய யோகப்பயிற்சியான் உண்டாவதாய்ச் சாந்திகலையிலடங்கிய புவனபோகங்களைப் பயப்பிப்பது.

மாந்திரமாவது சுத்தமந்திரங்களைக் கணித்தன்முதலிய ஞானப்பயிற்சி விசேடங்களான் உண்டாவதாய்ச் சாந்தியதீதகலையிலடங்கிய புவனபோகங்களைப் பயப்பிப்பது.

இவற்றுள், முன்னையவிரண்டும் அசுத்ததத்துவ புவனங்களுக்காதாரமாகிய நிவிர்த்தி பிரதிட்டாகலைகளினடங்கிய அசுத்தபோகங்களைப் பயப்பித்தலான் அசுத்தகன்மமெனவும், நடுவணது மிச்சிரதத்துவ புவனங்

* இது, சிவாக்கிரபாடியத்தினுங் காண்க; எட்டாஞ்சூத்திரம், ௪௦௦-ம் பக்கம்.

களுக்காதாரமாகிய வித்தியாகலையிலடங்கிய சுத்தாசுத்த போகங்களைப் பயப்பித்தலான் மிச்சிரகன்மமெனவும், பின்னையவிரண்டுஞ் சுத்ததத்துவ புவனங்களுக்காதாரமாகிய சாந்திகலை சாந்தியதீதகலைகளினடங்கிய சுத்த போகங்களைப் பயப்பித்தலாற் சுத்தகன்மமெனவும் பெயர்பெறுமெனக் கொள்க.

* "நாசோற் பத்தி பண்ணிவரு மாதலா லநாதி" என்பது ஆகலின், ஆகாமியமுதலிய மூன்றும் ஒன்றற்கொன்று காரணமுங்காரியமுமாக நாசத்திலுற்பத்தியாய்த் தொன்றுதொட்டு வருதல்பற்றிப் பிரபஞ்சம்போற் பிரவாகாநாதியாவதன்றிப், பதிமுதலிய பொருள்போல் அநாதியன்றென்பாரும்; † "ஏக னநேக னிருள்கரும மாயையிரண்—டாகவிவை யாறுதியில்" எனவும், ஞானமிர்தத்தில், ‡ "ஆணவ முதலன் றதுபோற் கரும முங்—காணல தெனினக் கரைகழி நாநா—விதமினி துயிர்கட் குதவுவ தெதனு—லற்றது மாயையு மற்றறி யவணே" எனவும் ஆணவமுதலிய பொருளோடும் ஒப்பவைத்து அநாதியென்றமையானும், காரியங்களெல்லாம் முதல் துணை நிமித்தமென்ன மூன்றுகாரணங்களில் ஒன்றையின்றியும் அமையாமையானும் முதற்காரணமாகிய மூலவினை பதிமுதலிய பொருளோடொப்ப அநாதியாயுண்டென்பாருமென்று இருதிறத்தர் ஆசிரியர்.

அவருள், மூலவினை உண்டென்பார் கருத்தேபற்றி, § "வினையே செய்வது" என்னுஞ் சூத்திரத்துள், வனைந்தானென்புழிச் செய்தற்கு வனைதல் செயப்படுபொருணீர்மைத்தாய்த் தொழின்முதனிலையாமெனக் கொண்டார் தொல்காப்பியனாருமென்க. அங்ஙனமல்லாக்கால் வனைதற்றொழில் தொழின்முதனிலையாமாறு யாண்டையதென்பது.

## மாயையுண்மை.

இங்ஙனம் வினையுண்மை பெறப்படவே, ஏய்தற்குப் பற்றுக்கோடாகிய மாயையுண்மையும் பெறப்படும்.

அஃதேல், ஏதுவொருபக்கமும் பயனொருபக்கமுமாதல் பொருந்தாமையானும், இன்பத்துன்பங்களை நுகர்வோன் ஆன்மாவேயாகலானும், செய்தவினை செய்தவனைப்பற்றிநிற்றலே பொருத்தமுடைமையானும், ஆன்மாவே வினைக்குப் பற்றுக்கோடாவதன்றி மாயை பற்றுக்கோடாகாதாலெனின்,—அற்றன்று; அங்ஙனங் கொள்வார் மதத்தினும், தென்புலத்தாரை நோக்கி மகன் செய்தவினை மகனைப்பற்றிநின்று தந்தைக்குப் பயனுதவுதலும், தந்தைசெய்யுஞ் சாதகன்மமுதலிய வினை தந்தையைப்பற்றிநின்று மகனுக்குப் பயன்றருதலுமுடைமையின், ஏதுவொருபக்கமும் பயனொரு பக்கமும் ஆகாவென்னும் நியமஞ் சாத்திரவிதியானன்றி வருவனவற்றிற்கே ஆகலானும், உழவர்செய்யுஞ் செய்திப்பயன் உழவரைப்பற்றிநில்லாது பழனத்தைப் பற்றிநின்றே அவர்க்குப் பயன்றருதல் காண்டுமாகலானும்,

* சிவப்பிரகாசம், பொது, கசு. † திருவருட்பயன், சு-வது, அறியுநெறி, உ. ‡ ஞானமிர்தம், உஉ. அடி, ரு. § தொல்காப்பியஞ் சொல்லதிகாரம், வேற்றுமை மயங்கியல், உ-கூ.

தோற்றமு நாசமுமுடைய சடத்துக்குப் பற்றுக்கோடு சடமாவதன்றிச் சித்தாதல் பொருந்தாமையானும், இன்பத்துன்பமாகிய வினைப்பயன்கள் மாயாகாரியங்களினிடமாகவே ஆன்மாவுக்கு வருதலானும் வினைக்குப் பற்றுக்கோடு மாயையேயன்றி ஆன்மாவன்றென்பது துணியப்படுதலின், அதுபற்றி மாயையுண்டென்பது துணியப்படுமென்க.

இன்னும், மேலைச்சூத்திரத்திற் பிரபஞ்சத்திற்கு நிமித்தகாரணமுண்டெனச் சாதித்த வழியளவையே முதற்காரணமுண்மைக்கும் பிரமாணமாம்; ஆகலானும், மாயையுண்மை துணியப்படுமென்க.

X

## சூனியமுதற்காரணவாதமறுப்பும்

அற்றேல், காரணமின்றி வானினின்றும் மண்மாரிபெய்யவும், இந்திரசாலம்வல்லார் அவர் நினைந்தவடிவங்களை நினைந்தமாத்திரையே தோற்றுவிக்கவும் காணப்படுதலான், இவ்வாறே உலகிற்குப் புத்தரிலொருசாரார் கூறுஞ் சூனியமே முதற்காரணமென அமையும், அற்றாகலினன்றே, * "விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" எனவும், † "விச்சின்றி நாறு செய் வானும்" எனவும், சூத்திரத்துள், இருவினையின் என்றதுபோல மாயையென்று வகுத்தோதாதொழிந்ததூஉமெனின்,—அற்றன்று; அசற்காரியம் பொருந்தாமை மேலுரைத்தாம்; ஆகலானும், ‡ பிருதிவிதத்துவம் நூறுகோடியோசனையளவும் வியாபகமாதலின், வானினின்றும் மண்மாரி பெய்தற்கு ஆண்டும் பிருதிவி தூலரூபமாயின்றாயினுஞ் சூக்குமரூபமாயுண்டெனக் கொள்ளப்படுதலின், அதுவே முதற்காரணம்; இந்திரசாலம்வல்லாரும் மந்திரவலியான் அவ்வக் காரணங்களினின்றே நினைந்த வடிவத்தைத் தோற்றுவிப்பாராகலிற் சற்காரியவாதத்திற் கிழுக்கின்மையானும்; பயனுத்துள், § "மலமாயை தன்னொடு வல்வினை" என்று எடுத்தோதிய ஆசிரியர்க்கு ஈண்டு மாயையுண்மை எடுத்தோதுதலே கருத்தாகலானும், ஈண்டு இருவினையின் என்றதனானும், மேலைச்சூத்திரத்தோதிய சற்காரியவாதத்தானும், மாயையுண்மையுந் தானே பெறப்படுமென்னுங் கருத்தான் வாளாபோயினராகலின், அதுபற்றி யிழுக்கின்மையானும் மாயையே உலகிற்கு முதற்காரணமென்று உணர்க.

* "விச்ச தின்றியே விளைவு செய்குவாய்" † "விச்சின்றி நாறுசெய்வானும்" என்பவற்றிற்குத் தாற்பரியம் வேறென்பது ¶ மேற்காட்டினும். அல்லதூஉம், * "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்பது வித்தின்றி விளைவாயெனப் பொருள்பட்டுத் திருமேனிகொள்ளுமுறைமை உணர்த்தியதூஉமாம். "வித்தின்றி விளைந்தது" என்றார் பிறரும். † "விச்சின்றி நாறு செய்வானும்" என்பதற்கும் இவ்வாறுரைத்துக்கொள்க. அவ்வாறன்றிச் சித்தாந்தத்தோடு முரணிப்பொருள்செய்தல் பொருந்தாமை அறிக.

---

* திருவாசகம், திருச்சதகம், கஃ. † திருநாவுக்கரசுநாயனர் தேவாரம், திருவாரூர், காந்தாரம், உ. (நரியைக்) ‡ இது, க்ஷாதக்ஷம் ஶதகொடி யொஜநஃ । என்னுஞ்சித்தாந்த சாராவளியானும் உணர்க. § இந்நூல், பத்தாஞ்சூத்திரம். ¶ இச்சூத்திரத்தில், பக்கம், கூ.

'மலமில்லதோர் முதல்' என்பதுமது.

இனி, விச்சென்பது காரணப்பொதுமையை உணர்த்தாது முதற்கா ரண மாத்திரையே உணர்த்துமெனக் கொள்ளினும், அதனான் ஈண்டுப் படுவ தோர் இழுக்கின்று. என்னை? உலகத்திற்காணப்படும் வித்துக்களெல்லாம் அவ்வத் தொழில்செய்வோர்க்கு வேண்டுழிக் கைகூடாது முயன்று தேடிக் கோடற்பாலனவாய்க் காலத்தானும் இடத்தானும் ஏகதேசமாய் வேறுநிற் பனவாமன்றே: அத்தன்மைத்தாகிய முதற்காரணமின்றியே தன்போல நித்தவியாபகமாய்த் தன்னுள் வியாப்பியமாய்த் தன்னையே தாரகமாகக் கொண்டு வேறின்றி உடனாய் நிற்பதொன்றுனே விளைவுசெய்குவாயென ஏனை முதற்காரணங்களோடு முதல்வன்செய்திக்கு முதற்காரணமாகிய மாயை யிடை உளதாகிய வேற்றுமைதோன்றக் கூறுதலே அத்திருப்பாட்டின் கருத்தாகலானென்க. * "யோகசித்தர்போல முதல்வன் நிருபாதானமாய்ச் சகத்தைப் படைப்பான்" என்றோதிய சிவபுராணத்திற்கும் இதுவே கருத் தென்பது சீகண்டபாடியத்துட் காட்டியவாற்றான் அறிக.

இதனானே ஏனையோர்போல முதல்வனுந் தன் செய்திக்கு முதற்கார ணம் வேண்டுமாயின் அது ஏனைமுதற்காரணங்கள்போல ஒரோவழிக் கிடை யாதொழியும்; ஒழியவே, அவ்வழி முதல்வன் உலகத்தை ஆக்கமாட்டானாய் அசத்தனுவான்செல்லும் எனப் பிரமமுதற்காரணவாதிகள்கூறும் ஆசங் கையை நீக்கியவாறுமாயிற்று. இவையனைத்தும் விளக்கிய, † "அன்னவனு மிதுவொழிய வாக்க மாட்டா னசத்தனு மெனினதுவு மவன்போ னித்த— முன்னவனவ் வசித்தைவிரித் தெவையு மாக்கு முதன்மையது கொடுத்த தென மொழிந்தி டாரே" என்றார் புடைநூலாசிரியரும்.

## பரமாணுமுதற்காரணவாதமறுப்பு.

அற்றேல், இங்ஙனங் கூறியவாற்றாற் சூனியவாதம் பொருந்தாதென்ற தொக்கும். அங்ஙனமாயினுஞ் ‡ சமுதாயவாதிகள் § ஆரம்பவாதிகள் கூறும் அணுக்களே பிரபஞ்சத்திற்கு முதற்காரணமென்றல் அமையும்; மாயையுண்டென்பார்க்கும், தூலமாய்நின்ற அவத்தையினீங்கிச் சூக்கும மாய்நின்ற அவத்தையே முதற்காரணமென்பது கருத்தாகலிற் சூக்குமம் அணு என்பன ஒருபொருட்கிளவியாகலான், அவ்வணுக்களின் வேறாய் மாயையுண்டெனக் கோடல் பொருந்தாதெனின்,—அற்றன்று; அணுக்கள் அவயவமுடைமையானும்; அவற்றின் நுண்ணியபரமாணுக்கள் உண்டென் பதற்குப் பிரமாணமின்மையானும்; உண்டெனினும், சடமுமாய்ப் பலவுமா யினவெல்லாந் தோன்றிநின்றழியுங் காரியமேயாகலின், அவற்றிற்குக் காரணமுண்டென்பது பெறப்படுதலானும்; காரியந் தோன்றியவழிப், பல

* சீகண்டபாடியம், இரண்டாம் அத்தியாயத்து இரண்டாம்பாதம், பாசுபதாதி கரணம். [illegible] என்பது சிவபுராணவசனம்; இது சிவாக்கிரபாடியத்துங் காட்டப்பட்டுளது (இரண்டாஞ் சூத்திரம், பக்கம் கசுசு.)
† சிவப்பிரகாசம், பொது, கக. ‡ பௌத்தருட் சௌத்திராந்திகரும் வைபாடி கரும். § தார்க்கிகர்.

வாய் ஏகதேசமாய்க் காட்சிப்புலனாய் நிற்றல்பற்றித் தூலமெனவும், ஒடுங்கியவழி, ஒன்றாய் வியாபகமாய்ப் புலனாகாது நிற்றல்பற்றிச் சூக்குமமெனவுங் கொள்ளப்பட்டன; அக்கருத்தறியாது சூக்குமமென்னுஞ் சொல்லை பற்றி அணுக்களை உலகிற்கு முதற்காரணமென்றல் பொருந்தாமையானும் மாயையே முதற்காரணமென்றுணர்க.

இன்னும், பரமாணுக்களுக்கு அவயவமுண்டெனக் கொள்ளாக்கால் அவர்மதத்திற்கே அவசித்தாந்தமாய்முடியும்; என்னை? பரமாணுக்கள் இவ்விரண்டு தம்முட் சையோகமென்பாரை முழுவதுஞ் சையோகமோ? ஒருபுடைசையோகமோ? எனக்கடாயினார்க்கு, அவ்வியாப்பியவிருத்தி சையோக சம்பந்தமென்னும் அவர்மதத்தோடு முரணி, வியாப்பியவிருத்தி சையோகமெனப்பட்டு வழுவாய்முடியுமாகலின், முழுவதுஞ் சையோகமென்றல் அவர்க்கே பொருந்தாது; இனி, அவ்வியாப்பியவிருத்தியென்றது வழுவாமைப்பொருட்டுப் பரமாணுக்கள் ஏகதேசமாகிய ஒருபக்கத்திற் சையோகமும், ஒருபக்கத்திற் சையோகமின்மையுமுடைத்தென்று ஒருதலையான் விடுத்தல்வேண்டும்; வேண்டவே, பரமாணுக்கள் அவயவமுடையவென்பது தானேபெறப்பட்டது. இன்னும் விரிப்பிற் பெருகுமென் றொழிக.

## பிரகிருதிமுதற்காரணவாதமறுப்பு.

அற்றேல், சாங்கியர்கூறும் மூலப்பகுதியதுண்மை எல்லார்க்கும் ஒப்பமுடிதலின், அதுவேயமையும். அதனின்வேறாய் மாயையுண்டென்பதற்குப் பிரமாணமில்லையெனின்,—அற்றன்று; முக்குணங்களும் அவ்வியத்தமாய்த் தம்முள் ஒத்துநின்ற அவத்தையே மூலப்பகுதியென்பது சாங்கியர்கூறும் மதமாகலின், அவர்கூறும் மூலப்பகுதி சடமுமாய்ப் பலவுமாகலிற் றோற்றநாசமுடைத்தாகலான், அதற்கு முதற்காரணமுண்டென்பது பெறப்படுதலின், அதுவே பரமமுதற்காரணமென்றல் பொருந்தாமை அறிக.

அற்றேல், சைவசித்தாந்தத்தின் முக்குணங்களுந் தோன்றாமல் அவ்வியத்தமாய்நின்ற அவத்தையே மூலப்பகுதியாகலின் அஃது ஒன்றேயென்றற்கிழுக்கின்மையின், தோற்றநாசமுடைமைக் கேதுவின்மையான் இத்தன்மைத்தாகிய மூலப்பகுதியே பரமமுதற்காரணமென்றற்படும் இழுக்கென்னையெனின்,—நன்றுசொன்னாய்! நிலமுதலிய பூதங்களுக்குச் சூக்குமந் தன்மாத்திரை; தன்மாத்திரையினுஞ் சூக்குமம் ஆங்காரம்; ஆங்காரத்தினுஞ் சூக்குமம் புத்திதத்துவம்; புத்திதத்துவத்தினுஞ் சூக்குமம் அவ்வியத்தமானமூலப்பகுதி; அதனினுஞ் சூக்குமங் கலைமுதலியதத்துவங்கள்; அவற்றினுஞ் சூக்குமம் மாயையாகலின், ஈண்டு மூலப்பகுதியை நோக்கிச் சூக்குமமாகிய கலைமுதலியவற்றைநோக்கித் தூலமாகியமூலப்பகுதி பரமமுதற்காரணமாகாமையின், தன்னைநோக்கித் தூலமாகிய புத்திமுதலியதத்துவமாத்திரைக்கே முதற்காரணமாய்த், தன்னைநோக்கிச் சூக்குமமாகிய கலையின்காரியமாய்நிற்கும் மூலப்பகுதி பரமமுதற்காரணமாமாறு யாண்டையதென்க.

அற்றேல், கலைமுதலியவற்றைநோக்கி மூலப்பகுதி சூக்குமம்; மாயை தூலமெனக்கொள்ளிற் படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; அங்ஙனங் கொள்ளினும், மாயையும் மூலப்பகுதியுமென்று இருபொருள் கோடலின் விசேடமின்மையின், பெயர்மாத்திரையின் முரணுதலாற் போந்ததென்னையென்க.

"மா" என்பது ஒடுங்குதல், "யா" என்பது வருதல்; ஆகலின், எல்லாக் காரியங்களுந் தன்பால்வந்து ஒடுங்குதற்கும், தன்னினின்றுந் தோன்றுதற்குங் காரணமாய்நின்றது மாயையெனப்படும்; ஆகலான், ஒன்றற்கொன்று நுண்ணிதிற்செல்லுஞ் சூக்குமங்கட்கு முடிவிடமாய்நின்ற சூக்குமப்பொருள் யாது, அதனை மாயையென்றலே பொருத்தமுடைமை அறிக.

## பிரமமுதற்காரணவாதமறுப்பு.

அற்றேல், சூனியமுதற்காரணவாதமும் பரமாணுமுதற்காரணவாதமும் பிரகிருதிமுதற்காரணவாதமும் வேதமுதலியவற்றிற்கு மாறுகோளாகலின், பொருந்தாவென்றதொக்கும்; பிரமவாதிகள் பிரமம் பிரபஞ்சத்துக்கு முதற்காரணமென்பது வேதமுதலியவற்றிற்கெல்லாம் ஒப்பமுடிந்ததாகலின், அதுவே அமையும். அஃது எல்லாநூல்களுக்கும் ஒப்பமுடிந்ததென்பது வேதத்தின், *"பிரமத்தையுணர்ந்தோன் எல்லாவற்றையுமுணர்ந்தோனுவன்" என்பதனானும், நான்மணிமாலையின் வேதப்பொருள்பற்றி, † "நுரையுந் திரையு நொப்புறு கொட்பும்—வரைவில் சீகர வாரியுங் குரைகடற்—பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி—யெண்ணில வாகியிருங்கட லடங்குந்—தன்மை போலச் சராசர மனைத்து—நின்னிடைத் தோன்றி நின்னிடை ‡ யொடுங்கும்" என்பதனானும், § "இருநிலனாய்த் தீயாகி..................................எம்மடிகணின்றவாறே" என நின்ற திருத்தாண்டகத்தும் பிறண்டும் முதல்வனே எல்லாமானனென்பதனானும், அம்மைதிருவந்தாதியினும், ¶ "அறிவானுந் தானே யறிவிப்பான் றானே—யறிவா யறிகின்றான் றானே—யறிகின்ற—மெய்ப்பொருளுந் தானே விரிபொழில்பா ராகாய—மப்பொருளுந் தானே யவன்" எனத்தேற்றத்தாற் கூறுதலானும், இன்னும் இவ்வாறே ஆண்டாண்டுக் கூறும் வசனங்களானும் பெற்றாமெனின்,—அற்றன்று; அவ்வம்முதற்காரணங்களின் குணமெல்லாம் அவ்வக் காரியங்கட்கும் உளவென்பது நியமமாகலிற் சித்தாகிய பிரமத்திற்றோன்றிய பிரபஞ்சமுஞ் சித்தாதல்வேண்டுமன்றிச் சடமாதல் பொருந்தாமையானென்க.

---

* பிரமத்தை யுணர்ந்தோன் எல்லாவற்றையும் உணர்ந்தோனுவன் என்பது, கஸ்மிந்நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம்பவதி | முண்டகோபநிடதம், க-க. ௩. யேநாஶ்ருதம் ஶ்ருதம் பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதமிதி | சாந்தோக்கியம், சு-க-க. என்பவற்றான் அறிக. † கோயினான்மணிமாலை, உ௪. ‡ அடங்கும் எனவும்பாடம். § திருநாவுக்கரசுநாயனார் தேவாரம், நின்றதிருத்தாண்டகம், க. ¶ பதினொராந்திருமுறை, அற்புதத்திருவந்தாதி, உ0.

அற்றேல், பாலினுண்டாகிய தயிருக்குப் பாலின்குணமும், நெல்லி னுளவாகிய பதர் பலாலங்களுக்கு நெல்லின்குணமும், கொம்பினுண்டாகிய புல்லுக்குக் கொம்பின்குணமும், கோமயத்தினுண்டாகிய தேளுக்குக் கோமயத்தின்குணமும், சிலம்பியினுண்டாகிய நூலுக்குச் சிலம்பியின்குணமுங் காணாமையின், காரணத்தின்குணமே காரியத்திற்குக் கூடுமென்னும் நியமம் பொருந்தாதாலெனின்,—அற்றன்று; ஒன்றன்குண மொன்றற்காதல் இன்மையின், காரணத்தின்குணமே காரியத்திற்குமென்பதற்குத் தாற்பரியம், காரணத்தின் குணங்களோடு ஒத்த குணங்களே காரியத்திற்கும் உளவாத லன்றி, அவற்றிற்கு மறுதலையான குணங்கள் உளவாகாவென்பதேயாகலான், ஈண்டு எடுத்துக் காட்டியவற்றுள் நியமத்திற் கிழுக்கின்மை அறிக.

சிலம்பிநூல்வருதற்குச் சூக்குமகாரணஞ் சிலம்பிவயிற்றினுண்மை யானும், கோமயத்திற்றோன்றியது தேளின் உடம்பேயாகலானும், இன்னோரன்னவையெல்லாம் பிறவிபேதமாகலானும் ஆண்டு ஐயப்பாடின்மை கண்டுகொள்க.

இன்னும், * "மாயையைப் பிரகிருதியென்றறிக; மாயையுடையவன் மகேசுரனென்றறிக" என வேதத்துட் பகுத்தோதுதலானும், பிரகிருதி, முதற்காரணம், உபாதானம், சமவாயிகாரணமென்பன ஒருபொருட்கிளவி யாகலானும்; இவ்வாறு பிரமத்தை முதற்காரணமென்னுஞ் சொல்லான் வேதத்துள் ஓரிடத்தும் எடுத்தோதாமையானும், பிரமம் முதற்காரண மென்பார்க்கு இவ்வசனம் முரணுதலானும், மாயையே முதற்காரணமாவ தன்றிப், பிரமம் முதற்காரணமாகாதென் றொழிக.

அற்றேல், இவ்வசனத்தான் மாயை முதற்காரணமென்பது பெற்றாம். மேற்காட்டிய வசனங்களான் முதல்வன் முதற்காரணமென்பது போதருமாகலான், இருபொருளுங்கூடி முதற்காரணமாமென அமையும்; அற்றாகலி னன்றே, † "பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி—நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி—தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி—வளி யிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி—வெளியிடை யொன்றாய் விளைந் தாய் போற்றி" எனவும், ‡ "அருக்கனிற் சோதி யமைத்தோன் றிருத் தகு—மதியிற் றண்மை வைத்தோன் றிண்டிறற்—றீயின் வெம்மை செய் தோன் பொய்தீர்—வானிற் கலப்பு வைத்தோன் மேதகு—காலி னூக்கங் கண்டோ னிழறிகழ்—நீரி லின்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட—மண்ணிற் றிண்மை வைத்தோ னென்றென்—றெனைப்பல கோடி யெனைப்பல பிறவு—மனைத்தனைத் தவ்வயி னடைத்தோன்" எனவும் ஓதியதூஉமெனின்,—அற் றன்று; இருபொருளுங்கூடி முதற்காரணமென்பார்க்குத் தாற்பரியம் ஒரு கயிற்றிற் கிரண்டுநூல்போலப், பிரபஞ்சத்திற்கு மாயையும் முதல்வனுந் தனித்தனி முதற்காரணமென்பதோ? உடம்பே தோன்றிநின்றழிவதா

* ஊயாஞ உ வுகுதிஂ விஷூாநாயிநஞ உஹெஶூாஜ | சுவேதாச்சுவதரம், ச-ம் அத். க0-ம் மந்திரம்.    † திருவாசகம், போற்றித்திருவகவல், அடி-கஙஎ.    ‡ ஷை திருவண்டப்பகுதி, அடி-உ0.

கவும் உயிரும் அதனொடுகூடித் தோன்றிநின்று அழியப்படுமாறுபோல, மாயை முதற்காரணம், முதல்வனும் அதனொடுகூடி விசிட்டமாய் முதற்காரணமென்பதோ? அவ்வாறன்றிப் பிரபஞ்சஞ் சடமாதலின் அதற்குச் சடமாகிய மாயையே முதற்காரணமெனின், அதற்கு அது பொருந்தாது; என்னை? அங்ஙனமாங்கால் மாயைபோல முதல்வனும் விகாரப்படுதலுண்மையின், "நிருவிகாரி" என்னும் வசனங்களோடு முரணுமாதலானென்க.

இதனானே நிமித்தகாரணனாகிய முதல்வன் மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் முதற்காரணனாவனென்றதூஉம் பொருந்தாமையறிக. என்னை? தோன்றிநின்றழியும் உடம்பொடு கூடியவழி விகாரப்படுதல்பற்றி உடம்பொடு விசிட்டனாய்நின்ற ஆன்மாவுந் தோன்றிநின்றழிவனென்பது பொருந்தும். அதுபோல மாயையொடு விசிட்டனாய் முதல்வனும் முதற்காரணமாமென்பார்க்கு, விசிட்டமாவது விசேடணமும் விசேடியமும் அவ்விரண்டனியைபுமென்னும் இவற்றின் வேறன்மையான் முதல்வனும் அவ்வாறுவிகாரியாதல் வேண்டப்படும். படவே, "நிருவிகாரியென்னுஞ் சுருதியொடு முரணுமாதலானென்க. விசிட்டமாவது அம்மூன்றற்கும் வேறெனக் கொள்வார்க்கு முதல்வன் முதற்காரணமென்பதே பொருந்தாதாய் முடியுமென்றறிக.

அல்லதூஉம், நிமித்தகாரணமே முதற்காரணமென்று எடுத்துக்காட்டுதற்கு ஓர் பொருளின்மையின், அது வழியளவைக் கேலாமையானும், வழியளவையினும் ஆகமவளவை வலியுடைத்தெனின், அற்றாயினும், வழியளவை ஆகமவளவையொடு முரணுமாதலானும், ஒரோவழி முரணுமாயின், அதுபற்றி யாண்டுந் துணிவுபெறாமையின், வழியளவை பிரமாணமன்றெனப்பட்டு, ஈண்டோதிய மேற்கோள்களும் ஏதுக்களும் எடுத்துக்காட்டுக்களும் பயனிலவாய்முடியுமாதலானும், ஆகமப்பொருள்கள் தம்முள் முரணுவனபோலத் தோன்றியவழி, அவற்றுள் வன்மை மென்மை உணர்ந்து பொருள்கோடற்கு வைத்ததே வழியளவையாதலானும், அஃது அதனொடு முரணுதல் பொருத்தமின்மையானும் விடையன்மையறிக.

இனி, இவ்விரண்டும் பொருந்தாமையானும், வேறு விடுக்குமாறின்மையானும், மாயையே முதற்காரணம்; அதற்குத் தாரகமாய் விரவிநின்று அதிட்டித்தலான், முதல்வனும் முதற்காரணமெனக் கோடல்வேண்டும். அங்ஙனங் கொள்ளின் விகாரியாதலின்மையான், முதல்வனும் முதற்காரணமாமென்பது வாய்பாடுமாத்திரையேயன்றிப் பொருள்படாமையின், அஃது எமது சித்தாந்தமென்றொழிக.

மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய்நின்று முதல்வனும் முதற்காரணமாமென்ற நீலகண்டவாசிரியரும் பரந்துசென்று முடிவின்கண் இவ்வாறு கோடலே சித்தாந்தமாக வலியுறுத்தினர். இது சென்மாதிகரணத்திறுதியிற் சிவாதித்தமணிதீபிகையினுங் காண்க. சித்தாந்தத்தொடு பொருளான் முரணுதலின்றாயினும் வாய்பாடுமாத்திரையான் முரணுதலிற் சிவாத்துவிதசைவம் வேறெனப்பட்டதென்றுணர்க.

அஃதாமாறு:— * "ஏற்றங் கருவி யிருபதோ டிரண்டும்—போற்று மைந்தவத்தையும் புகறிரி மலமு—மீசனு முயிரும் பேசினை யஃதொழிந்—தொன்றேயாகு மென்றநின் னியல்பு—தாயர் மனைவியர் தாதியர் தவ்வைய—ராயவ ரெவரையு மோர்மையிற் காணுங் — கோகழி தூர்த்தர் கொடுந் தொழி றகுமே" என்னுஞ் சங்கற்ப நிராகரணத்தான் அறிக. விகாரமெய்துமாறின்றியும் யாதானுமோ ரியைபுபற்றி முதற்காரணமாமென்றல் பொருந்துமென்பார்க்குக் குயவன்முதலியோருங் குடமுதலியவற்றிற்கு அவ்வாறு முதற்காரணமாமென்றல் பொருந்துமாதலின், வாய்பாடு மாத்திரையாற் போந்ததென்னையென்றொழிக.

அற்றேல், "பிரமத்தையுணர்ந்தோ னெல்லாவற்றையுமுணர்ந்தோன்" என்றாற்றொடக்கத்து வசனங்கட்குப் பொருளாமாறு என்னையெனின், கூறுதும்:— † "அவையுடைமை யாளாநா மங்கு" என்றமையின், அவற்றை உடையானியல்பு உணர்ந்தவழி, அவ்வுயிர் மாயை கன்மங்களும் அவ்விலக்கணத்தின் அகப்பட்டு வியாப்பியமாய்நிற்றலின், அவையும் இனிதுவிளங்கு மென்னுங் கருத்தான், "பிரமத்தையுணர்ந்தோ னெல்லாவற்றையுமுணர்ந்தோன்" என்றதென்க.

அரசனையுணர்ந்தோன் அமைச்சர்முதலியோரையும் உணர்ந்தோனாவான் என்றாற்போலத் தலைமையும் பயனும்பற்றி அங்ஙனங் கூறியதென விடுப்பாருமுளர். ‡ "நின்னிடைத்தோன்றி நின்னிடையொடுங்கும்" என்றது மாயைக்குத் தாரகமாதல்பற்றியென்றுணர்க. அக்கருத்து உணர்ந்தோர்க்கே நீரிற்றோன்றி யொடுங்கும் நுரைமுதலியவற்றை நீர்க்கிடமாகிய கடலிற்றோன்றியொடுங்குதல்போலென்று உவமைகூறினாராகலின், ஆண்டு ஆசங்கைக்கிடமின்மை உணர்க.

நின்றதிருத்தாண்டகமுதலியனவும், § "உலகெலா மாகி வேறா யுடனுமாய்" என்னுங் கருத்தேபற்றி யோதுதலின், ஆண்டு ஆசங்கையின்மையுங் கண்டுகொள்க.

அற்றேல், அஃது அங்ஙனமாக; மேலையதிகரணத்தின், § "உலகெலா மாகி வேறா யுடனுமாய்" என்றது முதல்வன் ஆன்மாக்களோடு நிற்கு முறைமையே கூறிற்றாகவுரைத்தலின், ஈண்டு மாயை மாயேயங்களோடு முதல்வன் நிற்குமுறைமைக்கு அதனை எடுத்தோதிவிடுத்தல் அமையாதாம் பிறவெனின், முதல்வன் தனது வியாபகத்தின் வியாப்பியமாகிய ஆன்மாவொடு நிற்குமுறைமை கூறவே, அவ்வான்மவியாபகத்தின் வியாப்பியமான மாயை கன்ம மாயேயங்களோடும் அவ்வாறே நிற்பனென்பது கூறாமையே பெறப்படுதலின், அமைவுடைத்தென்க.

* சங்கற்பநிராகரணம், கஅ-வது நிமித்தகாரண பரிணாமவாதிசங்கற்ப நிராகரணம், அடி, கஉசு. † இந்நூல் - இரண்டாஞ்சூத்திரம், ச-ம் அதி. உதாரண வெண்பா. ‡ கோயினான்மணிமாலை, உச. § சிவஞானசித்தி, இரண்டாஞ் சூத்திரம், க.

இக்கருத்தேபற்றியன்றே * "மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா ருயிரின் மேவு மருளெனி லிருளாய் நிற்கும்—மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா ருயிரின்மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" என்றார் புடைநூலாசிரியருமெனக்கொள்க.

இவ்வுண்மை யுணராது, சைவரிலொருசாரார் "முதல்வனுக்கும் மாயைக்குஞ் சந்நிதிமாத்திரையேயன்றிச் சம்பந்தமின்று" எனவும், "இன்றாகலின், முதல்வன் மாயைக்குத் தாரகமல்லன்; மாயை தனித்த முதலேயாம்" எனவும், பாசுபதர்மதத்தில் வீழ்ந்து, * "மாயைமாமாயை" என்னுஞ்செய்யுளுக்குந் தமக்கு வேண்டியவாறே பொருளுரைத்துக்கொள்வர். வியாபக வியாப்பியங்கட்குத் தம்முட் சம்பந்தமின்மையுந் தானமுந் தானியுமாகாமையும் யாண்டையவென்றொழிக.

வியாபகப்பொருள்கட்குத் † "தண்கடனி ருப்புப்போல்" தம்முள் வியாபக வியாப்பியமாமாறு கூறியது தானமுந் தானியுமாமுறைமைபற்றியேயல்லது பிறிதில்லையெனக் கொள்க.

மூலமலமும் அவ்வாறு வியாப்பியமாயினும், ஒளிமுன் இருள்போல முதல்வனுக்கு மறுதலைப்பொருளாகலின், சம்பந்தமின்றாயிற்று. மாயையும் அதுபோல மறுதலைப்பொருளென்பார்க்கு, ‡ "இகலிவரு மிவையுணரினிருள் வெளியாந் தன்மை" எனவும், § "விமலனுக்கோர் சத்தியாய்" எனவும், ¶ "தாரகமா மத்தன்றா னிற்றல்" எனவும், ○ "அவையுடைமையாளா நாமங்கு" எனவுங் கூறும் இத்தொடக்கத்து வசனங்களெல்லாம் முரணுமாறு அறிக.

இன்னும், ○ "அவையுடைமை யாளாநா மங்கு" என்றதனானும் ** "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்—புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்" என அட்டமூர்த்தத்துள் மாயேயத்தையும் ஆன்மாவோடொப்பத் திருமேனியாகவைத்து ஓதுதலானும், முதல்வனோடு ஆன்மாவுக்கு எச்சம்பந்தம் அச்சம்பந்தம் ஆன்மாவின் வியாப்பியமான மாயைக்கும் உண்டெனவும், அங்ஙனமாயினுஞ் சித்தென்னுஞ் சாதியொருமையான் ஆன்மாவுக்கு விசேடவுரிமை உண்டெனவுங்கொள்க.

அற்றேல், முதல்வனுக்கும் ஆன்மாவுக்கும் உளதாகிய சம்பந்தமாவது சையோகம் சமவாயம் தாதான்மியம் ஐக்கியம் சொரூபம் என்பனவற்றுள் யாதோவெனின்,—அஃது இவ்வதிகாரத்திறுதியிற் காட்டுதும். இதனானே

* சிவப்பிரகாசம், உண்மை, உ0.　　† இந்நூல், ஏழாஞ்சூத்திரம், ங-ம் அதி. உதாரணவெண்பா.　　‡ சிவப்பிரகாசம், பொது, உரு.　　§ சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், ருங.　　¶ இந்நூல், முதற்சூத்திரம், உ-ம் அதி. உதாரணவெண்பா. ○ ஷை இரண்டாஞ்சூத்திரம், ச-ம் அதி, உதாரணவெண்பா.　　** திருவாசகம், திருத்தோணோக்கம், ரு.

ஆன்மாவின் வியாப்பியமான மாயைகன்மங்களுக்கும் அச்சம்பந்தமுண்மை பெறப்பட்டது.

அற்றேல், இவற்றைப் பாசமென்றல் பொருந்ாதெனின்,—அற்றன்று; ஆன்மா மலத்திற் பிணிப்புண்டு பசுவெனப் பெயர்பெற்று நின்ற வழி, ஆன்மாவின் வியாப்பியமான மாயைமுதலியனவும், திரோதானமும் மலத்திற்குக் கருவியாய்ப் பாசமெனப்பெயர்பெற்று மலமேயாய்நிற்கும். ஆன்மாப் பசுவென்னும் பெயர்நீங்கி முத்தனாய் அருளோடுங் கூடிநின்ற வழி, அவ்வான்மாவின் வியாப்பியமான மாயைமுதலியனவுந் திரோதான சத்திபோலப் பாசமென்னும்பெயர் நீங்கி அருளேயாய் நிற்குமென்க.

பெத்தத்தினின்றநிலையே பொதுவியல்பெனவும், முத்தியினின்றநிலை தன்னியல்பெனவும் மேற் பாயிரத்திற் காட்டுதலின், இவை அங்ஙனம் நிற்றல் முறையே பொதுவியல்புந் தன்னியல்புமாகலான், அநேகாந்தவாத மென்னுங் குற்றமின்மை அறிக. * "இருளி லிருளாகி யெல்லிடத்தி னெல்லாம்—பொருள்க ளிலவோ புவி" என்றது இன்னோரன்னவை அநேகாந்த வாதம் அல்லாமைக்கு எடுத்துக்காட்டியவாறு. இங்ஙனமாகலானும், † மேலைச்செய்யுளின் றொடர்ச்சியானும், சொற்கிடக்கைமுறைமையானும், "மாயைமாமாயை" என்னுஞ் செய்யுளுக்கு மாயைமுதலியமூன்றும் ஆன்மாநின்றபடி நிற்குமென்பதே செம்பொருளெனக் கொள்க.

அற்றேல், இங்ஙனங்கூறியவாற்றான் இவ்வாறுபொருள்கோட்லொக்கும். மேலைச்செய்யுளின் றொடர்ச்சியாமாறென்னையெனின், கூறுதும்:—மேலைச்செய்யுளினிறுதியின், † "நன்னலம் பெறநிறைந்த ஞானமே ஞான மென்பர்" என்புழி, ஏகாரந் தேற்றப்பொருட்டன்று; "நன்னலம் பெற நிறைந்தஞானம்" ஞானமோ அன்றோவென்னும் ஐயப்பாடின்மையின். இதனானே வினாப்பொருட்டுமன்று. ஈற்றசையென்றொழியின், † "ஞானம் ஞானம்" என்றல் புனருத்தியாம். ஏனைப்பொருள்கள் பயத்தற்கு மேலாமையின், † "நன்னலம்பெற நிறைந்ததாகிய பதிஞானமொன்றே சுதந்திர ஞானமென்று உயர்த்துக்கூறுவர்; ஏனைய பசுஞானமும் பாசஞானமும் அன்னவல்ல" எனப் பிரிநிலைப்பொருள் குறித்துநின்றதேயாம். ஆகவே, பிரிநிலையெச்சத்தான் ஆண்டு எஞ்சிநின்ற பசுஞான பாசஞானங்களின் இயல்பு அவற்றின் குணிகளாகிய ‡ "சிற்சடங்களின் தன்மை" கூறுமுகத்தான் உணர்த்தி, † "நன்னலம்பெற நிறைந்த ஞானமேஞானம்" என்றதனை வலியுறுத்தற்கெழுந்தது "மாயைமாமாயை" என்னுஞ் செய்யுளென் றறிக.

அவற்றுள், பசுஞானத்தினியல்பு ஆன்மவிலக்கணத்தாற் கூறிப்போந்தமையின், அதனை அநுவாதமுகத்தான் விளக்கி, ஏனைப் பாசஞானத்தினியல்பு அப்பசுஞானத்தினியல்புணர்த்துமுகத்தான் விளக்கினார். தன்னியல் புணர்தற்கு எடுத்துக்காட்டாகப் பொதுவியல்பும் உடன்கூறப்பட்டது. "மருளெனி லிருளாய் நிற்கும் அருளெனி லொளியாய் நிற்கும்" எனவே,

* திருவருட்பயன்-உ-வது உயிரவைநிலை, அ. † சிவப்பிரகாசம் உண்மை-கக.

பசுஞானந் தனக்கெனச் சுதந்தரமுடைத்தன்றகலானும், பாசஞானந் தானெனன வேறன்மையானும் பதிஞானமொன்றே சுதந்திரஞானமெனப் படுமெனப் பிரிநிலையேகாரத்தை வலியுறுத்தவாறாயிற்று.

இங்ஙனம் பிரிநிலையேகாரத்தாற் போந்த பொருளை வலியுறுத்துதற்கு "மாயைமாமாயை...............ஒளியாய்நிற்கும்" எனவெடுத்தோதிய ஆசிரியர்கருத்துணராது, ஞானவாய்மையுள் மாயைமுதலியவற்றினியல்புகூறுதற்கு இயைபு என்னையென்று இடர்ப்பட்டு, மாயைமுதலியவற்றை ஆருயிர்க்கு அடையாக்கி, ஆண்டு எடுத்துக்கோடற்கு இயைபில்லாத திரோதானசத்தியை எழுவாயாக வருவித்து, அது "மருட்காலத்திருளாய்நிற்கும், அருட்காலத்தொளியாய்நிற்கும்" என மேலைச்செய்யுளோடு இயைபின்றியுரைப்பாரும் உளர். திரோதானசத்தி அவ்வாறுநிற்றல், * "பாகமாம் வகைநின்று திரோதான சத்தி பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்" என்பதனானும், † "முற் சினமருவு திரோதாயி கருணை யாகி" என்பதனுங் கூறிப்போந்தமையின், மீளவுங்கூறல் கூறியதுகூறலாய் முடியுமாகலானும், மாயைமுதலியவற்றை ஆருயிர்க்கு அடையாக்கிற் படுவதோர் பயனின்மையின், அது வெற்றெனத்தொடுத்தலுங் கூறியதுகூறலுமாய் முடியுமாகலானும், சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் ஆசிரியர் உய்த்துணரவைத்து அங்ஙனம் வழுப்படக் கூறார் ஆகலானும், மேலைச்செய்யுளோடு இயைபின்மையானும் அது போலியுரையென் றொழிக.

இனி, மாயைமுதலியவற்றை ஆருயிர்க்கடையாக்காது, எழுவாய் வருவிக்கவும் வேண்டாது, ஈரிடத்தும் "மருள்" என்றே பாடமோதி, அதனை எழுவாயாக்கி, "ஆய்" என்பதற்கு இருதலையும் வேறுவேறு உரைசெய்து அப்பொருள்பயப்பக் கோடுமெனின், அங்ஙனங் கொள்ளினும், அதுவும் பொதுவுட்கூறிப்போந்ததென்பது காட்டினமையின், அதனை ஈண்டுக்கூறல் வழுவாமாகலானும், ஈண்டு ஓதுதற்கோர் இயைபின்மையானும், ஆன்மவிலக்கணம் அவத்தையிலக்கணமுதலியன ஈரிடத்துங் கூறப்பட்டனவாலெனின், அங்ஙனங்கூறுதல் அவற்றிற்குப் பொருள்வேற்றுமை அறியாதார் கூற்றேயாம் ஆகலானும், சுருங்கச்சொல்லி விளங்கவைக்கும் ஆசிரியர் பொதுவுட்கூறியவற்றை உண்மையிற்கூறார் ஆகலானும் அங்ஙனம் உரைப்பனவெல்லாம் போலியென் றொழிக.

அற்றேல், அஃது அங்ஙனமாக; நிமித்தகாரணனாகிய முதல்வன் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாவனாயின் உவமைப்பொருளாகிய குயவனும் மண்ணுக்கு ஆதாரமாதல்வேண்டுமாலெனின்,—அறியாது கடாயினாய். உவமமெல்லாம் ஒருபுடையொத்தலேயன்றி முழுவதுமொத்தல் இன்று. முழுவதுமொக்குமென்பாரை, முதல்வனுக்குரிய வியாபகமுதலிய குணங்களுங் குயவனுக்கு உளவாதல்வேண்டுமெனக் கடாயினார்க்கு விடையென்னையெனக்கூறி மறுக்க. ஒருபுடையொத்தலானன்றே ஒருபொருளுக்கு ஓரியல்புபற்றி வேறுவேறுவமை கூறியதூஉமென்க.

* சிவப்பிரகாசம், பொது, அ. † ஷை ஷை, ௩சூ.

அற்றேல், இவ்வியல்பிற்கு உவமை யாதோவெனின்;—நன்றேகடாயி னாய்! குழவியுடம்பின் முதற்காரணமாகிய உதிரசுக்கிலங்களுக்கு ஆதாரம் அதற்கு நிமித்தகாரணமாகிய தாய்தந்தையாதலும், சிலம்பிநூலின் முதற் காரணத்திற்கு ஆதாரம் அதற்கு நிமித்தகாரணமாகிய சிலம்பியாதலும், * காளியுருவிற்றோன்றிய கணங்களது உடம்பின்முதற்காரணத்திற்கு ஆதா ரம் அவற்றிற்கு நிமித்தகாரணமாகிய காளியாதலும் அறிந்தாயன்றே. இவ்வாறு பலவுளவெனக் கொள்க. இங்ஙனங் கூறியவாற்றாற் பாசுபதர் முதலியோர் மதமும் மறுக்கப்பட்டன.

## மாயாவாதமதம்.

இனி, மாயாவாதிகள், மாயையாவது மெய்ப்பொருளென்றுஞ் சொல் லப்படாது பொய்ப்பொருளென்றுஞ் சொல்லப்படாது அநிர்வசனமாய் நிற்பதொன்றெனவும், அற்றாகலினன்றே மாயையெனப் பெயர்பெற்றதென வும், அத்தன்மைத்தாகிய மாயையிற் சித்தாகிய பரப்பிரமங் கண்ணடியின் நிழல்போல அத்தியாசமாய்த் தோன்றுமெனவும், அங்ஙனந் தோன்றிய வழிப், பேய்த்தேர் நீராகவும் கயிறு பாம்பாகவுங் காணப்படுமாறுபோல அத்தோற்றம் மண் புனல் அனல் கால் முதலிய பிரபஞ்சமாய்க் காணப்படு மெனவும், இங்ஙனமாகலின், சித்தினுடைய விவர்த்தனமே சகமெனவுங் கூறுவர்.

மெய்ப்பொருளுமன்றிப் பொய்ப்பொருளுமன்றி நிற்பதொன்றுண் டென்று எடுத்துக்காட்டுதற்கு ஒருபொருளின்மையின், வழியளவைக் கேலாமையான், வழியளவைக்கேலாதாகவே உரையளவைக்கு மேலாதாக லானும், பேய்த்தேரிற்றோன்றும் நீர்மாத்திரையே அசத்தியமாவதன்றி, உள்பொருளாய்த் தோன்றுவதாகிய பேய்த்தேர் அநிர்வசனம் ஆகாமை யின், அஃது ஆண்டைக்கு எடுத்துக்காட்டாதல் செல்லாமையானும், மாயை அநிர்வசனமென்பது ஒருசமயத்தார்க்குங் கொள்கையன்மையா னும் அஃது ஒன்றாகவைத்து மறுக்கற்பாற்றன்றென் றொழிக.

அல்லதூஉம், விவர்த்தனவாதிகள் ஒன்று பிறிதொன்றுபோலத் தோன்றுதல் விவர்த்தனமென்பர். அஃது அசத்தியமேயாம். பிரபஞ்சஞ் சத்தியமென்பது காட்சிமுதலிய எல்லாவளவைகளானுந் துணியப்படுதலின், அத்தன்மைத்தாகிய பிரபஞ்சஞ் சித்தினுடைய விவர்த்தனமாமாறு யாண் டையதென்க. இதனானும் மாயை அநிர்வசனம் அன்றென்பது தெற்றென வுணர்க; மாயை அநிர்வசனமாயின், அதன் காரியமாகிய பிரபஞ்சஞ் சூனிய மாதல்வேண்டுமாகலான் என்பது.

அற்றேல், பிரபஞ்சஞ் சத்தியமென்பதற்குப் பிரமாணமென்னை? காட் சியே பிரமாணமெனின்,—அற்றன்று; காட்சியானே நிகழ்காலத்துப் பிர பஞ்சஞ் சத்தியமென்று உணரப்படுமாயினும், முக்காலத்தினும் ஒருதன்

* காளியுருவிற் கணங்கள்தோன்றிய சரிதம், கந்தபுராணத்துத் தக்ஷகாண்டம் வீரபத்திரப்படல முதலான விடங்களிற் காண்க.

மைத்தாகிய சத்தியப்பொருள் பிரபஞ்சமென்பது அதனுன் உணரப்படாமையின். அன்றியும், காட்சியளவையானே இது குடம் இஃது ஆடையென விதிமுகத்தாற் காணப்படுவதன்றி, இஃது ஆடையன்று இது குடமன்று என மறுதலைமுகத்தாற் காணப்படாமையின், அன்மையாதல் உணர்ந்தன்றிப் பேதந்தோன்ருமையின், பேதப்பிரபஞ்சமுண்மைக்குக் காட்சியளவை பிரமாணமன்று.

அற்றேல், ஆடை குடத்தின்வேறு குடம் ஆடையின்வேறு என்னுங் காட்சி எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததாகலின், பேதப்பிரபஞ்சமுண்மைக்குக் காட்சியளவை பிரமாணமன்றென்றல் பொருந்தாதெனின்,—அற்றன்று; அத்தன்மைத்தாகிய காட்சி சவிகற்பமாதலின், சவிகற்பமெல்லாம் மயக்கமாதலான் என்க. பேதப்பிரபஞ்சமுண்மைக்குக் காட்சியளவை பிரமாணமின்ருகவே, அவினாபாவமாகிய ஏதுவுணர்தற்கு இடமின்மையின், வழியளவை பிரமாணமன்று. அவ்விரண்டற்கும் மாறுபாடாகிய பொருளின் ஆகமவளவையும் பிரமாணமாகா வென்க.

இன்னும், இஃது இதனின்வேறு என்னும் சவிகற்பக்காட்சி பிரமாணமென்பார்க்கும் அபேதவுணர்வு நிகழ்ந்தன்றிப் பேதவுணர்ச்சி நிகழாது; எய்தியதற்கன்றி விலக்கின்மையின். அங்ஙனமாகவே, முற்படத்தோன்றும் அபேதவுணர்ச்சி பிரமாணமென்பது ஒருதலையாகக் கோடல்வேண்டும்; வேண்டவே, பிற்படத்தோன்றும் பேதவுணர்ச்சி அதனை அவாய்நிற்றலின், பிரமாணமாகாமை அறிக.

அபேதவுணர்ச்சி காட்சியளவையானே பெறப்படுதலின், "குடம் ஆடையின்வேறன்று, திரவியமாகலான்; ஆடைபோலும்" என்னும் அநுமானமும், வேற்றுமையின்றிக்கூறும் வேதவாக்கியங்களும் அதற்குப் பிரமாணமென்க. ஆகவே, வான் வளி தீ நீர் முதலியனவாக வேற்றுமைப்படக் கூறும் வாக்கியங்களெல்லாம் இவ்வளவைகளோடு முரணுதலின், உபசாரமேயன்றிப் பொருள்படாவென்பது கண்டுகொள்க.

இங்ஙனம் பேதவுணர்ச்சிக்குப் பிரமாணமின்மையின், பேதப்பிரபஞ்சமாகிய பிரமேயமின்மையுந் தானேபோதரும். அவ்விரண்டும் உளவெனக் கொள்ளினும், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தமென்னை? தாதான்மியமோ? காரணகாரியத்தன்மையோ? சையோகமோ? சமவாயமோ? வேறென்றோ? எனக் கடாயினர்க்குத், தாதான்மியமாவது ஒன்றுதானே ஒருவாற்ருன் இருவகைப்பட்டுப் பிரிப்பின்றி நிற்றற்குரித்தாகலின், அத்தன்மைத்தாகிய தாதான்மியசம்பந்தங் குடஞானத்திற்குங் குடத்திற்கும் உண்டெனின், குடஞானம்போலக் குடமும் அகத்தின்கண் உளதாதல்வேண்டும். குடம் புறத்தின்கண்ணதாதலும் குடஞானம் அகத்தின்கண்ணதாதலும் எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையின், அவற்றிற்குத் தாதான்மியங்கூறல் பொருந்தாமையானும், காரணகாரியத்தன்மையே சம்பந்தமெனின், காரணகாரியங்களின் ஒன்றுள்வழி ஒன்றின்ருதல் பொருந்தாமையின், கனவின்கட் குடஞானமுதலியவுணர்வு உண்மையின், குடமுதலியனவும் ஆண்டு

உளவாதல்வேண்டும்; அஃதின்மையானும், இதனானே சையோகஞ் சமவாய மென்பனவும் பொருந்தாமையானும், விடயமும் விடயிப்பதுமாந்தன்மை சம்பந்தமெனின், விடயமாவது இதுவென்று அறியவாராமையானுஞ் சம்பந்தமே பெறப்படாமையின், பேதப்பிரபஞ்சம் பிரமிதிக்குப் புலனு காமையானும், பிரபஞ்சம் அசத்தியப்பொருளேயாகலான் அவற்றிற்குக் காரணமாகிய மாயை அநிர்வசனமென்றல் பொருத்தமுடைத்து என்று இங்ஙனம் மாயாவாதிகள் கடாவிடைகளாற் சாதிப்பராகலின், ஆண்டு இழுக்கென்னையெனின், கூறுதும்:—

## மாயாவாதமறுப்பு.

பிரபஞ்சஞ் சத்தியப்பொருளென்பதற்குக் காட்சியளவையே பிர மாணமாம். கயிற்றை அரவெனக்காணுந் திரிவுகாட்சியிற்போல மாசறு காட்சியின் வேறுபடுதலின்மையின், நிகழ்காலத்திற்கண்டது முக்காலத் தினுமொக்கும் ஆகலானும்; நிருவிகற்பக்காட்சியின் விதிமுகத்தாற் பேதம் அறியப்படாதாயினும், குற்றியோ மகனோவென்னும் ஐயத்தின்பின்னர், இது குற்றியே மகனன்றெனு எதிர்மறைமுகத்தாற் பேதவுணர்வு காட்சிக் குப் புலப்படுதலானும்; திரிவுகாட்சியிற் கயிறு பாம்புபோலவும் மாலை போலவும் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருகாலத்திற் றோன்றும், அதுபோ லன்றி மாசறுகாட்சியின் எல்லார்க்கும் எக்காலத்துங் குடங் குடமேயாய்த் தோன்றுவதல்லது வேறுபடத் தோன்றாமையின், சவிகற்பக்காட்சி பிர மாணமேயாகலானும்; அன்றியும், கயிற்றிற்கும் அரவிற்கும் கோணிநீண்டு கிடத்தன்முதலிய இலக்கணவொப்புமையான் ஆண்டு ஒன்றை ஒன்றாகத் திரியக்காண்டல் பொருந்தும், அதுபோலச் சித்தாகிய பிரமத்தைக் குட முதலிய பொருளாகத் திரியக்காண்டற்குத் தம்முள் ஒப்புமையின்மை யின், அதனையும் அவ்வாறு திரிவுகாட்சியென்றல் பொருந்தாமையானும்; சவிகற்பக்காட்சிக்கு நிருவிகற்பக்காட்சி காரணமாகலின், காரணத்துள்ளதே காரியத்தினும் உண்மையாற் பெயர் சாதி குணமுதலிய பேதவுணர்ச்சி நிருவிகற்பக்காட்சியின் இன்றாயிற் சவிகற்பக்காட்சியினும் இன்றாய்முடியு மாகலின், நிருவிகற்பக்காட்சியினுஞ் சூக்குமமாய்ப் பேதந்தோன்றுமாக லானும்; அதுபற்றி எய்தியதற்கே விலக்காதலிற் பேதமுணர்ந்தன்றிப் பேதமின்மையுணர்தல் கூடாமையின், அபேதஞானமும் பேதஞானத்தை அவாவிநிற்றலின், அபேதஞானம் முற்படத்தோன்றுதல்பற்றிப் பிரமாண மென்றல் பொருந்தாமையானும்; "ஆடை குடத்தின்வேறு" என்றற்றொ டக்கத்துப் பேதவுணர்ச்சி முக்காலத்தினும் வேறுபடாமையின், "ஆடை குடத்தின்வேறன்று" என்றற்றொடக்கத்து அபேதவுணர்ச்சி எதிர்காலத் தின் வேறுபடுதலின், வேறுபடாமையும் வேறுபடுதலும்பற்றியே பிர மாணமென்றும் அப்பிரமாணமென்றுங் கோடல் பொருத்தமுடைத்து ஆக லானுங் காட்சியளவையே பேதவுணர்ச்சிக்குப் பிரமாணமாதல் அறிக. ஆகவே, அபேதஞ்சாதித்தற்கு முற்கூறிய அநுமானமும் போலியாய வாறு காண்க.

அங்ஙனமல்லாக்கால், அவ்வநுமானத்தானே ஆடையெடுக்கச்சென்ருன் குடத்தையெடுத்துவருதல் வேண்டுமென்றொழிக. இதனானே அபேதங்கூறும் ஆகமங்களும் உபசாரமென்பது கண்டுகொள்க.

இன்னும், பிரபஞ்சம் மித்தையெனத் துணிதற்குக்கொண்ட பிரமாணம் மெய்யோ? பொய்யோ? எனக்கடாயினோர்க்கு, மெய்யெனிற் பிரபஞ்சத்துட்பட்ட பிரமாணம் மெய்யெனவே, அம்முறையாற் பிரபஞ்சமும் மெய்யேயாம். பொய்யெனிற் பொய் பிரமாணமாகாமையின், பிரபஞ்சம் மெய்ப்பொருளென்பது தானே போதரும்.

அற்றேல், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தமென்னையெனின், அறியப்படுவதும் அறிவதுமாகிய விடயவிடயித்தன்மை சம்பந்தமென்று உணர்க. விடயவிடயித்தன்மை சம்பந்தமன்றென்பையாயின், நீ பிரபஞ்சம் மித்தையென்றுணரும் உணர்விற்கு அது விடயமாகாமையின், பிரபஞ்சம் மித்தையன்றெனப்பட்டு உனக்கே வழுவாமென் றொழிக.

அற்றேல், விடயமாவது யாதெனின், எவ்வுணர்வு நிகழ்ந்துழி எப்பொருள் விளங்கும் அஃது அதற்கு விடயமென்க. விளங்குதல் விளங்குதற்கு உரிமையாதல். ஆகவே, இங்ஙனங் கூறியவாற்ருற் பிரமாணமுஞ் சம்பந்தமும் உண்மையின், பிரமேயமாகிய பிரபஞ்சம் மெய்ப்பொருளேயாகலான் அதற்கு முதற்காரணமாகிய மாயையும் மெய்ப்பொருளாவதன்றி, அநிர்வசனமாதல் பொருந்தாமை யறிக.

அற்றேல், பிரபஞ்சஞ் சத்தியப்பொருளென்பது * "உணருரு வசத்தெனின்" எனவும், † "உண்டுபோ லின்றும் பண்பி னுலகினை யசத்துமென்பர்" எனவுங் கூறும் இத்தொடக்கத்து வசனங்களோடு முரணுமெனின், அவற்றிற்குப் பொருள் ஆண்டுக் கூறுதும்ஆகலின், முரணுமை யறிக.

இங்ஙனங் கூறியவாற்ருற் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாய் நித்தமாய்ச் சடமாய் முதல்வனுக்குப் பரிக்கிரகசத்தியாய் முதல்வனின் வியாப்பியமாய் மெய்ப்பொருளாய் அருவாயுள்ளதெனப்போந்த மாயை சுத்தமாயை அசுத்தமாயையென்று இருவகைப்படும். சுத்தமாயை மாமாயை குடிலை குண்டலி விந்து என்பன ஒருபொருட்கிளவி. அசுத்தமாயை அதோமாயை மாயை மோகினி என்பன ஒருபொருட்கிளவி. இவற்றுள், சுத்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணஞ் சுத்தமாயை; அசுத்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் அசுத்தமாயை. சுத்தப்பிரபஞ்சஞ் சிவதத்துவமுதலாயின. அசுத்தப்பிரபஞ்சங் கலைமுதலாயின.

அற்றேல், சுத்தம் அசுத்தமென்பன யாவையெனின், துன்பத்தோடு விரவுதலின்றி இன்பமாத்திரையே பயத்தற்கேதுவாயது சுத்தம். ஏனையது அசுத்தமென்க.

* இந்நூல் - ஆருஞ்சூத்திரம். † சிவஞானசித்தி, ஆருஞ்சூத்திரம், ௩.

## சுத்தமாயையுண்மைக்குக் காரணம்.

அற்றேல், சுத்தப்பிரபஞ்சமுண்மைக்குப் பிரமாணமென்னையெனின், கூறுதும்:—ஐந்தொழில்செய்தல் முதல்வனுக்கு இலக்கணமென்பது போந்தமையின், அவனுக்கு இலயம் போகம் அதிகாரமென்னும் மூன்றவத்தையுண்மை பெற்றாம். பெறவே, நிருவிகாரியாகிய முதல்வன்மாட்டு அவை நிகழ்தற்கு இடம் வேண்டும். அசுத்தப்பிரபஞ்சம் இடமாதல் பொருந்தாமையின், அவற்றிற்கிடமாகிய சுத்தப்பிரபஞ்சமுண்டென்பது துணியப்படும். படவே, அதற்கு முதற்காரணம் யாது அது சுத்தமாயையெனக் கொள்க.

இன்னும், அநந்ததேவர் சீகண்டருத்திரர் முதலியோர் விஞ்ஞானகலர் பிரளயாகலரிற் பக்குவமுடையராய்ச் சகசமலத்தினீங்கி முதல்வனருளான் முழுதுணர்ந்து படைப்புமுதலிய தொழில்செய்தற்கு ஏதுவாகிய அதிகார மலவாசனை மாத்திரமுடையராய் முதல்வனேவல்வழிநின்று அசுத்தமாயை முதலியவற்றைக் காரியப்படுத்துவோராகலின், அவர்க்குத் தநுகரணாதியுண்மையின், அவற்றிற்குக் காரணமாதல்பற்றியுஞ் சுத்தமாயையுண்மை துணியப்படும். அநந்ததேவர்முதலியோர் தநுகரணாதிக்கும் அசுத்தமாயையே காரணமெனக் கோடுமெனின்,—அசுத்தமாயை மயக்குவதாகலின், அவர்க்கும் மயக்கமுண்டாதல் வேண்டும்; அஃதின்மையானும், அசுத்தத்திற் சுத்தந்தோன்றாமையானும், அசுத்தமாயை கன்மஞ்சார்ந்த அணுக்களுக்கே ஆவாரகமாகலின் விஞ்ஞானகலர்க்குக் கன்மமின்மையானும், விஞ்ஞானகலருண்மைக்குப் பிரமாணம் * முன்னர்க்காட்டுதுமாகலானும் அவர் தநுகரணாதிக்கு அசுத்தமாயை காரணமாகாதென் றொழிக.

இன்னும், பெயர் சாதிமுதலிய சவிகற்பவுணர்வு எழுத்தாகிய சொல்லானன்றிப் பெறப்படாதென்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தது. அவ்வெழுத்தோசைக்குக் காரணமாதல்பற்றியுஞ் சுத்தமாயையுண்மை துணியப்படும். காரணமின்றிக் காரியந் தோன்றாதென்பதூஉம் எழுத்தோசை அநித்தமென்பதூஉம் † மேற் காட்டினாங் கடைப்பிடிக்க.

அற்றேல், சத்ததன்மாத்திரையின் காரியமாகிய ஆகாயமே சத்தத்திற்கெல்லாங் காரணமாகலின், எழுத்தோசைக்கு வேறுகாரணமாமாறு என்னையெனின்,—அற்றன்று; ஆகாயம் எழுத்தோசையைப் புலப்படுத்துவதாகிய இசையோசைக்கே காரணமாவதன்றி, அதனாற் புலப்படுவதாகிய எழுத்தோசைக்குக் காரணமாகாதென்க. ஒளியும் உருவமும்போலப் புலப்படுப்பதும் புலப்படுவதுமாகிய இசையோசைக்கும் எழுத்தோசைக்குந் தம்முள் வேற்றுமை அநுபவத்தின் வெளிப்படத் தோன்றுதலானும், கடலோசை முதலாயின எழுத்தோசையின் வேறுதல் எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததாகலானும், அவ்விரண்டன்காரணமுந் தம்முள் வேறென்பது துணியப்படுமென்க. எழுந்தோசையும் அதனைப் புலப்படுத்தும் இசையோசையும்

---

* எட்டாஞ்சூத்திரம், இரண்டாம் அதிகரணம். † முதற்சூத்திரம், சுச-ம் பக்கத்தும், சுக-ம் பக்கத்துங்காண்க.

வேறென்பது தார்க்கிகர்மதத்திற் குடமும் அதனைப்புலப்படுத்துங் குடத் தன்மையாகிய சாதியுந் தம்முள் வேறென்பதுபோலக் கொள்க.

இன்னும், அங்காப்புமுதலிய அகமுயற்சியாற் பிறப்பது எழுத்தோசையெனவும், அதனைப்புலப்படுப்பதாய் எடுத்தல் படுத்தன் முதலிய புறமுயற்சியாற் பிறப்பது இசையோசையெனவும் இவ்வேறுபாடு தெரிந்துணர்ந்துகொள்க.

அற்றேல், இரண்டோசைக்கும் ஆகாயமே காரணமென்றுற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; ஆகாயத்தின்மேலுள்ள ஆங்காரமுதலிய புவனங்களின் வைகுவோர்க்குச் சவிகற்பவுணர்வு சொல்லானன்றிப் பெறப்படாமையின், ஆண்டு எழுத்தோசையுண்மை பெற்றாம்; பெறவே, அதற்குக் காரணங் கீழுள்ள ஆகாயமென்றல் பொருந்தாமையானும், வேறு காரணமின்மையானும், அதற்குக் காரணஞ் சுத்தமாயையென்பதே சாங்கியர் முதலியோர்க்கும் ஒருதலையாகக் கோடல்வேண்டுமென்க. புத்தி நிச்சயிப்பிக்குமென்பதே சாங்கியர்முதலிய சமயத்தார்க்கெல்லாம் ஒப்பமுடிந்ததாகலின், நிச்சயித்தலாவது இவன் தேவதத்தன் பார்ப்பான் கரியன் என விகற்பித்துணருஞ் சவிகற்பவுணர்வேயாகலின், புத்திதத்துவமுதலியவற்றின் எய்துவோர்க்குச் சவிகற்பவுணர்வு உண்டென்ப துணர்க.

## நால்வகைவாக்கு.

இவ்வெழுத்தோசை சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரியென நான்குவகைப்பட்டு, ஒன்றற்கொன்று காரணமாய்ச், சவிகற்பவுணர்விற் கேதுவாய்ப், படங்குடிலானற்போலச் சுத்தமாயையின் விருத்தியாய்ச், சாந்தியதீதைமுதலிய பஞ்சகலைகளைப்பற்றிச் சிவதத்துவமுதலிய சுத்த தத்துவங்களின் ஐவகைப்பட்டுநிற்கும்.

வைகரி தன்செவிக்குக் கேட்குஞ் சூக்குமவைகரியும், பிறர்செவிக்குக் கேட்குந் தூலவைகரியுமென்று இருவகைப்படும்; ஆகலின், ஐவகையாமாறு கண்டுகொள்க. வைகரியை ஒன்றாகவைத்தெண்ணிச் சூக்குமை வாக்குச் சூக்குமை, அதிசூக்குமையென்று இருவகைப்பட்டு ஐந்தாமென்பாரும் உளர். இவற்றினியல்பெல்லாம் வழிநூல் புடைநூல்களின் விரித்தோதுதலின், ஆண்டுக்காண்க.

அற்றேல், எழுத்தோசை சுத்தமாயையின் காரியமெனின், சுத்தமாயையின் காரியமாகிய பஞ்சகலைகளுஞ் சுத்ததத்துவபுவனங்களும்போல நம்மனோர்க்குக் காட்சிப்புலனாகாதொழிதல்வேண்டும்; அவ்வாறன்றி எழுத்தோசை நம்மனோர்க்கு அநுபவப்படுவதாய்ச் செவிக்குப் புலனாமாறென்னையெனின்,—அஃதொக்கும். எழுத்தோசையாகிய வாக்கு ஒன்றுதானே உபாதியின்மையிற் சுத்தமாயாகாரியங்களிற் சூக்குமமாயும், இசையோசை முதலிய உபாதிவயத்தான் அசுத்தமாயாகாரியங்களிற் றூலமாயும், பிரகிருதிமாயாகாரியங்களின் அதிதூலமாயும் நிற்றலின், அவ்வுபாதிவயத்தானே நம்மனோர்க்குப் புலப்படுமென்று உணர்க.

அஃது அங்ஙனமாக; வாக்குக்கள் சத்தரூபமும், கலைமுதலியன * அத்தரூபமுமாகிய வேறுபாடுடைமையின்; அவ்விரண்டற்குஞ் சுத்தமாயை யொன்றே முதற்காரணமென்றல் பொருந்தாமையின், சத்தப்பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் வேறென்று கொள்ளற்பாற்றெனின்,—அவ்விரண்டுந் தம்முள் வேறுபாடுடையவாயினுஞ் சுத்தமென்னுஞ் சாதியான் வேறுபாடின்மையானும், சத்தப்பிரபஞ்சம் * அத்தப்பிரபஞ்சத்தைப் பற்றியன்றி நில்லாமையானும், அத்தன்மைத்தாகிய சத்தப்பிரபஞ்சத்திற்கு வேறு காரணங்கோடல் மிகையாகலின், சுத்தமாயையொன்றுதானே சத்தரூபமும் அத்தரூபமுமாகிய இரண்டுதன்மையை யுடைத்தாய் அவ்விரண்டற்கும் முதற்காரணமெனக் கொள்ளப்படு மென்க.

## முதற்காரணமுடிபு.

அற்றேல், இவ்வாறே சுத்தப்பிரபஞ்சமும் அசுத்தப்பிரபஞ்சமுஞ் சுத்தமும் அசுத்தமுமாகிய வேறுபாடு தம்முளுடையவாயினுஞ் சடமாகிய காரியமென்னுஞ் சாதியின் வேறுபாடின்மையின், அத்தன்மையவாகிய இரண்டற்கும் வேறுவேறு காரணங்கோடல் மிகையாகலின், மாயையொன்றுதானே சுத்தம் அசுத்தம் என்னும் இருதன்மையுமுடைத்தாய் அவையிரண்டற்கும் முதற்காரணமாமெனக்கொள்ளிற் படும் இழுக்கென்னையெனக் கடாவியவழி, அங்ஙனமாகலானும், † "விந்துவின் மாயை யாகி மாயையி னவ்வியத்தம் வந்திடும்" எனவும், ‡ "தூலமா முருவி னுக்குச் சூக்கும முதலதற்கு—மூலமா னதற்கு மூல மோகினி யதன்மு தற்றான்—மேலதாம் விந்து" எனவும் ஓதுபவாகலானும், சுத்தமாயையிற் பஞ்சகலைகளைச் சுத்தி செய்யவே, அசுத்ததத்துவபுவனங்களுஞ் சுத்திப்படுதலானும், § "விரிவாய தன்செயலின் வியாபியாய்" என ஏகதேசமாய் வைத்தோதுப ஆகலானும், அசுத்தமாயா தத்துவத்தைப் பிரகிருதிமாயாதத்துவம்போலக் காரியதத்துவங்களின்வைத்து எண்ணுதலானுஞ் சுத்தமாயையொன்றே தூலஞ் சூக்குமம் பரமென மூவகைப்பட்டுத் தூலமாய்நின்றவவத்தையிற் பிரகிருதிமாயையென்றும், சூக்குமமாய்நின்றவவத்தையின் அசுத்தமாயையென்றும், பரமாய்நின்றவவத்தையிற் சுத்தமாயையென்றும் பெயர்பெற்று நிற்குமெனப்படுமாகலின், அசுத்தமாயையுஞ் சுத்தமாயையின் காரியமே யாமென்பாரும்; அங்ஙனம் விடுப்பின், ¶ "ஏக னநேக னிருள்கரும மாயையிரண்—டாகவிவை யாறுதி யில்" என்றற்றொடக்கத்து வசனங்களோடு முரணுதலானும், † "விந்துவின்மாயையாகி" என்புழி, "இன்" உவமவுருபெனவும், ‡ "தூலமாமுருவினுக்கு" என்றது ஒன்றற்கொன்று வியாபக வியாப்பியமாமாறே கூறியதெனவும், § "விரிவாயதன்செயலின் வியாபியாய்" என்பது கலைக்குமேலுள்ள வியாபகம் அநந்ததேவராற் கலக்குண்ணுமையின், ஆண்டுப் பயன்படாமைபற்றி ஓதியதெனவுங் கொள்ளப்படும் ஆகலானும், சுத்தமும் அசுத்தமுந் தம்முண் மாறுகோளுடையன,

* அத்தம் - பொருள். † சிவஞானசித்தி, முதற்சூத்திரம், ௪௯. ‡ ஷை இரண்டாஞ்சூத்திரம், ருo. § சிவப்பிரகாசம், பொது, ௬o. ¶ திருவருட்பயன், சு-வது அறியுநெறி, உ.

அன்றியுஞ், சுத்தமாயை மயக்கமின்றி அறிவைவிளக்குவது, அசுத்தமாயை மயக்கத்தைச் செய்வதாதலின் மாறுபட்ட இரண்டுதன்மை ஒருபொருட்கின்மையானும், புருடதத்துவந் தத்துவங்களின் வைத்தெண்ணப்படினுங் காரியமன்றென்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததாதலின், தத்துவங்களின் வைத்தெண்ணியதேபற்றிக் காரியமென்றல் பொருந்தாமையானும், சுத்தமாயையிற் பராசத்தியாற் கலக்குண்டபாகஞ் சிவதத்துவமெனவைத்தெண்ணப்பட்டாற்போல, மோகினியின் அநந்ததேவராற் கலக்குண்டபாகம் அசுத்தமாயாதத்துவமெனவைத்தெண்ணல் பொருத்தமுடைத்தாதலானும், சுத்தமாயையின் அசுத்தமாயை வியாப்பியமாதலின், வியாபகமாகிய கலா சுத்தியான் வியாப்பியமான அசுத்ததத்துவபுவனங்கள் சுத்தியாமாதலின், அதுபற்றிக் காரியமென்றலும் பொருந்தாமையானும், சுத்தமாயையும் அசுத்தமாயையுந் தம்முள் வேறேயென்பாரும் இரத்தினத்திரயமென்னும் வடநூலின் இவ்விரண்டுமதமும் பிறர்கருத்தாகவைத்துக் கூறுதலானும், சுத்தமாயையும் அசுத்தமாயையுந் தம்முள் வேறாயிற் சடமுமாய்ப் பலவுமானவையெல்லாம் அழிவெய்துமாதலின், "மாயையிரண்டும் அநாதி" என்னும் வசனங்களோடு முரணுமாதலானும், அவை தனித்தனி நோக்குங்கால் ஒவ்வொன்றேயெனிற் குடமுதலியனவும், செங்குடங் கருங்குடம் பசுங்குடம் பெருங்குடஞ் சிறுகுடமெனத் தனித்தனி நோக்குங்கால் ஒவ்வொன்றேயாதலிற் பலவாதல் யாண்டையதெனப்பட்டு வழுவாய்முடியுமாதலானும், பிரபஞ்சத்திற்குப் பரமநிமித்தகாரணம் ஒன்றாயினாற்போலப் பரமமுதற்காரணமும் ஒன்றாதலே பொருத்தமுடைமையானும், வியாபக சுத்தியான் வியாப்பியஞ் சுத்தியாமெனின் வியாபகமாகிய முதல்வனுஞ் சத்தியுஞ் சுத்தமேயாதலின், எக்காலமும் எல்லாப்பொருளுஞ் சுத்தமாதல் வேண்டுமாதலானும், சடவியாபக வியாப்பியங்கட்கே இந்நியமமெனினும், சடமாகிய சுத்தமாயையின் வியாப்பியமான அசுத்தப்பிரபஞ்சமுஞ் சுத்தப்பிரபஞ்சமாதல் வேண்டுமாதலின், வியாபகசுத்தியான் வியாப்பியஞ் சுத்தியாமென்றல் பொருந்தாமையானும், இன்பமாத்திரையே பயப்பது சுத்தம் இன்பமுந் துன்பமும் பயப்பது அசுத்தம் எனப்பயத்தல் விசேடத்தான் ஒன்றேயாதலின், ஈண்டு அசுத்தமென்றது சுத்தத்திற்கு மறுதலைப் பொருளன்மையானும், புத்திகுணங்களாகிய ஞானமும் அஞ்ஞானமுமுதலியனபோல மயக்கமின்றியறிவிப்பது சுத்தமாயை, மயக்கியறிவிப்பது அசுத்தமாயையென அறிவித்தல்விசேடத்தான் மாறுகோளின்மையானும், * "விரிவாயதன்செயலின் வியாபியாய்" என்றோதிய சொற்குறிப்பானும், மாயையொன்றே, குன்றிமணிமுதலியனபோல மலகன்மங்களோடு விரவாத பாகத்திற் சுத்தமும், அவற்றோடு விரவியபாகத்தின் அசுத்தமுமென்று இரண்டுதன்மையுமுடைத்தாய்க், கன்மமொன்றே சுத்தகன்மம் அசுத்தகன்மம் என்று இருவகைப்பட்டவாறுபோலப், பயத்தல்விசேடத்தானும் அறிவித்தல் விசேடத்தானுஞ் சுத்தமாயை அசுத்தமாயையென்று இருவகைப்பட்டுநிற்கும்; இக்கருத்துப்பற்றியன்றே சிவஞானசித்தி சிவப்பிரகாச முதலியவற்றுள் மாயையிரண்டென வகுத்தோதி, ஏகத்தொகை கூறுங்கால்

* சிவப்பிரகாசம், பொது, க0.

வேறென்னுது ஒன்ருகவைத்தெண்ணி, மாயாகாரியமுந் திரோதமும் உடன் கூட்டி, மலம் மாயை கன்மம் மாயேயம் திரோதமென மலம் ஐந்தென் றெழிந்ததூஉமென்பாருமெனப் பலதிறத்தர் ஆசிரியர். அவற்றுட் பின் னையதே பொருத்தமுடைத்தென்பது இங்ஙனங் கூறியவாற்ருன் அறிக.

இன்னுமொருசாரார் முதல்வனுக்கு ஞானசத்தியுங் கிரியாசத்தியு மெனத் தாதான்மியசத்திகள் இரண்டுள. அவற்றுள், ஞானசத்தி பரா சத்தியெனவும், கிரியாசத்தி சுத்தமாயையெனவும் பெயர்பெறும். முதல் வன் ஞானசத்தியால் அறிந்து * கிரியாசத்தியாற் பிரபஞ்சத்தை இயற்று வன். இவ்விரண்டும் முதல்வனையின்றி நில்லா, முதல்வனும் அவற்றை யின்றிநில்லான். அவற்றுள், ஞானசத்திமாத்திரையாய்நிற்பிற் சிவதத்து வம், கிரியாசத்திமாத்திரையாய்நிற்பிற் சத்திதத்துவம், இரண்டுமொத்து நிற்பிற் சதாசிவதத்துவம், கிரியாசத்திமிக்குநிற்பின் ஈசுரதத்துவம், ஞான சத்திமிக்குநிற்பிற் சுத்தவித்தையெனப்படும். இக்கருத்தேபற்றியன்றே † "ஞானமே யான போது சிவன்றெழின் ஞான மொக்கி—லீனமில் சதாசி வன்பே ரீசனுந் தொழில தேறி—னூனமேற் கிரியை வித்தை யுருத் திர னிலய போக—மானபே ரதிகா ரத்தோ டதிகர ணத்த னுமே" என்றோ தியதூஉமெனக் கூறுப. சைவாகமங்களெல்லாஞ் சுத்தமாயையைத் தாதான் மியசத்தியன்று, பரிக்கிரகசத்தியென்று ஓதுதலின், அவற்ரோடு முரணுத லானும், தாதான்மியசத்தி சித்தாவதன்றிச் சடமாதல் பொருந்தாமை யானும், கிரியாசத்தி ஞானசத்தியின் வேறன்மையானும், "ஞானமே யானபோது" என்றோதியது இடத்தினிகழ்பொருளாகிய முதல்வனது இலயபோகவதிகாரமென்னும் அவத்தைகளை ஒற்றுமைநயம்பற்றி அவற் றிற்கேதுவாய் இடமாகிய தத்துவங்களின்மேலேற்றிக் கூறியதேயாமாக லின், அதுபற்றியாசங்கையின்மையானும் அது பொருந்தாதென மறுக்க.

## சுத்தமாயாகாரியம்.

இத்தன்மைத்தாகிய சுத்தமாயையின் காரியஞ் சத்தப்பிரபஞ்சம் அத் தப்பிரபஞ்சமென்று இருவகைப்படும். அவற்றுள், சத்தப்பிரபஞ்சத்தி னியல்பு மேலே தொகுத்துக்கூறினும். அத்தப்பிரபஞ்சஞ் சுத்ததத்துவ முங் கலையுமென்று இருவகைத்து.

அவற்றுள், சுத்ததத்துவம் சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தையென்று ஐந்துவகைப்படும். இவை தோன்றுமாறு முறையே கூறுதும்:—

---

* ஞானமிர்தம், ருகூ-ம் அகவலில், "மற்றவன்—காரியத் திசைந்த பேரிசைப் பெருவலி—யறிவின் றறிவதை யோத்துப் பிறிவின்—திருந்தொழி லிலதஃ தருந் தொழில் சிவணலு—மருமறை யகத்து முலகத் தெங்கணும்—வருமறி சிந்தா மணிகற் பகமிவை—வேண்டுநர் வேண்டிய வாண்டாண் டுதவல்" என்புழிக் கிரியாசத்தியைச் சடமெனக் கூறுதலும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. † சிவஞானசித்தி, முதற்சூத் திரம், கூ௫.

## சிவதத்துவம்.

சுத்தமாயை மகாசங்காரகாலத்துத் தனது காரியங்களெல்லாம் ஒடுங்கிக் காரணமாத்திரையாய் நின்றவழி, முதல்வனுந் தனது சத்திவியாபாரங்களை யொழித்துப் பகுப்பின்றித் தானேயாய் நிற்பனன்றே; அத்தன்மையனாகிய முதல்வன் அத்தன்மைத்தாகிய சுத்தமாயை மீளக் காரியப்படுதற்கு யோக்கியமாம்படி தன்னினின்றும் வெளிப்பட்ட ஞானசத்திமாத்திரையானே அதனைநோக்கிநிற்பன். அங்ஙனம் நோக்கிநின்றவழிச் சுத்தமாயையிற் கலக்குண்டபாகம், ஞானமாத்திரையாய்நின்ற சிவனால் அதிட்டிக்கப்படுதலிற் சிவதத்துவமென்றும், இலயித்தமாத்திரையாய் நிற்றலின் இலயதத்துவமென்றும், வடிவமின்மையின் நிட்களதத்துவமென்றும், காரியப்படுதற்கு யோக்கியமாகலிற் சத்திமானென்றும், நால்வகை வாக்குக்களிற் சூக்குமைவாக்காகிய நாதத்திற்குப் பற்றுக்கோடாகலின் நாததத்துவமென்றும் பெயர்பெற்று நிற்கும். அதனையதிட்டிக்கும் முதல்வனும் இவ்வைவகைப் பெயருமுற்று நிற்பன்.

## சிவதத்துவம்.

சுத்தமாயையின் முந்தியவிருத்தியாகிய இச்சிவதத்துவம் முதல்வனது ஞானசத்திக்கும், அதன்பேதமாகிய *இந்திகைமுதலிய பத்துக் கலைகட்கும், காமிகமுதலிய பேதந்தோன்றாது சூக்குமை வாக்குருபமாய் நிற்குஞ் சிவாகமத்திற்கும், சிவதத்துவபுவனத்தை விரும்பிச் சிவதீக்கைபெற்று நாதமூர்த்தியை வழிபட்டு அதிகாரமலவாசனையுநீங்கி முத்தராய்ச் சூக்குமலயவாசனைமாத்திரமுடைய ஆன்மாக்களுக்கும், ஆண்டுள்ள புவனபோகங்கட்கும் இடமாம் என்றுணர்க.

## சத்திதத்துவம்.

இனி, அங்ஙனம் ஞானசத்தியாற் கலக்குண்டபாகத்திற் சிவதத்துவமென விருத்திப்பட்டுக் காரியப்படுதற்கு யோக்கியமாய்நின்ற சுத்தமாயை காரியப்படுமாறு, சூக்குமலயவவத்தையினின்ற முதல்வனது கிரியாசத்தி வெளிப்பட்டுப் பொதுமையிற் சங்கற்பித்தவழிச், சுத்தமாயை காரியப்படுவதாய்நின்ற இரண்டாம்விருத்தி, சத்தியென்றோதப்படுஞ் சிவனால் அதிட்டிக்கப்படுதலிற் சத்திதத்துவமென்றும், சிவதத்துவத்தினியல்பைநோக்கத் தூலமாகலின் தூலலயதத்துவமென்றும், தூலநிட்களதத்துவமென்றும், பைசந்தியென்னும் வாக்கிற்குப் பற்றுக்கோடாகலின் விந்துதத்துவமென்றும் பெயர்பெற்று நிற்கும். அதனை அதிட்டிக்கும் முதல்வனும் அப்பெயர்பெற்று நிற்பன்.

இது முதல்வனது கிரியாசத்திக்கும், அதன் பேதமாகிய நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகட்கும், பைசந்திரூபமாய்நிற்குஞ் சிவாகமங்கட்கும், விந்துதத்துவ புவனத்தைவிரும்பித் தீக்கையுற்று விந்துமூர்த்தியை வழி

---

* இந்திகைமுதலிய கலைகள் பத்தாவன:—இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி, வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை என்பனவாம்.

பட்டு மலபந்தநீங்கித் தூலலயவாசனை மாத்திரமுடைய முத்தர்க்கும், அவர்க்குரிய புவனபோகங்கட்கும் இடமாம் என்றுணர்க.

## சதாசிவதத்துவம்.

இனி, அங்ஙனங் காரியப்படுவதாய்ச் சத்திதத்துவமென விருத்திப் பட்டுநின்ற சுத்தமாயையைக் காரியப்படுத்துமாறெல்லாம் அங்ஙனந் தூல லயவவத்தையினின்று பொதுவகையாற் சங்கற்பித்த முதல்வன் பின்னர்ப் போகவவத்தையினின்று தனது ஞானசத்தியாற் சிறப்புவகையானோக்கிக் கிரியாசத்தியாற் சிறப்புவகையாற் சங்கற்பித்தவழிக், காரியங்களைத் தோற் றுவித்தற்கு உன்முகியாய்நின்ற சுத்தமாயையின் மூன்றாம்விருத்தி சதாசிவ மெனப் பெயர்பெற்ற சிவனால் அதிட்டிக்கப்படுதலிற் சதாசிவதத்துவ மென்றும், உன்முகமாய்நிற்றலின் உத்தியுத்ததத்துவமென்றும், போக மென்னும் அவத்தையுடைமையிற் போகதத்துவமென்றும், சதாசிவமூர்த்தி சத்திகலையுண்மையாற் சகளமாதலும் மாயாகலையின்மையான் நிட்களமா தலுமுடைமையானும் பிரவிருத்திநிவிர்த்தியிரண்டற்கும் பொதுவாகலா னுஞ் சகளநிட்களதத்துவமென்றுந் தன்னையதிட்டிக்கும் முதல்வனுக்குரிய பெயரனைத்தும் பெற்று நிற்கும்.

இது சதாசிவனுக்குஞ் சதாசிவமூர்த்திக்கும் முடிமுதலியவுறுப்புக ளாகிய பஞ்சசத்திகட்கும், அவற்றின் பேதமாகிய * சசினியாதி முப்பத் தெட்டுக்கலைகட்கும், * ஆரணி சனனி முதலிய சத்திகட்கும், மத்திமை வாக்குருபமாய்நின்ற சிவாகமத்திற்கும், அச்சிவாகமங் காமிகமுதல் வா துளமீறாக இருபத்தெட்டாய்ப் பாகுபடுதற்குக் காரணமான பிரணவர் முதலியோர்க்கும், சுத்தசாமீப்பியமுதலிய முத்திபதங்களிற் போகவாசனை யுடைய அணுசதாசிவர் முதலியோர்களுக்கும், அவர் தநுகரணபுவன போகங்கட்கும் இடமாம் என்றுணர்க.

## ஈசுரதத்துவம்.

இனி, உன்முகியாய்நின்ற சுத்தமாயையிற் சூக்குமமாய்க் காரியந் தோன்றுதற்கு அங்ஙனம் உத்தியுத்தனாய்நின்ற முதல்வன் அதிகார வவத்தையினின்று கிரியாசத்தியை மிக்குச்செலுத்திப் பிரவிருத்தி செய்த வழிச், சூக்குமமாய்க் காரியப்பட்ட சுத்தமாயையின் நாலாம்விருத்தி ஈசுர னாய்நின்ற சிவனால் அதிட்டிக்கப்படுதலின் ஈசுரதத்துவமென்றும், சூக் குமவதிகாரதத்துவமென்றும், சூக்குமப்பிரவிருத்திதத்துவமென்றும், சூக் குமசகளதத்துவமென்றுந் தன்னை அதிட்டிக்கும் முதல்வனுக்குரிய பெய ரனைத்தும் பெற்று நிற்கும்.

இஃது ஈசுரனுக்கும் சூக்குமவைகரியுருவாய்நின்ற சிவாகமங்கட்கும் அதிகாரமலவாசனையுடையவராய் அசுத்தமாயையைக் காரியப்படுத்தும் அநந்ததேவர்முதலிய வித்தியேசுரர் எண்மர்க்கும், அவரைவழிபட்டு அப் பதத்தைப்பெற்ற உருத்திரர்கட்கும், அவர் தநுகரணமுதலியவற்றிற்கும் இடமாம் என்றுணர்க.

---

* இவற்றை இச்சூத்திரத்து நான்காமதிகரணத்துக் காண்க.

## சுத்தவித்தியாதத்துவம்.

இனி, அங்ஙனம் நின்ற சுத்தமாயையிற் றூலகாரியந் தோன்றுதற்கு அம்முதல்வனுந் தூலவதிகாரவவத்தையினின்று ஞானசத்தியை மிக்குச் செலுத்திப் பிரவிருத்திசெய்தவழித், தூலமாய்க் காரியப்பட்ட சுத்தமாயையின் ஐந்தாம் விருத்தி, வித்தைக்கேதுவாகிய ஈசுரனுய்நின்ற சிவனால் அதிட்டிக்கப்படுதலிற் சுத்தவித்தியாதத்துவமென்றும், தூலஈசுரதத்துவமென்றும், தூலவதிகாரதத்துவமென்றும், தூலப்பிரவிருத்திதத்துவமென்றும், தூலசகளதத்துவமென்றுந் தன்னை அதிட்டிக்கும் முதல்வனுக்குரிய பெயரனைத்தும் பெற்றுநிற்கும்.

இது தூலமாய்நின்ற ஈசுரனுக்கும், தூலவைகரிரூபமாய்நின்ற சிவாகமமுதலிய சாத்திரங்கட்கும், எழுகோடி மந்திரங்கட்கும், நந்திமுதலிய கணங்கட்கும், வாமைமுதலிய ஒன்பது சத்திகட்கும், முத்திபெற்று மலவாசனை மாத்திரமுடையவராய்க் கீழுள்ள உருத்திரன் மால் அயன் இந்திரன்முதலியோரைத் தொழிற்படுத்துவோராகிய உருத்திரன், மால், அயன், இந்திரன்முதலியோர்க்கும், அவர் தநுகரணாதிகட்கும் இடமாம் என்றுணர்க.

இவையைந்துஞ் சுத்தமாயையின் விருத்தியாய்த் தம்மையதிட்டிக்கும் முதல்வனுக்குரிய பெயர்களையுடையவாய் முறையே பத்தும், ஐந்தும், ஒன்றும், எட்டும், ஒன்பதுமாகிய புவனங்களையுடையவாய் முதல்வனுக்கு இலயம் போகம் அதிகாரமென்னும் அவத்தைக்கிடமாதற் பொருட்டும், சிவதீக்கையாற் பசுத்துவநீங்கி வாசனாமலமாத்திரமுடையராய் இலயிகள் போகிகள் அதிகாரிகளெனநிற்கும் ஆன்மாக்கள் விசித்திரமாய்ச் சுத்தமாய் இன்பமயமாகிய போகங்களைத் தாந்தாம் இச்சித்தவாறே அநுபவித்தற்பொருட்டும் உளவாயினவென்க.

அற்றேல், ஆண்டுப் போகநுகர்தற்குக் காலமுதலிய தத்துவங்களின்மையின், அவை போக்கியங்களாமாறு எங்ஙனமெனின்,—அற்றன்று; அசுத்தாத்துவாவிற்போலச் சுத்தாத்துவாவினுங் காலமுதலியதத்துவங்கள் அனைத்தும் உள. அவை சுத்தமாயாகாரியமாகலின், அசுத்தமாயாகாரியம் போல அசுத்தமாதலின்றிச் சுத்தமாயுள்ளன; ஆகலான் ஆண்டும் போகநுகர்ச்சிக்கு இழுக்கின்மையறிக. * இது பௌட்கரத்திற்காண்க.

சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தையென்னும் இவையைந்தும் † இலயம் போகம் அதிகாரமென மூன்றாய் அடங்குதல்பற்றிச் சுத்ததத்துவம் மூன்றென்றும், சிலவற்றிற் சிவஞ் சத்தி சதாசிவம் மூன்றுஞ் சிவனாலதிட்டிக்கப்படுதலின் ஒன்றாகவைத்து, ஈசுரமுஞ் சுத்தவித்தையும் அநந்ததேவர் முதலியோரான் அதிட்டிக்கப்படுவனவென வேறுவைத்தெண்ணி மூன்றென்றும், அதிற் சிலவற்றின் ஈசுரமுஞ் சுத்தவித்தையுஞ் சிவனேவல்வழிநிற்போரான் அதிட்டிக்கப்படுந்தன்மையான் ஒன்றெனவைத்தெண்ணி

* இங்ஙனங்கூறும் பவுட்கரவசனம், ககச-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.
† இது, சிவாக்கிரபாடியத்துங் காண்க; (இரண்டாஞ்சூத்திரம், உ0கூ-ம் பக்கம்)

நான்கென்றும், சிலவற்றிற் சத்திதத்துவம் சிவதத்துவத்தின் வேறன்மையான் ஒன்றெனவைத்தெண்ணி நான்கென்றுங் கூறப்படும். வகையான் அங்ஙனங் கூறினும் விரியான் ஐந்தென்றலே அவற்றிற்கெல்லாங் கருத்தாகலின், மாறுகோளின்மை உணர்க.

இக்கருத்தேபற்றிச் சிலவாகமங்களிற் சிவஞ் சத்தி சதாசிவமென்னும் மூன்று தத்துவமுமே முதல்வனது இலயபோகவதிகாரங்கட்கு முறையே இடமாமென்றும், ஏனைய ஈசுரமுஞ் சுத்தவித்தையும் விஞ்ஞானகலர் பிரளயாகலரிற் பசுத்துவநீங்கி முத்தராய் அதிகாரமலவாசனை மாத்திரமுடைமையான் முதல்வனேவல்வழிநின்று ஐந்தொழில் நடாத்துவோராகிய அநந்த தேவர் முதலியோர்க்கே இடமென்றுங் கூறுமெனக் கொள்க.

சிவப்பிரகாச முதலியவற்றிற் சிவதத்துவத்திற் சத்திதத்துவமும், சத்திதத்துவத்திற் சதாசிவதத்துவமும், சதாசிவதத்துவத்தின் ஈசுரதத்துவமும், ஈசுரதத்துவத்திற் சுத்தவித்தையுந் தோன்றுமென்றது அவ்விருத்திரூபமாய் நின்ற சுத்தமாயையிற் றோன்றுமென்னுங் கருத்தாகலின், முரணுமை அறிக.

அற்றேல், இங்ஙனந்தோன்றிய சுத்தப்பிரபஞ்சங் காரணத்தின் சமூகமோ? ஆரம்பமோ? விவர்த்தனமோ? விருத்தியோ? பரிணமமோ? எனின், கூறுதும்:—எட்குப்பை கவரிமயிர்ச்சாமரம்போலக் காரணத்தின் சமூகமே காரியமெனப் புத்தரிலொருசாராருஞ் சமணருங் கூறுஞ் சமூகவாதமும் நூலானாகிய ஆடைபோல இவ்விரண்டு மும்மூன்று முதலியவாக ஆரம்பிக்கப்பட்டுக் காரியமாமெனத் தார்க்கிகர் சொல்லும் ஆரம்பவாதமும் ஈண்டைக்கேலா; ஈண்டுக் காரணம்பலவன்மையானென்க. அல்லதூஉம், பாலானாகிய தயிர்முதலியவற்றின்கட் சமூகவாதமும் ஆரம்பவாதமுஞ் செல்லாமையிற் சமூகவாதமும் ஆரம்பவாதமும் சிலவற்றிற்கன்றியாண்டுஞ் செல்லாமை அறிக.

இனிப், பேய்த்தேரின் நீர் தோன்றுதலும், கயிற்றின் அரவுதோன்றுதலும்போலக் காரணத்தின் விவர்த்தனமே காரியமாய்த் தோன்றுமென்னும் மாயாவாதஞ் சூனியமாய் முடியுமென் றொழிக.

இனிப், பாலானாகிய தயிர்போலக் காரணத்தின் பரிணமமெனின்,—மோரோடுவிரவிய பால்போல மலகன்மங்களோடு விரவிய அசுத்தமாயையே பரிணமமாதற்குரித்தன்றி, அவற்றோடு விரவாத சுத்தமாயை பரிணமமாதற் கேலாமையின், படங்குடிலானற்போலுஞ் சுத்தமாயையின் விருத்தியே சுத்தப்பிரபஞ்சமென் றுணர்க.

விருத்தியாவது சூக்குமபரிணமமென்பாரும் உளர். ஏனைய அசுத்தமாயையின் காரியமெல்லாம் பரிணமமேயெனக் கொள்க.

### பஞ்சகலைகள்.

இனிப், பஞ்சகலைகளாமாறு:—ஆன்மாக்களைப் பந்தத்தினின்றும் நிவிர்த்திசெய்யுஞ் சிவசத்தி நிவிர்த்தியெனப் பெயர்பெறும். அச்சத்திகட்

கிடமாகிய சுத்தமாயையின் விருத்தியும் நிவிர்த்தியெனப் பெயர்பெறும். மேலும் இவ்வாறே கண்டுகொள்க.

பந்தத்தினின்றும் நிவிர்த்திபெற்ற ஆன்மாக்கள் மீள நோக்காதவண்ணம் பிரதிட்டைசெய்யுஞ் சிவசத்தி பிரதிட்டையெனப் பெயர்பெறும்.

அங்ஙனம் நிலைபெற்ற ஆன்மாக்கட்கு அநுமானஞானம் ஆகமஞானமன்றி அநுபவஞானத்தைப் பயப்பிக்குஞ் சிவசத்தி வித்தையெனப் பெயர்பெறும்.

அங்ஙனம் அநுபவஞானம்பெற்ற ஆன்மாக்கட்கு விருப்புவெறுப்புச் சங்கற்பமுதலிய எல்லாத்துன்பங்களுஞ் சாந்தமாகச் செய்யுஞ் சிவசத்தி சாந்தியெனப் பெயர்பெறும்.

அங்ஙனஞ் சாந்தமாய் நின்றதும் ஒழியச்செய்யுஞ் சிவசத்தி சாந்தியதீதையெனப் பெயர்பெறும்.

இங்ஙனஞ் சிவசத்தியொன்றே காரியவேறுபாட்டான் நிவிர்த்திமுதலிய பெயர்பெற்று ஐவகைப்பட்டவழி, அவற்றிற்கு முதல்வனும் நிவிர்த்திபதி, பிரதிட்டாபதி, வித்தியாபதி, சாந்திபதி, சாந்தியதீதபதியெனப் பெயர்பெற்று ஐவகைப்பட்டு நிற்பன்.

அவற்றிற்கிடமாகிய சுத்தமாயாவிருத்தியும் ஐவகைப்பட்டுத் தன்னையதிட்டிக்குஞ் சத்திகளின் பெயர்பெற்று நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதையென நின்று தத்துவமுதலிய ஐவகை அத்துவாக்களையும் உள்ளடக்கி அவற்றிற் காதாரமாய் நிற்கும்.

இத்தன்மையவாகிய நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளும், சத்திதத்துவத்திற் புவனரூபமாகிய நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளும் வேறாயினும் பெயரொற்றுமைபற்றி ஒன்றாகவைத்தோதுப.

பிருதிவிதத்துவமுதலியவற்றின் வைகுவோர் பஞ்சகலைகளைப் பஞ்சபூதரூபமாகவைத்துத் தியானஞ்செய்யின் அவை அவ்வப்பயன்களைப் பயப்பிக்குமென்று உணர்க.

இங்ஙனஞ் சுத்தமாயையினியல்பும் அவற்றின் காரியங்களும் ஒருவாற்றாற் கூறிப்போந்தாம்.

---

## அசுத்தமாயை.

இனி, அசுத்தமாயையாவது மெய்ப்பொருளாய், நித்தமாய், ஒன்றாய்க், கலைமுதல் நிலமீறாகிய அசுத்தப்பிரபஞ்சத்திற்குக் காரணமாய், அவற்றின் வியாபகமாய், வினைக்குப் பற்றுக்கோடாய், ஆணவமலம்போலச் சிறப்புவகையானன்றிப் பொதுவகையான் வினையிற் கட்டுண்ட ஆன்மாக்களை மயக்குவதாய், அருவமாய் நிற்குமென்பது மேற் கூறியவாறுபற்றிக் கண்டுகொள்க.

அற்றேல், காரணத்தினில்லது காரியத்தின் உண்டாகாதாகலான், அருவமாகிய மாயையின் உருவமாகிய பிரபஞ்சந் தோன்றுமாறு என்னை யெனின்,—அறியாது கடாயினாய். காரியாவத்தையினுளதாகிய உருவங் காரணத்திற்றோன்றாது சூக்குமமாய் நிற்றல்பற்றியே மாயை அருவமென்றோதப்பட்டதாகலின், அருவமும் உருவமுந் தம்முண்மாறுகோளன்மையான், அது கடாவன்றென்க. காரியாவத்தையின் உருவமுடையதற்கன்றி அருவமென்பது ஏலாதாகலினன்றே பதிமுதலிய பொருளின் இயல்புகூறுமிடத்து அவற்றை அருவமென்றுணததூஉம், * "நிலவுமரு வுருவின்றி" எனவும், † "அசித்தரு வியாப கம்போல் வியாபக மருவமின்றாய்" எனவுங் கூறியதூஉமென்க.

சிவஞானசித்தியில் ‡ "அருவுரு வினை தாகும்" என்றது மாயாவாதிகள் கூறும் ஆசங்கையாகலின், அதனை அவர் மதமேகொண்டு மறுப்பார், ‡ "வான்வளி யாதி பூதந்—தருவது" என விடுத்தாரென உணர்க.

இவ் வசுத்தமாயையின் காரியங்களாமாறு கூறுதும்:—

அசுத்தமாயாகாரியம்.

அநந்ததேவர் சத்தி கலக்கக் கலக்குண்ட § அசுத்தமாயாதத்துவத்தினின்றும் முறையே காலமும், நியதியும், கலையும், கலையின்வித்தையும், வித்தையின் அராகமுந் தோன்றும்.

காலதத்துவம்.

அவற்றுள் கலைவித்தை அராகங்களால் தொழிலும், அறிவும், இச்சையும் விளங்கிப் போகநுகர்ச்சிக்கட் சென்ற ஆன்மாக்களுக்குக் கணம், இலவம், துடி என்றற்றொடக்கத்தாற் பலவேறுவகைப்பட்டுப் போகவரையறைப்படுத்துவது காலதத்துவம்.

அற்றேல், கலைமுதலியவற்றிற்கெல்லாம் முன்னரே தோன்றிய காலதத்துவம் கலைமுதலியவற்றின் உபகாரம் நிகழுங்காறும் வறிதேநின்று பின்னுகவுபகரித்தல் பொருந்தாதெனின்,—அற்றன்று; கலைமுதலிய மூன்றும் வினைமுதலாகிய ஆன்மாக்களுக்குத் தொழிலறிவிச்சைகளை விளக்கி நேரே உபகரிப்பன. காலமும் நியதியும் அவ்வான்மாக்களுக்கு வினையை வரையறுப்பதும் நியமிப்பதுமாகிய முகத்தான் உபகரிப்பன. ஆகலான், ஆன்மாக்களுக்குத் தொழிலறிவிச்சை நிகழ்ந்த பின்னன்றிக் கன்மத்தோடு இயைபு கூடாமையின், காலநியதிகளின் உபகாரம் அவற்றின் பின்னர்த்தாயிற்றென்க.

அற்றேல்! காலநியதிகள், கலை வித்தை யராகங்களின் பின்னர்த் தோன்றுமென்றலே பொருத்தமுடைத்து. அவற்றிற்கு முன்னர்த் தோன்று

* சிவப்பிரகாசம், பொது, ௧. † சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், ௨௦. ‡ ஷை முதற்சூத்திரம், ௨௮. § அசுத்தமாயையிற் கலக்குண்டபாகமே மாயாதத்துவமென வித்தியாதத்துவங்கள் ஏழனுள் ஒன்றாகவைத்தெண்ணப்படுவதென்க.

மென்றற்குப் பிரமாணமில்லையாலோவெனின்,—அற்றன்று; காரியமாத்திரைக்குக் காலங் காரணமாகலின், கலைமுதலியன தோன்றுதற்குங் காலம் வேண்டுதலான் என்க.

அற்றேல், காலமுங் காரியமாகலின், அது தோன்றுதற்கு வேறோர் காலம் வேண்டுமாலெனின்,—அஃதொக்கும். சுத்தப்பிரபஞ்சத்திற் சுத்த காலமுண்டென்பது மேலே கூறிப்போந்தாமாகலின், அதுவே அசுத்த காலந் தோன்றுதற்கும், அநந்ததேவர் அசுத்தமாயையைக் கலக்குதற்கும் அதிகாரஞ்செய்தற்குங் காரணமெனக் கொள்க.

அற்றேல், அதுவே அமையும். அசுத்தகாலமொன்று கோடன் மிகையாம் பிறவெனின்,—ஆகாது; அசுத்தமாயையின் காரியத்திற்குச் சுத்த காலங் காரணமாகாமையின், அசுத்தகாலம் ஒருதலையான் வேண்டுமாகலானென்க. அங்ஙனமாயின், அசுத்தகாலமும் அசுத்தமாயையின் காரியமாகலின், அதற்குச் சுத்தகாலங் காரணமாதல் பொருந்தாதெனின்,—அற்றன்று; காலமென்னுஞ் சாதியொருமையான் அசுத்தகாலமாத்திரைக்குச் சுத்த காலந் துணைக்காரணமாதல் பொருந்துமென்க.

அற்றேல், அஃதங்ஙனமாக; சுத்தகாலத்திற்கு மேலுள்ள சுத்தவித்தை யீறாகிய தத்துவங்களின் றோற்றத்திற்கும், பெரும் பிரளயத்தின் முதல்வன் சூக்குமமாகிய ஐந்தொழில் செய்வனென்பது மேற்கூறினமையின் அக்காரியப்பாட்டிற்குங் காலமின்மையின், காரியமாத்திரைக்குக் காலந் துணைக் காரணமென்றல் பொருந்தாதாலெனின்,—அற்றன்று; காலவரையறையின் அகப்பட்ட அநந்ததேவர் முதலியோர் நம்மனோராற் செய்யப்படுங் காரிய மாத்திரைக்கே காலங் காரணமாதல் வேண்டுவதன்றிக், காலவரையறையைக் கடந்து காலத்தினையுந் தோற்றித் தொழிற்படுத்துங் காலகாலனாகிய முதல்வனாற் செய்யப்படுங் காரியத்திற்குக் காலம் வேண்டாமையானும், காலவரையறையைக் கடந்த முதல்வன்றொழிற்பாட்டிற்குக் காலத்தாற் செய்யக்கடவதொன்று இன்மையானும் ஆண்டு அம்முதல்வனே கலையித் திரியென்னுஞ் சத்தியோடுகூடிக் காலத்தானமாய் நிற்பனாகலின், ஏனைக் காரியமாத்திரைக்கே காலந் துணைக்காரணமெனக் கோடலானென்க. இக் கருத்தேபற்றிச், * "சுத்ததத் துவஞ்சி வன்றன் சுதந்திர வடிவ மாகு— நித்தமென் றுரைப்பர் கால நீங்கிய நிலைமை யாலே—வைத்திலர் முற்பிற் பாடு வருவித்தார் கருமத் தாலே" என்றார் வழிநூலாசிரியரும். இஃதறியாதார் "நித்தமென்றுரைப்பர்" என்றமையான், ஈண்டுச் சுத்ததத்துவமென்றது சிவசத்திபேதமாகிய இலயமுதலியவற்றைப்போலுமென மயங்கித் தமக்கு வேண்டியவாறே உரைப்ப.

இனி, நியதிதத்துவத்தின் உபகாரமுங் கலைமுதலியவற்றின் றொழிற்பாட்டிற்குப் பின்னர்த்தாயினுங் கலைமுதலியன தொழிலறிவிச்சைகளை வினைக்கீடாக விளக்குதற்கும் நியதிவேண்டுமாகலின், காலத்தின் பின்னர்க் கலைக்குமுன்னாகவே நியதிதத்துவந் தோன்றியவாறென்று அறிக. தோற்ற

* சிவஞானசித்தி, முதற்சூத்திரம், சுகூ.

முறைமைபற்றிக் காலம் முன்னுயினுந் தொழிற்பாட்டு முறைமைபற்றிக் கலை முன்னுகலின், * "கலையாதி மண்ணந்தம்" என வழங்கப்படும். இவ் வுண்மையுணராதார் "கலையாதி மண்ணந்தம்" என வழங்குதல்பற்றிக் கலையே முந்தித் தோன்றுமென மயங்கிக்கூறுப.

அற்றேல், தோற்றமுறைமைபற்றிக் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்று எடுத்துக்கோடலும், தொழிற்பாட்டு முறைமைபற்றிக் கலை வித்தை, அராகம், காலம், நியதி என்று எடுத்துக்கோடலும் பொருந்தும். சிவப்பிரகாசத்தின், † "அருத்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை யராக மிவை" எனக் கலையின்பின்னுகக் காலநியதிகளை வைத்தவாறு என்னை யெனின், செய்யுளாகலின் முறைபிறழவைத்தார் என்பார் ஒருசாரார். அற்றன்று; "கலாதத்துவங் காலமும் நியதியுந் தனக்குத் துணைக்கருவியாகக் கொண்டு முதற்காரணமாய்நின்று வித்தை அராகமுதலிய தத்துவங்களெல்லாவற்றையுந் தன்பானின்றுந் தோற்றுவிக்கும்" எனத் தத்துவப்பிரகாசமென்னும் வடநூலுள் ஓதுதலின், அஃதுணர்ந்துகோடற்கு அம்முறை வைத்தாரென்க. மிருகேந்திரத்திற் கூறியதூஉம் இதுபற்றியென்று உணர்க. சிவப்பிரகாசத்தில், † "வித்தையராகங்களும் மாயைதனிலாகும்" என்றது பரம்பரையான் மாயை முதற்காரணமாதல்பற்றியென்று உணர்த்துவார், † "உடன்" என்று ஒடுக்கொடுத்துப் பிரித்தோதினுரென்பது. சிவஞான சித்தியில், ‡ "விந்துத் தன்பால் வைகரி யாதி மாயை—முந்திடு மராக மாதி முக்குண மாதி மூலந்—தந்திடும்" என்றதூஉம், விந்து மோகினி மூலப்பகுதிகள், சூக்குமகலாதி முக்குணமொழித் தொழிந்தவற்றிற்கும் பரம்பரையான் முதற்காரணமாதல்பற்றியென்று உணர்க. ஆண்டு ‡ "அராகமாதி" என்றது "வைகரியாதி" என்றதுபோலச் சங்காரமுறைமைபற்றி; இங்ஙனமாகலின், யாண்டும் முரணுமையறிக.

அற்றேல், அஃதங்ஙனமாக; புத்தர்முதலியோர் காலமென்றொரு பொருள் இல்லையென்பகலின் அதனுண்மைக்குப் பிரமாணம் யாதெனின், கூறுதும்:—இப்பொழுது உற்பத்தியாகாநின்ற குடம் இதற்கு முன்னுங் குயவன் திகிரிமுதலிய காரணங்களெல்லாம் ஒருங்கு தொக்குழியும் ஒருகாரணங் கூடாமையின், இதற்குமுன் உற்பத்தியாகாதாயிற்றென்பது பெறுதும்; குயவன் திகிரி மண்முதலிய காரணங்கள் ஒருங்குதொக்குழியும் உற்பத்தியாகாமையின். யாதொன்று யாவைதொக்குழியும் உற்பத்தியெய்தாது, அஃது அவற்றின் வேருகிய காரணமொன்று கூடாமையான், உற்பத்தியாகாதாயிற்றென்பது பெறப்படும்; நாடாமுதலிய எல்லாக்காரணங்களுந் தொக்கவழியும், நூலாதல் நெய்வோனுதல் கூடாத வழி, உற்பத்தியெய்தாத ஆடைபோலும் என்னும் வழியளவையான் ஏனைக்காரணங்களெல்லாந் தொக்கவழியும் இதற்குமுன்னர்க் குடந்தோன்ருது இப்பொழுது தோன்றுதற்கு நின்ற காரணம் யாது அது காலமெனத் துணியப்படுமென்க. குடமுதலியன அங்ஙனந் தோன்றுதற்கு

* இந்நூல், மூன்றுஞ்சூத்திரம், எ-ம் அதி, உதாரணம். † சிவப்பிரகாசம், பொது, கச. ‡ சிவஞானசித்தி, முதற்சூத்திரம், கக.

வினையே காரணமெனின், அற்றன்று; வினையுங் காலந் துணையாகக்கொண்டன்றி உற்பத்திக்கேதுவாகாது. ஆமெனின், வேள்விசெய்தபொழுதே துறக்கவின்பமுண்டாதல் வேண்டுமென்றொழிக.

அல்லதூஉம், மாந்தளிர்முதலியன இளவேனிற்கால முதலியவற்றினன்றி உற்பத்தியாகாமையும், முல்லைப்பூமுதலியன கார்காலமுதலியவற்றினன்றி உற்பத்தியாகாமையும், நசித்தலும் அவ்வக்காலம் வந்துழியன்றி நசியாமையுங் காண்டும். காலமில்லையென்பார்க்கு அவ்வக்காலமின்றியும் அவையவை உற்பத்தியாய் உற்பத்தியானபொழுதே எல்லாப்பொருளும் நாசமெய்தவும்வேண்டும். அங்ஙனங்காணாமையானும், செய்தவினைக்குப் பயன் நீட்டித்துவருதலானும், ஒருகணத்திற் றோன்றும் ஒருகணத்தி லழியுமென்று வழங்கப்படுதலானும் இன்னோரன்னவற்றிற்குக் காரணமாகிய காலமுண்டென்பது தெற்றெனவுணர்க.

இனித், தார்க்கிகர் முன் பின் என்னும் வழக்கமுண்மையின், அங்ஙனம் வழங்குதற்குக் காரணம் வேறின்மையான், அவ்வழக்கிற்குக் காரணமாகிய அக்காலமுண்டென்பது துணியப்படுமென்பர். காலம் ஒன்றெனக் கொண்டார்க்கு ஒன்றாகிய காலம் பலவேறுவகையான் வழங்கப்படுதல் பொருந்தாமையின், ஞாயிற்றின்செலவோடுகூடிய செயற்கையானே அங்ஙனம் வழங்கப்படுமென்றல் வேண்டும். வேண்டவே, ஞாயிற்றின் செலவே அங்ஙனம் வழங்குதற்குக் காரணமாதல் அமையுமெனப்பட்டுக் காலமுண்டென்பது துணியப்படாதாய் முடியுமாகலின், அது பிரமாணமன்றென்க.

இதனானே காலம்பற்றிய முன் பின் என்னும் வழக்கிற்கு வேறாகிய இடம்பற்றிய முன் பின் என்னும் வழக்கிற்கு வேறுகாரணமின்மையின் அதற்குக் காரணமாய்த் திக்கென்றொரு தத்துவம் உண்டென்பதூஉம் மறுக்கப்பட்டது; நிலம் ஆகாயம் முதலியவற்றின் ஏகதேசமே அங்ஙனம் வழங்குதற்கு ஏதுவாகலான் என்க. ஓரிடந்தானே ஒன்றைநோக்கி முன்னெனவும், ஒன்றைநோக்கிப் பின்னெனவும், ஒன்றைநோக்கிக் கிழக்கெனவும், ஒன்றைநோக்கி மேற்கெனவும், ஒன்றைநோக்கி வடக்கெனவும், ஒன்றைநோக்கித் தெற்கெனவும் வழங்கப்பட்டுப் பயன்றந்து திக்கெனப் பெயர்பெற்றுநிற்குமாகலின், திக்கென்பது வேறு பொருளன்மை உணர்க.

அற்றேல், காலமும் இவ்வாறேயாய் ஒருகாலந்தானே ஒருபொருளை நோக்கி இறந்தகாலமும், ஒருபொருளை நோக்கி நிகழ்காலமும், ஒருபொருளைநோக்கி எதிர்காலமுமென வழங்கப்படுதலானும், இங்ஙனம் மூவகைப்படுதல்பற்றிக் காலம் பலவென்றல் பொருந்தாதாய் முடியுமாலெனின்,—அங்ஙனம் பலபொருளின்கண் ணிகழ்தல்பற்றிக் காலம் பலவாதலில்லையாயினும் ஒரோவொருபொருளின்கண்ணே மற்றொன்றை நோக்காமையே முக்காலமும் நிகழ்தல்பற்றிப் பலவெனத் துணியப்படுமென்பது முன்னர்க் கூறுமாற்றாற் காண்க.

அற்றேல், அஃதொக்கும். காலம் ஒன்றாய் வியாபகமாய் நித்தமாயுளதென நையாயிகர் முதலியோர் கூறுவராகலின், அதனைமறுத்துப் பல

வாய் ஏகதேசமாய் அநித்தமாயுள்ளது காலமென்றது என்னையெனின், கூறுதும்:—காலம் ஒன்றாயின் நடத்தன்முதலிய தொழில்களும் இறப்பு நிகழ்வு முதலியவற்றான் வேறுபடுதலின்றி யொன்றேயாதல்வேண்டும். அவ்வாறன்றி இறப்பு நிகழ்வு முதலியனவாய்நிகழுந் தொழிற் பாகுபாட்டிற்குக் காரணங் காலத்தினது பாகுபாடேயாகலின், காலம் பல வாதல் அறிக.

அற்றேல், நடத்தன்முதலிய தொழில்கள் இறப்பு நிகழ்வு முதலியவாக வேறுபடுதல் அவற்றதியற்கையே; காலவேறுபாடுபற்றிய செயற்கை அன்றென்றாற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; நடத்தற்றொழில் இயற்கையானொன்றேயாகலின், அது பலவாய் வேறுபடுதல் செயற்கையானன்றி ஆகாதென்க. ஆமெனின், இறப்பு நிகழ்வு முதலிய வழக்கிற்கும், அங்ஙனம் நிகழும் உணர்விற்குங் காரணம் நடத்தன்முதலிய தொழில்களேயென அமையும். அவ்விரண்டற்கும் ஏதுவாதல்பற்றிக் காலமுண்டென்பது துணியப்படாதாய் முடியுமாகலின், காலம் ஒன்றென்பார்க்குங் காலப் பாகுபாடுபற்றியே பொருள்கட்கு இறப்பு நிகழ்வு முதலிய பாகுபாடுள்ளதென்று ஒருதலையாற் கோடல்வேண்டுமென்க.

அற்றேல், காலப்பாகுபாடுபற்றியே தொழிற்கு இறப்பு நிகழ்வுமுதலிய பாகுபாடென்பது ஒக்கும். அங்ஙனமாயினும், காலத்திற்கு இறப்பு முதலிய பாகுபாடு ஞாயிற்றின்செலவு முதலியவற்றானாகிய செயற்கையேயாமாகலின், இயற்கையாற் காலம் ஒன்றேயென்றாற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; ஞாயிற்றின்செலவு முதலியனவுந் தொழிலின் வேறன்மையான் இறப்பு நிகழ்வுமுதலிய தொழிற்பாகுபாடுகளெல்லாங் காலப்பாகுபாட்டானன்றி நிகழாமையானும், நிகழுமெனின், மேற்கூறிய குற்றமே தலைப்படுமாகலானும், ஞாயிற்றின்செலவுமுதலிய தொழிற்பாகுபாட்டிற்குக் காரணங் காலப்பாகுபாடும், காலப்பாகுபாட்டிற்குக் காரணம் ஞாயிற்றின்செலவு முதலியவற்றின் பாகுபாடுமெனின், ஒன்றனையொன்றுபற்றுதலென்னுங் குற்றமாமாகலானும், ஞாயிற்றின்செலவு முதலியவற்றைக்குறியாது ஒருகுடம் உடைந்தது உடையாநின்றது உடையுமென அறியவும் வழங்கவுங் காண்டுமாகலானும், இங்ஙனம் உணர்தற்கும் வழங்குதற்கும் ஞாயிற்றின்செலவு முதலியன ஏதுவன்மையானும், நாழிகை கழிந்தது; நாள்கழிந்தது; திங்கள் கழிந்தது என்றுணர்தலும் வழங்கலும் ஞாயிற்றின் செலவுமுதலியவற்றைக் குறித்தன்றி உளவாகாமையும், அங்ஙனம் உணர்தற்கும் வழங்குதற்கும் ஞாயிற்றின்செலவு முதலியனவே ஏதுவாதலுங் காண்டுமாகலானும், நாழிகை நாள் பக்கம் திங்கள் பருவம் அயனம் ஆண்டு என்றற்றொடக்கத்துக் காலப்பாகுபாடு மாத்திரையே ஞாயிற்றின்செலவு முதலியவற்றானாய செயற்கையாவதன்றி, இறப்பு நிகழ்வு எதிர்வு கணம் இலவம் என்றற்றொடக்கத்துக் காலப்பாகுபாடுகள் ஞாயிற்றின்செலவு முதலியவற்றானாகிய செய்கையல்லவாகலான், இயற்கையான் இறப்பு நிகழ்வு என்றற்றொடக்கத்துப் பலவேறுவகைப்படுங் காலம் ஒன்றாமாறு யாண்டையதென்க.

குடம் உடைந்தது உடையாநின்றது உடையும் என்பன பொருட்பெற்றிபற்றிய வழக்கெனின்,—அது காலமில்லையென்னும் புத்தர்முதலியோர் மதமாதலானும், பொருட்பெற்றியாயின், பெற்றிக்கு நீக்கமின்மையின் மூவகைவழக்கும் ஒருங்கு நிகழ்தல்வேண்டுமாதலானும், மாறுபட்ட பலபெற்றி ஒருபொருட்கு உளவாகாமையானும் அது பொருந்தாதென் றொழிக.

அற்றேல், மாறுபட்ட பலபெற்றி ஒருபொருட்கு உளவாகாவென்றதென்னை? புத்திதத்துவத்தில், தன்மமும் அதன்மமுமுதலிய மாறுபட்ட பாவங்களும், மூலப்பகுதியிற் சாத்துவிகமுதலிய மாறுபட்ட குணங்களும் உளவாமாலெனின்,—அற்றன்று; * தன்மமுதலிய பாவங்கள் ஒன்றற்கொன்று மாறுபட்டனவல்ல. அவையெல்லாம் புத்தியின் காரியமாகிய ஞானவிசேடங்களேயாம். ஆண்டு அஞ்ஞானமென்றது ஞானமின்மையென்னும் பொருட்டன்று; திரிவாகிய ஞானமென்னும் பொருட்டேயாம். சாத்துவிகமுந் தாமதமுந் தம்முள் மாறுபட்டனவல்ல. உள்ளபடியுணர்விப்பது சாத்துவிகம், வேறுபடவுணர்விப்பது தாமதம்; உணர்வித்தல் விசேடமே இரண்டற்குமாகலின், மாறுபாடின்மை உணர்க.

அற்றேல், ஒருகாலத்திற்றானே உடைந்தகுடத்தை நோக்கி இறந்தகாலமெனவும், பிறந்தகுடத்தைநோக்கி நிகழ்காலமெனவும், பிறக்கக்கடவதாகிய குடத்தைநோக்கி எதிர்காலமெனவும் வழங்கக் காண்டும். அங்ஙனம் வழங்குதல்பற்றிக் காலந் தம்முள் வேறாகாமையுங் காண்டுமாதலின், இறப்பு நிகழ்வுமுதலிய வேறுபாடேபற்றிக் காலம் பலவென்றல் சீரிலாதெனின்,—அற்றன்று; ஒருவன்றானே தந்தையைநோக்கி மகனும், மகனைநோக்கித் தந்தையுமாதலும், நெடியனைநோக்கிக் குறியனும், குறியனைநோக்கி நெடியனுமாதலும்போலப், பல்வேறுவகைப்பட்ட பொருள்களைநோக்கிப் பலவேறுவகைப்பட வழங்கும் இறப்புமுதலியன மாறுபட்டதன்மையவல்லவாகலின், அவற்றைநோக்கிக் காலம் ஒன்றேயாயினும், ஒருகுடத்தின் கண்ணவாகிய இறப்பு நிகழ்வு எதிர்வு என்பன மாறுபட்டதன்மையவாதல் காட்சிப்புலனாகலின், அவற்றைநோக்கிக் காலம் பலவாதல் சாலுமென்க.

இதனானே இறப்பு நிகழ்வு முதலிய வேறுபாட்டாற் காலம் பலவேறுவகைப்படுமென்பது பெறவே, தம்முட் பலவுமாய்ச் சடமுமாகலின், தோன்றிநின்றழியும் அநித்தமேயென்பதூஉம்; அநித்தப்பொருளாகலின், ஏகதேசமேயென்பதூஉந் தாமேபோதருமென்று உணர்க.

அற்றேல், பதிமுதலியபொருள் நித்தமென்பது வேறோராற்றாற் பெறப்படாமையின், நித்தமான காலத்தைப்பற்றி நிற்றல்பற்றியே நித்தமென்றுணரப்படும். அத்தன்மைத்தாகிய காலம் அநித்தமென்பார்க்கு நித்தப்பொருளென்பது ஒன்றுமின்றாய் முடியுமாலெனின்,—நன்றுசொன்னாய்! காலம் நித்தப்பொருளென்பது எற்றாற்பெற்றாயெனக் கடாயினார்க்கு அதுவும் நித்தகாலத்தைப்பற்றி நிற்றலாற் பெற்றேனெனவிடுப்பின், அது தன்னைப்பற்றுதல் என்னுங் குற்றமாம். வேறோரு நித்தகாலத்தைப்பற்றி நிற்கு

* இவற்றைப் புத்திதத்துவத்தினியல்புரைப்புழிக் காண்க.

மென விடுப்பின், அநவத்தையாய் முடியுமாகலின், நித்தகாலத்தைப்பற்றி நித்தமென்றல் உனக்கே ஏலாமையின், அதுபொருளன்றென்க. மற்றென்னையோ நித்தப்பொருளாமாறெனின்,— * காலவரையறையின் அகப்படாதுநிற்பதே நித்தப்பொருளெனக் கொள்க. இங்ஙனமாகலாற் காலம் நித்தமாகாமைபற்றி நித்தப்பொருளுண்மைக்கு இழுக்கின்மையும் அறிக.

அஃதங்ஙனமாக; இறந்தகாலமும் எதிர்காலமும் அறிவிற்கு விடயமாயினாற்போல அவையிரண்டற்கும் இடையே நிகழுங் கணப்பொழுது ஒன்றுண்டென்பது அறியவாராமையானும், உண்டெனக்கொள்ளினும் அது நிகழ்ந்தபின் நிகழும் அறிவிற்கு அஃதிறந்தகாலமேயாம்; ஆகலானும், நிகழ்காலமொன்று கூட்டிக் காலம் மூன்றென்றல் பொருந்தாதெனின்,—அற்றன்று; சூக்குமநிகழ்காலம் அறிவிற்கு விடயமாகாதாயினும், தூலநிகழ்காலம் அறிவிற்கு விடயமாமாகலின், அதுபற்றி முக்காலமும் உளவெனக் கொள்க.

தூலநிகழ்காலம்யாதெனின், கூறுதும்:—சற்காரியவாதத்தின் முதற்காரணமுங் காரியமும் வேறன்மை மேற் கூறிப்போந்தாமாகலின், இறந்தகாலத்தின் மட்பிண்டவடிவிற்றாயும் எதிர்காலத்தின் ஒட்டுவடிவிற்றாயும் நிற்குங் குடம் அவ்விரண்டுகாலத்திற்கும் இடையேயன்றிப் புனன்முகத்தன் முதலிய காரியத்திற்கு உரித்தாகாமையானும், ஏனையிரண்டுகாலத்தினும் மறைந்துநின்று இடைப்பட்டகாலத்திற் குடவடிவம் வெளிப்படக் காண்டலானும், இறந்தகாலத்திற்கும் எதிர்காலத்திற்கும் இடையே புனன்முகத்தன்முதலிய காரியத்திற்குரித்தாய்க் குடம் வெளிப்பட்டு நிற்றற்கேதுவாகிய காலம் நிகழ்காலமெனக் கொள்க. இதனாற் போந்தது குடமுதலிய காரியப்பொருள்களினுளவாய மூன்றவத்தையுண்மை காணப்படுதலான், அவற்றிற்கேதுவாகிய காலம் மூன்றுளவென்பது பெறப்படுமென்று ஓதியவாறென்க. இங்ஙனங் காலதத்துவத்தினியல்பு ஒருவகையாற் றொகுத்துக் கூறப்பட்டது.

## நியதிதத்துவம்.

இனிக், கலைமுதலிய மூன்றானுந் தொழில் அறிவு இச்சை விளங்கிப் போகநுகர்ச்சிக்கட் செல்லும் ஆன்மாக்கள் உயர்ந்தபோகத்தின் விழைவும், இழிந்தபோகத்தின் வெறுப்பும் உடையரன்றே: அதனாற் பிறரானீட்டப்படும் நல்வினைப்பயனைக் கவரவும், தம்மாலீட்டப்படுந் தீவினைப்பயனை நீக்கவும் எண்ணுதலுடைமையின், அங்ஙனமாகவொட்டாது அவரவரானீட்டப்படும் வினையின்பயனை அவரவரே நுகருமாறு அரசராணைபோல் நியமித்து நிறுத்துவது நியதிதத்துவமென்க. நியதி, பால், ஊழ், தெய்வம், விதியென்பன ஒருபொருட்கிளவி.

அற்றேல், புதல்வன்செய்த தென்புலத்தோர் கடன்முதலிய வினையின் பயன் தந்தையைச்சாரவும், தந்தைசெய்த சாதகன்மமுதலிய வினையின்

* இது, காலாவச்சேதரஹிதத்வம் நித்யத்வம் காலவஜிதம் என்னும் பவுட்கரவசனத்தானும் அறிக.

பயன் புதல்வனைச்சாரவும், மள்ளர்செய்யும் உழவுமுதலிய வினையின்பயன் நிலமுடையானைச் சாரவும், இருத்துவிக்குக்கள்செய்யும் வேள்வியின்பயன் இயமானனைச் சாரவுங் காண்டுமாகலின், அவரவர்செய்த வினையின்பயன் அவரவரே நுகர்வரென்னும் நியமமே காணுமையின், அதுபற்றி நியதி தத்துவம் உண்டென்றல் சாலாதாலெனின்,—அற்றன்று; புதல்வனுக்குந் தந்தைக்கும் இயைபுண்மையின், தந்தையைநோக்கிப் புதல்வன்செய்யும் வினையின்பயன் தந்தைக்கும், புதல்வனைநோக்கித் தந்தைசெய்யும் வினையின் பயன் புதல்வனுக்குமாயின. மள்ளர் ஏவல்வழிநின்று வினைசெய்து தந் தொழிற்கேய்ந்த கூலிபெற்றொழிதலின் உழவுமுதலிய வினையான்வரும் பயன் ஏவும் வினைமுதலாகிய நிலமுடையானுக்கும், இருத்துவிக்குக்களும் ஏவல்வழிநின்று வினைசெய்து தந்தொழிற்குத்தக்க தக்கணைபெற்றொழிதலின், வேள்விவினையான் வரும்பயன் ஏவும் வினைமுதலாகிய இயமானனுக்குமாயின; ஆகலான், அவ்வாறு யாதானுமோர் இயைபின்றி ஒருவர்செய்த வினைப்பயன் ஒருவர்க்காதலில்லை; ஆகலான், நியமத்திற்கிழுக்கின்மையின், அதுபற்றி நியதிதத்துவம் உண்டெனக்கொள்க.

ஒருபாற்கோடாது நடுநின்று செங்கோல்செலுத்தும் அரசனாணையில் வழி, எளியோர்பொருளை வலியோர் கவர்ந்துகொள்வதுபோல நியதிதத் துவமில்வழி, ஒருவர்செய்த வினைப்பயன் மற்றொருவர் கவர்வதாய்முடியு மாகலின், நியதிதத்துவமுண்டென்பது தெற்றெனவுணர்க.

அற்றேல், அங்ஙனம் நியமித்தற்கு இருவினையே அமையும் நியதிதத்து வம் வேண்டாவெனின்,—அற்றன்று; இருவினை போகத்தைப் பயத்தன் மாத்திரையேயன்றி, அப்போகங் கருத்தாவைச் சென்றடைவிக்குமாறு செய்யமாட்டா. அடைவிக்குமெனின், ஒருகருவியும் வேண்டாது உடம்பு முதலியனவும் வேண்டாது இருவினைதாமே போகநுகர்வித்தல் வேண்டும். அவையெல்லாம் இருவினைகள் போகநுகர்வித்தற்குத் துணைக்கருவியாதல் வேண்டுமெனின்,—அவ்வாறே நியதிதத்துவமுந் துணைக்கருவியாதல் வேண்டுமாகலான், இருவினை தாமே நியமிக்கமாட்டாமை யறிக.

அற்றேல், முதல்வனதாணையாகிய சத்தியே போகத்தை நியமித்து நிறுத்துவதாகலின், நியதிதத்துவங்கோடன் மிகையாமெனின்,—அஃதொக் கும். முதல்வனது சத்தி அவ்வக்கருவிகளை முன்னிட்டு அவ்வக்காரியங்க ளைச் செய்வதன்றித் தானே முன்னின்று செய்யாது. செய்யுமாயிற் பிற காரணங்களின்றியே வீடுபெறுதல் வேண்டும்; அஃதின்மையான் முதல்வ னதுசத்தி கருவிகளைமுன்னிட்டே காரியநடாத்துவதாகலின், அது போ கத்தை நியமித்து நிறுத்துதற்குக் கருவி நியதிதத்துவமெனக் கொள்க.

## கலாதத்துவம்.

இனிக், கலாதத்துவமாவது, மூலமலத்தின் மறைப்புண்டு சூனியம் போனின்ற ஆன்மாக்களுக்குப் போகநுகர்ச்சியின்பொருட்டு மலசத்தியிற் சிறிதே நீக்கி ஆன்மாக்களுக்குக் கிரியாசத்தியை விளக்குவது. கலித்தல்- நீக்குதலுஞ் செலுத்துதலுமாகலின், மலத்தை நீக்குதலாற் கலையெனப்

பெயராயிற்று. மலம் வியாபகமாகலின், அதனை நீக்குதலாவது நெருப்பினது சுடுதற்சத்தியை நிகழவொட்டாது தடுக்குங் குளிகைபோல, மலத்தினது மறைத்தற்சத்தியை ஆன்மாவின் கிரியாசத்தியின்கண் நிகழவொட்டாது தடுத்துநிற்றலாம். சிறிதே நீக்குதலாவது வினைக்கீடாகப் புத்திதத்துவத்தின் வியாபாரத்திற்கு யாதுயாது விடயமாம் அவ்வவ்விடயத்தின் நிகழும் மறைத்தற்சத்தி மாத்திரையே நீக்குதலெனக் கொள்க.

அற்றேல், வினைக்கீடாகப் போக்கியப்பொருள் ஒரோவொன்றாய் விடயமாதற்பொருட்டுப் புத்திதத்துவத்தின் தொழிற்பாடு ஒருதலையான் வேண்டப்படுமாதலின், அதுவே அமையும்; கலையாற் பயனென்னையெனின்,—அற்றன்று; புத்திதத்துவஞ் சடமாகலிற் சேதனனாகிய ஆன்மாவாலன்றித் தொழிற்படாமையான் அதனை மலத்தின் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மாத் தொழிற்படுத்துதற்குக் கருவி இன்றியமையாமையின், ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்கிப் புத்திதத்துவத்திற் செலுத்துவதாகிய கலை ஒருதலையான் வேண்டப்படுமென்க.

அற்றேல், முதல்வனது சத்தி சேதனமாகலின், அது புத்தி தத்துவத்தைத் தொழிற்படுத்துமென்னுமோவெனின்,—என்னும்; என்னை? உடம்பு போல் அந்தக் கரணமுதலியனவும் ஆன்மா அதிட்டித்தன்றித் தொழிற்படாமையின். அங்ஙியமமில்லையாயின், குயவன்முதலியோ ருடம்பினும் அவரதிட்டானமின்றி முதல்வனதிட்டித்தன் மாத்திரையானே குடமுதலியன உளவாதல் வேண்டுமென்றொழிக.

அற்றேல், கலையுஞ் சடமாகலின், அதனைத் தொழிற்படுத்துவது யாதெனின்,—அஃதொக்கும். * "சுத்தவித்தை யாதிமுதற் சொன்னவெழுத்துவமு—மொத்து நடத்தியிடும்" எனவும், † "சீவர்க்கு—வந்திடும் பிரேரகாண்டம்" எனவுங் கூறுபவாகலின், முதல்வனது சத்தியான் அதிட்டிக்கப்படுஞ் சுத்ததத்துவங்களே கலைமுதலியவற்றைத் தொழிற்படுத்தும் பிரேரககருவியென்று உணர்க.

அற்றேல், ஆன்மாக்கள் புத்திதத்துவத்தைத் தொழிற்படுத்துதற்குச் சுத்ததத்துவமே கருவியாதல் அமையுமென்றாற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; பசுத்துவமுடைய ஆன்மாக்களுக்குச் சுத்ததத்துவங் கருவியாகாமையானென்க. வித்தைமுதலியவற்றிற்கும் இவ்வுரையை உய்த்துரைக்க. இத்தன்மைத்தாகிய கலை கருவிக்காரகமாயினும் ஆன்மாக்கள் வினைமுதலாதற்குரிய கிரியாசத்தியை விளக்கிப் போகநுகர்ச்சிக்கண் வேறின்றி உடனாய் நிற்றலின், வினைமுதற் காரகமென்று உரைக்கப்படுமென்க.

## வித்தியாதத்துவம்.

இனிக், கலையாற் கிரியாசத்திவிளங்கி வினைமுதலாதலையெய்திநின்ற ஆன்மாக்களுக்குக் கலையினின்றுந்தோன்றி ஞானசத்தியைவிளக்கி அதனால் அதிட்டிக்கப்பட்டுப், புறத்தின்கண்விடயமாகிய குடமுதலியவற்றைச் சவிகற்

* துகளறுபோதம், கக. † சிவஞானசித்தி, உ-ம் சூ, எ0.

பக்காட்சியான் நிச்சயிக்கும் புத்திதத்துவமாகிய அகத்தின்கண்விடயத்தை யறியுந் தன்வேதனைக்காட்சியறிவிற்கும், புத்திதத்துவத்தொடு கூடாமை யாற் புறப்பொருளை விகற்பமின்றியறிவதாகிய நிருவிகற்பக்காட்சியறிவிற் கும், மனம் புத்தி அகங்காரங்களின் றொழிற்பாடாகிய சங்கற்பம் நிச்சயம் அபிமானமென்பனவற்றை அறியுமறிவிற்குங் கருவியாய்நிற்பது வித்தியா தத்துவமென்றுணர்க.

அற்றேல், கலையான் மலஞ் சிறிதுநீங்கவே கிரியாசத்திபோல ஞான சத்தியும் விளங்குதற்கு இடையீடின்மையின், வித்தையாற் பயனென்னை யெனின்,—அற்றன்று; குருடுசிறிது நீங்கியவழிக் கண்ணொளி சிறிதுவிளங் கினுந் திகைப்புற்றுநிற்குமன்றிக் குருடுநீங்கியபொழுதே விடயங்களைப் பகுத்துக் காணமாட்டாது. அதுபோலக் கலையான் மலசத்தி நீங்கியவழி ஞானசத்தி விளங்கினும், புத்திதத்துவத்தைப்பற்றி விடயத்தைப் பகுத் துணரமாட்டாது திகைப்புற்றுநிற்கும். அத்திகைப்புநீக்குதற்குக் கலையி னின்றுந் தோன்றிய வித்தையே கருவியாகலின், அஃது ஒருதலையான் வேண்டப்படுமென்க.

அற்றேல், மலசத்தியைநீக்கிய கலையே திகைப்பினை நீக்குதற்கும் அமையும்பிறவெனின்,—அமையாது; ஒருதொழிற்கமைந்தகருவி மற்றொரு தொழிற் காகாமையின். அற்றேல், நீக்குதலிரண்டும் மறுதலைத்தொழி லன்மையான் மறுதலைப்படாத இரண்டுதொழில் ஒருகருவியானமைதல் உலகத்திற்காண்டுமாகலின், கலையொன்றே அவ்விரண்டற்கும் அமையுமென் றுற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; அங்ஙனமாயினும் ஒரு கருவி இரண்டுதொழில் ஒருங்குசெய்தல் கூடாமையின், ஈண்டுத் திகைப்பு நீக்கத்தினும் மலநீக்கம் ஒருங்கு நிகழவேண்டுதலின், மலசத்தியை நீக்குவ தாகிய கலையே தனது ஏகதேசத்தின் வித்தையாய்ப் பரிணமித்துத் திகைப் பினைநீக்கிப் புத்திதத்துவத்திற் கோசரமான விடயத்தையறிதற்குக் கருவி யாய் நிற்குமெனக் கொள்க. அற்றாகலினன்றே வித்தை மாயையிற்றோன்று மென்னாது கலையிற்றோன்றுமென்றதூஉமென்க.

இவ்வாறே ஏனைத்தத்துவங்களுந் தம்முட் காரணகாரியங்களாய் ஒன் றினொன்று தோன்றுமென்னும் உற்பத்திமுறையெல்லாம் ஆகமவளவை மாத்திரையானன்றி வழியளவையானும் உய்த்துணர்ந்துகொள்க. அவை யெல்லாம் ஈண்டுவிரிப்பிற் பெருகும்.

அஃது அங்ஙனமாக; அறிதற்குக் கருவியாகிய புத்திதத்துவத்தை அறியப்படும் விடயமென்றும், அதனை ஆன்மாவறிதற்கு வித்தை கருவி யென்றுஞ் சொல்லியது என்னையோவெனின், கூறுதும்:—வாயிற்காட்சி மானதக்காட்சிக்கு வாயிலும், அந்தக்கரணங்கள் கருவியும், சந்தனம் மாலை முதலிய புறப்பொருள்கள் விடயமுமாம். அவற்றின் பின்னிகழுந் தன் வேதனைக்காட்சியறிவிற்குச் சந்தனம் மாலைமுதலிய புறப்பொருள் விடய மாகா. என்னை? சந்தனம் மாலைமுதலியன போக்கியத்திற்கேதுவாத லன்றிப் போக்கியமன்மையிற் றன்வேதனைக்காட்சியறிவிற்குப் போக்கிய

மாத்திரையே விடயமாகலின். மற்றென்னையோ அதற்கு விடயமாவ தெனின்;—சந்தனம் மாலைமுதலியவற்றிற் பற்றி அவையவையாய்ப் பரிண மித்த போதமாகிய புத்திதத்துவமே தன்வேதனைக்காட்சியுணர்விற்கு விடயமாமென்க; அதுவே இன்பத்துன்பவடிவாகிய போக்கியமாகலா னென்பது. இங்ஙனமாகலின், கேவலமாய்நின்ற புத்திதத்துவஞ் சந்தனம் மாலைமுதலியவற்றிற்பற்றி அவையவையாய்ப் பரிணமித்துநின்று ஆன்மா வின் ஞானசத்திக்கு விடயமாமாகலின், அதனை விடயமாக்குதற்குக் கருவி வித்தையென்னுந் தத்துவமென்றுணர்க. சிவப்பிரகாசத்தில், * "வாயில் களின் பயனைப்—புத்திதர வித்தையிடை நின்றறிவை யுயிர்க்குப் பொருந்தி யிடும் வகைபுணரும்" என்றதும் அப்பொருட்டு; † அதற்கு மனமே கரு வியாமாகலின், ‡ இது பொருந்தாதென்பது முன்னர்க் கூறப்படுமாற் றான் அறிக.

அற்றேல், ஆன்மாவின் ஞானசத்தியே அதற்குக் கருவியாமென்றாற் படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; இயல்பானே நிரதிசயவின்பத் தினை நுகர்வதாகிய ஆன்மாவின் ஞானசத்திக்கு யான் இன்பமுற்றேன் துன்பமுற்றேன் என்று இன்பத்துன்பமுதலிய ஞானங்களை அறிதல் செயற் கையானன்றி ஏலாமையின், ஞானசத்தி கருவியென்பார்க்கும் வித்தை யொடுகூடிக் கருவியாமென்றல் வேண்டுமாகலின், ஒருதலையான் வேண்டப் படும் வித்தையே ஆண்டுக் கருவியெனக்கொள்க.

அற்றேல், அவையவையாய்ப் பரிணமித்துவந்த புத்திதத்துவத்தை அறிவதாகிய தன்வேதனைக் காட்சியறிவிற்குக் கருவி வித்தையென்றது ஒக் கும். நிருவிகற்பக் காட்சியுணர்விற்கும் அது கருவியென்றது என்னையோ வெனின், கூறுதும்:—எதிரே காணப்படுவதொருபொருளைப் பெயர் சாதி முதலியவற்றான் நிச்சயித்தறிவதாகிய சவிகற்பக்காட்சி பொதுமையாற் கண் டறிவதாகிய நிருவிகற்பக்காட்சி நிகழ்ந்தபின்னன்றி நிகழாமையான், அத் தன்மைத்தாகிய நிருவிகற்பக்காட்சியறிவொன்று உண்டென்பதுபெறும். பெறவே, அவ்வறிவுநிகழ்ச்சிக்குக் கருவிவேண்டும், கண்செவிமுதலிய வாயில்களே அதற்குக் கருவியாயினும், வாயில்கள் ஆன்மா அதிட்டித்தா லன்றித் தொழிற்படமாட்டாமையின், நிருவிகற்பக்காட்சியின்கண் ஆன்மா வாயில்களை அதிட்டித்தற்குக் கருவியாய்நிற்பது வித்தையெனக் கொள்க. சவிகற்பக்காட்சியிற்போல நிருவிகற்பக்காட்சியினும் புத்தியே கருவியென் றாற்படும் இழுக்கென்னையெனின்,—புத்தி நிச்சயிப்பதாகலின், நிருவிகற்ப முஞ் சவிகற்பமாய் முடியுமாகலின், அஃது ஆண்டைக்குக் கருவியாகாதென் றொழிக. புத்திதத்துவங் கூடாமையானுங் கூடுதலானுமன்றே நிருவிகற்பஞ் சவிகற்பமென்று இருவகையான் அறிவு நிகழ்ந்ததூஉமென்க.

அஃது அங்ஙனமாக; புத்தியாங்கார மனங்களின் றொழிற்பாடாய் நிகழ்ந்த நிச்சயம் அபிமானஞ் சங்கற்பமென்பன ஆன்மாவிற்கு விடயமா தற்கும் வித்தையே கருவியென்றதென்னை? ஆண்டும் புத்திமுதலியனவே

* சிவப்பிரகாசம், பொது, உள	† அதற்கு என்றது வாயில்களின் பயனைத் தருதற்கு என்க.	‡ இது என்றது புத்தியை.

கருவியெனக் கொள்ளாமோவெனின்,—கொள்ளாம். என்னை? புத்திமுத லியன தத்தங் கீழுள்ளவற்றைநோக்கிச் சித்தாயினும் மேலுள்ளவற்றை நோக்கிச் சடமாகலின், அவை தத்தந் தொழிற்பாட்டளவினன்றி அறி கத்திற் செல்லமாட்டாமையானென்க.

இங்ஙனமாகலான் எவ்வகைப்பட்ட உணர்வும் ஆன்மாவிற்சென்று விடயமாதற்குக் கருவியாய்நிற்பது வித்தையெனக்கொள்க.

## அராகதத்துவம்.

இனி, வித்தையான் ஞானசத்திவிளங்கி விடயங்களை அறியலுறும் ஆன்மாவுக்கு இச்சைநிகழ்ந்தன்றிப் போகநுகர்ச்சி செல்லாமையின், வித் தையினின்றுந் தோன்றி ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்கிப் புத்தி குணங்களின் அவைராக்கியமெனப்படும் அராகநிகழ்ச்சிக்கு ஏதுவாய்நிற் பது அராகதத்துவம்.

இச்சையாவது ஞானவிசேடமாகலின், அதனை விளக்குவதாகிய அராக தத்துவம் வித்தையின் பரிணாமமாதலே பொருத்தமுடைத்து; ஆகலானும், * "விச்சையி னராகந்தோன்றி" என வழிநூலாசிரியர் கூறுதலானும், பவுட்கரமுதலியவற்றின் அராகத்திற்குக் கலையினின்றுந் தோற்றங்கூறியது, † "கலைகால நியதியுடன் வித்தை யராக' மைந்தும் 'மாயைதனிலாகும்" என்புழிப்போலப் பரம்பரையான் முதற்காரணமாதல்பற்றியென் றறிக. இவ்வாறன்றிக் கலையினின்றே அராகந்தோன்றுமென்பாரும் உளர். அவ ரெல்லாம் * "விச்சையினராகந் தோன்றி" என்புழி, இன்-உவமவுருபாக வைத்து, வித்தைபோல அராகங் கலையினின்றுந் தோன்றுமென் றுரைப்ப.

அற்றேல், இச்சைநிகழ்தற்குக் கருவி புத்தியின்கண்ணதாகிய அரா கமேயமையும். அராகதத்துவமொன்றுகோடன் மிகையாமாலெனின்,— அற்றன்று; ஆன்மாவின் இச்சாசத்தி புத்திதத்துவத்தை அதிட்டித்தபின் னன்றி அதன்கண்ணதாகிய அராகந்தோன்றாதென்பது மேற் கூறியவாற் றாற் பெறப்படுதலின், அத்தன்மைத்தாகிய புத்தியினராகந் தன்னைத் தோற்றுவிப்பதாகிய ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்குமென்றல் பொருந்தாமையின், அராகதத்துவமே ஆன்மாவின் இச்சாசத்தியை விளக்கு முகத்தாற் புத்தியின்ராகத்திற்கும் ஏதுவாமென்பது.

அற்றேல், அராகதத்துவமே அமையும். புத்தியின்கண்ணதாகிய அராகத்தாற் பயனின்மையின், அதுமிகையாமாலெனின்,—அற்றன்று; அராகதத்துவம் ஆன்மாவின் இச்சாசத்தி ஞானசத்திபோலப் பொதுமை யான் விளங்குதற் கேதுவாவதன்றி, அவ்வவ் விடயந்தோறுஞ் சிறப்புவகை யான் நிகழ்தற் கேதுவாகாமையின், சிறப்புவகையான் இச்சைநிகழாதவழி, எல்லாவிடயங்களிலும் ஒருங்கே இச்சை நிகழவும் ஒழியவும் வேண்டும். அஃதின்மையான் அராகதத்துவத்தாற் பொதுவகையானிகழ்ந்த இச்சை

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், ௫௬. † சிவப்பிரகாசம், பொது, ௧௪.

சிறப்புவகையான் நிகழ்தற் கேதுவாகிய புத்தியினராகம் மிகையாதல் யாண்டையதென்க.

அற்றேல், அராகதத்துவமும் வேண்டா; புத்தியினராகமும் வேண்டா; உலகத்துள்ள பொருள்களெல்லாம் பரம்பரையான் முக்குணத்தினின்றும் உற்பத்தியாதலின், சுகரூபமுந் துக்கரூபமும் மோகரூபமுமாய் நிற்பனவாகலாற் சுகரூபமாய்நிற்றல் பெற்றாமன்றே: அதுவே சிறப்புவகையானும் பொதுவகையானும் இச்சையை நிகழ்த்திப் போகநுகர்ச்சிக் கேதுவாமென்றற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; இச்சிப்பார்மாட்டு விசேடமில்வழி, எல்லாப்பொருளும் எல்லாவுயிர்கட்கும் ஒப்பச் சுகரூபமாய்நிற்றலிற் றிரியாமையின், எல்லாப்பொருள்களினும் வேட்கை ஒப்பச்சேறல் வேண்டும். அது கண்டிலம். அல்லதூஉம், அநுபவித்தொழிந்தபொருளினும் ஒழியாது வேட்கை சென்று, மீளவும் அதனையே அநுபவிக்கமுயறல் வேண்டும். அவ்வாறன்றி அநுபவித்தபொருளின் வேட்கைநீத்தோரையுங் காண்டும்; ஆகலாற் சுகரூபமாதல் வேட்கைக்குக் காரணமென்றல் பொருந்தாதென்க.

அற்றேல், அராகம் வேறுண்டென்பாரும் அது கலாதிபோல ஆன்மாவைவிட்டு நீங்காது எக்காலமும் உடனிற்குமெனக் கோடலின், அவர்க்கும் அவ்வாறாதல் வேண்டுமென்பதாய் முடியுமாலெனின்,—அற்றன்று; ஞானரூபமும், வாதனாரூபமுமென்று அராகம் இருவகைப்படும். அவற்றுள், ஞானரூபமாகிய புத்தியினராகமே விடயத்தைப்பற்றி நிகழுமாதலின், அது நீங்கியவழி, அவ்விடயத்தின் வேட்கைநிகழாமையான் ஒழிதல் கூடுமென்க. வாதனாரூபமாகிய அராகதத்துவம் உடனாய்நிற்பினுஞ் சிறப்புக்காரணமில்வழிப் பொதுக்காரணமாத்திரையாற் காரியந்தோன்றுதல் கூடாமையானென்பது.

வாதனாரூபமாகிய அராகம் நீங்குமாயின், மற்றொருவிடயத்தின் வேட்கைநிகழ்தல் இல்லையாய்முடியும். அஃதின்மையான் அராகதத்துவம் நீக்கமின்றி ஆன்மாவினுடனாய் நிற்குமெனக் கொள்க.

அங்ஙனம் வாதனாரூபமாய்நிற்கும் அராகதத்துவம் முத்திக்காலத்திற்றன்னெல்லையளவும் அத்துவசுத்திசெய்யுந் தீக்கையாற் பற்றறக்கழியும். கழியவே, விடயங்களிற் பொதுமையானிகழும் விருப்பமும் நிகழாமையின், ஆண்டுச் சிவராகம்வெளிப்பட்டு ஆன்மாவின் இச்சாசத்தியை முத்திக்கேதுவாகிய சாதகங்களிற் கோசரிப்பிக்குமென்றறிக.

அற்றேல், அஃதொக்கும். அராகதத்துவம்போல விடயங்களில் வெறுப்புநிகழ்தற்கு ஏதுவாக வெறுப்புத்தத்துவமொன்றுண்டெனக் கொள்ளாமோவெனின்,—கொள்ளாம். என்னை? ஆன்மாவின்கண் இச்சாசத்திபோல வெறுப்புச்சத்தியொன்று இன்மையானும், விடயங்களினிகழும் வெறுப்பிற்குப் புத்தியின்கண்ணதாகிய வெறுப்பே காரணமாதலமையுமாகலானுமென்க.

அற்றேல், ஆன்மாவிற்கு இச்சாசத்திபோல வெறுப்புச்சத்தியும் ஒன்றுண்டெனக்கொண்டு அதனை விளக்குதற்கு வெறுப்புத்தத்துவமொன்று உண்டெனக்கொள்ளிற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; புத்தியின்கண்ணதாகிய அராகம் புறப்பொருளை இது சுகத்திற்கேது, இது துக்கத்திற்கேதுவென விடயிக்கும் ஞானம் நிகழ்ந்தபின்னன்றி நிகழாது. புறப்பொருளை அங்ஙனம் விடயிக்கும் ஞானமும் புத்தியின்றொழிற்பாட்டானன்றி நிகழாது. புத்தியின்றொழிற்பாடும புத்தியிற் கோசரிப்பதாகிய ஆன்மாவின் இச்சாசத்தியின்றி நிகழாது. அவ்விச்சாசத்தியின் விளக்கமும் அராகதத்துவத்தானன்றி நிகழாது. இங்ஙனமாகலாற் புத்தியிற்கோசரித்தற்குப் புத்தியின்கண்ணதாகிய அராகத்தின் வேறாய் ஆன்மாவின் இச்சாசத்தியுண்டென்பதூஉம், இச்சாசத்தியிற் கோசரித்தபின்னர்ப் புத்தியின்றொழிற்பாட்டாற் புறப்பொருளைவிடயிக்கும் ஞானம் நிகழ்ந்தபின்னாக நிகழும் புத்தியினராகமும் அவ்விச்சாசத்தியே விளக்குமென்பது கூடாமையின், அதனை விளக்குதற்கு அராகதத்துவம் உண்டென்பதூஉம், புறப்பொருள்விடயத்திற் சிறப்புவகையான் நிகழும் இச்சையை விளக்குதற்குப் புத்தியினராகமும், அதன் மறுதலையாய வெறுப்பைவிளக்குதற்குப் புத்தியின்வெறுப்பும் உளவென்பதூஉம் ஒருதலையான் வேண்டப்படும். இவ்வாறு புத்தியின்கண்ணதாகிய வெறுப்பின் வேறாய் ஆன்மாவின்வெறுப்புச்சத்தியுண்டென்பதற்குப் பிரமாணமின்மையின், வெறுப்புத் தத்துவமென்பதொன்றில்லையென்றுணர்க.

ஆன்மாவின் வெறுப்புச்சத்தியுண்டென்பார்க்கும் விடயவெறுப்பைச் சிறப்புவகையான் விளக்குதற்குப் புத்தியின்வெறுப்பு ஒருதலையான் வேண்டப்படுதலின், இரண்டுகோடன் மிகையாகலானும், புத்தியின்வெறுப்பு நிகழ்தற்குக் காரணம், இது துக்கத்திற்கேதுவென்றறியும் ஞானமேயாகலானும், அஃது இச்சாசத்திகோசரித்த மாத்திரையானே புத்திதத்துவம் விடயத்திற்சென்று பற்றுந்தொழிற்பாட்டான் நிகழுமாதலின், வேறுகாரணம் வேண்டாமையானும், ஆன்மாவின் வெறுப்புச்சத்தியொன்று இல்லையென்பது தெற்றெனவுணர்க.

அற்றேல், யான் வெறுத்தேனென்னும் அநுபவம் ஆன்மாவின்மாட்டு நிகழுமாறு என்னையெனின்,—அஃது யான் நிச்சயித்தேன், யான் அபிமானித்தேன் எனப் புத்திமுதலியவற்றின் றொழிற்பாடுகள் ஆன்மாவின்கண்ணவாய் அநுபவமாமாறுபோலாமெனக் கொள்க.

இத்தத்துவங்கள் ஒன்றொன்றாய்ப் பரிணமிப்பனவாயிற் பரிணாமமாவது முன்னின்ற அவத்தையினீங்கி வேறோரவத்தையெய்துவதாகலாற் பால் தயிராய்ப் பரிணமித்தவழியும், தயிர் மோராய்ப் பரிணமித்தவழியும் பாலெனவுந் தயிரெனவுநின்று தத்தம் பயனைத் தருமாறில்லையாயினாற் போல, மாயையிற் கலக்குண்டபாகம் காலம் நியதி கலைகளாய்ப் பரிணமித்தவழி, அது கலக்குண்டபாகமாய்நின்று மயக்குதற்றொழிலைச்செய்யுமென்பதூஉம்; கலை வித்தையாய்ப் பரிணமித்தவழிக், கலையாகவுநின்று

கிரியாசத்தியை விளக்குதலும், பின்னர் மூலப்பகுதியைத் தோற்றுவித்த லுஞ் செய்யுமென்பதூஉம்; வித்தை அராகமாய்ப் பரிணமித்தவழி, அது ஞானசத்தியை விளக்குமென்பதூஉம் அமையுமாறென்னையெனின்,—அற் றன்று; ஈண்டுக் கூறியனவெல்லாந் தத்தம் ஏகதேசத்திற் பரிணும மாதலன்றிப், பால் தயிரானாற்போல முழுவதும் பரிணுமமாதலின்மையின், பரிணுமமாகாதுநின்ற கூற்றனே அவை தத்தங்காரியங்களைச் செய்தலும் அமையுமென்க. ஏனை மூலப்பகுதிமுதலியன பரிணுமமாமாறுஞ் சுத்த மாயையின் விருத்தியாமாறும் இவ்வாறே கண்டுகொள்க.

இவற்றுள், அராகமுதலிய மூன்றும் ஆன்மாவின் இச்சாஞானக்கிரி யைகளை விளக்கிப் போகநுகர்தற்பொருட்டுப் புத்திதத்துவத்திற் செலுத் தியும், நியதிதத்துவம் இதனையே நுகர்கவெனப் போகத்தின்கண்ணே ஆன்மாவை நியமித்து நிறுத்தியும், காலதத்துவம் இதனை இத்துணைப் பொழுதுமாத்திரையின் நுகர்கவெனப் போகத்தின்கண் வரையறுத்துச் செலுத்தியும் இவ்வாறு இவ்வைந்தும் ஆன்மாவுக்கு உபகாரமாய், ஏனைக் கருவிகள்போல அவத்தைப்படுதற்கு ஏதுவாய் இடையிடையே கூடுதலும் நீங்குதலுமின்றி எக்காலத்தும் ஆன்மாவினுடனாய்க் கஞ்சுகம்போலப் பந் தித்துநிற்றலின், இவை பஞ்சகஞ்சுகமென்றுபசரித்துக் கூறப்படுமென்க.

## புருடதத்துவம்.

இனி, இங்ஙனங் கலைமுதலிய பஞ்சகஞ்சுகத்துடன் கூடிப் பொதுமை யாற் போத்திருத்துவமெய்திநின்ற ஆன்மாப் பிரகிருதிமாயைப் போக நுகர்ச்சியின் உன்முகத்திற்கேதுவாகிய அவிச்சைமுதலிய பஞ்சக்கிலேச மென்னும் பும்ஸ்துவமலமுடையனாய்ப் புருடதத்துவமென நிற்பன்.

பஞ்சக்கிலேசமாவன;—அநித்தத்தை நித்தமென்றும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும், தானல்லாதபொருளைத் தானென்றுந் திரியக்காணும் உணர்வாகிய அவிச்சையும், அதுபற்றி அவற் றை யானெனமதிக்கும் ஆங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டுமென் னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கட் செல்லும் ஆசையும், அது பற்றி அதன் மறுதலைக்கட்செல்லுங் கோபமுமென இவை இப்பஞ்சக்கிலே சமே பும்ஸ்துவமலமென்றோதப்படும். இவ்வைந்தினையும் மூன்றாயடக்கிக், * "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற—னாமங் கெடக்கெடு நோய்" என் றார் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனாரும். இவ்வவிச்சைமுதலியன வுடையோர் சகலரேயாகலின், ஏனை விஞ்ஞானகலர் பிரளயாகலர், சகலர் போலப் புருடதத்துவமெனப் பெயர்பெறுமாறு இல்லையென்க.

ஆன்மாப் புருடதத்துவமாதற்குக் காரணங் கலாதியேயமையும் அவிச் சையாதி வேண்டாவென்பார்க்குக் கலாதியுடைய பிரளயாகலரும் பிர கிருதிமாயைப் போகம் நுகர்வதாகிய புருடதத்துவமாவான் செல்வராக லானும், அவிச்சையாதியே யமையுங் கலாதிவேண்டா வென்பார்க்குக்

* திருக்குறள், ௩௬-ம் அதி, மெய்யுணர்தல், ௧௦.

கலாதியாற் கிரியைமுதலிய விளங்கிப் பொதுவகையாற் போத்திருத்துவ மெய்தாதவழிச் சிறப்புவகையாற் போத்திருத்துவமெய்துதல் கூடாதாய் முடியுங்கலானும் இவ்விருவகையுங் கூடிய பொதுமையின் ஆன்மாப் புருடதத்துவமெனப் பெயர்பெற்றுப் பிரகிருதிமாயைப் போகம் நுகர்தற் குரியனுவனென்பது.

அவிச்சை முதலியவைந்தும் முன்னர்க் கூறப்படும் மூலப்பகுதியின் உளவாயினவென் றுணர்க.

அற்றேல், மூலப்பகுதியினுளவாகிய பும்ஸ்துவமலமுடைமைபற்றி ஆன்மாப் புருடதத்துவமென நிற்பது மூலப்பகுதியின் பின்னர்த்தாகலின், அதன்முன்னுக அராகதத்துவத்தைச் சாரவைத்தெண்ணுதல் பொருந்தா தெனின்,—அங்ஙனமாயினுஞ் சங்காரமுறைமையிற் பஞ்சக்கிலேசமாகிய பும்ஸ்துவமலம் நீங்கலே புருடதத்துவத்திற்குச் சுத்தியாகலின், அத்தன் மைத்தாகிய பஞ்சக்கிலேசம் நீங்கல் மூலப்பகுதியைச் சுத்திசெய்த பின் னர்த்தாகலானும், புருடதத்துவத்திஞேதிய புவனங்கள் மூலப்பகுதியின் மேலிடத்துளவாகலான், அவை சுத்திப்படுதலும் மூலப்பகுதியினுளவாகிய புவனங்களைச் சுத்திசெய்த பின்னர்த்தாகலானும், புருடன் மூலப்பகுதியை அநுபவிக்கும் முதன்மையுடைமையானும் மூலப்பகுதிக்கு முன்னுக வைத்தெண்ணப்பட்டதென் றுணர்க.

இனிச், சேதனனுய் நித்தனுகிய ஆன்மாவே புருடதத்துவமெனப் பெயர்பெறுவனெனிற் சடமாகிய தத்துவங்களின்வைத்து எண்ணுதலும், அத்துவசுத்தியிற் றத்துவங்களோடுவைத்துச் சுத்திசெய்தலும், புருடதத் துவம் மாயேயமென்றலும், புருடதத்துவத்திற் புவனங்களுளவென்றலு மாகிய இன்னோரன்னவற்றோடு முரணுமாகலாற் புருடதத்துவமென்பது ஆன்மாவின் வேறுய்க் கலைமுதலிய ஐந்துங்கூடிய பொதுமையிற் றேன்றுவ தாய்ப் போத்திருத்துவத்திற்குக் கருவியாய்ச் சடமாய்நிற்பதொன்றென்பா ரும் உளர். பஞ்சகஞ்சுகமும் பஞ்சக்கிலேசமும் பொதுவகையானுஞ் சிறப்பு வகையானும் போத்திருத்துவத்திற்கு ஏதுவாமென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின் வேறுமோர் கருவிகோடல் மிகையாமாகலானும், போத் திருத்துவத்தின் வேறுய் ஆண்டுத் தரக்கடவதோர் உபகாரமின்மையானும் பயப்பாடின்றி மிகையாய் அங்ஙனம் ஒருகருவிகொண்டதனுற் போந்த தென்னையென்றொழிக.

ஆன்மா வியாபகமாயினும் புருடதத்துவமெனப் பெயர்பெறுதற்கு ஏதுவாகிய போத்திருத்துவநீங்குதல் மூலப்பகுதியின் சுத்திப் பின்னுதல் பற்றி, மூலப்பகுதிக்கும் அராகதத்துவத்திற்கும் இடையேவைத்தெண்ணு தலும், புருடனுதற்கேதுவாய் விசேடித்துநிற்குந் தத்துவங்கள் சடமா தல்பற்றி, அடுத்ததின்றன்மையாய்நிற்கும் புருடதத்துவத்தையுஞ் சட மென்று உபசரித்துக்கூறுதலும் பொருந்துமாறறிக. உண்மையாற்சித்தும்,

உபசாரத்தாற் சடமுமாமென்பதுபற்றியன்றே, * "சித்தசித் தான்மாவொன்று" என வழிநூலாசிரியர் ஓதியதூஉமென்க.

புருடதத்துவத்திற் புவனங்களுளவென்பது "கங்கையினிடைச்சேரி" என்பதுபோல ஆகுபெயராய்ப் புருடதத்துவத்தின் அணிமைக்கணின்ற பிரகிருதிதத்துவத்தினுளவென்று பொருள்கோடற்பாற்றென்பது பவுட்கரத்தின் வகுத்தோதியவாற்றானறிக. இதனானும் புருடனென வேறோர் தத்துவமின்மை உணர்க. வேறோர் தத்துவமாயின் ஏனையபோலப் புருடதத்துவத்திற்கோதிய புவனம் ஆண்டுளவென்றலே அமையும்; ஆகுபெயரான் மற்றொருதத்துவத்தின்கண் உளவென்றோதல் வேண்டாவாகலான் என்க.

போத்திருத்துவம் நீங்குதலே புருடனுக்குச் சுத்தியாகலின், காலாக்கினிருத்திர புவனமுதற் கலையளவும் போத்திருத்துவமுண்மையான், அத்துவசோதனையிற் கலாக்கினிருத்திரபுவனசுத்திமுதற் சிறிதுசிறிதாக நீங்கிச் சூக்குமமாய்வந்து மூலப்பகுதியிற் சீகண்டருத்திரபுவனசுத்திவரையிற் சிறப்புவகையானிகழும் போத்திருத்துவங்கள் பற்றறக்கழிந்து கலாதிசுத்திவரையிற் பொதுவகையானிகழும் போத்திருத்துவமும் பற்றறக்கழியுமென்றுணர்க. இக்கருத்தேபற்றி, † "மெய்வகைய கலாசுத்தி தனினிதற்குஞ் சுத்தி மேவியிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்பும்" என்றார் புடைநூலாசிரியருமெனக் கொள்க. போத்திருத்துவமாவது போகநுகர்வோனுதற்றன்மை.

## மூலப்பகுதி.

இனி, இங்ஙனங் கலைமுதலிய பஞ்சகஞ்சுகமுடையனாய்ப் போகநுகர்ச்சிக்கட் சென்ற ஆன்மாவிற்குக் குணமுதல் நிலமீறாகிய போக்கியங்கள் முறையேயுளவாதற் கேதுவாகக் கலையினின்றும் மூலப்பகுதியென்னுந் தத்துவந் தோன்றிச், சீகண்டருத்திரர்சத்தி கலக்கக் கலக்குண்டு, தன்னினின்றுங் குணதத்துவத்தைத் தோற்றுவிக்கும். அவிச்சைமுதலிய பஞ்சக்கிலேசம் என்னும் பும்ஸ்துவமல விளைவிற்கும் இதுவே காரணமெனக்கொள்க.

போக்கியரூபமாய்நின்ற தத்துவப்பிரபஞ்சங்கட்கெல்லாம் இது மூலகாரணமாதல்பற்றி மூலப்பகுதியென்றும், பிரகிருதிமாயையென்றும், பிரதானமென்றும், மானென்றும், முக்குணங்களும் வியத்தமாய்விளங்காது மயிலண்டசலத்திற் பஞ்சவன்னம்போலச் சூக்குமமாய்நின்ற அவத்தையுடைமைபற்றி அவ்வியத்தமென்றும் வழங்கப்படும்.

சாங்கியநூலார் முக்குணங்கள் மிக்குங் குறைந்தும் நில்லாது தம்முட்சமமாய்நின்ற அவத்தையே மூலப்பகுதியென்றும், அதுவே காரியங்களெல்லாவற்றிற்கும் முதற்காரணமாய் நித்தமாய் நிற்பதன்றி, அஃதொன்றன்காரியமாதலில்லையென்றுங் கூறுவர். அது பொருந்தாதென்பது

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், சுகூ. † சிவப்பிரகாசம், பொது, உகூ.

* மேற்காட்டினுமாகலின், முக்குணங்களும் விளங்கித் தம்முட் சமமாய் நின்ற அவத்தையிற் குணதத்துவமாவதல்லது மூலப்பகுதியாகாதெனவும், முக்குணங்களும் விளங்குதலின்றிச் சூக்குமமாய்நின்ற அவத்தையே மூலப்பகுதியாமெனவுந் தெரிந்துணர்ந்துகொள்க.

அற்றேல், குணதத்துவமே கலையினின்றுந் தோன்றியதெனலமையும். இடையே மூலப்பகுதியொன்று உண்டென்பதற்குப் பிரமாணமில்லையாலோவெனின்,—அற்றன்று; காரியத்திற் சிறப்புவகையான் நிகழுங் குணங்கள் காரணத்திற் பொதுவகையான் நிகழ்ந்தன்றி உளவாகாவென்பது நியமமாகலின், சத்தமுதலிய குணஞ் சிறப்புவகையான் நிகழும் பஞ்சபூதங்கள் அவை பொதுவகையாற் சூக்குமமாய்நிற்கும் பஞ்சதன்மாத்திரைகளை இடையிட்டன்றிப் பூதாதியாங்காரத்திற் றோன்றாமையும், பெயர் சாதி முதலிய உணர்வு சிறப்புவகையான் நிகழுஞ் சவிகற்பக்காட்சி அவை பொதுவகையாற் சூக்குமமாய்நிகழும் நிருவிகற்பக்காட்சியை இடையிட்டன்றிப் போதத்திற் றோன்றாமையும், † "உருவெவையுந் தெரித்துச்" சிறப்புவகையான் நிகழும் மத்திமைவாக்கு அவை பொதுவகையாற் சூக்குமமாய் நிகழும் பைசந்தியை இடையிட்டன்றிச் சூக்குமையிற் றோன்றாமையுமாகிய இன்னோரன்னவைபோலச், சுகதுக்கமோகரூபமாய்ச் சிறப்புவகையானிகழுங் குணதத்துவமும் அவற்றை "அடைவுபட உள்ளொடுக்கிச்" சூக்குமமாய்ப் பொதுவகையான் நிகழ்வதொன்றனை இடையிட்டன்றிக் கலையினின்றுந் தோன்றுதல் கூடாமையான் அத்தன்மைத்தாகிய மூலப்பகுதி உண்டென்பது ஆகமவளவை மாத்திரையானன்றி அருத்தாபத்தியளவையானும் உணர்ந்துகொள்க.

அற்றேல், மூலப்பகுதி கலையினின்றுந் தோன்றியதென்னாது மாயையினின்றே தோன்றியதென்றற் படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; அங்ஙனமாயிற் கலையுள் அடக்கமின்மையின், கலையான் விளங்குங் கிரியாசத்திக்கு நேரே போக்கியமாதலின்றிக் காலநியதிகள்போல வேறோராற்றான் ஆன்மாவிற்கு உபகாரமாவதாய் முடியும். அது கூடாமையானும், கேவலமாய்நிற்குங் கலையைநோக்க முக்குணங்களை அடைவுபடவொடுக்கி, அவ்வியத்தமாய்நிற்கும் அவத்தை தூலமாகலானும், அத்தன்மைத்தாகிய மூலப்பகுதி மாயேயமாகிய கலையினின்றுந் தோன்றுதலே பொருத்தமுடைமையறிக.

மூலப்பகுதி அவ்வியத்தமாய் நிற்பதாகலின், அதன்கட் கூறப்படும் புவனங்களுங் குணதத்துவமத்தகத்தின் உளவாமெனக் கொள்க.

## குணதத்துவம்.

இனி, இங்ஙனம் அவ்வியத்தமாய்நின்ற மூலப்பகுதி வியத்தமாதற் பொருட்டு ஒன்றாய்நின்ற பாலையும் நீரையும் பகுக்கும் ஓதிமம்போலச் சீகண்டருத்திரர்சத்தி கலக்கக் கலக்குண்டு முக்குணமாய்ப் பகுப்புற்று விளங்கித் தம்முட் சமமாய்நின்ற அவத்தை குணதத்துவமெனப்படும்.

* பக்கம், கஉஉ.　　† சிவப்பிரகாசம், பொது, உசு.

குணங்கள் மூன்றுயினுந் தொழிற்பாட்டின்கண் ஒருங்குவிரவிநின்று ஒருகாரியத்தைச் செய்தல்பற்றிக் குணதத்துவம் ஒன்றெனவைத்தெண்ணப் படுமென உணர்க.

சாத்துவிகமுதலிய மூன்றும் ஆன்மாக்கடோறும் மிக்குங் குறைந்தும் விரவி முறையே சுகதுக்கமோகங்கட்கு ஏதுவாய்ப் பிரகாசமுதலிய விருத்தி களையுடையவாய் நிற்கும்.

குணதத்துவம் மூலப்பகுதியின் விருத்தியேயன்றி ஏனையபோலப் பரி ணமமன்மையான், மூலப்பகுதியோடு ஒன்றுகவைத்தோதவும்படுமெனக் கொள்க.

புத்திதத்துவமுதலியனவுங் குணரூபமேயாகலின், அவற்றோடு இவற் றிடை வேற்றுமையென்னையெனின்,—முக்குணமும் விளங்குதலின்றித் தம் முட் சமமாய்நின்ற அவத்தையின் மூலப்பகுதியும், விளங்கித் தம்முட் சம மாய்நின்ற அவத்தையிற் குணதத்துவமும், அவை சமமாகாது தம்முண் மிக்குங் குறைந்தும் பரிணமித்துநின்ற அவத்தையிற் புத்திதத்துவமுதலி யனவுமாமாகலின், இவை தம்முள் வேற்றுமையென்க.

அற்றேல், சாத்துவிகமுதலியவற்றுள் ஒன்றுமிக்கவழி, மற்றையிரண் டுங் குறைந்து நிற்பனவன்றி மூன்றுஞ் சமமாய்நிற்றல் யாண்டுமின்மையிற் சமமாய்நிற்கும் அவத்தைபற்றிக் குணதத்துவமொன்று உண்டென்பதற் குப் பிரமாணம் இல்லையாலெனின்,—அற்றன்று; தத்தமியல்பிற் சமமாய் நிற்பவற்றிற்கன்றித் தம்முண் மிகுதலுங் குறைதலும் பெறப்படாமையான் அதுபற்றிச் சமமாய்நிற்குங் குணதத்துவமொன்று உண்டெனக் கொள் ளப்படுமென்க.

## புத்திதத்துவம்.

இனிக், கலைமுதலியவற்றானும் பிரகிருதி குணங்களானும், பொதுவகை யானுஞ் சிறப்புவகையானும் போத்திருத்துவமெய்திநின்ற புருடனுக்குக் குணதத்துவத்தினின்றுஞ் சாத்துவிகத்தான் மிக்கும், ஏனையிரண்டுகுணங் களாற் குறைந்தும் பரிணமித்துத் தோன்றி, வித்தையிற் பொதுமையான் விளங்கிய ஞானசத்தியை அவ்வவ்விடயந்தோறுஞ் சிறப்புவகையான் விளக்கி அவற்றைப் பெயர் சாதி முதலியவற்றான் நிச்சயிப்பிக்குங் கருவியாயும்; அங் ஙனம் நிச்சயித்தபின்னர் அவ்வவ்விடயவடிவிற்றாய்ப் பரிணமித்துத் தோன் றுஞ் ஞானமாய்நின்று, ஆன்மாவிற்குப் புலனுயபெத்த போக்கியமாயும்; அங்ஙனமாகலாற் புருடனாற்செய்யப்படும் இருவினைப்பயனாகிய புண்ணிய பாவங்கட்கெல்லாஞ் சிறப்புவகையாற் பற்றுக்கோடாயும்; அவற்றான் உள வாகிய தன்மமுதலிய பாவகமெட்டும், அவற்றினுைய சித்திமுதலிய பிரத்தி யயங்கள் ஐம்பதும், அவற்றின் விரிவுகளுமாகிய எல்லாவற்றிற்கும் இட மாயுநிற்பது புத்திதத்துவமென் றுணர்க.

நிச்சயித்தற்றொழில் பிறிதொன்றுற் பெறப்படாமையின், அருத்தா பத்தியளவையான் இத்தன்மைத்தெல்லாமுடைத்தாகிய புத்திதத்துவ மொன் றுண்டெனத் துணியப்படும்.

நிச்சயித்தலாவது யாதெனின், கூறுதும்:—ஆன்மா அந்தக்கரணங்களோடு இயைபின்றி, உடனுய்நிற்கும் வித்தைமாத்திரையே கருவியாகக் கொண்டு வாயில்களை அதிட்டித்தவழி, எதிரே தோன்றுவதோர் விடயத்திற் பொதுவகையான் இஃதோர் பொருளென்று அறிதலாகிய நிருவிகற்பக் காட்சி முற்படநிகழுமன்றே; அதன்பின்னர் ஆன்மா மனத்தை அதிட்டிப்ப, மனமானது சித்தமாய்நின்று இஃது யாதாகற்பாற்றென ஒன்றைத் தூக்கிச் சிந்தித்துப் பின்னர் இது குற்றியாகற்பாற்று மகனாகற்பாற்றென ஒன்றைச் சங்கற்பித்தும், அஃதாமோ அன்றோவென ஐயுற்றும் நிச்சயித்தற்கேதுவாகிய வேட்கையை விளைத்துநிற்கும். அதன்பின் ஆன்மா ஆங்காரத்தை அதிட்டிப்ப, ஆங்காரமானது குற்றியென்றுதல், மகனென்றுதல் ஒன்றை நிச்சயிப்பேன் யான் என்னும் அகந்தையைவிளைத்து, நிச்சயித்தற்கண் முயலும் ஊக்கத்தை உண்டாக்கி, அதற்கேதுவாகப் பிராணவாயுவையும் இயக்கிநிற்கும். அதன்பின் ஆன்மாப் புத்தியை அதிட்டிப்பப், புத்தியானது இவன் மகன், இது குற்றி, இது குடம், இஃது ஆடையென அவ்வப் பொருள்களைப் பெயர் சாதி முதலியனபற்றிச் சிறப்புவகையாற் றுணிதலாகிய சவிகற்பக்காட்சியே ஈண்டு நிச்சயித்தலெனப்படு மென்க.

ஈண்டுக் கூறியவாற்றானே வாயின்முதலியவற்றின் றொழிற்பாடுகட்குத் தம்முள் வேறுபாடும், அவை ஒன்றற்கொன்று ஒருதலையான் ஏதுவாமாறுங் கண்டுகொள்க.

சவிகற்பக்காட்சி புத்திக்காட்சியேயாயினும், முதற்கண் மனத்தின் றொழிற்பாடு ஏதுவாகவைத்து முறையேவருதல்பற்றி ஆகுபெயரான் மானதக்காட்சியெனப்படும்; * "புந்தியை மனமதென்று மனமது புந்தி யென்றும்......வந்திடும்" என்றோதுதலின். இஃதுணராது மானதக்காட்சி என்றதேகொண்டு பெயர் சாதி முதலியவற்றான் நிச்சயித்தலே மனத்தின் றொழிற்பாடாகிய சங்கற்பமென்றும், என்னல் இது செய்யற்பாற்றென நிச்சயித்தல் புத்தியின் றொழிற்பாடென்றும் மயங்கிக்கூறுவாரும் உளர். பெயர் சாதி முதலியவற்றாற் றுணிவதாகிய நிச்சயித்தற்குச் சங்கற்பமென்னும் வழக்கம் யாண்டுமின்மையானும், ஐயத்தைச் செய்யும் மனம் அதற்கு மறுதலையாகிய நிச்சயத்தினையுஞ் செய்தல் கூடாமையானும், கூடுமென்பார்க்கு நியமம் வேண்டாமையின், ஒருகருவியே எல்லாத்தொழிற்பாட்டிற்கும் அமையுமெனப்பட்டு ஏனைக்கருவிகளெல்லாம் மிகையாய்முடியுமாகலானும், இஃது இன்னதாகற்பாற்றென்னுஞ் சங்கற்பநிகழ்ந்தன்றி ஐயப்பாடு நிகழாமையின், அஃது ஒருதலையான் வேண்டப்படுதலானும், அது வேறொரு கருவியின் றொழிற்பாடாதல் அமையாமையானும், என்னல் இது செய்யற்பாற்றென்பது யான் இதனைச் செய்வேனென்னும் அகந்தையின் வேறன்மையான் அஃது ஆங்காரத்தின் றொழிலாவதன்றிப் புத்தியின்றொழிற்பாடன்மையானும் அங்ஙனங் கூறுதல் புத்திமுதலியவற்றிற்குத் தம்முள் வேற்றுமையறியாதார் கூற்றேயாமென் றொழிக.

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், உ௮.

அல்லதூஉம், புறப்பெருள் விடயத்தைப் பெயர் சாதி முதலியவற்றான் நிச்சயித்த ஞானமே சுகதுக்கமோகவடிவிற்றாய்த் தன்வேதனைக்காட்சியின் ஆன்மாவுக்கு விடயமாமென்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையின், அது மனத்தின் றொழிலாயவழிப், புத்திதத்துவம் போக்கிய மென்பதூஉம், போக்கியமாதல்பற்றி இருவினைக்குச் சிறப்புவகையாற் பற்றுக்கோடு புத்தி தத்துவமென்பதூஉம், தன்மம் ஞானம் முதலாயினவெல்லாம் அதன்கண்ண வென்பதூஉம் பொருந்துமாறு யாண்டையதென்க.

இனி, நையாயிகர்முதலியோர் தன்மம் ஞானம் முதலாயினவற்றை ஆன்மாவின் குணமென்பர். தோன்றிநின்று அழிவனவாகிய குணங்கள் சடப்பொருளுக்கன்றிச் சேதனப்பொருளுக்கேலாமையானும், ஏற்குமெ னிற் குணகுணிகளின் இயல்பு * முன்னர்க் காட்டப்படுமாகலிற் குண மழியக் குணியுமழியுமாகலின், ஆன்மா விகாரியாய் அழிவெய்துமாகலா னும், அது பொருந்தாதென்பதூஉம்; இதனானே அநுபவித்தபொருளைப் பின் நினைத்தற்கேதுவாகிய வாசனைக்குப் பற்றுக்கோடாவது புத்திதத்துவ மேயன்றி, ஆன்மாவன்றென்பதுஉம் அறிக.

இதனானே ஆன்மாவே இருவினைக்குப் பற்றுக்கோடென்பார் மதமும் மறுக்கப்பட்டவாறு கண்டுகொள்க.

அஃதேல், புத்திதத்துவஞ் சடமாகலின், அதன்கண் ஞானமுண்டா மென்றல் மலைவாம்பிறவெனின்,—ஆகாது; புத்திதத்துவஞ் சடமாயினுஞ் சாத்துவிககுணத்தான் மேற்பட்டுத் தோன்றியதாகலின், சேதனப்பொரு ளாகிய ஆன்மாவிற்கு எதிர்முகமாயவழிக், கண்ணாடியின் நிழல்போல அதன்கண் எதிர்விம்பமாய் ஞானமுண்டாதல் பொருந்துமாகலின்.

### புத்திகுணபாவகங்கள்.

இனிப், புத்தியின்குணங்களாகிய பாவகம் எட்டனுள், தன்மம் ஞானம் வைராக்கியம் ஐசுவரியமென்னும் நான்குஞ் சாத்துவிககுணத்தான் உளவாவன. அதன்மம் அஞ்ஞானம் அவைராக்கியம் அநைசுவரியமென் னும் நான்கனுள், அவைராக்கியமொழித்தொழிந்த மூன்றுந் தாமதகுணத் தான் உளவாவன. அவைராக்கியமாகிய அராகமொன்றும் இராசதகுணத் தான் உண்டாவதென்றறிக. மோகத்திற்கேதுவாதல்பற்றி, ஐசுவரிய முந் தாமதகுணத்தானுவதெனச் சிலவாகமங்களிற் கூறப்படும். தன்மமுத லியவற்றிற்குப் பொருள், அறம் அறிவு வெறுப்பு செல்வம் பாவம் அறி யாமை விருப்பு வறுமையென மொழிபெயர்த்துக்கூறிக் கண்டுகொள்க.

### தன்மம்.

அவற்றுள், தன்மமாவது, இயமம் நியமம் என்று இருவகைத்து. அவற்றுள் இயமம், கொல்லாமை மெய்ம்மை கள்ளாமை பிரமசரியம் அகந் தூய்மை என்று ஐவகைப்படும். நியமம், வெகுளாமை வழிபாடு புறந் தூய்மை உவகை செப்பம் என்று ஐவகைப்படும். இப்பத்தும் வேள்விமுத லிய அறஞ்செய்வார்க்கு ஒருதலையான் வேண்டப்படும் அங்கமென்றுணர்க.

* தன்மாத்திரையினியல் கூறும்வழிக்காண்க.

கண்ணோட்டம் அறிமடம் ஒப்புரவு நட்பு நடுவுநிலைமை முதலியனவெல்லாம் இவற்றுள்ளே அடங்கும். இவற்றினியல்பெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும்; விரிந்தநூலுட் காண்க.

## ஞானம்.

இனி, ஞானம் எண்வகைப்படும்:—அவற்றுள், உம்மையின்வாசனைபற்றி முன்னொடுபின் மலைவின்றிப் பொருந்துமாற்றாற் பொருள்களை ஆராய்ச்சி செய்து ஊகித்தறியும் ஞானம் ஒன்று. ஆத்தியான்மிகமுதலிய மூவகைத் துக்கத்தான் மடிவுவந்துழி நிகழ்வனவாகிய ஞானம் மூன்று. நட்டோர் கூறும் * வாயுறைமொழியான் வரும் ஞானம் ஒன்று. சாத்திரங்களைத் தானே யோதி உணர்தலானும், ஆசிரியனைவழிபட்டு ஓதியுணர்தலானும் வரும் ஞானம் இரண்டு. தானமுதலிய நல்வினைகளான்வரும் ஞானம் ஒன்று. ஆக ஞானவகை எட்டுங் கண்டுகொள்க. இங்ஙனம் ஞானம் எண்வகைப்படுதலின், அதனான்வருஞ் சித்தியும் எண்வகைப் படுத்து ஓதப்படும். சித்தியெனினும் முத்தியெனினும் ஒக்கும்.

இங்ஙனங் காரணவேறுபாடுபற்றி எண்வகைப்பட்ட சித்திகள் பூதமுதற் புருடதத்துவம்வரையினிற்கும் மதவேறுபாடுபற்றி ஒரோவொன்று பப்பத்தாய் விரியான் எண்பதாமெனக் கொள்க.

அவையாவன:—

உலகாயதர் பூதக்கூட்டரவாகிய உடம்பே ஆன்மாவென நிற்றலிற் பூதங்களுக்கு மேலுள்ளதத்துவங்களை அறியும் ஞானமின்மையின், அவர் பூதவுலகத்தின் முத்தியைப்பெறுவர். பிராணவாயுவை ஆன்மாவெனநிற்குங் கவுளரும் ஆண்டே முத்தியைப் பெறுவர்.

சோதிடநூலார் நாண்மீனுலகத்திற் சேறலே முத்தியெனநிற்றலின், அவரும் பூதவுலகத்தின் முத்தியைப் பெறுவர்.

மிருதிநூலர் ஐம்பெரும்பூதத்திற்குக் காரணம் யாது அதுவே பிரமமென நிற்றலின், ஐம்பெரும்பூதத்திற்குக் காரணந் தன்மாத்திரையேயாகலின், அதற்குமேலுள்ள தத்துவங்களை உணராமையான், அவர் தன்மாத்திரையுலகத்தின் முத்தியைப் பெறுவர்.

உலகாயதரில் ஒருசாரார் இந்திரியமே ஆன்மாவெனவும், சித்தமே ஆன்மாவெனவும், மனமே ஆன்மாவெனவும், ஆங்காரமே ஆன்மாவெனவும் நிற்றலின், அவர் அவ்வவுலகத்தின் முத்தியைப் பெறுவர்.

புத்தர் நையாயிகர் முதலியோர் முறையே புத்திதத்துவத்தின் பரிணமமாகிய ஞானமே ஆன்மாவெனவும், ஆன்மாவின் குணமெனவும் நிற்றலின், அவர் புத்திதத்துவவுலகத்தின் முத்தியைப் பெறுவர்.

---

* வாயுறைமொழியாவது, அருந்துங்காற் கைப்புடைத்தாய்ப் பின்னர் இதஞ்செய்யும் மருந்துபோலக் கேட்குங்கால் வெய்யதாய்ப் பின்னர் உறுதிபயக்கும் மொழி. இதனை, "வாயுறைவாழ்த்தே" என்னுஞ் சூத்திரத்து நச்சினார்க்கினியருரையினுங் காண்க. தொல், பொருள். அதி. சஉச.

சமணர் உண்டுமாம் இல்லையுமாம் என்றற்றொடக்கத்து எழுவகையான் அநேகாந்தம் பேசி நிற்றலின், மிக்குங் குறைந்தும் நிற்றல்பற்றி அங்ஙனங் கூறுதலின், அதற் கேற்புடையது குணதத்துவமாகலின், அதனை ஆன்மா வென மயங்கிக்கொண்டாரெனப்படுதலின், அவர் குணதத்துவவுலகத்தின் முத்தியைப் பெறுவர்.

பாஞ்சராத்திரிகள் நிலமுதலிய இருபத்துநான்கு தத்துவத்திற்கு மேலுள்ளபொருள் நாராயணனென்பர். இருபத்துநான்குதத்துவத்திற்கு மேலுள்ளது மூலப்பகுதியேயாகலின், அதனை மயக்கத்தான் நாராயண னெனக் கொண்டாரென்பதன்றிப் பிறிதின்மையின், அவர் மூலப்பகுதியுலகத்தின் முத்தியைப் பெறுவர்.

ஏகான்மவாதிகள் பொதுவகையானுஞ் சிறப்புவகையானும் போத்திருத்துவமெய்திநின்ற புருடதத்துவத்தின் முத்தியைப் பெறுவர். சாங்கியர் பொதுவகையாற் போத்திருத்துவமெய்திநின்ற புருடதத்துவத்தின் முத்தியைப்பெறுவர்; புருடதத்துவத்திற்கு மேலுள்ளபொருள்களை அறியாமையானென்க.

இவ்வாறே புறப்புறச்சமயத்தாரும், புறச்சமயத்தாரும் அவ்வத்தத்துவங்களின் முத்தியைப் பெறுமாறு உய்த்துணர்ந்துகொள்க. ஈண்டுவிரிப்பிற் பெருகும்.

அதுவதுவே முத்தியெனவும், அதுவதுவே சித்தாந்தமெனவும் நிற்பார்க்கு, அவரறிந்த வெல்லையளவுஞ் சேறல் கூடுமாகலின், அறியாதவெல்லைக்கட் செல்லமாட்டாமையின், அவ்வத்தத்துவங்கள் அவரவர்க்கு முத்தித்தானமாயின என்க.

பூதமுந், தன்மாத்திரையும், வாயிலும், சித்தமும், மனமும், ஆங்காரமும், புத்தியும், குணமும், அவ்வியத்தமும், புருடனுமெனப் புறப்புறச்சமயத்தாரும் புறச்சமயத்தாரும் எய்துஞ் சித்தித்தானம் பத்தாகலின், சித்திகளும் ஒரோவொன்று பப்பத்தாய் விரியான் எண்பதாயினவாறு காண்க.

அற்றேல், புருடதத்துவத்திற்கு மேலும் அராகமுதல் மோகினியீறாகிய தத்துவங்களும், சுத்தவித்தைமுதற் சிவதத்துவமீறாகிய தத்துவங்களும் அதுவதுவே முத்தியெனநிற்கும் அகப்புறச்சமயத்தார்க்கும் அகச்சமயத்தார்க்கும் முறையே முத்தித்தானமாகலின், அவற்றையும் உடன்கூட்டியெண்ணித் தொகைகொள்ளாமை மலைவாம்பிறவெனின்,—ஆகாது; புத்திதத்துவத்தின் பரிணமமாகிய ஞானத்தானெய்துஞ் சித்திகண்மாத்திரையே ஈண்டு எடுத்துக்கொண்டமையானென்க.

குணரூபமாகிய புத்திதத்துவத்தின் தொழிற்பாடு பிரகிருதிபுருடனுக்கு மேற் செல்லமாட்டாமையின், ஆண்டெய்துஞ் சித்திகட்குக் காரணம் முறையானெய்தும் பலவேறுவகைப்பட்ட சத்திநிபாதமேயாமென உணர்க.

இங்ஙனமாகலாற் புத்தியின்குணமாகிய ஞானத்தானெய்தும் பிரத்தியயஞ் சித்தியெனத் தொகையான் ஒன்றும், ஊகித்தன்முதலிய காரணவேறு

பாடுபற்றி வகையான் எட்டும், பூதமுதலிய தானவேறுபாடுபற்றி விரியான் எண்பதுமாயவாறு கண்டுகொள்க.

வைராக்கியம்.

இனி, வைராக்கியங் காரணவேறுபாட்டாற் பத்துவகைப்படும். அவையாவன:—

பிணி முதலியவற்றான் வருந்துவோரை நோக்கியவழி, எம்முடம்பும் இவ்வியல்பிற்றன்றே; இதன்பொருட்டு உண்டிமுதலியன தேடி வருந்துதலாற்பயனென்னையென வரும் வெறுப்பு ஒன்று.

ஆத்தியான்மிகமுதலிய மூவகைத் துக்கத்தான்வரும் வெறுப்பு மூன்று.

பொருளை ஈட்டலுங் காத்தலு முதலியவற்றானெய்தும் வருத்தத்தை நோக்கி வரும் வெறுப்பு ஒன்று.

நட்டார்முதலியோரை இழந்தவழி அழுது வருந்தி இங்ஙனம் வருந்துதற்குக் காரணம் நட்புச்செய்தலன்றே யென்று எண்ணுதலான் வரும் வெறுப்பு ஒன்று.

காமுகன் தன்மனையாண்மாட்டு வெறுப்பு நிகழ்தற்கு ஏதுவாயதொன்றனைக் கண்டுழி அதனான்வரும் வெறுப்பு ஒன்று.

ஒருநாளையுண்டி சுருங்கினும் வாட்டமுறுவதாகிய இவ்வுடம்பு எத்துணைக்காலம் ஓம்பினும் நிரம்புமாறில்லையென்று எண்ணுதலான் வரும் வெறுப்பு ஒன்று.

இழிந்தோர்பாற் சென்றுநின்று இரத்தன்முதலியவற்றிற்கு மனஞ் செல்லாமையான் வரும் வெறுப்பு ஒன்று.

இவற்றுளொன்றானும் இன்றி உம்மைப்பிறப்பிற் செய்த தவவிசேடத்தான் வரும் வெறுப்பு ஒன்று. ஆக வைராக்கியவகை பத்துங் கண்டுகொள்க. இன்னும் வெவ்வேறு காரணங்களெல்லாம் இவற்றுள்ளே அடங்கும்.

இப்பத்துவகை வைராக்கியத்தான்வருந் துட்டியும் அவற்றாற் பத்துவகைப்படும். துட்டியாவது வெறுப்பு நிகழ்ந்தமையான் உடம்புமுதலியவற்றை ஓம்புதற்பொருட்டு வருங் கவலையின் நீங்கி மகிழ்ச்சியெய்துதல். இப்பத்துவகைத் துட்டியும் மேற்கூறிய பூதமுதலிய முத்தித்தானம் பத்திற்கும் ஏதுவாதல்பற்றி, ஒரோவொன்று பப்பத்தாய் விரியான் நூறுமெனக்கொள்க.

ஐசுவரியம்.

இனி, ஐசுவரியம் அணிமா மகிமா முதல் எட்டுவகைப்படும். அவற்றுள், அணுவினும் அதிசூக்குமவடிவுற்று நிற்றல் அணிமாவென்னுஞ் செல்வம்.

மேருவினும் மிகப்பெரிய வடிவுற்றுநிற்றல் மகிமாவென்னுஞ் செல்வம்,

சேறுமுதலியவற்றின் இயங்கினும் அழுந்துதலின்றிக் காற்றினுங் கடு நடைத்தாய் மெல்லியவடிவுற்றுநிற்றல் இலகிமாவென்னுஞ் செல்வம்.

மனத்தான் விழையப்பட்டன அனைத்தும் விழைந்தவாறே பெறுதல் பிராத்தியென்னுஞ் செல்வம்.

சங்கற்பமாத்திரையான் ஆயிரம் மகளிரைப்படைத்து அவ்வாயிர மகளிரோடும் ஆயிரம்வடிவாய்நின்று கிரீடித்தல் பிராகாமியமென்னுஞ் செல்வம்.

பிரமன்முதலியோர்மாட்டுந் தன்னாணைசெலுத்தி அவராற் பூசிக்கப் படுதல் ஈசத்துவமென்னுஞ் செல்வம்.

உலகமுழுவதையுந் தன்வசமாக்குதலும், உலகத்தை உண்டாக்குதலும் வசித்துவமென்னுஞ் செல்வம்.

விடயங்களை நுகர்ந்தும் அவற்றிற் றொடக்குண்ணாமை கரிமாவென் னுஞ் செல்வம்.

இவ்வெண்வகைச்சித்தியுள் முன்னையமூன்றும் உடம்பானும், பின்னைய வைந்தும் மனமுதலியவற்றானும் பெறப்படுவனவென்று உணர்க.

பேய்களுக்கு இவ்வெட்டும் நிலவுலகத்தை வியாபித்துக் கூறியவாறே உள்ளன. அரக்கருலகத்துள்ளார்க்கு நீருலகத்தையும் வியாபித்து இரு மடங்கும், இயக்கருலகத்துள்ளார்க்குத் தீயுலகத்தையும் வியாபித்து மும் மடங்கும், காந்தருவவுலகத்துள்ளார்க்கு வாயுவுலகத்தையும் வியாபித்து நான்மடங்கும், இந்திரவுலகத்துள்ளார்க்கு ஆகாயவுலகத்தையும் வியா பித்து ஐந்துமடங்கும், சோமலோகத்துள்ளார்க்கு மனத்தினையும் வியா பித்து ஆறுமடங்கும், பிரசாபதியுலகத்துள்ளார்க்கு ஆங்காரத்தையும் வியா பித்து எழுமடங்கும், பிரமலோகத்துள்ளார்க்குப் புத்தியையும் வியாபித்து எட்டுமடங்கும் ஏற்றமாயுள்ளனவாகலான், எண்வகைச் செல்வமும் இங் ஙனம் ஒரோவொன்று எவ்வெட்டாய் விரியான் அறுபத்துநான்காமெனக் கொள்க.

இருகூற்றுப் பத்துவகைப்பட்ட தன்மமுடையார்க்கு எண்வகை ஞானத்துள் ஒருஞானம் உண்டாம்; ஞானத்தானே பத்துவகை வைராக்கி யத்துள் ஒருவைராக்கியம் உண்டாம்; வைராக்கியத்தானே எண்வகைச்செல் வமும் உளவாம்; ஆகலின், இவை ஒன்றற்கொன்று ஏதுவாமாறு அறிக.

### அதன்மம்.

இனி, இவ்வணிமாமுதலிய ஐசுவரியம் பெற்றார் அதனாற் செருக் கெய்தி யோகநெறியைக் கைவிட்டு விடயங்களிற் றுவக்குண்டுகிடப்பாராக லின், அதுகாரணமாக அதன்மமுண்டாம். அதுவும் பத்துவகைப்படும். அவையாவன:—கொல்லாமைமுதலிய பத்துவகைக்கும் மறுதலையாகிய, கொலை பொய் களவு பிறர்மனைநயத்தல் அழுக்காறு வெகுளி வழிபடாமை மாசுண்டல் செற்றம் கோட்டம் என்பனவாம்.

அஞ்ஞானம்.

இனி, அதன்மத்தால் அஞ்ஞானமுண்டாம். அது, தமமும், மோகமும், மாமோகமும், தாமிசிரமும், அந்ததாமிசிரமுமென்று ஐவகைப்படும்.

அவற்றுள்:—தமமாவது, ஆன்மாவல்லதனை ஆன்மாவென மயங்குதல். அதுவும் மதவேறுபாட்டான் மேற்கூறிய பூதமுதலிய பத்தினையும்பற்றி நிகழ்ந்து பத்துவகைப்படும்.

மோகமாவது:—அணிமாமுதலிய எண்பெருஞ்செல்வமே மேலாகிய உறுதிப்பயனென மயங்குதல். அதுவும் அணிமாமுதலிய எட்டினும் நிகழ்ந்து எட்டுவகைப்படும்.

மாமோகமாவது:—விருப்புச்சத்தம் வெறுப்புச்சத்தமுதலிய பத்தினும் இதுவே பொருளென மயங்குதல்.

தாமிசிரமாவது:—உயர்ந்தனவும் இழிந்தனவுமாகிய இருகூற்றுச் சத்தமுதலிய பத்தினையும், அணிமாமுதலிய எண்பெருஞ்சித்தியினையும் பெறுதற்குரிய சாதகஞ்செய்துழி, அவை பெறாமையானுதல் பெற்றிழத்தலானுதல் வருந்துதல். அஃது அப்பதினெட்டும்பற்றி நிகழ்ந்து பதினெட்டு வகைப்படும்.

அந்ததாமிசிரமாவது:—இருகூற்றுச் சத்தமுதலிய பத்தினையும், அணிமாமுதலிய எட்டினையும் ஒருயோகி அநுபவிக்குங்காலை, அவற்றான்வரும் இன்பத்தினை அவனினும் மேற்பட்ட மற்றொருயோகி கவர்ந்துழி, அதனான் வருந்துதல். அதுவும் அப்பதினெட்டும்பற்றி நிகழ்ந்து பதினெட்டு வகைப்படும்.

இங்ஙனந் தமத்தின்வகை பத்தும், மோகத்தின்வகை எட்டும், மாமோகத்தின்வகை பத்தும், தாமிசிரத்தின்வகை பதினெட்டும், அந்ததாமிசிரத்தின்வகை பதினெட்டுமாக விரியான் அஞ்ஞானம் அறுபத்துநான்காமென்று உணர்க.

அவைராக்கியம்.

இனி, அஞ்ஞானத்தான் அவைராக்கியமாகிய ஆசையுண்டாம். அது வைராக்கிய மறுதலையாய், அவ்வாற்றான் நூறுவகைப்படும்.

இனி, அஞ்ஞானம் அறுபத்துநான்கும், அவைராக்கியம் நூறும், மனமும் ஆங்காரமும் வாக்காதியைந்துஞ் சுரோத்திராதியைந்துமென்னும் பன்னிரண்டுமாகிய நூற்றெழுபத்தாறுனும் அனைசுவரியத்திற்கேதுவாகிய அசத்தியென்னும் வலியின்மை உண்டாம். அவ்வசத்தி அவ்வக்காரண வேறுபாட்டான் நூற்றெழுபத்தாறுமாறு கண்டுகொள்க.

அனைசுவரியம்.

இனி, அவ்வசத்தியானே அனைசுவரியமென்னும் வறுமை உண்டாம். அஃது அணிமாமுதலிய எட்டுக்கும் மறுதலையாய் எட்டுவகைப்படும்.

இங்ஙனம் முறையானே தன்மவகைபத்தும், ஞானவகை எண்பதும், வைராக்கியவகை நூறும், ஐசுவரியவகை அறுபத்துநான்கும், அதன்மவகை பத்தும், அஞ்ஞானவகை அறுபத்துநான்கும், அவைராக்கியவகை நூறும், அநைசுவரியவகை எட்டுமாக நானூற்று முப்பத்தாறும், அசத்திவகை நூற்றெழுபத்தாறும் உளப்படப் புத்திதத்துவவிருத்தி விரியான் அறுநூற்றுப்பன்னிரண்டாமென் றுணர்க.

அங்ஙனம் அநைசுவரியமாகிய வறுமையுடையானுக்கு மீளத் தன்மத்திற் கருத்துச் செல்லும். இங்ஙனமாகலின், புத்திதத்துவமாகிய சக்கரத்தில் தன்மமுதலிய பாவகமாகிய ஆரங்கள் எட்டினது முடிவுகாணமாட்டாது * மறித்து மறித்தும் உழிதருவன் புருடனென்று அறிக.

## ஆங்காரதத்துவம்.

இனிப், புத்தி தத்துவத்தான் விடயத்தை நிச்சயித்தல், இஃது இன்னதென நிச்சயிப்பேன் யான் என்று ஒருப்பட்டெழுந்தாலன்றி, உண்டாகாமையின், அங்ஙனம் ஒருப்பட்டெழுதற்குக் கருவியாய்ப், புத்தியினின்றும் ஏனைய இரண்டுகுணமுங் குறைந்து இராசதமிக்குத் தோன்றுவது ஆங்காரமென்னுந் தத்துவமென் றுணர்க.

அற்றேல், ஒருப்பட்டெழுதலுந் துணிதலேயாகலின், புத்தியின் றொழிற்பாடாகிய துணிதலோடு இதனிடை வேற்றுமையின்மையின், புத்திதத்துவமேயமையும்; ஆங்காரமொன்றுகோடன்மிகையாமாலெனின்,—அற்றன்று; புத்தியின்றொழிற்பாடாகிய துணிபு விடயத்தின்கண்ணதாய், இது குடம் இஃதாடையெனப் பொருடோறும் வேறுவேறாய், இஃதென்னும் வடிவிற்றாய் நிற்பது. ஆங்காரத்தின் றொழிற்பாடாகிய துணிபு புருடன் கண்ணதாய், விடயந்தோறும் யான் நிச்சயிப்பேனென ஒன்றாய், யானென்னும்வடிவிற்றாய் நிற்பது. இங்ஙனந் தொழிற்பாடிரண்டற்குந் தம்முள் வேற்றுமை பெரிதாகலின், இருவேறுவகைப்பட்ட தொழிற்பாட்டிற்குக் கருவி ஒன்றாதல் பொருந்தாமையான், புத்தியின்வேறாகிய ஆங்காரதத்துவம் மிகையாமாறு யாண்டையதென்க.

அல்லதூஉம், சாத்துவிகக்கூறு மிக்குப் பரிணமித்தாலன்றி இஃது இன்னதெனத் துணிந்தறிதற்குக் கருவியாதலும், இராசதக்கூறு மிக்குப் பரிணமித்தாலன்றி ஒருப்பட்டெழுதலுங் கூடாமையானும் இருவேறு தொழிற்கும் ஒன்றே கருவியாமென்றல் பொருந்தாமை யறிக.

இவ்வாங்காரங் கருவிக்காரகமாயினுங் கலைபோல வினைமுதலாதற் கேதுவாய்ச் சிறப்புவகையான் நிச்சயிப்பேன் யான் என நிற்றலின், உபசாரத்தால் வினைமுதற்காரகமெனப்படுதலானும், அது விடயங்கட்கு

* "அளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி—வினைவொன்று மறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனைக்—களவிலா வானந்த மளித்தென்னை யாண்டானைக்—களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே" என்னும் அருள்வாக்கும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது; திருவாசகம், கண்டபத்து, அ.

எதிர்முகமாய்நிற்கும் புத்தியின்வேறுதல் அறிக. இவ்வாங்காரமும் புத்திதத்துவமுதலியனபோல ஆன்மாக்கடோறும் வெவ்வேறாய்ப் பலவாம். அற்றாகலினன்றே, ஒருதன்மையானன்றி, ஒருவன் யான் செல்வேனெனவும், ஒருவன் யான் உண்பேனெனவும், ஒருவன் யான் அறிவேனெனவும் அவரவர் வெவ்வேறாய் ஒருப்பட்டெழுவதூஉமென்க.

இவ்வாங்காரஞ் சாத்துவிகம் மிக்கு ஏனையிரண்டுங் குறைந்தகூற்றில் தைசதவாங்காரமென்றும், இராசதம் மிக்கு ஏனையிரண்டுங் குறைந்தகூற்றில் வைகரியாங்காரமென்றும், தாமதம் மிக்கு ஏனையிரண்டுங் குறைந்தகூற்றிற் பூதாதியாங்காரமென்றும் பெயர்பெற்று மூவகைப்படும்.

இவற்றுள், தைசதத்தின் மனமும், சுரோத்திரமுதலிய ஞானேந்திரியமைந்துந் தோன்றும். வைகரியின் வாக்குமுதலிய கன்மேந்திரியமைந்துந் தோன்றும். பூதாதியிற் சத்தமுதலிய தன்மாத்திரையைந்துந் தோன்றுமென் றறிக.

அவற்றுள், மனமாவது வாயின்மாத்திரையான் நிருவிகற்பமாயறிந்த விடயப்பொருளிற் சங்கற்பவிகற்பம் நிகழ்தற்குக் கருவியாய் நிற்பது.

சங்கற்பமாவது இஃது யாதாகற்பாற்றென ஒன்றன் குணங்களைத் தூக்கிச் சிந்தித்துப், பின்னர் முன் அநுபவித்தறிந்த வாதனைபற்றிக் குணங்கள் இன்னவாகலின், இக்குணங்களையுடைய பொருள், குடமாகற்பாற்று ஆடையாகற்பாற்றென ஒன்றனை நினைக்கும் நினைவு.

விகற்பமாவது அங்ஙனம் நினைந்தபின்னர், இது குடமோ அன்றோவென்று எண்ணும் ஐயம். ஐயநினைவு நிகழ்ந்தன்றி, இஃது இன்னதாகற்பாற்றென்னுஞ் சங்கற்பநினைவுமாத்திரையானே நிச்சயம்பிறவாமையின், சங்கற்பநினைவின்பின் ஐயம் ஒருதலையான் நிகழுமெனக் கொள்க.

இதனானே சங்கற்பநினைவிற்கும் விகற்பநினைவிற்குங் காலவேறுபாடுமாத்திரையேயன்றிப் பயன்வேறுபாடின்மையின், மனம் ஒன்றே சங்கற்பவிகற்பமென்னும் இரண்டுதொழிற்பாட்டிற்குங் கருவியாமாறு என்னையென்னும் ஆசங்கைக்கிடமின்மை உணர்க; ஈண்டுப் பயன்வேற்றுமைபற்றித் தொழிற்பாட்டிற்கு வேற்றுமைகோடலின்.

அற்றாயினும், இஃது யாதாகற்பாற்றெனக் குணங்களைத் தூக்கிச் சிந்திக்கும் நினைவிற்கு நிருவிகற்பக்காட்சிமாத்திரையே காரணம். இன்னதாகற்பாற்றென்னுஞ் சங்கற்பநினைவிற்குத் தூக்கிச் சிந்திக்கும் நினைவின்பின் வெளிப்படும் வாதனை காரணம். இவ்விருவகைநினைவுங் காலமாத்திரையானன்றிக் காரணத்தானுந் தம்முள் வேறுபாடுடைமையின், இவ்விரண்டற்கும் மனம் ஒன்றே கருவியாதல் சாலாதெனின்,—அஃதொக்கும். அங்ஙனமாயினும் பயனால் வேறுபாடின்மையின், மனமே அவத்தைவிசேடத்தாற் சித்தமென விருத்திப்பட்டுநின்று அங்ஙனந் தூக்கிச் சிந்திக்குமென் றுணர்க.

இதனானே மனத்தின்விருத்தியாகிய சித்தமொன்று உண்டென்பது பெற்றாம். அஃது ஏனைத்தத்துவங்கள்போலப் பரிணாமமன்மையின், மனத்தின் வேறாக வைக்கற்பாற்றன்றென்னுங் கருத்தால், * "சிந்தைநினை வையம் வந்துதரு மனமொழிய வகுப்பொணாதே" என்றார் புடைநூலாசிரியரும். "சிந்தைநினை வையம் வந்துதரும்" என்பதனைச், "சிந்தை நினைவு வந்து ஐயந்தரும்" என மாறுக. "சிந்தை நினைவுவந்தையந்தரு" தலாவது, சித்தத்தின் றொழிற்பாடாகிய அங்ஙனந் தூக்கியெண்ணும் நினைவுநிகழ்ந்து வாதனையை வெளிப்படுத்துமுகத்தான் ஐயநினைவைத் தோற்றுவித்தல்.

இதனானே அந்தக்கரணம் மூன்றெனக்கொண்டு, குணதத்துவத்தை மூலப்பகுதியின் வேறுவைத்தெண்ணி, மூலப்பகுதிக்குக்கீழ்த் தத்துவம் இருபத்துநான்கெனத் தொகைகொள்ளுவாரும், குணதத்துவத்தை மூலப்பகுதியுளடக்கி, உபகரித்தற் சிறப்புப்பற்றிச் சித்தத்தை மனத்தின் வேறுவைத்தெண்ணி, அந்தக்கரணம் நான்கெனக் கொண்டு மூலப்பகுதிக்குக்கீழ்த் தத்துவம் இருபத்துநான்கெனத் தொகைகொள்ளுவாரும், சித்தமும் மனமும் ஒன்றாகவைத்து, மூலப்பகுதியையுங் குணதத்துவத்தையும் ஒன்றாகவைத்தெண்ணி, இருபத்துநாலாந் தத்துவம் மூலப்பகுதியெனத் தொகைகொள்ளுவாருமெனப் பலதிறத்தர் ஆசிரியர். அவையெல்லாம் பொருளான் வேறுபாடின்மையின், தம்முண் முரணாமை யறிக.

இஃதறியாதார் அந்தக்கரணம் மூன்றெனத் தொகைகொண்டு, சித்தமென்பதொன் றில்லையென்பர். சித்தமில்லையாயிற் கண்கண்டபொருள் எல்லாவற்றினுஞ் சங்கற்பவிகற்பம் நிகழ்தல்வேண்டும். அங்ஙனம் நிகழாமைக்குக் காரணம் வேறின்மையின், நிருவிகற்பமாய்க்கண்டபொருள் பலவற்றுள்ளும், இஃது யாதாகற்பாற்றென ஒன்றனைத் தூக்கியெடுத்துத் தன் காரணமாகிய மனத்திற்குக் கொடுக்குங் கருவியாகிய சித்தம் ஒருதலையான் வேண்டப்படுமாறு அறிக. ஆண்டு அறிதல்வேட்கையே காரணமெனின்,— கெட்டபொருளைத் தேடி நெறிச்செல்வோனுக்கு நெறியிடைக் கண்ட பொருள்களின் அறிதல்வேட்கையின்றியும் அறிவுநிகழ்தலான் ஆண்டு அறிதல்வேட்கை காரணமன்மையானும், ஆண்டுக் கன்மங்காரணமெனின், கன்மங் கருவித்துணையாதலின்றித் தானே காரணமாகாதென்பது † மேற்காட்டினும்மகலானும், வேறுகாரணமின்மையானும் ஆண்டு மனத்தின் அவத்தைவிசேடமாகிய சித்தமே காரணமெனக் கொள்க.

அற்றேல், வழிநூலாசிரியர், ‡ "சித்தமா மவ்வி யத்தஞ் சிந்தனை யதுவுஞ் செய்யும்" எனச் சித்தத்தை அவ்வியத்தத்தின் அவத்தைவிசேடமாக வைத்தோதியது, * "மனமொழிய வகுப்பொணாதே" என்றோதியதனோடு முரணும்பிறவெனின்,—முரணாது; அவ்வியத்தத்தின் காரியமாகிய அந்தக்கரணங்களும் அவ்வியத்தமென்று உபசரித்துக்கூறப்படுமென்னுங் கருத்தான் அவ்வாறு கூறினாரென்க. அற்றாயினும், சிவப்பிரகாசத்திற் கூறுமாறுபோலச் சித்தத்தை மனத்தின்பின்வைத் தோதாது குணதத்துவத்

* சிவப்பிரகாசம். பொது, ௬௧. † சிவஞானசித்தி, ௨-ம் சூத்திரம், ௫௮.
‡ நியதிதத்துவத்தியல்புரைப்புழிக்காண்க; பக்கம், கரு௧.

தைச் சாரவைத்தோதியது மல்லவாம்பிறவெனின்,—ஆகாது; செய்யுளாக லின், அங்ஙனம் முறைபிறழவைத்தாரென்க. * "அந்தமனம் புத்தியுட ஞங்காரம்" என்றற்றொடக்கத்து நூல்களின் மனம் ஆங்காரங்கட்கு இடையே புத்தியைவைத்ததும் அவ்வாறெனக் காண்க.

இஃதறியாதார் † "பற்றியது நிச்சயித்துப் பல்கா லெழுந்திருந்தங்— குற்றதுசிந் திக்கு முணர்" என்றிங்ஙனம் வைத்ததே முறைபோலுமென மயங்கிப் புத்திநிச்சயித்தபின் ஆங்காரம் ஒருப்பட்டெழுமென்றும், ஒருப் பட்டெழுந்தபின்னர்ச் சித்தஞ் சிந்திக்குமென்றுங் கொள்வர். சித்தஞ் சிந்தித்தபின்னன்றிச் சங்கற்பவிகற்பங்கள் பிறவாவென்பதூஉம், ஆங்காரம் ஒருப்பட்டெழுந்தபின்னன்றி நிச்சயம்பிறவாதென்பதூஉம் ஈண்டுக் கூறிய வாறுபற்றி அறிந்துகொள்க.

அற்றேல், நினைத்தற்பொதுமைபற்றிச் சித்தம் மனத்தின்விருத்தியாய் அதனுள் அடங்குமென்றாற்போலத், துணிதற்பொதுமைபற்றி ஆங்கார மும் புத்தியின்விருத்தியாய் அதனுள் அடங்குமெனவமையும், பரிணாம மென்றல் பொருந்தாதெனின்,—அற்றன்று; மனஞ்சித்தங்களின் றொழிற் பாடாய இருவேறுவகைநினைவும் விடயத்தின்கண்ணவாய் நிற்றலின், தம் முள் வேறுபாடு முன்கண்டநுபவித்த வாதனைவெளிப்படுதற்கு முன்னிகழ் தலும் பின்னிகழ்தலு மாத்திரையேயன்றிப் பிறிதின்மையின், ஆண்டுச் சித் தம் மனத்தின்விருத்தியாய் அதனுள் அடங்குமென்பதொக்கும்; ஈண்டு அவ்வாறன்றி ஆங்காரத்தின் றொழிற்பாடாகிய துணிபு யான் இன்னனாவ னென்னும் வடிவிற்றாய்ப் புருடன்கண்ணே நிகழ்வதூஉம், புத்தியின் றொழிற்பாடாகிய துணிபு இஃது இன்னதென்னும் வடிவிற்றாய் விடயத்தின் கண்ணே நிகழ்வதூஉமாகிய தம்முள் வேறுபாடு பெரிதாதலின், ஆங்காரம் புத்தியின்விருத்தியாய்ப் புத்தியுளடங்குமென்றல் சாலாமையறிக.

## மனத்தத்துவம்.

இனி, வாதனைபற்றிநிகழுஞ் சங்கற்பவிகற்பமாகிய தொழிற்பாடு மனத் திற்கேயாதலின், ஒருகுடத்தை எதிரேகாட்டி இது குடமென்னுஞ் சொற் குப் பொருளென்று ஒருவனுணர்த்தவுணர்ந்தவன் மற்றொருகுடத்தைக் கண்டவழி, அவ்வாசனையான் ஒப்புமைபற்றி இதுவுங் குடமென்னுஞ்சொற் குப் பொருளென்றுணர்ந்துகோடற்கும், முன்காணப்பட்டவனைப் பின் கண்டவழி, அவனேயிவனென்றுணர்ந்துகோடற்கும் ஏதுவாகிய கருவி மனமேயென்றுணர்க.

நையாயிகர்முதலியோர் இன்னோரன்னவற்றிற்குக் காரணஞ் சாமா னியக்காட்சியென்றும், சாமானியக்காட்சியாவது ஒருகுடத்தைக் கண்ட பொழுதே சாதிபற்றி எல்லாக்குடத்தையுங் காண்டல் என்றுங் கூறு வர். ஒருகுடத்தையுணர்ந்தபொழுதே எல்லாக்குடத்தையும் உணர்ந்தா னாயின் அவ்வளவினும் முற்றுணர்வினனாதல் வேண்டும். அஃதவர்க்குங் கருத்தன்மையான், அது பொருந்தாமையறிக.

* நெஞ்சுவிடுதூது, அடி, கஉ. † உண்மை விளக்கம், கஎ.

இன்னும், அவர் ஐம்பொறிகளுந் தத்தம் விடயங்களை ஒருங்குணராது ஒரோவொன்றாகவுணர்தற்குக் காரணம் அவ்வப்பொறிகளோடு மனத்திற்குளதாகிய சையோகமேயாகலின் மனந் தூலப்பொருளாயின், ஐம்பொறியினும் ஒருங்குசையோகமாதற்கிழுக்கின்மையின், அவை ஒருங்குணர்தல் வேண்டும், அஃதின்மையான், அதிசூக்குமமாகிய அணுவளவிற்றாய் நிற்பது மனமெனவும், அங்ஙனமாகலான் அது நித்தப்பொருளெனவுங் கூறுவர். அது பொருந்தாது; ஆங்காரத்திற்றோன்றிய மனம் ஆங்காரமீறாகிய தத்துவங்களைநோக்கித் தூலமாதலுடைமையானும், ஐம்பொறிகள் ஒரோவொன்றாயுணர்தற்குக் காரணம் வித்தையாற் சிறிதேவிளங்கி அது வதுவாய் அழுந்தியறிவதாகிய ஆன்மாவின் ஞானசத்தி எல்லாத்தத்துவங்களையும் ஒருங்கே அதிட்டிக்கமாட்டாது ஒரோவொன்றாயதிட்டித்தலே; ஆகலின், ஆண்டு மனச்சையோகமே காரணமன்மையின், அதுபற்றி மனம் அணுவென்றல் சாலாமையானு மென்க.

மனம், நாட்டின்கண் நிகழ்வனவற்றைச் சென்றறிந்துவந்து வேந்தர்க்குப் புலனாகச்செய்யும் ஒற்றர்போலப், புறவிந்திரியங்களான் அறிந்த விடயத்தை இடையேநின்று பற்றி வாங்கிப் புத்தியின் எதிர்விம்பமாய்த் தோன்றுமாறு கொண்டுய்க்கும் அகவிந்திரியமாய்க், "காகத்தின்கண்மணி போல" அகம்புறமாகிய ஈரிடத்தினும் விரைந்துசெல்லுஞ் சதாகதியுடையதாய் நிற்பதாகலின், புறவிந்திரியங்களோடொப்பத் தானுஞ் சாத்துவிகாகங்காரத்தினின்றும் அவற்றிற்கு முந்தித்தோன்றுமென்றல் பொருந்துமாறு அறிக.

இனி, * "மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங்—கருவிக ணான்கு நீங்காக் கலாதிக ளைந்துங் கூடி—யொருபுல னுகரும்" என்றதுபற்றி ஒருவிடயநுகர்ச்சிக்கண் அவ்வத் தத்துவங்களின் றொழிற்பாடெல்லாம் ஒருங்கேநிகழுமென்பாரும் உளர். 'கூடி—யொருபுலனுகரும்' என்றதற்குத் தாற்பரியம் ஒருவிடயத்தின்கண் அவ்வத்தத்துவங்களெல்லாம் முறையான் நிகழ்ந்தபின்னர் அஃது ஆன்மாவுக்குப் புலனாமென்பதே யாமாகலானும், அங்ஙனங் கொள்ளாக்கால் அவை ஒன்றற்கொன்று ஏதுவாதல் பொருந்தாமையானும், ஒன்றற்கொன்று ஏதுவாகாதவழி, அவ்வத் தத்துவங்களின் றொழிற்பாடு நிகழாவென்பது † மேற்காட்டினு மாகலானும், ஒருவிடயத்தைப் புறவிந்திரியம் பொதுவகையான் முன்னுணர, அதன்பின் அவ்விடயத்தை அகவிந்திரியமாகிய மனம் பற்ற, அதன்பின் ஆங்காரம் ஒருப்பட்டெழ, அதன்பின்னர்ப் புத்தி நிச்சயிக்குமென்பதே முறையெனக் கொள்க. அங்ஙனமன்றி ஒருங்கே தொழிற்படுமென்றல் காலநுட்பமறியாதார் கூற்றேயாமென் றொழிக.

## ஞானேந்திரியம்.

இனிச், சாத்துவிக அகங்காரத்தினின்றும் மனத்தின் பின்னர் முறையானே தோன்றுவனவாகிய ஞானேந்திரியமாவன:—செவி, துவக்கு, நோக்கு, நாக்கு, துண்டம் என்பனவாம்.

---

* சிவப்பிரகாசம், உண்மை, ௧௩. † பக்கம், ௧௯௩.

செவிமுதலிய இடங்களின்பெயர் ஆகுபெயராய் அவ்வவிடங்களை அதிட்டித்துநிற்கும் இந்திரியங்கட்காயின. இந்திரியம், பொறி, வாயில், என்பன ஒருபொருட்கிளவி.

இவையைந்தும் ஆன்மாவின் ஞானசத்தியான் அதிட்டிக்கப்பட்டுப் பொருள்களை விசேடணவிசேடியவியல்புபற்றி அறியுமாறின்றி, நிருவிகற்பமாயறியுங் கருவியென் றுணர்க. இவை அறிகருவியாகலாற் சாத்துவிக அகங்காரத்தினின்றுந் தோன்றினவாதல் பொருத்தமுடைமை அறிக.

உலகாயதர் முதலியோர் செவிமுதலிய இடங்களே இந்திரியமென்பர். செவிடனுக்குச் செவியுள்ளதாகவும் ஓசைகேளாமையின், அது கேளாமைக்குக் காரணஞ் செவியென்னும் உறுப்பின்வேறாய் அதனையதிட்டித்துநிற்கும் இந்திரியமில்லாமையேயன்றிப் பிறிதின்மையாற் செவியென்னும் உறுப்பு இந்திரியமாகாதென்பது எல்லார்க்கும் விளங்கிக்கிடந்தவாறு அறிக. இது பற்றி ஏனையிந்திரியங்களும் அவ்வவிடங்களின் வேறாதல் கண்டுகொள்க.

கண்ணிந்திரியம்.

இன்னும், கண்ணிந்திரியஞ் சென்றியைந்து விடயத்தையறிவதன்றி, நின்றவாறேயறிதல் கூடாமையாற் கண்ணென்னும் உறுப்பு நின்றவாறு நிற்றலேயன்றிச் சென்றிசையுமாறின்மையானும் உறுப்பினை இந்திரியமென்றல் பொருந்தாமையறிக.

அற்றேல், கண்ணிந்திரியஞ் சென்றியையவேண்டா, அபிமுகமாத்திரையானே காணுமென்றுறப்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; துவக்குமுதலிய இந்திரியங்கள் அவ்வப்புலனோடியைந்தன்றி அறியுமாறின்மை காண்டுமாகலிற் கண்ணும் அவைபோலப் புறவிந்திரியமாகலின், பொருளோடியைந்தன்றிக் காண்டல் கூடாதென்பது உணர்ந்துகொள்க.

அல்லதூஉம், அபிமுகமாத்திரையானே காணுமாயின், சுவர்க்கு அப்பாலுள்ள பொருளையுங் காணல்வேண்டும். கண்ணுக்கும் பொருளுக்கும் இடையேநின்ற சுவர் அபிமுகமாதற்குத் தடையாதலிற் காணாதெனின், அஃதங்ஙனமாயினும், அபிமுகமாதலின்றிப் பின்பக்கத்துளவாகிய பொருள்களை அபிமுகமாய்நின்ற கண்ணாடியின் எதிர்விம்பமாகக்காணுதல்காண்டும்; ஆண்டு அபிமுகங் காரணமென்றல் பொருந்தாமையின், இயைபே காரணமெனக்கொள்க.

அற்றேல், பின்பக்கத்துள்ள பொருளைக் கண்ணிந்திரியங் கண்ணாடியின் இயையுமாறு எங்ஙனமெனின், கூறுதும்: குடத்தின் நீர்முதலியவற்றிற் பிரதிபலித்த ஞாயிற்றின் கிரணம் மனைக்குள்ளாகிய சுவரிற் சென்றியையுமாறுபோலக் கண்ணிந்திரியத்தினொளி கண்ணாடியிற் பிரதிபலித்து நின்று பின்பக்கத்துள்ளபொருளைச் சென்றியையுமென்று உணர்க. இங்ஙனமாகலின், விம்பத்தின் முகமே கண்ணாடியினின்று காணப்படுமெனவும், அதனை எனது முகமெனக் காண்டல் உண்மைக்காட்சியேயாமெனவும், கண்ணாடிக்குண் முகமின்மையின் விம்பத்தின்முகமே ஆண்டு வேறு

இவ்வாறு பிரதிவிம்பமும் விம்பமேயாம் என
ஆசங்கித்துமுடியும் இச்சூத்திரப்பகுதியென்க.

போல விளங்குமெனவும், கண்ணாடியினகத்துள்ளதுபோலத் தோன்று தலும் விம்பத்தினளவிற்குச் சிறிதுபெரிதுபோலத் தோன்றுதலுமாத்தி ரையே பொருந்துமாறுபற்றி மயக்கக்காட்சியெனப்படுமெனவும் அறிக.

இவ்வாறன்றிக் கண்ணாடியின் வேறு முகமுண்டாமெனின், அஃதுண் டாதற்குக்காரணம் ஆண்டின்மையானும், உண்டெனக்கொள்ளினும் நகைத் தன்முதலிய சேதனத் தொழில் ஆண்டு நிகழ்தற்குக் காரணமின்மையானும் அது பொருந்தாமை அறிக.

அன்றியும், இருளினிடத்துளதாகிய புனலினும் எதிர்விம்பமாய் முகங் காணப்படுதலின், அது விம்பத்தின்வேறென்பார்க்கு ஆண்டுப் பிரகாசமின் மையின், காண்டல்செல்லாதாகல் வேண்டும். எமக்காயின், விம்பத்திற்குப் பிரகாசக்கூட்டரவுண்மையின், அதுவே புனற்கண் அதுபோலத் தோன்று தலின், முரணுமாறில்லையென்க.

அற்றேல், வேறெனக்கொள்வார்க்கும் விம்பத்திற்குரிய பிரகாசமே எதிர்விம்பத்தைக் காண்டற்கும் ஏதுவாமென்றுறப்படும் இழுக்கென்னை யெனின்,—அற்றன்று; அவ்வவற்றைக் காண்டற்கு அவ்வவற்றிற் பற்றிய பிரகாசமே காரணமென்பது யாண்டும் நியமமாகக்காணப்படுதலானென்க. இதனானே புனன்முதலியவற்றின் முகந்தோன்றுதல் மயக்கக்காட்சியென் பார் மதமும் மறுக்கப்பட்டது; மயக்கக்காட்சியும் ஆண்டுப் பிரகாசமில் வழி நிகழாமையானென்க. நிகழுமாயின், திணிந்தவிருளினுங் கயிற்றைக் கண்டு பாம்பென மயங்குதல்வேண்டுமென் றொழிக.

இன்னும், கண்ணிந்திரியஞ் சென்றியைந்து காண்டலன்றி, எதிர்முக மாத்திரையானே காணுமாயின் ஆண்டு விசேடமின்மையின், சேய்மைக்கட் கண்டபொருளும் அணிமைக்கட் கண்டபொருள்போல விளங்குதல்வேண் டும். அஃதின்மையானுஞ் சென்றியைந்துகாணுமென்பதறிக. சென்றி யைந்துகாணும்வழி, விளக்கினொளி சேய்மைக்கட் செல்லச்செல்லச் சிறுகு தல்போலக் கண்ணொளியுஞ் செல்லச்செல்லச் சிறுகுதலின், அங்ஙனங் காண்டல் பொருந்துமாறறிக.

அற்றேல், கண்ணிந்திரியம் எதிர்முகமாத்திரையானன்றிச் சென்றி யைந்துகாண்பதாயின், மரத்தின் நுனிக்கொம்பினையும், சேய்மைக்கண்ண தாகிய சந்திரனையும் ஒருங்குகாண்டலும்; பளிங்குமுதலியவற்றின் உள் வைத்தபொருளைத் தடையின்றிக் காண்டலுங் கூடுமாறென்னையெனின், கூறுதும்:—கண்முதலிய இந்திரியங்கள் விளக்கொளிபோல விடயத்தின் இயைந்தன்றி விளக்குதலின்மையானும், இயைபு வேண்டாதவழிச் சுவர் முதலியவற்றான் மறைந்தபொருளையுங் காண்டல்வேண்டுமென்பது மேற் கூறினமையானும், கண்ணிந்திரியத்திற்குக் காணுங்கால் விடயத்தோடியை புண்மை நியமமென்பது பெறப்பட்டது; படவே, நுனிக்கொம்பினையுந் திங்களினையுங் காண்டலும், பளிங்குமுதலியவற்றின் உட்பட்டபொருளைக் காண்டலும் இயைந்தேகாணுமென்பது பெற்றும். ஆண்டு நுனிக்கொம்

பிணையுந் திங்களிணையும் ஒருங்குகண்டேனென்று அநுபவநிகழ்தல், தாமரையிதழ் நூற்றிணையும் ஊசியான் ஒருங்கேபோழ்ந்தேனென நிகழும் அநுபவம்போல விரைந்துசெல்லுங் காலநுட்பமறியாமையின் நிகழும் அபிமானமாத்திரையேயெனவும், பளிங்குமுதலியன தூயனவாகலாற் சுவர்முதலியனபோலத் தடைசெய்வனவன்மையின், அதிசூக்குமமாகிய கண்ணொளி விளக்கொளிபோல அவற்றின் உட்சேறல் கூடுமெனவும் நுண்ணுணர்வான் ஓர்ந்துணர்க.

அற்றேல், அதிசூக்குமமாகிய கண்ணொளி தன்னளவினன்றி மலைமுதலிய தூலப்பொருள்களின் இயைந்துகாணுமாறென்னையெனின்,—சூக்குமமாயினும், புனலிற்றுளித்த எண்ணெய்த்துளியும், விளக்கொளியும்போலப் பரந்துவியாபிக்கும் இயல்புடைமையின், அங்ஙனங் காண்டற்கிழுக்கின்றென்க.

அற்றேல், இடத்தினிகழ்பொருள் இடத்தைவிட்டு நில்லாமையின், கண்ணிந்திரியந் தனக்கிடமாகிய கண்மணி இருளினிற்புழி, விளக்கொளி கலந்தபொருளை இயைந்துகாணுமாறென்னையெனின்,—கண்ணிந்திரியஞ் சாத்துவிக அகங்காரத்தினின்றுஞ் செவிமுதலிய இந்திரியங்களினும் அதிகமாய்ச் சத்துவகுணத்தான் மிக்குப் பரிணமித்தலின், ஒளியுடைமையான் இருளின்கணிற்பினுந் தகழியினின்றெரியுந் தீபந் தன்னொளியாற் புறத்திற்சென்று பொருள்களை வியாபித்து விளக்குமாறுபோலத் தன்னொளியாற் புறத்துச்சென்று பொருள்களை வியாபித்து இயைந்தறிதல் கூடுமென்க.

அற்றேல், இமைதிறந்துழிப் புறத்திற்சென்ற தன்னொளியோடியைந்த பொருளை இமைமூடியவழியுங் காண்டல்வேண்டுமாலெனின்,—அற்றன்று; குடவிளக்கினை மூடியவழிப் புறத்திற்சென்ற அதனொளி விரையக்கெடுமாறுபோலப், புறத்திற்சென்ற தன்னொளி இமைமூடியவழி விரையக்கெட்டொழிதலின், காண்டல்செல்லாதென்க. ஈண்டுக் கெடுதலென்றது தன்னுள் வந்து ஒடுங்கிப்போதலை.

அற்றேல், செவிமுதலிய இந்திரியங்களுங் கண்ணிந்திரியம்போலச் சாத்துவிகாகங்காரத்திற் றோன்றுதலின், அவையுஞ் சென்றியைந்து விடயத்தை அறியுமென்னுமோவெனின்,—என்னும்; என்னை? அங்ஙனம் அநுபவமின்மையானென்க. செவிமுதலியனவுஞ் சாத்துவிகாகங்காரத்திற்றோன்றியனவேயாயினுங் கண்ணிந்திரியத்தைநோக்கச் சத்துவகுணத்தாற் குறைவுடைமையின், அவை தங்கண் வந்தவிடயத்தை இயைந்துணர்தலேயன்றிக் கண்போலச் சென்றியைந்து விடயத்தை அறியுமாறில்லையெனக்கொள்க.

அற்றேல், சேய்மைக்கண்ணதாகிய புனலின் றட்பமும், தாழம்பூமணமுந் துவக்கிற்கும் மூக்கிற்கும் விடயமாமாறு என்னையெனின்,—அநுகூலமாயியங்குங் காற்றுத், தண்ணீர் தாழம்பூ முதலியவற்றின் அவயவங்களைக் கொண்டுவந்துய்த்தலின், அவை அவற்றிற்கு விடயமாயினவென்றுணர்க. அன்றி, அவ்விந்திரியங்களே சென்றியையுமாயின், எதிர்காற்றியங்குழியும்

அவ்வவ்விடயங்களை அறிதல்வேண்டும். அஃதின்மையின், ஏனையிந்திரியங்கள் கண்ணிந்திரியம்போலச் சென்றறிவனவல்லவென்க.

அங்ஙனமாயினும் ஓசை அவ்வாறு செவியின்கண்வந்து இயையுமென்றற்குப் பிரமாணமின்மையானும், இவ்வோசை வடபாலது, இவ்வோசை தென்பாலது, இவ்வோசை தேவகோட்டத்தது, இவ்வோசை வேந்தன் கோயின்மாட்டதெனவும்; இது முழவோசை, இது தண்ணுமையோசை, இது குழலோசை, இது யாழோசையெனவும் அறிதல் சென்றியைந்தன்றியாகாமையானுஞ் செவியிந்திரியங் கண்ணிந்திரியம்போலச் சென்றறியுமென்றலே பொருத்தமுடைத்தெனின்,—அற்றன்று; ஆண்டாண்டெழுந்த ஓசை நீர்த்தரங்கம்போலச் சந்தானமாய்க் காற்றின்வேகத்தான் விரைந்து வந்து செவியின்கண் இயையுமாகலான், இங்ஙனம் வந்தியைந்த ஓசையினையே செவியிந்திரியம் அறியுமெனவும், அம்புமுதலியன வந்துவீழ்ந்த வழி, அவை வீழ்ந்தவிசேடம்பற்றி இஃதின்னதிசையினின்றும் வந்ததென்று அநுமித்தறியுமாறுபோல, ஓசைவந்தியைந்த விசேடம்பற்றி அவ்வத்திசை அநுமித்தறியப்படுமெனவும், முழவோசை தண்ணுமையோசையென்றற்றொடக்கத்து வேறுபாடுகள் முன்னையநுபவம்பற்றி அநுமித்தறியப்படுமெனவுங் கோடல் பொருத்தமுடைமையாற் செவியிந்திரியமுந் துவக்கிந்திரியமுதலியனபோலத் தன்கண்வந்தனவற்றை நின்றியைந்தறிவதன்றிக் கண்ணிந்திரியம்போலச் சென்றியைந்தறிவதன்றெனக் கொள்க.

நீர்த்தரங்கம்போல வருதலானன்றே சேய்மைக்கணெழுந்த மெல்லோசை ஆண்டாண்டெழுந்த வல்லோசைபோலச் செவிக்குப் புலனாகாததூஉம், அணிமைக்கணெழுந்த மெல்லோசை புலனாவதூஉமென்க. சேய்மைக்கணெழுந்த நீர்த்தரங்கமும் பெரிதாயிற் கரைகாறுஞ் சந்தானமாய்வந்தியைவதூஉம், சிறிதாயின் இடையே கெட்டொழிவதூஉங் கண்டுகொள்க.

ஈண்டுக் கூறியவாற்றாற் கண்ணிந்திரிய மாத்திரையே ஒளியாற் சென்றியைந்து விடயத்தையறியுமென்பதூஉம், ஏனைநான்குந் தம்பால் வந்தனவற்றை அவ்வவிடங்களினின்று இயைந்தறிவனவென்பதூஉம், எவ்வாற்றானும் இந்திரியங்கள் விடயத்தோடியைந்தறிவனவன்றி எதிர்முகமாத்திரையான் அறிவனவல்லவென்பதூஉம், இதனானும் அவ்வவிந்திரியங்கள் அவ்வவிடங்களின் வேறென்பதூஉம் உணர்ந்துகொள்க.

இருளுண்மை.

அற்றேல், சாத்துவிகாகங்காரத்தினின்றும் ஏனையிந்திரியங்களினுஞ் சிறந்து சத்துவகுணமாத்திரையாய்ப் பரிணமித்து ஒளியுடைத்தாகிய கண்ணிந்திரியந் தன்றொழிற்பாடு நிகழ்தற்குப் பிறிதோரொளியினுபகாரத்தை இன்றியமையாதவாறு என்னையெனின்,—அங்ஙனமாயினுங், கண்ணிந்திரியம் ஏனையிந்திரியங்கள்போலாது ஒளியாற் சென்றியைந்து விடயத்தையறிதற்குரித்தாய் ஏனையிரண்டுங்குறைந்து சத்துவகுணமிக்குப் பரிணமித்த

கூறாகிய சாத்துவிகாகங்காரத்தினின்றும் ஏனையிந்திரியங்களினுஞ் சிறந்து சத்துவகுணசாரமாத்திரையாய்ப் பரிணமிப்புழி, அப்பகுதியின் எஞ்சி நின்ற தமோகுணக்கூறாகிய சாரம் இருளெனப்பரிணமித்துக் குற்றச்சகசமாய் உடன்றோன்றிக் கண்ணொளியைத் தடைசெய்துநிற்றலின், அக்குற்றத்தை நீக்கி விடயத்தைக் காட்டுதற்கு, ஏனையிரண்டுங் குறைந்து தமோகுணமிக்குப் பரிணமித்தகூறாகிய தாமதாகங்காரத்தினின்றுஞ் சத்துவகுணமாத்திரையாய்ப் பரிணமித்துத் தனக்குத் துணையாகிய பூதவொளியின் உபகாரம் இன்றியமையாது வேண்டப்பட்டதென் றுணர்க.

சாத்துவிகாகங்காரத்தினின்றும் ஆண்டு எஞ்சிநின்ற தமோகுணக்கூற்றின் பரிணாமமாகிய இருளுக்குத் தாமதாகங்காரத்தினின்றுஞ் சத்துவகுணமாத்திரையாய்ப் பரிணமித்த பூதவொளியே மறுதலைப்பொருளாகலின், அஃது அவ்விருளாகிய குற்றத்தை நீக்கித் தன்னோடொப்பச் சத்துவகுணசாரமாத்திரையாய்ப் பரிணமித்த கண்ணொளிக்குத் துணையாய்நின்று காட்டுதல் சாலுமென்பது பொருந்துமாறுபற்றி உணர்ந்துகொள்க.

இதனானே * ஆலோகத்தினபாவமே இருளென்றும், அன்றிப் பாவப்பொருளெனின், இதற்குத் தோற்றம் யாண்டையதென்றுங் கூறுவார் மதங்களெல்லாம் போலியாயவாறு காண்க.

ஆலோகத்தின் அபாவமே அந்தகாரமென்பார்க்கு அம்முறைபற்றிச், சுகத்தினபாவமே துக்கம், தன்மத்தினபாவமே அதன்மம், சையோகத்தினபாவமே விபாகமென்று இவ்வாறுகோடல்வேண்டும்; அங்ஙனங்கொள்ளாமையான், அவர்க்கும் அது கருத்தன்றுபோலுமென மறுக்க.

அன்றியும், ஆண்டு ஒளியில்லை இருளுள்ளது என ஒளியின்மையின் வேறாய் இருளென்னும் உணர்வு நிகழ்தலானும், ஆட்டின்கழுத்திற்றூங்கும் முலையோடொக்கும் அபாவத்தாற் செய்யக்கடவதொன்று யாண்டுமின்மையானுங் கண்ணொளியைத் தடைசெய்துநிற்பதாகிய இருளை அபாவமென்றல் கூடாமையறிக.

இவ்விருளினதுண்மை வெள்ளிடையின் அலரவிழித்துநோக்கியவழியும் மறைத்தற்றொழில் நிகழ்தல்பற்றிப் பாரிசேடவளவையான் அறியப்படும்.

அற்றேல், நீலவடிவிற்றாய்த் தோன்றுதலின், இருள் காட்சிப்பொருளென்றாற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; துன்னியவிருளின்கண் விழித்துழிப்போலக் கண்ணிமை இறுகமூடியவழியும் ஒருதன்மைத்தாய்த் தோன்றுதலின் வேற்றுமையின்மையான், ஆண்டுத் தோன்றுவதும் ஒரு வடிவப்பொருளாமெனின், வடிவப்பொருள் கண்மூடியவழிக் காட்சியெய்துதல் சாலாமையான் அது மயக்கவுணர்வேயாமென்பது போதருதலின், விழித்துழி அவ்வாறு தோன்றுவதும் அதுபோல மயக்கவுணர்வாவதன்றி, இருளின்றோற்றம் அன்றென்பது அநுபவத்தாற் கண்டு

* ஆலோகம் - ஒளி.

கொள்க. * "ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டும்" என்பது காட்சிப்பொருளாமென்னும் பொருட்டன்று; உடனாய் மறைந்துநிற்புழியும் பாரிசேடவளவையான்.அறியப்படுமியல்பிற்று என்னும் பொருட்டேயாம். இன்னுமிதனை விரிப்பிற் பெருகுமென் றொழிக.

அஃது அங்ஙனமாக; மூலமலம் ஒன்றே பலசத்தியையுடைத்தாயது போல ஞானேந்திரியமொன்றே அவ்வவிடவேறுபாட்டான் அவ்வவ்விடயங்களையறியும் ஐவகைச்சத்தியை யுடைத்தென்றுற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; மூலமலம், ஆன்மாக்கள் பலவாயினும் அவற்றினிச்சாஞானக்கிரியைகளை மறைத்தற்றொழில் ஒன்றேயாதல்பற்றி ஒன்றெனத்துணிந்தவழிப், பந்தமும் வீடும் பலவேறுவகைப்படும் வரையறை பற்றி ஒன்றாகிய மூலமலத்திற்குச் சத்திகள் பலவுளவென்பது துணியப்படும். கண்முதலிய இந்திரியங்களதுண்மை அவ்வாறன்றித் துணியும் பொழுதே தம்முள் வேற்றுமையுடைய ஐவகைத்தொழிற்பாட்டிற்கு வேறு வேறு கருவியாதல்பற்றித் துணியப்படுதலின், மீளவொன்றென்றல் முரணுதலான் அதுபொருந்தாமையறிக.

அற்றேல், புறக்கரணம் அந்தக்கரணமென்னும் இருவகையுள் ஒன்றேயமையும், இரண்டுங்கோடன் மிகையாமெனின்,—அற்றன்று; புறக்கரணம் நிகழ்காலப்பொருளொன்றனையே அறியும்; அந்தக்கரணம் முக்காலப் பொருளினையும் அறியும்; இவை தம்முள் வேற்றுமையாகலான், நிகழ்கால மாத்திரையினறிதல்பற்றிப் புறக்கரணமும், முக்காலமுமறிதற்பொருட்டு அந்தக்கரணமும், நிகழ்காலமாத்திரையேயறியும் புறக்கருவியில்வழிக், குருடர் செவிடர் முதலியோர்க்கு அந்தக்கரணம் பயன்படாமையின், அவை பயன்படுதற்பொருட்டு அதற்கேதுவாகிய புறக்கருவியும் ஒருதலையான் வேண்டப்படுதலின், மிகையாதல் யாண்டையதென்க.

இன்னும், அறிந்தன்றிச் செய்தல்கூடாமையின், வாக்குமுதலிய கன்மேந்திரியங்களின் றொழிற்குச் செவிமுதலிய ஞானேந்திரியங்களின் அறிவு உபகாரமாதல்பற்றியும் அவை ஒருதலையான் வேண்டப்படுமென்பதறிக.

இனி, நையாயிகர்முதலியோர் ஓசைமுதலியவைந்தும் ஆகாயமுதலிய பூதங்களின்குணமாதலான், அவ்வப்பூதகுணங்களைத்தெரிவிக்குஞ்செவிமுதலியவிந்திரியம் அவ்வப்பூதங்களிற் றோன்றிய காரியமென்றலே பொருத்தமுடைத்தாகலான், ஞானேந்திரியங்கள் பௌதிகமேயாமென்பர். இந்திரியம் பூதகாரியமாயிற் குடமுதலியனபோல வடிவுடைத்தாய் வேறோரிந்திரியத்தான் அறியப்படுவதூஉமாமெனப்பட்டு அநவத்தையாய் முடியுமாகலின், அது பொருந்தாமையறிக.

இன்னும், அவ்வவற்றின் குணங்களைத் தெரிவிப்பன அவ்வவற்றின் சாதியவேயாமென்பார்க்குக் கண்ணிந்திரியந் தேயுவினுருவமாத்திரையைத் தெரிவிப்பதன்றி, நிலத்தின்குணமாகிய நிலவுருவமுதலியவற்றையுந் தெரிவித்தலின், கண்ணிந்திரியம் நிலத்தின்காரியமெனவுங் கோடல்

* திருவருட்பயன், ௩-வது, இருண்மலநிலை, ௩.

வேண்டும்; அங்ஙனங் கொள்ளாமையான், அவர்க்கும் அது கருத்தன்று போலுமென மறுக்க. இவ்வாறே செவிமுதலியவிந்திரியங்களும் அவ்வப்பூத குணமாத்திரையையே தெரிவிக்குமென்னும் நியமமின்றி, ஏனைப்பூதகுணங் களையுந் தெரிவிக்குமாறு கண்டுகொள்க.

இதனானே இந்திரியம் பூதகாரியமெனச் சாதித்தற்கு அவர்கூறிய பிர மாணம் போலியாதல் உணர்ந்துகொள்க; சத்தகுணம் ஆகாயமாத்தி ரைக்கேயன்றி வாயுமுதலியவற்றிற்கும், பரிசம் வாயுமாத்திரைக்கேயன்றித் தேயுமுதலியவற்றிற்கும், உருவந் தேயுமாத்திரைக்கேயன்றிப் புனன்முத லியவற்றிற்கும், இரதம் புனன்மாத்திரைக்கேயன்றி நிலத்திற்குமுண்மையா னென்க. அல்லதூஉஞ், சாத்துவிகரூபமான அறிகருவியை அறியாமையைச் செய்யுந் தமோகுணரூபமான பூதத்தின்காரியமென்றல் சாலாமையறிக.

## கன்மேந்திரியம்.

இனி, இராசதவாங்காரத்திற் றோன்றுங் கன்மேந்திரியம் ஐந்தாவன வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்பனவாம். இவையும் அவ்வ வுறுப்பின்பெயர் அவ்வவற்றையதிட்டிக்கும் இந்திரியங்கட்கு ஆகுபெயரா யின. இவ்வைந்துந் தொழில்செய்யுங்கருவியாகலின், இராசதவாங்காரத்திற் றோன்றினவாதல் பொருத்தமுடைமை கண்டுகொள்க.

செவிமுதலிய ஞானேந்திரியங்கள் ஆன்மாவின் ஞானசத்திமாத்தி ரையே விளக்குகிற்பனவாகலின், கிரியாசத்தியைவிளக்குதற்குக் கன்மேந் திரியமைந்தும் வேண்டப்படுமென்க. ஈண்டுக் கன்மமென்றது ஆன்மாவின் கிரியாசத்தியை. ஞானசத்தியுங் கிரியாசத்தியும் இயற்கையாற் றம்முள் வேறுபாடுடையவல்லவாயினுஞ், செயற்கையான் வேறுபாடுடைமையின், கருவிகளும் வேறுவேறு வேண்டப்பட்டன. ஆன்மாவின் ஞானசத்தி ஒன் றாயினும் அறியப்படுஞ் சத்தமுதலிய விடயங்கள் ஐவேறுவகைப்படுதல் பற்றி அறிகருவி ஐந்தாயினாற்போலக், கிரியாசத்தியும் ஒன்றாயினும், செய் யப்படும் புடைபெயர்ச்சித்தொழில் வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தமென்று ஐவேறுவகைப்படுதல்பற்றித் தொழிற்கருவியும் ஐந்து வேண்டப்பட்டனவென்பது.

அற்றேல், புருவநெரித்தல் பற்கடித்தல் சிரமசைத்தன்முதலிய தொழில்களுமுண்மையின், புடைபெயர்ச்சி ஐவகைத்தென்றல் சாலாமை யின், அவற்றைச்செய்யுங் கருவியாகிய இந்திரியங்களும் பலவாதல் வேண்டு மாகலின், ஐந்தென்றல் சாலாதெனின்,—அற்றன்று; புருவநெரித்தன்முதலி யன பாணியின்றொழிலாகிய இடுதலேற்றலின் வகையாயடங்குதலின், இந் திரியங்கள் உடலெங்கும் வியாபகமெனக்கோடலின், பாணியிந்திரியம் புருவநெரித்தன்முதலிய தொழில்களைச் செய்யுங்கால் அவ்வவுறுப்புக்களை அதிட்டித்துநின்று செய்யுமெனக்கொள்க. இவ்வாறே உடம்பினிகழும் எல்லாத்தொழில்களும் வசனமுதலிய ஐந்தினும் அடங்குமாறு அறிந் தடக்கி, வாக்குமுதலிய ஐவகையிந்திரியங்களுள் ஒன்றின்றொழிற்பாடாதல் கண்டுகொள்க.

பாணி முதலியவிந்திரியங்கள் ஏனையுறுப்புக்களையும் அதிட்டிக்குமாயினும், பாணிமுதலியவற்றிற்கு விசேடவதிட்டானமாதல்பற்றிப் பாணிமுதலிய பெயர் பெற்றனவெனக் கொள்க. வாக்குப் பாதமுதலிய உறுப்புக்களே அவ்வத்தொழிற்குக் கருவியாமென்றுரைப்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; வாக்குப் பாதமுதலிய உறுப்புள்வழியும் அவ்வத்தொழில் நிகழுமாறின்றி மூங்கையும் முடமும் முதலியனவாதல் காண்டுமாகலின், ஞானேந்திரியம்போலக் கன்மேந்திரியங்களும் அவ்வவுறுப்புக்களின் வேறாய் அவற்றை அதிட்டித்துநிற்பன உளவெனக்கொள்க.

அற்றேல், ஞானேந்திரியங்களால் நிருவிகற்பமாயறிந்த விடயங்கள் பலவற்றுள், ஒன்றனைத் தூக்கிச் சித்தஞ் சிந்திப்ப, அதன்பின் மனஞ் சங்கற்பவிகற்பங்கள் செய்தபின் ஆங்காரம் ஒருப்பட்டெழ, அதனைப் புத்தி நிச்சயித்தமாத்திரையே சுக துக்க மோகரூபமாய் ஆன்மாவிற்குப் போக்கியமாதலின், கன்மேந்திரியங்களாற் பயனென்னையெனின்,—அற்றன்று; சிறுபான்மை அங்ஙனம் நிச்சயித்தமாத்திரையே போக்கியமாமாயினும், நிச்சயித்தபொருள் மீள ஆங்காரத்தால் யான் நிச்சயித்தேனெனவும், யான் இதனைச் செய்வேனெனவும் ஒருப்பட்டெழுந்து செய்யுமாறு மனத்தாற் சங்கற்பவிகற்பங்கள்செய்து எண்ணியபின் மீள ஞானேந்திரியங்களான் அறிந்து கன்மேந்திரியங்களாற் காரியப்பட்டு மீளவும் முறையானே புத்திதத்துவத்தின் வந்து போக்கியமாதலே பெரும்பான்மையாகலின், கன்மேந்திரியங்கள் ஒருதலையான் வேண்டப்படுமென்க.

இனிச், சாங்கியர் ஆன்மாவுக்கு ஞானசத்திமாத்திரையேயன்றிக் கிரியாசத்தி இல்லையெனவும், ஆன்மாவின் சந்நிதியின் உடம்பிற் கிரியைநிகழுமெனவுங் கூறுவர். சந்நிதிமாத்திரையானே சடத்தின்கட் கிரியைநிகழுமாயின் வியாபகமாகிய ஆன்மாவின்சந்நிதி யாண்டுமுண்மையின், விசேடமின்மையாற் குடமுதலியவற்றினுங் கிரியை நிகழ்தல் வேண்டும், அது காணாமையானுஞ், சித்துக்கன்றிச் சடத்துக்குக் கிரியையின்மையானும், ஞானக்கிரியாரூபமாகிய சத்தி ஆன்மாவைப்பற்றிநிற்பதன்றிப் புத்திதத்துவமுதலிய சடத்தைப்பற்றி நில்லாதெனவும்; அவை விளங்குதற்கு இவை கருவியாதன்மாத்திரையேயெனவும் அறிக.

இனித், தார்க்கிகர் இந்திரியங்கள் ஆன்மாவின்கண் ஞானமுதலியவற்றைப் பிறப்பிப்பனவன்றி, முன்னுள்ளவற்றை விளக்குவனவல்லவென்பர். இல்லது தோன்றுதென்பது சற்காரியவாதத்துட் கூறினமையாலானுங், குணியினோடு எக்காலமும் நீக்கமின்றிநிற்பது குணமாவதன்றி, இடையே தோன்றியழிவது குணமாகாமையானும் அது பொருந்தாதெனவும்; அநாதியே ஞானக்கிரியாசத்திகள் மலத்தாற் றடையுண்டமையின், பாடாணம்போற் கிடந்த ஆன்மாவுக்குத் தடையைநீக்கி ஞானக்கிரியைகளை விளக்குதன்மாத்திரையே இந்திரியங்களின் தொழிற்பாடெனவும் உணர்க.

இருட்காலத்தின் விளக்குள்வழிப் பொருள்கள் விளங்கும்; விளக்கு நீங்கியவழி விளங்கா, அதுபற்றிப் பொருள்கள் அங்ஙனந் தோன்றியழிந்

தனவெனப்படா; அதுபோல, மலத்தாற் றடையுண்டுநிற்கும் பெத்தகாலத்தில் ஆன்மாவின் ஞானக்கிரியைகள் கருவிகள்கூடியவழி விளங்கும்; அவை நீங்கியவழி விளங்கா; அதுபற்றித் தோன்றியழிவனவெனப்படா வென்க.

அற்றேல், இமையாடுதலுமின்றி ஒருவிடயத்தை இடையறாதுநோக்கிய வழியும் அநுபவஞானங் கணந்தோறும் வெவ்வேறாய் நிகழுமாறென்னை? ஆண்டுத் தாண்டற்குரிய கருவிகளாற் குறைவில்லையாலோவெனின்,—அற்றன்று; ஞானக்கிரியைகளை விளக்கும் புத்திதத்துவமுதலிய கருவிகளின் தொழிற்பாடு சந்தானமாய்க் கணந்தோறும் வேறுபட்டுநிகழ்தலின், அது பற்றி ஞானமுஞ் சந்தானமாய் விளங்குதலின், அவ்வாறு அநுபவிக்கப் படுமென்க.

இதனானே அங்ஙனம் அநுபவநிகழ்தலேபற்றி ஞானங் கணபங்க மென்னும் புத்தர்மதமும் மறுக்கப்பட்டவாறு அறிக.

## தன்மாத்திரை.

இனித், தாமதாங்காரத்திற் றோன்றுந் தன்மாத்திரை ஐந்தாவன சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் என்பனவாம். இவையைந்துஞ் சுரோத்திராதி வாக்காதியாகிய இருவகை இந்திரியங்கட்கும் முறையே இடமாய்த் தேரூர்வானுக்குத் தேர்போல அவை அறிதலுஞ் செய்தலுமாகிய தத்தந்தொழிற்பாட்டினைச் செய்தற்கண் மதுகையைவிளைத்துநிற்றன்மாத்திரைக்கே கருவியாகலின், இவை தாமதாங்காரத்திற் றோன்றினவாதல் பொருத்தமுடைமை அறிக.

அற்றேல், செவிமுதலிய இந்திரியங்கட்குச் செவி வாய்முதலியவுறுப்புக்கள் இடமென மேற்கூறினமையின், ஈண்டுச் சத்தமுதலிய தன்மாத்திரை இடமென்றல் மலைவாம்பிறவெனின்,—ஆகாது; தேரூர்வானுக்குத் தேரும், தேரோடுநிலமும் இடமெனப்படுதல்போல இரண்டுமிடமாதல் அமைவுடைமையானென்க.

இவற்றுள், வல்லோசை மெல்லோசைமுதலிய சிறப்புவகை ஓசைகளையெல்லாம் உள்ளடக்கிப் பொதுமையான் ஓசைமாத்திரையாய்ச் சூக்குமமாய்நின்றது சத்ததன்மாத்திரையெனவும், அவ்வோசையொடுகூடத் தட்பம் வெப்பம் முதலிய சிறப்புவகைப் பரிசங்களையெல்லாம் உள்ளடக்கிப் பொதுமையாற் பரிசமாத்திரையாய்ச் சூக்குமமாய்நின்றது பரிசதன்மாத்திரையெனவும், அவ்விரண்டனோடுகூட வெண்மை செம்மை முதலிய சிறப்புவகையுருவங்களையெல்லாம் உள்ளடக்கிப் பொதுமையான் உருவமாத்திரையாய்ச் சூக்குமமாய்நின்றது உருவதன்மாத்திரையெனவும், அம்மூன்றனோடுகூடத் தித்திப்புப் புளிப்பு முதலிய சிறப்புவகைச் சுவைகளையெல்லாம் உள்ளடக்கிப் பொதுமையாற் சுவைமாத்திரையாய்ச் சூக்குமமாய்நின்றது இரததன்மாத்திரையெனவும், இந்நான்கனோடுகூட நறுநாற்றந் தீநாற்றமென்னும் இருபகுதிச் சிறப்புவகைக் கந்தங்களையெல்லாம் உள்ளடக்கிப் பொதுமையாற் கந்தமாத்திரையாய்ச் சூக்குமமாய்நின்றது

கந்ததன்மாத்திரையெனவும், இவை முறையே ஆகாயமுதலிய பெரும்பூத மைந்திற்கும் முதற்காரணமாமெனவும் அறிக.

அற்றேல், ஆகாயமுதலிய ஐம்பெரும்பூதங்கட்குச் சத்தமுதலிய தன் மாத்திரையே முதற்காரணமென்னுது, தாமதாங்காரமே முதற்காரண மென்றுற்படும் இழுக்கென்னையெனின்,—அற்றன்று; ஆகாயம் பலவேறு வகைப்பட்ட சத்தமென்னும் ஒருகுணமுடையது; வாயுப் பலவேறுவகைப் பட்ட சத்தம் பரிசம் என்னும் இரண்டுகுணமுடையது; தேயுப் பலவேறு வகைப்பட்ட சத்தம் பரிசம் உருவம் என்னும் மூன்றுகுணமுடையது; அப்புப் பலவேறுவகைப்பட்ட சத்தம் பரிசம் உருவம் இரதம் என்னும் நான்குகுணமுடையது; புடவி பலவேறுவகைப்பட்ட சத்தம் பரிசம் உரு வம் இரதம் கந்தம் என்னும் ஐந்துகுணமுடையதாகலின், இக்குணங்கள் காரணத்திற் சூக்குமமாய் நிகழ்ந்தன்றிக் காரியத்திற் றூலமாய் நிகழ்தல் கூடாதென்பது நியமமாகலின், தாமதாங்காரங் கேவலமாய்நிற்பதாக லின், அதன்கண்ணே மயிலண்டசலத்திற் பஞ்சவன்னம்போலச் சத்த முதலிய குணங்கள் சூக்குமமாய் நிகழ்தலின்மையின், அங்ஙனஞ் சூக்கும நிகழ்ச்சியுடைய தன்மாத்திரைகளே தூலநிகழ்ச்சியுடைய பெரும்பூதமாய்ப் பரிணமிக்குமென்று உணர்ந்துகொள்க.

அற்றேல், அங்ஙனம் பெரும்பூதங்கட்குக் காரணமாய்ப் பொதுமை யினிற்குந் தன்மாத்திரை ஒன்றுதலேயமையும்; ஐந்துளவாதன் மிகையாமா லெனின்,—அற்றன்று; காரணமாய தன்மாத்திரை ஒன்றுயவழி, விசேட மின்மையின், காரியமாகிய பெரும்பூதங்களைந்தும் ஐந்துகுணமுமொப்ப வுடையவாதல் வேண்டும். அங்ஙனமன்றி ஆகாயத்திற்கு ஒருகுணமும், வாயுவுக்கு இரண்டுகுணமும், தேயுவுக்கு மூன்றுகுணமும், அப்புவிற்கு நான்குகுணமும், புடவிக்கு ஐந்துகுணமும் இங்ஙனம் நிகழ்தல் காரணவேறு பாட்டானன்றி உண்டாகாமையின், அவ்வாறுநிற்குந் தன்மாத்திரை ஐந் துளவாதலறிக.

இதனானே தன்மாத்திரைகட்கும் பூதங்கட்குந் தம்முள்வேற்றுமை, முளையும் மரமும்போலச் சூக்குமமாய்நிற்றலுந் தூலமாய்நிற்றலுமாத்தி ரையேயன்றிப் பிறிதில்லையெனக் கொள்க.

இத்தன்மாத்திரைகளைந்துந் தாமதாங்காரத்தினின்றும் ஒன்றன்பின் ஞென்று முறையானே தோன்றுங்கால் ஒரோவொருகுணம் அதிகமாகத் தோன்றுதலின், அவ்வதிககுணத்தின் பெயரேபற்றித் தலைமைபற்றியவழக் காய்ப் பரிசதன்மாத்திரை உருவதன்மாத்திரை இரததன்மாத்திரை கந்த தன்மாத்திரையெனப்படுதலும், கந்தமொழிந்த நான்குகுணமும் பொது வாயினும் அம்முறையேபற்றிச் சிறப்புக்குணமெனப்படுதலும் பொருந் துமாறறிக.

குணகுணிகளினியல்பு.

அற்றேல், சத்ததன்மாத்திரையாய்நிற்பது சத்ததன்மாத்திரை. பரிச தன்மாத்திரையாய் நிற்பது பரிசதன்மாத்திரை. உருவதன்மாத்திரையாய்

நிற்பது உருவதன்மாத்திரையென்று இங்ஙனங் கூறியவாற்றால், தன்மாத்திரைகள் குணரூபமாத்திரையாய்நிற்குமென்பது பெறப்பட்டது; குணியுமுளவாயின், அது மாத்திரையெனப் பிறிதினியைபுநீக்கிக் கூறப்படுதல்பொருந்தாமையின். அங்ஙனமாகவே, குணரூபமாகிய தன்மாத்திரைகள் குணிரூபமாகிய ஆகாயமுதலியவற்றிற்குக் காரணமாதல் அமையாதெனின்,—அறியாதுகூறினாய்; புத்திமுதல் நிலமீறாகிய உலகமெல்லாம் முக்குணத்தின் காரியமென்றதனை மறந்தாய்போலும். உலகமெல்லாஞ் சாத்துவிககுணமயமாகிய பிரகாசரூபமுஞ் சாந்தரூபமுஞ் சுகரூபமும், இராசதகுணமயமாகிய பிரவிருத்திரூபமுங் கோரரூபமுந் துக்கரூபமும், தாமதகுணமயமாகிய நியமனரூபமும் மூடரூபமும் மோகரூபமுமேயாய் நிற்றலின், இத்தன்மையவற்றிற்கு முதற்காரணம் மூலப்பகுதியேயன்றிப் பிறிதன்றெனவும்; அங்ஙனமாகலின், உலகமெல்லாங் குணரூபமேயெனவும்; மனிதர் பலர்திரண்டவழிப் படையெனவும், மரங்கள் பலசெறிந்தவழிப் பொதும்பரெனவும் பெயர்பெற்று அநுபவமாய் வழங்கப்படுமாறுபோலக், குணங்களே தம்முள் தொக்குக் குணியெனவுந் திரவியமெனவும் பெயர்பெற்று அநுபவமாய் வழங்கப்படுவனவன்றிக், குணியென வேறின்மையின், குணகுணிகட்குத் தம்முட் பெரும்பாலும் வேற்றுமைகூறும் வைசேடிகர்முதலியோர் மதஞ் சைவசித்தாந்தத்திற் கேலாதெனவும்; இங்ஙனமாகலின், தன்மாத்திரையாகிய சத்தமுதலிய சூக்குமத்தினின்றும் ஆகாயமுதலிய பெரும்பூதங்கள் தோன்றுதல் அமைவுடைத்தெனவும் ஓர்ந்துகொள்க.

இன்னும், வைசேடிகர்முதலியோர் அவயவத்தின்கூட்டமே அவயவியென்பதுணராது அவயவத்திற்கும் அவயவிக்கும் பெரும்பாலுந் தம்முள் வேற்றுமைகூறுதலும், கன்மஞ் சாமானியம் விசேடம் என்பவற்றைத் திரவியத்தின் வேறென்றலும் பொருந்ாதென்பதும், இங்ஙனமாகவே, தாதான்மியசம்பந்தத்தின் வேறாய்ச் சமவாயசம்பந்தமொன்றில்லையென்பதுங் குணகுணிகட்குக் காட்டியநயம்பற்றி ஓர்ந்துணர்க.

அற்றேல், கண்ணாலே அதனைக்கண்டேன் அதனையே கையாற்றொட்டேன் என்றுணர்வுநிகழ்தலின், கண்ணிந்திரியத்துக்குந் துவக்கிந்திரியத்துக்கும் ஒருபொருளே விடயமாதல்பெறும்; பெறவே, கண் பரிசத்தையறிதலும், துவக்கு உருவத்தையறிதலுங் கூடாமையின், உருவமும் பரிசமுமென்னும் இரண்டுமின்றி, அவற்றின்வேறாய் இரண்டிந்திரியத்திற்கும் விடயமாவதாகிய குணிப்பொருளொன்றுண்டென்பது துணியப்படுமாலோவெனின்,—அற்றன்று; கண்முதலிய இந்திரியங்கள் தத்தமக்குரிய உருவமுதலியவற்றைமாத்திரையே அறியுமென்பது நியமமாகலின், உருவமுதலிய குணங்களின் வேறாய்க் குணிப்பொருளொன்றுண்டெனக் கொள்ளினும் அஃதிந்திரியத்திற்கு விடயமாதல் கூடாமையானும், குணத்தின்வேறாய்க் குணியென்பதொன்றில்லையென் ஈண்டுக் காட்டிய பிரமாணங்கள் வலியுடைமையானும், அதனைக்கண்டேன் அதனைப்பரிசித்தேன் என இரண்டிந்திரியத்திற்கும் ஒன்றே விடயமாகநிகழுமுணர்வு மயக்கவுணர்வென்றாதல், தொக்கவழிக் குணியெனப்பெயர்பெற்று ஒன்றாய்நிற்றல்பற்றி நிகழும் உப

சாரவுணர்வென்ருதல் கொள்வதன்றி, அதுபற்றிக் குணிப்பொருள் வேறெனக்கோடல் பொருந்தாமையறிக.

இங்ஙனமாகலிற் குணங்களே சமுதாயத்தினேக்கிற் குணியென்றும், வேறுவேறுநோக்கிற் குணமென்றும் வழங்கப்படுவனவாமென்பது கண்டுகொள்க. இன்னும் விரிப்பிற்பெருகும்; பவுட்கரமுதலியவற்றுட் காண்க.

இதனுனே ஈண்டுப் போந்தது சத்தமுதற் கந்தமீருகிய ஐந்துகுணங்களும் பகுப்பின்றிப் பொதுமையினின்ற அவத்தை கந்ததன்மாத்திரையென்பதூஉம், சத்தமுதல் இரதமீருகிய நான்குகுணமும் பகுப்பின்றிப் பொதுமையினின்ற அவத்தை இரததன்மாத்திரையென்பதூஉம், சத்தமுதல் உருவமீருகிய மூன்றுகுணமும் பகுப்பின்றிப் பொதுமையினின்ற அவத்தை உருவதன்மாத்திரையென்பதூஉம், சத்தமும் பரிசமுமாகிய இரண்டுகுணமும் பகுப்பின்றிப் பொதுமையினின்ற அவத்தை பரிசதன்மாத்திரையென்பதூஉம், சத்தகுணமொன்றும் வல்லோசை மெல்லோசைமுதலிய பகுப்பின்றிப் பொதுமையினின்ற அவத்தை சத்ததன்மாத்திரையென்பதூஉம், இதனுனே குணமே தன்மாத்திரையெனப்படுமென்பதூஉம், இங்ஙனமாகலின் ஒரோவொருகுணமேற்றமாகவுடைய ஆகாயமுதலிய ஐந்திற்கும் இவை முறையே காரணமாதல் பெறப்பட்டதூஉமாமென்க.

## ஆகாயம்.

இனிச், சத்ததன்மாத்திரையினின்றுந் தூலமாய் ஆகாயந்தோன்றிப் பலவேறுவகைப்பட்ட சத்தமுடைத்தாய்ப் பிராணிகள் போக்குவரவு முதலிய தொழில்செய்தற்கு இடங்கொடுத்துநிற்கும்.

ஆகாயம் உண்டென்பது, வல்லோசை மெல்லோசை முதற் பலவேறுவகைப்பட அறியுஞ் சத்தகுணங்கள் பிரிப்பின்றித் தொக்குநிற்பதாகிய குணிப்பொருளையின்றி உளவாகாவென்பதனுனும், இடங்கொடுத்தல் வேண்டாதவழி, இடைவெளியில்லாத நிலத்தினகத்தும் போக்குவரவுசெய்தல் வேண்டும்; அது கூடாமையாற் போக்குவரவு செய்தற்கேதுவாக இடங்கொடுத்தலுண்டென்பது ஒருதலையாற் பெறப்படுதலின், அவ்விடங்கொடுத்தற்குக் காரணம் வேறில்லையென்பதனுனுந் துணியப்படும்.

அற்றேல், ஆகாயமுண்மைக்கு இங்ஙனம் வழியளவைகோடல் வேண்டா; இவ்வாகாயத்திற் பறவையுண்டு இவ்வாகாயத்திற்பறவையில்லையென ஆகாயத்திற்கும் பறவைக்குமுளதாகிய சையோகங் காட்சிப்புலனுதல் எல்லார்க்குமொப்பமுடிந்தமையின், சையோகப்பொருளிரண்டுங் காட்சிப்புலனுயவழியன்றிச் சையோகங் காட்சிப்புலனுதல் கூடாமையின், அதுபற்றி ஆகாயமுண்மை காட்சியளவையானே துணியப்படுமாலெனின்,— அற்றன்று; ஆகாயத்தினுளதாகிய ஒளிமண்டலங் காட்சிப்புலனுதலின், அவ்வொளிமண்டலத்தோடு பறவைக்குளதாகிய சையோகமே காட்சிப்புலனுவதாகலின், அதுபற்றி ஆகாயங் காட்சிப்பொருளென்றல் சாலாமையறிக.

அற்றேல், ஆகாயம் புகைநிறமாய்க் காணப்படுதல்பற்றிக் காட்சிப் பொருளென்னுமோவெனின்,—என்னும்; சேய்மைக்கட்கண்ட புகைநிறம் அணிமைக்கட்சென்றவழிக் காணப்படாமையின், அது திரிவுகாட்சியென வும், அத்திரிவுகாட்சிக்கிடமும் ஒளிமண்டலமேயெனவுமுணர்க.

அற்றேல், இடங்கொடுத்தற்குக் காரணமென்பதுபற்றி ஆகாயமுண் டென்றல் பொருந்தாது; நிலமுதலிய பூதங்களின் அபாவமே இடங்கொடுத் தற்குக் காரணமாமாலெனின்,—அற்றன்று; மேற் சற்காரியவாதத்துட் கூறியமுறையானே அபாவமாவது பாவம்போலப் பாவப்பொருளின் றன்மையேயன்றி வேறன்மையாற் பொருட்டன்மை பொருளின்கணிற் பதேயாதலின், அவ்வாறன்றி, யாங்கணும் நிறைந்துநின்றிடங்கொடுக்கும் ஆகாயம் நிலமுதலியவற்றின் அபாவமாமாறு யாண்டையதென்க.

அற்றேல், பாவப்பொருட்கு மறுதலையாகிய அபாவத்தைப் பாவ ப்பொருளின்றன்மையென்பது எவ்வாறெனின்,—அறியாதுகடாயினுய்; தார்க்கிகர்முதலியோர் பாவப்பொருள் புலனாகாமைக்குக் காரணம் அபாவ மென்பர். அது பொருந்தாது; பாவப்பொருள் புலனாகாமையே அபாவ மென்னுஞ் சொற்குப் பொருளென்பது சித்தாந்தமாதலின், பொருள்புல னாகாமை பொருட்டன்மையென்றற் கிழுக்கென்னையென்க.

உலகத்துப் பொருளெல்லாம் முக்குணமயமாதலின், அவை இராசத குணமிகுதிப்பாட்டாற் றூலமாய்க் காரியப்பட்டு விளங்கிநின்ற அவத்தையி னீங்கித், தாமதகுணமிகுதிப்பாட்டாற் சூக்குமமாய்ச் சத்திவடிவாய் விளங் காதுநின்ற அவத்தையே புலனாகாமையாகிய அபாவமெனவும், அஃதவ் வப்பொருளின் றன்மையெனவும், அதற்குக்காரணந் தாமதகுணமிகுதிப் பாடேயாதலின், வேறுமோர்காரணங்கோடன் மிகையாமெனவும், அங் ஙனஞ் சத்திவடிவாய்நின்ற காரணவத்தையினீங்கி, இராசதகுணமிகுதிப் பாட்டாற் றூலமாய்க் காரியப்பட்டு வியத்தமாய்நின்ற அவத்தையே புலனா தலாகிய பாவமெனவும், அதுவும் அவ்வப்பொருளின் றன்மையேயாதலின், அதற்குக்காரணம் இராசதகுணத்தின் மிகுதிப்பாடேயாமெனவும், இவ் விரண்டவத்தைகளுந் தம்முண் மறுதலையன்மையின், அவ்வக்குணங்கண் மேற்பட்டகாலத்து அதுவது நிகழ்தல் பொருந்துமெனவும் மேற் சற்காரிய வாதத்துட் கூறியதுபற்றி உணர்ந்துகொள்க.

இங்ஙனமாதலின், ஈண்டுக் குடமில்லையென்பதற்குப் பொருள் ஆண் டுச் சையோகக்கிழமையாற் காட்சிப்புலனாதலையுடைய குடம் ஈண்டு விசே டணவிசேடியமாதற் கிழமையாற் புலனாகாமையையுடைத்தென்பதாம். முயற்கோடில்லையென்பதற்குப் பொருள் ஆவின்கட் சமவாயக்கிழமையாற் காட்சிக்குப் புலனாதலையுடைய கோடு முயலின்கண் விசேடணவிசேடிய மாதற்கிழமையாற் புலனாகாமையையுடைத்தென்பதாம். குடமுடைந்த தென்பதற்குப் பொருள் இராசதகுணமிகுதிப்பாட்டான் விளங்கித் தூலா வத்தையினின்ற குடந் தாமதகுணமிகுதிப்பாட்டான் விளங்காது சூக்கு மாவத்தை யெய்திநின்றதென்பதாம். குடந் தோன்றிற் றென்பதற்குப்

பொருள் தாமதகுணமிகுதிப்பாட்டான் விளங்காது சூக்குமாவத்தை யெய்திநின்ற குடம், பின் இராசதகுணமிகுதிப்பாட்டான் விளங்கித் தூலாவத்தையுடைத்தாயிற் றென்பதாம். ஆகவே, காரியப்பொருளெல்லாங் கிழமைவேறுபாட்டான் முக்காலத்தும் புலனுகாமைபற்றிப் பொய்ப்பொருளெனவும், அவ்வக் குணமிகுதிப்பாட்டான் நிகழ்காலத்து விளங்கி ஏனைக் காலத்து விளங்காமைபற்றி அழிபொருளெனவும் அநுபவமாய் வழங்கப் படுவனவன்றிப், பொய்ப்பொருள் அழிபொருளென்பன இவற்றின் வேறில்லையென்பதுணர்ந்துகொள்க.

இனி, அபாவம் வேறுபொருளெனக் கொள்ளுவார்க்கும் நிலமுதலியவற்றின் அபாவம் ஆகாயமென்றல் பொருந்தாது; என்னை? ஈண்டு அபாவமென்பது நிலமுதலியவற்றின் * என்றுமபாவமோ? முன்னபாவமோ? அழிவுபாட்டபாவமோ? ஒன்றினென்றபாவமோ? எனக்கடாயினர்க்கு என்றுமபாவமென்றல் பொருந்தாது; எய்தியதற்குவிலக்காகிய என்றுமபாவம் அவ்வவற்றின் நிலைக்களத்தன்றி நில்லாது; ஆகாயம் அவ்வாறன்றி யாண்டுமாய்நின்று இடங்கொடுக்குமாகலானென்க. இனி, நிலமுதலியவற்றின் முன்னபாவம் ஆகாயமென்றலும் பொருந்தாது; நிலமுதலியவற்றின் முன்னபாவம் நிலமுதலியன தோன்றியவழிக் கெட்டுப்போதலின், அவற்றிற்கிடங்கொடுத்தல் கூடாமையானென்பது. இனி, அவற்றின் அழிவுபாட்டபாவமென்பதுங்கூடாது; அவை அழிவுபட்டபின்னர்த் தோன்றும் அபாவம் முன் அவற்றிற்கிடங்கொடுத்தல் கூடாமையானென்பது. இனி, அவற்றது ஒன்றினென்றபாவமென்றல் வேண்டும்; வேண்டவே, குடத்தினதொன்றினென்றபாவத்திற்கு நிலைக்களமாகிய ஆடைபோல நிலமுதலியவற்றின் ஒன்றினென்றபாவத்திற்கு நிலைக்களம் வேறுண்டென்பது பெறப்படுதலின் அதுவே ஆகாயமாகலான், அதனை அபாவமென்றல் பொருந்தாமையறிக.

அற்றேல், அஃதங்ஙனமாக; சத்தம் ஆகாயத்தின்குணமென்றதென்னை? வல்லோசை மெல்லோசைமுதலிய வேறுபாடுடைமையானும், தன்பற்றுக்கோடுநிற்குங்காறும் நில்லாது இடையே தோன்றியழிதலானும், தோன்றியவிடத்தன்றியும் வேறிடத்திற் சென்றுபுலனுதலானுஞ் சத்தந் திரவியமென்றலே பொருத்தமுடைத்தாதலின், அதனை ஒன்றன் குணமென்றல் பொருந்தாதெனின்,—அற்றன்று; ஈண்டு வல்லோசை மெல்லோசையென்பன உயர்ந்தவோசை, தாழ்ந்தவோசையென்றன்றிப் பிற பொருள்படாமையின், உயர்ச்சி தாழ்ச்சிமுதலிய வேறுபாடு நாற்றமுதலிய குணங்கட்கேயன்றித் திரவியத்திற்கின்மையிற் பொன் இரும்புமுதலியவற்றினும் உயர்ச்சி தாழ்ச்சி அவ்வக்குணம்பற்றி வழங்கப்படுமன்றிப் பிறிதின்மையின், வன்மை மென்மைமுதலிய வேறுபாடே ஓசை குணமென்றற்குச் சான்றாகலின், அதுபற்றித் திரவியமென்றல் பொருந்தாது.

* இவற்றை முறையே, அத்தியந்தாபாவமெனவும், பிராகபாவமெனவும், பிரத்துவஞ்சாபாவமெனவும், அந்நியோந்நியாபாவமெனவும் வழங்குவர் வடநூலார்.

இனித், 'தன்பற்றுக்கோடு நிற்குங்காறும் நில்லாது இடையே தோன்றி நின்றழியுமென்பதுபற்றி ஓசை குணமன்றென்பதும் பொருந்தாது; இருட் கண்ணதாகிய குடத்தினுருவம் விளக்குவந்தவழி விளங்கி அல்லுழி விளங்காமைபோல, ஓசையும் இதழ் நா அண்ணமுதலிய அவ்வக் கருவி களின் றொழிற்பாடுநிகழ்ந்தவழி விளங்கியும், அல்லுழி விளங்காமையும் மாத்திரையேயன்றித் தோன்றியழிதலின்மையான், அது போலியேது வென்றொழிக.

இனித், தோன்றியவிடத்தன்றி வேறிடத்துச் சென்றுபுலனுமென்பது பற்றி ஓசை திரவியமென்றலும் போலியென்றொழிக; என்னை? குடமுழா முதலியவற்றினெழுந்த ஓசை ஆண்டே அடங்கிநின்றொழிய, நீர்த்தரங்கம் போலத் தாரையாய் வேறுவேறோசை மேன்மேற் றோன்றுமுறையானே செவியணிமைக்கணெழுந்தவோசை செவிக்குப் புலனுமெனக் கோடலின் குடமுழாமுதலியவற்றினோசை ஆண்டே அடங்குதலன்றி, வேறிடத்திற் செல்லாமையானென்க.

இதனானே முதற்கணெழுந்தவோசைக்குக் குடமுழாமுதலியனவே குணியாயினும், இரண்டாவதுமுதற் செவியின்காறும் பரம்பரையாய்த் தோன்றும் ஓசைகட்குக் குணி ஆகாயமேயன்றிப் பிறிதில்லையென்பதும் உணர்ந்துகொள்க. குணகுணிகளினியல்பு * மேற்காட்டினும்; கடைப் பிடிக்க. வைந்தவவோசை பௌதிகவோசைகட்குத் தம்முள்வேற்றுமை யும் † மேற்காட்டினுங் கடைப்பிடித்துக்கொள்க.

வாயு.

இனிப், பரிசதன்மாத்திரையினின்றுந் தோன்றிய வாயுச், சத்தம் பரிச மென்னும் இரண்டுகுணமுடைத்தாய்ச், சலித்துத்திரட்டுதற் றொழிற்பாட்ட தாய், உடம்பினுள்ளும் பிராணன் அபானன் முதலிய பத்துவகைப்பட்டி யங்கி, எழுதல் இருத்தன்முதலிய தொழிற்பாட்டிற்கேதுவாய் எல்லாவுயிர்க் கும் உபகாரமாமென்றுணர்க.

தேயு.

இனி, உருவதன்மாத்திரையிற்றோன்றிய தேயுச், சத்தம் பரிசம் உருவ மென்னும் மூன்றுகுணமுடைத்தாய்ப், பாகஞ்செய்தன்முதலிய தொழிற் பாட்டதாய், உலகத்திற் காருகபத்தியம் ஆகவனீயந் தென்றிசையங்கி யென்னும் வைதிக அங்கியும், இவற்றின்வேறாகிய சைவ அங்கியுமாய்நின்று வினைகட்குபகாரமாயும், அகத்தினுள் விந்துவங்கியாய்நின்று உண்டவற்றை யெல்லாம் பாகஞ்செய்து உயிர்கட்குப் பெரிதும் உபகாரமாகியும் இங்ஙனம் பலவேறு வகைப்படும்.

வெந்நீர்முதலியவற்றினுளதாகிய தேயுவுக்கு உற்பூதரூபகுணமின்று யினும், அதுநற்பூதரூபமுண்டென்பதும் முன்னையுருவம்பற்றியுணரப்படுதலா னும், விளக்கொளிமுதலியவற்றிற்கு உற்பூதபரிசமின்றாயினும் அதுநற்பூத

* பக்கம், கஅச. † பக்கம், கஙச.

பரிசமுண்டென்பதும் விளக்குமுதலியவற்றின் பரிசம்பற்றியுணரப்படுத லானுந் தேயு முக்குணமுடைத்தென்பதற்கு யாண்டும் பிறழ்தலின்மை யின், அஃதுருவதன்மாத்திரையிற் றோன்றுமென்றல் பொருத்தமுடை மை அறிக.

இத்தேயு இந்திரியங்கள்போலப் பொருள்களை விளக்குதலின், சாத்து விகாகங்காரத்திற் றோன்றுதலே பொருத்தமுடைத்தெனின்,—அற்றன்று; குடமுதலியவற்றைநோக்க விளக்குவதாயினும், இந்திரியங்களைநோக்க விள க்கப்படுவதேயாகலின், தாமதாகங்காரத்தினின்றும் அதன்கண்ணதாகிய சாத்துவிககுணத்தான் மிக்குப்பரிணமித்துத் தோன்றியதென்பதே பொரு த்தமுடைத்தென்க.

அப்பு.

இனி, இரததன்மாத்திரையிற் றோன்றிய புனல், இரதமீறாகிய நான்கு குணமுடைத்தாய், நெகிழ்வித்துப் பதஞ்செய்தலாகிய தொழிற்பாட்டதாய், உயிர்களெல்லாந் தன்னாற் சீவித்தற்கேதுவாய் நிற்கும். பனி ஆலி முதலி யனவுங் குளிர்ந்த பரிசமுடைமையிற் புனலேயாமெனவும், ஆண்டுக் கடின ப்பொருள் விரவிநிற்றலான் வல்லென்றாயினவெனவும் உணர்க.

இவ்வாறே அவ்வப்பொருள்களினியல்பெல்லாம் உய்த்துணர்ந்து கொள்க.

பிருதிவி.

இனிக், கந்ததன்மாத்திரையிற் றோன்றிய புடவி, கந்தமீறாகிய ஐந்து குணமுடைத்தாய், உரத்துத்தரித்தலாகிய தொழிற்பாட்டதாய் நிற்கும்.

இப்புடவிதத்துவ முதலியவைந்தும் உடம்பினும் மயிர், எலும்பு, ஓடு, நீர், உதிரமுதலியனவாய் நிற்குமாறு கண்டுகொள்க. ஆகாயம் எல்லாநாடி களினும் ஆங்காரத்தின் விருத்திக்கிடமாய் நிற்குமென்க.

இவற்றுள், ஆகாயத்திற்குச் சத்தகுணம் நீர்த்தரங்கம்போலத் தாரை யாய்த்தோன்றும் எதிரொலிமாத்திரையேயெனவும்; வாயுவுக்கு ஊர்தலைத் தெரிவிப்பதாகிய கசகச ஒலியெனவும்; தேயுவுக்கு எரிதலைத்தெரிவிப்ப தாகிய தமதம ஒலியெனவும்; புனலுக்கு ஒழுகுதலைத்தெரிவிப்பதாகிய சள சள ஒலியெனவும்; புடவிக்குக் கடினத்தைத் தெரிவிப்பதாகிய கடகட ஒலி யெனவும்; இங்ஙனம் வேறுபாடுடைமையானும், அவற்றிற் றோன்றுதல் காண்டலளவைக்குப் புலனாகலானுஞ் சத்தகுணம் ஆகாயமாத்திரைக்கே யென்பார்மதம் பொருந்தாதெனவும்; இனிப், பரிசகுணம் வாயுவுக்கும் புடவிக்குந் தட்பமும் வெப்பமுமில்லாத பரிசமும், தேயுவுக்கு வெப்பப் பரிசமும், புனலுக்குத் தட்பப்பரிசமுமாமெனவும்; உருவகுணந் தேயுவுக்கு ஒளிநிறமும், புனலுக்கு வெண்மையும், புடவிக்கு வெண்மைமுதற் பலநிற முமாமெனவும்; இரதகுணம் புனலுக்குத் தித்திப்புச்சுவையும், புடவிக்கு அறுவகைச்சுவையுமாமெனவும்; அவ்வவற்றின் குணங்களைப் பகுத்து ணர்ந்துகொள்க.

இனி, * ஆகாயத்தினின்றும் வாயுவும், வாயுவினின்றுந் தேயுவும் தேயுவினின்றும் அப்புவும், அப்புவினின்றும் புடவியுந் தோன்றுமென்பார்க்குக் காரியத்தின்குணங் காரணத்தினுமுண்டென்பது நியமமாகலின், புடவிக்குரிய ஐந்துகுணமும் புடவிக்குக் காரணமென்ற புனலுக்குமுளவாதல் வேண்டும்; வேண்டவே, அம்முறைபற்றித் தேயு வாயு ஆகாயங்களும் ஐந்துகுணமுடையவாதல்வேண்டும்; அஃதின்மையான், அவர்மதம் போலியென்றொழிக.

அற்றேல், வேதத்துள் அங்ஙனம் † ஒன்றினொன்று தோன்றுமென்ற வாக்கியத்தோடும், ‡ "இருநில னதுபுன லிடைமடி தரவெரி புகவெரி யதுமிகு—பெருவளி யினிலவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட—விருவர்க ளுடல்பொறை யொடுதிரி யெழிலுரு வுடையவன்" எனச் சங்கார முறைபற்றி வேதவாக்கியப் பொருளொடு வலியுறுத்தோதிய திருப்பாட்டோடும் முரணுமாலெனின்,—அற்றன்று; § வேதஞ் சிவாகமமிரண்டுஞ் செய்த முதற்கருத்தா பரமசிவனொருவனேயாகலின், அவை தம்முண் முரணுமாறின்மையின், ஒரோவழி முரணுவனபோலத் தோன்றியவழி, முரணாதவாறு வன்மைமென்மைபற்றித் தாற்பரியங்கோடல் வேண்டும். அற்றாகலினன்றே ¶ தேயுமுதன் முப்பூதங்கட்கே தோற்றங்கூறி, "இம்முப்பூதமயமே பிரபஞ்சமெல்லாம்" என விரித்தோதிய சாந்தோக்கியவுபநிடதமும், † ஆகாயமுதல் ஐந்திற்குந் தோற்றங்கூறி, "ஐம்பூதமயமேபிரபஞ்சமெல்லாம்" என்னுந் தைத்திரீயவுபநிடதமுந் தம்முண் முரணுவனபோலத்

---

* இதனை, நாகாஶாஜ்ஜாயதே வாயுர் ந வாயோரக்நிஸம்பவ꞉ । நாக்நேராபஸ்ததோ ப்ருத்வீ யதோநித்யதயா ஸ்தித꞉ । காரணாத்குண ஸங்க்ராந்தியுக்தா கார்யேஷு ந ஸ்தித꞉ । வ்யோம்ந꞉ பஞ்சகுணத்வம் ஸ்யாத் ததா ப்ருதிவ்யாதி யதி । தந்மாத்ரேப்யஸ்ஸமுத்பந்நா ததோ வ்யோமாதிபஞ்சகம் । என்னும் பவுட்கராகமத்தான் அறிக. † பூதங்கள் ஒன்றினொன்று தோன்றுமென்னும் வேதவாக்கியம், தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶஸ்ஸம்பூத꞉ । ஆகாஶாத்வாயு꞉ । வாயோரக்நி꞉ । அக்நேராப꞉ । அத்ப்ய꞉ ப்ருதிவீ । என்பதாம்; தைத்திரீயம், உ-க. ‡ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், திருமறைக்காடு, திருவிராகம், எ. § இது, "தோதத்தவ னருமறை யங்க மாகமம்—வகுத்தவன் வளர்பொழிற் கூக மேவினன்—மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்—செகுத்தவ னுறைவிடந் திருவிற்கோலமே" என்னுந் தமிழ்வேதத்தானுந் தெளியப்படும்; திருஞானசம்—நாயனார், திருவிற்கோலம், கூ. ¶ சாந்தோக்கியத்தில், தத்தேஜோऽஸ்ருஜத தத்தேஜ ஐக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி ததபோऽஸ்ருஜத தஸ்மாத்யத்ர க்வச ஶோசதி ஸ்வேததே வா புருஷஸ் தேஜஸ ஏவ ததத்ப்யோ ஜாயந்தே । (சூ - உ - ங) தா ஆப ஐக்ஷந்த பஹ்வ்ய꞉ ஸ்யாம ப்ரஜாயேமஹீதி தா அந்நமஸ்ருஜந்த (சூ - உ - ச) எனவும், தேஷாம் கல்வேஷாம் பூதாநாம் த்ரீண்யேவ பீஜாநி பவந்த்யண்டஜம் ஜீவஜமுத்பிஜ்ஜமிதி । (சூ - ங - க) எனவும் வருதல் காண்க.

தோன்றுதலின், அங்ஙனம் முரணுமைப் பொருட்டு வன்மைமென்மை நோக்கித் தைத்திரீயத்திற்கூறியதே பிரமாணமெனவும், சாந்தோக்கியத்திற்கூறும் வாக்கியங்கட்கும் அதுவே தாற்பரியமெனவும், உத்தரமீமாஞ்சையின் வியததிகரணத்துளோதியதூஉம்; மற்றும் ஆண்டாண்டு முரணுதவண்ணம் ஒன்று முக்கியப்பொருளும், ஒன்று தாற்பரியப்பொருளுமாக வைத்துப் பொருளொருமையுணர்த்தியதூஉமென்க.

அற்றேல், ஈண்டு முக்கியப்பொருள் யாது தாற்பரியப்பொருள் யாதெனின், மேற்கூறிப்போந்த ஏதுக்களான் அவ்வத் தன்மாத்திரைகளின் அவ்வப்பூதங்கள் தோன்றுமென்பதே பொருத்தமுடைத்தென்பது பெற்றாம்ஆகலின், அதுவே முக்கியப்பொருளெனவும், பிரமத்தின் ஆகாயந் தோன்றும் ஆகாயத்தின் வாயுத் தோன்றுமென்று இம்முறையாற் கூறியது மேற்காட்டிய ஏதுவாற் பொருந்தாமையின், அவை முக்கியப்பொருள் படாது தன்மாத்திரையிற் றோன்றுமென்னுந் தாற்பரியப்பொருளே தருமெனவுங் கொள்ளப்படுமென்க.

அற்றேல், என்னையோ அவற்றிற்குத் தாற்பரியத்தாற் பொருள்கொள்ளுமாறெனின், கூறுதும்: சூக்குமபூதமாகிய சத்தமுதலிய தன்மாத்திரை ஐந்திற்குஞ், சதாசிவன் மகேசன் உருத்திரன் மால் அயன் என்னும் ஐவரும் அதிதெய்வங்களாகலின், சதாசிவக்கடவுளுக்குரிய பிரமமென்னும் பெயர் ஆகுபெயராய் அவனுலதிட்டிக்கப்படுஞ் சத்ததன்மாத்திரையினையும் உணர்த்தும்ஆகலின், "பிரமத்தினின்றும் ஆகாயந்தோன்றும்" என்றதற்குத் தாற்பரியம் பிரமமாகிய சதாசிவக்கடவுளான் அதிட்டிக்கப்படுஞ் சத்த தன்மாத்திரையினின்றும் ஆகாயந் தோன்றுமென்பதேயாம். "பிரமம்" எனினும், "பரமான்மா" எனினுமொக்கும்; பரமான்மாவை ஆன்மாவென்றது தலைக்குறைஆகலின், * "ஆன்மாவினின்றும் ஆகாயந்தோன்றும்" என்றதற்கு இதுவே தாற்பரியமென்க.

இனி, ஒரோவொருகுணம் ஏற்றமாகவுடைய வாயுமுதலியநான்குங் கேவலமாய்நின்ற பரிசமுதலியவற்றிற் றோன்றுமையிற் சத்தத்தோடுகூடி விசிட்டமாய்நின்ற பரிசதன்மாத்திரையே வாயுவுக்குக் காரணம்; அத்தன்மைத்தாய பரிசத்தோடுகூடி விசிட்டமாய்நின்ற உருவதன்மாத்திரையே தேயுவுக்குக் காரணம்; அத்தன்மைத்தாய உருவத்தோடுகூடி விசிட்டமாய்நின்ற இரததன்மாத்திரையே புனலுக்குக் காரணம்; அத்தன்மைத்தாய இரதத்தோடுகூடி விசிட்டமாய்நின்ற கந்ததன்மாத்திரையே புடவிக்குக் காரணமென மேற்காட்டினும்ஆதலின், அவ்வுண்மை உணர்ந்துகோடற்பொருட்டு, ஆகாயத்தின் காரணத்தோடுகூடி விசிட்டமாய்நின்ற பரிசதன்மாத்திரையை ஆகாயமெனவும், வாயுவின்காரணத்தோடுகூடி விசிட்டமாய்நின்ற உருவதன்மாத்திரையை வாயுவெனவும், தேயுவின்காரணத்தோடு கூடி விசிட்டமாய்நின்ற இரததன்மாத்திரையைத் தேயுவெனவும், புனலின் காரணத்தோடுகூடி விசிட்டமாய்நின்ற கந்ததன்மாத்திரையைப் புனலென

* ஆத்மந ஆகாஶ ஸம்பூத꞉ | தைத்திரீயம், உ - க.

வும் ஆகுபெயராக்கிப் பொருள்கொள்ளவைத்தமையின், அதுவே அவ்வாக்கியத்திற்குத் தாற்பரியமென உணர்ந்துகொள்க. இதுவே நீலகண்டபாடியத்திற்குங் கருத்தாதல் * ஆண்டெடுத்துக்காட்டிய புராணவசனத்தான் உய்த்துணர்ந்துகொள்க.

இன்னுஞ் சாந்தோக்கியத்தின், † "அப்புக்கள் அன்னத்தைப் படைத்தன" என்புழி, அன்னமென்பது சோற்றையுணர்த்தாது ஆகுபெயராற் புடவியையுணர்த்துமென்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையின், இவ்வாறே ஆண்டாண்டு வன்மைமென்மைநோக்கி முறுமைத் தாற்பரியங் கோடல் வேதபுருடனுக்குக் கருத்தென்பது ஓர்ந்துணர்ந்துகொள்க.

இங்ஙனஞ் சிவமுதல் நிலமிறுவாய் ஐந்தும் ஏழும் இருபத்துநான்குமாகிய முப்பத்தாறுதத்துவங்கட்குத் தோற்றமுறைமையும்; அவற்றின் றொழிற்பாடும்; போகநுகர்ச்சிக்கண் அவற்றுளொன்றையின்றியமையாமையின், அவை சுத்தம் மிச்சிரம் அசுத்தமெனவும், பிரேரககாண்டம் போகசயித்திருகாண்டம் போக்கியகாண்டமெனவும், சிவதத்துவம் வித்தியாதத்துவம் ஆன்மதத்துவமெனவுமாமாறும் இன்னோரன்னவையெல்லாம் ஈண்டோதியவாறுபற்றி உணர்ந்துகொள்க. இன்னும் விரிப்பிற்பெருகுமென்றொழிக.

இவை ஒடுங்குங்காலுந் தோன்றினமுறைமையே தத்தங் காரணங்களின் ஒடுங்கும்.

## தத்துவங்களின் வகை.

நிலமுதற் கலையீறுகிய முப்பத்தொரு தத்துவமும் புறப்புறக்கருவியும், புறக்கருவியும், அகப்புறக்கருவியும், அகக்கருவியுமென நான்கு வகைப்படும்.

அவற்றுள், பூதமைந்துந் தன்மாத்திரையைந்தும் புறப்புறக்கருவி; இந்திரியம்பத்தும் புறக்கருவி; மனமுதலியன அகப்புறக்கருவி; அராகமுதலியன அகக்கருவியென்றறிக.

இன்னும், இத்தத்துவங்கள், பொதுவுஞ் சிறப்பும் பொதுச்சிறப்புமென மூவகைப்படும்.

அவற்றுள், புவனவடிவாகிய தத்துவங்கள் போகநுகர்ச்சிக்கண் எல்லாவுயிர்க்கும் பொதுவாய்ப் போகம்பயப்பித்தலின், பொதுவெனப்படும். புரியட்டகவடிவாகிய தத்துவங்கள் உயிர்தோறும் வேறுவேறாய்நின்று போகம் பயப்பித்தலின், சிறப்பெனப்படும்.

---

* ஸதாஶிவஸ்வரூபேதி ஶ்ருதிஃ ஸர்வேதி ஶ்ருதிஸ் ததைவ ச । ப்ரஸித்தே ஜாட்யஸாக்ஷாத்வாஸ்ஸூதி ஜாநாதிநஃ । ப்ருஹத்ஸ்வதிஸ்ஸ்தாவரேத்ர ஐதிஹ்யவதஸ்ஸ்ததியஃ । என்பது நீலகண்டபாடியத்தின் எடுத்துக்காட்டிய புராணவசனம். † தா அந்நமஸ்ருஜந்த । என்பது, சாந்தோக்கியம், ௬-௪-௨.

புரியட்டகஞ் சூக்குமதேகமும் பரதேகமுமென்று இருவகைத்து. அவற்றுள், தன்மாத்திரையைந்தும், அந்தக்கரணமூன்றுமாகிய எட்டானு மாயது சூக்குமதேகம். இது காலோத்தரத்திற் காண்க.

இனிப், பூதமொன்றும், தன்மாத்திரையொன்றும், ஞானேந்திரிய மொன்றும், கன்மேந்திரியமொன்றும், அந்தக்கரணமொன்றும், குணதத் துவமொன்றும், மூலப்பகுதியொன்றும், கலாதியொன்றுமென்னும் எண் வகைப்பட்ட முப்பத்தொரு தத்துவங்களாயது பரதேகம். பரமெனினும் அதிசூக்குமமெனினும் ஒக்கும். இது மிருகேந்திரமுதலியவற்றுட்காண்க.

இனி, இதனையே சூக்குமதேகமெனக்கொண்டு, சுத்ததத்துவம் பரதேக மென்பாரும் உளர். அது காலோத்தரவசனத்தோடு முரணுதலானும், தன்மாத்திரை அந்தக்கரணங்களுள் ஏனைத்தத்துவங்கள் அடங்குமென்றற் குப் பிரமாணமின்மையானும், அடங்குமென்பார்க்கு அவ்வாறே தன்மாத் திரை அந்தக்கரணங்களும் ஐம்பெரும்பூதங்களின் அடங்குமென அமையு மாகலின், வேறுகூறுதல் பொருந்தாதாய்முடியுமாகலானும், சுத்ததத்துவங் கலாதியைச் செலுத்துமுகத்தான் உபகரித்து வேறுநிற்பனவன்றிச், சக லர்க்குத் தேகமாயெய்துதல் கூடாமையானும் அது பொருந்தாமையறிக.

குடிலையிற்றோன்றிய நாதஞ் செயற்கைவயத்தானே தூலமாய்நின்ற வழி, நம்மனோர்க்குப் புலனாதல்கூடுமென்பது * மேற்காட்டினமையின், சவி கற்பவுணர்விற்கேதுவாகிய தூலநாத மாத்திரையே பரதேகத்தோடு விரவி அகத்தே விளங்கிநிற்பதன்றி, ஏனைவைந்தவங்கள் அவ்வாறு நில்லாவென் றது பொருந்துமாறுபற்றி உணர்ந்துகொள்க.

இனித், தூலதேகவடிவாகிய தத்துவங்கள் அவரவர் போகநுகர்ச்சிக் குச் சிறப்புவகையான் நிலைக்களமாதலும், மனைவிமுதலியோர்க்குச் சந்தனம் பூமாலைமுதலியனபோலப் பொதுமையாற் போக்கியமாதலுமாகிய இரு வகையுமுடைமையின், பொதுச்சிறப்பெனப்படுமென்றுணர்க.

அற்றேல், தூலதேகத்தின் வேறாகிய சூக்குமதேகமொன்றுண்டென் பதற்குப் பிரமாணமென்னையெனின், கூறுதும்:- தூலதேகஞ் செயலற்றுக் கிடப்பவுங் கனவின்கட் போகநுகர்ச்சி காண்டும். ஆண்டும் போக நுகர்ச்சி தேகத்தின்றொழிற்பாடின்றி அமையாமையின், சூக்குமதேகமே ஆண்டுப் போகநுகர்ச்சிக்கு நிலைக்களமாவதெனை அறிக. † "கனவின் பயனு நனவின் பயனும்—வினையின் பயனவை பொய்யென வேண்டா" என் றோதுதலானும், பொய்யென்றற்குப் பிரமாணமின்மையானும் ஆண்டுப் போகநுகர்ச்சி மெய்யாதலறிக.

இன்னும், "வியாபகமாகிய ஆன்மாத் துறக்கநிரயங்களிற் சென்று அநுபவித்து மீள நிலத்தின்கண் வந்து கருவின்விழும்" என வருகின்ற

* பக்கம், கஙடு. † சங்கற்பநிராகரணம், மாயாவாதிசங்கற்பநிராகரணம், அடி—கஙச.

அதிகரணத்திற் கூறப்படும் போக்குவரவுசெய்தற்கு உடம்பு இன்றியமையாமையானுஞ் சூக்குமதேகமுண்டென்பது துணிந்துகொள்க.

அற்றேல், தன்மாத்திரைகளானும் அந்தக்கரணங்களானும் இயன்றது சூக்குமதேகமென்றற்குப் பிரமாணமென்னையெனின், கூறுதும்:—ஆன்மா நனவின்கட் போகநுகர்தற்கும், போக்குவரவுசெய்தற்கும் இடனாகிய தூலதேகமும்; கனவின்கட் போகநுகர்தற்கும், ஆண்டுப் போக்குவரவுசெய்தற்கும், தூலவுடம்பு கழிந்தவழி, ஒருலகினின்றும் மற்றோருலகிற் போக்குவரவுசெய்தற்கும் இடனாகிய சூக்குமதேகமும் ஒருசாதியென்பது பெற்றாம். பெறவே, அவ்விரண்டற்குந் தம்முள் வேற்றுமை தூலமாகலுஞ் சூக்குமமாகலுமாத்திரையேயாகலின், அதற்கேற்பத் தூலபூதங்கள் ஐந்தானும் இயன்ற தூலதேகத்திற்குக் காரணமாகிய சூக்குமதேகஞ் சூக்குமபூதங்களைந்தானும் இயன்றதாமெனத் துணியப்படும்.

இனித், தூலதேகத்தினின்றறியும் புறவிந்திரியங்கள்போலச் சூக்குமதேகத்தினின்றறியும் அந்தக்கரணங்கள் அதற்கு இன்றியமையாது உறுப்புப்போல் உடனிற்றல்பற்றி அவையுஞ் சூக்குமதேகமெனக் கூட்டியுரைக்கப்படுமாகலின், தன்மாத்திரை அந்தக்கரணமென்னும் இருகூற்றெட்டுக் கருவியுங் கூட்டிச் சூக்குமதேகமாமென்பது ஆகமவளவைமாத்திரையானன்றி வழியளவையானும் உணர்ந்துகொள்க. வழியளவையாமாறு:— "சூக்குமதேகஞ் சூக்குமபூதங்களானும் அந்தக்கரணங்களானுமாயது, ஆன்மாப் போகநுகர்தற்கும் போக்குவரவுசெய்தற்கும் இடனாகலின்; தூலபூதங்களானும் புறக்கரணங்களானுமாகிய தூலதேகம்போலும்" எனக் கூறிக்காண்க.

இனிப், போகநுகர்தற்கட் கருவியாய் நிற்குங் கலைமுதல் நிலமீறாகிய தத்துவங்கள் ஆன்மாவுக்குக் கரணமேயாயினும், ஆன்மாக்கடோறும் வெவ்வேறாய் நீக்கமின்றி உடனாய்நிற்றல்பற்றிப் பரதேகமென்று உபசரித்துக் கூறப்படுமதுவேயன்றித், தூலதேகஞ் சூக்குமதேகம்போலத் தேகமல்லவென் றுணர்க.

இரண்டாமதிகரணமுடிந்தது.

## மூ ன் றா ம தி க ர ண ம்.

இரண்டாமதிகரணத்தின் நாட்டிஉள்ளார்க்கு அவரவர் செய்த குணங்குற்றங்கட்கியைய அருளுந் தண்டமுஞ் செய்யும் வேந்தர்போல, ஆன்மாக்களுக்கு அவரவர்செய்த இருவினைகளை அறிந்து அவற்றிற்குத் தக்கபயனை முதல்வன் செய்வனாகலின், அங்ஙனம் ஐந்தொழில்செய்யும் முதல்வன்மாட்டு எல்லாவுயிர்களையும் ஒப்பநோக்கும் நடுவுநிலைமைக்கும் பெருங்கருணைக்குஞ் சுதந்திரத்திற்கும் இழுக்கின்மையின், ஐந்தொழில் செய்தலே முதல்வனுக்கு இலக்கணமென வலியுறுத்தியவழி; அங்ஙனமாயினுஞ் சங்காரகாரணனாகிய முதல்வனுக்கு ஐந்தொழில்செய்தல் இலக்கணமெனச் சிறப்புவகையாற் கோடல் பொருந்தாது; சங்காரகாரணனாகிய

முதல்வன் சங்காரத்தொழின் மாத்திரையேயன்றி ஏனைத்தொழிலுஞ் செய்வனாயிற் சங்காரகாரணனென விசேடித்தல் வழுவாய்முடியும்; அஃதியைபின்மைமாத்திரைநீக்கித் தலைமைபற்றிவந்தடுத்த விசேடணமாகலின் வழுவாகாது, சங்காரத்தொழிற்குத் தலைமை, "ஒடுங்கினசங்காரத்தினல்லது உற்பத்தியின்மையாற்" பெறப்படுமெனின்,—அற்றன்று; இறந்தவுயிர்கள் மீளப் பிறக்குமாயினன்றே உற்பத்திக்குச் சங்காரங்காரணமாதலும், அதுபற்றிச் சங்காரத்திற்குத் தலைமையுண்மையும் அமையும்; இறந்தவுயிர்களே மீளப் பிறக்குமென்றற்குப் பிரமாணமென்னை? பஞ்சாக்கினிவித்தையுணர்த்தும் உபநிடதமுதலிய ஆகமங்களே பிரமாணமெனின், * "குடத்தகப்பட்ட ஆகாயங் குடமுடைந்தவழி ஆகாயத்தோடு கூடுமாறுபோல, உடம்பகத்தகப்பட்ட ஆன்மா உடம்புநீங்கியவழிப் பரமான்மாவொடு கூடும்" என மீட்சியின்மையுணர்த்தும் ஆகமவளவையொடு முரணுதலின், பஞ்சாக்கினிவித்தைமுதலியனவுணர்த்தும் ஆகமங்கள் புனைந்துரையெனக் கொள்வதல்லது பிரமாணமெனக்கோடல் பொருந்தாது; அன்றியும், சற்காரியவாதத்தின் இல்லதுதோன்றுமாறின்மையின், இவ்வுடம்புநீங்கியவழி வேறுவேறுடம்புகள் உளவாமென்பார்க்கு, அவையனைத்தினும் ஏகமாய்த்தொடர்ந்து நிற்குஞ் சிறப்புக்காரணமொன்றுண்டெனக்கோடல்வேண்டும்; அதுகாணாமையானும், வியாபகமாகிய ஆன்மாப் போக்குவரவுசெய்தல் பற்றுக்கோடின்றியமையாமையின், இவ்வுடம்பு நீங்கியவழிப் பிறிதோருடம்பிற் சேறற்குப் பற்றுக்கோடு பிறிதின்மையானும், உண்டாயின் அதுவேயமையுமெனப்பட்டு இவ்வுடம்பு மிகையாய்முடியுமாகலானும், இன்னும் இறந்தவுயிரே பிறக்குமாயின் முற்பிறவியினிகழ்ந்தனவெல்லாம் இப்பிறவியின் அறிந்துரைத்தல்வேண்டும்; அதுவுமின்மையானும், அறம்பாவங்கட்குரிய இன்பத்துன்பங்களைத் துறக்கநிரயங்களிற் சென்று எஞ்சாதநுபவித்தொழிந்தவழி, மீளக் கருவினெய்துதற்குக் காரணமின்மையானும் வழியளவைக்கேலாமையான், இறந்தவுயிரே பிறக்குமென்றற்குப் பிரமாணமின்றாம்; இன்றாகவே, சற்காரியவாதங் கூடாமையாற் சங்காரத்தொழிற்குத் தலைமையின்மையின், சங்காரகாரணனென்றது இயைபின்மை மாத்திரைநீக்கித் தலைமைபற்றிவந்த விசேடணமென்றல் பொருந்தாமையின், அது பிறிதினியைபுநீக்கியவிசேடணமேயாம்; ஆகவே, சங்காரகருத்தா ஏனைப்படைப்பு முதலியவற்றிற்கு வினைமுதலாதல் கூடாதென்பது தானே பெறப்படுதலின், மேலையதிகரணங்களிற் கூறிய முறைமைபற்றி, "ஐந்தொழில்செய்தலே முதல்வனுக்கிலக்கணமெனப் பொதுவகையாற்கூறுதல் பொருந்துமாயினுஞ், "சங்காரகாரணனாகிய முதல்வனே ஐந்தொழில்செய்வன்" எனச் சிறப்புவகையாற் கூறுதல் இலக்கணவழுவாமாலென்று இங்ஙனங் கிரீடாப் பிரமவாதிகண்மதம்பற்றி நிகழும் ஆசங்கையைநீக்கி இலக்கணத்தை வலியுறுத்துதற்கெழுந்தது மூன்றாம் அதிகரணம்:—

---

* இது, யத்ர யத்ர ம்ருதோ ஜ்ஞாநீ யேநவா கேநம்ருத்யுநா | யதா ஸர்வகதம் வ்யோம தத்ர தத்ர லயம் கத: | கடாகாசமிவாத்மாநம் விலயம் வேத்தி தத்த்வத: | ஸ கச்சதி நிராலம்பம் | எனப் பைங்களோபநிடதத்துக் காணப்படுகின்றது. ௪-ம் அத். ௧௨ - ௧௩.

## இனி இவ்வான்மாக்கண் மாறிப்பிறந்து வருமென்றது

எனவரும்.

இனி என்றது இவ்வியைபுணர்த்துதற்பொருட்டு. இவ்வான்மாக்கள்-மேலையதிகரணத்திற்பெறப்பட்ட இவ்விருவினைப் பயன்களை நுகர்தற்குரிய ஆன்மாக்கள். மாறிப்பிறந்துவரும் - இறந்து மீளப்பிறந்து இவ்வாறேவரும். மாறுதல் - ஈண்டு இறத்தல்; போக்குவரவுபுரிய என்பதற்குரையாகலானும், ஏதுவுதாரணங்களின் இயைபானும் அதுவே பொருளாதல் அறிக.

அஃதெங்ஙனமெனின், மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

## தோற்றமுமீறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான்

எனவரும்.

இறந்தபின்னும்; பிறத்தலும் இறத்தலுமுள்ள பொருட்கேயன்றி ஏனைப்பொருட்கு உற்பத்தியின்மையான், இவ்வான்மாக்கண் மாறிப்பிறந்து வரும் என மேற்கொண்டதென் றுணர்க.

இறந்தபின்னும் என்றது மேற்கோளிற் கூறிப்போந்த பொருள்பற்றி அவாய்நிலையான்வந்தது. உளதாதல் - தோன்றுதல்; அது, * "ஒன்றலாவொன்று ளுளதாகி நின்றவாறு" என்பதனானுமுணர்க. ஒடுங்கியபின்னுந் தோற்றவொடுக்கங்களுள்ளபொருட்கே தோற்றமுண்டென்பது சற்காரியவாதத்தான் அங்ஙனமாதல் பெறப்பட்ட குடமுதலியவற்றின்வைத்துக் காணப்படும். இதற்குப் பிறவாறும் உரைப்ப.

அற்றேல், இறந்தவுயிர் பிறவாமைக்கு மேற்காட்டிய ஏதுக்களொடு முரணுமாலெனின், அவ்வாசங்கைகளைநீக்கி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந் தத்தூடு வினையினாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

எனவரும்.

கண்செவிகெட்டு உள்ளதேதோற்ற உளம் அத்தூடு விண்படர்ந்து வினையினால் மனந்தள்ளக் கண்ட நனவைக் கனவுணர்வில் தான் மறந்து அணுவாய்ச் சென்று கருவில் விழுந் தான் எனமாறுக.

கண்செவிமுதலிய உறுப்புக்களையுடைய உடம்பினைக் கண்செவியென்றுபசரித்தார்.

* முதற்சூத்திரம் மூன்றாமதிகரணத்து உதாரணம்.

கெட்டவழி என்பது கேட்டு எனத்திரிந்து நின்றது. உள்ளது - தூலவுடம்புகள் கெட்டவழியுந் தனக்குக் கேடின்றிப் படைப்புக்காலந் தொடங்கிச் சங்காரகாலமளவும் நிலைபெற்றுளதாகிய புரியட்டதேகம். தோன்றுதல் - பூதசாரவுடம்புமுதலியனவாய்க் காரியப்படுதல். ஏகாரம் தேற்றம்.

ஐம்பெரும்பூதத்தின் காரியமாகிய தூலவுடம்பு சூக்குமதேகத்தின் காரியமாமாறென்னையென்னும் ஐயநீக்குதற்கு உள்ளதே தோற்ற எனத் தேற்றவேகாரங் கொடுத்தோதினர். ஆகாயமுதலிய தூலபூதங்கள் சூக்கும பூதமாகிய தன்மாத்திரைகளின் காரியமாதலின், அவற்றானாய தூலவுடம்பு தன்சாதியாகிய அச்சூக்குமதேகத்தின் காரியமாதற் கிழுக்கின்மையறிக.

இன்னும், முதலுற்பவத்திற் சூக்குமதேகம் முதற் படைத்துப், பின் அதுகாரணமாகவரும் இருவினையாற் பலவேறுவகைப்பட்ட தூலதேகம் படைக்கப்பட்டனவாதலானுஞ் சூக்குமவுடம்பின் காரியமே தூலவுடம்பாதல் அறிக. சூக்குமதேகத்தின் காரியமாதல்பற்றியே தூலதேகம் ஐம்பெரும்பூதமயமெனப்பட்டதென்க.

* "பூதனா சரீரம் போனாற் புரியட்டரூபந் தானே—யாதனா சரீர மாகி" எனவும், † "சூக்கும வுருவ தென்னிற் றூலகா ரணம தாகும்" எனவும், ‡ "தூலமா முருவி னுக்குச் சூக்கும முதல்" எனவும், § "மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேநின் றென்னிற்—கூறிய சூக்கு மத்தாம்" எனவும், ௦ "விதிப்படி சூக்கு மத்தே யுருவரும்" எனவும் வழிநூலாசிரியர் கூறியவாறுங் காண்க.

இவ்வுண்மையுணரமாட்டாதார் ஐம்பெரும்பூதத்தானாகிய தூலவுடம்பு சூக்குமதேகத்தின் காரியமாமாறு என்னையென்றாசங்கித்துப், * "புரியட்ட ரூபந் தானே—யாதனா சரீர மாகி" என்றற்றொடக்கத்தன பிறர்மதம் பற்றிக் கூறியனவாமென்று உரைப்ப; பலவிடத்தும் அவ்வாறே யோதுதலான் அங்ஙனமுரைத்தல் பொருந்தாமையறிக.

உள்ளதேதோற்ற என்பதனால் இல்லதுதோன்றாதென்னுஞ் சற்காரியவாதத்திற்கிழுக்கின்மையும், துறக்கநிரயங்களிற் சென்றுமீடற்குப் பற்றுக்கோடுண்மையுமுணர்த்தி, அவைபற்றிநிகழும் ஆசங்கையை நீக்கியவாறு காண்க.

அற்றேல், சூக்குமதேகமே அமையும், தூலதேகம் மிகையாமாலெனின்,—அற்றன்று; தூலபோகநுகர்ச்சிக்குத் தூலதேகம் ஒருதலையான் வேண்டப்படுதலானென்க. இங்ஙனமாகவே, ஒருதன்மைத்தாகிய சூக்குமதேகத்திற் றூலதேகம் அச்சுமாறித்தோன்றுதல், § "வேறொரு குறியாமாரம் வீரசங் கிலியுமாதல்" போலவும், சூக்குமதேகங் கெடாதுநிற்பத் தூலதேகங் கெட்டுத்தோன்றுதல், ** "காலமுற்று—நீக்கிட மரம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்துமாபோலவும்" ௦ "மதிக்கெழு கலைகள் வருவனபோவன

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், நகூ. † ஷை நாலாஞ்சூத்திரம், கo. ‡ ஷை இரண்டாஞ்சூத்திரம், ருo. § ஷை ஷை சஎ. ௦ ஷை ஷை சக. ** ஷை ஷை சஅ.

போல''வுமாமென்று உணர்ந்துகொள்க. இவையெல்லாஞ் சிவஞானசித்தியில் விரித்தலின், ஆண்டுக்காண்க.

உளம்—ஆன்மா. அதனாடென்பது அத்தூடு எனமரீஇயிற்று. அத்தூடு-உள்ளதேதோற்ற அங்ஙனந்தோன்றிய யாதனுசரீரத்தூடு. விண்படர்ந்து என்னும் உபலக்கணத்தால் நிரயம்படர்ந்தென்பதூஉம் பெற்றும். படர்ந்து - படர்ந்தநுபவித்து; காரியத்தைக் காரணமாகவுபசரித்தார்.

இனி, இறந்தவுயிரே பிறக்குமாயின், முற்பிறவியின் நிகழ்ந்தனவெல்லாம் இப்பிறவியின் அறிதல்வேண்டுமென்னும் ஆசங்கையை நீக்குதற்குக் கண்ட நனவைக் கனவுணர்விற் றுன்மறந்து என்றுவமைகூறினார். கண்ட நனவை-நனவின்கட்கண்டவற்றையென்க. இன்-உவமவுருபு. தான்-அசை. மறந்து என்றதற்குச் செயப்படுபொருள், கண்செவிகெட்டவாறும், உள்ளதே தோற்ற அத்தூடு விண்படர்ந்தவாறும், ஆண்டு அநுபவித்தவாறும் முதலாயின.

அற்றேல், ஈன்றணிய குழவி தாய்முலைப்பால் பசிதீர்க்குமருந்தென்றறிந்து அதன்கண் முயலுதற்கேதுவென்னை? முதல்வனுணர்ந்து செலுத்துவனெனின், குழவியின்மாட்டு அவ்வுரிமையில்வழி முதல்வன் செலுத்துதல் சாலாது; சாலுமாயின், உயிரில்பொருளையுந் தொழிற்படுத்துதல்வேண்டுமாலெனின்,—அஃதொக்கும். அவ்வாறுதல்பற்றி ஈன்றணியகுழவி சீவித்தற்பொருட்டு அப்பருவத்தின் அவ்வுணர்வுமாத்திரை மறவாது நிலைபெறச் செய்வன் முதல்வனென்கோடும்.

உள்ளதே தோற்ற என்றதனால் உடல்வேறுபடுமாறும், விண்படர்ந்து என்றதனால் இடம் வேறுபடுமாறும், கண்ட நனவைக் கனவுணர்விற் றுன் மறந்து என்றதனால் அறிவு வேறுபடுமாறும் உணர்த்தியவாறு.

முன்னுடம்பிறக்குஞான்று மனம் யாண்டுச் சென்றுபற்றியது ஆண்டு வந்து மீளப் பிறக்குமென்பார், மனந் தள்ளக் கருவில் விழும் என்றார். தள்ள - தள்ளுதலாலென்க. சுட்டுவருவித்துரைக்க. வினையினால் - புண்ணிய பாவ விசேடத்தால் என்க.

இதனானே, மனந்தள்ளிய கதியிற் சென்று பிறத்தற்கேதுவாகிய புண்ணியபாவவிசேடங்கள் எஞ்சிநிற்ப, ஏனையவே துறக்கநிரயங்களிற்சென்று அநுபவிக்கப்படுமென இறுதிக்கட்படும் ஆசங்கையை நீக்கியவாறு காண்க.

பஞ்சாக்கினிவித்தையினியல்புணர்த்துவார், விண்படர்ந்து மறந்து அணுவாய்ச்சேன்று கருவில்விழும் என்றார். அணுவாய்ச்சேறல் - துறக்கநிரயங்களின் எடுத்த பூதசாரமுதலிய உடம்பினீங்கிச் சூக்குமதேகமாத்திரையாய்ச் சேறல்.

## பஞ்சாக்கினிவித்தை.

பஞ்சாக்கினிவித்தையினியல்பு தொகுத்துக்கூறுதும்:—பார்ப்பனச் சாதிமுதலியவற்றிற் பிறந்து வேள்விமுதலிய நல்வினைசெய்த உயிர்கள் அவ்

வினையின்பய னுகர்தற்பொருட்டு இவ்வுடம்புநீங்கிச், சூக்குமதேகத்தோடுந் துறக்கத்திற் சென்று, இன்பமநுபவித்தற்குரிய பூதசாரவுடம்பெடுத்து, ஆண்டுவைகுங் கடவுளரோடு வாழ்ந்து, நல்வினைப்பயன்கள் அநுபவித்துத் தொலைந்தவழி, மீள நிலத்தின்வந்து, பார்ப்பனச்சாதிமுதலியவற்றிற் றோன்றி, வினைகளையீட்டுதற்கேதுவாய் எஞ்சிநின்ற வினைச்சேடத்தால் அவ்வுடம்பினீங்கிச், சூக்குமதேகத்தோடு மேகமண்டலத்தினையெய்தி, ஆண்டுநின்று மழைத்தாரையினேடுகூடி, நிலத்தினையடைந்து, நென்முதலிய பைங்கூழின் விரவிநின்று, அவை உணவாய்ப் பரிணமித்தவழி அவற்றோடுகூடித், தந்தையின்வயிற்றுட்சென்று, ஆண்டுச் சுக்கிலமாய்ப்பரிணமித்து, அதனோடுகூடித் தாய்வயிற்றுட்சென்று, ஆண்டுக் கருவாய்ப்பரிணமித்துப், பார்ப்பனச்சாதி முதலியவற்றிற்குரித்தாகிய தூலதேகத்தோடு நிலத்திற் றோன்றுமென்றுணர்க.

ஆன்மாத் தூலவுடம்பினீங்கியவழித் துறக்கமும், மேகமண்டலமும், நிலனும், தந்தையும், தாயுமென்னும் ஐந்துநிலைக்களத்தும்வைகித் தோன்றுதலின், இவ்வைந்தினிடமும் அங்கியாகவும், இவற்றினெய்திய ஆன்மா ஆகுதியாகவும் இங்ஙனந் தியானிப்பதொரு சாதகமாகலின், இது "பஞ்சாக்கினிவித்தை" எனப்பட்டது. இம்முறை நல்வினைகளைச்செய்து துறக்கத்திற் சென்று இன்பப்பயன் அநுபவித்து, மீள நிலத்திற்றோன்றுமுயிர்கண் மாத்திரைக்கேயெனவும், ஏனைத் தீவினைசெய்து நிரயத்திற்சென்று துன்பப் பயனை அநுபவித்து மீள நிலத்திற்றோன்றுமுயிர்கட்கு இவ்வாறு நியமமில்லையெனவும் உணர்க. இவற்றினியல்பெல்லாம் நீலகண்டபாடியமுதலியவற்றுட் காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

மனந் தள்ளக் கருவில் விழும் என்பதற்கு, விண்ணிரயங்களிற் படர்ந்து அநுபவித்தொழிந்தபின்னர் இடையீடின்றி மனத்தினும் விரைந்து சென்று கருவில்விழுமெனப் பொருளுரைப்பின் அதுவே நியமமன்மையின், * "உடல்விடா யோனி பற்றி யுதிப்பினு முதிக்கு மொன்றிற்—படர்வுறு துறும்பா வத்தாற் பாடாணம் போற்கி டந்து—கடனதாங் காலஞ் சென்றுற் கடுநர கதனில் வீழ்ந்தங்—கிடருறு முருவங் கன்மத் தளவினி லெடுக்கு மன்றே" என்றற்றொடக்கத்தோடு முரணுமா றறிக.

அற்றேல், அஃதாக; "குடாகாயங் குடமுடைந்தவழி ஆகாயத்தோடு கூடுமாறுபோல, உடம்புநீங்கியவழிச் சீவன் சிவத்தோடு கூடும்" என்னுஞ் சுருதி புனைந்துரையென்றொழித்தற் கேலாமையின், அது பொருள்படுமா றென்னையெனின்,—அது பொருள்படுமாறும், தூலவுடல்விட்டுச் சேறற்குவமம் வேறுமாறும் உணர்த்தி, அவ்வாசங்கையைநீக்கி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்:—

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், ௩௭.

குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

எனவரும்.

எனவே, உடல்விட்டுப்போமாற்றிற்குவமை குடாகாய மாத்திரை யேயன்றி, அரவுதன்றோலுரிவுமுதலியனவும் ஆகமங்களிற் கூறப்படுதலின், இவ்விருவேறுவகையும் ஒன்றற்கேயுவமையாதல் கூடாமையின், அரவுதன்றோலுரிவுமுதலியவுவமை தூலவுடம்புவிட்டுப் போமாற்றிற்கெனவும், குடாகாயவுவமை சூக்குமவுடம்புவிட்டுப்போமாற்றிற்கெனவுந் தாற்பரிய முணர்ந்துகொள்ளப்படுமாகலான், ஈண்டைக்கு முரணுமாறின்மையின், புனருற்பவமுணர்த்தும் ஆகமவளவையும், ஈண்டெடுத்தோதிய வழியளவையும் பிரமாணமாகலான், இறந்தவுயிர் மீளப்பிறக்குமென்பது பெற்றும்; பெறவே, சேதனப்பிரபஞ்சமுஞ் சடப்பிரபஞ்சம்போல, ஒடுங்கின சங்காரத்தினின்று உற்பத்தியெய்துமென்றற்கு ஐயமின்மையின், சங்காரகாரணனென்றது இயைபின்மைமாத்திரைநீக்கித் தலைமைபற்றிவந்தடுத்த விசேடணத்தான் விசேடிக்கப்பட்டதேயாமாகலான், ஐந்தொழில்செய்தல் சங்காரகாரணனாகிய முதல்வனுக்கேயுரிய இலக்கணமாதற்கிழுக்கென்னையென இலக்கணத்தை வலியுறுத்தவாறாயிற்று.

மேலைவெண்பாவிற் **கண்டநனவைக் கனவுணர்விற்** றான்மறந்து என்றது அறிவுவேறுபடுதற் கெடுத்துக்காட்டியது; ஈண்டுக் **கனவு** என்றது அதனையே உடல்வேறுபடுதற் கெடுத்துக்காட்டியதாகலின், கூறியது கூறலல்லாமையுணர்க.

**பரவின் அடாது** எனக் கூட்டுக. பரவுதல்-எல்லார்க்கும்புலனாமாறு மிக்குநிகழ்தல்.

"குளவாம்பல்-குளாம்பல்," "மரவடி-மராடி" என மரீஇயினாற்போலக், குடவாகாயங் குடாகாயம் என மரீஇயிற்று. கடமென்னும் வடமொழி குடமெனத் திரிந்ததெனக் கோடலுமொன்று.

ஈண்டு **உள்ளம்** என்றது சூக்குமதேகத்தை. **போமாற்றிற்கு** என்னும் நான்கனுருபு செய்யுளாகலின், விகாரத்தாற்றொக்கது; * "ஐந்தவித்தானாற்றல்" என்புழிப்போல. **அது**-அக்குடாகாயவாகாயவுவமை.

சூக்குமதேகத்தினியல்பு மேலையதிகரணத்துணைத்தாம். வினையான் வருந் தூலவுடம்பின் பேதம், † "தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற் றுதைந்துவரு முற்பீசஞ் சராயுசங்க ளொன்கி—னூற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்று மூர்வபதி னைந்தமரர் பதினொன்றே டலவா—மாற்றரு நீருறைவனநற் பறவைகணாற் காலி மன்னியிடும் பப்பத்து மானிடரோன் பதுமா—வேற்றியொரு தொகையதனி லியம்புவர்கள் யோனி யெண்பத்து நான்குநூ றாயிரமென் றெடுத்தே" என்பதனான் அறிக.

* திருக்குறள், ௩-ம் அதி. நீத்தார்பெருமை, ரு. † சிவப்பிரகாசம், பொது, ௩ரு.

## அண்டங்களினியல்பு.

இனி, இவ்வுடம்புகளோடு கூடிநின்று போக்குவரவுசெய்தற்கிடனாகிய அண்டங்களின் அளவையும், அவற்றதியல்புந் தொகுத்துக்கூறுதும்:—

சாளரத்திற்றோன்றும் ஞாயிற்றின்கதிரின் அதிநுட்பமாய்த் தோன்றும் நுண்ணிய துகள் அணுவெனப்படும். அஃதெண்மடங்குகொண்டது * திரிசரே அணு. அஃதெண்மடங்குகொண்டது கசாக்கிரம். அஃதெண்மடங்குகொண்டது இலீக்கை. அஃதெண்மடங்குகொண்டது யூகை. அஃதெண்மடங்குகொண்டது இயவைநெல்லு. இயவைநெல்லகலம் எட்டுக்கொண்டது ஓர் அங்குலம். அங்குலம் இருபத்துநான்குகொண்டது ஒருமுழம். முழம் நான்குகொண்டது ஒருவில்லு. வில்லிரண்டு கொண்டது ஒருதண்டம். தண்டம் இரண்டாயிரங்கொண்டது ஒருகுரோசம். குரோசம் நான்குகொண்டது ஒருயோசனை; ஆகலான், இந்த அளவையாற் சாதாரண புடவிதத்துவமாகிய அண்டம் நூறுகோடியோசனை ஆழவகலநீளங்களையுடைத்து. இதற்கு வகை:—

கீழண்டச் சுவர்க்கனங் கோடியோசனை. அதன்மேற் காலாக்கினியுருத்திரபுவனங் கோடியோசனை. இந்தப்புவனத்திற் காலாக்கினியுருத்திரர் ஆயிரம்யோசனையுயரமும், இரண்டாயிரம் யோசனை அகலமுமுடைய சிங்காசனத்திற் செந்தழன்மயமான திருமேனி பதினாயிரம் யோசனை உயரமுடையவராய், வலக்கரத்தில் வாளும் அம்பும், இடக்கரத்திற் கேடகமும் வில்லுமுடையவராய் எழுந்தருளியிருப்பர். அவர்க்குப் பரிவாரமாய் அவரோடொத்த வடிவுடையவராய்ச் சூழ்ந்திருக்கும் உருத்திரர் பதின்மர் உளர். அவருள் ஒவ்வொருவர்க்குங் கோடியுருத்திரர் பரிவாரமாய்ச் சூழ்ந்திருப்பர். இத்தன்மையராகிய காலாக்கினியுருத்திரர் திருமேனியின் மேனோக்கியெழுந்த சுடர்க்கொழுந்து காலாக்கினியுருத்திரர் புவனத்திற்கு மேற் பத்துக்கோடியோசனை. அதன் புகைப்படலம் அதன்மேல் ஐந்து கோடியோசனை. ஆக அண்டச்சுவர்க்கனமுளப்படப் பதினேழுகோடியோசனை கண்டுகொள்க. இது,

† "அருட்படை பரப்பிய மருட்பெருங் குரிசில்
காம முதலிய வேமத் தானையொடு
மான மாக்களு மிரிய வானு
தோடுபுறங் கண்ட பீடுடை மறவ
தோத்தா துக்க ளேய்த்து வாவினை
கோத்தெறி கவர்வினென் குறிமற் றுற்றவை
யாற்றித் தத்துவ வத்துவா முதல
மாற்றிப் புவன மந்திர மீறில்
வருண மாப்பத மிருடி ரின்கலை
யாறு மீறி லாண்டிய லடையக்
கூறு மரனெறி தேறின ரோய

* திரிசரேணு எனவும் பாடம். † இது, ஞானாமிர்தத்திற் கிரியாபாதத்துள்ளது.

வாதித் தத்துவ வத்துவா வோதிற்
றீதி லண்ட கடாகங் கோடி
யோசனை கிழத னும்பர்ப் பேசிற்
கால வனலுருத் திரர்வரை கோடி
தோலாப் பற்ப னனந்த னீசன்
பிங்கலன் காலன் குரோதன் சலசன்
றங்கா வதிபலன் றனதன் சங்கர
னென்றிவர் கோடி யுருத்திர ரொருவரைச்
சென்றனர் சூழத் திகழ் வோர்துன்றி
விரிந்துசூழ் போதத் திருந்தரி யமளி
யாயிர மிரண்டகன் றருமணிச் சுடர்சொரிந்
தாயிர முயர்ந்த வதனுங் கேய
வீரைந் தாயிரம் யோசனை யுயர்ந்தோர்
மேனி யீரிரண் டியல்கரத் துற்ற
வைவாட் கேடகந் தந்துற் றுளிர
வெஞ்சரஞ் சாப மெஞ்சா தேந்தி
யிருந்தோர் புவனம் பொருந்தின ரவர்போ
லாகமம் புரியு மணிகிள ரிறைவர்
போகிய வுயர மாவீழ் கோட்டங்
கோடி மற்றவர் கொழுஞ்சுடர்க் கற்றை
யோடிய தொருபது கோடி மாடு
நிராலம் பனமைங் கோடி பேரா
வொளி கிளர் கால வுருத்திர
ரணிகிளர் தேகந் தெளிமதி சிறிதே'' என்னும் ஞானமிர்தத்
தினுங் காண்க,

இந்தப் பதினேழுகோடி யோசனைக்குமேற் பாவிகள் சென்றடையு மிடமாகிய நரகலோகங்கள் ஒன்றன்மேலொன்றாக ஒரோவொன்று தொண்ணூறிலக்கம்யோசனை அளவுடைய முப்பத்துமூன்று தளங்களும், தனித்தனி நூறாயிரம்யோசனை அளவுடைய முப்பத்திரண்டு இடைவெளியுமுடையவாயுள்ளன.

இந்த நரகங்கள் நரகமும், மாநரகமும், இராசநரகமும், இராசராசேச்சுரநரகமுமென நான்குவகைப்படும்.

அவற்றுள், நரகம் இரௌரவமும், துவாந்தமும், சீதமும், வெப்பமும், சந்தாபமும், பதுமமும், மாபதுமமும், காலசூத்திரமுமென எண்வகைப்படும்.

மாநரகஞ் சூசிமுகமும், காலகட்கமும், குரதாரமும், அம்பரிடமும், தத்தாங்காரமும், மாதாகமும், சந்தாபமும், பீபற்சமுமென எண்வகைப்படும்.

இராசநரகம் * இலாக்காப்பிரலேபமும், மாஞ்சாதமும், நிருச்சுவாச வுச்சுவாசமும், யுக்குமாத்திரியும், சான்மலியும், உலோகப்பிரதீப்தமும், சூற்பிபாசமும், கிருமிநிசயமுமென எண்வகைப்படும்.

இராசராசேச்சுரநரகம் உலோகத்தம்பமும், விண்மூத்திரமும், வைத ரணியும், தாமிச்சிரமும், அந்ததாமிச்சிரமும், கும்பிபாகமும், மாரௌரவ மும், அபீசியுமென எண்வகைப்படும்.

இந்த நால்வேறுவகையின் எவ்வேழுக்கு, ஒவ்வொன்று பிரதானநரக மாகவிருக்கும்; ஆக முப்பத்திரண்டு நரகின்பெயருங் கண்டுகொள்க.

இங்ஙனம் முப்பத்திரண்டு இடைவெளிகளின் அளவு தனித்தனி இலக்கமும், முப்பத்துமூன்று தளங்களின் அளவு தனித்தனி தொண்ணூ றிலக்கமுமாக நரகலோகம் முப்பதுகோடியேயிரண்டிலக்கம் யோசனையுயர முடைத்தெனக் கண்டுகொள்க. இவற்றின் அகலநீளம் காலாக்கினியுருத் திரபுவனம்போலப் பிரமாண்டகடாகம்வரையுமாம். முன்னர்க் கூறப்படும் உலகங்கட்கும் அகலநீளம் இவ்வாறேகாண்க.

இந்தநரகலோகங்களுக்குமேல் நிராலம்பவெளி முப்பதினாயிரம்யோச னையுயரம். அதன்மேல் ஒன்பதுநூறாயிரம்யோசனையுயரமுடைய நிலம் மேலேபொன்மயமும், கீழே இருப்புமயமுமென்றிரண்டுபுடமாய், அவ் விருப்புப்புடத்தின் ஒருபாதி மண்மயமாயிருக்கும். அதன்கீழ்த்தளத்தின் ஊழிக்காலத்தின் ஞாயிறுபோன்ற வடிவமும், கராளமுகமும், மழுக்கரமு முடைய கூஷ்மாண்டர் முப்பத்திரண்டுநரகங்களுக்கும் அதிபதியாய்த் தம்மோடொத்த உருத்திரகணங்களோடு வீற்றிருப்பர்.

இந்தக்கூஷ்மாண்டபுவனத்தின்மேல் எழுநிலமுடைய பாதாளம் ஏழுள வாம். அவை ஆபாசமும், பாதாளமும், நிதலமும், கபத்திமானும், மாதலமும், இராசாங்கமும், பாதலமுமென்பனவாம்.

இவற்றுள், ஆபாசமுதலிய ஆறுலகமும் ஒரோவொன்று ஒன்பதினாயி ரம்யோசனையுயரமும், மேனிலம் ஆயிரம்யோசனையுயரமுமுடையன. பாதல மென்னும் பாதாளம் பதினாயிரம்யோசனையுயரமும், இரண்டுகோடியே யெண்பத்தெட்டுநூறாயிரம் யோசனையுயர்ந்த மேனிலமுமுடையது. இவ் வேழனுள் ஒரோவொன்று மும்மூன்றுகண்டமாம்.

அவற்றுள், கீழ்பாற்கண்டத்தின் ஆபாசமுதலிய ஏழினும் முறையே சங்கசுருதியும், பிரகலாதனும், சிசுபாலனும், கர்க்கந்துகனும், இரணியாக்க னும், பிருகற்கர்ப்பனும், பெலியுமென்னும்அசுரவேந்தர் எழுவரும்; நடுக் கண்டமேழினும் முறையே குடிலனும், வாசுகியும், கம்பளனும், கார்க் கோடகனும், காளாங்கனும், அற்றரிசனும், தக்ககனுமென்னும் உரகவேந் தர் எழுவரும்; மேல்பாற்கண்டமேழினும் முறையே விகடனும், உலோகி தாக்கனும், இயமனும், விகாடனனும், கராளனும், வீமநிருகிராதனனும்,

* இலாக்காப்பிரலோபமெனவும் பாடம்.

பிங்கலனுமென்னும் இராக்கதவேந்தர் எழுவரும் அவ்வப்பாதாளங்கட்கு அதிபதிகளாயிருப்பர்.

இவற்றுள், மேலெல்லைக்கணின்ற பாதலமென்னும் பாதாளத்திற் பொன்மயமாய் ஆயிரம்யோசனையளவுடையபுவனத்தில் இவ்வேழுபாதாளங்கட்கும் அதிபதியாகிய ஆடகேசுரர், அவுணர் இராக்கதர் இயக்கர் கடவுளர்மகளிரெல்லாரும் ஏழிசைப்பாடல்களாற் றுதிசெய்ய வீற்றிருப்பர்.

இங்ஙனம் முப்பத்துமூன்றுநிலமுடைய முப்பத்திரண்டு நரகங்களுக்கு மேல் நிராலம்பவெளி முப்பதினாயிரம்யோசனையும், அதன்மேற் கீழ்த்தலத்திற் கூசுமாண்டர்வீற்றிருக்கும் நிலம் ஒன்பதுநூறாயிரம்யோசனையும், அதன்மேல் ஆறுபாதாளங்கள் ஒரோவொன்று இடைவெளி ஒன்பதினாயிரம்யோசனையும், மேனிலம் ஆயிரம்யோசனையும், மேலெல்லைக்கணின்ற ஏழாம்பாதாளத்திற்கு இடைவெளி பதினாயிரம்யோசனையும், அதற்கு மேனிலமாகிய பூமி இரண்டுகோடியே எண்பத்தெட்டுநூறாயிரம்யோசனையுமாக நரகலோகத்தின் மேற்பூமியளவு இரண்டுகோடியேதொண்ணூற்றெட்டிலக்கம்யோசனை. நரகலோகம் முப்பதுகோடியேயிரண்டிலக்கம் யோசனையும், அதன்கீழ் அண்டகடாகம்வரையிற் பதினேழுகோடியோசனையுமுளப்படப் பூமிக்குக்கீழ் ஐம்பதுகோடியோசனையளவு கண்டுகொள்க.

இனி, இரண்டுகோடியேயெண்பத்தெட்டுநூறாயிரம்யோசனையுடைய பூமியின் மேற்பரப்புப் பிரமாண்டத்திற்கு நடுவாய் நூறுகோடியோசனை விரிவும், எழுபெருங்கடலும், எழுபெருந்தீவும், நடுவே மேருவரையுமுடைத்தாய்ப் பூலோகமெனப் பெயர்பெறும்.

எழுபெருந்தீவின் நடுத்தீவாவது நூறாயிரம்யோசனைப் பரப்புடைத்தாய் வட்டமாய் நிலமகட்கு உந்தித்தானமாயுள்ள நாவலந்தீவு.

இந்நாவலந்தீவின் நடுவே ஞாயிற்றினொளியும் மழுங்கும்படி பேரொளிகான்று பொன்மயமான மேருவரை நூறாயிரம்யோசனைஅளவுடைத்தாய், அவற்றுட் பதினாறாயிரம்யோசனை பூமிக்குளாழ்ந்து, எண்பத்துநாலாயிரம் யோசனை பூமிக்குமேலுயர்ந்து, மூலத்திற் பதினாயிரம்யோசனை விரிவும், முடியின் முப்பத்தீராயிரம்யோசனை விரிவுமுடைத்தாய், முக்கூறாய், முக்கூற்றினும் முறையே கீழ்க்கீழ் மேகலையைநோக்கி மேன்மேல் நாலாயிரம் யோசனையகலம் மிக்குடையனவாகிய மூன்று மேகலைகளையுமுடைத்தாய்த், தாமரைப்பொகுட்டுவடிவிற்றாய் நிற்கும். முக்கூற்றின் அடிக்கூறு பூமிக்கு மேல் இருபத்தையாயிரம்யோசனையுயரமும், அதன்மேற்றாகிய முதன்மேகலை மூவாயிரம்யோசனையுயரமும், பதினாயிரம்யோசனைப் பரப்புமுடைத்தாய்க் கடகம்போல் வயங்கும். அதன்மேல் நடுக்கூறு இருபத்தையாயிரம்யோசனையுயரம். அதன்மேற்றாகிய மூன்றும் மேகலை மூவாயிரம் யோசனை யுயரமும், பதினெண்ணாயிரம்யோசனைப் பரப்புமுடைத்தாய்ச் சக்கரவாளமென்னும் பெயர்த்தாய்க் கடகம்போல் வயங்கும்.

இங்ஙனம் முக்கூற்றிற்குமுயரம் மூவிருபத்தையாயிரம் யோசனையும், மூன்றுமேகலைக்குமுயரம் மும்மூவாயிரம் யோசனையுமாகப் பூமிக்குமேல் உயரம் எண்பத்துநாலாயிரம் யோசனை. பூமியின்கீழ் ஆழ்ந்தது பதினாறாயிரம்யோசனையுமுளப்பட மேருவரையின் நீளம் நூறாயிரம்யோசனையுங் கண்டுகொள்க.

இதன் மேகலைமூன்றனுள், கீழிரண்டு மேகலையினுஞ் சித்தர் கந்தருவர் முதலியோர் வைகுவர். மேற்கண்ணதாகிய சக்கரவாளமேகலையின்மேற் பலபலகொடுமுடிகளுள. அவற்றுள், கிழக்குமுதலிய எட்டுத்திக்கினும் ஒரோவொன்று ஒன்பதினாயிரம்யோசனைப் பரப்புடையவாய், அதிவிசித்திரமாய்ப், பலவேறுவகைப்பட்ட வளங்களுடைய நகரங்கள் எட்டுள. அவற்றுட் கீழ்பால் அமராவதியென்னும் நகரம். தென்கீழ்பால் தேசோவதி. தென்பாற் சமுயமினி. தென்மேல்பாற் கிண்ணவதி. மேல்பாற் சுத்தவதி. வடமேல்பாற் கந்தவதி. வடபான் மகோதையை. வடகீழ்பால் யசோவதியென்னும் நகரமாம். இவ்வெட்டினும் முறையே இந்திரன், அங்கி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னுந் திசைகாவலர் எண்மருந் தத்தம் பரிசனங்களோடும் வைகுவர்.

இந்தமகாமேருவினுச்சியிற் பதினாலாயிரம்யோசனை யுயரமும் அகலமுமுடைய மநோவதியும், அதன்மேல்பால் அத்துணையுயரமும் அகலமுமுடைய வைகுண்டமும், அதன் வடகீழ்பால் இருபதினாயிரம்யோசனையுயரமும் அகலமுமுடைய சோதிட்கமுமென மூன்று கொடுமுடிகளுள. இந்த மூன்றினும் முறையே பிரமன், மால், உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளும் வைகுவர்.

இத்தன்மைத்தாகிய மேருவரையின் தென்பால் நிடதம், ஏமகூடம், இமயம் என மூன்றுமலைகளும்; வடபால் நீலம், சுவேதம், சிருங்கவான் என மூன்றுமலைகளும் ஒரோவொன்று இரண்டாயிரம் யோசனையகலமும், பதினாயிரம்யோசனையுயரமும், ஒன்பதினாயிரம்யோசனை இடைவெளியுமுடையவாய்க், கிழக்குமேற்கு உவர்க்கடல்வரையும் நீண்டுகிடக்கும். மேருவரையின் கீழ்பால் மாலியவானென்னும் மலையும், மேல்பாற் கந்தமாதனமென்னும் மலையும் ஒரோவொன்று ஆயிரம்யோசனையகலமும், இரண்டாயிரம் யோசனையுயரமும், முப்பத்துநாலாயிரம்யோசனை நீளமுமுடைத்தாய்த், தெற்குவடக்கு நிடதம் நீலம் என்னும் மலையிரண்டினும் முட்டிநிற்கும்.

இம்மலையெட்டனுள்ளும், நிடதங் கந்தமாதனம் நீலம் மாலியவானென்னும் நான்கிற்கும் நடுவாக மேருவைச்சூழ்ந்து நாற்றிசையினும் ஒன்பதினாயிரம்யோசனைப் பரப்புடைய நிலம் இளாவிருதவருடமெனவும், மாலியவான்மலைக்குக் கிழக்கு உவர்க்கடற்கு மேற்கு முப்பத்தீராயிரம் யோசனைப் பரப்புடைய நிலம் பத்திராசுகவருடமெனவும், கந்தமாதனத்திற்கு மேற்கு உவர்க்கடற்குக்கிழக்கு முப்பத்தீராயிரம்யோசனைப்பரப்புடைய நிலங் கேதுமால வருடமெனவும், தென்பால் நிடதத்திற்கும் ஏமகூடத்திற்கும் இடையே ஒன்பதினாயிரம்யோசனைப்பரப்புடைய நிலம் அரிவருடமெனவும், ஏம

கூடத்திற்கும் இமயத்திற்கும் இடையே அத்துணைப் பரப்புடைய நிலங் கிம்புருடவருடமெனவும், இமயத்திற்குந் தென்கடற்கும் இடையே அத்துணைப் பரப்புடைய நிலம் பாரதவருடமெனவும், வடபால் நீலமலைக்குஞ் சுவேதமலைக்கும் இடையே அத்துணைப் பரப்புடைய நிலம் இரமியவருடமெனவும், சுவேதமலைக்குஞ் சிருங்கவானுக்கும் இடையே அத்துணைப் பரப்புடைய நிலம் இரணியவருடமெனவும், சிருங்கவானுக்கும் வடகடற்கும் இடையே அத்துணைப் பரப்புடைய நிலங் குருவருடமெனவும், பெயர்பெறும்.

இவற்றுள், மேருவைச்சூழ்ந்த நிலத்தின் மேருமலை, சலியாமை நிலைபெறுதற்பொருட்டுக், கிழக்குமுதலிய நான்குதிக்கினும், முறையே வெண்மை பொன்மை கருமை செம்மையென்னும் நிறங்களும், இந்தநானகும் ஐம்பதினாயிரம்யோசனை உயரமுமுடையவாய் மந்தரம், கந்தமாதனம், விபுலம், சுபாரிசமெனப் பெயர்பெற்றுநிற்கும் விட்கம்பமலைகள் நான்குள. இந்த நான்குமலைகளினும் முறையே கடம்பும், நாவலும், அரசும், ஆலுமென்னும் நான்கு கற்பகமரங்கள் ஆயிரம்யோசனையுயரமுடையவாய் நிற்கும்.

இவற்றுள், தென்றிசையினிற்கும் நாவன்மரம் ஏனைய மூன்றினுஞ் சிறந்த அதிசயமிக்குடைத்தாதலின், அதன்பெயரானே உவர்க்கடலாற் சூழப்பட்டு, இலக்கம்யோசனை அளவும், ஒன்பதுவருடமுமுடைத்தாகிய இந்த நடுத்தீவு நாவலந்தீவென்று வழங்கப்படும். இந்நாவற்பழத்தின்சாறொழுகி ஆறாய்ப்பரந்து மேருவைச்சூழ்ந்து அந்நிலத்தையும் பொன்மயமாக்கி மேருவின்மூலத்திற் சென்றடையும். அந்தச் சாற்றினைப்பருகிய பறவை விலங்கு முதலாயினவும் பொன்னிறம் பெறும்.

இந்த விட்கம்பமலை நான்கனுட் கீழ்பால் நிற்கும் மந்தரமலையடிவாரத்திற் சைத்திரரதமென்னும் உய்யானவனமும், அருணோதகமென்னும் மடுவும், தென்பாற் கந்தமாதனத்தினடிவாரத்தில் நந்தனமென்னும் வனமும், மானசமென்னும் மடுவும், மேல்பால் விபுலமலையடிவாரத்திற் வைப்பிராசமென்னும் வனமும், சிதோதகமென்னும் மடுவும், வடபாற் சுபாரிசமலையடிவாரத்தில் துருதிமானென்னும் வனமும், பத்திரகமென்னும் மடுவுமுளவாம்.

இவையெல்லாமுடைத்தாய் மேருவைச்சூழ்ந்த நிலமாகிய இளாவிருதமென்னும் வருடத்தின் வாழ்வோர் நாவற்பழச்சாற்றினைப் பருகிப் பொன்மயமாய்ப் பதின்மூவாயிரமாண்டு நிலைபெறுவர்.

கந்தமாதனத்திற்குங் குடகடற்கும் அந்தராளமாகிய கேதுமாலவருடத்தின் வாழ்வோர் பனசப்பழத்தின்சாற்றைப்பருகிக் குவளைப்பூநிறமுடையராய்ப் பதினாயிரமாண்டு நிலைபெறுவர்.

மாலியவானுக்குங் கீழ்கடற்கும் அந்தராளமாகிய பத்திராசுவருடத்தின்வாழ்வோர் கருங்குவளைப்பூவையுண்டு மதிபொளிபோலும் நிறமுடையராய்ப் பதினாயிரமாண்டு நிலைபெறுவர்.

சிருங்கவான்மலைக்கும் வடகடற்கும் அந்தராளமான * குருவருடத்தின் வாழ்வோர் ஆலம்பழத்தை நுகர்ந்து கருங்குவளைப்பூநிறமுடையராய்ப் பன்னீராயிரமாண்டு நிலைபெறுவர்.

இந்தக் குருவருடத்திற்கணித்தாக வடதிசையினும், வாயுதிசையினும் உவர்க்கடலின்கட் சந்திரத்தீவும், பத்திராகரத்தீவும் என்றிரண்டு தீவுள. அவற்றின் வாழ்வோர் முறையே சந்திரநிறமுஞ் செந்தாமரைப்பூநிறமும் உடையராய்க் கனிகிழங்குகளையுண்டு பதின்மூவாயிரமாண்டு நிலைபெறுவர்.

சிருங்கவான்மலைக்குஞ் சுவேதமலைக்கும் அந்தராளமான இரணியவருடத்தின் வாழ்வோர் எலுமிச்சம்பழத்தை நுகர்ந்து மதிபோலும் வெண்ணிறமுடையராய்ப் பன்னீராயிரத்தைஞ்ஞூறாண்டு நிலைபெறுவர்.

சுவேதமலைக்கும் நீலமலைக்கும் அந்தராளமான இரமியவருடத்தின் வாழ்வோர் கருப்பஞ்சாற்றைப்பருகி வெள்ளைநிறமுடையராய்ப் பன்னீராயிரமாண்டு நிலைபெறுவர்.

நிடதத்திற்கும் ஏமகூடத்திற்கும் அந்தராளமான அரிவருடத்தின் வாழ்வோர் தத்தமக்கு வேண்டுங் கனிகளையுண்டு, பச்சிலைமரப்பூநிறமுடையராய், பெண்ணும் ஆணுமாகிய இரட்டைப்பிள்ளைகளைப் பெற்று, முப்பதினாயிரமாண்டு நிலைபெறுவர்.

ஏமகூடத்திற்கும் இமயத்திற்கும் அந்தராளமான கிம்புருடவருடத்தின் வாழ்வோர் இறலியின்கனிநுகர்ந்து பொன்னிறமுடையராய்ப் பதினாயிரமாண்டு நிலைபெறுவர்.

இங்ஙனம் இளாவிருதமுதலிய வருடங்கள் எட்டினும் வைகுவோர் நால்வகையுகங்களான் வரும் அவத்தைவேறுபாடின்றி என்றும் ஒருதன்மையராய் இன்பநுகர்ந்து வாழ்வர்.

இனி, இமயத்திற்குந் தென்கடற்கும் நடுக்கண்டமான பாரதவருடத்தின் வாழ்வோர் நால்வகையுகங்களின் அவ்வவயுகங்கட்குத் தக்க அறிவும் ஆயுளும் வடிவும் வலியுஞ் செல்வமும் மக்களுமுடையராய், உழவுமுதலிய வற்றான்வரும் உணவுகளை மாந்தி, ஆத்தியான்மிகமுதலிய மூவகைத் துக்கங்களிற்பட்டு வைகுவர்.

இந்தப் பாரதவருடத்தினிட்டப்படுங் காமியங்கள் ஏனையிடங்களிற் சென்று அநுபவிக்கப்பட்டு அழிவெய்துதலின், இஃதோர் பெருங்குணமுடைய பாரதவருடம் கருமபூமியென்றும், ஏனையவெல்லாம் போகபூமியென்றும் வழங்கப்படும்.

---

* குருவருடத்தின்வாழ்வோர்க்குக் கூறிய உண்டியும் நிறமும் ஆயுளும் முதலாயினவெல்லாம் இரமியவருடத்தின்வாழ்வோர்க்கும், இரமியவருடத்தின்வாழ்வோர்க்குக் கூறியனவெல்லாம் அரிவருடத்தின்வாழ்வோர்க்கும், அரிவருடத்தின்வாழ்வோர்க்குக் கூறியனவெல்லாங் குருவருடத்தின்வாழ்வோர்க்கும் உரியனவாக மிருகேந்திரத்துக்காணப்படுகின்றன. அங்ஙனமே சிவாக்கிரபாடியத்துங் கூறப்படுகின்றன; (எட்டாஞ்சூத்திரம், பக்கம், சஉஅ.)

இவ்வொன்பது வருடங்களையும் நாவலந்தீவிற்கு வேந்தனாக மநுமரபிற்றோன்றிய ஆக்கினீத்திரனென்னும் அரசன் தன்புதல்வராகிய பரதன் முதலிய ஒன்பதின்மர்க்கும் பகுத்தளித்தானாகலின், அவரவர் பெயர் அவ்வவ்வருடங்களுக்காயினவென்றுணர்க.

இவற்றுள், பாரதவருடமும் ஒன்பதுகண்டமாய், இந்திரத்தீவும், கசேருத்தீவும், தாமிரவர்ணித்தீவும், கபத்தித்தீவும், நாகத்தீவும், சாந்திரமத்தீவும், காந்தருவத்தீவும், வாருணத்தீவும், குமரித்தீவுமெனப் பெயர்பெற்றுப், பலபல மலைகளும், பலபலநதிகளும், பலவேறுவகைப்பட்ட சாதிகளுமுடைத்தாய் வயங்கும்.

இவ்வொன்பதினுள்ளுங் குமரிகண்டமொன்றே வேதாகமவழக்கமும், சாதிவரம்பும், கங்கைமுதலிய புண்ணியதீர்த்தங்களும், காசிமுதலிய புண்ணியத்தலங்களுமுடைத்தாய்ச் சிறந்தது. ஏனை எட்டுக்கண்டமும் மிலேச்சர் வாழிடங்களாம்.

இவ்வாறு நாவலந்தீவினியல்பு தொகுத்துக்காட்டினும். இதனைச் சூழ்ந்துகிடக்கும் உவர்க்கடலும் இதுபோல இலக்கம்யோசனை அகலமுடைத்து.

உவர்க்கடலைச்சூழ்ந்து இரண்டுநூறாயிரம்யோசனை விரிவுடையது சாகத்தீவு. இது சாகமென்னும் மரத்தாற்பெற்றபெயர். அந்தச் சாகத்தீவைச்சூழ்ந்து அத்துணைப்பரப்புடையது பாற்கடல். அதனைச்சூழ்ந்து நான்குநூறாயிரம்யோசனைப் பரப்புடையது குசத்தீவு. இது பிரமன் வேள்விசெய்யுங்கால் ஆண்டுப் பொன்மயமாய் முளைத்த குசைப்புல்லாற் பெற்ற பெயர். அந்தக் குசத்தீவைச் சூழ்ந்து அத்துணைப் பரப்புடையது தயிர்க்கடல். தயிர்க்கடலைச் சூழ்ந்து எட்டுநூறாயிரம்யோசனைப் பரப்புடையது கிரௌஞ்சத்தீவு. அஃது ஆண்டுக் கிரௌஞ்சமென்னும் வரையிற் கிரௌஞ்சனென்னும் அவுணன் அறுமுகக்கடவுளோடு பொருது மடிந்தமையின், அவனாற்பெற்ற பெயர். அந்தக்கிரௌஞ்சத்தீவைச்சூழ்ந்து அத்துணை விரிவுடையது நெய்க்கடல். அந்த நெய்க்கடலைச்சூழ்ந்து பதினாறுநூறாயிரம்யோசனை விரிவுடையது சான்மலித்தீவு. அஃதாண்டுப் பொன்மயமாய் ஆயிரம்யோசனையளவு வளர்ந்துநிற்குஞ் சன்மலியென்னும் மரத்தாற்பெற்ற பெயர். அந்தச்சான்மலித்தீவைச்சூழ்ந்து அத்துணைவிரிவுடையது கருப்பஞ்சாற்றுக்கடல். அதனைச்சூழ்ந்து முப்பத்திரண்டுநூறாயிரம் யோசனைப்பரப்புடையது கோமேதகத்தீவு. அஃதாண்டு மநுமரபிற்றோன்றிய கோபதியென்னும் வேந்தன் கோசவமென்னும் வேள்விசெய்வான்றொடங்கியவழி, உசத்தியன்மரபிற்றோன்றுங் கவுதமனாகிய தன்னாசிரியன் வாசவனை வேட்பித்தற் பொருட்டுச் சென்றானாக, பிருகுவைத் தனக்கு ஆசிரியனாகக்கொண்டு வேள்விசெய்யுங்கால் அஃதறிந்துவந்து சபித்த கவுதமன்கோபத்தீயானே வேள்விச்சாலையினின்ற கோக்களெல்லாம் வெந்தொழிய அவற்றின் மேதை அந்நிலமுழுதும் நிறைந்தமையாற் பெற்ற பெயர். அத்தன்மைத்தாகிய கோமேதகத்தீவைச்சூழ்ந்து அத்துணைப்

பரப்புடையது மதுக்கடல். அக்கடலைச்சூழ்ந்து அறுபத்துநான்குநூறாயிரம் யோசனைவிரிவுடையது புட்கரத்தீவு. அஃதாண்டுளதாகிய புட்கரணியென்னும் நதியாற்பெற்ற பெயர். அந்தப்புட்கரத்தீவைச் சூழ்ந்து அத்துணைப்பரப்புடையது சுத்தநீர்க்கடல்.

இவ்வெழுபெருந்தீவின் நாவலந்தீவொழிந்த ஆறுதீவினுமுள்ளார் இளாவிருதமுதலியவற்றின் வாழ்வார்போல நால்வகையுகங்களான்வரும் அவத்தைவேறுபாடின்றி என்றும் ஒருதன்மையராய்ப் பால் முதலிய உணவுகளையுண்டு பதினாயிரமாண்டு நிலைபெறுவர்.

இங்ஙனம் நாவலந்தீவின் நடுத்தொடங்கிச் சுத்தநீர்க்கடல்வரையில் இரண்டுகோடியேயைம்பத்துமூன்றிலக்கத் தைம்பதினாயிரம் யோசனையென் றறிக.

இனிச், சுத்தநீர்க்கடலைச்சூழ்ந்து கனகமயமாய் மாணிக்கமுதலிய பலவேறுவகைப்பட்ட மணிகளையெல்லாமுடைத்தாய் வயங்குவதாகிய பொன்னிலம் பத்துக்கோடி யோசனையுடைத்து. ஆண்டுக் கடவுளர்வந்து விளையாடி வாழ்ந்து தத்தமுலகிற்கேகுவர்.

இந்தப் பொன்னிலத்தைச்சூழ்ந்து உலோகாலோகமென்னுஞ் சக்கரவாளகிரி பதினாயிரம்யோசனைப் பரப்புடைத்தாய்நிற்கும். இப்பக்கத்தின் ஒளியும், அப்பக்கத்தின் இருளுமுடைமையான் அஃதுலோகாலோகமெனப் பெயர்பெற்றது.

அந்த மலையின் புறத்தைச் சூழ்ந்து இருண்மயமாய்த் துன்னிய நிலம் முப்பத்தைந்துகோடியே பத்தொன்பதுநூறாயிரத்து நாற்பதினாயிரம் யோசனைப்பரப்புடைத்து. இது வெகுளிமுதலியவற்றால் தம்முயிரைவீட்டினோர் பேய்வடிவெடுத்துழன்று துன்பமுற்றலையுமிடம்.

அவ்வந்தகாரநிலத்தைச் சூழ்ந்து கோடியேயிருபத்தேழுநூறாயிரம் யோசனைப்பரப்புடையது நாயகக்கடலாகிய பெரும்புறக்கடல். அதனைச் சூழ்ந்த அண்டச்சுவர்க்கனங் கோடியோசனை. ஆகச் சம்புத்தீவின் மேருவரைநிற்கும் நடுநிலமுதல் அண்டகடாகமீறாக எத்திசையினும் ஐம்பது கோடி யோசனைப்பரப்புடைய பூலோகத்தினளவு நூறுகோடி யோசனையுங் கண்டுகொள்க.

இத்தன்மைத்தாகிய பூலோகத்தின்மேல் வாயுமண்டலம், மேகமண்டலம், ஆதித்தமண்டலம், சந்திரமண்டலம்முதலாகத் துருவமண்டலங்காறும் புவலோகம். அது பதினைந்துநூறாயிரம் யோசனையுயரமுடைத்து. அதன்மேல் இந்திரன்முதலியோர்வைகுஞ் சுவலோகம் எண்பத்தைந்துநூறாயிரம் யோசனையுயரமுடைத்து. அதன்மேல் மரீசிமுதலிய முனிவர்வைகும் மகலோகம் இரண்டுகோடியோசனையுயரமுடைத்து. அதன்மேல் தென்புலத்தாரும், சன்னுமுதலிய முனிவர்கணங்களும் வைகுஞ் சனலோகம் எட்டுக்கோடியோசனையுயரமுடைத்து. அதன்மேற் சனகன்முதலியோர்வைகுந்

தவலோகம் பன்னிரண்டுகோடியோசனையுயரமுடைத்து. அதன்மேற்பிரமன் வீற்றிருக்குஞ் சத்தியலோகம் பதினாறுகோடியோசனையுயரமுடைத்து. அதன்மேற் செங்கண்மாலுலகம் நாலுகோடியோசனையுயரமுடைத்து. அதன்மேல் உருத்திரலோகம் ஆறுகோடியோசனையுயரமுடைத்து. அதன்மேல் அண்டச்சுவர்க்கனங் கோடியோசனையுயரமுடைத்து. ஆகப் பூலோகத்தின்மேல் அண்டகடாகம்வரையின் ஐம்பதுகோடியோசனை; பூலோகத்தின் கீழ்க்கூறிப்போந்த ஐம்பதுகோடியோசனையுமுளப்படப் பிரமாண்டத்தின் அளவு நூறுகோடியோசனையுங் கண்டுகொள்க. இது மிருகேந்திரத்திற் கண்டது.

கற்பந்தோறும் படைப்பு வேறுபடுதல்பற்றி ஆகமங்களிற் பிரமாண்டத்தின் வகையளவு சிறுபான்மை ஒன்றற்கொன்று வேறுபடக் கூறுமாயினுந் தொகையளவு நூறுகோடியோசனையென்பது எல்லாவாகமங்கட்குந் துணிபெனக்கொள்க.

இத்தன்மையவாகிய சாதாரணபுடவிதத்துவமென்னும் அண்டங்கள் ஆயிரங்கோடியுள. அவையெல்லாம் இவ்வாறே காலாக்கினியுருத்திரலோக முதல் உருத்திரலோகமீறுகிய உலகங்களும், வளங்களும், நூறுகோடியோசனையளவும் ஒப்பவுடையனவாய் விளங்கனிவடிவினவாய் வயங்கும்.

இந்தச் சாதாரணபுடவிதத்துவமாகிய அண்டத்தின் அப்புறத்தே பத்துத்திசையினுங் காவல்பூண்டுவைகும் உருத்திரர் ஒவ்வொருதிசைக்குப் பதின்மராக நூற்றுவரும், அண்டத்தின் உள்ளாகக் கீழும் மேலும் அறுவரும், எல்லார்க்கும் மேலாக இருவருமாக நூறறெட்டு உருத்திரர் உளர். அவரவர்வைகும் புவனங்களும் அவரவர்பெயரானே வழங்கப்படும்.

## நிவிர்த்திகலையினடங்குவன

அவையாவன:—அண்டத்துள்ளாகக் கீழே காலாக்கினியுருத்திரபுவனம், கூர்மாண்டபுவனம், ஆடகேசுரபுவனம் எனவும்; மேலே பிரமம், வைணவம், உருத்திரம் எனவுங் கூறப்படும் புவனங்கள் ஆறு.

கீழ்பால் இந்திரதிசையிற் கபாலீசன், * சடன், புத்தன், வச்சிரதேகன், பிரமர்த்தனன், விபூதி, அவ்வியயன், சாத்தன், பிஞகி, திரிதசாதிபன் எனப் பத்து உருத்திரர் இந்திரனைக் கீழ்த்திசைக்காவலின் நியமித்து வைகும் புவனங்கள் பத்து. மேலும் அவ்வத்திசையிற் கூறப்படும் உருத்திரர் அவ்வத்திசைகாப்பாளராகிய அங்கியங்கடவுண்முதலியோரை அவ்வத்தொழிலின் நியமித்து அவர் வழிபட வீற்றிருப்பரென் றறிக.

தென்கீழ்பால் அங்கிதிசையின் அங்கியுருத்திரன், உதாசனன், பிங்கலன், காதகன், அரன், சுவலனன், தகனன், பப்புரு, பதுமாந்தகன், கயாந்தகன் என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

---

* இவை, ஸத்யோஜாதோ வஜ்ரதேஹஶ்ச கபாலீஶ: வ்ருஷத்வஜ: | எனமிருகேந்திரத்தும், கபாலீஶோ ஜடோ ஸத்யோ வஜ்ரதேஹ:வ்ருஷத்வஜ: | எனச் சிவாக்கிரபாடியத்துங் காணப்படுகின்றன.

தென்பால் இயமன்றிசையில் யாமியன், மிருத்தியு, அரன், தாதா, விதாதா, கருத்தா, சையோத்தா, வியோத்தா, தருமன், தருமபதி என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

தென்மேல்பால் நிருதிதிசையில் நிருதி, மாரணன், அந்தா, குரூரதிருட்டி, பயானகன், * ஊர்த்துவகேசன், விரூபாக்கன், தூமிரன், உலோகிதன், தமிட்டிரி என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

மேல்பால் வருணதிசையிற் பலன், அதிபலன், பாசவத்தன், மாபலன், சுவேதன், சயபத்திரன், தீர்க்கவாகு, சலாந்தகன், மேகநாதன், சுநாதன் என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

வடமேல்பால் வாயுதிசையிற் சீக்கிரன், இலகு, வாயுவேகன், சூக்குமன், தீக்கணன், கயாந்தகன், பஞ்சாந்தகன், பஞ்சசிகன், கபர்த்தி, மேகவாகனன் என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

வடபாற் குபேரனுஞ் சோமனும் வைகுந் திசையில் நிதீசன், உரூபவான், தன்னியன், சௌமியதேகன், சடாதரன், இலக்குமிதரன், அரதனதரன், சிதரன், பிரசாதன், பிரகாமதன் என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

வடகீழ்பால் ஈசானதிசையில் வித்தியாதிபன், ஈசன், சர்வஞ்ஞன், ஞானபுக்கு, வேதபாரகன், சுரேசன், சருவன், சேட்டன், பூதபாலன், பலிப்பிரியன் என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

கீழ்க்கண்ணதாகிய மாயோன்றிசையில் இடபன், இடபதரன், அநந்தன், குரோதனன், மாருதாசனன், கிரசனன், உதும்பரன், ஈசன், பணீந்திரன், வச்சிரதமிட்டிரி என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

மேற்கண்ணதாகிய பிரமன்றிசையிற் சம்பு, விபு, கணத்தியக்கன், திரியக்கன், திரிதசேசன், சமுவாகன், விவாகன், நபன், இலீச்சு, திரிலோசனன் என்னும் உருத்திரர்வைகும் புவனம் பத்து.

எல்லாவற்றினுக்கும் மேலாக வீரபத்திரன், பத்திரகாளி என்னு மிவர் வைகும் புவனம் இரண்டு. ஆகச் சாதாரணபுடவிதத்துவத்திற் புவனம் நூற்றெட்டுங் கண்டுகொள்க. இந்த நூற்றெட்டுப் புவனமும் பிருதிவியண்டம் ஆயிரங்கோடியினும் இவ்வாறே வேறுவேறுள்ளன.

இவ்வண்டஞ் சுருங்கியவடிவிற்றாகிய அடித்தலத்தில் தாமதமும், மேலே சற்று விரிவுடைத்தாகிய முகத்தில் இராசதமும், அவ்விரண்டுங் கூடும் முடித்தலத்திற் சாலவும் விரிவுடைமையாற் சாத்துவிகமுமென்னும் மூவகைத்தாம்.

---

* ஊர்த்துவகேசன் என்பது ஊர்த்துவலிங்கன் என்றும், பயானகன் என்பது விடப்பட்டும், பீமன் என்பது பத்தாவதாகச் சேர்க்கப்பட்டும் மிருகேந்திரத்திற் காணப்படுகின்றன.

இத்தன்மைத்தாகிய பார்த்திவமண்டலம் ஐவகைவடிவின் நாற்கோண வடிவும், ஐவகைக்குறியின் வச்சிரக்குறியும், ஐவகை நிறத்திற் பொன்னிற மும், இருவகைப் பத்துப்பீசத்தின் அகரம் லகரம் என்னும் இரண்டு பீசங் களும், பத்துவகை நாடியின் இடை பிங்கலை என்னும் இரண்டு நாடியும், தசவாயுக்களிற் பிராணன் அபானன் என்னும் இரண்டுவாயுவும், இருவகைப் பத்திந்திரியங்களின் ஆக்கிராணம் உபத்தம் என்னும் இரண்டிந்திரியங் களும், ஐவகை விடயத்திற் கந்தமும், கந்தமுதற் சத்தமீருகிய ஐந்துகுண மும், ஐவகை அவத்தையிற் சாக்கிரமுமுடைத்தாய், விலங்கு, பறவை, பசு, பாம்பு, தாவரம், மானிடம், பைசாசம், இராக்கதம், இயக்கம், காந் தருவம், ஐந்திரம், சௌமியம், பிராசாபத்தியம், பிரமம் என்னும் பதி னுன்குவகை யோனிகட்கும் இடனுய் நிற்கும்.

இதற்கு அதிதெய்வம் பிரமன். இதற்கு இலயத்தானம் மூலப்பகுதி. போகத்தானம் புத்தி. ஏனைய அத்துவாக்கட்குரிய நிறம், குறி, வடிவு, பீசம், நாடி, வாயு, இந்திரியம், விடயம், குணம், அதிதெய்வம் முதலாயின வும் இம்முறையே பற்றி யுணர்ந்துகொள்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இனிப், புவனங்களிற் புவனபதிகளினிடமாக நிலைபெறும் அக்கரங்கள் ஐம்பத்தொன்றின், ளகரத்தினிறுதிக்கணின்ற உடலெழுத்தொன்றும், அவ் வக்கரங்களாலியன்ற பதங்களெல்லாவற்றிற்கும் மூலமாகிய எண்பத்தொரு பதத்தின், இறுதிக்கணின்றபதமுதல் இருபத்தெட்டுப்பதமும், பதங்களா னியன்ற மந்திரங்களெல்லாவற்றிற்கும் மூலமாகிய பதினொருமந்திரத்தின், இதயம், சத்தியோசாதம் என்னும் இரண்டுமந்திரமும் இதன்கணடங்கும். இவையெல்லாமுடைத்தாய் ஈண்டுக் கூறிப்போந்த புடவிதத்துவத்தை அடக்கிநிற்பது நிவிர்த்திகலை.

## பிரதிட்டாகலையினடங்குவன.

இனிச், சாதாரணமான அப்புதத்துவ அண்டம் பிருதிவியண்டத் தளவிற் பதிற்றுமடங்கேற்றமாகிய ஆயிரங்கோடியோசனைமானமுடைத்து. அவ்வண்டங்களும் எண்ணிறந்தன. இவ்வாறே சாதாரணதேயுதத்துவ முதற் சாதாரண மூலப்பகுதி தத்துவங்காறும், கீழ்க்கீழண்டத்தை நோக்கி மேன்மேலண்டம் பப்பதிற்றுமடங்களவு ஏற்றமாகவுடையன வெனக் கொள்க.

அத்தத்துவங்களாவன:—புடவிதத்துவமொழித்தொழிந்த பூதங்கள் நான்கும், தன்மாத்திரையைந்தும், ஞானேந்திரியமைந்தும், கன்மேந்திரி யமைந்தும், மனமாதி அந்தக்கரணம் மூன்றும், அவ்வியத்தமுமென்னும் இருபத்துமூன்றுமாம். சித்தம் மனத்தினும், குணதத்துவம் அவ்வியத் தத்தினும் அடங்குமாகலின், இருபத்துமூன்றென்னுந் தொகைக்கிழுக் கின்மை அறிக.

அவற்றுள், அப்புமண்டலத்தின் அமரேசம், பிரபாசம், நைமிசம், புட் கரம், ஆசாடி, திண்டிமுண்டி, பாரபூதி, இலகுளீச்சுரம் ஆகிய குய்யாட்டக

புவனம் எட்டு. தேயுவண்டத்தின் அரிச்சந்திரம், சீசைலம், செற்பேசம், ஆமிராதகம், மத்திமேசம், மாகாளம், கேதாரம், வைரவம் ஆகிய அதிகுய்யாட்டகமென்னும் புவனம் எட்டு. வாயுவண்டத்திற் கயை, குருக்கேத்திரம், நாகலம், நகலம், விமலம், அட்டகாசம், மகேந்திரம், பீமேசம் ஆகிய குய்யதராட்டகமென்னும் புவனம் எட்டு. ஆகாயவண்டத்தில் வத்திராபதம், உருத்திரகோடி, அவிமுத்தம், மகாலயம், கோகர்ணம், பத்திரகரணம், சுவர்ணுக்கம், தாணு ஆகிய பவித்திராட்டகமென்னும் புவனம் எட்டு. தன்மாத்திரை ஐந்தும், இந்திரியம் பத்தும், மனமும் என்னுந் தன்காரியமாகிய பதினறண்டங்களேயுந் தன்னுளடக்கிநிற்கும் ஆங்காரவண்டத்திற் சகலண்டம், துவிரண்டம், மாகோடம், மண்டலேச்சுரம், காளாஞ்சரம், சங்குகன்னம், தூலேச்சுரம், தலேச்சுரம் ஆகிய தாணுவட்டகமென்னும் புவனம் எட்டு. புத்தியண்டத்திற் பைசாசம், இராக்கதம், இயக்கம், காந்திருவம், ஐந்திரம், சௌமியம், பிராசேசம், பிராமம் ஆகிய சூக்கும புவனுட்டகம் எட்டு. பிரகிருதியண்டத்தில் அகிருதம், கிருதம், வைரவம், பிராமம், வைணவம், கௌமாரம், ஔமம், சீகண்டம் என்னும் யோகாட்டகபுவனம் எட்டு. ஆக அப்புதத்துவமுதல் மூலப்பகுதியீருகிய அண்டங்களேக் காக்கும் உருத்திரர் வைகும் புவனம் ஐம்பத்தாறு.

இந்தப்புவனங்களிற் புவனபதிகளிடமாக நிலேபெறும் அக்கரங்கள் சங்காரமுறையின் ளகரமுதல் டகரமீருகிய இருபத்துநான்கு; ளகரத்தை லகரத்துளடக்கி இருபத்துமூன்றென்றலுமொன்று. ஈண்டடங்கும் பதங்கள் சங்காரமுறையின் இருபத்தெட்டுக்கு மேலுளவாகிய இருபத்தொரு பதங்கள். மந்திரஞ் சிரமும் வாமதேவமும் என இரண்டு. இவையெல்லாமுடைய அப்புதத்துவமுதல் மூலப்பகுதியீருகிய இருபத்துமூன்றுதத்துவங்களும் பிரதிட்டாகலேயில் அடங்கும்.

## வித்தியாகலேயினடங்குவன.

இனி, மூலப்பகுதிக்குமேற் புருடதத்துவமுதல் மோகினியீருகிய ஏழுதத்துவங்களுங் கீழ்க் கீழ்த் தத்துவங்களே நோக்கி மேன்மேல் நூறு நூறு மடங்கு பிரமாணம் ஏற்றமாகவுடையன.

அவற்றுள், புருடதத்துவத்தில் வாமன், வீமன், உக்கிரன், பவன், ஈசானன், ஏகவீரன் என்னும் உருத்திரர்புவனம் ஆறு. அராகதத்துவத்திற் பிரசண்டன், உமாபதி, அசன், அநந்தன், ஏகசிகன் என்னும் உருத்திரர் புவனம் ஐந்து. நியதியிற் குரோதன், சண்டன், சமுவத்தன், சோதி, சூரன் என்னும் உருத்திரர் புவனம் ஐந்து. வித்தையிற் பஞ்சாந்தகன், ஏகவீரன் என்னும் உருத்திரர் புவனம் இரண்டு. கலேயிற் சிகேசன், மகாதேசன் என்னும் உருத்திரர் புவனம் இரண்டு. காலத்தில் வாமதேவன், பலன் என்னும் உருத்திரர் புவனம் இரண்டு. மாயையில் உற்பவன், ஏகபிங்கலன், ஏகேக்கணன், ஈசானன், அங்குட்டமாத்திரன் என்னும் உருத்திரர் புவனம் ஐந்து. ஆகத் தத்துவமேழினுமடங்கும் புவனம் இருபத்தேழு.

இந்தப் புவனங்களிற் புவனபதிகளிடமாய் நிலைபெறும் அக்கரஞ் சங்காரமுறையின், ஞகரமுதல் கவ்வருக்கத்தின் நான்காமெழுத்தீறாக ஏழக்கரம். பதங்கள் சங்காரமுறையின் இருபத்தெட்டும் இருபத்தொன்றுமாகிய நாற்பத்தொன்பதிற்கு மேலுள்ள இருபதுபதங்கள்.

மந்திரஞ் சிகையும் அகோரமுமென இரண்டு. இவையெல்லாமுடைய இவ்வேழுதத்துவமும் வித்தியாகலையில் அடங்கும்.

சாந்திகலையினடங்குவன.

இனி, இவ்வேழுக்கும் மேலாகிய சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம் என்னும் மூன்றுதத்துவங்களுங் கீழ்க்கீழ்த் தத்துவங்களைநோக்கி மேன்மேல் ஆயிரமடங்கு பிரமாணமேற்றமாகவுடையன.

இவ்வண்டங்களுட் சுத்தவித்தையில் வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பெலவிகரணி, பெலப்பிரமதனி, சருவபூததமனி, மனோன்மனி என்னும் நவசத்திகள்புவனம் ஒன்பது. ஈசுரதத்துவத்தில் அநந்தன், சூக்குமன், சிவோத்தமன், ஏகநேத்திரன், ஏகருத்திரன், திரிமூர்த்தி, சீகண்டன், சிகண்டி என்னும் அட்டவித்தியேசுரர்புவனம் எட்டு. சதாசிவதத்துவத்திற் சதாசிவபுவனம் ஒன்று. ஆகத் தத்துவம் மூன்றினும் அடங்கும் புவனம் பதினெட்டு.

ஈண்டுப் புவனபதிகளிடமாக நிலைபெறும் அக்கரங் கவ்வருக்கத்தின் நான்காவதொழித்தொழிந்த மூன்றுமாம். பதங்கள் சங்காரமுறையின் அறுபத்தொன்பதிற்குமேல் வியோமவியாபியீறாகிய பதினொருபதம். மந்திரந் தற்புருடம், கவசம் என்னும் இரண்டு. இவையெல்லாமுடைய இம்மூன்றுதத்துவமுஞ் சாந்திகலையில் அடங்கும்.

சாந்தியதீதகலையினடங்குவன.

இனிச், சத்திதத்துவஞ் சிவதத்துவம் இரண்டுங் கீழ்க்கீழ்த் தத்துவப்பிரமாணத்தைநோக்கி நூறாயிரமடங்கு பிரமாணம் ஏற்றமாகவுடையன. அவற்றுட், சத்திதத்துவத்தின் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்னும் புவனம் ஐந்து. சிவதத்துவத்தில் இந்திகை, தீபிகை, இரோசிகை, மோசிகை, ஊர்த்துவகாமினி, வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை என்னும் புவனம் பத்து. ஆகத் தத்துவம் இரண்டினுமடங்கும் புவனம் பதினைந்து.

ஈண்டுப் புவனபதிகளிடமாக நிலைபெறும் அக்கரம் அகரமுதலிய உயிர் பதினாறு. பதஞ் சங்காரமுறையின் இறுதிக்கண்ணதாகிய ஓம் என்பது ஒன்று. மந்திரம் ஈசானமும் அத்திரமும் மூலமந்திரமும் என மூன்று. இவையெல்லாமுடைய இவ்விரண்டுதத்துவமுஞ் சாந்தியதீதகலையில் அடங்கும்.

இங்ஙனம் நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளிலடங்கி, மூவகை ஆன்மாக்களுந் தத்தமக்குரிய கரணரூபமுஞ் சூக்குமதேகரூபமுமாகிய சிறப்புத்

தத்துவங்களோடுந் தூலரூபமாகிய பொதுச்சிறப்புத் தத்துவங்களோடுங் கூடிப் போக்குவரவுசெய்தற்கும் போகநுகர்ச்சிக்கும் இடமாய்ப் புவன முதலிய அத்துவாக்களனைத்தையுந் தம்முளடக்கி நிற்பனவாகிய நிலமுதல் நாதமீறுன சாதாரணதத்துவங்களுக்களவும், அவற்றதியல்புகளும் ஒரு வாற்ருற் றெருகுத்துக் கூறப்பட்டன. சகலர் போக்குவரவுசெய்து போக நுகர்தற்கிடமாகிய அண்டத்தினியல்பே ஈண்டு எடுத்துக்கொண்டதாயினும், இனமாதல்பற்றி ஏனையவுமுடன்கூறப்பட்டனவென் றுணர்க.

ஈண்டுப் பதிற்றுமடங்கேற்றமெனப்பட்ட எண்களையறியுமாறு:—

ஒன்றுமுதற் பதிற்றுமடங்காயது பத்து; தசமென்பதும் இது. அதற்குப் பத்தாந்தானம் நூறு; சதமென்பதும் இது. அதற்குப் பத்தாந் தானம் ஆயிரம்; சகத்திரமென்பதும் இது. அதற்குப் பத்தாந்தானம் பதினுயிரம்; அயுதமென்பதும் இது. அதற்குப் பத்தாந்தானம் நூறு யிரம்; இலக்கம் நியுதமென்பதும் இது. அதற்குப் பத்தாந்தானம் பத்தி லக்கம். அதற்குப் பத்தாந்தானங் கோடி. அதற்குப் பத்தாந்தானம் அற்புதம். அதற்குப் பத்தாந்தானம் பதுமம். அதற்குப் பத்தாந்தானங் கருவம். அதற்குப் பத்தாந்தானம் நிகர்வம். அதற்குப் பத்தாந்தானம் பிருந்தம். அதற்குப் பத்தாந்தானம் மாபதுமம். அதற்குப் பத்தாந் தானஞ் சங்கம். அதற்குப் பத்தாந்தானம் மாசங்கம். அதற்குப் பத் தாந்தானஞ் சமுத்திரம். அதற்குப் பத்தாந்தானம் மாசமுத்திரம். அதற் குப் பத்தாந்தானம் மத்தியம். அதற்குப் பத்தாந்தானம் பரார்த்தம். இங் ஙனம் * ஒன்றுமுதற் பரார்த்தமீறுகிய இருபது தானமுங் கண்டுகொள்க.

இனிக், † குணதத்துவங்காறும் பதிற்றுமடங்கு ஏற்றமாமென்றும், மூலப்பகுதி குணதத்துவத்தைநோக்கி நூறுமடங்குயோசனை ஏற்றமாக வுடைத்தென்றும், சத்திதத்துவத்தைநோக்கிச் சிவதத்துவம் அளவிடப் படாத எல்லையுடைத்தென்றும், குணதத்துவத்திற்குமேல் மூலப்பகுதி

* இவ்வெண்களை, ஏகம் தஶஶதம் ஸஹஸ்ராயுதம் லக்ஷம் ப்ரயு தம் கோடிஸ்த்வர்புதகம் ச பத்மகமதோ கர்வம் நிகர்வம் ததா । வ்ருந்தம் சைவ மஹாஸரோஜ ஶங்கம் மஹாஶங்கம் ஸமுத்ராஹ்வயோ மத்யம் சைவ பரார்தஸம்ஜ்ஞகமிதி ஸம்க்யா விபாகோதிதா: ॥ என்னுஞ் சித்தாந்தசாராவலிச் சுலோகத்தானும் உணர்க.

† இது, க்ஷ்மாதத்வம் ஶதகோடியோஜந விஸ்தாரம் ஹ்யணா த்யம் வஹ்நித்ர்யா தத்குணநாதயா ப்ரக்ருதிதோ மாயாவஸாநம் ஶதாத் ஸாஹஸ்ராச்ச ஸதாஶிவாவதி தத ஶக்த்யந்தகம் லக்ஷத ஸ்வா த்மீயம் ஶிவதத்வமேவ விபவோ பிந்தோ ரயிஷ்டாயக: ॥ என்னுஞ் சித்தாந்தசாராவலியினுங் காணப்படுகின்றது.

முதலியவற்றின் ஈண்டுக் கூறியனவேயன்றி * இன்னுஞ் சில புவனங்கள் உளவென்றும், உளவாகவே, அவையுமுளப்படப் புவனத்துவா இருநூற்று முப்பத்தாறுமென்றும், ஐம்பத்தோரக்கரங்களின் ளகரம் லகரத்துளட ங்குமென்பதுபற்றி வன்னத்துவா ஐம்பதென்றும், பதம் எண்பத்தொன் றனுட் சிலவற்றைத் தம்முள் வேறுவைத்தெண்ணிப் பதாத்துவாத் தொண் ணூற்றுநான்கென்றும், பீசமொன்றுதல்பற்றி மூலமந்திரத்துளடங்குவ தாகிய நேத்திரத்தை வேறுவைத்தெண்ணி மந்திராத்துவாப் பன்னிரண் டென்றுஞ் சிலவாகமங்களிற் கூறப்படும். மூலப்பகுதிமுதலியவற்றின் வேறுஞ் சில புவனங்களுளவென்பது மிருகேந்திரத்திற் கூறப்பட்டது. அது ஞானமிர்தத்தினுங் காண்க.

அற்றேல், நிருவாணதீக்கையின் அத்துவசுத்திசெய்தற்கண் மலைவாம் பிறவெனின்,—ஆகாது; அவ்வவாகமவழி நின்றோரான் அவ்வவாகமத்திற் கூறியவாறே சுத்திசெய்யப்படுமாகலானென்க. அற்றாயினும், அண்டங்களுக் களவும், ஆண்டுள்ள பொருள்களும், ஆண்டாண்டைக்குரிய புவனங்களுஞ் சிறுபான்மை தம்முள் வேறுபடக்கூறுமாகமங்கள் ஒன்றோடொன்று முரணுமாலோவெனின்,—முரணாது; என்னை? கற்பந்தோறும் படைப்பு வேறுபாடுடைமையின், அவ்வேறுபாடுபற்றி அவை அங்ஙனம் வேறுபடக் கூறுதல் பொருந்துமாகலானென்பது.

ஈண்டு அத்துவாக்களாற்றுள், கலாத்துவா நிவிர்த்திமுதற் சாந்திய தீதையீறாகவும், தத்துவாத்துவா நிலமுதற் சிவமீறாகவும், புவனத்துவாக் காலாக்கினியுருத்திரபுவனமுதல் அநாசிருதபுவனமீறாகவும், வன்னத் துவா ளகரத்தின் அயனின்ற எழுத்துமுதல் அகரமீறாகவும், பதாத் துவா ஓம்நமோநம என்பதுமுதல் வியோமவியாபிஓம் என்னும் பத மீறாகவும், மந்திராத்துவாவிற் பஞ்சப்பிரமங்கள் சத்தியோசாதமுதல் ஈசா னமீறாகவும், அங்கங்கள் இதயமுதல் அத்திரமீறாகவும் வைத்துக்கூறி யது ஒடுங்குமுறைபற்றியெனவும்; இனித் தோன்றுமுறைபற்றிக் கலாத் துவாச் சாந்தியதீதைமுதல் நிவிர்த்தியீறாகவும், தத்துவங்கள் சிவமுதல் நில மீறாகவும், புவனங்கள் அநாசிருதபுவனமுதற் காலாக்கினியுருத்திரபுவன மீறாகவும், வன்னங்கள் அகரமுதல் ளகரத்தினயனின்ற எழுத்தீறாகவும், பதங்கள் ஓம்வியோமவியாபி என்னும் பதமுதல் நமோநமஓம் என்பதீறா கவும், மந்திரங்களிற் பிரமம் ஈசானமுதற் சத்தியோசாதமீறாகவும், அங்கம் அத்திரமுதல் இதயமீறாகவுங் கூறப்படுமெனவுந் தெரிந்துகொள்க. அத்துவாவெனினும், வழியெனினுமொக்கும். இவை ஒரோவொன்றாகக் கழித்துக்கொண்டு சிவபதத்திற் சேறற்கு வழிபோறலின், அத்துவா வெனப்பட்டன. தத்துவமுதல் ஐந்தினையுந் தம்முளடக்கிநிற்கும் பஞ்ச கலைகள் திரோதாயிரூபமாய்நின்ற சிவசத்தியிலடங்கும். சிவசத்தி சிவன்க ணடங்குமென் றுணர்க.

மூன்றாமதிகரணமுடிந்தது.

* இப்புவனங்களைச் சிவாக்கிரபாடியத்துக்காட்டிய மிருகேந்திரவசனங்களான் அறிக. (எட்டாஞ்சூத்திரம், பக்கம், சஙரு.)

உ-அ
X "வேதமொடு தந்திரமு மற்றின் சாரு மிருதிகளும் புராணமும் வேறு வேறா ஓதிடுமண் டத்தியுற்கை மலேவோ வென்று முன்னமேதெரிந் திடும்பகையை முயல்பில் பேதம் ஆதலினா லவ்வவற்றின் புரிய நாடி யறிந்தவுணர்ந் தோர்முன்னமை யதுவே சொற்றோம் ஆதலினவ் வண்டத்தும் புவன தாரதெட் டிறையருள்சே ருத்திரர்க ளிருக்கை பாலே."

## நான்காமதிகரணம்.

மூன்றுமதிகரணத்தின் உயிர்கள் முன்னையச்சுமாறி மீளப்பிறந்து இவ்வாறே வருமென்றதனான் மீளப் பிறக்குங்கால் ஒடுங்கின சங்காரத்தினல்லதுற்பத்தியில்லையாகலின், சங்காரகாரணனாகிய முதல்வனே ஐந்தொழிற்கும் வினைமுதலாவனெனச் சிறப்புவகையான் இலக்கணத்தை வலியுறுத்தியவழி, அஃதொக்கும்; அங்ஙனமாயினும், இருவினையதிகரணத்தின் முதல்வனுணையாகிய பராசத்தியான் இருவினைவருமென்றதனாற் பராசத்தியும் ஐந்தொழில்செய்யுமென்பது போந்தது. போதவே, பராசத்தியும் முதல்வியாவான் சேறலின், ஐந்தொழில்செய்தல் சங்காரகாரணனாகிய முதல்வனுக்கேயுரிய சிறப்பிலக்கணமென்றல் பொருந்தாதென்று ஆசங்கை நிகழுமன்றே: அவ்வாசங்கை நீக்குமுகத்தானே முதல்வனுக்குச் சிற்சத்தியாகிய துணைக்காரணமுண்டென்பதற்குப் பிரமாணங்கூறுதற்கெழுந்தது நாலாமதிகரணம்:—

இனி நீக்கமின்றி நிற்குமன்றே (எனவரும்.)

ஈண்டு **நீக்கமின்றி நிற்கும்** எனப் பொதுப்படவுரைத்தமையின், யாதனின் நீக்கமின்றி நிற்கும் என்றவாயவழி, அணிமைக்கணின்ற ஆணையின் என்பது வந்தியைவதன்றி, ஏனையவந்தியைதற்கோரியையின்மையானும்; ஆன்மாக்களின் வியாபித்துநிற்றல் **அவையேதானே** என்னும் அதிகரணத்தாற் கூறிப்போந்தமையின், அதனையே மீளவுங் கூறுதல் வழுவாமாகலானும்; ஆன்மா மாயை கன்மங்களின் முதல்வன் வியாபித்துநிற்றல், **சருவவியாபியாய் நிற்றல்** என்னும் ஏதுவின்பொருளாகலான் மேற்கோளுக்கும் அதுவே பொருளாகவுரைப்பின், "மலைதீயுடைத்து, தீயுடைமையான்" என்பதுபோல் இழுக்குப்படுமாகலானும்; **நீக்கமின்றி அவையே தானேயாய் நிற்கும்** எனக் கூட்டியுரைப்பின் அதனை வேறோரதிகரணமாக்கி இறுதிக்கண்வைத்தல் வழுவாய்முடியுமாகலின், அஃதாசிரியர் கருத்தன்மையானும் அங்ஙனமுரைப்பனவனைத்தும் போலியென்றொழிக.

மற்றும் வடமொழியிரண்டாஞ்சூத்திரத்திறுதியிற் "சமவேதை" என ஆணையை விசேடித்தோதுதலிற் சமவேதையாமாறு ஓரதிகரணமாகவைத்து ஒருதலையானுணர்த்தவேண்டுதலின், அது கூறுக்காற் குன்றக்கூறலாய் முடியுமாகலானும்; "அந்நியயோகவியவச்சேதம், அயோகவியவச்சேதம்" என்னும் வடசொற்களைப் "பிறிதினியைபுநீக்குதல், இயைபின்மை நீக்குதல்" என வழங்குமாறுபோலச், "சமவாயம்" என்னும் வடசொல், "நீக்கமின்றிநிற்றல்" என மொழிபெயர்த்து வழங்கப்படுமாகலின், அது வேறுபொருள்படாமையானும்; வியாபித்துநிற்றல் ஏதுவின்பொருளாகலின், அதனையே மேற்கோளின்பொருளாகக் கோடல் பொருந்தாதென்பது மேற்காட்டினமாகலானும் **இனி நீக்கமின்றி நிற்குமன்றே** என்பது தன்னைச் சாரவைத்தோதிய ஆணையாகிய சிற்சத்தியினோடு முதல்வன் சமவேதமாய் நிற்பனெனவே பொருள்கொள்ளக் கிடந்தவாறு காண்க.

வடமொழி இரண்டாஞ்சூத்திரத்தின், * "ஆணை முதல்வனோடு சம வேதமாய் நிற்கும்" என ஆணைமேல்வைத்தோதினர். ஈண்டு "முதல்வன் ஆணையோடு சமவேதமாய் நிற்கும்" என முதல்வன்மேல் வைத்தோதினர். அவ்விரண்டும் பொருளான் வேறன்மையுணர்க.

ஈண்டுச் சமவாயமென்றது தாதான்மிய சம்பந்தத்தை; தாதான்மியமே சமவாயமெனவும் வழங்கப்படுவதன்றி, அதனின்வேறாய் நையாயிகர் முதலியோர் கூறுஞ் சமவாயசம்பந்தமொன்றுண்டென்பதற்குப் பிரமாணமின்மையானென்க. தாதான்மியமாவது பொருளான் ஒன்றேயாயினும் ஒருவாற்றாற் பேதமாதற்குரிமையுடைமையென † மேலுரைத்தாம்; கடைப்பிடிக்க. தாதான்மியமென்னுஞ் சொல்லியல்பு "அது தானுதல்" என்றவாறு. எனவே, முதல்வனாணையாகிய சிற்சத்தி முதல்வனின் வேறின்றி அவனின் வியாப்பியமாய்நிற்றலான் ஆண்டுச்சேறல்பற்றி இழுக்கின்மையின், ஐந்தொழில்செய்தல், சங்காரகாரணனாகிய முதல்வனுக்கேயுரிய சிறப்பிலக்கணமென்பது வலியுறுத்தியவாறு காண்க.

அற்றேல், ஆணையாகிய சிற்சத்தியோடு முதல்வன் அபேதமும் பேதமுமின்றி அவ்விரண்டற்கும் பொதுமையாய் அங்ஙனநிற்பன் என்றற்குப் பிரமாணமென்னையெனின், மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

அவன் ஏகாநேகமிரண்டுமின்றிச் சருவவியாபியாய் நிற்றலான் எனவரும்.

அவிநாபாவமுணர்த்துதற்கு **ஏகாநேகமிரண்டுமின்றி** என மேற்கோளிற் போந்தபொருளை அநுவதித்துச் **சருவ வியாபியாய் நிற்றலான்** என ஏதுக்கூறினர். சருவவியாபியாய்நிற்றல் **அவையேதானேயாய்** என்பதனாற் சாதித்தமையின், அதனை ஈண்டு ஏதுவாகவைத்து **நீக்கமின்றிநிற்கும்** என்னும் மேற்கோளைச்சாதித்தார். ஈண்டு அநுமானங்கூறிக் காணுமாறு:— "முதல்வன் தனது சிற்சத்தியோடு பேதமும் அபேதமுமின்றி அவ்விரண்டற்கும் பொதுமையாய்நிற்பன், சருவவியாபியாகலான்; யாதியாது வியாபியாய்நிற்கும், அதுவது ஒன்றுதலும் இரண்டாதலுமின்றி அவ்விரண்டற்கும் பொதுமையினிற்கும்; தன்னெல்லையளவும் வியாபியாய்நிற்கும் ஞாயிறு தன்கிரணத்தோடு அவ்வாறுநிற்றல்போலும்" என உடம்பாட்டு முகத்தானும்; "யாதியாது அங்ஙனம் பொதுமையினிற்பதன்று, அதுவது வியாபியாய்நிற்பதுமன்று; குடம்போலும்" என எதிர்மறைமுகத்தானுங் கூறிக் கண்டுகொள்க.

ஏதுவும் மேற்கோளுந் தம்முள் அவிநாபாவமாமாறு இங்ஙனங் கூறிக்காட்டி, ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

---

* ஆஜ்ஞயா ஸமவேதயா | என்பது வடமொழியிரண்டாஞ்சூத்திரம்.

† பக்கம், கூக.

எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றெவற்றெவனு—மங்க
ணவைபவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீச
னவையுடைமை யாளாநா மங்கு

எனவரும்

பசுபாசங்களும் வியாபகமாகலின், அவையும் இம்முறைமைபற்றிக் கத்தஞ் சத்திகளோடுந் தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனோடு அவற்றிடை வேற்றுமையில்லைபோலுமென்னும் ஆசங்கை நிகழாமைப்பொருட்டு அவையுடைமை யாளாநா மங்கு என மேலைச்சூத்திரத்தில் தாரகமாமத்தன்ருள் எனவும், அதனி னீறலா வோன்றுபல வாறே தோழும்பாகும் எனவுங் கூறிப் போந்தவற்றை அநுவதித்துணர்த்தினாராகலின், அது கூறியதுகூறலன்மையுணர்க.

அன்று எனப் பாடமோதுவாருமுளர். என்ற அளவை என்னும் பெயரெச்சவீறு திரிந்துநின்றது; * "புகழ்புரிந் தில்லிலோர்க்கு" என்புழிப் போல. அளவை - பிரமாணம். அளவையான் என விரிக்க. ஒன்றன்று உளனன்று என்புழி, ஒன்று உளன் என்னுந் தருமிவாசகங்கள் ஆகுபெயரான் அத்தருமங்களின் மேனின்றனவாகலான், உளன் என்பது அஃறிணையொருமைவினைகொண்டது. அன்மை - கூடாமைப்பொருட்டு.

எவற்றெவனு மங்க ணவையவ னன்றில்லை என்பது எவ்விடங்களினுள்ள எத்திறப்பொருளுமாகிய அவ்விடத்துப்பொருள்கள் அம்முதல்வனையின்றியமையாவென்றவாறு.

அஃறிணைக்கண்வரும் எவன் என்னும் வினாவினைக்குறிப்புச்சொல் ஈண்டுப் பெயர்த்தன்மைப்பட்டு எஞ்சாப்பொருண்மையுணர்த்திநின்றது. அன்றி என்னும் வினையெச்சம் செய்யுளாகலின் அன்று எனத் திரிந்தது; † "நாளன்றுபோகி" என்புழிப்போல. இன்மை - அமையாமைப்பொருட்டு. போன் - ஆகுபெயர். போல் - போலுமென்றுரைக்க. செய்யுமென்னு முற்றுத் தன்மையிற் செல்லாமையின், ஆம் என்பதனை உடைமையோடு கூட்டுக. ஆள் என்னும் அஃறிணையோடியையு மென்றலு மொன்று. ‡ "பணியுமாமென்றும் பெருமை" என்புழிப்போல அசைச்சொல்லெனினும் அமையும்.

ஆளாநாம் என்பதனால் வருஞ்சூத்திரத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறுங் காண்க.

இவ்வதிகரணத்தாற்போந்த தொகைப்பொருள்:—முதல்வன் வியாபகனாகலின், வியாபகப்பொருள் ஒன்றாய்நிற்றல் கூடாது; அது கூடாமைபற்றி இரண்டாய் நிற்பனெனின், வியாபகனாதல் கூடாது; வியாபகனல்ல

* திருக்குறள், கூ-ம் அதி. வாழ்க்கைத்துணைநலம், கூ. † புறநானூறு, கஉ௪.
‡ திருக்குறள், கூஅ-ம் அதி. பெருமை, அ.

னெனின், பசுபாசங்கள் அவனையின்றியமைதல் கூடாது; இங்ஙனமாகலான், முதல்வனொருவனே ஞாயிறும் ஒளியும்போலச் சிவனுஞ் சத்தியுமெனத் தாதான்மியத்தான் இருதிறப்பட்டுச் சருவவியாபியாய்ப் பொதுமையினிற் பனென்று உவமைமுகத்தாற் பொதுமையினிற்குமாறு தெளிவித்துத், தாதான்மியசத்தியுண்மைக்குப் பிரமாணங்கூறியவாறுமென் றுணர்க.

அற்றேல், இவ்வதிகரணம் இருவினை முதல்வனாணையின்வருமென்னு மதிகரணத்தைச் சாரவையாது போக்குவரவதிகரணத்தின் பின்வைத்தல் முறையன்றாலெனின்,—அங்ஙனமாயினும், அவையே தானேயாய் என்பது, 'அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்—றோற்றிய திதியே' என்றத னெழிபு; இருவினையின் என்பது இல்லதற்குத் தோற்றமின்மையின் என்பதனாற் சாதிக்கப்பட்டுத், திதியே என்றதனாற் குறித்துணரப்படுஞ் சற்காரியவாதத்தினெழிபு; போக்கு வரவு புரிய என்பது ஒடுங்கிமலத்துளதாம் என்றதனெழிபு; ஆணையினீக்கமின்றிநிற்கும் என்றது எய்தியதொருமருங்கு மறுப்பதாகிய அந்தமாதி என்றதனெழிபாமென்பதூஉம் உணர்ந்துகோடற்கு இம்முறைவைத்தாரென்க. அவை அவற்றினெழிபாதல் ஈண்டுரைத்தவாறுபற்றி யுணர்ந்துகொள்க.

அஃதங்ஙனமாக; ஒருபொருளே தாதான்மியத்தான் இருதிறப்பட்டுப் பொதுமையினிற்றல் யாங்ஙனமெனின், அஃதாமாறு விளங்கவுணர்த்துதும்:—தன்னைவிளக்குவதூஉம், விடயங்களைவிளக்குவதூஉந் தானேயாகிய ஞாயிறொன்றுதானே விடயங்களை விளக்குழிக் கதிரெனவும், தன்னைவிளக்குழிக் கதிரோனெனவுந் தாதான்மியத்தான் இருதிறப்பட்டியைந்துநிற்கும்; அதுபோலப் புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய்த் தன்னியல் பினிற்பதூஉம், புறப்பொருளை நோக்கி நின்றுணர்த்துவதூஉமாகிய இரண்டியல்புடைய பேரறிவாகிய சைதன்னியமொன்றே அங்ஙனம் புறப்பொருளைநோக்கிநிற்குநிலையிற் சத்தியெனவும், புறப்பொருளைநோக்காது அறிவுமாத்திரையாய் அவாவாதுநிற்குநிலையிற் சிவமெனவுந் தாதான்மியத்தான் இருதிறப்பட்டியைந்து குணகுணியாய்நிற்கும். இது * சித்தாந்தசாராவலி இரண்டாஞ் சுலோகப் பொருளானும் அறிக.

இனித், தீயின் சத்தியொன்றே சுடுதல் அடுதன்முதலிய தொழில்வேறுபாட்டாற் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தி என்றற்றொடக்கத்துப் பலவேறுவகைப் படுமாறுபோலச் சிவசத்தியொன்றே காரியவேறுபாட்டாற் பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி எனப் பஞ்ச சத்திகளாயும்; முறையே ஐந்தும், நான்கும், எட்டும், பதின்மூன்றும்,

---

* 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌶𑌿𑌵𑌸𑌂𑌜𑍍𑌞 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂 𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿 𑌶𑌕𑍍𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌃 । 𑌶𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌵𑍍𑌯𑌾𑌹𑌤 𑌸𑍍𑌥𑌲𑌿𑌙𑍍𑌗𑌶𑌿𑌵 𑌸𑍍𑌸 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑍍𑌸 𑌯𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌿𑌵𑌃 ॥ என்பது சித்தாந்தசாராவலி இரண்டாஞ்சுலோகம்.

எட்டுமாகிய கூறுபாடுடைய ஈசானமுதற் சத்தியோசாதமீறாகிய, * பஞ்ச சத்திகளாயும்; ஆரணி, சனனிமுதலிய † மூவகைச்சத்திகளாயும்; நிவிர்த்தி, பிரதிட்டைமுதலிய ‡ பஞ்சசத்திகளாயும்; வாமை, சேட்டைமுதலிய § அட்டசத்திகளாயும்; பரவாகீசுவரி, அபரவாகீசுவரி, மனோன்மனி, மகேசை, உமை, திரு, வாணி என்று எழுவகைச்சத்திகளாயும்; அத்தியான்மிகமான ¶ உன்மனை, சமனைமுதலிய கலைகளாயும் இன்னும் பலவேறு வகைப்பட்டு நிற்கும். அவ்வச்சத்திகளோடு புணர்ந்த சிவமும் அங்ஙனம் பலவேறுவகைப் பெயர்பெற்றுநிற்கும். அவ்வச்சத்திகட் கிடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறுவகையான் விருத்திப்பட்டுநிற்கும். இவற்றினியல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இப்பேதமனைத்தும் இலயம், போகம், அதிகாரம் என மூன்றாயடங்கும். இலயசிவமெனினும், அநாகதசிவமெனினும், சிவனெனினும், சாந்தமெனினும், நாதமெனினும், வாகீசுரனெனினும், சத்தனெனினும், நிட்களனெனினுமொக்கும்.

இலயசத்தியெனினும், விந்துசத்தியெனினும், பரவாகீசுவரியெனினும், நிட்களையெனினுமொக்கும்.

இவ்விலயவவத்தை சூக்குமவிலயமும், தூலவிலயமுமென்று இருவகைப்படும். இருவகை மாயைகளினும் இருவகைப் பிரபஞ்சமும் ஒடுங்கியவழி, ஒன்றனைக் குறிக்குமாறின்றி, அனைத்தினையும் பொதுமையினோக்கி நிற்கும் பரமசிவன் அவை மீளத்தோன்றுமாறு குறித்து, ஞானசத்தி மாத்திரையானோக்கிநின்ற அவதரஞ் சூக்குமவிலயம். இதனானே பரமசிவனுக்கும் இலயசிவனுக்குந் தம்முள் வேறுபாடுகண்டு கொள்க.

அதன்பின்னர்ச் சூக்குமமான இச்சாஞானக்கிரியையென்னும் மூவகைச் சத்திகளோடுபுணர்ந்து விந்துவிற்பதிந்து தூலவைந்தொழிற்கேதுவான

* இவ்வைந்தும் ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி எனப் பெயர் பெறும். இவற்றுள், ஈசானியின் ஐந்துகூறுவன:—சசினி, அங்கதை, இட்டை, மரீசி, சுவாலினி என்பன. பூரணியின் நான்குகூறுவன:—சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி என்பன. ஆர்த்தியின் எட்டுக்கூறுவன:—தமை, மோகை, சயை, நிட்டை, மிருத்தியு, மாயை, பயை, சரை என்பன. வாமையின் பதின்மூன்று கூறுவன:—இரசை, இரட்சை, இரதி, பாலி, காமை, சமுயமினி, கிரியை, புத்தி, காரி, தாத்திரி, பிராம்மணி, மோகினி, பவை என்பன. மூர்த்தியின் எட்டுக்கூறுவன:—சித்தி, இருத்தி, தியுதி, இலக்குமி, மேதை, காந்தி, சுவதை, திருதி என்பன. இவை முப்பத்தெட்டும் அட்டத்திரிம்சத்கலை எனப்படும். † ஆரணி, சனனி, இரோதயித்திரி என்பனவாம். ‡ நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்பனவாம். § வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி என்பனவாம். ¶ உன்மனை, சமனை, வியாபினி, சத்தி, நாதாந்தம், நாதம், நிரோதி, அர்த்தசந்திரன், விந்து, விடம், அருக்கீசம், மேதை என்பனவாம். இவை துவாதசகலைப் பிராசாதமெனவும், வியாபினியின்மேல் வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை என்னும் நான்குங்கூட்டிச் சோடசகலைப் பிராசாதமெனவும் வழங்கப்படும்.

சூக்குமவைந்தொழில்செய்துநிற்கும் அவதரந் தூலவிலயம். சூக்குமவிலயத்திற் சிவம் பரநாதமென்றும், சத்தி பரவிந்துவென்றும், தூலவிலயத்திற் சிவம் அபரநாதமென்றும், சத்தி அபரவிந்துவென்றும் பெயர்பெறும். இவை நான்கும் நிட்களம்.

இனி, அங்ஙனஞ் சூக்குமவிச்சாஞானக்கிரியைகளாற் கேவலத்திற் சூக்குமவைந்தொழில்செய்து தூலவிலயமாய்நின்ற சிவம் அதன்பின் ஆன்மாக்கள் கேவலத்தினீங்கிப் புனருற்பவமாமாறு குறித்துத் தூலவிச்சாஞானக்கிரியைகளோடு மணந்து இருவகைமாயைகளினின்றும் இருவகைப் பிரபஞ்சங்களையுந் தோற்றுவித்தற்கு உன்முகமாய்நின்ற அவதரம் போகம். போகம் பாலனம் என்பன ஒருபொருட்கிளவி. இப்போகவவத்தையினின்ற சிவஞ் சதாசிவனெனப் பெயர்பெறும். ஈண்டுச் சூக்குமவைந்தொழிற்குந் தூலவைந்தொழிற்கும் பொதுவாய் இடையேநிற்றலின், இது நிட்களசகளமாயிற்று.

இனி, அதிகாரஞ் சூக்குமவதிகாரம், தூலவதிகாரமென்று இருவகைப்படும். அங்ஙனம் உத்தியுத்தனாய்ப் போகவவத்தையினின்ற சதாசிவன் அதன்பின் விந்துவினின்றுஞ் சுத்தப்பிரபஞ்சங்களைச் சந்நிதிமாத்திரையிற் றோற்றுவித்துத் தொழில்செய்துநின்ற அவதரஞ் சூக்குமவதிகாரம். இவ்வவத்தையினின்ற சிவம் மகேசனெனப் பெயர்பெறும். ஈண்டுத் தூலவைந்தொழில் செய்வதாதலின், சகளமாயிற்று.

இனி, அநந்தேசன் உருத்திரன் மால் அயன் என்னும் இவர்களை அதிட்டித்துநின்று மோகினிமான்களினின்றும் மிச்சிரப்பிரபஞ்சமும், அசுத்தப்பிரபஞ்சமுந் தோற்றுவித்துத் தொழில்செய்யும் அவதரந் தூலவதிகாரமென வுணர்க.

இங்ஙனமாகலின், சூக்குமவதிகார அவத்தையினின்ற மகேசனிறுவாயாகிய பேதங்களைச் சம்புபக்கமெனவும், தூலவதிகாரத்தினின்ற அநந்தேசன்முதலிய பேதங்களை அணுபக்கமெனவும் அறிக. அணுபக்கத்துள்ளும் அநந்தேசன் விஞ்ஞானகலருட் பக்குவனாய் முத்திபெற்று அதிகாரமலவாசனை மாத்திரமுடையனெனவும், உருத்திரன் பிரளயாகலருட் பக்குவனாய் முத்திபெற்றுத் தூலமலவாசனையுடையனெனவும், ஏனை மாலும் அயனுஞ் சகலருட் புண்ணியமிகுதிப்பாட்டான் அதிகாரசத்தி பெற்றுடையரெனவுந் தாரதம்மியங் கண்டுகொள்க. சம்புபக்கத்திற்றாரதம்மியம் ஒரோவொருகூற்றிற் றோன்றுதன்மாத்திரையானன்றிப் பிறிதில்லையென்க.

ஒரோரிடங்களிற் சதாசிவனை அணுபக்கமென்றது அணுசதாசிவரை நோக்கிக் கூறியதெனவும், மகேசனை அணுபக்கமென்றது அநந்தேசன்முதலியோரைநோக்கிக் கூறியதெனவும் ஆண்டுமுரணுமை யுணர்ந்துகொள்க.

இன்னும், மாலும் அயனும் அணுபக்கம், ஏனை உருத்திரனீறாகிய பேதமெல்லாஞ் சம்புபக்கமேயென்பாரும், மாலயனீறாகிய எல்லாப்பேதமுஞ் சம்புபக்கமேயென்பாரும், பரமசிவன் பராசத்தியொழியப் பரநாதமுதல் அயனீறாகிய எல்லாப்பேதங்களும் அணுபக்கமேயென்பாரும், அணுபக்கத்

னும் பரநாதமுதலிய பேதமுள, சம்புபக்கத்தினும் பரநாதமுதலிய பேத முளவென்பாருமெனப் பலதிறத்தர் ஆசிரியரென் றுணர்க.

அயன்முதலிய மூவர்க்கும் முறையே படைப்புமுதலிய மூன்றனுள் ஒரோவொன்று சிறப்புத்தொழிலும், ஏனைய பொதுத்தொழிலுமாமெனவும்; மகேசன் சதாசிவன் இருவர்க்கும் முறையே மறைப்பும் அருளுஞ் சிறப்புத்தொழிலும், ஏனைய பொதுத்தொழிலுமாமெனவும்; அபரநாதத்திற்குச் சூக்குமவைந்தொழிலும், பரநாதத்திற்குச் சூக்குமவைந்தொழிற்குக் காரணமாய் ஞானசத்திமாத்திரையானேக்கும் பொதுமைத்தொழிலுஞ் சிறப்புத்தொழிலாமெனவுங் கொள்க. கொள்ளவே, அநந்தேசன் மகேசனிலடங்குமாகலின், சிறப்புத்தொழில்பற்றி நவபேதமாமாறு கண்டுகொள்க.

அற்றேல், பரவிந்துவும் அபரவிந்துவும் மனோன்மனி முதலியவற்றோடொப்பச் சத்திபேதமாகலின், சிவபேதத்துள்வைத்தெண்ணி நவபேதமென்றவா றென்னையெனின்,—அஃதொக்கும்; பரநாதத்திற் பரவிந்துவும், பரவிந்துவின் அபரநாதமும், அபரநாதத்தின் அபரவிந்துவும், அபரவிந்துவிற் சதாசிவனும், சதாசிவனின் மகேசனும், மகேசனின் அநந்தேசன் முகத்தாலுருத்திரனும், உருத்திரனின் மாலும், மாலின் அயனுமாக ஒன்றினொன்றாய்ப் பவந்தருதலின், அத்தோற்றமுறைமையேபற்றிச், சத்திபேதமாகிய பரவிந்துவும் அபரவிந்துவுமுடன்கூட்டி, நவபேதமெனவைத்தெண்ணப்பட்டதன்றிச், சிவபேதமென்னுங்கருத்தான் அங்ஙன மெண்ணப்பட்டதன்றாகலின், ஆண்டு மயக்கமின்மையுணர்க.

இஃதறியாதார், * "சிவஞ்சத்தி நாதம் விந்து" என்னுஞ் செய்யுளின் ஒன்பதுபேதங்கூறிச், † "சத்தியாய் விந்து சத்தி யாய்" என்னுஞ் செய்யுளின் ஏழுபேதங் கூறுதலின், சிவபேதமொன்பதிற்குச் சத்திபேதமேழாமா றென்னையோவென் மயங்குவாரும்; பரநாத அபரநாதங்கள் ஒரோவொன்று இருவகைப்படும், பரவிந்து அபரவிந்துக்களும் ஒரோவொன்று இருவகைப்படுமென்றிடர்ப்பட்டுக்கொண்டு, சிவபேதமுமொன்பது, சத்திபேதமுமொன்பதாமென்பாருமாய் இடர்ப்படுவரென்க. உண்மையானேக்குவார்க்குச் சிறப்புத்தொழில்பற்றியெண்ணப்படுஞ் சிவபேதமேழுஞ் சத்திபேதமேழுமேயாமெனக் கொள்க.

இனி, மனோன்மனியின் மகேசனும், மகேசையின் உருத்திரனும், உமையின் மாலும், திருவில் அயனுந்தோன்றுவரென்பாருமுளர். * "சிவஞ் சத்தி நாதம் விந்து" என்றெடுத்துக்கொண்டு, "ஒன்றினொன்றாய்ப் பவந் தரும்" என்பதனோடுமுரணுதலின், அங்ஙனந் தோன்றுதல் அவாந்தர சிருட்டிபேதமெனக் கொள்வதன்றிப் பிரதானசிருட்டியெனக்கோடல் பொருந்தாமையறிக.

இவ்வதிகரணத்தின் முதல்வன் வியாபகமாதல் பிறிதொன்றாற் பெறப்படாமையின், அருத்தாபத்தியளவையாற் றன்னின்வேறின்றியும் வேறாகிய

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், எச. † ஷை மேற்படிசூத்திரம், எரு.

தாதான்மியசத்தியுடையானென்பது துணியப்படுமெனச் சிவசத்தியுண்மைக்குப் பிரமாணங்கூறப்பட்டது; படவே, ஆன்மா மலம் மாயை கன்மங்களும் அம்முதல்வன்போல வியாபகமாதலின், அவையும் அவ்வளவையானே தத்தமக்குரிய தாதான்மியசத்திகளுடையனவென்பதூஉம்; அங்ஙனமாயினும், தூலசூக்கும முறையின் வியாபகவியாப்பியங்களாய்நிற்றலின், அவ்வவ்வியாப்பியப்பொருளின் சத்திகள் அவ்வவ்வியாபகப்பொருட்சத்திகளின் அடங்குமியல்பினவன்றி, ஒத்தவியல்பினவல்லவென்பதூஉம் பெறப்பட்டன.

## காரகசத்தியுண்மை.

இனி, நிலம், மலை, தீ, நீர், குடம், படம் முதலிய ஏகதேசப்பொருள்களுந் தாந்தாஞ் செய்யுங் காரியத்தளவின் வியாபகமாதலுடைமையின், அவ்வளவின்வியாபித்தலும் பிறிதொன்றாற் பெறப்படாமையான், அவையும் இவ்வாறே தத்தங் காரியங்களின் வியாபித்தற்குரிய காரணரூபமாய்நிற்குந் தன்மையும், தத்தமியல்பினிற்குந்தன்மையுமென்று இருதன்மையுடையனவாமென்பது பெறப்படுதலின், அங்ஙனங் காரணரூபமாய்நிற்பதாகிய சத்தி அவ்வப்பொருடோறுந் தாதான்மியத்தானுண்டென்பது கண்டுகொள்க.

இதனானே சத்தியென்பதொன்றில்லை யென்னும் நையாயிகர்முதலியோர் மதமும் மறுக்கப்பட்டது.

நெருப்பின்சத்தி அதனின் வேற்றுமையின்றி உடனாய்நிற்றலின், நெருப்புப்போலக் காட்சியளவையான் வேறாய்த்துணியப்படாதாயினும், இங்ஙனம் அருத்தாபத்தியளவையான் வேறாய்த்துணியப்படுதலின், அத்தன்மைத்தாகிய சத்தியுண்டென்பது தெற்றெனவுணர்ந்துகொள்க.

சத்தியுண்மை அருத்தாபத்தியாற்றுணியுமாறு காட்டுதும்:—நெருப்புத் தன்னைத்தீண்டின் விரலைச்சுடுதல் காண்டும்; அதன்பின் ஒருவன் உச்சரிக்கும் மந்திரசத்தியாற் சுடாமையுங்காண்டும்; அவ்விரண்டுகாலத்தும் நெருப்பு ஒருதன்மைத்தாதலிற் பிறழாமையுங் காண்டலாகலின், மந்திரசத்தியான் மறைந்தும், அஃதில்வழி விளங்கியுஞ் சுடுதற்றொழிற்குக் காரணமாவதோர் சத்தி அந்நெருப்பின்வேறாயுண்டென்பது துணியப்படுமென்க.

அற்றேல், சுடுதற்காரியநிகழ்ச்சிக்குத் தடைமந்திரமில்லாமையும் ஒரு காரணமாதலின், ஏனைத் தீமுதலிய காரணமெல்லாமுள்வழியும் அஃதோர் காரணங்கூடாமையான், அக்காரியம் நிகழாதாயிற்றெனக்கோடும்; பொருடோறும் வேறுவேறு சத்திகளும், அவற்றிற்குத் தோற்றநாசங்களுங் கோடலினும் இவ்வாறுகோடல் சிறந்ததாலோவெனின்,—அங்ஙனமாகத் தடைமந்திரத்தை அம்மாந்திரிகன் முன்போலவே செலுத்திநிற்புழியும், மற்றொருவன் அதற்கு மாறாகவுச்சரிக்கும் மந்திரசத்தியானே அந்நெருப்பு மீளவுஞ்சுடுதல் கண்டாமன்றே: அவ்வழித் தடைமந்திரந் திரிபின்றி நிலைபெறுதலின், அஃதில்லாமை காரணமென்பார்க்கு ஆண்டஃதின்மையின்,

கடுதற்காரியம் நிகழாதாதல்வேண்டும்; மூவகைக்காரணங்களின் ஒன்றில் வழியுங் காரியந்தோன்றுதல் கூடாமையானென் றொழிக.

அற்றேல், விடைமந்திரத்தோடு கூடாதுநின்ற தடைமந்திரத்தின் அபாவமே ஆண்டுக் காரியநிகழ்ச்சிக்குக் காரணமாமெனக்கோடுமெனின்,— அற்றன்று; அவ்வாறுகொள்ளினும், அத்தன்மைத்தாகிய அபாவமும் ஆண் டின்றியே காரியம் நிகழ்தலின், அபாவம் ஆண்டுக் காரணமென்பது பெறப்படாமை யறிக.

அற்றேல், விடைமந்திரத்தோடு கூடாதவழிமாத்திரையே தடைமந்தி ரத்தினபாவங் காரணம்; அல்லுழிக் காரணமன்றெனக் கோடுமெனின்,— அற்றன்று; நியமமில்வழிக் காரணமாதலே செல்லாதென்பார்க்கு நியத மாய்க் காரியத்திற்கு முன்னிற்பது காரணமெனக் காரணத்திற்கு நீ கூறும் இலக்கணமே சான்றாகலின், பயனின்றித் தூங்கும் ஆட்டின்கழுத்தின் முலை போலுமபாவங் காரணமாகாமையான், ஆண்டுஞ் சத்தியேகாரணமென் பது கண்டுகொள்க.

இன்னும், திரிபின்றி முன்போலவே நிலைபெறுந் தடைமந்திரம், விடைமந்திரம்வந்துழிக், காரியநிகழ்ச்சியை முன்போலத் தடைசெய்யா மைக்கு ஆண்டுநிகழ்ந்த விசேடம் என்னையெனக் கடாயினர்க்குத், தடை மந்திரத்தைச் செலுத்துவோன் விடைமந்திரத்தைச் செலுத்தும்வழியும் ஒருங்கேசெலுத்திநிற்றலின், அதுவாராமையை விடைமந்திரம் பாதுகாத்த லென்றுதல், அதனழிவுபாட்டைச்செய்தலென்றுதல், வறிதேயிருத்தலென் றுதல், பிறிதோராற்றானுதல் விடுத்தல் அமையாமையின், விடைமந்திரம் வந்துழித் தடைமந்திரஞ் செய்யுங் காரியம் நிகழாது, அல்லுழி நிகழுமென் னும் அவிநாபாவத்தானே நெருப்பின்கூடு நிகழவொட்டாமையாகிய தடை மந்திரஞ்செய்யுங் காரியத்தைத் தடுத்து நின்றது விடைமந்திரமெனவே விடு த்தல் வேண்டும்; வேண்டவே, காரியத்திற்குறைவுபாடு காரணத்திற்குறைவு பாடின்றி உண்டாகாதென்பது நியமமாகலின், திரிபின்றிச் செலுத்தப் படுந் தடைமந்திரமாகிய காரணத்திற் குறைவுபாடு காணப்படாமையின், அம்மந்திரத்தின்வேறாய் ஆண்டுப் புலனாகாத காரணமொன்று குறைவுபட்ட தென்பது போதருதலின், அதுவே சத்தியென்பது அருத்தாபத்தியாற் கண்டுகொள்க.

இங்ஙனம் விடைமந்திரத்தாற் றடுக்கப்படுதல்பற்றித் தடைமந்திரத் திற்குச் சத்தியுண்மை பெறப்படுதலின், இவ்வாறே தடைமந்திரத்தாற் றடுக்கப்படுதல்பற்றித் திரிபின்றியெரியும் நெருப்புமுதலியவற்றின் வேறாய் அவ்வக்காரியங்கட்கு அநுகூலமாகிய சத்திகள் அவ்வப்பொருடோறும் உளவென்பது காண்க. ஈண்டுத் தடுத்தலாவது காரியநிகழ்ச்சியிற் செல்லு மாறின்றி நின்றாங்கு நிற்கச்செய்தல்.

இங்ஙனஞ் சத்தியுண்மைபெறப்படவே, ஈண்டுக் கூறியவாற்றாற் சத்தி யுடைமை காரணத்தன்மை, வியத்தியுடைமை காரியத்தன்மையென்றலே

காரணகாரியங்களுக்கிலக்கணமாமாறும்; வேறோராற்றாற் பெறற்பாலதின்றி நியதமாய் முன்னிற்பது காரணம், அவ்வாறு நியதமாய்ப் பின்னிற்பது காரியமெனக் காரணகாரியங்கட்குப் பயப்பாடின்றி நையாயிகர்முதலியோர் கூறும் இலக்கணம் ஆட்டின்கழுத்திற் றூங்கும் முலையோடொக்குமாறும் உணர்ந்துகொள்க.

## ஞாபகசத்தியுண்மை.

இனி, ஈண்டுக் கூறப்படுங் காரகசத்திகளையுடைய அவ்வப்பொருள் களை எழுத்தாலாகிய சொல்லாற் புலப்பட்டு அறிவுறுக்கும் ஞாபகசத்தி சமூகங்களுங் குடிலையிற்றோன்றிய நாதத்தின்கண்ணனவேயாமென்பது.

அற்றேல், எழுத்தாதல், எழுத்தானியன்ற பதங்களாதல், பதங்களா னியன்று அவாய்நிலை தகுதி அண்மைகளான் எழுவாய் பயனிலை முதலியன வாய்த் தொடர்ந்துநிற்கும் வாக்கியங்களாதல் அவ்வப்பொருள்களை அறி வுறுக்குமெனவே கோடும்; அவ்வாறின்றி எழுத்தின்வேறாய்ப் பொருள்களை யறிவுறுக்குஞ் சத்தியுண்டென்பதற்குப் பிரமாணமில்லையாலோவெனின்,— அற்றன்று; "கால்" என்புழிக், ககர ஆகார லகர எழுத்துக்களேயன்றி அவற் றின் வேறாய்ப் பதமென்பதொன்றின்மையானும், அவ்வாறே "கால்கிடந் தது" என்புழி, அப்பதங்களின்வேறாய் வாக்கியமெனவொன்றின்மையானும் எழுத்தின்வேறாய்ப் பதவாக்கியங்கள் பொருளுணர்த்துவன வல்லவென்பது பெறப்படும்; படவே, நையாயிகர்மதம்பற்றிக், ககர ஆகார லகர எழுத்துக் களே அப்பொருளுணர்த்துமெனக் கோடல்வேண்டும். அங்ஙனங் கொள் வுழி, அவை ஒருங்குகூடிப் பொருளுணர்த்துமோ? ஒரோவொன்றே பொருளுணர்த்துமோ? எனக்கடாயினார்க்கு ஓசை, உணர்வு, தொழில் மூன் றும் மூக்கணப்பொழுதே நிலைபெறுமென்பது நையாயிகர்முதலியோர்க் குடம்பாடாகலின், முறையிற் பிறந்து நின்று கெடும் எழுத்துக்கள் ஒருங்கு கூடிநின்று பொருளுணர்த்துதல் கூடாமையின், ஒரோவொன்றே பொருளு ணர்த்துமெனல் வேண்டும்; "க" என்ற மாத்திரையே கம்பலமென்னும் பொருளுணர்த்தாமையானும், உணர்த்துமெனினுங் ககர மொழிந்த எழுத் துக்களையுச்சரித்தல் பயனிலவாய்முடியு மாதலானும், ஒன்றொன்றே பொரு ளுணர்த்துமென்பது பொருந்தாமையின், எழுத்துக்களின்வேறாய்ப் பொரு ளறிவுறுப்பதாகிய சத்தியுண்டென்பது கண்டுகொள்க.

அற்றேல், எழுத்துக்கள் ஒருங்குநிற்குமாறில்லையென்பதூஉம், ஒன் றொன்றே பொருளுணர்த்துமாறில்லையென்பதூஉமொக்கும்; எழுத்துக்கள் ஒருங்குகூடிநில்லாவாயினும் அவற்றின் வாசனை மனத்தின்கண் நிலைபே றுடைமையின், அவ்வாசனையோடு ஒருங்குகூடிய ஈற்றெழுத்துப் பொரு ளுணர்த்துமெனக் கோடுமெனின்,—அற்றன்று; இதற்குமுன் கூறிப்போந்த எழுத்துக்களின்வாசனையும் மனத்தின்கண் நிலைபேறுடைமையின், ஈண்டுக் கூறப்படும் பெயரீற்றினின்ற எழுத்து அவ்வாசனைகளெல்லாவற்றோடுங் கூடிநிற்றலின், ஒருபெயரினீற்றெழுத்தை உச்சரித்தமாத்திரையானே அவ்வீற்றுப் பெயர்ப்பொருள் எல்லாவற்றையும் ஒருங்குணர்தல் வேண்டும்;

230, 4

இனி, வாசனை நினைவைத்தோற்றுவிப்ப அந்நினைவோடுகூடிய ஈற்றெழுத்துப் பொருளுணர்த்துமெனக் கொள்ளின், நினைவுணர்வும் அவ்வோசைபோல முக்கணப்பொழுதுமாத்திரையே நிலைபெறுமென்பது அவர்க்குடம்பாடாகலான், அவை ஒருங்குகூடிநிற்குமாறு யாண்டையதென்றொழிக.

அன்றியும், எழுத்தோசையை அநுபவித்தறிந்த வாசனையான் நிகழும் நினைவுணர்விற்கு விடயமாய் நினைக்கப்படுவது அவ்வெழுத்தோசையன்றிப் பிறிதன்மையானும் அந்நினைவு பொருளைவிடயிக்குமென்றல் பொருந்தாதென்றொழிக. இங்ஙனங் கூறியவாற்றால் வாக்கியமாதல், வாக்கியத்தினுளவாகிய பதங்களாதல், அவற்றினுளவாகிய எழுத்துக்களாதல், அவற்றின் வாசனை நினைவுகளாதல் பொருளுணர்த்தமாட்டாவென்பது போதருதலின், அவற்றாற் புலப்படுவனவாய் அவ்வப்பொருள்களை அறிவுறுக்கும் ஞாபக சத்திகள் அவற்றின்வேறுளவெனவும், அச்சத்திகளையுடையது நாதமெனவுந் தெரிந்துணர்க.

அற்றேல், எழுத்துக்கள் நாதத்தைவிளக்க நாதமொன்றே எல்லாப் பொருள்களையும் உணர்த்துமாயின் ஒரெழுத்தை உச்சரித்தமாத்திரையானே நாதம் விளங்குமாகலின், எல்லாப்பொருளினும் உணர்வுநிகழ்தல் வேண்டுமாலெனின்,—அறியாது கூறினாய். நாதம் ஒன்றாயினும் அதன்கண்ணவாய்ப் பொருள்களைத் தனித்தனியறிவுறுக்குஞ் சத்திகள் பலவாகலின், அவ்வச் சத்திகளைப்புலப்படுத்தற்கு அவ்வவற்றிற்குரிய எழுத்தின் கிடக்கைமுறையும் வேறுவேறு வேண்டப்படுமாகலின், நெருப்பின்கட் சுடுதற்சத்தியைத்தடுக்குமந்திரத்தான் விளக்குதற்சத்தியைத் தடுத்தலும், விளக்குதற்சத்தியைத் தடுக்குமந்திரத்தாற் சுடுதற்சத்தியைத் தடுத்தலுங் கூடாதவாறுபோல, அவ்வக்கிடக்கைமுறையுடைய எழுத்துக்கள் அவ்வப்பொருள்களையுணருஞ் சத்திமாத்திரையே விளக்குவனவன்றி ஏனையசத்திகளை விளக்குமாறின்மையின், அவ்வப்பொருண்மாத்திரையின் அறிவுநிகழாதென்க.

அற்றேல், "ஆ" "ஆண்டு" என்றாற்போலும் பலபொருளொருசொற்கட்குக் கிடக்கைமுறையும் வேறுபாடின்மையின், அவை அப்பொருள்களையுணர்த்தும் வேறுவேறுசத்திகளை விளக்குமாறென்னையெனின்,—அஃதொக்கும். பலபொருட்சொற்கட்குக் கிடக்கைமுறையும் வேறுபாடின்றாயினும் அவ்வெழுத்தோசையைப் புலப்படுத்தும் எடுத்தல் படுத்தல் முதலிய இசையோசை அவ்வக்காரணத்திற்கேற்ப வேறுவேறுண்மையின், அவற்றோடுகூடிய சொற்களும் வேறுவேறாகலின், வேறுவேறுசத்திகளை விளக்குதல் அமையுமெனவிடுப்பர் ஒருசாரார். இனி, உண்மையானோக்குவார்க்கு "ஆ" என்பது மரவிசேடத்தையுணர்த்தும்வழியும், பெற்றத்தையுணர்த்தும்வழியும், குறிப்பான் இரக்கம் வியப்பு வினாக்களையுணர்த்தும் வழியும், ஆதற்றொழிலையுணர்த்தும்வழியும் வெவ்வேறெழுத்தேயாமென்பது தத்தமக்குக் காரணமாய் அவ்வப்பொருள்களையறிவுறுக்குஞ் சத்திகள் வெவ்வேறாதல்பற்றியுணரப்படுமாகலின், சாதிமாத்திரையான் ஒரெழுத்தென்பதுபற்றி ஆசங்கையின்மை யுணர்க.

இனி, "ஆ" என்பது பெற்றத்தினையுணர்த்தும்வழிப் பெயர்ச்சொல்லெனவும், இரக்கக்குறிப்பினையுணர்த்தும்வழி இடைச்சொல்லெனவும், ஏவற்பொருண்மையையுணர்த்தும்வழி வினைச்சொல்லெனவும், ஆதற்புடைபெயர்ச்சியையுணர்த்தும்வழி உரிச்சொல்லெனவுங் கோடல் எல்லார்க்கு மொப்பமுடிந்தமையின், எழுத்தொப்புமைபற்றி உபசாரத்தாற் பலபொருளொருசொல்லெனப்படினும், உண்மையான் வேறுவேறு சொல்லேயாமென்பது போந்தது. பெயர்ச்சொன்மையினுந் திணை பால் முதலியவற்றால் வேறுபாடின்றியும், புணர்ச்சிக்கட் பெற்றத்தினையுணர்த்தும்வழி, ஆன் கோடெனச் சாரியைபெறுதலும்; மரவிசேடத்தையுணர்த்தும்வழி, ஆங்கோடென மெல்லெழுத்துப்பெறுதலுமாகிய செய்கைவேறுபாடுஞ் சொல்வேறுபாட்டானன்றிப் பெறப்படாமையின், அவை வேறுவேறுசொல்லென்பது பெற்றாம்; பெறவே, இங்ஙனம் ஆவென்னுஞ் சொற்களுக்குளவாகிய தம்முள்வேறுபாடு எழுத்துவேறுபாடுமாத்திரையானன்றி, வடிவானுதல், கிடக்கைமுறையானுதல், பிறிதொன்றானுதல் பெறப்படாமையான், "ஆ" என்னும் எழுத்துக்கள் வேறுவேறென்பதூஉம்; அவை வேறாதல் பிறிதொன்றாற் பெறப்படாமையான், அவ்வாகாரத்திற்கு வேறுவேறுகாரணமாய் நாதத்தின்கணுளவாகிய சத்திகள் பலவென்பதூஉந் தாமே போதருமென்க.

ஆயிறு குன்றிநின்று ஏவற்பொருண்மையுணர்த்தும் "ஆ" என்பது விகுதிவேறுபாட்டானாகிய சொல்லாகலின், ஈண்டைக்கேலாதாயினும் பிறர்மதம்பற்றியும், ஈறுகுன்றியவழி வடிவொப்புமையாதல்பற்றியும் அதனையுமுடனெடுத்தோதினுமாகலின், ஈண்டைக்கு அஃதொழித்து ஏனையவே கொள்க. ஆதற்புடைபெயர்ச்சிக்குறிப்புணர்த்துவது உரிச்சொல்லேயாமென்பது * சூத்திரவிருத்தியுள் விரித்தாம்; ஆண்டுக்காண்க.

இங்ஙனமாகலின், இவ்வாறே எழுத்துக்களெல்லாம் வேறுவேறெனவும்; எழுத்து ஐம்பத்தொன்று, முப்பதெனத் தொகைகூறியது சாதியொருமைபற்றியெனவும்; எனவே, அவ்வெழுத்தின் கிடக்கைமுறையான் அவ்வச்சத்திமாத்திரையே விளங்குதலின், அவ்வப்பொருண்மாத்திரையினன்றி ஏனைப்பொருளின் உணர்ச்சிசெல்லாதெனவும் உணர்ந்துகொள்க.

அற்றேல், பலபொருளுணர்த்துதலிற் பலசொல்லெனக்கோடும்; அதுபற்றி எழுத்துப் பலவென்றல் சாலாதென்றாற்படு மிழுக்கென்னையெனின்,-- அற்றன்று; பலபொருளுணர்த்துதன்மாத்திரையானே பலசொல்லாமெனின், "கங்கையின்மச்சம, கங்கையினிடைச்சேரி" என்புழிக், கங்கையென்பதும் பலபொருளுணர்த்துதலின், வேறு சொல்லெனப்பட்டு, ஆகுபெய

* தொல்காப்பியச்சூத்திரவிருத்தி, பக்கம், ௩௪, ௩௫.

ரென்பதொன் றின்றாய்முடியுமாகலின், எழுத்துவேறுபாடே சொல்வேறு பாட்டிற்குக் காரணமென் றொழிக.

அற்றேல், கங்கையென்பது கரையினையுணர்த்தும்வழியுஞ் சத்தியா னுணர்த்து மியற்பெயரெனக்கோடும்; இயைபுபற்றி யுணர்த்தும் ஆகுபெய ரெனல் வேண்டாவெனின்,—அற்றன்று; "கங்கையினிடைச்சேரி" என்பு ழிக், கங்கையென்பதனால் வெள்ளத்தினையுணர்ந்தன்றிக் கரையினையுணர்தல் கூடாது. "ஆ" என்பதனான் மரவிசேடத்தினையுணரும்வழிப், பெற்றத்தினை யுணர்தல்வேண்டுமென்னும் யாப்புறவில்லை. அன்றியும், "ஆவினைப்பார்" என்னும் வினைவேறுபடாப்பலபொருளொருசொல்லின் ஐயப்பாடுநிகழும்; "கங்கையைப்பார்" என்றவழி, வெள்ளமோ கரையோவென்று அவ் வாறு ஐயப்பாடு நிகழுமாறில்லை. இன்னும் இத்தொடக்கத்து வேறுபாடு தம்முட் பெரிதாகலின், அவ்வேறுபாட்டிற் கேற்பக் கங்கையென்பது வெள்ளத்தோடுளதாகிய இயைபுபற்றி ஆகுபெயராய்க் கரையினையுணர்த்து மெனக் கொள்வதன்றி, ஆவென்றற்றொடக்கத்துப் பலபொருளொருசொற் போல, இயைபுவேண்டாது சத்தியாற் கரையினையுணர்த்துமெனக்கோடல் பொருந்தாமையறிக. இன்னும் விரிப்பிற் பெருகுமென் றொழிக.

## சத்திசத்திமான்களின் வேற்றுமை.

அற்றேல், அஃதங்ஙனமாக: எழுத்தோசையான் விளக்கப்படுஞ் சத்தியே நாதமென்னாது சத்தியுடையது நாதமென வேற்றுமைப்படுத் தோதியவாறென்னையெனின்,—அஃதொக்கும்; குணங்கள் குணசமூகமாகிய குணியையின்றியமையாதவாறுபோலச் சத்திகளுஞ் சத்திசமூகமாகிய சத்தி மானையின்றியமையாவென்பது பெறப்படுதலின், சத்திமானாகிய நாதந் தாதா ன்மியத்தாற் சத்தியவத்தையின் வேறாதல் அமைவுடைத்தென்க.

அற்றேல், யாண்டுஞ் சத்திரூபமாய்நின்றது வியத்திரூபமாதலே காரி யப்பாடெனக்கோடலின், ஈண்டும் நாதசத்தியே வைகரியென்னுங் காரிய மாய் வியத்திப்படுமென்பது போதருதலின், அங்ஙனம் வியத்திப்பட்டவழிச் சத்திரூபமாய்நிற்றல் பெறப்படாமையின், அஃதக்காரியத்தான் விளக்கப் பட்டு வேறுநின்று பொருளையறிவுறுத்தலாகிய காரியத்தையுஞ் செய்யு மென்றல் சாலாதாம்பிறவெனின்,—அற்றன்று; சத்திகளெல்லாந் தத்தம் ஏகதேசத்தின் வியத்திரூபமாய்க் காரியப்படுவனவன்றி முழுவதும் வியத் திப்படுதலின்மையான். படுமெனின், அம்முறையேபற்றி மூலகாரணமாகிய மாயை மாமாயைகளுந் தத்தமேகதேசத்தானன்றி முழுவதும் வியத்திப்படு மெனப்பட்டு அநித்தமாவான்செல்லுமாகலான் அது கூடாமையின், அவ் வாறே வாக்குச்சத்திகளும் வைகரியாய்க் காரியப்படாது வேறுநின்ற கூற்றானே விளக்கப்பட்டுப் பொருளையறிவுறுத்தலாகிய காரியத்தைநிகழ்த் துதல் அமையுமென்க.

இங்ஙனமாகவுந் தோற்றக்கேடுகளுடைய எழுத்தோசையே பொருளை யறிவுறுக்கும்; அவற்றுனியன்ற பதவாக்கியங்களே பொருளையறிவுறுக்கு மென்றுணருமுணர்வு அவ்வச்சத்திகளைவிளக்குமுகத்தாற் பரம்பரையினறி வுறுக்குமென்னும் உபசாரம்பற்றி நிகழ்வதேயாமென்பது.

இவ்வாறு காரகசத்தி ஞாபகசத்தியென்னும் இருவேறுவகையவாகிய பொருட்சத்தி வாக்குச்சத்தியென்னும் இருவகைச்சத்திகளதுண்மையும், அவற்றதியல்பும், சத்திசத்திமான்கட்கு மேற்கூறியவாறுளதாகிய வேற்று மையுங் கண்டுகொள்க. சத்தியெனினும், போடமெனினும், ஆற்ற லெனினுமொக்கும்.

நான்காமதிகரணமுடிந்தது.



பிரமாணவோத்தின் இரண்டாம்பாதமாகிய

## இரண்டாஞ்சூத்திரமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# மூன்றாஞ்சூத்திரம்.

இனி, ஆசிரியர் மூன்றாஞ்சூத்திரத்திற்கு வார்த்திகப்பொழிப்புரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச் செய்கின்றார்:—

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தநுவினு ளான்மா

எனவரும்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு, என்பது சூத்திரமெனக்காட்டி, இனி அதன்கருத்துரைக்கின்றார்.

எ - து. சூ - ம். எ-னின். ஆன்மப்பிரகாசமுணர்த்துதனுதலிற்று

எனவரும்.

அவையே தானேயாய் என மேலைச்சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட ஆன்மாக்கள் சூனியமுதலியவற்றின் வேறாயுளவென வழியளவையான் விளக்கி, ஆன்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய்நிற்கும் எனவும், ஆன்மாக்களுக்கு இருவினை முதல்வனாணையின்வரும் எனவும், ஆன்மாக்கள் மாறிப்பிறந்து வரச்செய்யும் எனவும், ஆன்மாக்களுக்குப் புறப்பொருளை யுணர்த்துவதாகிய தாதான்மிய சத்தியுடையன் எனவும் ஆன்மாக்களின் மேல்வைத்து மேற்கூறிய முதல்வனிலக்கணத்தை வலியுறுத்துதல் இவ்வோத்தின் மூன்றாம்பாதமாகிய மூன்றாஞ்சூத்திரத்தின் கருத்தென்பதாம்.

பாதவியைபும் இதனானே விளங்கும். அதிகரணவியைபு ஆளாநாமங்கு என்றதனாற் பெறப்பட்டது. பதியுண்மைக்கும் பாசவுண்மைக்கும் பிரமாணங்கூறி, எஞ்சிநின்ற பசுவுண்மைக்குப் பிரமாணங்கூறுதலின், ஒத்தியைபாமாறுங் கண்டுகொள்க.

முதன்மையுடைமைபற்றி உலகிற்கு நிமித்தகாரணமுண்மை முதற்பாதத்திற் கூறிக், காரணமாதற்பொதுமையான் இயைபுடைமைபற்றித் துணைக்காரண முதற்காரணங்களதுண்மையும், அவற்றான் உலகங் காரியப்படுமாறும் இரண்டாம்பாதத்திற்கூறி, அவற்றானாய பயனுகர்தற்குரிய பசுவுண்மைக்குப் பிரமாணம் மூன்றாம்பாதத்திற் கூறுகின்றாரென் றுணர்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—இலதென்றன்முதலிய அறுவகை ஏதுக்களானும், மாயாவியந்திரதநுவினுளென உடம்பொடுபுணர்க்

தோதிய குறிப்பேதுவானும் இவற்றின்வேறாய் இவ்வுடம்பினுள் ஆன்மா வெனப்படுவதொன் றுண்டென்றவாறு.

இது பூட்டுவிற்பொருள்கோள். சாதியொருமைபற்றி உளது என்றார். தநுவினுளான்மாவுளது என்றாரேனுங்காணப்பட்டவுடம்பாற் காணப்படாத ஆன்மாவுக்குண்மைகூறவேண்டுதலின், "இவ்வுடம்பு சூனியமுதலியவற்றின் வேறாகிய ஆன்மாவையுடைத்து, அறிதலுடைமையான்; யாதியாது ஆன்மா வையுடைத்தன்று, அதுவது அறிதலுடைத்தன்று; குடம்போலும்'' என எதிர்மறையநுமானத்தான் உடம்பின்மேல்வைத்துக் கூறுதல் ஆசிரியர் கருத்தென்க. அற்றாகலினன்றே முதற்சூத்திரத்திற் பதியுண்மை உலகின் மேல்வைத்துக் கூறியதூஉமென்க.

ஈண்டு மேற்கோள் ஒன்றாயினும் எழுவகைமதங்களை வேறுவேறு மறுக்கும் ஏதுக்கள் ஏழாகலான், ஆன்மாவுளது என்னும் மேற்கோள் அவற்றொடு தனித்தனிகூட்டியுரைக்கப்பட்டு ஏழதிகரணமாயிற்று இச்சூத் திரமென்றுணர்க. இச்சூத்திரத்திற்கூறிய ஏதுவே ஏது, மேற்கோளுமதுவே ஆகலின், ஏனைச்சூத்திரங்களுட்போல வேறே ஏதுக்கூறவேண்டாமையின், இவை ஏதுவாமாறும், இவற்றான் மேற்கோளைச் சாதிக்குமாறும் விளங்க வுணர்த்தி வலியுறுத்துதன்மாத்திரையே இவ்வதிகரணங்களுட் கூறப் படுவதென்க.

சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கர ணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, பிரமான்மவாதி, சமூகான்மவாதியென்னும் எண்மருள், அந்தக்கரணான்மவாதிகள் ஆன்மா வின் இலக்கணங்கூறும்வழி அநுவாதமுகத்தான் மறுக்கப்படுதலின், அவரையொழித்தொழிந்த எழுவர்மதங்களையும் முறையே மறுக்கின்றார்.

---

## முதலதிகரணம்.

அவற்றுள், புத்தர்நால்வருள் மாத்துமிகர்கூறுஞ் சூனியான்மவா தத்தை மறுத்தற்கெழுந்தது முதலதிகரணம்:—

ஈண்டு இலதென்றலின் ஆன்மாவுளதென்றது (எனவரும்.)

ஆன்மாவிலதேன்றலின் எனவருவித்துரைக்க.

அற்றேல், ஆன்மாவில்லையென்றதேபற்றி அஃதுண்டெனக்கோடல் முயற்கோடில்லையென்னுமேதுவான் அஃதுண்டெனச் சாதித்தலோடொக் குமென்னுமாசங்கையை அதன் றற்பரியமுரைக்குமுகத்தானே அவ்விரண் டுந் தம்முளொவ்வாமைகூறி நீக்குதற்கெழுந்த பொழிப்புரை:—

எவற்றினையும் அன்றன்றெனவிட்டு ஆன்மாவிலதென்று நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது

எனவரும்.

ஆன்மாவிலதென்னுஞ் சூனியவாதிகளும் இல்லையென வாளாகூறுதல் அமையாமையின், உடல் பொறி விடயமனைத்தினையும் முறையே இஃதான்மாவன்று இஃதான்மாவன்றென ஒரோவொன்றாகக் கழித்து, இங்ஙனமாகலான் ஆன்மாவென்பது சூனியமென்று இவ்வாறுகூறுபவாகலின், அவற்றை ஒரோவொன்றாக விட்டு அங்ஙனங் கூறிக்கொண்டுநிற்பதோர் அறிவுண்மையின்; அவ்வறிவே, மேல் அவையேதானே என்னும் அதிகரணத்தின், அத்துவிதமென்ற சொல்லானே என்று ஆகமவளவையாற் சாதித்த ஆன்மாவென்றவாறும்; இலதென்றலின் ஆன்மாவுளது என மேற்கொண்டதென்றவாறு.

இன்மை - ஈண்டுச் சூனியப்பொருட்டு.

அங்ஙனமறியுமறிவுஞ் சூனியமேயெனின், அஃதென்னையீன்றாண் மலடியென்பதனோ டொக்குமென் றொழிகவென்பது கருத்து.

அதுவேயவ்வான்மாவாம் என்புழி ஏகாரம் பிரிநிலை. அவ்வான்மா - மேலைச்சூத்திரத்து முதலதிகரணத்தின் ஆகமவளவையாற் பெறப்பட்ட ஆன்மாவாமென்க.

அற்றேல், அவ்வறிவை உடல் பொறிமுதலியவற்றின் வேறாகப்பிரித்துக் காணுமாறும், அதுவே அவ்வான்மாவாமாறும் யாங்ஙனமெனின், அஃதாமாறுகூறி, ஏதுவின்பொருளை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

அன்றன் றென நின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளத துவே நீயனைத்து—நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி

எனவரும்.

விட்டவழியென்பது விட்டு எனத் திரிந்துநின்றது. அவ்வறிவாவது இதுவென்றுணர்த்துதற்கு அன்றன்றெனநின் றனைத்தும்விட்டவழி என்று அநுவதித்து, அஞ்சேழுத்தா யொன்று நின்றுளது என அடையாளங்கூறினார். அதுவுமான்மாவன்றெனக் கழிப்பின், அங்ஙனங் கழித்தவுணர்வு வேறொன்றெனப்பட்டு, மேலும் வரம்பின்றியோடுமென்னுங் கருத்தான் அதுவே நீ என்றார்.

ஏகாரந் தேற்றம். அஞ்செழுத்தாய்நின்று அறியுமாறு வருஞ்சூத்திரத்திற் பெறப்படும். இதற்குப் பிறரெல்லாங் கூறியதுகூறலென்னும் வழுப்பட மேலுமோரியைபின்றி யுரைத்தார்.

அனைத்துமாய் என ஆக்கச்சொல் வருவித்துரைக்க. தற்பரம் என்றது குறிப்பேதுவாய்நின்ற பெயர்.

வரம்பின்றியோடுமென்றல் வேண்டா; மாயையுஞ் சிவமுமுண்மை மேலைச்சூத்திரங்களாற் பெறப்பட்டமையின், அவற்றுளொன்றேயமையு மெனக் கோடுமென்பாரை நோக்கி, அனைத்து நின்றின்று தற்புணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை தற்பரமு மல்லை தனி என்றார். இதனானே வருமதிகரணங்களுக்கெல்லாந் தோற்றுவாய் செய்தவாறு மாயிற்று.

முதலதிகரணமுடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

மேலையதிகரணத்துச் சூனியான்மவாதிகளை மறுத்துப் பாசத்துக்கும் பதிக்கும் வேறாய் அறிபொருளாகிய ஆன்மாவொன் றுண்டெனச் சாதித்த வழி, அறிபொருளுண்டென்ற தொக்கும்; அது நான்குபூதக் கூட்டரவாகிய உடம்பின்கணன்றி நிகழக்காணுமையானும், நான்குபூதமுஞ் சடமாயினும் பாகடையுஞ் சுண்ணம்புங் கூடியவழிப்பிறந்த செவ்வண்ணம்போல அவற் றின் கூட்டரவிலோ ருணர்வுண்டாத லமையுமாதலானும், யான் பருத்தேன், யான் சிறுத்தேன், யான் மனிதன், யான் பார்ப்பானென உடம்பினையே நானென்று வழங்கக்காண்டலானும் உடம்பே ஆன்மாவென்னும் உலகாயதர் மதத்தை மறுத்தற்கெழுந்தது இரண்டாமதிகரணம்.

அதிகரணவியையபும் இதனானே விளங்கும்.

இனி எனதுடலென்றலின் ஆன்மாவுளதென்றது

எனவரும்.

எனதுடலென்றலின் ஆன்மாவேறுளது என்றுரைக்க. உடம்பின் வேறாய் உயிருண்டெனச் சாதித்தற்கு வேறும் ஏதுக்களுளவாயினும் மேலை யதிகரணத்துட்போல, அவன் வழங்குமுரையேபற்றி அவனையுமறுப்பார், எனதுடலென்றலின் ஆன்மாவுளது என்றார். யான் வளர்ந்தேன், யான் மெலிந் தேன், யான் மனிதன், யான் பார்ப்பான், யான் கரியனென உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும் யானுடம்பு, யான்கை, யான்கால் என உடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி, எனதுடல், எனதுகை, எனதுகாலென வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக்காண்ட லின், அதுவே ஆன்மா வேறுண்டென அறிவுறுத்துமென்பது கருத்து.

அற்றேல், எனதுடலென்பது, பிறிதின்கிழமைப் பொருடாராது தலை மாத்திரையாய்நிற்கும் இராகுவை இராகுவினதுதலையென வழங்குமாறு போல வழங்கப்படுமென்றுற்படும் இழுக்கென்னையென்னும் ஆசங்கையை அதன்றுற்பரியமுரைக்குமுகத்தானே நீக்குதற்கெழுந்த பொழிப்புரை:—

என்பதி யென்மனை யென்றாற்போல என்கை யென் காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவுரு மென்றது

எனவரும்.

இராகுவின்றலை யென்றாற்போல்வன சிறுபான்மை வழங்கப்படுதலின், ஆண்டு ஒற்றுமைப்பொருள்கோடலொக்கும்; ஈண்டு அவ்வாறின்மையின், அது கூடாதென்பார், என்பதியேன்மனையேன்றாற்போல எனப் பெரும்பான்மைபற்றி அங்ஙனம் வழங்கப்படும்பொருளோடு சார்த்திக்காட்டினர்.

அற்றேல், பதி மனைவிமுதலிய பொருள்களைத் தன்னின்வேறாகக் கண்டு பிறிதின்கிழமைப்பொருளாக எனதென்றாற்போலக் கைகான் முதலியவற்றைத் தன்னின் வேறாகக் காணுமாறின்றித், தற்கிழமைப்பொருளாக எனதென்றுகூறி நிற்றலின், அவை தம்முளொக்குமாறென்னையென்னு மாசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

எனதென்ற மாட்டி னெனதலா தென்னு
துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
ணுன்னிலவை வேறா முணர்

எனவரும்.

உலகாயதநூல் கேட்குமுன்னெல்லாம் பதி மனைவிமுதலிய புறப்பொருள்களே ஆன்மாவென மயங்கி எனதென்று ஒற்றுமைப்படக் கூறிக்கொண்டுநின்று, பின் உலகாயதநூல் கேட்டதுணையானே புறப்பொருள்கள் ஆன்மாவல்லவென்பது நிச்சயித்துத், தன்னுடம்புமாத்திரையின் அவ்வாறு கூறிக்கொண்டுநிற்பானுக்கு அவ்வநுபவத்தையெடுத்துக்காட்டித் தெளிவிப்பார், எனதலாதேன்னுது எனதேன்றமாட்டி னுரைத்து நீ நிற்றி காண் என்றார்.

இன் - உவமவுருபு. உனதலாது என்பதனைத் தனித்தனி கூட்டுக.

உன்னுதலாவது, * "உடலின்வே றுயிரே னிந்த வுடலன்றே வுணர்வ தென்னி—னுடல்சவ மான போது முடலினுக் குணர்வுண்டோ" என்றற்றொடக்கத்தா னாராய்தல்.

இரண்டாமதிகரணமுடிந்தது.

## மூன்றாமதிகரணம்.

மேலையதிகரணத்தில் தேகான்மவாதத்தை மறுத்து, ஆன்மா வேறுண்டெனச் சாதித்தவழி, உடல் சடமாதலானும், பிறவாற்றானும் அஃதான்மாவன்றென்றதொக்கும்; ஐம்பொறிகள் ஐம்புலன்களையும் அறியுமென்பது எல்லார்க்குமொப்பமுடிந்ததாகலின், அவையே ஆன்மாவெனவமையுமென்னும் இந்திரியான்மவாதிகளை மறுத்தற்கெழுந்தது மூன்றாமதிகரணம்:—

இனி ஐம்புலனறிதலின் ஆன்மாவுளதென்றது

எனவரும்.

* சிவஞானசித்தி, மூன்றாஞ்சூத்திரம், ௨.

அறிதலின் என்பது ஐம்புலனறிதலின் ஒடுக்கமறிதலின் என ஈரிடத்துங் கூட்டியுரைக்கப்பட்டது.

இஃதறியாதார் ஐம்புலனொடுக்கமறிதலினென ஒரேதுவாகவைத்து, ஐம்புலனை ஆகுபெயராக்கி, ஐம்பொறியின் றொழிற்பாட்டினையுஞ் சொப்பனத்தின் அவை யொடுங்கியவாற்றினையும் அறிதலினென்றுரைப்பாரும், ஐம்பொறிகள் கெட்டவாற்றை, என்விழிகுருடாயிற்று என்காது செவிடாயிற்று என்றிங்ஙனம் அறிதலினென் றுரைப்பாருமாயினர். அங்ஙனமுரைப்பிற் சூக்குமதேகான்மவாதிகளை மறுக்குமாறு பெறப்படாமை யறிக.

ஐம்பொறிமுதலியன, ஆன்மாவல்லவெனச் சாதித்தற்கும், எனதுபொறியென்றற்றொடக்கத்து வழக்கமே ஏதுவாத லமையுமேனும், அவை எனதுடலென்றல்போலப் பெரும்பான்மை வழக்கமல்லவென்பாரை நோக்கி, வேறுவேறு சிறப்பேதுக்கூறுகின்றா ரென்க.

அற்றேல், ஐம்பொறிகளே, ஐம்புலன்களையும் அறியுமென்றல் எல்லார்க்குமொப்பமுடிந்தமையின், அஃதான்மா வேறுளதெனச் சாதித்தற்கேதுவாமாறென்னையென்னும் ஆசங்கையை அதன் றற்பரியமுரைக்குமுகத்தானே நீக்குதற்கெழுந்த பொழிப்புரை:—

ஐம்புலனாகிய சத்தப்பரிசரூபரசகந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவ்வைந்தினும் ஐம்பயனுமறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது

எனவரும்.

அற்றேல், இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாதென்ற தொக்கும்; ஐந்தும் ஐந்தான்மாவெனக் கோடலின், அதனானெமக்காவதோ ரிழுக்கில்லை. இனி, இவ்வைந்தையுங்கொண்டு ஐம்புலனையும் ஒருபொருளே யறியுமென்றதற்குப் பிரமாணமென்னை? குடத்தினைக்கண்ட யானே அதனைத் தீண்டினேனென மறித்துணர்வுநிகழ்தல் ஐந்தும் ஒருடம்பின்கண்ணே நிலைபெறு மொற்றுமையானிகழுமென வமையுமாலென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனுய வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லை யோர்

எனவரும்.

உடன்மன்னி என்றது உடலின்கணிலைபெற்றென்றவாறு. அன்றுதல்-மாறுபடுதல். ஆகி என்னுஞ் சிறப்புவினை ஆய் என்னும் பொதுவினைகொண்டது; "இவனுமிவளுஞ் சிற்றிலிழைத்துஞ் சிறுபறையறைந்தும் விளையாடுப"

என்றாற்போல. இங்ஙனங்கோடல் பொருந்துமென்பது, * "ஆடூஉவறி சொல்" என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையருரையானு மறிக. ஆய் என்பது வினைத்தொகை. ஆய்தல் - ஆராய்தல். அவ்வஞ்செழுத்து என்னும் வகரம் விகாரத்தாற் றொக்கது. அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட பொறியை ஆகுபெயரான் அஞ்சேழுத்து என்றார். அஃதிருமடியாகுபெயராய் ஐம்பொறியின் றொழிற்பாட்டையுணர்த்தி நின்றது. இனிப் புலனைப் பொறிக்கு ஆகுபெயராக்கி, அஞ்செழுத்தாயபுலனை என மாறியுரைப்பினுமமையும். அஞ்செழுத்தாயபுலன் - அஞ்செழுத்தானாகிய பொறியின்றொழிற்பாடென்க. உள்ளல் - உள்ளுவனவாகலானென விரிக்க. ஒன்றலவை என்பது வேறாவை யென்னும் பொருட்டாய்நின்றது.

இம்மூன்றதிகரணத்தானுஞ் சாக்கிரத்தினிகழுமியல்புபற்றி ஆன்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

மூன்றாமதிகரணமுடிந்தது.

---

## நான்காமதிகரணம்.

மேலையதிகரணத்தில் இந்திரியான்மவாதிகளை மறுத்து, ஆன்மா வேறுளதெனச் சாதித்தவழித், தனித்தனியறியும் ஐம்பொறியின் றொழிற்பாட்டினையுணர்ந்து அவ்வைந்தானும் ஐம்புலனுமறிவது வேறொன்றுள தென்றதொக்கும்; † "நேசவிந் திரியங் கட்கு நிகழறி விதனாற் காண்டும்" என நீவிருங்கோடலின், அங்ஙனமறிவது புரியட்டதேகமேயெனவமையும்; அது புறத்துவிளங்காதாயினும் அகத்துநின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தியறியுமென்னுஞ் சூக்குமதேகான்மவாதிகளை மறுத்தற்கெழுந்தது நான்காமதிகரணம்:—

இனி ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது

எனவரும்.

ஈண்டு ஒடுக்கம் என்றது ஐம்பொறிகளுமொடுங்கின அவசரமாகிய சொப்பனாவத்தையை; அஃதாகுபெயரான் ஆண்டு நிகழ்வனவற்றை யுணர்த்திநின்றது.

அற்றேல், சொப்பனத்திநிகழ்வனவற்றை யறிவதுஞ் சூக்குமதேகமே யாகலின், இது சித்தசாதனமாமாலென்னும் ஆசங்கையை அதன் றூற்பரிய முரைக்குமுகத்தா னீக்குதற்கெழுந்த பொழிப்புரை:—

நனவின்கட் கனவுகண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது

எனவரும்.

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௨. † சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், ௬௪.

எனவே, ஒடுக்கமறிதலின் என்றது ஒடுக்கத்தினிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கியறிதலின் என்னும்பொருட்டாகலின், சித்தசாதனம் யாண்டையதென்றவாறாயிற்று. கனவுகண்ட சூக்குமவுடம்பே நனவின்கண் அதனையறியுமாயிற் கண்டபடியறியாது மயங்கியறிதல் கூடாமையின், ஆன்மாவுக்காயின் அதுபோல ஒருதன்மைத்தாதலின்றி, அகத்துச்சேறலும் புறத்துச்சேறலுமாகிய வேறுபாடுண்மையான் அதுபற்றி மயங்கியறிதல் கூடுமாகலின், அங்ஙனமறியுமான்மா வேறுண்டென்பதாம்.

கனவின்கட்செல்லுமாறும், ஆண்டுநிகழுமாறும், மீளவருமாறும் வகுத்துணர்த்தி, அதனை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி—பவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுட னீயல்லை மற்று.

எனவரும்.

இங்ஙனம் அவத்தைப்படுமியல்பெல்லாம் வருஞ்சூத்திரத்தின் விளங்கக் காட்டுதும்.

உயிர்ப்ப என்பது அன்பெறாத அகரவீற்றஃறிணைப்பன்மைப்பெயர். உயிர்த்தல் - தொழிற்படுதல். தாம் - அசை. மீண்டு - மீள. மாறல் - மாறலானென்க. மற்று - வினைமாற்றின்கண் வந்தது.

இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தினிகழுமியல்புபற்றி ஆன்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

நான்காமதிகரணமுடிந்தது.



ஐ ந் தா ம தி க ர ண ம்.

மேலையதிகரணத்திற் சூக்குமதேகான்மவாதிகளை மறுத்து ஆன்மா வேறுண்டெனச் சாதித்தவழிச், சூக்குமதேகத்தின் றொழிற்பாடு சொப்பனத்தானமாத்திரையினன்றிச் செல்லாமையின், அஃதான்மாவன்றென்றதொக்கும்; பிராணவாயுவின்றொழிற்பாடு ஆண்டுங் காணப்படுதலின், அதுவே அடங்குதல் விடுதல்செய் தறிவதாகிய ஆன்மாவென்னும் பிராணான்மவாதிகளை மறுத்தற்கெழுந்தது ஐந்தாமதிகரணம்:—

இனிக் கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மா வுளதென்றது

எனவரும்.

உண்டிவினை - உம்மைத்தொகை. அஃது, * "உண்டியும் வினையுமின்றி" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு மறிக. உண்டியின்மை மாத்திரையே கூறிய † வடமொழிச்சூத்திரத்திற்கும் இனம்பற்றி வினையின்மையுமுடன்கோடல் கருத்தென்க. இக்கருத்தறியாது உண்டியாகிய வினையென விரிப்பாருமுளர்.

அற்றேல், கண்படைகொண்டவழி உண்டிவினையில்லையென்றது உடற்கோ? பிராணவாயுவுக்கோ? உடல் ஆன்மாவன்மையின், அதற்கெப்பொழுதும் அவை இல்லையேயாம்; பிராணவாயுவுக்காயின், துயின்றெழுந்த பின்னர்ச் சுகமாய்த் துயின்றேனென்றறிதலுண்மையின், ஆண்டு இன்ப நுகர்ச்சியுண்மைபெற்றும்; விழித்துழிப்போல உறங்குழியும் பிராணவாயு இயங்குதலான், ஆண்டு வினையுண்மையுங் கண்டாம்; அதற்கவை ஆண்டில்லையென்றல் மாறுகோளாமாகலின், இவ்வேதுப் போலியாய்முடியுமென்னும் ஆசங்கையை அதன் மாற்பரியமுரைக்குமுகத்தானே நீக்குதற்கெழுந்த பொழிப்புரை:—

ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ்சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது எனவரும்.

ஈண்டு உண்டி என்றது விடயங்களினிடமாகவரும் இன்பத்துன்பநுகர்ச்சியை; வினை என்றது உடம்புசேட்டித்தலை யென்பார், இன்பத்துன்பஞ் சீவனம் என்றார். செவ்வெண்டொகை விகாரத்தாற்றொக்கது.

சீவியாநிற்பது என்பது ‡ "உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி— விழிப்பது போலும் பிறப்பு" என்புழிப்போலச் சீவியாநிற்றலென்னுந் தொழிற்பெயர் மாத்திரையாய்நின்றது. உளது என்றது எனத் தனித்தனி கூட்டுக.

துயின்றுழியும், விழித்துழியுந் திரிபின்றி ஒருதன்மைத்தாதல்பற்றி, உடம்பு பிரகிருதி எனப்பட்டது. பிரகிருதிக்கு என்பது உருபுமயக்கம்.

இரண்டுகாலத்து மொப்பவியங்குதல்பற்றிப் பிராணவாயுவைப் பிரகிருதியெனக்கொண்டு, பிராணவாயுவுக்கு அவையின்மையினென்றுரைப்பாரும், பிரகிருதிவிகாரமாகிய சித்தத்திற்கவையின்மையினெனவுமுரைத்துச், சுழுத்தியின்கண்ணுந் தொழிற்படுவதாகிய சித்தமேயான்மாவென்னுஞ் சித்தான்மவாதிகளை மறுத்தற்கெழுந்ததென்பாரும் உளர்.

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், ௩௦. † ஸுப்தே நிவ்ருத்தாஹாரதா வ்யாபாரதா ச | என்பது வடமொழிச்சூத்திரம். ‡ திருக்குறள், ௩௪-ம் அதி. நிலையாமை, ௬.

அற்றேல், ஆண்டுக் கருவிகளொடுங்கினமையின், இன்பத்துன்பநுகர்ச்சியுஞ் சேட்டையும் பிரகிருதிக்கில்லையாயினவாகலான், அதுபற்றிப் பிராணவாயு ஆன்மாவன்றென்றல் பொருந்தாதென்னும் ஆசங்கையைநீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணாதே
யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா யொடுங்கா துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூன்

எனவரும்.

ஆன்மாவின்சன்னிதியிற் கண்டறிவதாகிய இவ்வுடல் உண்டியும் வினையுமின்றிக் காணாதவாறு காட்டாய கருவிகளொடுங்கவும் ஒடுங்காது பிராணவாயுவியங்குதலாற் கண்டறியுமுரிமையுடைய ஆன்மாப் பிராணவாயுவன்று; அதனின்வேறுண்டு; அவ்வான்மாவொடுங்காது கருவிகளோடுங் கூடிற்றாயின், உடல் உண்டியும்வினையுமுடைத்தாம்; அதனை ஆய்ந்தறிவாயாகவென்க.

**கண்டறிதல்** - மீமிசை. **காட்டு** என்றது கருவிகளை. **ஒடுங்கவும்** என்னுஞ் சிறப்பும்மை தொக்கது. அது, * "அறிந்திடு முதலி யாகி னதுநிற்கக் கரணம் போகா"தென்னும் பொருளைவிளக்குகின்றது. ஏகாரங்கள் அசை. காணாதேகாட்டோடுங்க எனமாறுக. **இன்றி** - இல்லையாகவென்க. **உயிர்த்தல்** - பிராணவாயுவியங்குதல். **உண்டு** என்பது உண்மைத்தன்மையையுணர்த்தும் வினைக்குறிப்புமுற்று. **ஆய்** - முன்னிலையேவல். உடம்பை **ஊன்** என்றது ஆகுபெயர். ஆன்மா வேறுண்டென்றதனை வலியுறுத்துவார், **ஒடுங்கா துடனண்ணி லுள்ளதா முண்டிவினை யூன்** என உடம்பாட்டுமுகத்தானுமோதினர்.

இவ்வதிகரணத்தானே சுழுத்தி துரியங்களினிகழு மியல்புபற்றி ஆன்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

இதுகாறுஞ் சார்மாயை நீயல்லை என்றதனை வலியுறுத்தியவாறு.

ஐந்தாமதிகரணமுடிந்தது.

## ஆறாமதிகரணம்.

மேலையதிகரணங்களாற் பிராணான்மவாதமீறாகிய மதங்களை மறுத்து, ஆன்மா வேறுண்டெனச் சாதித்தவழி, இவையெல்லாஞ் சடமாகலானும், பிறவாற்றானும் ஆன்மாவல்லவென்றதொக்கும். பிரமஞ் சித்தாகலின், அதுவே ஆன்மாவெனவமையும்; வேறுமொன்றுகோடல் மிகையாமாலென்னும் பிரமான்மவாதிகளை மறுத்தற்கெழுந்தது ஆறாமதிகரணம்:—

* சிவஞானசித்தி, மூன்றாஞ்சூத்திரம், ௪.

இனி உணர்த்தவுணர்தலின் ஆன்மாவுளதென்றது எனவரும்.

தொழிற்படுங்கருவிகளொன்றுமின்றிக் கேவலமாய் அதீதாவத்தையி னின்றுழி அறியுமாறின்றிப், பின்னர்க் கலைமுதலிய கருவிகளான் அறிவிக்க வறிதலுண்மையின், எக்காலத்துந் திரிபின்றி அறிந்தாங்கறிந்துநிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு இதுதகாமையான், ஆன்மா வேறுண்டென்பதாம்.

உணர்த்தவுணர்தல் எனவே முன் உணராதுகிடத்தல்பெற்றும்.

அற்றேல், அத்தன்மைத்தாகிய பிரமம் அவிச்சைக்காலத்துக் கருவிக ளோடுங் கூடியன்றி அறியாதெனக்கோடுதலின், அதுபற்றி ஆன்மா வேறுண்டென்றல் பொருந்தாதென்னுமாசங்கையை, "அவ்வளவினவன் மகிழுக" என்னும் நியாயம்பற்றி அதனையுடன்பட்டே வேறுமொரு தாற் பரியமுரைக்குமுகத்தான் நீக்குதற்கெழுந்த பொழிப்புரை:—

அவன் அறிந்தாங்கறிவனென் றறிவிக்கவறிந்து உப தேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவா மென்றது எனவரும்.

கருவிகளோடுகூடியவழியும் நீ பிரமமெனப்பட்ட முதல்வன் தன் னியல்புணருமாறின்றி, "அம்முதல்வன் இதுபோல மறந்துமறந்தறியாது அறிந்தவாறே திரிபின்றியறிந்துநிற்கும் பேரறிவுடையன்" என வேதாக மங்களான் அறிவிக்கவறிந்து, குரவனறிவுறுத்துமுபதேசமொழியைப்பெற் றுடையதாய் நிற்பதொன்றுளதாகலின், அதுவே மேல் உரையளவையாற் சாதித்த ஆன்மாவென்றவாறும், உணர்த்தவுணர்தலின் ஆன்மாவுளது என மேற்கொண்டதென்பதாம்.

அறிந்தாங்கு என்பது அப்பொருட்டாதல் * "எண்ணிய வெண்ணி யாங் கெய்துப வெண்ணியார்—திண்ணிய ராகப் பெறின்" என்பதனு னுமறிக. இதற்குப் பிறவாறு முரைப்ப; அவையெல்லாம் ஈண்டைக்குப் பொருந்தாமை ஓர்ந்துணர்க.

அற்றேல், கருவிகளோடு கூடியவழியும் அவிச்சைநீங்காமையின், விட யங்கண் மாத்திரையே அறிவதன்றித் தன்னியல்பறியுமாறில்லை; அஃதுப தேசத்தான் அறியற்பாலதாமெனக்கோடுமெனின்,—அதனையும் மேற்கூறிய நயம்பற்றியுடம்பட்டு, இன்னுமொரு தாற்பரியமுரைக்குமுகத்தானே விட யங்களையறிவுழியும் படும் வேறுபாடுகூறி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

(அவன் அறிந்தாங்கறியுமாறும், இது மறந்துமறந்தறியுமாறுந் தெரித் துணர்த்தி அதனை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டியதெனினு மமையும்.)

* திருக்குறள், சுஎ-ம் அதி. வினைத்திட்பம், சு.

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி—யறிந்த
தெதுவறிவு மன்ருகு மெய்கண்டா னென்றி
னதுவதுதா னென்னு மகம்

எனவரும்.

கருவிகளெல்லாவற்றோடுங் கூடிச் சாக்கிரத்தினின்று விடயங்களையறியு மிடத்து ஒருங்கேயறியமாட்டாது ஒன்றனையறிந்தும், ஒன்றனையறியப்புகுவதாயும், முன்னறிந்ததொன்றனையறியாதொழிந்தும் இங்ஙனம் ஒரோவொன்றாகவறியப்பட்டவிடயத்தையும் இடையீடின்றியறியமாட்டாது விட்டுவிட்டாங்கே ஐந்தவத்தைப்பட்டடங்கி மீளவறிந்துவருதல் கண்கூடாகக் காண்டுமன்றே! அங்ஙனம் அறிந்துவந்தபொருள் யாது? சடமன்றென்பது மேற்காட்டப்பட்டது; முன்னருங் காட்டப்படும்; ஒன்றாகவியல்பானுணர்ந்திடுவதே பேரறிவாதலின், அதுவுமன்றாம்; மெய்யாகிய சித்தாந்த நெறியைக் கண்டோன் மற்றென்னையோவென உற்றுணர்ந்தானாயின், காட்டுமொளிக்குவேறாய கண்ணொளிபோல, அவ்வறிவிற்குவேறாய், அதுவதுவே தானாகச் சார்ந்ததன்வண்ணமாய்நின் றறியுமியல்பினையுடைய உள்ளமாகிய வான்மாவாமென்க.

அறிந்தும் அறிவதேயாயும் என்னுமும்மைகள் எண்ணும்மை. அறியாதும் என்னுமெண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. அறிந்ததையும் என்னுமும்மை இழிவுசிறப்பு. அறிவும் என்னுமும்மை மேற்கூறிப் போந்த சடமுமன்றென இறந்ததுதழீஇயிற்று. அங்கு - உணர்த்துமுறைமைத்தானமாகிய இலாடத்தானத்தினென்க. ஒன்றுதல் - மனத்தானொருங்கியாராய்தல். அகம் - உள்ளம்; ஆன்மாவென்றவாறு. அறிந்ததையும் விட்டங்கடங்கியறியுமாறு வருஞ்சூத்திரத்திறுதியதிகரணத்தும், அதுவதுதானெனச் சார்ந்ததன்வண்ணமாமாறு உண்மையதிகாரத்தும் பெறப்படும்.

அறிந்து மறிவதே யாயு மறியா தறிந்ததையும் விட்டங்கடங்கி யறிந்ததேது என்பதற்கு ஓதியதனை ஓதியபொழுதேயுணர்ந்தும், பலகாலோதியுணர்வதாயும், பலகாலோதியு முணராது அங்ஙனமுணர்ந்ததனையும் மறந்தும் இவ்வாறோதி யுணர்ந்ததுயாதென் றுரைத்தலுமொன்று. இப்பொருட்கு அடங்கி என்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க.

இங்ஙனம் மூவகைப்படுத்துரைக்கவே, உணர்த்தவுணர்தல் என்னுமேதுவால் அதீதத்தினிகழு மியல்புபற்றியும், சுத்தத்தினிகழு மியல்புபற்றியும், உணர்த்துமுறைமைக்கணிகழுமியல்புபற்றியும் ஆன்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

இவ்வதிகரணந் தற்பரமுமல்லே என்றதனை வலியுறுத்தவாறு. கணபங்கமாகிய ஞானமே ஆன்மாவென்னும் புத்தரில் யோகாசாரன்மதத்தை மறுத்தற்கெழுந்தது இவ்வதிகரணமெனக்கொண்டு, அதற்கியையவுரைப்பாருமுளர்.

ஆறுமதிகரணமுடிந்தது.



## ஏ ழா ம தி க ர ண ம்.

இங்ஙனம் ஆறதிகரணங்களானும் ஆன்மா வேறுண்டெனச் சாதித்த வழி, உடம்புமுதலியவற்றுள் ஒரோவொன்றை ஆன்மாவன்றென்ற தொக்கும்; அவற்றுளொன்றுகுறைந்தவழியும் அறிவுநிகழாமையானும், எல்லாங்கூடியவழி அதுநிகழ்தலானும் அனைத்துங்கூடிய சமுதாயமே ஆன் மாவாமென்னுஞ் சமூகான்மவாதிகளாகிய சவுத்திராந்திகர் வைபாடிகரை மறுத்தற்கெழுந்தது ஏழாமதிகரணம்.

ஒரோவொன்றனை ஆன்மாவன்றென மறுத்துப் பலபொருட்கூட்டமு மான்மாவன்றென மறுத்தற்கெழுந்தமையின், மேலையதிகரணங்களோடு இயைபுடைத்தாயவாறு காண்க.

இனி மாயாவியந்திரதநுவினுள் ஆன்மாவுளதென்றது எனவரும்.

மாயாகாரியங்களான் யாக்கப்பட்டியன்ற தநுவின்கண் அவற்றிற்கு வேறாய் ஆன்மாவுளதென்பதாம். எனவே, அவையெல்லாம் மாயையின் காரியங்களாதலின், நிலைபேறுடையவான்மாவல்லவென்றவாறாயிற்று.

மாயை - ஆகுபெயர். இகரம் விரித்தல் விகாரம்.

அற்றேல், சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச்சமுதாயமைந்தும் மாயையின் காரியங்களென்பது எம்மனோர்க்குடம்பாடன்மையின், அது பற்றி ஆன்மா வேறுண்டெனச் சாதிக்குமாறென்னையென்று ஆசங்கித்தவழி, "அவ்வளவினவன் மகிழுக" என்னும் நியாயம்பற்றி வேறும் அதனை வலி யுறுத்துதற்கெழுந்த ஏது:—

அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்றுநிற்றலான் எனவரும்.

நீ ஐந்துகந்தமெனக்கொண்ட மாயாகாரியங்கள் ஆன்மாவென்னும் பெயர்பெறுமாறில்லையென்பார், அவைதாம் வேவ்வேறு பேயர்பேற்று நிற்ற லான் என்றார்.

அற்றேல், அவை தனித்தனி வெவ்வேறு பெயர்பெறினுந் தொக்க சமுதாயத்தின் ஆன்மாவெனப் பெயர்பெறுமாகலின், அவையே ஆன்மா வென்றற்படுமிழுக்கென்னையென்னும் ஆசங்கையை நீக்கி, அவை வெவ் வேறு பெயர்பெறும் வழியும் அவர்கூறுமாறு பெயர்பெறாது வேறுபெயர் பெறுமாறும், அவை மாயையின் காரியங்களேயாமாறும், அவை தொக்க வழியும் ஆன்மாவெனப் பெயர்பெறுமாறின்றி வேறுபெயர் பெறுமாறு முணர்த்தி அதனை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே போல—வலையாமன்

ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதநுவாந்
தானத்தின் வேருகுந் தான்

எனவரும்.

அவைதாம் வெவ்வேறு பெயர்பெறுமாறிதுவென்பார், கலையாதி மண்ணந்தம் என்றும், அவை ஒன்றன் காரியங்களேயாய்த் தோற்றக்கேடுகளுடையனவென்பார், காணிலவை மாயை நிலையாவாம் என்றும், அவை தொக்கவழிப் பெறும்பெயரும் வேறென்பார், அது தீபம்போலத் தநுவாம் என்றும், தீபத்துக்குக் கண்வேருதல் கண்டாற்போல உயிர் அவ்வுடம்பிற்கு வேறென் றறியப்படுமென்பார், தானத்தின் வேருகும் என்றுங் கூறினர்.

தூலவுடம்பு, சூக்குமவுடம்பு, பரவுடம்பென்னும் மூன்றுமடங்கத் தநு என்ருர்.

ஆம் என்பதனை முன்னுங் கூட்டுக. மாயை - ஆகுபெயர். தான் என்பது முன்னையது ஆன்மா; பின்னையது அசை. ஏகாரம் அசைநிலை. அதனி னென்பது அத்தின் என மரீஇயிற்று. * "இத்தை மெய்யெனக் கருதி" என்புழிப்போல.

இங்ஙனமாதல் மேலைச்சூத்திரத்திரண்டாமதிகரணத்தில் விரித்துரைத்த வாறுபற்றி யுணர்ந்துகொள்க.

இவ்வதிகரணத்தானே தனி என்றதனை வலியுறுத்தியவாறு.

ஏழாமதிகரணமுடிந்தது.

இங்ஙனம் மூன்றுசூத்திரத்தானுஞ் சைவாகமங்களிற் கூறப்படும் பதி முதலிய பொருள்களினுண்மை அநுமானத்தாற் சாதிக்கப்பட்டது.

அற்றேல், ஆகமவளவையானே அமையுமாதலின், அநுமானப்பிரமாணத்தானுஞ் சாதித்தல் மிகையாம்பிறவெனின்,—ஆகாது; மந்தவுணர்வுடைய மாணுக்கர்க்கு வேற்றுச்சமயநூல்களை நோக்கியவழி ஆகமப் பொருள்களின் மலைவுநிகழாமைப்பொருட்டும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டையென்னும் நான்குவகையானன்றி, ஆகமங்களைக் கேட்ட துணையானே அநுபவநிகழ்தல் கூடாமையின், சிந்தனைசெய்து வன்மை மென்மை யுணர்ந்துகோடற்பொருட்டும் வழியளவையும் வேண்டப் படுமாகலானென்க.

பிரமாணவோத்தின் மூன்ரும்பாதமாகிய

## மூன்ருஞ் சூத்திரமுடிந்தது.

## பிரமாணவியன்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

* திருவாசகம், அதிசயப்பத்து, எ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இலக்கணவியல்.

## நான்காஞ்சூத்திரம்.

இனி, ஆசிரியர் நான்காஞ்சூத்திரத்திற்கு வார்த்திகப்பொழிப்புரைப் பாராயச சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச் செய்கின்றார்:—

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே

எனவரும்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு, என்பது சூத்திரமெனக்காட்டி, இனி, அதன்கருத்துரைக்கின்றார்:—

எ - து. சூ - ம். எ-னின். இதுவுமது என்பதாம்.

எனவரும்.

"பிரமாணம் இலக்கணம் இரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்று" என்னு முறைமைபற்றி, மேற்பிரமாணத்தாற் பெறுவித்த பதி முதலிய பொருள்களை எதிர்நிரனிறையாகவைத்து ஈண்டிலக்கணத்தாற் பெறுவிக்கின்றமையின், இவ்வோத்து இலக்கணவியலென்னும் பெயர்த்து.

இதனுள், இம்முதற்பாதமாகிய நான்காஞ்சூத்திரம், மேலைச்சூத்திரத்தின் ஆன்மாவுளது என்றுத்தேசமாயெடுத்துக்கொண்ட ஆன்மாவினிலக்கணங்கூறுத னுதலிற்றெனக்கொள்க.

அற்றேல், ஆசிரியர் இதுவுமது என மாட்டெறிந்துரைத்தது இச்சூத்திரமும் மேலைச்சூத்திரநுதலிய பொருளை நுதலிற்றெனவே பொருடருதலின், அதனையொழித்து மேலைச்சூத்திரம் பிரமாணமுணர்த்திற்றென்றும், இச்சூத்திரம் இலக்கணமுணர்த்திற்றென்றும் உரைத்தல் மாட்டேற்றுரையோடு முரணும்போலுமெனின்,—அறியாதுகூறினாய். கருத்துரை கருத்துரையோடு மாட்டெறியப்படுவதன்றிச் சூத்திரப்பொருளோடு மாட்டெறி

மாட்டேற்று மாறு:- "அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும், இயன்றுபொருள் முடியத் தந்தனருணர்த்தல், மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்" என்ப[illegible].

யப்படுவதன்றாகலின், இதுவுமது என்றது இச்சூத்திரமும் ஆன்மப்பிரகாச முணர்த்துதனுதலிற்று எனப் பொருள்படும். படவே, ஆண்டு ஆன்மப்பிரகாச முணர்த்துதனுதலிற்று என்றது ஆன்மாவினுண்மையுணர்த்திற்று எனவும், ஈண்டு ஆன்மப்பிரகாசம் என்றது ஆன்மாவினிலக்கணமுணர்த்துதனுதலிற் றெனவுஞ் சூத்திரப்பொருட்கேற்பவைத்துரைத்துக்கொள்ளப்படுமென்க.

சொற்பல்காமைப் பொருட்டும், ஒத்துவேறுயவழியும் பாதவியை புடைமை யுணர்த்துதற்பொருட்டும் ஈண்டு இதுவுமது என மாட்டெறிந் துரைக்குமாசிரியர், இங்ஙனம் உரைத்துக்கோடற்கேற்பவன்றே, ஆண்டு ஆன்மாவினுண்மையுணர்த்துதனுதலிற்றெனச் சிறந்தெடுத்தோதாது, ஆன் மப்பிரகாசமெனப் பொதுப்படவோதியதூஉமென்க.

இனி, மேலைச்சூத்திரத்தின் ஆன்மாவினுண்மை கூறுமுகத்தாற்றெருக் தோதிய அஞ்சவத்தை ஈண்டு இலக்கணங் கூறுமுகத்தான் விரித்தோதப் படுதலின், இதுவுமது என்றது மேலைச்சூத்திரப்பொருளோடு மாட்டெறிந்த தென்றுரைப்பினும் இழுக்கின்மையறிக.

உத்தேசத்தின்பின் இலக்கணங்கூறுதல் முறைமைபற்றியவியைபாக லின், அதனானே அதிகரணவியைபும், ஆன்மாவினுண்மைக்குப் பிரமாணங் கூறியவழி, அற்றேல், அவ்வான்மா ஒருதன்மைத்தாய்நில்லாது ஐம்புல னறிந்தும், ஒடுக்கமறிந்தும், உண்டியும்வினையுமின்றிக்கிடந்தும், உணர்த்த வுணர்ந்தும் இவ்வாறு வேறுவேறவத்தையுறுதல் பொருந்தாதென்னுமாசங் கையை ஈண்டு நீக்குதலின், அவ்வாசங்கைபற்றியவியைபானே பாதவியை யும், மேற்பிரமாணத்தாற் பெறப்பட்ட பொருள்களுக்கு இலக்கணமென்னை யென இலக்கணத்தை அவாய்நிற்றலின், அவ்வவாய்நிலைபற்றிய வியைபானே ஒத்தியைபும் பெறப்படும். இன்னும் இதன்கணுரைக்கற்பாலனவெல்லாம் இரண்டாஞ்சூத்திரத்தினுரைத்தவாறுபற்றி உணர்ந்துகொள்க.

இதன் பிண்டப்பொழிப்பு:—ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரஞ் சித்தமென்னும் நான்கனுள் ஒன்றன்றாயினும் நண் ணுணர்வின்மையிற் சூழ்ச்சித்துணைவராகிய அமைச்சரோடுங்கூடிநின்று தன் றொழில்நடாத்தும் அரசன்போலச், சகசமலத்தினானுணர்வின்றிக், கஞ்சுகம் போலுங் கலாதிகளாற் பொதுவகையானுணர்வுநிகழினுஞ் சிறப்பு வகையானுணருமாறு அவற்றாற்பெறப்படாமையின், அங்ஙனமுணர்தற்குத் தனக்குச்சூழ்ச்சித்துணையாகிய அந்தக்கரணங்களோடுங் கூடிநின்று சாக்கிர முதலிய ஐந்தவத்தையுடைத்தாமென்றவாறு.

எனவே, அங்ஙனநின்று அவத்தைப்படுதல் ஆன்மாவுக் கிலக்கண மென்றவாறாயிற்று.

ஒன்றன்றாயினுஞ் சகசமலத்துணராது அமைச்சரசேய்ப்ப அவற்றேடு சந்தித்துநின்று அஞ்சவத்தைத்தாம் எனக்கூட்டுக.

சந்தித்தது - வினையெச்சமுற்று.

இனி, இவ்வாறன்றி, அந்தக்கரணம் அவற்றினொன்றன்றாயினுஞ் சகச மலத்துணராமையான் அவற்றோடு சந்தித்தது; சந்தித்தவழி, அவையுந்தானும் அமைச்சரசேய்ப்பநிற்றலான் அஞ்சவத்தைத்தாயிற்று என்று அதிகரணம்பகுத்துக்கோடற்கேற்ப வேறுவேறு வினைமுடிபுசெய்துரைத்தலுமொன்று.

* வடமொழிச் சூத்திரத்தோதுதலின், ஈண்டும் "ஆயினும்" என வருவித்து ஒருதொடராக்கியுரைத்தலே ஆசிரியர் கருத்தென்க.

அந்தக்கரண மவற்றினொன் றன்றாயினும் எனவே, அவற்றினொன்றன்றாதலும் அநுவாதமுகத்தான் ஈண்டே பெற்றாம். இஃதுணராதார் அந்தக்கரண மவற்றினொன்றன்று என்றதனை வேறுதொடராகவைத் துரைப்பர். அங்ஙனமுரைப்பின் வருமதிகரணங்களை அவாய்நின்று ஒருபொருண்மேல் வாராமையின், ஒருசூத்திரமாதற் கேலாமை யறிக.

அவை சந்தித்தது என்புழி ஒடுவுருபு விகாரத்தாற் றொக்கது; இரண்டாவது விரிப்பினும் அமையும். ஆன்மா என்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கற்பாலதாகவும் ஈண்டும் வேறோதியது ஒத்துவேறாதலுணர்ந்துகோடற்கும், ஆன்மாவென்னுஞ்சொல் வியாபகமெனவுஞ் சித்தசித்தெனவும் இருபொருளுடைத்தாதலுணர்ந்துகோடற்குமாகலின், அது மிகையன்மையுணர்க.

மலத்து - மலத்தாலென விரிக்க. அமைச்சரசு - அமைச்சரோடுகூடிய வரசென உருபும் பொருளுமுடன்றொக்கன. நின்று என்னும் வினையெச்சம் அவத்தைத்து என்னும் வினைக்குறிப்பு முற்றோடுகொண்டு முடிந்தது.

இவற்றுள், அந்தக்கரணமவற்றினொன்றன்று என்றது ஓரதிகரணம்; ஒன்றன்றாயினுஞ் சகசமலத்துணரா தவை சந்தித்தது என்றது ஓரதிகரணம்; அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே என்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

அவற்றுள், அந்தக்கரணான்மவாதிகளை மறுத்து ஆன்மா வேறுளதெனச் சாதித்தற்கெழுந்தது முதலதிகரணம்.

அற்றேல், இதனை ஈண்டுவைத்தற் கியைபென்னையெனிற் கூறுதும்:—மேலைச்சூத்திரத்திறுதியதிகரணத்தின் அவை வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான் ஆன்மாவல்லவெனச் சமூகான்மவாதிகளை மறுத்து வேறுண்டெனச் சாதித்தவழி, ஏனையவெல்லாம் ஆன்மாவெனப் பெயர்பெறாது வேறுவேறு பெயர்பெற்று வழங்கப்படுதலான் மாயரவியந்திரதநுவினு ளான்மாவுளது என்றதொக்கும்; மனமுதலிய அந்தக்கரணங்கள் மனமுதலிய பெயர்மாத்திரையானன்றி ஆன்மாவென்னும் பெயரானும் ஆண்டாண்டு வழங்கப்படுதலுண்மையானும்; அங்ஙனம் வழங்குதல், † "புந்தியை மனம தென்று மனமது புந்தி யென்றுஞ்—சிந்தையைச் சீவ னென்றுஞ் சீவனைச் சிந்தை

---

* [illegible] என்பது வடமொழிச்சூத்திரம்.　　† சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், ௨௮.

யென்று—முந்தனை யான்மா வென்று மான்மாவை முந்த னென்றும்—வந்திடு'' மாகலின், ஆகுபெயரானுயதெனின், ஆகுபெயராதற்கோ ரியைபின்மை யானும்; உண்டெனின், அதுபற்றி இந்திரியமுதலியவற்றையும் அங்ஙனம் வழங்கவேண்டும், அஃதின்மையானும்; அத்தன்மையவாகிய அந்தக்கரணங்களே ஆன்மாவென்றற்படு மிழுக்கென்னையென்று ஆசங்கைநிகழுமன்றே: அதனை நீக்குதற்கெழுந்தது முதலதிகரணமென் றுணர்க.

அற்றேல், இதனைப் ·பிரமாணவோத்துள்வையாது ஈண்டு வைத்தல் மரபன்றாலெனின்,—அஃதொக்கும்; ஆண்டுவைப்பினும், அவற்றி னொன்றன் றியினு மமைச்சரசேய்ப்ப வவற்றோடு சந்தித்துநின் றஞ்சவத்தைப்படும் என்று ஈண்டு இலக்கணங்கூறும்வழியும் எடுத்தோதல்வேண்டுதலின், ஈரிடத்து மெடுத்தோதல், * "மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு—சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்—சொல்லுங் காலை யுரையகத் தடக்கி—நுண்மையொடு புணர்ந்த வொண்மைத் தாகி'' என்னு மிலக்கணத் தானுகிய சூத்திரத்திற் கேலாதென்னுங் கருத்தான் அநுவாதமுகத்தான் ஈண்டே விளங்கவைத்தோதினராகலின், விதிமுகத்தானேதாமையான் அமைவுடைத்தென்க.

ஈண்டு அந்தக்கரணங்கள் சமுதாயத்தினுன்மாவோ? தனித்தனி யான்மாவோ? என விகற்பித்துச், சமுதாயத்தினுன்மாவென்பது நாடி லதுதநுவாம் என்றதனுன் மேல் மறுக்கப்பட்டமையின், அதனையொழித்துத், தனித்தனியான்மாவென்றதனை ஈண்டு மறுக்கின்றார்:—

---

## முதலதிகரணம்.

**ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோ புத்தி யகங்கார சித்தங்களிலொன்றன் றென்றது** எனவரும்.

ஈண்டு **அந்தக்கரணம்** என்றது உள்ளந்தக்கரணமாகிய கலாதிகளிற் செல்லாமைப்பொருட்டு மனோபுத்தியகங்கார சித்தங்களில் என் விதந்தெடுத்துரைத்தார். கலாதிகளுண்டெனக்கொண்டோரின் ஆன்மா வேறுண்டெனக் கொள்ளாதாரின்மையின், ஆண்டாசங்கைநிகழாமையின், மனமுதலிய புறவந்தக்கரணங்களே ஈண்டு மறுக்கநின்றனவென்பது கருத்து.

இனி, அமைச்சரோடுவமிக்கப்பட்டு, அவத்தைக்கேதுவாவனவும் மனமாதியேயன்றிக், கஞ்சுகத்தோ டுவமிக்கப்படுங் கலாதிகளன்மையின், அவற்றை ஈண்டைக் கெடுத்தோதல் வேண்டாமை யறிக.

இஃதறியாதார் கலாதிகளையு முடன்கூறுதவழிக் குன்றக்கூறலாய் முடியுமென் றாசங்கித்து, ஈண்டு அந்தக்கரணமென்றதனுற் புறவந்தக்கரண

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், சூ. ௬௦௦.

மாகிய மனமாதியும், அகவந்தக்கரணமாகிய கலாதியுங் கொள்ளப் படுமென் றுரைப்ப.

அஃதங்ஙனமாக; ஆன்மா அந்தக்கரணங்களின் ஒன்றன்றென்ற தென்னை? * "மனமும் புத்தி யகங்காரஞ் சித்த நான்கு--மருவியான் மாவே யென்ன வரும்" என நீவிருங்கோடலின், அவைதாமே சித்தாகியவான்மா வென்னுமோவெனின், அவ்வாசங்கையைநீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

*அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்*

எனவரும்.

ஐம்பொறிகளறிந்தவிடயத்தைச் சித்தஞ் சிந்தித்தறியும்; யான் சிந்தித் தேனென் றறியமாட்டாது; மனம் அதனைச் சங்கற்பவிகற்பஞ்செய்தறியும்; யான் சங்கற்பவிகற்பஞ்செய்தேனென் றறியமாட்டாது; ஆங்காரம் ஒருப் பட்டெழுந்தறியும்; யானொருப்பட்டெழுந்தே னென்றறியமாட்டாது; புத்தி நிச்சயித்தறியும், நிச்சயித்தறிந்தேன் யானென் றறியமாட்டாதாகலின், அவ்வாறன்றி அவற்றோடுகூடி, யான்சிந்தித்தேன், பற்றினேன், எழுந்திருந் தேன், நிச்சயித்தேன் என்றும்; அதன்பின் அதுவதுவாய்ப் பரிணமித்துச் சுக துக்க மோகரூபமாய்நின்ற புத்திதத்துவத்தின் பரிணாமங்களைக் கலாதி களோடுகூடி, இது சுகம், இது துக்கம், இது மோகம் என்றறிந்தும்; யான் சுகித்தேன், யான் துக்கித்தேன், யான் மோகித்தேன் என்றறிந்தும் இங்ங னம் பிறவற்றைநோக்கியுந் தன்னைநோக்கியுஞ் சித்தாகியவான்மா, தம்மை நோக்கிச் சித்தாகாத அந்தக்கரணங்களினொன்றாமாறுயாண்டையதென்பார், அவைதாம் பிரகாசமாய்நின்றே அப்பிரகாசமாய்நிற்றலான் ஈண்டு இவ்வான்மா வாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தியகங்காரசித்தங்களி லொன்றன்று என மேற்கொண்டதென்றார்.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன சித்து அசித்து என்னும் பொருளவாம். † "இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி" என்றதூஉம் இவ்வியல்புநோக்கியென்க. எனவே, அமைச்சர் அரசனுக்குச் சேவகரா யினும் அணுக்கராதற் சிறப்புப்பற்றி ஏனையோரைநோக்கி அரசரென் றுப சரித்துக் கூறப்படுமாறுபோலப் புறக்கருவிகளைநோக்கி ஆன்மாவுக்கணுக்க மாய்நிற்றற் சிறப்புப்பற்றி "மனமும் புத்தி யகங்காரஞ் சித்தநான்கு--மருவி யான் மாவே யென்ன" உபசரித்துக்கூறப்படுமாகலின், அதுபற்றி மலை யற்கவென்பது கருத்து.

சூழ்ச்சித்துணையாதல்பற்றி அந்தக்கரணங்கள் அமைச்சரை யொக்கு மெனவே, ஏனைப் புறக்கருவிகள் ஏனைப் பரிசனங்களை யொக்குமென்பது பெற்றாம்; அஃதாமாறு முன்னர் வகுத்துக்காட்டுதும்.

---

* சிவஞானசித்தி, சம் சூத்திரம், உ.　　† ஷை கக-ம் சூத்திரம், கக.

எனதுடலென்றல்போல எனதுசித்தம், எனதுமனம், எனதாங்காரம், எனதுபுத்தியென்றலும்; ஒன்றறிந்த தொன்றறியாதாதலும்; நனவின்கட் கனவுகண்டாமென்றுங் கண்டிலமென்றும் மயங்கிநிற்றலுமாகிய ஏதுக்களி னென்றே ஈண்டைக் கமையுமாயினுஞ் சிறந்தமைபற்றி வேறேதுக்கூறினர்.

அந்தக்கரணங்கள் தம்மிற்கீழுள்ளவற்றைநோக்கிச் சித்தாமாறும், தம் மின்மேலுள்ளவற்றைநோக்கியுந் தம்மைநோக்கியும் அசித்தாமாறுந் தெரித் துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதற்கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
மனமாதி மன்புலனி னல்லன்—மனமே
லுதித்தொன்றை யுள்ள முணர்த லதனி
லுதிக்குங் கடற்றிரையை யொத்து

எனவரும்.

மனமாதியான் மன்னு புலன்க ளுணர்தல் மனமே லுதித்தோன்றை உள் ளமுணர்தல் கடற்றிரையையோத்து உதிக்கும் அதனின் மனமாதி மன்புலனி னல்லன் எனக் கூட்டுக.

உதிக்கும் என்னும் பயனிலைக்கு உணர்தல் இரண்டுமெழுவாய்.

மனமாதி மன்புலனி னல்லன் என்பது மனமுதலியன அப்புலன்க ளல்லவாயினாற்போல ஆன்மாவும் மனமாதியல்லன் அவற்றின் வேறென்ப தாம். மனமே லுதித்தோன்றை என்பது மனத்துக்குமேலெனப்படும் புத்தி தத்துவத்திற் றோன்றியதொன்றனை யென்பதாம்.

புலனின் இன் - உவமவுருபு. அல்லன் என ஆடூஉவறிசொல்லாற் கூறியது வடமொழிமதம்பற்றி. உதித்த என்னும் பெயரெச்சவீறு திரிந்து நின்றது; * "புகழ்புரிந் தில்லிலோர்க்கு" என்புழிப்போல. புத்தியிற் றோன்றியதொன்றுவது † மேற்கூறினும். உள்ளம் - ஆன்மா. அதனின் - அதனால்; ஆகலானென்னும் பொருட்டு.

கடற்றிரையையொத் துதித்தலாவது கடலிடையெழுந்து கரைசாருந் திரைபோல அவ்விருவேறுணர்வும் பரம்பரையின் ஆன்மாவின்மாட்டு வந்து தோன்றுதலென்க. பரம்பரையிற் றோன்றுதலாவது முன்னர் வாயிற்காட்சி யுணர்வுதோன்றி, அதன்பின் மானதக்காட்சியுணர்வு தோன்றி, அதன்பின் னர்த் தன்வேதனைக்காட்சியுணர்வு ஆன்மாவின்கண் வந்து தோன்றுதல்.

இதனானே அந்தக்கரணங்கள் கீழுள்ளவற்றைநோக்கிச் சித்தாய்நிற்கு மாறும், மேலுள்ளவற்றைநோக்கி அசித்தாமாறும், ஆன்மா அவ்வாறன்றி யாண்டுஞ் சித்தாமாறுங் கண்டுகொள்க.

இங்ஙனம் பொதுவகையாற் கூறிப்போந்த அந்தக்கரணங்களினியல்பு சிறப்புவகையாற் கூறுமுகத்தான் மானதக்காட்சியுள்ளுங் கடற்றிரை

* திருக்குறள், ௬-ம் அதி. வாழ்க்கைத்துணைநலம், ௯. † பக்கம், ௨௫௪.

போலப் பரம்பரையான் வேறுவேறாகி உணர்வுநிகழுமாறுணர்த்தி ஆன்மா வேறாதலை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
மவ்வேறும் போதுபோ லாங்கு

எனவரும்.

ஆன்மாவுக்கு வாயிற்காட்சியாற் கண்ட விடயங்களினென்றனை மனமாதியானுணரும் மானதக்காட்சியின்கண்ணும் ஒருபடித்தன்றி வெவ்வேறாய் உணர்வுநிகழுமென்பார், அங்குச் சித்தமாய்ச் சிந்தித்தும் மனமாகிப் பந்தித்தும் ஆங்காரமாய்த் தெளியாதும் புந்தியா யாய்ந்தும் வெவ்வேறு தானே துணிந்து என்றும், இங்ஙனந் துணிதலான் ஆன்மா இவ்வந்தக்கரணங்களின் வேறாதல் உவமையின்வைத் துணர்த்துவார், அவ்வேறும் போதுபோல் உள்ளம் இவ்வேறும் என்றுங்கூறினர்.

போது அவ்வேறாதலாவது ஞாயிறுமுதலியவற்றோடு கூடிநின்று நாழிகை, நாள், பக்கம், திங்கள் முதலியனவாய்ப் படும் பாகுபாடுசெய்யுங் காலதத்துவம் ஞாயிறுமுதலியவற்றின் ஒன்றன்றாதலென்க. காலதத்துவம் அங்ஙனமாமாறு அதனியல்புரைப்புழி உரைத்தாம்; * ஆண்டுக்காண்க.

ஆய்தல் - ஈண்டு நிச்சயித்தற்பொருட்டு. துணிதல் - அறிதற்பொருட்டு. வேறுவேறென்பது வெவ்வேறு என மரீஇயிற்று. இவ் அவ் என்பன வகரவிற்றஃறிணைப்பன்மைச் சுட்டுப்பெயர். சாரியையும் உருபுந் தொக்கன.

ஆங்கும் - மானதக்காட்சியின்கண்ணு மென்க; எனவே, மானதக்காட்சியும் இங்ஙனம் நால்வேறுவகைத்தாய், ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய்க், கடற்றிரைபோலப் பரம்பரையிற் றோன்றுமென்றவாறாயிற்று.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

செய்யுளாகலின், முறைபிறழவைத்தார். இவை இங்ஙனந் தொழிற்படுதல், ஆன்மாப், பஞ்சகஞ்சுகமும் பஞ்சக்கிலேசமு முடைத்தாய்நின்று அதிட்டித்தமாத்திரையே நிகழுமாயினும், அவற்றுற்றோன்றும் மானதக்காட்சியாவது, பெயர் சாதிமுதலியனபற்றிநிகழுஞ் சவிகற்பவுணர்வாகலின், அவ்வுணர்வுநிகழுதற்குக் காரணம் எழுத்தோசையாகிய நால்வகை வாக்குக்களென்பது † மேற்காட்டினமையின், ஆண்டு அச்சவிகற்பவுணர்வு நிகழுதற்பொருட்டு அவையும் அவற்றை உடனின்றுசெலுத்துவனவாகலின், அவற்றுள், இஃதிக்கருவியைச்செலுத்துமென விதந்தெடுத்தோதி, அவற்றான் உணர்வு மாறிமாறித் தோன்றுமாறுணர்த்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

* பக்கம், கசஅ.　　† பக்கம், கஙரு.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று

எனவரும்.

* "மன்னு மகார மனஞ்செலுத்தும் புத்தியினை—யுன்னு முகார முபகரிக்கு—முன்னுகு—மாங்காரந் தன்னை யகாரஞ் செலுத்தியிடு—நீங்காத சித்தம்விந்து நேர்" என்புழியாகலானும் ஈண்டோதியதே முறையெனவும், † "அவ்வுட னுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்கா ரங்கள்" என்புழி எதிர்நிரனிறைப்பொருள்கோளெனவுங் கொள்க. † "அவ்வுட னுவ்வு மவ்வு மனம் புத்தி யகங்கா ரங்கள்" என்றதே முறையெனவும், **அகார வுகார மகங்காரம் புத்தி—மகார மனம்** என்றதும் இதற்கேற்பக் கொண்டுகூட்டியுரைக்கப்படுமெனவும் உரைப்பாருமுளர்.

**பகாதிவற்றை நாடிற் பிரணவமாம்** எனவும், **போன்றும்** எனவுங் கூட்டுக.

அந்தக்கரணங்களைச் செலுத்துமக்கரங்கள் கூறுவார், ஒப்புமைபற்றிப் புருடனைச் செலுத்துமக்கரமும் உடன்கூறினார்.

‡ "நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதி கலையைப் பற்றி யைந்தாய்த்திகழு"மாறும் § மேலுரைத்தாமாகலின், அவை அந்தக்கரணங்களையும் புருடனையும் உடனின்றுசெலுத்துங்கால் முறையே வைகரிமுதலிய வாக்கைந்தும் அகாரமுதலிய பஞ்சகலை வடிவினவாய்நின்று ஒரோவொன்று ஒரோவொருகருவிகளைச் செலுத்தி உடனிற்குமெனவும்; அவ்வகாரமுதலிய வைந்தினையுங் கூட்டியுச்சரிக்குமாறு நாடுங்காற் பிரணவரூபமாமெனவும்; இங்ஙனமாகலின், சூக்குமபஞ்சாக்கரமைந்தும் ஒன்றற்கொன்று முறையே காரணமாய் நாதகலை மூலகாரணமாமெனவும்; இங்ஙனம் பிரணவரூபமாகிய வாக்குக்களினின்றும் வன்னம், பதம், மந்திரமெல்லாந் தோன்றுதலிற் சத்தப்பிரபஞ்ச முழுவதற்கும் மூலகாரணம் பிரணவமாமெனவும்; சூக்கும பஞ்சாக்கரமே தூலபஞ்சாக்கர ரூபமாகநிற்பனவாகலின், அவையும் அவ்வியல்பினவாமெனவும்; இங்ஙனங் கருவிகளைச் செலுத்துஞ் சூக்குமபஞ்சாக்கரம் அசபையாய்ப் பரிணமித்துப் பிராணவாயுவை அடக்கியும் விட்டும் நின்றுணர்த்து மெனவும்; அதனானே கணந்தோறும் நினைப்பும் மறப்புமாகிய சகலகேவலங்கள் மாறிமாறி நிகழுமெனவும்; அங்ஙனம் மகாசகலத்தின்கட் கணந்தோறும் மாறிமாறிநிகழுஞ் சகலகேவலங்களாய் உணர்வு உதித்து மொடுங்கியும் வருமாறு சமுத்திரத்தின்கட் புதிது புதிதாய்த் திரை தோன்றியுமொடுங்கியும் வருமாறுபோலுமெனவும்; எனவே, **உதிக்குங் கடற்றிரையை யொத்து** என்றது வாயிற்காட்சிமுதலியன பரம்பரையிற்

* துகளறுபோதம், கக. † சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், ரு. ‡ சிவஞானசித்தி, முதற்சூத்திரம், உச. § பக்கம், கஙரு.

ருென்றுமாற்றிற்கும், போதங் கடற்றிரையே போன்று என்றது புதிது புதிதாய் உணர்வு மாறிமாறித் தோன்றுமாற்றிற்கும் உவமையாகவைத்துக் கூறுதலின், அது கூறியதுகூறலன்றெனவும்; சூக்குமபஞ்சாக்கரத்தின் பரிணமமாகிய அசபை அதிதெய்வங்களைப்பற்றி ஒரோவொன்று மும்மூன்றாய் மீளமீள மாறி ஒரோவொன்றாய்ப்பரிணமித்து, இடையிடையே அறுவகைச் சூனியங்களுடைய பன்னிருகலைப்பிராசாதமாமெனவும்; இங்ஙனமாகலின், சூக்குமபஞ்சாக்கரம், தூலபஞ்சாக்கரம், அசபை, பிராசாதமென்பன தம்மின் வேறல்லவெனவும் உணர்ந்துகொள்க. இவற்றின் விரிவெல்லாஞ் சிவாகமங்களுட் காண்க; ஈண்டுரைப்பிற் பெருகும்.

இனிக், காரணத்திற் பொதுவகையானிகழாதது காரியத்திற் சிறப்புவகையானிகழுமாறில்லையாகலாற் சவிகற்பவுணர்விற்குக்காரணமாகிய நிருவிகற்பவுணர்வினும் பெயர் சாதி முதலியனபற்றி நிகழும் பேதவுணர்வு விசேடணவிசேடியப் பகுப்பின்றிப் பொதுமையானிகழுமென்பது பெற்றாமாகலின், அவ்வுணர்விற்குக் கருவியாகிய வாயில்கள் அவற்றிற்கிடமாய ஊக்கத்தை விளைவித்துநிற்குஞ் சூக்குமபூதந் தூலபூதங்களென்னு மிவற்றையுஞ் சூக்குமபஞ்சாக்கரங்கள் முறையே ஒரோவொன்றாய்ச் செலுத்தி நிற்குமெனக் கொள்க.

இங்ஙனமாகலின், அநந்ததேவர் முதலியோர் கட்டுநீங்கி முழுவதுமுணர்ந்தாராகவுஞ் சவிகற்பவுணர்விற்கு மூலகாரணமாகிய நாதகலையொன்றனை உணராமையிற் பரமுத்திக்குத் தடையாகிய அதிகாரமலவாசனையுடையராயினாராகலின், இதுவே அவற்றினும் மேலாகியபந்தமெனவும், இதனினீங்குதலே பரமுத்தியெனவு முணர்க. இது, * "ஒவிட விந்து ஞான முதிப்பதோர் ஞான முண்டேற்—சேவுயர் கொடியி னன்றன் சேவடி சேரலாமே" என்பதனானு மறிக.

இனி, இவ்வக்கரங்களுஞ் சடமாகலின், இவற்றைத்திட்டிக்கும் அதிதெய்வங்களுளவென்பதுணர்த்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரம னதிதெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்

எனவரும்.

அகரவுக ரம்மகரத் தாம் என்புழி மகரம் இசைப்பொருட்டு ஒற்றில் வழியொற்றாய் வந்தது; † "மைதீரொற்--றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு" என்பதோத்தாகலின்.

* சிவஞானசித்தி, முதற்சூத்திரம், உசு. † இதனை, சுஎ-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

ஈண்டு அயன் மால் பரமன் என்றது சுத்தவித்தையின் வைகுவோருள ரென மேற்காட்டிய பிரமன்முதலியோரை. பரமன் - உருத்திரன்.

முதலதிகரணமுடிந்தது.

## இ ர ண் டா ம தி க ர ண ம்.

மேலையதிகரணத்தில் தற்பிரகாசமும் பரப்பிரகாசமுந் தானேயாகிய ஆன்மாப் பரப்பிரகாசமாத்திரையாய்நின்ற அந்தக்கரணங்களின் வேறுயுண் டென்று அநுவாதமுகத்தாற் சாதித்தவழி, அற்றேல், அத்தன்மைத்தா யுண்டெனப்பட்ட ஆன்மா இத்தன்மையவாகிய கருவிகளைப்பற்றி நின்றன்றி அறியாமைக் கேதுவென்னையென்னும் ஆசங்கையை நீக்குதற்கெழுந்தது இரண்டாமதிகரணம்.

இனி, இவ்வாறன்றி மேலையதிகரணத்தால் அங்ஙனஞ் சாதித்தவழி, ஆன்மா அத்தன்மைத்தாயிற் சாக்கிரத்தின் ஐம்புலனறிந்தும், சொப்பனத் தின் ஒடுக்கமறிந்தும், சுழுத்தி துரியங்களின் உண்டியும்வினையுமின்றிக் கிடந்தும், அதீதத்தினின்றும்நீக்கி உணர்த்த உணர்ந்தும், உணர்த்துமுறை மைக்கண் உணர்த்த உணர்ந்தும், சுத்தத்தின் உணர்த்த உணர்ந்தும் இங்ஙனம் வேறுவேறவத்தையுறுதற்குக் காரணமென்னையென மேலைச்சூத்திரப் பொருள்பற்றி ஆசங்கை நிகழ்ந்துழி, அதனைநீக்குதற்கெழுந்தது இரண்டா மதிகரணமென்றலு மொன்று.

**இனி இவ்வான்மாச் சகசமலத்தி னுணர்வின்றென்றது**

எனவரும்.

இவ்வான்மா - அந்தக்கரணமுதலியனபோலன்றித் தற்பிரகாசமும் பரப்பிரகாசமுந் தானேயாய்நிற்குமென்னு மித்தன்மைத்தாகிய ஆன்மா.

ஆகந்துகமலமாகிய மாயை கன்மங்களி னீக்குதற்குச் **சகசமலம்** என விசேடித்தார். எனவே, மூலமலஞ் செம்பிற் களிம்புபோல வேறுகாரண மின்றித் தன்னோ டுடனிற்றலின், ஆன்மாத் தானேயுணருமாறின்றிக் கரு விகளைப் பற்றிநின்றுணர்வதாயிற்று; வெவ்வேறவத்தை யுறுவதூஉமாயிற் றென விடுத்தவாறு காண்க.

இங்ஙனம் ஆசங்கையை விடுக்குமுகத்தானே **மலத்துளதாம்** என மேற் பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட மூலமலத்தை ஆன்மாவோடு சகசமாய் நின்று அறியாமையைவிளைத்துக் கருவிகளோடு கூடி ஐந்தவத்தையுறுதற் கேதுவாயது மலமென ஈண்டு இலக்கணத்தாற் பெறுவித்தாரென் றுணர்க.

இதனுள், அறியாமையை விளைத்துநிற்றதெனக் கேவலத்தினின்ற நிலை பற்றிக் கூறு மிலக்கணமே பொதுவியல்பாதலின், மலத்திற்கு இருவகை யிலக்கணமும் ஈண்டே கூறப்பட்டன.

அற்றேல், சகசமலத்தினுன் முன்பில்லதாகிய உணர்வு பின் கருவிகளோடுகூடியவழித் தோன்றுமென்றல் இல்லதுதோன்ருதென்னுஞ் சற்காரியவாதத்தோடு முரணுமாலென்னு மாசங்கையை நீக்கி மேற்கோளை வ்லியுறுத்துதற் கெழுந்த ஏது:—

**அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான்**

எனவரும்.

மலத்திலக்கணம் வடமொழிவழக்குப்பற்றி யோதுவார், ஞானதிரோதகமாய் எனவும், அதனைத் தமிழ்மொழியினுரைத்துக்காட்டுவார், மறைத்துக்கொடுநிற்றலான் எனவுங் கூறினூர்;ஆகலின், கூறியதுகூறலன்மையுணர்க.

**திரோதகம்** என்பது மறைத்தலைச்செய்வதென்னும்பொருட்டாய் வினைமுதன்மேனின்ற வினைப்பெயர்.

இதனானே ஞானபாவமே அஞ்ஞானமென்பார் முதலியோர் மதங்கள் மறுக்கப்பட்டன.

சிவாதித்தமணிதீபிகையுடையாரும் முதலதிகரணத்திறுதியிற் பயன் கூறும்வழி, ஞானபாவமே அஞ்ஞானமென்பாரை மறுத்து, * மலந் திரவியமென்றும், அநாதிப்பொருளென்றும், மலசத்திகள் பலவென்றும், முத்தியின் மலசத்திக்குக்கேடன்றி மலத்துக்குக் கேடின்மையின், அநாதியாதற் கிழுக்கில்லை யென்றுங் கடாவிடைகளான் விரித்துக்கூறியவாறுண்டுக் காண்க.

அற்றேல், மாயாதநுவே அத்தன்மைத்தாகிய மலமாதலமையும்; வேறுமோர் மலமுண்டென்றல் மிகையாமென்னும் ஐக்கியவாதசைவரை மறுத்து, மாயைசெய்யுங் காரியத்திற்கும், மலஞ்செய்யுங் காரியத்திற்குந் தம்முள் வேற்றுமை பெரிதாமாறுணர்த்தி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

---

* இங்ஙனங்கூறுதலை, அத்தீபிகையுடையாரியற்றிய அதிகரணூர்த்தசங்கிரகமாகிய நயமணிமாலையின்,—

[illegible] ।
[illegible]
[illegible] ॥

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

எனவருஞ் சுலோகங்களானும் அறிக.

மாயா தநுவிளக்கா மற்றுள்ளங் காணுதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றுங் காட்டம்போற்
றன்னைமல மன்றணைத ருன்.

எனவரும்.

காட்டாகின்று விடயங்களையறியுமாறு ஆன்மஞானத்தை விளக்குதல் மாயையின்செய்தி; அவ்வறிவைத் தடுத்துநிற்றல் மலத்தின்செய்தி. இவையிரண்டும் இங்ஙனம் ஒளியுமிருளும்போல இகலிநிற்றலின், அத்தன்மைத்தாகிய மாயை இத்தன்மைத்தாகிய மலமாமாறு யாண்டையதென்பார், மாயா தநுவிளக்கா மற்றுள்ளங் காணுதே—லாயாதா மொன்றை எனவும், தன்னைமல மன்றணைதல் அதுவதுவாய் வீயாத வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றுங் காட்டம்போல் எனவும் வகுத்தோதினுர்.

அதுவதுவாய் ஆயாதாம் என மேலேகூட்டியுரைப்பாருமுளர். அதனுன் ஈண்டைக்காவதோர் பயன்றுராமை யுணர்க.

மற்று - வினைமாற்றின்கண் வந்தது. ஒன்றையும் என்னும் முற்றும்மையும், ஆயும் என்னுஞ் சிறப்பும்மையும் விகாரத்தாற் றெக்கன. ஆமுந் தானும் அசை.

வன்னியதுவதுவாதல் - காட்டத்துண்மறைந்துழிக் காட்டமேயாயும், சூரியகாந்தத்துண்மறைந்துழிச் சூரியகாந்தமேயாயும் இங்ஙனம் மறைந்து நிற்புழித் தானென்பதொன் றில்லையென்னும்படி அதுவதுவேயாய் நிற்றல்.

அங்ஙனமாகியும் வீயாமை கடைதன்முதலிய தொழிற்பாடு நிகழ்ந்தவழித் தோன்றுதலாற் பெற்றும். தன்னுண்மறைத்தல் - வன்னியென்பதொன் றில்லையென்னும்படி பொதிந்துகொண்டு தானேயாதல்.

ஒன்றுங்காட்டம் - ஒன்றேபோலுமத்துவிதமாங்காட்டம்.

இங்ஙனம் உவமைக்கோதிய அடையுந் தொழிலுஞ் சம்பந்தமும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க.

மாயைகன்மங்கள்போல ஆதியன்றெனக் காலத்தானும் வேற்றுமை கூறுவார், அன்றணைதல் என்றுர்; அணைதல் - அறிவு முழுதினையும் மறைத்தல்.

இங்ஙனங் கூறிப்போந்த மலமாவது பிராந்திஞானமே பிறிதில்லையென்பர் ஒருசாரார்; ஒருசாரார் ஞானுபாவமென்பர்; ஒருசாரார் தமோகுணமென்பர்; ஒருசாரார் மூலப்பகுதியிற் றேன்றும் அவிச்சையென்பர்; ஒருசாரார் மாயைகன்மங்களென்பர்; ஒருசாரார் சிவசத்தியென்பர்; ஒருசாரார் ஆன்மாவின் குணமென்பர்.

மலமாவது இவையனைத்தினும்வேருய், ஒன்றுய், நித்தமாய், வியாபகமாய், ஞானதிரோதகமாகிய திரவியமென்பது தொகுத்துக்காட்டுதும்:—

இலதென்றன்முதலிய ஏதுக்களாற் சூனியமுதலியவற்றின் வேறாய் ஆன்மா வுண்டென்பது பெற்றாம்; பெறவே, யான் குடத்தையறிந்தே னென்னும் அநுபவம் அவ்வான்மாவின்கண்ணே நிகழ்தல் காட்சியளவையானே அறியப்படுதலின், அஃதறிதற்குணமுடைத்தென்பது பெறப்பட்டது; படவே, ஆன்மாத் தோற்றக்கேடின்றி நித்தமாய் வியாபகமாய் நிற்றலின், அதன் குணமாகிய அறிவுந் தோற்றக்கேடின்றி, நித்தமாய், வியாபகமாய்நிற்கு மென்பது போந்தது, அறிவாவது ஒன்றனை விடயிப்பதே பிறிதன்றாகலின், அங்ஙனம் விடயிப்பதாகிய அவ்வறிவு ஒருகால் நிகழ்ந்தும், ஒருகால் நிகழாதுங் காலத்தானும், இடத்தானும் ஏகதேசமாய் நிகழ்தலுங்காண்டும். அவ்வறிவு செயற்கையான் இங்ஙனம் நிகழ்தற்குக் காரணமுண்டென்பது பெறப்படுதலின், அது பிராந்திஞானமுதலியவற்று ளொன்றென்றல் கூடாமையின், பாரிசேடத்தான் அவற்றின்வேறாகிய சகசமலம் அத்தன்மைத்தா யுண்டென்பது பெற்றாமென்க.

அற்றேல், இலதென்றன்முதலிய ஏதுக்களாற் சூனியமுதலியவை ஆன்மாவல்லவென மேற்சாதித்தமையின், ஆன்மா வேறுண்டென்ற தொக்கும். யான் குடத்தையறிந்தேனென்னும் அநுபவம் அவ்வான்மாவின்கண் நிகழு மென்றதென்னை? ஆன்மாவின் சன்னிதியிற் புத்திதத்துவத்தின்கண் நிகழ்வதேயாமெனச் சாங்கியர் கூறுபவாலோவெனின்,—அற்றன்று; புத்திதத்துவஞ் சடமாகலின், ஆன்மபோதத்தைத் தீபம்போலநின்று விளக்குதன் மாத்திரையேயன்றி அஃதறியுமாறு யாண்டையதென்க.

புத்திதத்துவஞ் சடமாயினும் ஆன்மா எதிர்விம்பமாய் அதன்கட்பற்றுதலான் அஃதறியுமெனின்,—நன்றுசொன்னாய்! கண்ணாடியி னெதிர்விம்பமாய்ப் பற்றிய கண்ணே விடயத்தைக் காண்பதன்றிக், கண்ணாடி காணு மென்பதில்லை; அதுபோலப் புத்திதத்துவத்தின் எதிர்விம்பமாகப்பற்றிய ஆன்மாவே யான் குடத்தையறிந்தேனெனத் தற்பிரகாசமும், பரப்பிரகாசமுமாய்நின் றறிவதன்றிப், புத்திதத்துவம் அங்ஙனம் அறியுமாறில்லை யென்றொழிக.

அன்றியும், பூவினாற்றம் மற்றொன்றிற் பற்றியவழிப் பூவின்கண் நாற்றமின்றாயினாற்போலச் சேதனத்தின்குணஞ் சடத்திற்பற்றியவழிச் சேதனப் பொருள் சேதனமன்றாய்முடியு மாதலானும், சடத்துக்கன்றிச் சேதனப் பொருட்குச் சங்கிரமித்தல் கூடாமையானும், அத்தியாசவாதம் எல்லாச் சமயத்தாரானும் இழிக்கப்பட்டதாதலானும் இதுபொருந்தாமை யறிக.

அற்றேல், அஃதாக; அறிவாவது ஒன்றனை விடயிப்பதேயாமென வரைந்தோதியதென்னை? விடயித்தலன்றியும் ஆலயவிஞ்ஞானமுண்டெனப் புத்தர்கூறுபவாலோவெனின்,—அவ்வாலயவிஞ்ஞானம் எவ்வியல்பிற்றெனக் கடாயினார்க்கு விடையின்மையின், அஃதுண்டென்றல் ஆகாயத்தாமரை யுண்டென்பதோ டொக்குமென் றொழிக.

அற்றேல், இங்ஙனங் கூறியவாற்றால் அறிதற்குணமுடைத்தான்மா வென்றதொக்கும்; அவ்வறிவு தோற்றக்கேடின்றி நித்தமாய் வியாபகமா

யுள்ளதென்றற்குப் பிரமாணமென்னையெனிற் கூறுதும்:—ஆன்மாவுக்குத் தோற்றக்கேடுகளுளவாயின், செய்தவினை நசிப்பச் செய்யாதவினை யுண்டா மெனப்பட்டு, மேற்கூறிய வினையிலக்கணங்களோடு முரணுதலானும், ஈன்றணியகுழவி தாய்முலைப்பால் பசிப்பிணிதீர்க்குமருந்தென் றறிந்து அதன்கண் முயலுதல்காண்டும்; அஃதும்மைப்பயிற்சிவயத்தா னுளதாகிய வாசனையில்வழிக் கூடாமையானும் ஆன்மா நித்தமென்பதூஉம்: எனவே, நித்தப்பொருள் அவயவமுடைத்தெனப்பட்டு அழிவெய்துவதாகிய ஏகதேச மென்றல் கூடாமையின், வியாபகமென்பதூஉம் பெற்றும்; பெறவே, அவ் வக்குணங்கள் அவ்வக்குணிகளின் வேறன்மையான், ஆன்மாவின்குணமாகிய ஞானமும் அவ்வாறே நித்தவியாபகமாதல் பெறப்பட்டது.

இனி, ஆருகதர் இவ்வாறுகொள்ளாது உடம்பின்கணன்றி ஏனையிடத்து அறிவுநிகழாமையின், ஆன்மா உடம்பளவின் வியாபகமாய்நிற்குமென்றும்; அஃதெறும்புடலிற் புகுதுங்கால் அவ்வளவிற் சிறுத்தும், யானையுடலிற் புகுதுங்கால் அவ்வளவிற் பெருத்தும் இங்ஙனம் அவ்வுடம்பளவிற் * செழுகம்போலச் சுருங்கியும் விரிந்தும் வருமியல்பிற்றென்றுங்கூறுவர். ஆன்மா அவ்வுடம்பளவிற் சிறுத்தும் பெருத்தும் வருவதாயின், அறிவும் அவ்வாறே சிறுத்தும் பெருத்தும் நிகழ்தல் வேண்டும்; அங்ஙனமின்றிப் பேருடம்பிற் சிற்றறிவுஞ் சிற்றுடம்பிற் பேரறிவும் நிகழக்காண்டலானும், சுருங்கியும் விரிந்தும் வருமாயின் அவயவமுடைத்தெனப்பட்டு அழிவெய்து மாதலானும், உடம்புமாத்திரையினன்றிச் சேய்மைக்கண்ணே துருவமண்ட லத்தையறிதலானும் அதுபொருந்தாமை யறிக.

இனிப், பாஞ்சராத்திரிமுதலியோர் உடம்பினின்றுநீங்கிப் போக்கு வரவு புரிதலானும், உடம்பினுஞ் சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுறுதலானும், சைவாகமங்களின் ஆன்மாக்களுக்கு அணுக்களென்னும் வழக்கமுண்மை யானும் "இதயகமலத்திற் புன்னுனிச் சிறுதுளிவடிவிற்றாயிருக்கும்" என்பத னானும், † வேதத்தும் அவ்வாறு கூறுதலானும் ஆன்மா அணுவடிவிற்றென் பதே பொருத்தமுடைத்தென்றும்; அணுவடிவிற்றாயின் ஏகதேசத்தன்றி உடம்புமுழுதினும் அறிவுநிகழுமாறும், சேய்மைக்கண்ணதாகிய துருவமண் டலத்தையறியுமாறும் யாங்ஙனமெனின், விளக்கின்பிரபை விளக்களவினில் லாது பக்கங்களிற் பரந்துசென்று வியாபிக்குமாறுபோல, ஆன்மா ஏகதேச மாயினும் ஆன்மாவின்குணமாகிய ஞானம் வியாபகமாதலின், அங்ஙனம் அறிதல்கூடுமென்றுங் கூறுவர். குணியளவினன்றிக் குணம் வேறிடத்திற் சேறல் யாண்டுமின்மையானும்; விளக்கின்பிரபை விளக்கின் சூக்குமரூபமே யன்றி வேறன்மையான் அது திரவியமே, குணமன்றாகலான், ஈண்டைக் குவமையாகாமையானும்; தட்பம், வெப்பம், மணங்களுங் காற்றூற்கொண ரப்படும் அவ்வக்குணிகளின் அவயவங்களையொட்டியன்றி வாராவென்பது † மேற்காட்டினமாகலானும்; குணங் குணியளவினன்றி வேறிடத்துச் சென்று வியாபிக்குமென்பது குணகுணிகளினியல்பறியாதார் கூற்றேயா

* இது, செழுகை என நூல்களிற் காணப்படுகிறது; செழுகை—ஒருவகைஅட்டை.
† பக்கம், ௬௭௭.

மாதலானும்; பெத்தகாலத்தின் ஆன்மா அணுவடிவிற்றாகிய சூக்குமதேகமாய்நிற்குஞ் செயற்கைபற்றி வேதாகமங்களின் அணுவென வழங்கப்படுதலானும்; இதயகமலத்தின் அவ்வாறிருக்குமென்றலும், போக்குவரவு புரிதலுங் கூடுமாதலானும்; இஃது, உளமணுவாய்ச் சென்றுமனந்—தள்ள விழுங் கருவிற்றான் என்பதனாற் பெறப்பட்டதாகலின், அதுபற்றி வியாபகமென்றற் கிழுக்கின்மையானும்; வேதாகமங்களின் ஆன்மா வியாபகமெனவே கூறுதலானும்; ஆன்மாவென்னுஞ் சொற்குப் பொருள் வியாபகமாகிய * நித்தசித்தென்பதேயன்றி வேறுபொருள்படாமையானும் சேய்மைக்கண்ணும் வியாபித்தறிவதாகிய ஆன்மா ஏகதேசமான அணுவளவிற்றாதல் யாண்டையதென் றொழிக.

அற்றேல், இங்ஙனங் கூறியவாற்றானே ஆன்மாத் தோற்றக்கேடின்றி நித்தமாய் வியாபகமாய்நிற்குமென்பது பெற்றாம்; அங்ஙனமாயினும் அதன் குணமாகிய ஞானமும் அவ்வாறே நித்தமாய் வியாபகமாய்நிற்குமென்றற்குப் பிரமாணமென்னை? நையாயிகர்முதலியோர் குணிநிற்பக் குணந் தோன்றியழியுமெனக் கொண்டு, ஆகாயம் நித்தமாய் வியாபகமாய்நிற்ப அதன்குணமாகிய சத்தம் ஏகதேசமாய்த் தோன்றுதலுமழிதலுமுடைமை காண்டுமாகலின், அதுபோல ஆன்மா நித்தமாய் வியாபகமாய்நிற்ப அதன் குணமாகிய ஞானம் ஏகதேசமாய்த் தோன்றியழிந்துவருதல் இயல்பென்றாராலெனின்,—அற்றன்று; குணிநிற்பக் குணந் தோன்றியழிதல் யாண்டுமின்மையானும்; குணமழிவுழிக் குணியுமழிவெய்துமாதலானும்; இருளின்கண்ணதாகிய குடம் விளக்குவந்துழி விளங்கியும், அல்லுழி விளங்காமைமாத்திரையேபற்றி அப்பொழுது குடந் தோன்றியழிந்ததென்பார் யாருமில்லை; அதுபோல, ஆகாயத்தின்குணமாகிய சத்தமும் அதனை விளக்குதற்குரிய காரணமுயற்சிகள் கூடியவழி விளங்கியும், அல்லுழி விளங்காமைமாத்திரையேயன்றி அப்பொழுது தோன்றியழிந்ததன்றாகலான், அதுபற்றிக் குணிநிற்பக் குணந் தோன்றியழியுமென்பார் மதம் போலியாகலானும்; வெந்நீரினுளதாகிய தட்பம் நெருப்பின் சையோகத்தாற் றடையுண்டுநின்று, பின் அது நீங்கியமாத்திரையானே அத்தட்பந் தோன்றுதற்குரிய காரணமுயற்சிகளின்றித் தானே விளங்குதலின், ஆண்டழிந்துதோன்றிற்றென்றல் பொருந்தாமையின், பொருடோறும் இவ்வாறேயாமாதலானும்; மேற் சற்காரிய வாதத்திற் கூறியவாற்றானே அழிபொருளாகிய உடம்பு இந்திரியம் முதலியவற்றிற்குந் தோற்றக்கேடின்மை பெறப்படுதலின், ஈண்டுக் கூறவேண்டாமையானும் நித்தமாய் வியாபகமாகிய ஆன்மாவின்குணமும் அவ்வாறே நித்தமாய் வியாபகமாய்நிற்குமெனவும், அத்தன்மைத்தாகிய ஞானம் ஒருகால் விளங்கியும் ஒருகால் விளங்காதும் இடத்தானுங் காலத்தானும் ஏகதேசமாய்நிகழ்தல் செயற்கையானாயதேயாமெனவும், எனவே, அதற்கொருகாரணமுண்டெனவுந் தெற்றெனவுணர்ந்துகொள்க.

அற்றேல், ஆன்மாவின்ஞானம் அத்தன்மைத்தாயினுஞ் சத்தகுணம் போலக் காரணமுயற்சியுள்வழி விளங்கி, அல்லுழி விளங்காதுநிற்றல் அத

* உ௫௮-ம் பக்கத்தில், சித்தசித்தெனக்கூறப்பட்டிருத்தலுஞ் சிந்திக்கத்தக்கது.

னியல்பென்றுற்படும் இழுக்கென்னையெனின்,—அறியாதுகூறினுய். சத்த குணத்தைப் புலப்படுக்கும் வியஞ்சகப்பொருளாகிய குணில் முதலாயின காலத்தானும் இடத்தானும் ஏகதேசப்பொருளாகலின், அதனாற் புலப்படுவ தாகிய சத்தகுணமும் அதன்குணிமுழுவதும் விளங்காது காலத்தானும் இடத்தானும் ஏகதேசமாய் விளங்குவதாயிற்று; ஆன்மஞானத்தைப் புலப் படுக்கும் வியஞ்சகப்பொருளாகிய சிவசத்தி அவ்வாறு காலத்தானுதல் இடத்தானுதல் ஒருவாற்றானும் ஏகதேசமாதலின்றி, நித்தமாய் வியாபக மாய் நிற்றலின், ஈண்டுக் காரணமுயற்சி ஒருகாலுண்டாய் ஒருகாலின்று மென்பதற்கோரியைபின்மையின், அத்தன்மைத்தாகிய சிவசத்தியான் விளங்கிப் புலப்படுவதாகிய ஆன்மஞானமுந் தன்குணிமுழுவதினும் நித்த மாய் வியாபகமாய் விளங்குதலே இயல்பாவதன்றி, ஏகதேசத்தின்விளங் குதல் இயல்பாகாமையின், ஏகதேசமாய் அறிவுநிகழ்தல் காரணத்தானாகிய செயற்கையேயாமெனக் கொள்க. அற்றாகலினன்றே சத்தகுணம்போல் ஒருதன்மைத்தாதலின்றி, ஆன்மாவின்குணமாகிய அறிவு குவிந்தும் விரிந்தும் ஒருகாலைக்கொருகால் மிக்குமிக்குச் சோபானமுறையான் மேற் பட்டுவிளங்குதல் அநுபவமாய்க் காணப்படுவதூஉமென்க.

அற்றேல், காரணம் பிராந்திஞானமுதலியவற்றினென்றேயாக; அவற் றின் வேறுண்டென்பதற்குப் பிரமாணமென்னையெனின், கூறுதும்:— கயிற்றை அரவெனக்காணும் பிராந்தி கண்ணின்கண் யாதானுமொரு குற்ற மில்வழி நிகழாமையின், அதுபோலத் தேகமே ஆன்மாவென்றற் றொடக் கத்துப் பிராந்திஞானமும் ஆன்மாவின்கண் ஒருகுற்றமில்வழி நிகழாமை யின், அக்குற்றமாகிய சகசமலம் பிராந்திஞானத்தின் வேறாயுண்டென்பது பெறப்படும். இனி, ஞானபாவமே அதுவெனின்,—ஞானத்தின் என்று மபாவத்திற்கும், அழிவுபாட்டபாவத்திற்கும், ஒன்றினென்றபாவத்திற்கும் ஒருகாலுமழிவின்மையான் முத்தியென்பதொன் றில்லையாய்முடியும்; வீடு பேறுண்மை வேதாகமங்களிற் பெறப்படுதலின், அவற்றொடு முரணாமைப் பொருட்டு ஞானபாவமாவது ஞானத்தின் முன்னபாவமெனக் கோடல் வேண்டும்; வேண்டவே, நித்தமாகிய ஞானம் முன்னில்லாதொழிதற்கு வேறு காரணமுண்டென்பது பெறப்படுதலின், அதுவே சகசமலம் எனப் படு மென்க.

இனித், தமோகுணமுதலியன ஒன்றன்காரியமாய் இடையே தோன்றி யழிவனவாகலின், அவை அநாதியே ஞானதிரோதகமாய் ஆன்மாவைப் பந்திக்கமாட்டாமையின், சுத்தமாய்நின்ற ஆன்மாவை இடையே பந்தித்து நின்றனவெனின், அவை இடையேபந்தித்தற்குக் காரணம் வேண்டும்; காரணமின்றிப் பந்திக்குமெனின், முத்திபெற்றவழியும் பந்திக்குமென்ப தாய் முடியுமாகலின், அவற்றின் வேறாய் அநாதியே பந்திப்பதாகிய சகச மலமொன் றுண்டென்பது பெறப்படும்.

இனிச், சிவசத்தி ஞானதிரோதகமாய்நிற்குமெனின், சித்தாகிய சிவ னதுசத்தியுஞ் சித்தாவதன்றிச் சடமாதலின்மையாற் றனக்குப் பகையாகிய சடப்பொருள் சித்தைப் பந்தமுறுத்துவதன்றிச், சித்துப்பொருள் சித்தைப்

பந்தமுறுத்துமாறின்மையானும், உறுத்துமெனின், முதல்வனது பெருங் கருணைக் கிழுக்காதலானுஞ் சடப்பொருளாய்ப் பந்தமுறுவிக்குஞ் சகச மலம் வேறுண்டென்பது பெற்றாம்.

அற்றேல், மலஞ் சகசமாய் உடனிற்றலின், ஆன்மாவின்குணமெனக் கோடலே பொருத்தமுடைத்தெனின்,—அறியாதுகூறினாய்; குணமாயின் இடையேநீங்குதல் கூடாமையானும், ஆன்மா அறிதற்குணமுடைத் தென்பது மேற்காட்டினும், முன்னருங்காட்டுதுமாகலின், அறியாமையும் அறிவுமாகிய இரண்டுமறுதலைக்குணம் ஒருபொருட்குக் கூடாமை யானும் அஃதான்மாவின் வேறாயதோர் திரவியமேயென்பது தெற்றென வுணர்ந்துகொள்க.

அற்றேல், மாயை கன்மங்கள் ஆன்மாவின் வேறுமாய்ச் சடமுமாய்ப் பந்தமுஞ்செய்துநிற்றலின், அவையேயமையும்; வேறுமோர் சகசமலமுண் டெனக்கோடன் மிகையாமாலோவெனின்,—அவையங்ஙனமாயினும், ஞான திரோதகமல்லவாகலான் ஞானதிரோதகமாகிய மூலமலம் வேறுண்டென் பது, * "சுத்தமா மான்ம சித்தைத் துகளுடன் மறைத்த தென்னின்...... ......முத்த னுய்ப்பிர காச னாமே," † "பருதியை முகின்ம றைப்ப......... ......வந்திடாவிடின் மறைப்பே," ‡ "போதகா ரியம றைத்து நின்றது புகன்ம லங்காண்..............யாதலா லிரண்டுஞ் சோதி யிருளென வேறா மன்றே" எனவும்; § "மாயைமுதலென...........லறியாமை யெனநீ சொல்லியது மலமென்பர் துணிந்து ளோரே," ¶ "அந்நியமா னவை யுணர்த்தி...........றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" எனவும் வழிநூலாசிரியரும் புடைநூலாசிரியரும் விரித்தோதியவாறுபற்றி உணர்ந்துகொள்க.

இங்ஙனங் கூறியவாற்றானே பிராந்திஞானமுதலியவற்றின் வேறாய், ஞானதிரோதகமாய்த், திரவியமாய், அறியாமைக்குணத்ததாய்ச், செம்பிற் களிம்புபோல ஆன்மாவுக்குக் குற்றச்சகசமாய், அநாதிபந்தமாய்ச், சடமு மாய்ப்பலவுமாயினழிவெய்துமாகலின் அநாதிபந்தமாதல் பெறப்படாமை யான் ஒன்றேயாய், ஆன்மாக்கடோறும் வெவ்வேறாய் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரெனப்படும் பாகுபாட்டிற் கேதுவாய்நின்று மறைத்துத் தத்தங் காலவெல்லையி னீங்குவனவாகிய சத்திகள் பலபலவுடைத்தாய், ஆன்மாக்கள் கேவலஞ் சகலஞ் சுத்தமென்னும் மூன்றவத்தையுறுதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், அணுக்களைச் சகசமாய்ப்பற்றி நிற்றலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்ப், பசுத்துவம் பசுநீகாரம் மிருத் தியு மூர்ச்சை மலம் அஞ்சனம் அவித்தை ஆவிருதி என்றற்றொடக்கத்துக் காரணக்குறிகளுமுடைத்தா யுள்ளது மூலமல மென்க.

அற்றேல், மலம் ஞானதிரோதகமாயின் முதல்வன்ஞானத்தையும் மறைக்குமாறின்றி ஆன்மாவின்ஞானத்தைமாத்திரம் மறைத்துநிற்குமாறு

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், கக. † ஷை உ-ம் சூத்திரம், அஈ. ‡ ஷை ஷை சூத்திரம், அச. § சிவப்பிரகாசம், பொது, உஈ. ¶ ஷை ஷை, உச.

யாங்ஙனமெனின்,—அஃதொளிக்கு மாறுதலையாகிய இருள் ஞாயிற்றி னொளியை மறைக்கமாட்டாது கண்ணொளிமாத்திரையே மறைத்துநிற்கு மாறுபோலு மென்க.

அற்றேல், ஞாயிற்றின்சன்னிதியினிற்குங் கண்ணொளியை இருள் மறைக்குமாறில்லை; அதுபோலப், * "பண்ணையு மோசையும் போலப் பழ மதுவு மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா மண்ணருள்" எனவும், † "இன்றே விறையுயிருக் கிப்படியே நின்றநிலை," ‡ "அன்றே யிறைக் கடிமை யையமில்லை யையமில்லை" எனவும் பிறாண்டும் இவ்வாறே கூறுபவாகலின், அங்ஙனமுயிர்க்குயிரா யுடன்விரவிநிற்கும் முதல்வன்சன்னிதியே யாண்டுமாகலின், அம்முதல்வன்சன்னிதியின் அங்ஙனநிற்கும் ஆன்மாவை மலம் மறைத்தல் கூடாதாலெனின்,—அற்றன்று; ஞாயிற்றின்சன்னிதியி னிற்பினும் படலம்படர்ந்தகண் அவ்வொளியையிழந்து இருளினழுந்து தலின், அவ்விருள் அதனைமறைத்தல் கண்டாமாகலின், அதுபோல ஆன்மா முதல்வன்சன்னிதியினிற்பினுஞ் சோபானமுறையின் அறிவிக்கவறியுந் தன்மையுடையதாகலின், அத்தன்மைத்தாகிய ஆன்மா அநாதியே அறி வித்தா லறியமாட்டாமையின், அம்மாட்டாமையானே அநாதியின் அவ் வறிவையிழந்து அறியாமையாயழுந்துதலின், உயிரோடுவிரவிக் குணம் போலநிகழும் அறியாமைப்பொருளாகிய மலம் அவ்வுயிரைமறைத்தல் கூடுமென்க.

அஃதங்ஙனமாக; விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரெனப்படும் பாகுபாடு முறையே மலத்தானும், மலகன்மங்களானும், மலகன்மமாயை களானுமாயினவெனச் சிவாகமங்களிற் கூறுதலின், ஈண்டு மலமொன்றே அப்பாகுபாட்டிற்கெல்லாங் காரணமென்ற தென்னையெனின்,—அஃதுண் மையதிகாரத்துள் விடுத்துக்காட்டுதுமாகலின், எல்லாவநத்தங்கட்கும் மூல காரணம் மலமேயாமென்க.

விஞ்ஞானகலர்முதலிய மூவர்க்கும் புவனம் முறையே அசுத்த மாயைக்கு மேலும், நடுவும், கீழுமாமெனக் கொள்க. அசுத்தமாயைக்கு மேலாவது அசுத்தமாயைக்குஞ் சுத்தவித்தைக்கு மிடையேயுள்ள புவன மெனவும், நடுவாவது அசுத்தமாயைமுதல் அராகமீறாய தத்துவபுவனங்க ளெனவும், கீழாவது மூலப்பகுதிமுதல் நிலமீறாகிய தத்துவங்களிலுள்ள புவனங்களெனவு முணர்க.

இனி, அசுத்தமாயாதத்துவபுவன மாத்திரையே நடுவெனவும், ஏனைக் காலமுதல் நிலமீறாகிய தத்துவங்களைக் கீழெனவுங் கொண்டு, பிரளயா கலர்க்குத் தானம் அசுத்தமாயா தத்துவபுவனமாத்திரையேயென்பாரு முளர். விஞ்ஞானகலர் பிரளயாகலருக்குத் தானஞ் சுத்ததத்துவபுவனங்க ளெனச் சில ஆகமங்களுட் கூறியது விஞ்ஞானகலர் பிரளயாகலரின் மல பந்தநீங்கி, அவ்வக்குறிமணக்கும் வாசனைமாத்திரமுடையவராய், அபர

* இந்நூல், இரண்டாஞ்சூத்திரம், முதலாமதிகரணத்து உதாரணம். ௩. † அநு பூதிவிளக்கம், உ௨. ‡ ஷை விளக்கம், ௩அ.

முத்தராகிய அணுசதாசிவர், அட்டவித்தியேசர், மந்திரேசுரர் முதலியோரைநோக்கியென்க.

அற்றேல், அசுத்தமாயைக்குஞ் சுத்தவித்தைக்கும் நடுவே வேறு தத்துவங்களின்மையின், ஆண்டுப் புவனங்களுண்மைக்குப் பிரமாணமில்லையாலெனின்,—அற்றன்று; அவ்விரண்டற்கு மிடையே சுத்தகாலமுதலிய தத்துவங்களுளவென்பது * மேற்காட்டினமாகலின், ஆண்டுப் புவனங்களுண்மைக் கிழுக்கென்னை யென்க.

இனி, விஞ்ஞானகலர் அநாதியே மலபந்தமாத்திரமுடைய விஞ்ஞானகலரும், அநுபவத்தானுதல், விஞ்ஞானத்தானுதல், யோகத்தானுதல், சன்னியாசத்தானுதல், தீக்கையானுதல் இடையேமாயாபந்தங் கன்மபந்தம் முழுவதுநீங்கி, அசுத்தமாயையின்மேலுள்ள புவனங்களி னுகரக்கடவனவாகிய போகங்கட்கேதுவாய்நின்ற மலபந்த மொன்றேயுடையராகிய விஞ்ஞானகலருமென இருவகையர்.

பிரளயாகலரும் அநாதியே மலகன்மங்கண் மாத்திரமுடைய பிரளயாகலரும், இடையே பரிபக்குவவிசேடத்தான் மாயாபந்தமாத்திரநீங்கி, எனையிரண்டுமுடைய பிரளயாகலருமென இருவகையர்.

அற்றேல், விஞ்ஞானகலர் பிரளயாகலரென்பன விஞ்ஞானத்தாற் கலையற்றவர் பிரளயத்திற் கலையற்றவரெனக் காரணக்குறியாகலின், அக்காரணமின்றி இயல்பானும் ஒருமலமுடையாரும், இருமலமுடையாருமுளராயின், அவர் அப்பெயர்பெறுதல் சாலாதாம்பிறவெனின்,—மலமொன்று மிரண்டுமுடைமையாகிய ஒப்புமைபற்றி இவர்க்குரிய பெயரே அவர்க்குமாதல் சாலுமாகலின், ஈண்டிழுக்கின்மை யுணர்க. இது பஞ்சகலைகட்குக் காரணக்குறியாகிய நிவிர்த்திமுதலிய பெயர்கள் காரணமின்றியும் ஒப்புமைபற்றிச் சத்திதத்துவபுவனங்களைந்திற்கும் பெயராயினாற்போலவும், வாயிற்காட்சிக்கே காரணக்குறியாகிய பிரத்தியக்கமென்னும் பெயர் காரணமின்றியும் ஒப்புமைபற்றி மானதக்காட்சிமுதலியவற்றிற்கும் பெயராயினாற்போலவுங்கொள்க.

இன்னும், விஞ்ஞானகலரென்றது † "மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ் ஞானகலர்க்கு" என்பதாகலின், முதல்வன் உண்ணின்றவாறே யுணர்த்த விளையும் விஞ்ஞானத்தாற் கலைநீங்குதற் குரிமையுடையாரென்றும், பிரளயாகலரென்றது எல்லாமொடுங்கும் பிரளயகாலத்தின் முதல்வன் றானே குருவாய் முன்னின்றுணர்த்துதலாற் கலைநீங்கு முரிமையுடையாரென்றும் பொருள்படுமாகலின், அவ்வாற்றான் உரிமைபற்றிய காரணக்குறியாங்கால் ஒப்புமைபற்றாது சிறப்புப்பெயராமாறு காண்க. இப்பொருட்குக் கலையென்றது பந்தமென்னும்பொருட்டு. விஞ்ஞானகலர் எனற்பாலது விஞ்ஞானகலர் என மரீஇயிற்று.

* பக்கம், ௧௧௪. † இந்நூல், எட்டாம்சூத்திரம், இரண்டாமதிகரணத்து உதாரணவெண்பா, ௧.

இஃதறியாதார் பக்குவவிசேடத்தான் இடையே பிரளயாகலர் விஞ்ஞானகலராவாரன்றி, இயல்பானே விஞ்ஞானகலர் பிரளயாகலராவாரில்லையென முரணிக்கூறுவர். அஃதான்மாக்களி னிலக்கணமறியாதார் கூற்றேயாமென மறுக்க. அஃதாமாறு உண்மையதிகாரத்திற் காட்டுமாறுபற்றியுணர்ந்துகொள்க.

* "உரைதருமிப் பசுவருக்க முணரின் மூன்றும்" எனப் பொதுப்படவோதுதலானும், † "மூவகையா ருயிர்வருக்க மலத்தார் கன்மமூலமலத் தார்மூன்று முடையா ரன்றே" என அநாதியேமூவகையாதல் சிறந்தெடுத்தோதுதலானும், இங்ஙனங்கூறும் ஆகமவசனங்களானும் இதுவே தொல்லாசிரியர் கருத்தாத லறிக.

பவுட்கரமுதலியவற்றின் அநாதியே விஞ்ஞானகலர் பிரளயாகலருண்மைக்குப் பிரமாணங்கூறுவார் இடையே அங்ஙனமாவாரை யெடுத்துக்காட்டினாதலின், அதுவேபற்றி மயங்கற்க. விஞ்ஞானகலர் பிரளயாகலர் நுகரக்கடவனவாகிய போகத்துக் கேதுவான கலைகளோடு கூடினும் அவற்றாற் பந்தமுறுதலின்மையின், அகலரேயன்றிச் சகலராகாமை யுணர்க. இன்னும் இவரியல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும்.

இரண்டாமதிகரணமுடிந்தது.

## மூன்றாமதிகரணம்.

மேலையதிகரணத்தின் மலமறைப்பால் ஆன்மா அறிவிலதாகிநிற்றலான் இருளானொளியிழந்தகண்ணுக்குக் காட்டாகிய விளக்குப்போலத் தனக்குக் காட்டாகிய அந்தக்கரணங்களோடு கூடி யறிவதாயிற்று; ஐம்புலனறிந்தும், ஒடுக்கமறிந்தும், உண்டியும்வினையுமின்றிக்கிடந்தும், உணர்த்தவுணர்ந்தும் இங்ஙனம் வேறுவேறவத்தையுறுவதூஉமாயிற்றென விடுத்தவழி, அவ்வாற்றானே ஆன்மாக் கருவிகளோடுகூடியன்றி யறியாதென்றதாகும்; விளக்கோடுகூடியகண் விடயங்களைக்காண்டலேயன்றி வெவ்வேறவத்தையுறுமாறின்மையின், அதுபோல மலத்தின்மறைந்த ஆன்மாக் கருவிகளோடுகூடியவழி, ஒருதன்மையானறிந்துவருதலே பொருத்தமுடைத்து; அவ்வாறன்றி வேறுவேறத்தையுறுதல் சாலாதென்னுமாசங்கையை நீக்கி அதனைவலியுறுத்துதற் கெழுந்தது மூன்றாமதிகரணம்:—

**இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது**

எனவரும்.

கண்ணுக்குக் காட்டாகிய விளக்குப்போல ஆன்மாவுக்குக் காட்டாகிய அந்தக்கரணம் ஒன்றாதலின்றி நால்வேறுவகைத்தாய் வேறுகருவிகளையும்

* சிவஞானசித்தி, எட்டாஞ்சூத்திரம், உ. † சிவப்பிரகாசம், பாயிரம், அ.

அவாய்நிற்றலின், ஒருபுடையொப்பாகிய விளக்கு ஈண்டைக் குவமையாகா தென்னுங் கருத்தான் அமைச்சரசேய்ப்ப என வேறுவமை கூறினார். கூறவே, அமைச்சரோடுகூடிநின்று தன்காரியஞ்செய்யுமரசன் வேறுவேறவத்தைய ஞதல் காண்டுமாகலின், அவ்வாறே அந்தக்கரணங்களோடு கூடிய ஆன்மா அஞ்சவத்தையுறுதல் சாலுமென வலியுறுத்தியவாறு காண்க.

தலைமைபற்றி அந்தக்கரணங்களை அமைச்சரோடுவமிப்பவே, ஏனைக் கருவிகளும் ஏனை அரசுறுப்புக்களோ டொக்குமென்பது பெற்றாம். அஃதா மாறும், ஆன்மா அவற்றோடுகூடி அரசன்போலவத்தையுறுமாறும்

*"கால்கொடுத் திருகை யூட்டி வாழிய
வெங்கிற் றண்டென் விடங்கத் தின்னியற்
பழுக்கழி நிரைத்துச் சிரைக்கயி றசைத்து
மயிர்த்தோல் வேய்ந்து சுவர்த்தசை நிரீஇ
யைம்புலச் சாளரத் தரும்பெறன் மாடத்
தும்பர் மணிக்குடச் சென்னிப் பொங்கிய
கூந்தற் பதாகை நான்குநிலை தழீஇய
வாங்கினி தமர்திற னறையி னன்ற
சாக்கிரஞ் சுவனஞ் சுழுத்தி துரியம்
பிருகுடி நாப்ப ணொருபெருங் கந்தர
மருமத் தாதி வலஞ்சுழி யுந்தி
யுறுநான் கங்குலி யும்பர் வரன்முறை
செவிமெய் கண்வாய் மூக்கெனப் பெயரிய
வாயின் மிலேச்சர் சாரணர் தூதர்
சூத மாகதர் புரோகித ரென்ற
மேதகு புத்தீந் தியமுந் தீதறு
வாக்கொடு † பதங்கை பாயு வுபத்தமென்
னிவுளி மறவரும் யானை வீரருந்
திகிரி தூண்டிய தறுக ணாளரும்
வன்கண் மள்ளருந் தந்திரத் தலைவரு
மென்கரு மேந்தியத் திறனு மெஞ்சிய
வோசை கூட்ட முருவ மிரதங்
கந்த முரைநடை கொடைபோக் கின்பமென்
விடயப் பல்பரி சனமு மிடையாப்
பிராண வபான வுதான வியான
சமான நாக கூர்ம கிருகர
தேவ தத்த தனஞ்சய னென்ற
வீரைந் துறுதிச் சுற்றமு நீதி
சிந்தித் தாய்ந்து துணிந்து செயப்படு
மந்தக் கரண வமைச்சருந் தந்த
முறையுளி வழாது துறைதோ றீண்டிச்

* ஞானமிர்தம், கூ. † பாத பாயுரு வுபத்தம் என்பதும்பாடம்,

சாதுரங் கத்து நீதி யாகிப்
போரத் தாணி சீர்பெறத் துன்னி
வீசுப வீசி விரும்புவ விரும்பி
மாசில் காட்சி மன்ன னீங்கிப்
பல்பரி வாரமும் விள்ளாச் சுற்றமுந்
தந்திரம் புணர்ந்த மந்திர மாக்களும்
பலர்புக லறியா வவைபுகு மரங்கி
னிணைந்தாய்ந்து துணிந்துசெயன் மணந்தினி துணர்ந்து
நனவெனக் கனவி னன்னடை வழாஅ
துரைத்தனன் சுவனத் தகத்தினி திறந்து
மந்திரத் தலைவனும் வன்கடும் பதிபனு
மந்திர பூமி மருங்கு போகிச்
சிந்தை மாத்திரங் கனவலி னனவிற்
றந்துறை சுழுத்தி யின்றே மந்திரத்
தலைவற் றணந்து விலைவரம் பில்லாச்
சிங்கஞ் சுமந்த வைம்பே ரமளிப்
பள்ளி மண்டபத் தானுந் தனுது
திகிரி யுருண்ட பெருவனப் பேய்ப்ப
வுறுதிச் சுற்றத் தெறிவளி யெடுப்ப
வேற்ற மிழிவு சீற்ற மாற்ற
விழிச்சல் பழிச்ச லின்பத் துன்ப
மொழித்தனன் றுரியத் தழித்தினி ததீதத்
தொருவகை யெங்கணு மாகி யிருளிரி
சுடர்த்தொழிற் சாக்கிரத் தாங்க ணுங்கி
னிடைத்தகைத் தெரிதனிற் றெரியு மாறே" என்னும் ஞானமிர்தத்தினுங் காண்க.

அவத்தையினியல்பெடுத்துக்கொண்டமையின் அவத்தைப்படுதற்கேதுவாய் அவ்வவத்தானங்களிற் சென்றுநின்றொழியுங் கருவிமாத்திரைக்கே ஈண்டுவமைகூறி ஏனையவற்றிற்குக் கூறுதொழிந்தாரென்பது.

அற்றாயினும், ஏனைத்தத்துவங்கட்கிவ்வாறுகூறப்படு முவமைகள் யாவையோவெனின், அவற்றுள், கலாதி பஞ்சகஞ்சுகமெனப் பெயர்பெறுதலின், அவை அரசனுக்குக் கவசம்போலுமெனவும், தன்மாத்திரையும் ஐம்பெரும்பூதமுந் தேருர்வானுக்குத் தேர்போல இந்திரியங்கட்கு ஆற்றல் விளைவித்துநிற்குமெனக் கூறுதலின், அவை ஊர்திபோலுமெனவும் உணர்ந்துகொள்க.

ஈண்டுக் கூறப்படுஞ் சத்தாதியாவன ஞானேந்திரியங்களானறியப்படும் விடயங்களேயன்றிச் சத்தமுதலிய தன்மாத்திரைகளல்லவென்பதற்கு வசனுதியோ டொப்பவைத்து, "விடயப்பல்பரிசனம்"எனக் கூறியதே சான்றாதலறிக. இஃதறியாதார் இவ்வவத்தைக்கண்ணிற்கும் முப்பத்தைந்துகருவிகளுட் சத்தாதியென்றது பெரும்பூதங்கட்குக் காரணமாகிய தன்மாத்திரை

போதுமெனப் பெயரொருமை மாத்திரையேபற்றி மயங்குப. இந்திரியங் கட்கு மதுகையைவிளைவிக்குந் தன்மாத்திரைகள் ஆண்டுளவாயின் இந்திரியங் கள் முன்போலன்றி மெத்தெனவறிதற்கு வேறுகாரணமின்மை யுணர்க. அன்றியும், பெரும்பூதமுந் தன்மாத்திரையுங் குடமுங் குடமேற்பூச்சும் போலுமென்று ஆகமங்களிற் கூறுதலின், அவ்விருவகையுள் ஒன்றுநீங்க மற்றொன்று நிற்குமென்றல் பொருந்தாதெனவும், பூதங்கள் நீங்குமெனவே தன்மாத்திரைகளும் நீங்குமென்பது தானேபோதருமெனவு முணர்க. அற் றாகலினன்றே புடைநூலாசிரியரும் பிரேரகவவத்தையிற் றொழிற்படுங் கருவிகளைக் கூறும்வழிப் பூதங்களைக் கூறவே தன்மாத்திரைக ளடங்கு மென்னுங் கருத்தான், * "மாபூத மைந்தி லொன்றும்" என்றொழிந்ததூஉ மென் றுணர்க.

அவத்தையெனப்படுவன பலவுளவாகலின், அவற்றுள், ஈண்டு அஞ்சவத்தையெனப்பட்டன யாவையென்னும் ஐயநீக்குதற்குச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்கும் என விதந்துரைத்தார்.

அவத்திதன் என்னும் வடமொழி வினைமுதன்மேனின்ற வினைப்பெயர். ஆடூஉவறிசொல்லாற் கூறியது வடமொழிமதம்பற்றி.

இவ்வான்மா - இங்ஙனஞ் சகசமலத்தான் உணர்விலதாய்நின்ற ஆன்மா.

அற்றேல், அரசன் ஏகதேசியாகலின், † "கடைதொறும் விட்டு விட்டுக் காவலு மிட்டுத், தனியே யந்தப்புரத்திற்"சேறல்கூடும்; ஆன்மா அவ்வாறே அவத்தைகளினிழிந்தேறுமாயின் வியாபகத்திற் கிழுக்காமாலென் றசங்கை நிகழ்ந்தவழி, வியாபகத்திற் கிழுக்கின்மையுங்காட்டி மேற்கோளைச் சாதித் தற்கெழுந்த ஏது:—

அதுதான் மலசொரூபத்தின்மறைந்து அரூபசொரூபி யாய்நிற்றலான்

எனவரும்.

எனவே, ஆன்மா வியாபகமாயினும் அருவமாகிய தத்துவங்கள் முறையிற் செயற்படும் வேறுபாடுபற்றி அவத்தையுறுதல் சாலுமென்பதாம்; ‡ "சீவனே வியாபி யவத்தையி லிழிந்து திரும்புதல் குற்றமாங் கருவி சேருதல் பிரித லில்லையா முறையிற் செயற்படுங் கருவியே தெரியுந்—தாவி லாவறிவு தங்கின விடமே தகுமுயிர்க் கிருப்பிடம்"என்றதூஉம் இவ்வதிகர ணத்தாற் பெறப்படும் பொருள்பற்றியென்க.

கலைமுதலிய தத்துவங்கள் பரதேகமாதலின், அரூபசோரூபம் எனப் பட்டது. § "தத்துவவன்னரூப"னாதல், வீடுபெற்றுழியின்மையிற் போலி

* சிவப்பிரகாசம், உண்மை, கரு. † சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், ருஉ.
‡ உலகுடைநாயனார் கழிநெடில், ரு. § சிவப்பிரகாசம், உண்மை, கச.

யாய்முடியுமென் றுசங்கைநிகழாமைப்பொருட்டு மலசோரூபத்தின்மறைந்து என மேலையதிகரணப்பொருளை வழிமொழிந்துகொண்டு, அருபசோரூபியாய் நிற்றலான் என்று ஏதுக்கூறினர்.

மறைந்தவழியென்பது ~~மறைந்து~~ மறைந்து எனத் திரிந்துநின்றது.

இனி, அத்தத்துவங்களின் தொழிற்பாடும், முறையானேநிகழும் அவத்தைவேறுபாடும் வகுத்துணர்த்தி அஃதேதுவாதலை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

> ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினிற்
> சென்றணையுஞ் சித்த மிதயத்து—மன்றவே
> யையைந்தா நன்னுதலிற் கண்டத்து வாக்காதி
> மெய்யாதி விட்டகன்று வேறு

எனவரும்.

நன்னுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம், கண்டத்து வாக்காதி மெய்யாதி விட்டகன்று வேறு ஐயைந்தாம், இதயத்துச் சித்தஞ் சென்றணையும், நாபியினில் உயிரணையும், அணையாமூலத்து ஒன்று என்று மாறுக.

இதனாற்போந்தது இலாடத்தானமுதலிய ஐந்தினுநிற்குங் கருவிகள் முறையே முப்பத்தைந்தும், இருபத்தைந்தும், மூன்றும், இரண்டும், ஒன்றுமென்பதாம்.

மன்ற என்பது தேற்றப்பொருட்டாகிய இடைச்சொல். ஏய்தல் - பொருந்துதல். வாக்காதியை மெய்யாதியை என இரண்டாவது விரித்துரைக்க; அஃதீரிடத்துங் கூட்டியுரைக்கப்பட்டது.

வருஞ்சூத்திரத்து "மெய் வாய் கண் மூக்கு" எனச் செய்யுட்கேற்ப மெய்யை முற்கூறுதலின், அம்முறைபற்றி ஈண்டுச் செவியாதியென்னது மெய்யாதி என்றார்.

வாக்காதி மெய்யாதியாகிய புறவிந்திரியம் பத்தோடுங்கூடிய இருபத்தைந்தாவன அவற்றின்விடயமாகிய வசனுதி சத்தாதி பத்தும், அவற்றினுக்குட்கருவியாகிய அந்தக்கரணம் நான்கும், அவற்றோடுகூடி அவத்தையுறுவதாகிய புருடனொன்றும், அஃதவத்தையுறுதற்குரிய மதுகையைவிளைவிப்பனவாய் ஆங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணன்முதலிய வாயுக்கள் பத்துமென விவை.

## அஞ்சவத்தை.

இனி, இவ்வான்மா அவ்வக்கருவிகளோடுகூடி ஆண்டாண் டவத்தையுறுமாறு காட்டுதும்:—

## சாக்கிரம்.

அவ்வக்கருமங்கட்குரிய அரசுறுப்புக்களெல்லாவற்றோடுங்கூடித் தன் காரியஞ்செய்யும் அரசன்போல, இலாடத்தானத்தின், * "மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங்—கருவிக ணான்கு நீங்காக் கலாதிக ளைந்துங் கூடித்" தொழிற்படும் பிரேரகாவத்தையினின்று விடயங்களை அநுபவித்துவரும் ஆன்மா அங்ஙனந் தொழிற்படுங் கருவிகளுட் பொறிகளின் தொழிற்பாட்டின்கண் ஊக்கத்தைவிளைவித் துடனிற்குஞ் சூக்குமந் தூலமாகிய இருவகைப்பூதங்களும், அவற்றின்கூறாகிய தாத்துவிகங்களுந் தமது சத்திமடங்கி வினைக்கிடாகத் தொழிற்படாதுநிற்குமவத்தையின் ஏனைப் பொறிமுதலியன தொழிற்படினும் மதுகையின்மையின், பொறிகளின் தொழிற்பாடு மெத்தெனநிகழுதலான் அவ்விடத்திற் கண்டுங் காணாது, கேட்டுங் கேளாது, தீண்டியுந் தீண்டாது, சுவைத்துஞ் சுவையாது, மூரன்றும் மூரலாது இங்ஙனம் விடயநுகர்ச்சியின் மெத்தெனநிற்குமவத்தை சாக்கிரம். இதற்குத் தானம் புருவநடு. நேத்திரமென்பாருமுளர்; அவர் நன்னுதல் என்பதனை ஆகுபெயராக்கியுரைப்ப.

ஈண்டுப் புறப்பொருள்விடயங்களின் அறிவுந் தொழிலும் மெத்தென நிகழ்தலுண்மையின், அதற்குரிய வாக்காதி மெய்யாதி இந்திரியங்கள், வசனாதி சத்தாதி விடயங்கள், பிராணாதி நாகாதி வாயுக்கள், மனமாதி அந்தக்கரணங்கள், புருடதத்துவம் என்னும் முப்பத்தைந்துகருவி தொழிற்பட்டுநிற்ப, விடயநுகர்ச்சியின் ஊக்கத்தைவிளைவிக்குந் தன்மாத்திரைகளும், ஐம்பெரும்பூதமும், வாயுக்கள் விடயங்க ளொழித்தொழிந்த தாத்துவிகங்களும் ஈண்டுத் தொழிற்படாதொழியுமென்பது பிரமாணமாதல் கண்டுகொள்க.

ஈண்டுத் தொழிற்படுங்கருவி முப்பத்தைந்தெனத் தொகைகூறினமையேபற்றி ஏனை மூலப்பகுதி, கலாதி, சுத்ததத்துவங்களுங் கீழ்நோக்கிய ஐந்தவத்தையிற் றொழிற்படாதொழியும்போலுமென மயங்கற்க; முப்பத்தைந்துகருவிகளுட் புருடனையுமுடன்கூட்டியெண்ணியது புருடதத்துவமுளதாதற் கேதுவாகிய மூலப்பகுதி கலாதிகளின் தொழிற்பாடும், அவற்றைச் செலுத்துவனவாகிய சுத்ததத்துவங்களின் தொழிற்பாடும் ஆண்டுளவென்பதுணர்ந்துகோடற்கேயாமென்க.

கலாதியும், மூலப்பகுதியும் ஏனைக்கருவிகள்போல இடையிடையே புருடனைக் கூடியும், நீங்கியும் அவத்தைக்கேதுவா மியல்பினவன்றி, யாங்கணுமுடனாய்நிற்றலின், அவற்றை வேறெடுத்தோதவேண்டாமையின், ஒருகானின்றும், ஒருகானீங்கியும் அவத்தைக்கேதுவாமியல்புடைய கருவிமாத்திரைக்கே கூறியதுபற்றிக் கலைமுதலியவற்றின் தொழிற்பாடுண்மையி னையம் வாராமைப்பொருட்டும், ஆன்மா வியாபகமாயும் அவத்தையெய்துதற் குரிமையுடைத்தாயவா றுணர்ந்துகோடற்பொருட்டும் புருடதத்துவமுமுடன்

* சிவப்பிரகாசம், உண்மை, கங.

கூட்டி முப்பத்தைந்தென்றாராகலின், அதுபற்றி ஏனைக் கலைமுதலியவற்றின் தொழிற்பாடு யாண்டுமுண்மைக் கிழுக்கின்மையுணர்க.

அற்றேல், போற்றிப்பஃறொடையில், * "மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடப்பக்—கால நியதி யதுகாட்டி—மேலோங்கு—முந்திவியன் கட்டி லுயிர் சேர்த்துக் கலைவித்தை—யந்த வராக மவைமுன்பு—தந்த—தொழிலறி விச்சை துணையாக மானி—னெழிலுடைய முக்குணமு மெய்தி" என மேனைக்குமவத்தையி னியல்புரைப்புழிக் கூறுதலிற் கீழ்நோக்கியவவத்தை யிற் கலை கால முதலியவற்றின் தொழிற்பா டில்லையென்பது பெறப்படும்பிற வெனின்,—படாது; * "மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடப்ப" என்றதே ஆண்டுக் கலைமுதலியவற்றின் தொழிற்பாடுண்மைக்குச் சான்றாதலின், "காலநியதி காட்டி" என்றது மூலத்தின் ஏனைக்கருவிகளின்மையின், ஆண்டு மூடமா யுட்கிடத்தன்மாத்திரைக் கேதுவாய்ச் சூக்குமமாய் நிகழும் அவற்றின் தொழிற்பாடு பின்னர் ஏனைக்கருவிகளோடுகூடித் தொழிற்படுதற் கேதுவாய்த் தூலமாய்நிகழச்செய்யுமென்னும் பொருட்டாகலானென்க.

* "மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடத்த"லாவது பஞ்சகஞ்சுகனு கிய புருடன் மூலாதாரமாகிய அந்தப்புரத்தின் மூலப்பகுதியாகிய மனையா ளைத் தழுவிக்கொண்டு, பஞ்சக்கிலேசத்துள் அவிச்சைமாத்திரத்தை விட யித்துநிற்குமென்பது விழித்துழிச் சுகமாய்த்துயின்றேனென்பதனாற் குறித் துணரப்படுதலின், அங்ஙனந் தமோமயத்தின்மூழ்கி அதனுட்கிடத்தலென் பதாம்; எனவே, கலாதிபஞ்சகஞ்சுக னாகாதவழி, ஆன்மாப் புருடனாதலும், அவிச்சையைவிடயித்தலும், ஏகதேசமாய் ஆண்டுக்கிடத்தலும் பெறப்படா மையின், ஆண்டுக் கலைமுதலியவற்றின் தொழிற்பாடு அவிச்சைமாத்திரத்தை விடயித்தற்கேற்பச் சூக்குமமாய் நிகழுமெனவும், அதற்கேற்பச் செலுத்துங் கருவியைந்தனுட் சிவதத்துவம் மிக்குச்செலுத்த ஏனை நான்குஞ் சூக்கும மாய்ச் செலுத்துமெனவு முணர்ந்துகொள்க.

† "நிலாவு சகலத்தி னின்றபூ தாதி—கலாதி சிவாதி கழித்துக்—குலா வியநூல்—வாட்டிய சாக்கிரத்தின் வாயுவச னாதிகளைக்—கூட்டியதென் மெய்த்தேவே கூறு" என்றது, நிலாவாநின்ற சகலசாக்கிரத்தின்கண்ணே நின் றெழுந்தன பூதங்களும் அவற்றிற்காதிகாரணமாகிய தன்மாத்திரைகளுமே யாம்; ஆகவே, அவையொழிந்தொழிந்த தத்துவங்களெல்லாங் கேவலசாக் கிரத்தின்கண் உள்ளனவாகவும், அவற்றுட் சிறப்புடைய கலாதி சிவாதி யாகிய தத்துவங்களைக்கூட்டியெண்ணித் தொகைகொள்ளாதொழிந்து, நூல் களெல்லாம் புறக்கருவியெனப்படும் வாயுபத்தும், வசனமுதலிய விடயங்கள் பத்துமாகிய தாத்துவிகங்களைக் கூட்டியெண்ணித் தொகைகொண்டது என்னையோவென்றவாறும்.

பூததாதி - உம்மைத்தொகை; அங்ஙனங் கொள்ளாக்கால் "ஆதி" என் பது பொருள்படாமை யறிக. "நின்ற" என்பது அஃறிணைப்பன்மை வினை

* போற்றிப்பஃறொடை, அடி, ௫௩.  † சதமணிக்கோவை, ௭௦.

முற்று. இதற்குவிடை மேலுரைத்தமைபற்றிக் காண்க. இப்பொருள் காணமாட்டாது மயங்குவாருரைப்பனவெல்லாம் போலியென்றொழிக. இன்னும் முரணுவனபோலத் தோன்றுவனவெல்லாம் இவ்வாறே முரணுதவா றுணர்ந்துரைத்துக்கொள்க.

இங்ஙனங் கூறியவாற்றால் தன்மாத்திரையும், ஐம்பெரும்பூதமும், வாயுக்கள் விடயங்களொழித்தொழிந்த தாத்துவிகங்களுமாத்திரையே தத்தஞ்சத்திமடங்கிச் செயலற்றுநின்றொழிய ஏனைப் பொறிமுதலியவெல்லாம் கீழ்நோக்கிய சாக்கிரத்தில் தொழிற்படுமென்பது கண்டுகொள்க.

இன்னும், சாக்கிரமுதல் அதீதமீறாய்ப்படும் ஐந்தவத்தையும், மீள அதீதமுதற் சாக்கிரமீறாய்ப்படும் ஐந்தவத்தையும் அவ்வவ்விடங்களானும், ஆண்டாண்டுத் தொழிற்படுங் கருவிகளானும், ஆண்டாண்டுநிகழும் அநுபவத்தானும் ஒன்றேயன்றித் தம்முள் வேறல்லவாகலான், அத்தன்மையவற்றைத் தம்முள் வேறெனக்கொண்டு, ஆண்டுத் தொழிற்படுங்கருவி வேறு; ஈண்டுத் தொழிற்படுங்கருவி வேறென்றல் பொருந்தாமையறிக. இரண்டு மொன்றாகலானன்றே நூல்களெல்லாவற்றினுஞ் சாக்கிரமுதற்படுமைந்தவத்தையாதல், அதீதமுதற்படுமைந்தவத்தையாதல் இரண்டனுளொன்றேபற்றி வகுத்தோதி, ஏனையதனை அங்ஙனம் ஓதாதொழிந்ததூஉமென்க.

சொப்பனம்.

இனிப், பொறிகளுந் தமது சத்திமடங்கி, அவைமடங்கவே, அவற்றின் வழியவாகிய வாக்காதிகளுந் தமதுசத்திமடங்கி, அவ்விருவகையிந்திரியங்களுந் தொழிற்பாடின்றி ஆண்டுநின்றொழியுமவத்தையின் ஏனை அந்தக்கரணமுதலியன தொழிற்படினும் புறப்பொருள் விடயமாகாமையின், அகத்தே சூக்குமதேகத்தோடுநின்று ஆண்டைக்குரிய இருவினைப்பயன்களை நுகர்ந்து நிற்குமவத்தை சொப்பனம். இதற்குத் தானங் கண்டம்.

ஆண்டுக் கனுக்காண்டலுண்மையின், அதற்குரிய சத்தாதி வசனாதியாகிய விடயங்கள் பத்தும், அவ்வவ்விடயங்களை அறிதற்குஞ் செய்தற்கும் ஊக்கத்தைவிளைவிக்கும் வாயுக்கள் பத்தும், அவை ஆண்டு விடயமாக்குதற்குரிய அந்தக்கரணங்கள் நான்கும், அவற்றுடன்கூடி விடயிக்கும் புருடனுமாகிய இருபத்தைந்துகருவிகள் ஆண்டுளவென்பது அருத்தாபத்தியானுணர்ந்துகொள்க.

கனுக்காண்டல் மேனோக்கியவவத்தையினன்றி ஈண்டில்லையென்பாரும், ஈண்டேயன்றி மேனோக்கியவவத்தையி னில்லையென்பாருமாய் மயங்குவாருமுளர். ஞானாமிர்தத்தின், * "நனவெனக் கனவி னன்னடை வழாஅ—துரைத்தனன் சுவனத்து" எனக் கீழ்நோக்குமவத்தையி னியல்புரைப்புழிக் கூறுதலானும், போற்றிப்பஃறொடையின், † "இருவினையான் முன்புள்ள வின்பத்துன் பங்கண்—மருவும் வகையங்கே மருவி" என மேனோக்கியவவத்

* ஞானாமிர்தம், கூ, அடி, சo. † போற்றிப்பஃறொடை, அடி, சுங.

தையி னியல்புரைப்புழிக் கூறுதலானும், ஆண்டைக்குரிய தத்துவங்கள் ஈரிடத்து மொப்பநிகழ்தலானும், இரண்டுந் தம்முள் வேறல்லவென்பது *மேற்காட்டினமையானுஞ் சாக்கிரத்தினின் றிழியுங்காலும், அதீதத்தினின் றேறுங்காலுங் கண்டத்தானத்திற் கனவுநிகழ்த லுண்டென்பது தெற்றெனவுணர்க.

இக்கனவுநிகழ்ச்சியும் நனவுபோலச் சத்தியமேயென்பது * மேற்காட்டினமையின், கனாக்காண்டல் போலியென்றும், † "கனக்கமு திரதங் காட்டி" எனக் கனவோ டுவமிக்கப்படுதலின், நனவும் அவ்வியல்பிற்றென்றுங் கூறும் மாயாவாதிமுதலியோர் மதங்கள் பொருந்தாமை யறிக.

## சுழுத்தி.

இனி, அந்தக்கரணங்களுந் தமதுசத்திமடங்கிச் செயலற்றவழி, அவை விடயித்தற் கேதுவாகிய வசனாதி சத்தாதி விடயங்களும், பிராணனொழித் தொழிந்த வாயுக்களும், அவற்றோடு செயலற்றுநின்றொழிய, மனத்தின் விருத்தியாகிய சித்தமும், ஆண்டுநிகழு மவத்தைக்குரிய ஆற்றன்மாத்திரைக்கும், உடம்பிற்குக் காவலாதன்மாத்திரைக்கு மேதுவாய் அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணவாயுவும், அவற்றோடுகூடி விடயிப்பதாகிய புருடனுமாகிய மூன்றுகருவிகளுங் கூடித் தொழிற்படுமவத்தையில் நிச்சயித்தற் கேதுவாகிய புத்திதத்துவமுதலியன தொழிற்படாமையான் நனவின்கண் அறியவாராததாய் ஒன்றனைத் தூக்கிச் சிந்தித்துநிற்கு மவத்தை சுழுத்தி. இதற்குத் தானம் இதயம்.

சுழுத்திதுரியங்களிற் பிராணவாயுவியங்குதல் பிறிதொன்றாற் பெறப்படாமையின், ஆங்காரம் ஒருப்பட்டெழுதலாகிய தன்றொழிற்பாட்டின்கட் சத்திமடங்கி நிற்பினும் பிராணவாயுவொன்றனை இயக்குதன்மாத்திரைக்குச் சத்தியுடைத்தாய் அவ்விடங்களி னுடனிற்குமெனவும், அங்ஙனமாயினும் ஒருப்பட்டெழுதற்கண் ஆற்றலின்றிச் செயலற்றொழிதல்பற்றி நீங்கிய கருவிகளோடுவைத் தெண்ணப்பட்டதெனவு முணர்ந்துகொள்க.

## துரியம்.

இனிச், சித்தமுந் தனது சத்திமடங்கிச் செயலற்றொழியுமவத்தையின் ஆங்காரத்தானியக்கப்படும் பிராணவாயுவும், புருடனுமென்னும் இரண்டு கருவியுங்கூடி உடம்பிற்குக் காவலாகிய தன்னையேவிடயிக்குமவத்தை துரியம். இதற்குத்தானம் உந்தி.

## துரியாதீதம்.

இனி, ஆங்காரம் பிராணவாயுவை யியக்குதற்கண்ணுள தாகிய சத்தி மடங்கிச் செயலற்றொழிதலின், பிராணவாயுவுஞ் செயலற்றொழியுமவத்தையிற் பஞ்சகஞ்சுகனாகிய புருடனொன்றுந் தன்னினீங்காத மூலப்பகுதியோடு

* பக்கம், கஙச. † சிவஞானசித்தி, ஆருஞ்சூத்திரம், ரு.

* ,, உஎஎ, பிரிவு, ரு.

கூடி, அவிச்சைமாத்திரையை விடயித்துநிற்குமவத்தை துரியாதீதம். இதற்குத்தானம் மூலம்.

இங்ஙனம் இலாடத்தானத்தினின் றிழிந்து மூலாதாரத்திற் செல்லுங்கால் ஆண்டாண்டுக் கருவிகளை விட்டுவிட்டுச் செல்லுமாறு வகுத்தோதினர். இனி, அங்ஙனம் இழிந்துநிற்கும் புருடன் மூலாதாரத்தினின்றும் மீள இலாடத்தானத்தினெய்துமென்பது வருகின்றவெண்பாவின் அநுவாதமுகத்தாற் கூறுதலின், அங்ஙன மேறுங்காலும், இவ்வாறே ஆங்காங்குநின்ற கருவிகளோடு கூடிக்கூடி அவத்தையெய்திச் செல்லுமென்பது கூறாமையே விளங்கும். அது, * "தண்டாத—புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமணியில்" என்பது முதற்,"சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரிய--ராக்கிப் பணித்த வறம்போற்றி" என்பதீறாகக் கூறும் போற்றிப்பஃறொடையிற் காண்க. ஆண்டுத் "திண்மை மலத்தாற் சிறையாக்கி" என்றது 'ஏனைக்கருவிக ளொன்றுமில்லாத அதீதாவத்தையின் மூலப்பகுதியானெய்தும் பும்ஸ்துவமலமாத்திரையாற் புருடனைப் பிணிப்புறுத்தி' என்னும் பொருட்டேயாம்; நாடோறும்படும் ஐந்தவத்தையி னியல்புரைப்புழிக் கூறுதலானென்க.

இங்ஙனம், பிரேரகாவத்தையி னீங்கிக் கீழ்ச்செல்லுழிப்படும் ஐந்தவத்தைக்கிடமும்,ஆண்டாண்டு முறையிற்செயற்படுங் கருவிக ளிவையென்பதுங் கூறி ஏதுவ்வு வலியுறுத்தப்பட்டது.

இங்ஙனம் அதீதத்தையெய்திய புருடன் மீளப் பிரேரகாவத்தையிற் சாக்கிரத்தையெய்துமாறு அநுவாதமுகத்தா னுணர்த்திப்,பிரேரகாவத்தையின்கண்ணும் முறையிற்செலுத்தும் பிரேரகக்கருவிகளைந்தின் தொழிற்பாடு பற்றிநிகழும் ஐந்தவத்தையுளவென்பதூஉம், அவை இவை யென்பதூஉம், சுத்தாவத்தையும் இவைபோலுண்டென்பதூஉங் கூறி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து—மிலாடத்தே
யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
யவ்வவற்றி னீங்கலது வாங்கு

எனவரும்.

மூலத்தானத்தினீங்கி மேனோக்கி இலாடத்தானத்திற்செல்லுழி, ஆண்டாண்டுப்படும் அவத்தைகளும் மேற்கூறியவாறேயன்றி விசேடமின்மையின், வகுத்தோதல் வேண்டாமையான், இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளம் என அநுவாதமுகத்தாற் பொதுப்படக் கூறினர்.

அவ்வவவிந்திரியம் - ஆண்டாண்டு விடயித்தற்குரிய இந்திரியம். அவ்வவ்விடயம்-ஆண்டாண்டுப் புலனுதற்குரிய விடயம். இந்திரியத்து என்புழி மூன்றாவது விரித்துரைக்க.

* போற்றிப்பஃறொடை, அடி, சஅ.

கண்டு நீங்கல் எனக் கூட்டுக. அதுவே - அப்பொழுதே. அவ்வவலிந் திரியத்து எனவும், அவ்வவற்று எனவுஞ் சுட்டடுக்கிக் கூறுதலின், அத்துறைகள் என்புழியும், அதுவே என்புழியும் அவ்வாறடுக்கிக்கூறிப் பொருளுரைத் துக்கோடலே ஆசிரியர் கருத்தென்ப தறிக.

கண்டதுவே என ஒருமொழியாகவைத் துரைப்பாருமுளர்; குற்றிய லுகரத்தின்முன்வருமுயிர் உடம்படுமெய்பெறுமென்றற் கோத்திலாமையான் அஃதுரையன்மை யறிக.

ஏகாரம் ஏழாவதன்பொருள் குறித்துநின்றது.

அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்டகண்டபொழுதே அயர்த்துவிடுதல். * "ஒன்றன் பாலும்—வருபயன் மாறி மாறி வந்திடும்" என வழிநூலாசிரியர் ஓதியதூஉம் இவ்வியல்புநோக்கி யென்க; எனவே, உணர்த்துமுறைமையிற் புருடன் இலாடத்துநின்று ஒருவிடயத்தையறிவுழி, அதனை விட்டுவிட்டறிவதல்லது இடையறவின்றி அறியமாட்டாதென்பது பெற்றாம்; பெறவே, கருவிகளெல்லாந் தொழிற்படும்வழியும் அங்ஙனம் விட்டுவிட்டறிதற்கேற்பக் கலாதிகளைச்செலுத்தும் பிரேரகக்கருவிகள் ஒன்றும், இரண்டும், மூன்றும், நான்கும், ஐந்துமாக முறைமையிற் செயற்படுமெனவும், அங்ஙனஞ் செயற்படுதல்பற்றி விடயத்தின் நுகர்ச்சிதோறும் அதிநுட்பமாய் ஐந்தவத்தை விரைய மாறிமாறிக் காற்றாடிசுழலல்போல் நிகழுமெனவும், அவையே சாக்கிரச்சாக்கிரமுதலிய பெயர்பெறுமெனவும், இங்ஙனம் அறிதலும் அயர்த்தலுமே புசிப்பும் ஆர்ச்சிப்புமாமெனவும் விடய நுகர்ச்சிக்கண்ணிகழும் அநுபவம்பற்றி நுண்ணுணர்வா னுணர்ந்துகொள்க. † "கரணந் தன்னிற் செயறெறாங் கண்டு கொண்ணீ" என்றார் வழிநூலாசிரியரும். "கரணந் தன்னிற் செயறெறுங்கண்டுகொள்" என்பது கருவிகளான் விடயங்களையறியுஞ் செய்கைதோறும் ஐந்தவத்தையுஞ் செறிதரும் அதனை அநுபவத்தாற் கண்டுகொள் என்றவாறு.

அற்றேல், ஆண்டு முறையிற் செயற்படுங் கருவிகள் யாவையென்னும் அவாய்நிலைநீக்குதற்கு, ‡ "ஐந்துசாக் கிரத்தி னான்கு கனவினிற் சுழுனை மூன்று—வந்திடுந் துரியந் தன்னி லிரண்டொன்று துரியா தீதம்" என வருஞ் செய்யுளின் வகுத்தோதி, இது பிறிதோரவத்தைக் கோதியதுபோலு மென மலையாமைப்பொருட்டுக், ‡ "கரணந் தன்னிற் செயறெறுமுணர்ந்து கொள்ளே" என மறித்துணர்வுநிகழக் கூறினார். இங்ஙனம் மறித்துணர்வித் தோதியதூஉம் அறியமாட்டாதார் தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. ஈண்டு ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்றெனப்பட்டன சுத்தத்துவங்களேயாமென்பது, § "சுத்தக் கருவிக ளைந்துங்கொண் டேசொல் லவத்தை யைந்துஞ்—சித்திக்கும் போது" என்பதனா னறிக.

* சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம், கூச. † சிவஞானசித்தி, நான்காஞ் சூத்திரம், ௩டு. ‡ ஷெ ஷெ ௩கூ. § சிற்றம்பலநாடிகள் கட்டளைக் கலித்துறை, ௩எ.

இங்ஙனம் இடையீடின்றி அவ்வவ்விடயநுகர்ச்சிதோறும் அதிசூக்கும மாய் நிகழுஞ் சாக்கிரத்தினைந்தவத்தையினியல்பு மந்தவுணர்வுடையார்க் குத் தெரித்துணர்த்துதற்பொருட்டுத் தூலவருந்ததிநியாயம்பற்றிக் கைப் பொருள்வீழ்த்தித் தெளிதன்முதலிய தூலத்தின்வைத்துக் காட்டுப. அவ் வுண்மையறியாதார் கைப்பொருள்வீழ்த்தி மயங்கித் தெளிந்தாற்போல்வன மாத்திரையே சாக்கிரச்சாக்கிராதிபோலுமென மயங்கி, இவ்வவத்தை ஒரு வர்க்கொருவர்க்கு ஒருகாலொருகால் அருகிவருமெனத் தமக்கு வேண் டியவாறே கூறுப.

இனி, மலசோரூபத்தின்மறைந்து அரூபசோரூபியாய் நிற்புழிப்படும் ஐந்தவத்தையினியல்புகூறுதற் கெடுத்துக்கொண்ட இவ்வதிகரணத்தின் மல நீங்கிய சுத்தத்திற்படும் ஐந்தவத்தை கூறுதற்கோ ரியைபில்லையாயினும் அவத்தையெனப்படுவன ஈண்டோதியவை மாத்திரையேபோலுமென மயங் காமைப்பொருட்டு வேறும் ஐந்தவத்தையுள; அவை உண்மையதிகாரத்துக் கூறப்படுமென்னுந்துணையே கூறுவார், அதுவாங்கு என் றெழிந்தார். இக் கருத்தே பற்றிப், * "பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற வருளா லாங்கே—குறியொடு மஞ்ச வத்தை கூடுவர் வீடு கூட" என்றெழிந்தார் வழிநூலாசிரியருமென்க.

இக்கருத்தாற் பொதுப்படக்கூறிப்போந்த சுத்தாவத்தையினியல்பு இவ்வதிகரணத்தே வகுத்தோதுதற்கோ ரியைபின்மையானும், மலநீங்கிய ஐந்தவத்தையிற் கருவிகளுளவென்றல் பொருந்தாமையானும், அங்ஙனம் ஆகமங்களிற் கூறாமையானும், சித்தாந்தசாராவளியின் ஞானபாதங் கிரியா பாதங் கூறிப்போந்தபின் யோகபாதங்கூறும்வழி, † அவத்தைக்குக் கருவி கூறியது யோகத்திற்படும் ஐந்தவத்தைக்கெனக் கொள்வதன்றி, ஆண் டைக்கியைபில்லாத ஞானத்தின்கட்படும் ஐந்தவத்தைக்கெனக்கோடல் பொருந்தாமையானும், சிவாகமங்களின் அங்ஙனங் கூறுவனவும் யோகத் தின்கட்படும் ஐந்தவத்தைக்கேயாகலானும், இருணீங்கியவழி ஞாயிற்றைக் காணலுறுவார்க்கு விளக்குவேண்டாமையின், அதுபோலச் சுத்தத்தின்கட் படும்ஐந்தவத்தைக்குக் கருவிகளானுகக்கடவதொன் றின்மையானும், ‡ "கர ணங் தன்னிற் செயறேறு முணர்ந்துகொள்" என மறித்துணர்வித்துக் கூற லானும் ‡ "ஐந்துசாக் கிரத்தின்" என்னுந் திருவிருத்தம் மேற்கூறிய வாறன்றி வேறுபொருடருதற் கேலாமை யறிக.

---

* சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், ௩௫.

† [Grantha-script Sanskrit verse, 4 lines — illegible] என்பது சித்தாந்த சாராவளி யோகபாதத்தில் அவத்தைக்குக் கருவிகூறிய சுலோகம்.

‡ சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம், ௩௬.

இவ்விரண்டு வெண்பாக்களானுங் கூறிப்போந்த முத்திறத் தைந்தவத்தைகட்கு முறையே காரணமாகிய கேவலம், சகலம், சுத்தமென்னும் மூன்றனுள்வைத்துத் தன்னுண்மையாகிய கேவலாவத்தையினிகழுமியல்பு சகசமலத்துணராது என்பதனானே பெற்றும், ஏனைச் சகலாவத்தையினிகழுமியல்பு வருஞ்சூத்திரத்தினும், சுத்தாவத்தையினியல்பு அப்பாலைச்சூத்திரத்தினும் பெறுதும்.

மூன்றுமதிகரணமுடிந்தது.



இலக்கணவோத்தின் முதற்பாதமாகிய

## நான்காஞ்சூத்திரமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# ஐந்தாஞ்சூத்திரம்.

இனி, ஆசிரியர் ஐந்தாஞ்சூத்திரத்திற்கு வார்த்திகப்பொழிப்புரைப் பான் புகுந்து, சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச் செய்கின்றார்:—

**விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்**
**களந்தறிந் தறியா வாங்கவை போலத்**
**தாந்த முணர்வின் றமியருள்**
**காந்தங் கண்ட பசாசத் தவையே**

எனவரும்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு, என்பது சூத்திர மெனக்காட்டி, இனி, அதன் கருத்துரைக்கின்றார்:—

எ - து. சூ - ம். எ-னின். இவ்வான்மாக்களிடத்துத் தமதுமுதலுபகார முணர்த்துத னுதலிற்று

எனவரும்.

மேல் அமைச்சரசேய்ப்பநின் றஞ்சவத்தையெய்துமெனப்பட்ட ஆன் மாக்கள் அங்ஙனம் இருவகையைந்தவத்தையு மெய்துங்கால் அமைச்சர சேய்ப்பநிற்பினும் அவ்வுயிர்கண்மாட்டு அவை நிகழ்தல் அவற்றிற்கு முத லாகிய சிவசத்திசெய்யும் உபகாரத்தையின்றியமையாதென்ப துணர்த்து முகத்தானே மேலையோத்துள் இரண்டாம்பாதத்திற்கூறிய துணைக்காரண முதற்காரணங்கள திலக்கணமுணர்த்துதல் இலக்கணவோத்தின் இரண்டாம் பாதமாகிய இவ்வைந்தாஞ்சூத்திரத்தின் கருத்தென்க.

எனவே, அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்து என உவமைகூறியது பற்றித் தன்காரியஞ்செய்தற்கண் அமைச்சர்முதலிய வுறுப்புக்களோடுகூடிய அரசனேயமையும்; அதுபோல, ஆன்மாத் தத்துவங்களோடுகூடிநின்று ஐந்தவத்தையெய்தி வினைப்பயனுகர்தற்கண் இவ்வான்மாவுந் தத்துவங் களுமே அமையுமாதலின், உலகத்தைத் தோற்றி நிறுத்தி ஒடுக்குதன்மாத்தி ரைக்கேயன்றி, ஈண்டைக்கு முதல்வன் வேண்டாவென் றுசங்கைநிகழு மன்றே: அதனை நீக்கித் தத்துவங்கள் சடமாதலானும், ஆன்மாத் தனக் கென அறிவிலாமையானும், தத்துவங்களோடு கூடியவழியுந் * "தத்துவ வன்னரூபி"யே யாதலானும், அமைச்சர சேய்ப்ப என்றது முற்றுவமை யன்மையானும் அவை ஐந்தவத்தைப்பட்டு வினைப்பயனுகர்தற்கண்ணும்

* சிவப்பிரகாசம், உண்மை, கச.

முதல்வனுபகாரம் ஒருதலையான் வேண்டப்படுமென ஆண்டைக்குரிய திரோதானசத்தியி னியல்புணர்த்துதலின், அஃதாசங்கைபற்றியவியைபெனவும், மேற் சகசமலத்துணராது என்றதனானே கேவலாவத்தையினியல்பு விளக்கி, ஈண்டுச் சகலாவத்தையினியல்பு விளக்குதலின், அது முறைமைபற்றியவியைபெனவும், அடுக்கநின்ற ஆன்மாவினிலக்கணம் முதற்பாதத்திற்கூறி, அதன் மேனின்ற துணைக்காரண முதற்காரணங்களதிலக்கணம் ஈண்டுக் கூறுதலின், அஃதவாய்நிலைபற்றிய வியைபெனவுங் கண்டுகொள்க.

ஆசங்கைபற்றியவியைபானே அதிகரணவியைபும், முறைமைபற்றிய வியைபானே பாதவியைபும், அவாய்நிலைபற்றியவியைபானே ஒத்தியைபும் பெறப்படும்.

மாயையுங் கன்மமுந் திரோதானசத்திக்குக் கருவியாய் அதனு ளடங்குதலின், திரோதானசத்தியினதிலக்கணங் கூறவே மாயைகன்மங்களதிலக்கணமுங் கூறியவாறாத லறிக.

அற்றாகலினன்றே அஞ்செழுத்தின்வைத்து நகாரமாகிய திரோதத்துள் ஒற்றுமைபற்றி மாயைகன்மங்களும் அடங்குமென்றொழிந்ததென்பதூஉம், அஃதுணர்ந்துகோடற்பொருட்டுத்,* "திருவெழுத் தைந்தி லான்மாத் திரோதமா சருள்சி வஞ்சூழ்—தரநடு நின்றது" என்றோதிய புடைநூலாசிரியர் தாமே திருவருட்பயனில், † "இறைசத்தி பாச மெழின்மாயை யாவி—யுறநிற்கும்" என்புழியும் அவ்வாறோதாது, நகரத்துள் மாயைநிற்குமென்றோதியதூஉ மென்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—மேலைச்சூத்திரங்களின் அங்ஙனங் கூறிப்போந்த ஆன்மாவினால் மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன தத்தம்விடயங்களை இஃதின்னதென்றறிந்தும் அங்ஙனம் அறிவனவாகிய தம்மையும், தம்மையதிட்டித்துநின்று செலுத்தும் ஆன்மாவையும் அறியமாட்டா; அக்கருவிகள்போல ஆன்மாக்களுந் தம்முணர்விற்கு முதலாகிய சிற்சத்தியானே மேற்கூறப்பட்ட இருவகையஞ்சவத்தையினின்று வினைப்பயன்களை அறிந்து நுகரும்; அங்ஙனம் அறிவனவாகிய தம்மையும், தம்மையதிட்டித்துநின்று செலுத்துந் திருவருளையும் அறியமாட்டா. இவ்வான்மாக்கள் அங்ஙனஞ் சிவசத்தியான் அதிட்டிக்கப்பட்டுநின்றறிதல், காந்தத்தின் சன்னிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளப்படும் இரும்புபோலக் கரணத்தானன்றிச் சங்கற்பத்தானதிட்டிக்கும் முதல்வன்சன்னிதிமாத்திரையினும்; ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலில்லை யென்றவாறு.

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலில்லையென்பது குறிப்பெச்சம்.

சேவி என்பது சொல்லெச்சத்தால் விருவிக்கப்பட்டது.

* சிவப்பிரகாசம், உண்மை, சக. † திருவருட்பயன், கூ-வது, அஞ்செழுத்தருணிலை, உ.

மெய் வாய் கண் மூக்குச் சேவி என்றது உபலக்கணமாகலின், ஏனைக் கருவிகளுங் கொள்ளப்படும். அற்றாகலினன்றே, * "பொறிபுலன் கரண மெல்லாம் புருடனு லறிந்து" என்றார் வழிநூலாசிரியரும்.

விடயங்களையறிதற்கண் முதல்வன் உடனின்றுசெலுத்துவனாயின் விடயங்களோடொப்ப முதல்வனையும் அறிதல்வேண்டுமென்னும் ஆசங்கையை நீக்குதற்கு அளந்தறிந்து என்றொழியாது அறியாது என்றார்.

ஆங்கவை - ஒருசொல். தம்முணர்வின்றமி என்றது தமதுமுதலென்னும் பொருள்படவந்த ஆறும்வேற்றுமைத் தொகை. தமியருள் என்பது தமியாகிய முதல்வனதருளென ஆண்டைக்குரிய திரோதானசத்தியை யுணர்த்திநின்றது.

அருளால் என விரித்து அளந்தறிந்தறியா என உவமைக்கோதிய வினையைப் பொருளினுங்கூட்டி யுரைக்க. இஃது எடுத்துக்காட்டுவமை.

இதனுள், விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக் களந்தறிந்தறியா என்றது ஓரதிகரணம்; தாந்தமுணர்வின்றமியருள் என்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென் றுணர்க.

---

## முதலதிகரணம்.

அவற்றுள், ஆன்மாத் தாமரையிலையி னீர்போற் பற்றற்றுநிற்ப ஆன்மாவின் சன்னிதியிற் புத்திதத்துவமே ஐம்பொறிவழியான் விடயங்களை அறியுமாகலான் அவ்வாறன்றிக் கருவிகளோடுகூடி ஆன்மாவே அவத்தைப் படுமென் மேற்கூறியது சாலாதென்னுஞ் சாங்கியர்மதத்தை மறுத்து, முன்னர்க் கூறப்படும் பொருட்குப் பொறிமுதலாயினவும் இன்றியமையாவாதலைச் சாதித்தற் கெழுந்தது முதலதிகரணம்:—

ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவா லுணருமென்றது

எனவரும்.

உணர்விற்கேதுவாகிய பொறிகளை உணர்வு என்றுபசரித்தார்.

அஃதெங்ஙனமெனின், மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

அவற்றினான் ஆன்மா ஒற்றித்துக்காணினல்லது அவை ஒன்றையும் விடயியாவாகலான்

எனவரும்.

ஆன் - உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது; † "தூங்கு கையா னோங்கு நடைய" என்புழிப்போல. உம்மை சிறப்பு. அல்லது விடயியா என எதிர்மறைமுகத்தாற் கூறினார் இன்றியமையாமை யுணர்த்துதற்கு.

---

* சிவஞானசித்தி, ஐந்தாஞ்சூத்திரம், க.  † புறநானூறு, உஉ.

அற்றேல், ஆன்மா அவற்றி னொற்றித்துநின்று செலுத்துதலும், அவை விடயித்தல் ஆன்மாவை யின்றியமையாமையும் எற்ருற் பெறுதுமென் னும் ஆசங்கையைநீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

ஐம்பொறியை யாண்டங் கரசா யுள நிற்ப
வைம்பொறிக ளுள்ள மறியாவா—மைம்பொறியிற்
காணுதேற் காணுது காணுமுளங் காணுதேற்
காணுகண் கேளா செவி

எனவரும்.

ஐம்பொறிகள் ஆன்மாவையறியாவென்பது இருவர்மதத்தினு மொக் கும். ஆன்மாவின் சன்னிதிமாத்திரையின் அவை அறிவனவாயிற் சன்னிதி மாத்திரையின் அறிந்துவருகின்றுமென ஆன்மாவையும் அறிதல்வேண்டும், இங்ஙனம் அறியமாட்டாமை பிறிதொன்ருற் பெறப்படாமையின், அருத்தா பத்தியானே அவை ஆன்மாவான் ஒற்றித்துநின்றுசெலுத்தி ஆளப்பட்டுத் தமக்குரிய விடயங்களை அறியுமென்பது பெறப்படுமென்பார், 'அரசாய் ஐம் பொறியை யாண்டங் குளம் நிற்ப ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்' என்ருர்.

'ஐம்பொறியிற்—காணுதேற் காணுது காணுமுளங் காணுதேற்—காணு கண் கேளா செவி' என்றது இன்றியமையாமை கூறியவாறு.

ஆன்மா ஐம்பொறியினீங்கிச் சொப்பனத்தானத்தினெய்தியவழி அன் னவாதல் அறிக. ஐம்பொறியுணர்தல் ஆன்மாவையின்றியமையாமை கூறு வார், ஆன்மாவுணர்தல் ஐம்பொறிகளையின்றியமையாமையும் உடன் கூறினர்.

ஐம்பொறி என்றதும், காணுகண் கேளா செவி என்றதும் உபலக்கண மாகலின், ஏனைக் கருவிகளுங் கொள்ளப்படும்.

நிற்ப என்பது மழைபெய்யக் குளநிறைந்த தென்றுற்போலக் காரண காரியப்பொருட்டாய் நின்றது.

இங்ஙனமுரையாக்கால் இஃது ஏதுவின்பொருளை வலியுறுக்கும் உதா ரணமாதற் கேலாமையறிக.

முதலதிகரணமுடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

மேலையதிகரணத்திற் சாங்கியர்முதலாயினுரை மறுத்துக் கருவிகளின் தொழிற்பாடு ஆன்மாவின் இச்சாஞானக்கிரியைகளை யின்றியமையாமை சாதித்தவழி, அதனை உவமையாகவைத்து, அவையுந் தமதுமுதலுபகார மின்றியமையாமைசாதித்து, ஈசுரவவிகாரவாதிமுதலியோரை மறுத்தற் கெழுந்தது இரண்டாமதிகரணம்;—

இனி இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது எனவரும்.

இது என்றது சாதியொருமை. உம்மை சிறப்பு; இறந்ததுதழீஇயது மாம். இதுவுந் தமது முதலாலே யுணரும் என்பது யான் எம்மூர்புகுவன்; நீ நும்மூர்புகுவை; என்புழிப்போல வேறுமுடிபுகோடலிற் பால்வழுவா காமை யறிக.

அற்றேல், இம்முறைபற்றி முதல்வனுபகாரமும் மேலொன்றனை அவாய் நிற்குமெனப்பட்டு அநவத்தையாமாலென்னும் ஆசங்கையை நீக்குதற்குத் தமதுமுதல் என்று உடம்பொடுபுணர்த் தோதினர். தம்முணர்வின்றமி என்றதும் அது.

எனவே, இம்முறை தமக்கொரு முதலுடையவற்றிற்கேயன்றி அஃ தில்லதற் கின்மையின், அநவத்தையாமாறில்லையென் றுணர்த்தியவா ருயிற்று.

தத்துவங்களும் ஆன்மாக்களுந் தமக்கொரு முதலுடையவென்ப தூஉம், முதல்வனுக்கு அஃதின்மையும் மேற்கூறிப்போந்த சூத்திரங்களாற் பெறப்பட்டனவென்பது கருத்து.

அற்றாயினும், ஐம்பொறிகள் சடமாதலான் ஆன்மா ஒற்றித்துக்காணி னல்லது அவை ஒன்றையும் விடயியா என்றதொக்கும்; அவ்வாறின்றி ஆன் மாச் சேதனமாதலான் விளக்கோடுகூடிய கண்போலப் பொறிகளோடுகூடிய துணையானே உடனின்றுணர்த்துவோனை வேண்டாது விடயங்களை அறிந்து நுகருமென்றற் கிழுக்கின்மையின், இதுவுந் தமதுமுதலாலேயுணரும் எனக் கருவிகளோடொப்பவைத் தோதுதல் சாலாதென்னும் ஆசங்கையைநீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது :—

இவ்வான்மாத் தன்னாலேயுணரு மிந்திரியங்களைப்போ லத் தானுந் தன்னையுணராதுநிற்றலான் எனவரும்.

சடமுஞ் சேதனமுமாகிய வேறுபாடுபற்றித் தம்மு ளொவ்வாவாயி னும், தம்மையுந் தமது முதலையும் அறியமாட்டாமைக்கண் ஐம்பொறியும் ஆன்மாவுந் தம்மு ளொக்குமாகலின், அதுபற்றியே சாங்கியமதத்தை மறுத்து ஆன்மா ஒற்றித்துக்காணினல்லது அவை ஒன்றையும் விடயியா என் பது வலியுறுத்தப்பட்டதாகலான் அவ்வாற்றான் இதுவுந் தமது முதலாலே யுணரும் என மேற்கொண்டது சாலுமென்பது கருத்து.

தன்னை என்பதனை இரட்டுறமொழிந்து, தன்னையுந் தமதுமுதலையு மென் றுரைத்துக்கொள்க.

அற்றேல், அங்ஙனந் தன்னாலுணரு மிந்திரியங்களை ஆன்மாவுக் குவமை கூறின் அவ்விந்திரியங்கட்குவரும் பயன் அவற்றினோன் ஒற்றித்துக்காணும் ஆன்மாவுக்காயவாறுபோல ஆன்மாவுக்குவரும் இன்பத்துன்பப் பயனும் ஆன்மாவா லொற்றித்துக்காணும் முதல்வனுக் காதல்வேண்டு மெனப்பட்டு

வழுவாம் ஆதலான் அஃதேதுவாதல் செல்லாதுபோலுமென்னு மாசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம் :—

மன்னுசிவன் சன்னிதியின் மற்றுலகஞ் சேட்டித்த
தென்னு மறையி னியன்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
ணெண்ணுன் சிவனசத்தை யின்று

எனவரும்.

ஈண்டுக்காட்டிய அநுமானவளவையேயன்றி "முதல்வன்சன்னிதியில் உயிர் சேட்டிக்கும்" என்னும் ஆகமவளவையும் உண்மையின், அதனை மறந்து, முதல்வனுலன்றியும் உயிர்கள் தாமேயுணருமென முரணிக்கூறுதல் சாலாதென்பார், மன்னுசிவன் சன்னிதியின் உயிர் சேட்டித்த தென்னும் மறையி னியன்மறந்தாய் என்றும், ஈண்டுச் சன்னிதி என்றது சிவசத்தி அவ்வக்காரியங்களில் உன்முகமாதலாகிய சங்கற்பமேயன்றி அவிகாரவாதிகள் கூறும் அபிமுகமாத்திரை யன்றென்பார், சொன்னசிவன் கண்ணு என்றும், ஐம்பொறிபோலன்றி அறிதற்பயன் ஆன்மாவுக்கேயாதற் கேதுக்காட்டுவார், உளம் வினையாற் கண்டறிந்து நிற்குங்காண் என்றும், எண்ணுன் சிவனசத்தை யின்று என்றுங் கூறினர்.

இயலும் என்னும் எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. மறந்தாய் என்பது விளியுருபேற்ற பெயர். கண்ணு என்றது காட்டாக என்றவாறு. காந்தங் கண்ட பசாசத் தவையே என்று சன்னிதியை யெடுத்துக்கூறியது ஒருபுடையொத்தல்பற்றியே பிறிதன்றென்பது கருத்து. கண்டறிதல் - ஒருபொருட் பன்மொழி. எண்ணல் - ஈண்டநுபவித்தன்மேற்று. இன்று, ஆகலாற் சிவன் அசத்தை எண்ணுன் எனக் கூட்டியுரைக்க. இன்றுதல் - சத்தெதிர் யாவையுஞ் சூனியமாதல்.

இதனுட் சிவன் என்பது முன்னையது பேரின்பத்துக்குக் காரணனென்னும் பொருட்டாய்த் தனதுசன்னிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபுணரநின்றது. நடுவணது முற்றுணர்வினனென்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய இயைபுகுறித்துநின்றது. ஈற்றது தூய தன்மையனென்னும் பொருட்டாய் அசத்தை எண்ணுமைக்குரிய இயைபு குறித்து நின்றது. ஆதலாற் கூறியதுகூறலன்மையுணர்க. அஃது இம் முப்பொருளுமுடைத்தென்பது சோமசம்புபத்ததிவியாக்கியான முதலியவற்றுட் காண்க. சிவதத்துவவிவேகத்துள் மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையேயாமாறு கண்டுகொள்க. இக்கருத்தேபற்றி, * "மாயை மருவிடான் சிவன வன்க—ணுறைதரா தசேத னத்தால்" என்றுர் வழிநூலாசிரியரும். † "உன்னுதரத் தேகிடந்த கீட முறுவதெல்லா—முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ—மன்னுயிர்க—ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்—செவ்வகையே நின்றசிவன் பால்" என்றதூஉம் இவ்வியல்புநோக்கி.

---

* சிவஞானசித்தி, ஐந்தாஞ்சூத்திரம், கூ. † திருக்களிற்றுப்படியார், அஎ.

அற்றேல், ஆன்மா அங்ஙனங் கண்டறியுங்கால் முதல்வனின் வேருய் நின்றறியுமோ? ஒன்ருய்நின்றறியுமோ? என்னும் ஆசங்கையைநீக்கி, அவ் விருவகையுமன்றிநின் றறியுமாறு உவமையின்வைத் துணர்த்தி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம் :—

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்

எனவரும்.

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது வெய்யோனை யாகாத மீன் என்றது ஆன்மா முதல்வனின் வேருய் விளங்குதலு மின்றி அவனு யொழி தலு மின்றி உடனு யடங்கிநின்றுணர்தற் குவமையாகலான், உவமையடை யைப் பொருளினும், பொருளடையை உவமையினுங் கூட்டிப் பொரு ளுரைக்க.

ஐ - சாரியை. அறியுமைம்புலன் என்புழிப் பெயரெச்சஞ் செயப்படு பொருள்கொண்டது.

நாண்மீன் முதலியவற்றி னொளியெல்லாம் ஞாயிற்ருனுயவொளியே யென்பது வேதநூற்றுணிபென் றுணர்க.

எழுவாய் மேலைவெண்பாவினின்றும் வருவித்துரைக்க.

அற்றேல், ஈண்டுக் கூறியவாற்ருன் விடயநுகர்ச்சிக்கண் ஆன்மாக்கள் தாமேயுணரமாட்டா; முதல்வன்றிருவரு ளுணர்த்தவுணரு மென்ற தொக் கும்; முதல்வனுணர்த்தும்வழி எல்லாவுயிர்கட்கும் எக்காலத்தும் ஒப்ப அறிவுநிகழக் காணுமையின், ஆன்மாக்கடோறும் அங்ஙனம் பலவேறு வகைப்பட உணர்வுநிகழ்தல் உணர்த்துதல்வேறுபாட்டா னுயதெனல் வேண்டும்; வேண்டவே, நிருவிகாரியென்னுஞ் சுருதிகளோடு முரணி முதல்வன் விகாரியாவான் செல்லும்; விகாரமாவது செயற்கைக்குணத் தோடு சமவேதித்தல், செயற்கையாவது யாதானுமொரு காரணம்பற்றி முன்னின்றநிலையின் வேறுபடுதலேயாகலின். இனி, முதல்வன் நிரு விகாரியென்னுஞ் சுருதியும், முதல்வன்சன்னிதியின் உயிர்கள் சேட்டிக்கு மென்னுஞ் சுருதியுந் தம்முண் முரணுமைப்பொருட்டு ஞாயிற்றின்சன்னிதி யிற் றுமரைப்பூ ஒன்று மொக்குளாதலும், ஒன்று அலர்தலும், ஒன்று கூம் புதலும், ஒன்றுவாடுதலுமாகிய பலவேறுதொழில் நிகழவும் அவ்வவற்றிற் குரிய தொழில்வேறுபாடு தன்கணன்றி ஞாயிறு நின்ருங்குநிற்றல் கண் டாம்; அதுபோல முதல்வனும் விகாரமின்றி நின்ருங்குநிற்ப அவன் சன் னிதிமாத்திரையின் ஆன்மாக்கடோறுந் தத்தங் கன்மத்துக்கேற்ப உணர்வு பலவேறுவகைப்பட்டு நிகழ்தலமையுமென விடுப்பின் ஞாயிற்றி னிச்சை வயத்தானன்றி அபிமுகமாத்திரையின் அப்பூக்கள் அங்ஙன மாமாறுபோல உயிர்கண்மாட்டு அங்ஙனம் அறிவுநிகழ்தலும் முதல்வனிச்சைவயத்தா னன்றி அவன் அபிமுகமாத்திரையான் நிகழுமெனப்பட்டு முதல்வனிச்சா

ஞானக்கிரியை வயத்தானே உயிர்களுக்கு இச்சாஞானக்கிரியை நிகழுமென்னும் நுமது சித்தாந்தத்தோடும், சிவசத்தி அவ்வக்காரியங்களில் உன்முகமாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சன்னிதியெனப்படுமென மேலுரைத்தவுரையோடும் முரணி ஈசுரவவிகாரவாதிமதமாய் முடிதலின், இது தேளுக்கஞ்சிப் பாந்தள்வாயின் வீழ்ந்தாலொக்கு மாகலின், அது பொருந்தாமையான் முதல்வன் உணர்த்தும்வழி விகாரியாவான் செல்லுமாலென்னும் ஆசங்கையை, மேல் ஆணை எனக் கூறிப்போந்த தாதான்மியசத்தியினியல்பு கூறுமுகத்தான் நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம் :—

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து

எனவரும்.

எனவே, அவ்வா றியைந்து தன்வயத்தனாய்நிற்கும் முதல்வன் விகாரமின்றியே தனது சத்திசங்கற்ப மாத்திரையான் அனைத்துஞ் செய்வனென்க.

அவ்வாறியைந்து தன்வயத்தனாய்நிற்கும் முதல்வன் விகாரமின்றியே தனது சத்திசங்கற்பமாத்திரையான் அனைத்துஞ்செய்வன் என்பது குறிப்பெச்சம்.

அருளாவது உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவமளித்தற் கண்ணுளதாகிய இரக்கம்.

அன்றே அருளுண்டாம் எனக்கூட்டுக. உம்மை எதிரது தழீஇயது. இன்றியென்னும் வினையெச்சக்குறிப்பு இன்று எனத் திரிந்தது. அன்றே - அசை.

இவ்வியல்பு சித்தாந்தநெறி உணர்ந்தார்க்கன்றி விளங்காதென்பார், அருட்கண்ணார் கண்ணுக் கிரவிபோ னிற்குமர னேய்ந்து என்றார்.

சத்திய துண்மையும், அதனியல்பும் நீக்கமின்றி நிற்கும் என்னும் அதிகரணத்தின் விரித்துரைத்தமையின் ஆண்டுக் காண்க.

இரண்டாமதிகரணமுடிந்தது.



இலக்கணவோத்தின் இரண்டாம்பாதமாகிய

## ஐந்தாஞ்சூத்திரமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# ஆறாஞ்சூத்திரம்.

இனி, ஆசிரியர் ஆறாஞ்சூத்திரத்திற்கு வார்த்திகப்பொழிப்புரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச்செய்கின்றார் :—

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே

எனவரும்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு, என்பது சூத்திரமெனக் காட்டி, இனி, அதன்கருத்துரைக்கின்றார் :—

எ - து. சூ - ம். எ - னின். சத்தும் அசத்தும் வரைசெய்துணர்த்துத னுதலிற்று

எனவரும்.

மேலைச்சூத்திரத்தின் ஐம்பொறிகள் ஆன்மாவால் அளந்தறிந் தறியாதவாறுபோலத் தாந்தமுணர்வின்றமியருளான் அளந்தறிந்தும் அங்ஙனம் அறிவிக்கும் முதல்வனையுந் தம்மையும் அறியமாட்டாவென்பதுபற்றி, அற்றேல், முதல்வன் எவ்வாற்றானும் அறியப்படாதபொருளோவென்று ஆசங்கை நிகழ்ந்தவழி, அதனைநீக்கி, இலக்கணவோத்துட் கூறுதற் கெஞ்சிநின்ற பதிப்பொருளதிலக்கணம் பாரிசேடவளவையா னுணர்த்துமுகத்தானே, மேற்பொதுவியல்பாற் கூறிப்போந்த ஆன்மாவிற்குச் சிறப்பியல்பு பாரிசேடவளவையான் வருஞ்சூத்திரத்தின் விளக்குதற்பொருட்டு அவ்வான்மாவின் வேறாகிய சத்தினையும் அசத்தினையும் இலக்கணத்தாற் றம்முள் மயங்காதவாறு வரைந்துவைத்துணர்த்தி, உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்தல் இவ்வோத்தின் மூன்றாம் பாதமாகிய ஆறாஞ்சூத்திரத்தின் கருத்தென்க.

ஆசங்கைபற்றியவியைபான் அதிகரணவியைபுபெறப்பட்டது. மேலைச் சூத்திரங்களிற் கேவலசகலங்களினியல்பு முறையே விளக்கி, ஈண்டுச் சுத்தத்தினியல்புவிளக்குதல் முறைமைபற்றியவியைபுடைமையான், அதனானே பாதவியைபு பெறப்பட்டது. பிரமாணவோத்துட் கூறிய பொருள்களுள் ஏனைப் பொருள்களுக் கிலக்கணங்கூறி எஞ்சிநின்ற பதிப்பொருளுக் கிலக்கணங் கூறுதல் அவாய்நிலைபற்றியவியைபுடைமையான், அதனானே ஒத்தியைபு பெறப்பட்டது.

பதிப்பொருளுக்குப் பொதுவியல்பு மேற் பெறப்பட்டமையின், ஈண்டுக்கூறு மிலக்கணஞ் சிறப்பியல்பெனக் கொள்க. அற்றாகலினன்றே இதனை

முதற்கட் கூறுது உண்மையதிகாரத்தைச் சாரவைத்து இறுதிக்கட் கூறிய தூஉ மென்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—"தம்முணர்வின்றமி"யாகிய முதற் பொருள் அளவைகளான் அறியப்படுமியல்பிற்றெனின், அங்ஙனம் அறியப் படும் பிரபஞ்சம்போல அழிபொருளாகிய அசத்தாம்; எவ்வாற்றானும் அறி யப்படாதவியல்பிற்றெனின், அங்ஙனம் அறியப்படாத முயற்கோடு ஆமை மயிர்க்கம்பலம்போலச் சூனியமாம்; ஆகலான், இவ்விரண்டுகூறுபாடுமன்றி ஒருவாற்றான் அறியப்படாமையும், ஒருவாற்றான் அறியப்படுதலும் என்னும் இரண்டு வகையானுஞ் சிவமாகிய சத்தாயுள்ளதெனக் கூறுவர் மெய்யுணர்வி னிலைபெற்றுயர்ந்தோர் என்றவாறு.

உணருரு எனின் அசத்து என மாறுக. எலின் என்பதனை உணராது என்பதனோடுங் கூட்டி உரைக்க. இன்மையின் - இல்லையாகலானென்க. முற்றும்மைகள் தொக்கன. அல்லது என்பது வினையெச்சக்குறிப்புமுற்று. அன்றி ஆம் எனக்கூட்டுக. ஒருவாற்றான் அறியப்படாமை பாசஞான பசு ஞானங்களான் அறியப்படாமை. ஒருவாற்றான் அறியப்படுதல் சிவஞான மொன்றானே அறியப்படுதல்.

இரண்டுவகையிற் சிவசத்தாமென இசைக்கும் எனக்கொண்டு கூட்டுக.

பாசஞான பசுஞானங்களா னறியப்படாமையிற் சிவமாதலும், பதி ஞானத்தா னறியப்படுதலிற் சத்தாதலும் பெற்றுமென்பார், இரண்டுவகை யிற் சிவசத்தாம் என்றார். சிவசத்து என்னும் இருபெயரொட்டுப் பண்புத் தொகை வடநூன் முடிபு. சடமாகிய சத்தின் நீக்குதற்குச் சிவசத்தென்றார். சிவசத்து என்பது சித்துச்சத்தென்னும் பொருட்டு. உலகு என்றது உயர்ந் தோரை. எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

இருதிறனுமன்றி இரண்டுவகையானுஞ் சித்துமாய்ச் சத்துமாய்நிற்றல் முதல்வனுக்குச் சிறப்பியல்பென்பது போந்தவாறு கண்டுகொள்க. இன்னும் முதல்வனுக்குரிய ஏனைச்சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இவ்விரண்டனுள் அடங்கும்; அஃதறிந்தடக்கிக்கொள்க.

அற்றேல், * "நின்னைக் காணு மாந்தர்—தம்மையுங் காணுத் தன்மை யோரே" எனவும், † "தன்னாலே தனைய றிந்தாற்—றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே" எனவும், ‡ "மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா றுயிரின் மேவு மருளினி லொளி யாய் நிற்கும்" எனவும் § "உன்னரிய திருவருளை யொழியமல முளதென் றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" எனவும், ¶ "சுடரா லிரு டேடச் சொல்லார்க ளெந்தாய்—சுடரா லிருடேடச் சொன்னாய்" எனவும் ஓதியவாற்றான் ஏனைப் பசு பாசங்களுஞ் சிவஞானத்தானன்றி அறியப்படா

* திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, கூ. † சிவப்பிரகாசம், உண்மை, உஉ. ‡ மேற்படி, உண்மை, உ௦. § மேற்படி, பொது, உச. ¶ சதமணிக்கோவை, சுஉ.

வென்பது போதருதலின், அவையும் அவ்விரண்டுவகையும் உடைமையாற் சிவசத்தாவான் செல்லும் பிறவெனின்,—செல்லா; என்னை? அவை சிறப்பு வகையா னறியப்படுதல் சிவஞானமொன்றுனேயன்றி ஆகாதாயினும் பொதுவகையானே ஏனைஞானங்கட்கு விடயமாதலுண்மையின், ஒருவாற் ருன் உணருருவாதற்கு இழுக்கின்மையான் என்க.

அஃதெங்ஙனமெனிற்காட்டுதும்:—*"ஆன்மாவி னுண்மையுணர்ந்தவர் தமையுணர்ந்தோர்—தருமிது பசுஞானம்பின் சிவஞானந்தனக்குமேலாம்" எனவும், †"காதலினு ஞன்பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானம்" எனவும் ஓதுதலின், பசுஞானத்தானே உண்மைசுட்டும் உணர்விற்கும் நான்பிரம மென்னும் உணர்விற்கும் ஆன்மா விடயமாதல் பெற்ரும். * "வருந்தீப மெனத்தெரிந்தாங்—கொருவி" எனவும், †"இவைகீழ் நாடலாலே" எனவும் ஓதுதலின், ஒருவுதலுங் கீழ்நாடுதலுமாகிய அப்பசுஞானத்திற்குப் பாசம் விடயமாதல் பெற்ரும். இனி, இதனை யான் அறிந்தேன் அறிகின்றிலேன் என்புழி, இது என்னுஞ் சுட்டுணர்விற்கு விடயம் புறத்தே தோன்றுங் குடமும், யான் என்னும் உணர்விற்கு விடயம் அந்தக்கரணங்களை அதிட்டிக்கும் ஆன்மாவும், அறிந்தேனென்னும் உணர்விற்கு விடயம் அவ்வான்மபோதமும், அறிகின்றிலேனென்னும் உணர்விற்கு விடயம் அறியாமையுமேயன்றி வேறின்மையின், இங்ஙனம் உணருமுணர்வு எல்லார்க்கும் ஒப்பநிகழ்கின்றமையிற் பசுபாசங்கள் பாச ஞானத்திற்கு விடயமாதல் கண்கூடாகப் பெறப்பட்டது. மெய்யுணர்வில்லாதார் உடம்பு முதலியவற்றை யானென மயக்கத்தான் மதிப்பினும், இதனையானறிந்தேன் என்புழி, யானென்னும் உணர்விற்கு விடயம் ஆன்மாவே என்பது, ‡ அநுபவந் தன்மாட்டு நிகழ்தல்பற்றி உணர்ந்துகொள்க. இருளின்கட் கயிற்றை அரவென மதித்து இது கிடக்கின்றதெனக் கூறினும் ஆண்டு இது என்னும் உணர்விற்கு விடயமாய்க் கிடந்தது கயிறேயன்றி அரவன்மையான் யாண்டும் அவ்வாறே கண்டுகொள்க.

அற்றேல், சிவனுண்டு, சிவனில்லை எனவும் மெய்யுணர்வில்லாதார் வழங்கக் காண்டலின், சிவனும் பொதுவகையான் அவ்வாறே பாசஞானத்திற்கு விடயமாம்போலுமெனின்,—அற்றன்று; என்னை? குடமுண்டு குடமில்லை என்றவழிக் குடம் புத்திவிருத்தியிற் பரிணமித்துத் தோன்றி ஆன்மாவின் கண்வந்து அநுபவமாமாறுபோல, உலகத்துள்ளார் சிவனுண்டு சிவனில்லை என்றவழிச் சிவப்பொருள் அவ்வாறு பொதுவகையானுயினும் அநுபவத்தானுணரவாராமையின், இன்னோரன்னவாய் உணர்ந்துரைப்பனவெல்லாம் பேதைப்பருவத்துப்பெண் காமநூற்பொருளை உணர்ந்துரைக்குமாறுபோல வாசகஞானமாத்திரையேயன்றி அநுபவஞானமல்லவாகலானென்க. அநுபவஞானத்திற்கு விடயமாவதே ஈண்டு உணருரு என்றெடுத்துக்கொள்ளப் பட்டதென் றுணர்க.

அற்றேல், ஈண்டுக் கூறியவாற்றுனே பசுபாசங்கள் சிறப்புவகையான் உணருருவல்லவாயினும் பொதுவகையான் உணருருவாதலின், முதல்

* சிவஞானசித்தி, ௪-ம் சூ. ௨.　　† மேற்படி, ௯-ம் சூ. ௨.　　‡ அநுபவமதன் மாட்டு என்பதும் பாடம்.

வன்போற் சிவசத்தாவான் செல்லா என்பது பெற்றும். அங்ஙன மாயினும், உணருருவெல்லாம் அசத்தென்றலின், அவையும் அசத்தாவான் செல்லும்; செல்லவே, முப்பொருளுஞ் "சத்து" என்னுஞ் சைவசித்தாந்தத்தோடு முரணி அவசித்தாந்தமாமாலோ வெனின்,—அறியாது கடாயினுய். சற்காரியவாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்திற் சத்தின்வேருய் அசத்தென்ப தொன்றின்மையின், பிரபஞ்சமுஞ் சத்தியப்பொருளேயாமென்பது மேலே காட்டப்பட்டது. அங்ஙனமாகவும், ஒருதன்மைத்தாய் நில்லாது காரியாவத்தையிற் றூலமாய் விளங்கி நின்ற பிரபஞ்சங் காரணவத்தையிற் சூக்குமமாகிய சத்திவடிவாய் விளங்காதுநிற்கும் வேறுபாடுடைமை மாத்திரையே பற்றியன்றே பிரபஞ்சம் அசத்தெனப்பட்டது. அவ்வாறே, காரணவத்தையின் விளங்காது சூக்குமமாய்நிற்குந் தத்தமியல்பினீங்கிக் காரியாவத்தையிற் றூலமாய் விளங்கி நிற்கும் வேறுபாடுமாத்திரையேபற்றிச் சத்தாகிய மாயை கன்மங்களையும், ஒளிமுன் இருள்போலப் பெத்தகாலத்து மேற்பட்டுநின்ற தனது சத்தி முத்தி காலத்து மடங்கிச் சூனியம்போனிற்றன் மாத்திரையே பற்றிச் சத்தாகிய ஆணவமலத்தினையும் அசத்தென்றற் கிழுக்கென்னை யென்க. இக்கருத்தேபற்றியன்றே, * "பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே" எனவும், † "பொய்ம்மாயப் பெருங்கடலுள்" எனவும் பிறாண்டும் இவ்வாருேதியதூஉ மென்க. இஃதறியாது, "பொய்யாவது மெய்க்கெதிர்மறையாவதொன்று" என்னும் நையாயிகர் முதலியோர் மதம் அடாதென்பதூஉம் அபாவவாதத்தில் விரித்துக்காட்டினும். ஆண்டுக்காண்க.

இனிச், சத்தாகிய ஆன்மாவும் அநாதியே தனக்குரிமையில்லாத மலத்தின் மறைப்புண்டு தனது சத்தி மடங்கிச் சூனியம்போற் கிடத்தன்மாத்திரையேபற்றி அவ்வா றசத்தாதற்கும், முத்திகாலத்தின் மறைப்பு நீங்கிய வழித் தனது சத்தி விளங்கித் தனக்குரிய சிவானந்தத்தை அநுபவிக்கும் முதன்மையுடைத்தாய் மீள மலத்தின் மறைப்புண்ணுதலின்றி என்றும் ஒரு தன்மைத்தாதல்பற்றிச் சத்தாதற்கும் பொதுவாய் நிற்றலின், சதசத்தெனப்படும். ‡ "அசத்தைச்—சத்துட னின்று நீக்குந் தன்மையாற் சதசத்தாமே" என்றதும் இப்பொருட்டு. இதனுனே, சத்தாகிய ஆன்மாவை ஒருவாற்றான் அசத்தென்றலும், சத்தாகிய மல மாயை கன்மங்களை மேற்கூறியவாறுபற்றி அசத்தென்றலும் அமையுமாகலின், அவை அங்ஙனம் பொதுவகையான் உணருருவாதல்பற்றிச் சித்தாந்தத்திற் கிழுக்கென்னை யென்றொழிக.

அநாதி முத்தனுகிய முதல்வன் ஏனையபோலத் தனது சத்தி மடங்குதலின்றிப், பெத்தத்தும் முத்தியினும் ஒருதன்மையனேயாய் மேம்பட்டுநிற்றலின், ஆண்டு ஒருவாற்றானும் அசத்தென்றற்கு உரிமையின்மையின், எவ்வாற்றானுஞ் சத்தேயாதலும் எவ்வாற்றானுஞ் சித்தேயாதலும் முதல்வனுக்கேயுரிய இலக்கணமாதல் கண்டுகொள்க. ஆன்மாச் சித்தாயினும் ¶ "அவனுக்

* திருவாசகம், கோயிற்றிருப்பதிகம், ரு. † திருநாவுக்கரசுநாயனர் தேவாரம், திருவாரூர்த் திருத்தாண்டகம், ௬-வது பதிகம், க. ‡ சிவப்பிரகாசம், உண்மை, எ. ¶ சிவஞானசித்தி, கக-ம் சூ. கக.

கிவனுமசித் தாமே'' என்றோதுதலின் முதல்வனைநோக்கச் சித்தாதலின்மையின், எவ்வாற்றானுஞ் சித்தாதலாகிய இலக்கணம் எவ்வாற்றானுஞ் சத்தாதலாகிய இலக்கணம்போல ஆன்மாக்கண்மாட்டுச் செல்லாமை கண்டுகொள்க. உணருருவசத்து என்றவழி, மலம் மாயை முதலியனவும் உணருருவாதலின், அவையும் அசத்தாவான் செல்லுமாலெனக் கடாயினார்க்கு இங்ஙனஞ் செவ்வனே இறுக்கமாட்டாதார் அபாவத்தினியல்பாவது நையாயிகர் முதலியோர் கூறியதேபோலுமென மயங்கி முப்பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுமைப்பொருட்டு ஈண்டுச் 'சத்தசத்து' என்பன 'சித்தசித்து' என்னும்பொருள எனவும், 'சுத்தமசுத்தம்' என்னும்பொருள எனவும் இடர்ப்பட்டுத் தமக்கு வேண்டியவாறே உரைப்ப. மூலமல முதலியன போலப் பிரபஞ்சமும் மெய்ப்பொருளேயாயினுங் காரியாவத்தையினின்ற தூலவடிவம் இத்துணைப்பொழுது நிற்குமென நம்மனோரால் அறியவாராது நீர்மேலெழுத்தும், கனவும், பேய்த்தேரும்போல நிலைபெறுவதுபோலத் தோன்றிக் காட்சிப்புலனாய் விரையக்கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமைபற்றி அசத்தென்றும், அழிபொருளென்றும் மிக்கு வழங்கப்படுமென்க.

அஃதங்ஙனமாக; ஆசிரியர் வடமொழி ஆறுஞ்சூத்திரத்தோதியவாறே * "உணருருவசித்து'' எனச் சூத்திரஞ்செய்யாது உணருருவசத்து எனச் சூத்திரித்தது முதனூலோடு முரணும் பிறவெனின்,—முரணாது; அசத்தெனவே சடம் என்பதுந் தானேபோதருமென்னுங் கருத்தான் அவ்வாறு சூத்திரித்தாராகலானென்க. அக்கருத்துணர்ந்து கோடற்கன்றே, † "அறிபொருளசித்த சத்தாம்'' எனக் கூட்டி உரைத்தார் வழிநூலாசிரியரும். அற்றேல், அம்முறைமைபற்றி அசித்தெனவே அசத்தென்பதுந் தானேபெறப்படுமென்னாமோவெனின்,—என்னாம்; என்னை? அசித்தாகிய மலமாயை கன்மங்கள் நீர்மேலெழுத்து முதலியனபோல நிலைபெறுவதுபோலக் காட்சிப்புலனாய்த்தோன்றிச் சடிதியின் மறைந்துபோ மசத்தாதலின்மையின், என்றும் ஒருதன்மையனாகிய முதல்வனைநோக்க அசத்தெனப்படுமாயினும் அங்ஙனந் தோன்றி மறைவதாகிய பிரபஞ்சத்தை நோக்கச் சத்தேயாமாகலிற் சிறப்புவகையான் உணருருவாகிய அசத்துப் பொதுவகையான் உணருருவாகிய சடத்தின் வியாப்பியமாவதன்றி வியாபகமாத லின்மையாமென்றொழிக. ஈண்டு அசத்தென்றதற்குப் பக்கங் காரியப்பிரபஞ்சமாத்திரையேயென்பது வருஞ்சூத்திரத்திற் காட்டுதும்.

இதனுள், உணருருவசத்தெனி னுணரா தின்மையின் என்பது ஓரதிகரணம்; இருதிறனல்லது சிவசத்தாமென விரண்டுவகையி னிசைக்குமன்னுலகே என்பது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

---

* த்ருஶ்யஞ்சேஜ்ஜடிமாஹ்யஸத்| என்பது வடமொழி ஆறுஞ்சூத்திரம்.

† சிவஞானசித்தி, கூ-ம் சூத்திரம், க.

## முதலதிகரணம்.

அவற்றுள், பிரபஞ்சம்போல முதல்வனும் அளவைகளான் அறியப்படும் பொருளேயாமென்னும் நையாயிகர் முதலியோர் மதத்தை மறுத்தற்கெழுந்தது முதலதிகரணம்:—

ஈண்டு அறிவினு லறியப்பட்ட சுட்டு அசத்தென்றது

எனவரும்.

சுட்டப்படும்பொருளைச் சுட்டு என்முர், ஆகுபெயரான். சிவஞானத்தானறியப்படும்பொருளினீக்குதற்கு அறிவினல் என விசேடித்தார். ஈண்டு அறிவு என்றது உலகத்துள்ளாரறியும் அளவையறிவினை; சுட்டென்றதனற் சுட்டியறிவ ததுவேயாகலின். இஃதுணர்ந்துகோடற்கன்றே, * "அறிவினு லறிந்த யாவு மசத்தாத லறிதி" என்ற புடைநூலாசிரியர், "தொன்மை—யறிவுதா னென்றை முந்தி யதுவது வாகக் காணு—மறிவுகா ணசத்து" என மீளத் தெரித்துணர்த்தியதூஉ மென்க.

அற்றேல், இல்லை என்னும் உணர்விற்கு விடயமாய் † அநுபலத்தியைப் பயப்பிப்பதுமாத்திரையன்றே அசத்தாவது; அவ்வாறன்றி, "இது குடம்" "இஃதாடை" என்றாற்போல உள்ளதென்னும் உணர்விற்குவிடயமாய் ‡ உபலத்தியைப் பயப்பிக்கும் பிரபஞ்சமும் அசத்தேயாயிற் சத்து அசத்து என்னும் பாகுபாடே பெறப்படாமையின், உணருருவாதன் மாத்திரையே பற்றி அறிபொருள் அசத்தென்றல் சாலாதென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி ஆசங்கை நிகழ்ந்தவழி, அதனை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்

எனவரும்.

இல்லை என்னும் உணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பித்தலன்றே அசத்தி னியல்பாவதெனின்,—நன்றுசொன்னாய். அங்ஙனம் அநுபலத்தியைப் பயப்பிப்பது முன் உண்டென்னும் உணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பிக்கும் இராசதகுண மிகுதிப்பாட்டி னின்ற பொருளேயன்றிப் பிறிதன்மையாற், பாவம்போல அபாவமும் பாவப்பொருளின்றன்மை எய்துதற்குக் காரணம் பொருட்பெற்றியாகிய தாமதகுண மிகுதிப்பாடே என்பது பெறப்படுதலிற், பொருட்பெற்றியின் வேறாய் அபாவமென ஒன்றின்மையான் அறிவினல் அறியப்பட்ட சுட்டு அசத்தே என்றற்கு இழுக்கென்னையென்பதாம்.

---

* சிவப்பிரகாசம், உண்மை, ௫. † அநுபலத்தி - இல்லையென்றறியு மறிவு.
‡ உபலத்தி - உள்ளதென்றறியு மறிவு,

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன உபலத்தி அநுபலத்தி என்னும் பொருளவாய் ஆகுபெயரான் அவை நிகழ்தற்கிடனுகிய பொருளை உணர்த்தி நின்றன.

அற்றேல், ஒருசாரன அங்ஙனமாயினும் அறியப்பட்டனவெல்லாம் அவ்வா றசத்தாமென்றல் பொருந்தாது; பிரமாணமின்மையின். அன்றியும், இவ்வேதுவைபற்றி அறியப்பட்டனவெல்லாம் அசத்தெனக்கொண்டு, பதிமுதற் பொருள்களினுஞ் செல்லாமைப்பொருட்டு நித்தப்பொருள்கள் அளவைகளான் அறியப்படாவெனக் கொள்ளின், * "அருளினு லாக மத்தே யறியலா மளவி னுனுந்--தெருளலாம்" என்றற் றொடக்கத்துச் சுருதிகளோடு முரணி, இந்நூலின் மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டுமாகவைத்துப் பதிமுதலிய பொருள்களினியல்பு வழியளவையாற் சாதித்தற்கெழுந்த அதிகரணங்களும் பயனில்வாய் அஃது உமக்கே † அவசித்தாந்தமாமாலோ வென்னும் ஆசங்கையைநீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

> அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
> மசத்தாகு மெய்கண்டா னுயின்

எனவரும்.

அறியாய் என்பது விளியுருபேற்ற பெயர். மெய்கண்டான் ஆயின் அறிவறிந்த எல்லாம் அசத்தாகும் என மாறுக.

அசத்தினியல்பை அறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவாயல்லை என்பார், அசத்தறியாய் என்றும், ‡ "எந்தை—தாட்பால் வணங்கித் தலைநின்று கேட்க" என்பார், கேணீ என்றும், உபலத்திக்கு விடயமானவையெல்லாம் அநுபலதிக்கு விடயமாதல் ஒருதலை யென்பார், அறிவறிந்த வெல்லா மசத்தாகும் என்றும், சத்தினியல்புணர்ந்தார்க் கன்றி அசத்தி னியல்பு உணரவாராதென்பார், மெய்கண்டான் என்றும், ஆய்தற்கருமைநோக்கி ஆயின் என்றுங் கூறினர். கூறவே, உபலத்திப்பட்டனவெல்லாம் அநுபலத்திப்படுதலும் ஒருதலையாகலின், அவ்வாறன்றி என்றும் ஓரியல்பாய் நிற்பதாகிய பதிப்பொருள் அறிவினுல் அறியப்படுவதன்றென்பதூஉம் பெறப்பட்டது. § "போதமிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே பொருந்தினே ரிவர்க் கன்றிக் கதிப்பாற் செல்ல—வேதுநெறி யெனுமவர்கட்" கே நூலாகலின், * "அருளினு லாக மத்தே யறிதலும், அளவினுற் றெருளுதலும்" உண்மை ஞானத்தைத் தோற்றுவிக்கு முகத்தான் அவருக்குப் பயன்படுதலுடைமையின், ஈண்டுக் கூறும் அதிகரணங்கள் பயன்படாமையும் அறியப்படாதென்றதனேடு முரணுதலு மின்மையான், அவசித்தாந்தமாதல் யாண்டையதென்பது கருத்து. இஃதுணர்ந்துகோடற் கன்றே * "ஞானச்செய்தியாற் சிந்தை

* சிவஞானசித்தி, பாயிரம். ரு. † அவசித்தாந்தமென்பது தோல்வித்தானங்களுளொன்று; அஃதாவது தன்சித்தாந்தத்திற் கிணங்காதவற்றைச் சொல்லிச் சித்தாந்தஞ்சாதித்தல். ‡ திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் திருப்பாசுரம், ௪. § சிவஞானசித்தி, பரபக்கம், பாயிரம், கூ.

யுள்ளே—மருளெலா நீங்கக் கண்டு வாழலாம்'' என்பதனை அவற்றின் பின்னாக வைத்தோதியதூஉ மென்க. * "அருளினா லாக மத்தே யறியலா மளவினாலுந்—தெருளலாம்'' எனப் பொதுப்பட வோதி, * "ஞானச்செய்தியாற் சிந்தை யுள்ளே—மருளெலா நீங்கக் கண்டு வாழலாம்'' என விதந்தோதுதலின், "மருளெலா நீங்கச் சிந்தையுள்ளே காண்டல்'' ஞானச்செய்தி ஒன்றானன்றி ஏனையவற்றாற் கூடாதென்பதூஉம், அவையெல்லாம் அநுபவஞானத்தைத் தோற்றுவித்தன்மாத்திரையாற் பயன்படுதலுடைய வென்பதூஉம் போந்தவாறு காண்க. அவை அங்ஙனம் பயன்படுதலும் அநுபவமுடைய தேசிகனருளில்வழிக் கூடாதென்பார், † "மறையினா லயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்—குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற—விறைவனார்'' எனவும், * "அருளினா லாக மத்தே யறியலா மளவினாலுந்—தெருளலாம்'' எனவுங் கூறினார்.

இங்ஙனம் அசத்தென்றது வேறுபொருளெனக் கொண்டு, சத்தாகிய திரவியமுதலிய பிரபஞ்சத்தைஉணருருவாதல்பற்றி அசத்தென்றல் சாலாது; சாலுமாயினும் அதுபற்றி முதல்வன் அறியப்படாத பொருளென்றல் பொருந்தாதென்னும் நையாயிகர் முதலியோரை மறுத்து மேற்கோளைச் சாதித்தவழிச், சற்காரியவாதத்திற் சத்தாகிய பிரபஞ்சத்தை அசத்தென்றல் அவசித்தாந்தமெனச் சாங்கியர் முதலியோர் கூறும் ஆசங்கையை நீக்குதற்கெழுந்ததாகலின், அதனையே ‡ "பெரியாரைப் பிழையாமை'' என்புழிப் போல இரட்டுற மொழிந்துகொண்டு வேறுமோரதிகரணமாக வைத்துப் பொருள்கோடற்பாற்று. அஃதாமாறு:—

[ஈண்டு அறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்தென்றது]

அஃதெங்ஙனமெனின், மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது;—

[அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்] எனவரும்.

காரியாவத்தையிற் றூலமாய் விளங்கி நின்றே காட்சிப் புலனாய்ச் சடிதியின் மறைந்து, காரணாவத்தையின் விளங்காது நிற்கும் வேறுபாடுடைமையான் அங்ஙனம் புலனாகாத காரணமாகிய மாயை முதலியவற்றை நோக்கக் காரியமாகிய பிரபஞ்சம் அசத்தாதல் சாலுமாகலின், **ஈண்டு அறிவினாலறியப் பட்ட சுட்டு அசத்** தென மேற்கொண்டதென்பதாம்.

அற்றேல், அங்ஙனம் நிலைபெறுதல்போலத் தோன்றிக் காட்சிப் புலனாய்க் கணத்தின் மறைந்துபோதன்மாத்திரையே பற்றிச் சத்தியமாகிய பிரபஞ்சத்தை அசத்தென்ப தெவ்வாறென்னும் ஆசங்கையை நீக்கி உவமைமுகத்தானே அவ்வேதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம் ;—

* சிவஞானசித்தி, சுபக்கம், பாயிரம், ௫. † மேற்படி பாயிரம், ௪. ‡ திருக்குறள், ௬௦௰-ம், அதி. பரிமேலழகருரையிற் காண்க.

—அசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றெப்பு
எனவரும்.

அசற்காரியவாதியல்லாத அறிவுடையோனே! அங்ஙனந் தோன்றி மறைவனவாகிய பிரபஞ்சம் அசத்தாமாற்றிற்கு உவமை ஆராயின் நீர்மே லெழுத்து முதலியனவாம் என்பதாம்.

எனவே, அப்போதுள்ளனவாகிய நீர்மேலெழுத்து முதலியவற்றை அங்ஙனே சடிதியின் மறைந்துபோதல்பற்றி அசத்தென்றல் எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையின், அவைபோலப் பிரபஞ்சத்தையும் அசத்தென்றல் சாலுமென்றவாறாயிற்று. * "உண்டுபோ லின்றாம் பண்பி னுலகினை யசத்து மென்பர்" என்றார் வழிநூலாசிரியரும். உண்டுபோலின்றாதல் இத்துணைப் பொழுதின் நசிக்குமென்றறியவாராது நெடுங்காலம் நிலைபெறுவனபோலத் தோன்றிக் காலம்வந்துழி அங்ஙனே சடிதியின் மறைந்துபோதல். † "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்—பெருமை யுடைத்திவ் வுலகு" என் றோதியதூஉம் இவ்வியல்புநோக்கி யென்க. * "அசத்துமென்பர்" என் னும் எதிர்மறையும்மையாற் பொருட்டன்மைபற்றிச் சத்தேயாமென்பது போந்தவாறுணர்க.

அசற்காரியவாதியை அசத்து என்று உபசரித்தார். நிகழ் என்பதனை யாண்டுங் கூட்டுக. குவ்வுருபு விகாரத்தாற்றொக்கது. நீரிலெழுத்துத் தோன்றியபொழுதே மறைந்துபோதற்கும், கனவிற் காட்சி முடிவுபெறுத லின்றி இடையேமறைந்துபோதற்கும், அருஞ்சுரத்தின்கண் முதுவேனிலின் நண்பகற் கடுமைபற்றித்தோன்றி ஞாயிற்றின்கிரணம் முகிற்படலத்தில் மறைந்தவழித் தானும் மறைந்துபோவதாகிய ‡ பேய்த்தேர் ஒருகாரணங் காட்டி மறைந்துபோவதற்கும் உவமையெனக் கொள்க.

நீரிலெழுத்து முதலியன பொய்யென்பாரை மறுத்தற்கு நிகழ் என்று அடைகொடுத்தார். நீரிலெழுத்து எழுதுங்கால் உள்ளதாய்த்தோன்றுத லின், அது பொய்யாமாறு யாண்டையதென்பது. கனவு மெய்யென்பது § மேற்காட்டினும். அன்றியும், கனவின்கண் மகளிரை மணந்து பேருவகை யுற்றுழியும், புலி முதலியவற்றைக்கண்டு அச்சம் மிக்குற்றுழியும் அவ்வநு பவக்குறி தூலவுடம்பின்கண் நிகழக்காண்டலானும் இன்னோரன்னவை மெய் யாதல் பெறப்பட்டமையின், ஏனைக்கனவினிகழ்ச்சியும் அவ்வாறே மெய்யா மென்பது தானேபோதரும். சூக்குமவுடம்பிற் பெறப்படும் அநுபவங்கள் மிக்குநிகழ்ந்துழி ஒற்றுமைபற்றித் தூலவுடம்பினுங் குறிநிகழும்; மிக்குநிக ழாதவழித் தூலவுடம்பிற் குறிநிகழுமாறில்லையென் றுணர்ந்துகொள்க.

---

* சிவஞானசித்தி, ௩-ம்சூ. ௩. † திருக்குறள், ௩௪-ம் அதி. நிலையாமை. ௩.
‡ பேய்த்தேர் - கானல். § பக்கம், ௧௯௪.

இனிப், பேய்த்தேரை நீரெனக்காண்டன்மாத்திரையே பொய்யாவதன் றிப் பேய்த்தேர் பொய்யன்றென்பது கண்கூடாக அறியப்படும். இங்ஙனமா கலின், நீர்மேலெழுத்து முதலியன சத்தேயாகவும் ஒருவாற்ருற் பிரபஞ் சத்தை நோக்க அசத்தென்றற் குரிமையுடையவாயினாற்போல நாத முடி வாகிய பிரபஞ்சமுங் காரணப்பொருளைநோக்க ஒருவாற்ருன் அசத்தென்றற் குரிமையுடைமையின், அதுபற்றிச் சற்காரியவாதத்திற் கிழுக்கின்மை உணர்க.

இவ்வெண்பாவின் அசத்தறியாய் எனவும் அசத்தலாய் எனவும் வேறு வேறு விளித்தலானும், ஆயின் ஓரின் எனவும், அசத்தாகும் இன்ருமாறு என வும் ஒருபொருட்கிளவியை இருகாற் கூறுதலானும், இதனை இங்ஙனம் இரு தொடராகவைத்து,* "இலயித்ததன்னில்" என்பதுபோல இரண்டதிகரணப் பொருள்பட உரைத்துக் கோடலே ஆசிரியர்கருத்தாதலறிக. இவ்வாறன்றி, இதனை ஒருதொடராகவைத்துரைப்பின் அசத்தறியாய் அசத்தலாய் என் றதனல் ஒருபயன்படாமையும், ஆயின் ஓரின் என்று இருகாற்கூறுதலும், அசத்தாகும் இன்ரும் என்று இருகாற்கூறுதலுங் கூறியது கூறலென்னுங் குற்றமாதலும் அறிக.

இனி, ஒருவாற்ருனும் உணரப்படாதபொருள் சூனியமென்பது எல் லாச்சமயத்தாருக்கும் ஒப்பமுடிந்தமையின், ஆண்டு அதிகரணத்திற்குரிய ஐயப்பாடுமுதலியன நிகழாமையான் அதனை வேருே ரதிகரணமாகவைத்து ரைத்திலர். அங்ஙனமாயினும், உணராதபொருளைச் சத்தென்ருற்படு மிழுக் கென்னையோவென மாணக்கர்க்கு ஆசங்கைநிகழாமைப்பொருட்டு வழி நூலாசிரியர்,†"உணராத பொருள்சத் தென்னி லொருபய னில்லை தானும்— புணராது நாமுஞ் சென்று பொருந்துவ தின்ரு மென்றுந்—தணவாத கரும மொன்றுந் தருவது மில்லை வானத்—திணரார்பூந் தொடையு மாமைக்கெழு மயிர்க் கயிறும் போலும்" என விடுத்தொழிந்தா ரென்க.

முதலதிகரணமுடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

மேலையதிகரணத்தின் உணர்பொருளியல்பும் உணராதபொருளியல் பும் உரைக்குமுகத்தான் அசத்தினியல்பை வரைசெய்துணர்த்தியவழி, இரண் டும் இவ்வாருயின் முதல்வனதியல்பு வேறென்னையோவென்னும் ஆசங்கை யை நீக்கிப் பாரிசேடவளவையான் முதல்வனது சிறப்பியல்புணர்த்து முகத்தானே சத்தினியல்பு வரைசெய்துணர்த்துதற் கெழுந்தது இரண்டா மதிகரணம்.

இனி என்றது இவ்வியைபுணர்த்துதற்பொருட்டு. அதிகரணந்தோ றும் இனி என்பன அவ்வவற்றிற்கு மேற்போந்த அதிகரணங்களோ டுளவா

* இந்நூல், முதற்சூத்திரம், உ-ம் அதிகரணத்து உதாரணவெண்பா, க.
† சிவஞானசித்தி, ௯-ம் சூத்திரம், ௪.

கிய இயைபுணர்த்துதற் பொருள என்பது மேலே காட்டினும். யாண்டுங் கடைப்பிடித்துக் கொள்க.

இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதீத கோசரமாய்நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணரற்பாற்று

எனவரும்.

இருதிறனவன யாவை என மலையாமைப் பொருட்டு இவ்விரண்டு தன்மையும் என மேற்போந்தவற்றைச் சுட்டிக் கூறினார். இரண்டு வகையாவன இவை யென்பார், வாக்குமனாதீத கோசரமாய் என்றார். ஈண்டு வாக்கு என்றது வாக்காகிய நாதமுடிவான பாசஞானத்தை. மனம் என்றது அவற்றின் வேறாகிய பசுஞானத்தை. வாக்குமனாதீத கோசரமாய் நின்ற என்றது அவ்விரண்டன் விருத்திகளைக் கடந்து அதீதமாயும், வேறறநின்றுணரும் அநுபவ ஞான மாத்திரையின் விளங்கிக் கோசரிப்பதாயும் நின்ற என்றவாறு. அங்ஙனம் நின்ற பொருள் இதுவென அளவைகளான் அறியவாராமைபற்றி அது எனப் பொதுப்பட மகாவாக்கியத்துட் கூறியதனை அநுவதித்துச், சத்தாயுள்ள சிவமாதலைச் செவியறிவுறுக்கின்றாராகலின், அது சத்தாயுள்ள சிவமே எனப் பிரிநிலையேகாரத்தை மாறிக் கூட்டுக. சத்தென்னும் வடமொழிக்குப் பொருளுரைப்பார், சத்தாய் என்றொழியாது உள்ள என்றார். என்றுணரற்பாற்று - என்று உயர்ந்தோரான் அறியும் பான்மைத்தென்க.

* வாக்கு மனாதீதம் என்றது தமிழ்நூன்முடிபு. மரவடி மராடி என மரீஇயினாற்போல மனவதீதம் எனற்பாலது மனாதீதம் என மரீஇயிற்று. அதீத கோசரம் என்பது வடநூன்முடிபு. வாக்குமனாதீதப்பொருளாகலான் உணருருவாந் தன்மையும், கோசரப்பொருளாகலான் உணராதாந் தன்மையும் இல்லையென்பது பெறப்படுதலின், இவ்விரண்டு தன்மையுமின்றி என்றார்.

அற்றேல், ஐந்தொழிற்கும் வினைமுதலாதல் பற்றி உண்டெனத் துணியப்பட்ட முதல்வன் வாக்குமனாதீத கோசரமாய் நிற்பன் என்பது எற்றாற் பெற்றாம்? ஆகமவளவையாற் பெற்றாமெனின், வழியளவைக் கேலாவாய் ஆகமங்களுட் கூறப்படுவனவெல்லாம் புனைந்துரைவகையானன்றிப் பிரமாணமாகாவால் என்னும் ஆசங்கையை நீக்கி "அவ்வளவி னவன் மகிழுக" என்னும் நியாயம்பற்றி வாக்குமனாதீத கோசரமாய் நிற்றலை வழியளவையாற் சாதித்து, இவ்விரண்டு தன்மையு மின்றி என்றதனை வலியுறுத்துதற் கெழுந்த ஏது:—

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாச மின்மையானும்

எனவரும்.

வாக்குமனங்களான் ஓதியுணரப்படுவதாகிய பிரகாசப்பொருட்கு முன்னர் உண்மை யதிகாரத்துட் கூறப்படுஞ் சாதகங்களினின்று அறியப்பட

* இது வடநூன்முடிபாயின் வாங்மனோதீதம் எனவரும்.

வேண்டுவ தின்மையானும், ஒருவாற்றானு மறியப்படாத அப்பிரகாசப் பொருட்குச் சாதகத்தினின்றும் அறியப்படுந் தன்மை யின்மையின் அதனானவதோர் பயனின்மையானும் இவ்விரண்டு தன்மையு மின்றி வாக்குமனாதீத கோசரமாய் நிற்றல் பெறப்படுதலின், அங்ஙனம் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்பதாம்.

பிரகாசிக்கப்படுவதனைப் பிரகாசம் என்று உபசரித்தார்.

அற்றேல், வாக்குமனாதீதம் என்றல் பொருந்தும், கோசரமாம் என்றல் பொருந்தாது; என்னை? பரப்பிரமப்பொருள் அவிச்சைவயத்தான் ஞாதா எனவும் ஞேயம் எனவும் பகுக்கப்பட்டு, முன்னர்க் கூறப்படுஞ் சாதகங்களினின்று அறியவும் படும்; அவிச்சை நீங்கியவழி ஞாதிரு ஞானம் ஞேயம் என்னும் பாகுபாடு சிறிது மின்மையிற் சத்தென்றாதல் அசத்தென்றாதல் ஒருவாற்றானும் ஞேயமாமாறின்றிக் கேவலம் ஞானமாத்திரையேயாய் நிற்பதொன்றாகலான், என மாயாவாதி மதம்பற்றி ஆசங்கை நிகழ்ந்தவழி, அதனை நீக்கிக் கோசரமாதலை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

எண்ணிய சத்தன் றசத்தன்று மென்றாலென்
கண்ணி யுளதென்றன் மெய்கண்டா—னெண்ணி
யறிய விரண்டா மசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்சிவன்று ளாம்

எனவரும்.

பரமார்த்தமாகிய பரப்பிரமப்பொருள் விவகாரத்திற் கருதப்பட்ட சத்துமன்று அசத்துமன்றென்னின், அங்ஙனம் ஒருபொருள் உண்டென்றல் யாதுபிரமாணங் கருதியோ அதனைக் கூறுவாயாக. பிரமாணமொன்று உண்டென்னின் அதற்கு அது பிரமேயமெனப்பட்டு ஞேயமாவான் செல்லுமென்றஞ்சி ஆண்டு அதற்குப் பிரமாணமில்லை யென்பையாயின், சத்தி னியல் புணர்ந்தோன் ஆராய்ந்தறியிற் காட்சிமுதலிய பிரமாணங்களான் அறியப்பட்டதூஉம், ஒருவாற்றானும் பிரமாண மில்லாத சூனியமு மாகிய இரண்டும் மேற்கூறியவாற்றான் அசத்தேயாம்; ஆகவே * "சத்து" என்னுஞ் சாந்தோக்கியம் முதலிய சுருதிகளோடு முரணுதலாற் சத்தென்றோதப்படும் அறிவினாலறியப்படாத மெய்ப்பொருள் நீகூறுஞ் சூனிய மன்று; சைவவுபநிடதங்களினுஞ் சைவாகமங்களினும் அந்நியமின்றி நின்றுணரும் அநுபவமாத்திரையிற் † கோசரிப்பதென் றோதப்படுஞ் சிவனருளாம் என்க.

அறிய என்னுஞ் செயவெனெச்சம் "மழைபெய்யக் குளநிறையும்" என்புழிப்போலச் செயினென்னும் எச்சப் பொருட்டாய் நின்றது. இரண்டும் என முற்றும்மை விரிக்க. அசத்தாம் எனமாறுக. சித்தாகியமெய் எனக்கூட்டுக.

---

* ஸதேவ ஸோம்யேத³ம் அக்³ர ஆஸீத் ‖ சாந்தோக்கியம், ௬-௨-௧.

† கோசரிப்பது - விடயமாவது.

*"அடியளந்தான்றாயது" என்புழிப்போல அறிவறியாமேய் என்றது வாளா பெயராய் நின்றது.

† "பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவும்" என்றது ஒத்தாகலின், சிவன்றாள் எனச் சிவசத்தியின்மேல்வைத்து உயர்த்துக் கூறினர். ‡ "இறைவனார் கமல பாதம்" என்றதும் அது.

இதனாற் போந்த பொருள் சத்துமன்றி அசத்துமன்றி ஒருபொருளுண்டென்பதற்குப் பிரமாணம் என்னை? பிரமாணமில்லாத சூனிய மெனிற் சூனியமும் அழிபொருளும் என்னு மிரண்டும் அசத்தேயா மென்பது ¶ மேற்காட்டினமையிற் பிரமப்பொருள் அசத்தெனப்பட்டுச் "சத்து" என்னுஞ் சுருதிகளெல்லாவற்றோடும் முரணுதலான், அவற்றிற் சத்தென்றோதப்படும் பரப்பிரமப் பொருள் உண்மைஞானத்திற் கோசரிப்பதென யாங் கூறுஞ் சிவமேயன்றி நீ கூறுஞ் சூனியமன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரம் என்றதனை வலியுறுத்தியவாறு மென்க.

எண்ணி யறிய விரண்டா மசத்தாதல் என்பதற்குப் பிறரெல்லாம் வருகின்ற வெண்பாவிற் கூறும் பொருள்படக் கூறியதுகூறலாக்கி உரைப்ப.

அற்றேல், முதற்பொருள் கோசரமாமென்றல் பொருந்தும், வாக்குமனாதீதம் என்றல் பொருந்தாது; என்னை? பிரகாசித்த பொருளையும் வேறோராற்றான் அறிதுமென வேட்கைசென்றுழி அவ்வாற்றாற் புதுவதாய்ப் பிரகாசிக்கவேண்டுதலின், பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவதின்மையின் என்னும் ஏது யாண்டுஞ் செல்லாமையானும், மனத்தோடு கூடாதவழி ஆன்மாவுக்கு அறிவுண்டாகலின்மையின், வாக்குமனாதீதமாயவழிக் கோசரமாமா றின்மையானும், ஆன்மாவினோடு கூடி மன முதலிய கருவியாதல் அவற்றோடு கூடி ஆன்மாவாதல் அறியுமென்றல் பொருத்தமுடைத்தாதலான்; என நையாயிகர் முதலியோர் கூறும் மதம்பற்றி ஆசங்கை நிகழ்ந்தவழி அதனை நீக்கி, முதற்பொருள் வாக்கு மனாதீதமாய் நின்றே கோசரமாமென வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

> உணர்ப வசத்தாத லொன்றுணரா தொன்றை
> யுணருநீ தானுணரா யாயி—னுணருமுனிற்
> றானிரண்டா மெய்கண்டான் றன்னா லுணர்தலாற்
> றானிரண்டாய்க் காணுன்றமி

என்வரும்.

நின்னால் அறிவனவாகிய கருவிகளெல்லாம் மேற்கூறியவாற்றான் அசத்தாம். அசத்தெனவே, அசித்தாதலும் பெறப்பட்டது. ஆகலின் அவற்றுள் ஒரு கருவியும் முதற்பொருளை அறியமாட்டாது; அவற்றான் அறிகின்ற நீதானும் அதனை அறியமாட்டாய்; நீ ஆய்ந்தறிவையாயின் அங்ஙனம் அறி

* திருக்குறள், கூக-ம் அதி. மடியின்மை, ௧௦. † தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௫௩. ‡ சிவஞானசித்தி, சுபக்கம், பாயிரம், ௪. ¶ இச்சூத்திரத்து முதலதிகரணத்திற் காண்க.

யப்படும் பொருள்கள்போல உணர்கின்ற நின்னின் வேறும். ஆகவே, அதனுன் உனக்காவதோர் பயனின்றும். அற்றேல், மனம் நீங்கியவழி ஆன்மாவுக்கு அறிவுண்டாமாறில்லை. உண்டாயினும் அதனு லறிவுழியும் வேறாய் நின்றன்றி அறிதல் கூடாதாலெனின்,—அற்றன்று; ஆன்மாவுக்கு இயல்பாயுள்ள அறிவினை மன முதலிய கருவிகள் விளக்குவனமாத்திரையேயன்றி முன்னில்லதனை உண்டாக்குவனவல்லவென்பது * மேற் காட்டப்பட்டதாகலின், அவ்வுண்மையை உணர்ந்தோன் சத்தாயுள்ள சிவத்தை அறியுங்கால் தன்னறிவு அதன்கணடங்கி அதுவாய் நின்று அதனுனே அதனை அறியுமாகலான் ஏனைப் பொருள்களைப்போல அத்தனிமுதற்பொருளை வேறாய்நின்று அறிவானல்ல னென்க.

இதனுற் போந்தது சத்தாகிய சிவம் பாசஞானத்தானுதல் பசுஞானத்தானுதல் அறியப்படாது, அறியப்படிற் குட முதலியனபோல ஆன்மாவின் வேறாய் அவிச்சையான் வருஞ் சுகதுக்கங்களைப் பயப்பதன்றி அவிச்சையினீங்கிய † பெரும்பயனைப் பயவாதாகலான், ஆன்மா அறியு முண்மையை உணர்ந்தோன், ஏனையபோல அசித்தல்லாத தனிமுதற்பொருளாகலான் அதனை அதனுனே ஒற்றித்துநின்று காண்பனென நையாயிகர் முதலியோரை மறுத்துக், கோசரமாமா றுணர்த்தி, வாக்குமனுதீதம் என்றதனை வலியுறுத்தியவாறு மென்க.

உணர்ப என்பது அகரவீற் றஃறிணைப் பன்மைப் பெயர்ச்சொல். ஒன்றும் என முற்றும்மை விரித்துரைக்க. உனின் என்னும் இன்னுருபு நீக்கப் பொருட்கண் வந்தது. ஒற்றிரட்டியாமை புறனடையாற் கொள்க. இரண்டாதல்-வேறுதல். தான்-அசை. தமியை என இரண்டனுருபு விரித்துரைக்க. உணராயாயின் என ஒருதொடராக்கி யுரைப்பின் உணராத பொருளில்லையென விடுத்தல்வேண்டும். அவ்வாறன்றி இரண்டாம் என விடுத்தல் உணர் பொருட்கன்றி ஏலாமையின், அஃதுரையன்மை அறிக.

அற்றேல், ‡ தன்னையறிந்தாலன்றித் ‡ தன்னு லறிதல் கூடாமையால் தன்னுலே தனையுணரும் என்பது § தன்னைப்பற்றுதலென்னுங் குற்றமாமாகலின், அவ்வாறன்றி வாக்குமனுதீதமாய் நிற்கின்ற பொருள் யோக நூலிற் கூறுந் தியானபாவனைகளிற் கோசரமாமென்றலே பொருத்த முடைத்தெனப் பாதஞ்சலர்மதம்பற்றி ஆசங்கை நிகழ்ந்தவழி, அதனை மறுத்துத் தன்னுலன்றிக் கோசரமாகாதென்பதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

பாவகமேற் றனசத்தாம் பாவநா தீதமெனிற்
பாவகமா மன்றென்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்
பாவித்த றனென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்

என வரும்.

---

* நாலாஞ்சூத்திரத்திற் காண்க. † பெரும்பயன்-சிவபோகம். ‡ ஈண்டுத் தன் என்பன பாதஞ்சலர்கொள்கைப்படி சிவத்தையுணர்த்தின. § தன்னைப்பற்றுதல்-ஆன்மாச்சிரயம்.

நீ கூறும் பாவனை ஏனைப் பாவகங்கள் போல மன முதலியவற்றோடு கூடிநின்று பாவிக்கும் பாவனையோ? அவற்றோடு கூடாதுநின்று பாவிக்கும் பாவனையோ? இரண்டுமின்றிப் பாவிக்கும் பாவனையோ? இம்மூவகையு மின்றிப்பசித்தவனுண்டவனாகப் பாவிக்குமாறுபோல உணராதபொருளை உணர்ந்ததாகவைத்துப் பாவகஞ் செய்வதாகிய பாவனையோ? கூறுவாயாக என இந்நான்கினையும் முறையே மறுத்தவாறு. அற்றேல், ஒருவாற்றானும் பாவனைக் கெய்தாத பொருள் சூனியமாம்போலும் என்பாரை நோக்கித், தன்னருளாற் பாவிப்பதுபரம் இல்பாழ் எனச் சித்தாந்தஞ் செய்தார்.

ஏனைப் பாவகங்கள் போல மன முதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும் பாவகமெனின், அறிவினாலறியப்பட்டசுட்டாகலான், அசத்தேயாம். தான்-அசை. பாவகமாம் என்பது பாவனைமாத்திரையேயன்றிப் பயனில்லை என்பதாம். பாவகத்தைப் பாவித்தல் என்புழிப் பாவித்தல் என்பது செய்தலென்னும் பொருட்டாய் நின்றது; * "உண்ணலு முண்ணேன்" "வாழலும் வாழேன்," † "கறைமிட றணியலு மணிந்தன்று" என்புழிப்போலக் கொள்க. மேலை வெண்பாவில் தன் என்றது தனது சத்தியை ஆகலான், தன்னைப்பற்றுதலென்னுங் குற்றமாமாறு யாண்டையதெனை விடுப்பார், தன்னருளாற் பாவிப்பது என்றார். தன்னருளை அறியுமாறும் அதனாற் பாவிக்குமாறும் ‡ உண்மையதிகாரத்திற் பெறப்படும்.

அற்றேல், பாவனையும் பாசஞான பசுஞானங்களானவதாகலிற் சத்தாகியசிவம் அதன்கட் கோசரமாகாதென்றலொக்கும், அங்ஙனமாயினுந் தன்னருளாற் பாவிக்கவேண்டா; "ஆன்மாப் பசுத்துவம் நீங்கிய முத்திகாலத்திற் சிவனைப்போல முற்றுமுணர்தன் முதலிய எண்குணங்களுமுடையன்" என்று ஆகமங்களிற் கூறுதலின், ஆண்டு ஆன்மாவினறிவு சிவஞானத்தோடொத்த ஞானமேயன்றிப் பசுஞானமன்மையான் அவ்வறிவா னறியப்படுங் கோசரப் பொருளென்றலே பொருத்தமுடைத்தெனச் சிவசமவாதிமதம் பற்றி ஆசங்கை நிகழ்ந்தவழி, அதனை மறுத்துத் தன்னருளா னன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

அறிய விரண்டல்ல னுங்கறிவு தன்னு
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு

எனவரும்.

சிவாகமங்களில் அத்துவிதமே கூறுதலின், ஆன்மாத் தன்னறிவா னறிவதற்குத் தன்னின் வேறல்லனாகலானும், சமமாகலின்றித் தூல சூக்கும முறையில் தன்னறிவிற் குள்ளனாய் நிற்றலிற் றன்னறிவினா லறிய வாரானாகலானும், தன்னறிவிற்கு வியஞ்சகமாய் அறிவித்து உயிர்க்குயிராய் நிற்ற

* கலித்தொகை, பாலை, உஉ. † புறநானூறு, க. ‡ ஒன்பதாஞ்சூத்திரத்துட் காண்க.

லானும் அத்தன்மையனாகிய முதல்வனைப் பசுத்துவ நீங்கிய வழியும் ஆன்மாவினறிவு தான் கண்டறிந்து தன்குணியாகிய ஆன்மாவுக்குக் கோசரமாம்படி காட்டமாட்டாது; தன்னின் வேறின்றித் தனக்குண்ணிற்றலிற் றன்னாற் காணப்படாது தனக்குக் காட்டாகி நின்ற ஆன்மாவை யறியமாட்டாத கண்ணொளியைப்போல என்பதாம்.

அல்லன் படான் உள்ளான் நின்றான் என்பன குறிப்பேதுக்களாகலின், இங்ஙனம் ஒருதொடராகக் கொண்டுரைக்க. ஆங்கு-அசை. அறிவினுள்ளான் ஆகலின் அறியப்படான் என்க. காட்டு-முதனிலைத் தொழிற்பெயர். கண்டறிந்து காட்டாது எனக் கூட்டுக. கண்டறிதல்-*"குழிந்தாழ்ந்தகண்" என்புழிப்போலச் சிறப்பின்கண் வந்த மீமிசை. மெய் அறியாக் கண் என்ன என இயைத்துரைக்க. கண்முதலியவற்றை நோக்க ஆன்மாச் சத்துச்சித்தென்பது தோன்ற மெய் என்றார்.

கண்ணறியா மெய்யென்ன என்றதற்குக் கண்ணையறியாத உடம்புபோலென்று உரைப்பாருமுளர். உடம்பிற்கு அறியுந்தன்மை யின்மையானும், உடம்பிற்குக் கண் காட்டாத லின்மையானும் ஈண்டு உவமையாதற் கேலாமையின், அது போலியுரையென்றொழிக.

அற்றேல், அத்தன்மையனாகிய முதல்வனைத் தலைப்பட்ட ஆன்மா அம்முதல்வனோ டொன்றாய்ப் போதலேயன்றித் தானென வேறு நிற்குமாறின்மையிற் றன்னருளா லான்மா உணருமென வேறுபடுத்துக் கூறுதல் பொருந்தாதெனச் சிவாத்துவிதசைவர் மதம்பற்றி ஆசங்கைநிகழ்ந்தவழி, அதனை மறுத்து, முத்தியின் முதல்வனோடிற்கு மியல்பு உணர்த்துமுகத்தானே தன்னருளாலுணரு மான்மாவிற் கோசரமாமாறு வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

அதுவென் னு மொன்றன் றதுவன் றி வேறே
யதுவென் றறியறிவு முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல னுங்க றிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம்

எனவரும்.

சத்தாகிய சிவம் மாயாவாதிகள்போல் அநிருவசனமாய்க் கூறப்படுவதொன்றன்மையான் முத்தியினும் அறிபொருள் வேறுண்டென்பது துணியப்படுமென்பார், அது வென்னு மொன்றன் றதுவன்றி வேறே யதுவென் றறியறிவும் ஆங்குண்டு என்றும், அங்ஙனமறிதல்பற்றி யொன்றாய் நிற்றற்கிழுக்கில்லை யென்பார், அதுவென் றறிய விரண்டல்லன் அறிவு ணிற்ற லறியுமறிவே சிவமு மாம் என்றுங் கூறினார்.

உம்மை சிவமாயுஞ் சிவமாகாமையை விளக்கி நின்றது. அறிவும் என்ற உம்மை இறந்ததுதழீஇயது. அதுவென்னுமொன்றன் றாகலான் என ஏதுப்பொருள்படக் கொண்டுரைக்க.

---

* நாலடி, தூய்தன்மை, ௩.

இங்ஙனம் ஐந்துவெண்பாக்களானும் முறையே வாக்குமனாதீதம் என்றல் பொருந்தும் கோசரமென்றல் பொருந்தாதென்னும் மாயாவாதிகளையும், கோசரமென்றல் பொருந்தும் வாக்குமனாதீத மென்றல் பொருந்தாதென்னும் நையாயிகர் முதலியோரையும், பாவனைக்குக் கோசரமாதலேயன்றித் தன்னா லுணரும் உணர்விற்குக் கோசரமென்றல் பொருந்தாதென்னும் பாதஞ்சலரையும், பசுத்துவம் நீங்கியவழி ஆன்மாவின் ஞானத்திற் கோசரமாமென்னுஞ் சமவாத சைவரையும், முத்தியிற் சிவமேயன்றி ஆன்மாவென வேறின்மையின், ஆன்மாவுக்குக் கோசரமாமாறு யாண்டையதென்னுஞ் சிவாத்துவிதசைவரையும் மறுத்து, வாக்குமனாதீத கோசரமாய் நிற்றலை வலியுறுத்துதலின், இவ்வைந்தும் ஒருபொருண்மேல் வந்தவாறு காண்க.

## சிவசமவாதம்.

### ~~மதம்~~.

அற்றேல், பொருந்துமாற்றோடுஞ் சிவாகமங்களோடும் முரணுதலான் ஏனையோர் கூறுவனவெல்லாம் பொருள்படாமையின், அவற்றை மறுத்தல் அமையும்; சமவாதசைவரில் ஒருசாரார் முத்திகாலத்தில் அறுவகைக் குணங்களும் விளங்கிச் சதாசிவக்கடவுளோ டொப்பநின்று ஐந்தொழில் செய்வன் என்பதூஉம் அவற்றோடு முரணுதலின், மறுக்கப்படுவதேயாம். மற்றொருசாரார் கூறுஞ் சிவசமவாதம் பொருந்துமாற்றிற்குஞ் சைவாகமங்கட்கும் இயைபுடையதுபோலத் தோன்றுதலின், அவ்வொருசாரார்மதம்பற்றி ஆன்மாத் தன்னறிவானே முதல்வனை அறியுமென்றல் பொருத்தமுடைத்துப்போலும்; அஃதெங்ஙனமெனின், அவர் கூறுமாறு:—

*"ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தென" என ஆசிரியர் உருவக முகத்தானோதிய ஆன்மாவி னியல்பை வழிநூ லாசிரியர்,—

† "மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி வளர்ந்தவனை யறியாது மயங்கி நிற்பப்—பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப் பெருமையொடுந் தானாக்கிப் பேணு மாபோற்—றுன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத் துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை—மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்"

என உவமமும் பொருளுமாகவைத்து விளங்கக் கூறினார். கூறவே, மன்னர் சாதியிற் பிறந்த மன்னவன்மகன் அம்மன்னவனோ டொப்ப எல்லாக் குணங்களுமுடையனாகியும் வேடரிடத்தே தங்குதலான் அவ்வாற்றலை அறியாது மயங்கிச் சிறுமைப்பட்டு நின்று, பின் அதனை அவனறிந்து பலவகை உபாயங்களினாலும் அவ்வேடரினின்றும் பிரித்து 'நீ என்மகனாகலின் நீயும் நானும் ஒருசாதியேம், என்னோடொப்ப அரசுரிமைசெய்யும் எல்லா வாற்றலு முடையை' எனத் தெரிவித்து முடிசூட்டித் தன்னைப்போலாக்கி உதவி செய்த வழி, முன்னின்ற சிறுமை நீங்கி, அங்ஙனம் எல்லாப்

---

*இந்நூல். அ-ம் சூ. † சிவஞானசித்தி, அ-ம் சூ. க.

பெருமையுமுடையனாய், மீள அவனுதவியை வேண்டாது தானே சுதந்திரனாய் இன்புற்றுவாழ்வன்; அதுபோல, ஆன்மாச் சிவனோடொப்ப முற்றுமுணர்தன் முதலிய எண்குணங்களையுமுடையனாயும் ஐம்புலவேடர் சூழலிற் பட்டமையாற் சிவனுந் தானும் ஒருசாதியெனத் தன்னாற்றலை அறியாது செயற்கைவயத்தாற் சிற்றுணர்வுஞ் சிறுதொழிலுமுடையனாய்ச் சிறுமைப்பட்டு நின்று, பின்பு சிவன் குருவை யதிட்டித்து நின்று சிவதீக்கை செய்து செவியறிவுறுத்தி அவ்வைம்புலவேடரினின்று நீக்கி, என்னோடொப்ப நீயும் எண்குணங்களுமுடையை எனத் தெரிவித்துத் தன்னைப்போலாக்கி உதவி செய்தவழிச், செயற்கையானாகிய சிற்றறிவு சிறுதொழில்களை விட்டு, இயற்கையானுள்ள பேரறிவு பெருந்தொழில்களின் பகுதியவாகிய எண்குணங்களுமுடையனாய், மீளவுஞ் சிவன் உதவிசெய்ய வேண்டாமையிற் பரதந்திரம் நீங்கிச் சிவனைப்போலத் தன்வயத்தனாய்நின்று இன்புற்று வாழ்வனென்பது பெறப்படுதலானும், *"உன்னைப்போ லென்னைப் பாவிக்கமாட்டேன்" எனவும், †"எண்குணத்து ளோமே" எனவும் பிறண்டும் ஆன்றோரெல்லாம் இவ்வாறே கூறுதலானும், சிவாகமங்களில் ஆண்டாண்டுச் சிவசமமாதலே முத்தியென்று ஓதுதலானும் முத்தனாகிய ஆன்மாத் தன்னறிவானே சிவன் முதலிய எல்லாப் பொருளையும் அறிவன் என்பது.

இன்னும், "முத்திபெற்ற ஆன்மாக்கள் சிவனோடொப்பர், மலம் முழுவதும் நீங்கி விளங்கிய சிற்சத்தி யுடையராகலின், யார் யார் சிவனோடொப்பாரல்லர், அவர் அவர் முழுவதும் மலம் நீங்கிய சிற்சத்தியை யுடையரல்லர்; சகலர் முதலியோர் போல." என்னும் வழியளவையானுஞ் சிவசமமாதலே முத்தியென்பது பெறப்படும்.

இன்னும், முத்தியிற் சிவசமமாகாதவழிச் சுதந்திரமுடையனல்லனாம்; ஆகவே, ‡"பரதந் திரியங் கஷ்ரகழி பந்தம்" என ஞானமிர்தத்திற் கூறுதலானும், சிவாகமங்களினும் இவ்வாறே கூறுதலானும் முத்தியும்பெத்தமெனப்பட்டு வழுவாம். அற்றேல், முத்தி பெற்ற ஆன்மாக்கள் சிவசமமாயவழிச் சிவனைப்போல ஐந்தொழில் செய்வரெனல் வேண்டும், செய்வரெனக்கொள்ளின் அநேகேச்சுர வாதமாய் முடியுமாலெனின்,—முடியாது. ஐந்தொழில் செய்யுங் கருத்தாவாதற்றன்மை சிவனுக்குக் கருணையா னுள்ளது; முத்திபெற்ற ஆன்மாக்களுக்குத் தள்ளப்படாமையா னுள்ளதாகலான், ஐந்தொழில் செய்வதற்குச் சிவனொருவனே அமையுமாகலின், அவர் மிகைபடச் செய்யுமாறின்மையா னென்பது. இக்கருத்தானன்றே, §"உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரிய னுயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்குமுரித்தே". என வழிநூலாசிரியரும் ஓதினர். ஆண்டுச் "சிவாநுபவம்" என்றது ஆகுபெயரால் தன்னுடையதாகிய சிவத்துவத்தை அநுபவித்தல் என்றவாறும்.

இன்னும், நூல்களின் ஆண்டாண்டுச் சிவசமமாதல் முத்தி என்பதனோடு முரணுவனவாகத் தோன்றுவனவெல்லாம் முரணாதவாறு ஆகுபெயராக

* சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம், திருவொற்றியூர், ௫. † திருநாவுக்கரசுநாயனார் தேவாரம், பொது, மறுமாற்றத்திருத்தாண்டகம், ௧௦. ‡ ஞானமிர்தம், ௧௨, அடி, ௧௦. § சிவஞானசித்தி, ௧௧-ம் சூ. ௧௦.

வைத்துப் பொருள்கொள்ளப்படுமென்று. இங்ஙனஞ் சைவரி லொருசாரார், உருவ சமவாதிகளிற் சிறுபான்மை வேறுபடப் புதிதாக ஒரு மதங்கொண்டு, தாங்கள் கொண்டதற்கேற்பச் சிவாகம வாக்கியங்களையுந் தமக்குவேண்டிய வாறெல்லாம் இடர்ப்படுத்தி நலிந்து பொருள்கொண்டு உரைசெய்து தாமே தம்மில் வியந்து கொள்வாராகலான், ஆண்டு இழுக்கென்னையெனின்; நடுவு நிலைமையுடையராய்ச் சிவாகமங்களை ஓதியுணர்ந்தார்க்கு அவருரைப்பன வெல்லாம் இந்திரசாலம்போல ஆரவாரமாத்திரையே யன்றி நிலைபெற மாட்டாவாகலின், அவை ஒருபொருளாகவைத்து மறுக்கற்பாலனவல்ல; ஆகலானும், எத்தன்மையராயினுஞ் சிவதீக்கை யுடையராய்ச் சிவாகமத்தில் விதித்தவாறொழுகி அகச்சமயத்தி னிற்றலின், அவரைப் பழிக்க லாகாமை யானும் அவரறிவு அவ்வளவிற்றென்று போதலே பொருத்தமுடைத் தென் றொழிக.

அற்றேல், வழியளவைக்கும் ஆகம வளவைக்கும் இயைவனபோல இத்துணை வலியுறுத்தி அவருரைத்தனவெல்லாம் ஆரவாரமாத்திரையாய்ப் போமாறு யாங்ஙனம்? அதனை அறியுங் குதூகல முடையேன் என்பையாயிற் சிறிது காட்டுதும்:—

* மறுப்பு.

மன்னவன் மகனை ஆன்மாவுக்கு உவமை கூறியதுபற்றிச் சிவசமமாதல் முத்தியெனக் கொண்டாய்; ஈண்டு வினவுதும்; மன்னவன்மகன் வேடரி னீங்கி மன்னவனைச் சார்ந்தவழி மன்னவ னேவலினின்று பணிந்தொழுகு வானோ? மன்னவனோடொப்பத் தன்னாணையும் உடன்செலுத்தி அரசாட்சி செய்வானோ? கூறுவாயாக. மன்னவனேவலினின்று பணிந்தொழுகுவ னெனில், தாட்டாந்திகப் பொருளினும் அவ்வாறு கொள்ளப்படும். படவே அஃது எம்மனோர் சித்தாந்தமாகலின், உனக்கு அவசித்தாந்தமாம். இனி, மன்னவனேவல்வழிநின்று அரசாட்சி செய்யினும் அது பரதந்திரமாவதன்றிச் சுதந்திரமன்மையான் உனக்கேலாது; அதிகாரத்தைத் தன்மாட்டு வைத்து மன்னவன் வறிதேயிருப்பத் தான் அரசாட்சி செய்வனெனினும் அது பாசுபதர்மதமாய் முடியுமாகலின், உனக்குச் சித்தாந்த மன்று; மன்னவனோடொப்பத் தன்னாணையும் உடன்செலுத்திச் சுதந்திரனாய் அரசாட்சிசெய்வ னென்னின், அஃது அநேகேச்சுரவாதி மதமாய் முடியும்; அன்றியுந் தந்தையைப் பணிந்தொழுகலின்றி அவன் செய்த நன்றியும் மறந்து அவனோடொப்பத் தானும் அரசாட்சி செய்வனாயின் அவன் நன்மக்களுள்வைத்தெண்ணப்படாமையின், ஈண்டைக்குவமையாதல் செல்லாது. இனிப், பணிந் தொழுகுதலுமின்றி அரசாட்சி செய்தலுமின்றித் தனக்கு வேண்டும்போகங்களை நுகர்ந்துகொண்டு சுதந்திரனாய் இருப்ப னெனினும், †"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பவாகலின், வேடரோடு கூடி மயங்கிச் சிறுமைப்பட்டு நின்ற தன்னை அவரி னீக்கிப் பெருமையொடுந் தானாக்கிப் பெரியதோர் உதவி

* இச் சிவசமவாதமறுப்புச் சிவாக்கிரபாடியத்தும் பத்தாஞ்சூத்திரத்திற் காண்க; (பக்கம், ௪௮எ.) † திருக்குறள், ௧௧-ம் அதி. செய்ந்நன்றியறிதல். ௧௦.

செய்து தந்தையுமாயினுனை அவனேவல்வழி நின்று பணிந்தொழுகாது தானும் மன்னவனோடொப்பச் சுதந்திரமாய்த் தன்னாணையும் உடன்செலுத்தி அரசாட்சி செய்யும் மகனோடொப்பவனே ஆகலான், ஈண்டைக் கேலாதென்றொழிக. அஃதேல், அநாதிமுத்தனாகிய சிவனும் ஆதிமுத்தனாகிய ஆன்மாவும் ஒருசாதியென்ப துணர்ந்துகோடன் மாத்திரைக்கே மன்னவனையும் அவன் மகனையும் ஒருபுடை யொப்புமைபற்றி எடுத்துக்காட்டியதெனின்,— நன்றே கூறினாய்! ஒருசாதிமாத்திரையால் உனக்குப் போந்த தென்னை? மன்னவனும் அவன்மனைவியும் மன்னர்சாதியேயாயினும் மன்னவன் செய்யும் அரசாட்சி அவன் மனைவியுஞ் செய்வா ளென்றற் குரிமையின்மையின், அதுபோலச், சிவனும் ஆன்மாவுஞ் சித்தாதல்பற்றி ஒருசாதியேயாயினுஞ் சிவனோடொப்ப ஐந்தொழில் செய்யும் உரிமையுடையனல்லனென் றொழிக.

இன்னும், மன்னவன்மகன் ஏனையோர்போல ஆணையிற் பிறழுதலின்றி அந்தரங்கவுரிமை யுடைமையின், மன்னவன் செய்யுந் தண்டத்தை நோக்கச் சுதந்திரனேயன்றிப், பரதந்திரமுடையனல்லனாயினும், மன்னவனாணைவழி நிற்கும் உரிமை யுடைமையான் மன்னவனை நோக்கப் பரதந்திரனேயாவன்; அதுபோல, முத்தனாகிய ஆன்மாவும் ஏனைய ஆன்மாக்கள்போலப் பந்த முற்றுப் பிழைபடுதலின்றி இறைபணிவழுவாது நிற்கும் அந்தரங்க வுரிமை யுடைமையான் இலயம் போகம் அதிகாரம் என்னும் அவத்தைபற்றிப் பொதுவியல்பினின்ற முதல்வன் செய்யும் ஐந்தொழிலை நோக்கச் சுதந்திரனே யன்றிப் பரதந்திரனல்லனாயினும் இறைபணி வழுவாது நிற்றல் பற்றி இலயம் முதலியவற்றி னீங்கித் தன்னியல்பினின்ற முதல்வனைநோக்கப் பரதந்திரனே யன்றிச் சுதந்திரனல்லனென்றறிக. இஃதுணர்ந்து கோடற்கன்றே சர்வஞானோத்தரத்திற் "சிவன்" என்றும் "பதி" என்றும் வேறுவைத் தெண்ணியதூஉ மென்க. சிவாகமங்களி லோரோ ரிடத்தில் "ஆன்மாப் பெத்தத்திற் பரதந்திரன், முத்தியிற் சுதந்திரன்" எனவும், "பரதந்திர னாதல்பற்றி மல வுண்மை துணியப்படும்" எனவுங் கூறுவன வெல்லாம் பொதுவியல்புபற்றிப் பதியென நின்ற முதல்வன் செய்யும் ஐந்தொழிலி னகப்பட்டு நிற்றலும் அவற்றி னகப்படாது நிற்றலும் பற்றியே பிறிதில்லையாகலின், அதுபற்றித் தன்னியல்பினின்ற முதல்வனை நோக்கியுஞ் சுதந்திரனாவன்போலுமென மலையற்க.

இவ்வுண்மை உணராததூஉ மன்றி, விஞ்ஞான தீக்கையின் உடல் பொருள்களோ டொப்பச் சற்குரவன்கையிற் றானஞ்செய் தளித்தும், தானஞ் செய்தளித்தபொருளென் றறியும் அறிவு சலியாமைப் பொருட்டு நாளும் நாளுஞ் சிவபூசையிற் செபகன்மங்களோடொப்பச் *"சிவோதாதா" என்னும் மந்திரமோதி ஆன்மாவையுஞ் சிவனுடைமையாகப் பூநீரொடுந் தானஞ்செய்தளித்துந் தாஞ் சுதந்திரரே சிவனுடைமையல்லர் எனப் பிணங்கிப் பரமசற்பாத்திரத்திற் றானஞ்செய்தபொருளை அபகரிக்க நினைக்கும் நினை

* சிவோதாதா என்னும் மந்திரம், ஶிவோ தா³தா ஶிவோ ஹோக்தா ஶிவ ஸ்ஸர்வமித³ம் ஜக³த் | ஶிவோ யஜதி ஸர்வத்ர யஶ்ஶிவஸ்ஸோஹமேவ து || என்பது.

வுடையாரோடு பேசினும் உய்தியில்லதோர் கொடிய பாவமா மென்றொழிக. தம்மைத் தானஞ்செய்தலாவது தாஞ் சிவனுக்குப் பரதந்திரரென் றறிந்து "அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யாராகி" நிற்றலேயாமென் றுணர்க.

அற்றேல், மலவாசனை நீங்குதற்பொருட்டுத் தம்மைத் தானஞ்செய்ததாகப் பாவித்தன் மாத்திரையே ஆகலின், அதுபற்றி இழுக்கென்னை யெனின், அங்ஙனமாக; அப்பாவனை உண்மையோ? போலியோ? எனக் கடாயினார்க்கு உண்மையெனின், பரதந்திரராதற் கிழுக்கில்லை; போலியெனின், பசித்தவன் உண்டான்போல எத்துணைப் பாவகஞ் செய்யினும் பசிநீங்குதல் கண்டிலமாகலின், அதுபோலப் போலிப்பாவனையான் மலவாசனை நீங்குமாறின்மையின், அது வீண் தொழிலாய் முடியும்.

இன்னும், பாவனை போலியென்பார்க்குப் * பாவனையின் வழியவாய்ச் செய்யும் மந்திரக்கிரியைகளும் போலியாய் முடியும்; முடியவே, பாவனை முதன் மூன்றனும் அவர் செய்யுஞ் சிவதீக்கையுஞ் சிவபூசையுஞ் செபந் தியானம் முதலிய எல்லா ஆசாரங்களும் அங்ஙனம் போலியாய்ச்செய்வது தமக்கானும் பிறர்க்கானும் பயன்படுமாறின்மையின், மாணாக்கரை வஞ்சித்துப் பொருள்கொண்டு தம்முடம்பை யோம்புதற்பொருட்டுச் செய்யும் ஆரவாரமாத்திரையே போலுமென் றொழிக.

அற்றேல், கருடபாவனை செய்வோன் கருடனாதல் கண்டிலம்; அப்பாவனையால் விடந்தீருதல் கண்டாமாகலின், போலிப் பாவனையும் பயன் றருமென்பது பெறப்படுமாலெனின், அறியாது கூறினாய். மாந்திரிகன் தன்னுடம்பைக் கருடனாகப் பாவிப்பானல்லன்; மற்றென்னையோவெனின், கருடனுக்கு அதிதெய்வமாகி நிற்கும் மந்திர மூர்த்தியாகத் தன்னான்மாவைப் பாவிப்பன். அங்ஙனம் பாவித்தவழிச் சார்ந்ததன்வண்ணமாய்நிற்கு மியல்புடைய ஆன்மா ஆண்டு அம்மந்திர ரூபியாய் நிற்றற் கிழுக்கின்மையின், அதுபற்றி ஆசங்கையின்மை உணர்க.

இன்னும், பாவனைகளும் உபாசனைகளுங் கற்பித்துக்கொண்டு செய்யும் போலியென்றன் மாயாவாதிகூறுங் கூற்றாகலின், அது சைவசித்தாந்தத்திற் கேலாமை யறிக.

அற்றேல், ஆன்மாச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்கு மியல்புடையன் என்றற்கும், அதனானே தன்னாற் கணிக்கப்படும் மந்திரரூபியாய் நிற்பன் என்றற்கும், விலங்குபுள்ளுக்கு அதிதெய்வமாய்நின்று அதிட்டிக்கும் மந்திர முண்டென்றற்கும் பிரமாணமுண்டாயினன்றே அதுபற்றிக் கருடபாவனை முதலாயின உண்மைப்பாவனையென்று கொள்ளப்படுமாகலின், இவற்றிற்குப் பிரமாணம் என்னையெனின், சர்வஞானோத்தர முதலிய ஆகமங்களே பிரமாணமாமென் றறிக. அஃதெங்ஙனமெனிற் காட்டுதும்:—

சர்வஞானோத்தரத்திற் பசுவும், பாசமும், அதிகாரஞ்செய்து நிற்பதாகிய பதியும், அதிகாரத்தி னொழிந்து தன்னியல்பி னிற்பதாகிய சிவமும்

* பாவனையின்வழி அவர்செய்யும் என்பதும் பாடம்.

எனப் பதார்த்தம் நான்கென் றெடுத்துக்கொண்டு, அவற்றிற்குத் தனித்தனி இலக்கணமு முணர்த்திப், பின்பு அதுகேட்ட அறுமுகக்கடவுளுக்கு அங்ஙனம் அப்பிரமேயமாய் ஒன்றோடு உவமிக்கப்படாததாய் அதிசூக்குமமாய் வியாபகமாய்த் தன்னியல்பினிற்குஞ் சிவத்தை அறியுமா றெங்ஙனமென்று ஆசங்கை நிகழாமைப் பொருட்டுச் "சிவப்பொருள் அத்தன்மைத்தாயினும் அதனை அறிதற்கு உபாயங் கூறுகின்றாம். அவ்வுபாயம் வாதிகளெவரானும் அறியப்பட்டதன்றாய்க் குருபரம்பரையின் அறியப்படுவது, ஒருவர்க்கும் யாம் கூறினேமல்லேம், அதனை நீ கேட்பாயாக" என்று அதன் பெருமை எடுத்துக் காட்டி, அநாதிமுத்தனாய் நின்ற சிவனுக்குரிய தன்மைகளும், அத்தன்மையனாகிய சிவனே நான் எனச் சிவோகம்பாவனை செய்யுமாறும், அவ்வாறன்றித் துவிதபாவனை செய்தாற்படு மிழுக்கும் விளங்க விரித்துணர்த்தித், "துவித பாவனையைக் கைவிட்டுச் சிவோகம் என அத்துவித பாவனை செய்வோன் ஏகதேசமாய்நின் றறிவதாகிய சிற்றறிவினீங்கி முழுவதும் வியாபகமாய்நின்றறிவதாகிய முற்றுணர்வு விளங்கிச் சிவனையறிந்து தான் சிவனேயாவன்" எனச் சிவனை யறிதற்கு உபாயங்கூறிப், பின் அதுகேட்ட அறுமுகக் கடவுளுக்கு, மேல் உத்தேசங் கூறும்வழியும் இலக்கணங் கூறும்வழியுஞ் சிவனும் ஆன்மாவும் இருபொருளெனவைத் தோதுதலிற் சிவனின் வேறாகிய ஆன்மாச் சிவோகமெனப் பாவிக்கும் அத்துவித பாவனையாற் சிவனே தானாக ஐக்கியமாமா றெங்ஙனமென்று ஆசங்கை நிகழாமைப்பொருட்டு, "ஆன்மாத் தன்னியல்பை அறியாது பசுத்துவத்தோடுகூடியவழிப் பசுவாய் நின்றான்; அதுபோலத் தன்னை அறிந்து சிவத்துவத்தோடு கூடியவழிச் சிவமாய் நிற்பதற்கு ஐயமில்லை. ஆகலாற் றன்னையுந் தலைவனையும் பராபரபேதத்தானும், தூலசூக்குமபேதத்தானும் எப்பொழுதும் பயின்றறிதல்வேண்டும்" என் றோதி, அற்றேல், ஆன்மாவினியல்பு தனித்துநில்லாது பசுத்துவத்தோடுகூடிப் பசு எனவும், சிவத்துவத்தோடு கூடிச் சிவம் எனவும் பல தன்மைப்பட்டு நிற்குமா றென்னையென்று மீளவும் ஐயுறுமைப் பொருட்டு, "அதவா" என்றெடுத்துக்கொண்டு, தெளிவு பிறவாது மீள மீள மயங்குதற் கேதுவாய வார்த்தைகளை விகற்பித்து இங்ஙனம் பலவாகச் சொல்லி யென்னை யெனக்கூறி யொழித்து, எல்லாச் சங்கைகளும் நீங்கித் தெளிவு பிறத்தற் கேதுவாகத் தொகுத்து ஒருவார்த்தையினுணர்த்துவான் புகுந்து, [illegible] என்றருளிச்செய்தார்.

இதன்பொருள், "ஆன்மா அங்ஙனம் இருதன்மைப்படுமாறென்னையென்று ஐயுறுதுகேள்; எல்லாப் பொருளின் தன்மைகளும் ஆன்மாவுக்குள வாம்; அஃதெங்ஙனமெனின், ஆன்மா யாதனையாதனைப் பற்றினான் அதன்தன் சுபாவமே தன் சுபாவமாந்தன்மை யுடைமையான் அதுவதுவாயே நிற்பன் என்றிங்ஙனம் ஆன்மாவை அறியுமாறு தொகுத்துக்கூறினாங் கண்டுகொள்க" என்பதாம்.

இங்ஙனந் தொகுத்துணர்த்திப், பின்னும் இவ்வாறறியும் ஆன்மஞானத்தின்பெருமையும், அதனாற் பெறும் பேறும், அதனை அறிதற்கு உபாயமும், அறிந்தானது பெருமையும் விரித்துக் கூறி, "இதற்குமேற் சொல்லற்பாலது சிறிதுமில்லை. அகலான், மனோவிகற்பங்களை யொழித்து இங்ஙனந் தன்னுண்மையறிந்து உபாயங்களைச் செய்வோன் இங்கே சீவன்முத்தனாய், அகம் புறமெங்கும் வியாபித்துத், தற்றருமதருமியாய்த், தற்றருமம் எனப்பட்ட முற்றுமுணர்தன் முதலிய எண்குணங்களுமுடையனாய், இங்ஙனஞ் சிவத்துவத்தைப் பெற்றுச், சிருட்டிப்படுந்தன்மை முதலியனவின்றிச் சிவசமமாவன். இத்தன்மையுடையானுக்குத் தவஞ் செபந் தியானம் பூசைமுதலியன ஒன்றும்வேண்டா: சத்தியம்! சத்தியம்! சத்தியம்!, முக்காலுஞ் சத்தியம்!; இதற்குமேல் அறியற்பாலன ஒருநூலினுமில்லை" என வலியுறுத்திப், பின்னும், "ஆன்மா எல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்குமாற்றைப் பூதான்மா முதல் அறுவகைப்படுத்து விரித்து இன்னுங் கூறுதுங் கேட்பாயாக" என்றெடுத்துக்கொண்டு, பூதபரிணாமமாகிய உடம்பினியல்புகளும், ஆன்மா அவ்வுடம்பைப் பற்றியவழிப் பூதான்மாவென நிற்குமாறும், அகத்தின்கண்ணவாகிய வாக்குக்களினியல்பும், ஆன்மா அவற்றைப் பற்றி அந்தரான்மாவென நிற்குமாறும், சூக்குமபூத முதலிய தத்துவங்களினியல்பும், ஆன்மா அத்தத்துவங்களைப் பற்றியவழித் தத்துவான்மாவென நிற்குமாறும், அத்தத்துவங்களுள்ளும் ஆன்மா எவ்வெத் தத்துவங்களைப் பற்றினன் அவ்வத் தத்துவமயமேயாய்நிற்பன் என்பதூஉம், ஆன்மாப் போத்திருத்துவமெய்திப் புருடதத்துவமென நிற்குமியல்பும், அங்ஙனம் புருடதத்துவமாய் நின்று பிரகிருதி குணங்களைப் பற்றி இன்பத்துன்பங்களை நுகரும்வழிச் சீவான்மாவென நிற்குமாறும், சுரர் நரர் விலங்கு புள்ளுத் தாவரம் எல்லாவற்றிற்கும் அதிதெய்வ மந்திரங்கள் உளவெனவும், தாவர சங்கமங்களுள் மந்திரங்களான் அதிட்டிக்கப்படாத உயிர்களில்லையெனவும், மந்திரங்களை உச்சரிக்கும் முறைமை இவ்வாறெனவும், இவ்வாறு மந்திரங்களினியல்பும், அவ்வம்மந்திரங்களைக் கணிப்புழி ஆன்மாப் படிகம்போல அவ்வம்மந்திரமயமேயாய் மந்திரான்மாவென நிற்குமாறும், தன்னின்வேறாகிய இவ்வைவகைப் பெயரினீங்கியவழி மேற்கூறிய அத்துவிதபாவனையாற் பரமான்மாவென நிற்குமாறும் விரித்துந் தொகுத்துங் கூறி, ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்குமென மேற்கூறியதனை மீளவும் வலியுறுத்தி, இவ்வறுவகையுள் ஏனையவெல்லாம் உபாதிபற்றிய செயற்கையாதலும், அத்துவிதபாவனையாற் பரமான்மாவெனநிற்றல் சித்தென்னுஞ் சாதிப்பொதுமைபற்றிய இயற்கையாதலுந் தெரித்துணர்த்தி, இங்ஙனமாதலான், "அத்துவித பாவனையுடையோன் ஞானக்கண்ணாற் சிவனை ஆன்மாவிற் கண்டு, முழுதும் வியாபகமாய்நின்றறிவதாகிய முற்றுணர்வுடையனாய், அவ்வப் பொருளியல்பெல்லா மறிந்து, மலவாசனை நீங்கிக், கேவலமாய்நின்று, முடிவுகாண்கில்லாப் பேரின்பத்தைப் பெறுவன்" என முடிந்தது முடித்துக்காட்டி, இங்ஙனஞ் சிகண்டவுருத்திர நாயனார் அறுமுகக்கடவுளுக்குச் சர்வஞானோத்தரத்தின் ஞானபாதஞ் செவியறிவுறுத்தருளினார். இன்னும் இதனை ஈண்டுரைத்தவாறுபற்றி விரித்துரைத்துக்கொள்க.

இவ்வாகமத்துள் இத்துணை வலியுறுத்திச் சிவனோ டொற்றுமைப்பட நின்று தன்னைப் பாவிப்பதாகிய ஆன்மஞானமொன்றே, அப்பிரமேயமாய் ஒன்றோடு முவமிக்கப்படாதுநின்ற அச்சிவனை அறிதற் குபாயமென்றும், அங்ஙனம்பாவிக்கவே அச்சிவனோ டொற்றுமைப்பட்டுப் பேரின்பத்தைப் பெறுவ னென்றும், அசுத்தப்பொருளோ டொற்றுமைப்பட்டுநின்ற ஆன்மாச் சுத்தப்பொருளோ டொற்றுமைப்பட்டு நிற்குமா றெங்ஙனமென்னும் ஐயநீக்குதற்குத் தொகுத்து ஒருவார்த்தையாற் கூறுதுமென் றெடுத்துக்கொண்டு, ஆன்மா எதனையெதனைச் சார்ந்தான் அதனதன் சுபாவமே தன்சுபாவமாய் அதுவதுவாய்நிற்பனென்றும், இங்ஙனமாகலாற்சிவனோடொற்றுமைப்பட்டு நிற்புழிச் சிவன்குணங்களாகிய எண்குணங்களுந் தன்றன்மையாகக் கொண்டு சிவனேயாய் நிற்பன்; இதுவே சிவத்துவத்தைப் பெறுதலென்றும், இதற்குமேல் அறியற்பாலன ஒருநூலினுமில்லை! முக்காலுஞ் சத்தியம்! என்று வலியுறுத்தியும், ஆன்மா எல்லாவற்றினும் அதுவதுவாய் நிற்குமாற்றை இன்னும் விளங்கக்கூறுதுமென் றெடுத்துக்கொண்டு, பூதான்மா, தத்துவான்மா, மந்திரான்மா, அந்தரான்மா, சீவான்மா, பரமான்மா என அறுவகைப்படுத்து, அவ்வவற்றிற் கூடியவழி அவ்வப் பெயர்பெற்று அதுவதுவாய் நிற்பனென ஆண்டாண்டு நிற்குமாறு விரித்துணர்த்தியும், படிகத்தை உவமைகூறியும், இங்ஙனம் ஏனையாகமங்கள்போலப் பொருள் கவர்ச்சிப்படுதற்கு இடங்கொடாதவண்ணம் அறுமுகக்கடவுண்மாட்டுவைத்த கருணைமிகுதியான் அங்கையினெல்லிக்கனிபோல ஆன்மாவினியல்பு விளங்கவுணர்த்திப் பலகாலும் வலியுறுத்தி, எல்லாவாகமங்களினும் இது சிறந்ததென்பது தோன்றச் "சர்வஞானோத்தரம்" எனப் பெயருமிட்டருளிச் செய்த சிகண்டவுருத்திரக் கடவுளின் திருவுளக்குறிப்போடு முரணித் தமக்கு வேண்டியவாறே இவ்வாகமத்திற் கூறப்படும் வாக்கியப்பொருளையெல்லாம் இடர்ப்படுத்தி நலிந்து பொருள்கொண்டு உரைசெய்வாருமுளர். அவருரை போலி என்பது சொற்கிடக்கை முறையானும், மேற்பாயிரத்துட் கூறிய நியாயத்தானும் விளங்கக் கிடந்தவா றறிக.

இன்னும், மதமும் மறுப்புமாகவைத்தோதப்படும் பௌட்கரம், மதங்கம், மிருகேந்திரம் முதலிய சிவாகமங்கட்குச் சுபக்கம் பொதுவகையாற் கூறிவைத்துப் பலவாற்றானும் பரபக்கங்களை மறுப்பதுமாத்திரையே கருத்தென்பதூஉம், அவ்வாகமங்களானே, பரபக்கங்களினுளவாகிய ஐயப்பாட்டினீங்கிச், சுபக்கத்தைச் சிறப்புவகையான் அறியலுறுவார்க்குத் தூலாருந்ததி நியாயம்பற்றி அதனைச் சிறந்தெடுத்தோதுதல் உபதேசமாத்திரையான் உணர்த்துவனவாகிய சர்வஞானோத்தரம், தேவிகாலோத்தரம் முதலிய சிவாகமங்கட்குக் கருத்தென்பதூஉம், இங்ஙனமாகலாற் பௌட்கரமுதலியவற்றின் ஓதப்படுஞ் சுபக்கப்பொருள் சர்வஞானோத்தரமுதலியவற்றின் பொருள்பற்றியே தெளிந்து கொள்ளப்படு மென்பதூஉம், மாறிக் கொளின் வழுவா மென்பதூஉம் அவ்வச் சிவாகமங்களி னியல்புநோக்கி வன்மை மென்மைபற்றி உணர்ந்துகொள்க.

இன்னும், பௌட்கரத்திற் காட்சிப் பிரமாணத்தி னியல்பு கூறும்வழி, இந்திரியத்திற்கும் விடயத்திற்குமுளவாகிய சம்பந்தஞ் * சையோகமுதல் அறுவகைப்படுமென நையாயிகர் மதம்பற்றிக் கூறி, உதாரணமும் அவ்வாறே காட்டப்பட்டன; ஆங்காரத்தின் காரியமாகிய சோத்திரத்திற்கும் ஆகாயத்தின் குணமாகிய ஓசைக்குஞ் சமவாயசம்பந்தங் கூறுதல் மேற் பாசபடலத்துட் கூறிப்போந்ததனோடு முரணுதலின், அது சித்தாந்தமன்று; பிறர்மதம்பற்றிப் பொதுவகையாற் கூறியதென்பது உனக்குமொப்பமுடிந்தது. குண குணிகளுஞ் சாதி வடிவுகளுந் தம்மின் வேறல்லவென்பதூஉம் † ஆண்டுக் கூறிப்போந்தமையின், ஈண்டு வேற்றுமைப்படுத்துக், குடவுருவத்தைக் கண் காணுங்காற் சையுத்தசமவாயமென்றும், உருவத்தன்மையைக் காணுங்காற் சையுத்தசமவேதசமவாயமென்றும், ஓதியதூஉஞ் சித்தாந்தத்திற் கேலாமையின், ‡ பிறர்மதம்பற்றிப் பொதுவகையாற் கூறியதேயாமெனக் கொள்ளப்படும். சுத்தமாயையினுண்மைக்குப் பிரமாணங் கூறும்வழிச் சுத்தாத்துவாவிற் கன்மமில்லையெனச் சாதித்ததும் பிறர்மதம் பற்றிப் பொதுவகையாற் கூறியதேயாமென்பது இருவினையதிகரணத்திற் காட்டினும். இன்னோரன்னவை யெல்லாம் உபசாரம்பற்றிப் பொதுவகையாற் கூறப்பட்டனவன்றிச் சித்தாந்த மல்லவென்பது உனக்குமுடம்பாடேயாமாதலிற், சுபக்கப்பொருளைப் பொதுவகையா னட்டிவைத்துப் பலவாற்றானும் பரபக்கங்களை மறுத்தற்பொருட்டேயெழுந்த சிவாகமங்கள்பற்றிப் பொருளுண்மை தெளியப்படாதென்பதூஉம், அவற்றை முன்னொடுபின் மலைவற உய்த்துணரவல்லார்க்குச் செம்பொருள் இனிதுவிளங்குமென்பதூஉம், பரபக்கங்களைச் சிறிதுந்தீண்டாது சிறப்புவகையாற் சுபக்கமாத்திரையே கூறுதற்பொருட்டெழுந்த சர்வஞானோத்தரமுதலியவற்றில் அங்ஙனம் உய்த்துணரவேண்டாது சித்தாந்தப்பொருள் இனிதுவிளங்குமென்பதூஉங் கண்டுகொள்க. அற்றாகலினன்றே பௌட்கரமுதலியவற்றின் இத்துணை வலியுறுத்தியெடுத்துக்கொண்டு ஓதாததூஉஞ், சர்வஞானோத்தரமுதலியவற்றின் "இதற்குமுன் ஒருவர்க்குங் கூறினேமல்லேம்; அதனை நீ கேட்பாயாக" எனவும், "இதற்குமேற் சொல்லற்பாலன ஒருநூலினு மில்லை" எனவும். "தெளிவுபிறவாமைக் கேதுவாய்ப் பலபடச் சொல்லி என்னை" என்றெடுத்துக் கொண்டு, "சார்ந்ததன் வண்ணமாயே நிற்றல் ஆன்மாவினியல்பாம்; இங்ஙனம் ஆன்மாவி னிலக்கணந் தொகுத்துரைத்தாம் உணர்ந்துகொள்க" எனவும், "சத்தியஞ்! சத்தியம்! முக்காலுஞ் சத்தியம்!" எனவும் இத்துணை வலியுறுத்தியோதியதூஉ மென்க.

அற்றேல், இங்ஙனங் கூறியவாற்றாற் சர்வஞானோத்தரத்திற்குச் சொற்கிடந்தவாறன்றி நலிந்துபொருள்கோடல் பொருந்தாதென்ற தொக்கும்;

* சையோகமுதல் அறுவகைச் சம்பந்தங்களாவன:—சையோகம், சையுத்தசமவாயம், சையுத்தசமவேதசமவாயம், சமவாயம், சமவேதசமவாயம், விசேடணவிசேடியத்தன்மை என்பன. இவற்றின்விரிவைத் தருக்கசங்கிரகவுரையிற் பிரத்தியக்ஷப் பிரமாணங் கூறும்வழிக் காண்க.　† ஆண்டு என்றது பாசபடலத்தைக்குறித்தது.　‡ பிறர் என்றது-தார்க்கிகரை. அவர் குணமுங் குணியும் வேறெனக்கொள்ளுதலை, சக-ம் பக்கத்திற் காண்க.

ஏனையவெல்லாஞ் சொற்கிடந்தவாறே வேறுபொருள்படாவாயினும், ஆண்டுத் "தற்றருமதருமி" என்றது தற்றருமத்தோடொத்த தருமத்தை யுடையன் என வேறுபொருள்படுமென்றற் கிழுக்கென்னையெனின்,—அறியாது கூறினாய். அங்ஙனம் பொருள் கொள்ளிற் படிகம்போலத் தன்னாற் சாரப்பட்ட பொருளின்றன்மையே தன்றன்மையாகக்கொண்டு அதுவதுவாய்நிற்பது ஆன்மாவினிலக்கணமெனத் தொகுத்து ஒருவார்த்தையின்விளங்க மேலோதிய வாக்கியத்தோடு முரணுதலை மறந்தாய்போலும். இன்னும், "ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமாய்நின்றறிவன், ஒன்றறியும்வழி மற்றொன்றனையறியாமையின், யாவன் சார்ந்ததன் வண்ணமாகாது நின்றறிவான் அவன் ஒன்றறியுங்கால் மற்றொன்றனை யறியாதானல்லன், சிவன்போல" என்னும் வழியளவையும் இவ்வாகமவளவையை வலியுறுத்திய வாறு காண்க. இதனானே "தற்றருமதருமி" என்றதூஉம், பின் அதனை ஈரிருவகைப்படுத் தோதியதூஉம் மிருகேந்திரத்திற் கலைமுதலியவற்றைச் *"சிற்சங்க சித்து" என்றதுபோலவைத்துப் பொருள் கோடலே பொருத்தமுடைமை அறிக.

இன்னும், "தற்றருமதருமி" என்பது தற்றருமத்தாற் றருமி என வேற்றுமைத்தொகைப்பொருள்படாது தற்றருமம்போலுந் தருமத்தையுடையன் என்று அன்மொழித்தொகைப்பொருள்படுமாயின், ஆண்டுத் "தற்றருமதரும" என நிற்பதன்றி, அன்மொழித்தொகைமேல் உடைப்பொருள் விகுதி வாராதென்னும் வடமொழி வியாகரணவிதியோடு முரணித், "தற்றருமதருமி" என உடைப்பொருள் விகுதிபெற்று நிற்றல் பொருந்தாமையிற் சொல்லியல்பானும் அது பிறிதுபொருள்படுதற் கேலாமை அறிக.

அற்றேல், சார்ந்ததன்வண்ணமாய் நிற்றல் ஆன்மாவினியல்பன்று; செயற்கையென்றற்படு மிழுக்கென்னையெனின்,—அவ்வா றோதாமையானும், செயற்கை ஈண்டோதுதற்கோ ரியைபின்மையானும், செயற்கையாயவழி அத்துவிதபாவனையால் இருபொருளொற்றுமைப்படநிற்றல் எவ்வாறென மேலோதியதுபற்றிநிகழும் ஆசங்கைக்கு விடையாகாமையானும், சார்ந்ததன் வண்ணமாய்நிற்குமாற்றைப் பூதான்மாமுதற் பரமான்மா வீறாக அறுவகைப் படுத்து இன்னும் விரித்துக்காட்டுகின்றோம் என இயற்கை செயற்கை இரண்டினுஞ் சேறற்குரிய இலக்கணமாக அதனைக் கூறுதலானும், மலத்தானாய செயற்கை அறியாமையாதலுங் கலைமுதலிய கருவிகளானாய செயற்கை ஏகதேசவறிவாதலுமாத்திரையேயாகலின், இவற்றின்வேறாகிய சார்ந்ததன்வண்ணமாந்தன்மை இவைபோல் மலமுதலியவற்றானாய செயற்கையென்றற்கோ ரியைபின்மையானும், அஃதான்மாவினியல்பென்பதன்றிச் செயற்கையென்றற்கேலாமை அறிக.

* மிருகேந்திரத்தில் இந்திரியாதிப் பிரகரணத்தில், உத்ராதி வாஹிதே ஸிஷம் வவா ரஸ்யஜ்ஞோஸ்திகஸம ஶவிஷூஹந ஶஹஸ்விவத்தில் ஸெஶாகூ | என்னுஞ் சுலோகத்திற் கலைமுதலியவற்றைச் சிற்சங்கசித்து என்று கூறியிருத்தல் காண்க.

அற்றேல், அவ்வவற்றின் குணமே தன்குணமாதலன்றித் தனக்கென வேறுகுணமில்லைபோலுமெனின்,—ஆன்மாவுக்கு விசேடகுணமில்லையாயிற் குணகுணிகட்கு வேற்றுமை யில்லையென்பது மேற்காட்டுதலிற் குணமில்வழிக் குணியுமில்லையெனப்பட்டுச் சிவாத்துவிதமதமாய் முடியுமாகலின், அது பொருந்தாது. படிகத்திற்குச் சார்ந்ததன்வண்ணமாதன் மாத்திரையேயன்றி அதனைப் பற்றுந்தன்மையும், கண்ணுக்குச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்றன்மாத்திரையே யன்றி அவ்வாறுநின்று அவ்வப் பொருள்களைக் காணுந்தன்மையும் வேறுளவாயினாற்போல, ஆன்மாவுக்குச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்றன்மாத்திரையே யன்றி அவ்வாறுநின்று அவற்றை அறியுந்தன்மையாகிய விசேடகுணம் அவற்றின் வேறாயுண்டென்க. இவ்வுண்மை விளங்கப் புடைநூலாசிரியரும், *"இருளொளிய லாக்கண் டன்மை யதாம்" எனச் சித்தாந்தஞ் செய்தார். இதனானே தனித்துநின்றறியும் அறிவும், சார்ந்ததன்வண்ணமாய்நின்றறியும் அறிவுமெனச் சித்து இருவகைப்படுமாறும், இரண்டுந் தம்மு ளொவ்வாதவாறும், படிகம் மாணிக்கத்தைச் சார்ந்தவழி மாணிக்கவண்ணம் முழுதுந் தன்வண்ணமாகக்கொண்டுநிற்றல் பற்றிப் படிகத்தைமாணிக்கமேயென அதனோ டொப்புமைகூறுதலமையும்; அதுபற்றி மாணிக்கத்தைப் படிகத்தோ டொப்புமை கூறுதலமையாதவாறு போல, ஆன்மாச் சிவத்தைச் சார்ந்தவழிச் சிவத்தின்குணம் முழுவதுந் தன் குணமாகக் கொண்டுநிற்றல் பற்றி ஆன்மாச் சிவமேயெனச் சிவத்தோ டொப்புமை கூறுதல் அமையும்; அதுபற்றிச் சிவத்தை ஆன்மாவோ டொப்புமை கூறுதல் சாலாதென்பதூஉம், படிகம்போலச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்கும் ஆன்மா மலமுழுவதும் நீங்கித் தன்னறிவு வியாபகமாய் விளங்கிய வழியுந் தன்னாற்சாரப்பட்ட சிவத்தைமாத்திரம் அறிதலன்றி மற்றொன்றனை அறிதல் செல்லாதென்பதூஉம், இதுபற்றியன்றே சிவனுக்கடிமை எனப்பட்ட தென்பதூஉம், இன்னோரன்னவை பிறவும் அறிந்துகொள்க. இக் கருத்தேபற்றிச், † "சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்றா மென்னில்... .........அவனுக் கிவனுமசித் தாம்" என்றார் வழிநூலாசிரியரும்.

இதனானே முழுவதும் மலம் நீங்கிய சிற்சத்தியுடைமைபற்றி ஆன்மாவுஞ் சிவமுந் தம்மு ளொப்பரென் றோதிய வழியளவையும் போலியாயொழிந்தவாறுணர்க; என்னை? மலநீங்கித் தன்னறிவுமுழுவதும் விளங்கிய வழியும் அதுவதுவாய்நின் றறிதலே ஆன்மாவினியல்பாகலின், அவ்வாறன்றித் தனித்துநின் றறிவதாகிய சிவமுந் தானுந் தம்மு ளொத்தல் சாலாமையானென்பது.

இன்னும் இதனானே, நீரொடு நீரும் பாலொடு பாலுஞ் சேர்ந்தாற்போலென ஐக்கியவாதங் கூறுவார் மதமும், குடமுடைந்தவழிக் குடாகாயம் மகாகாயத்தோடு கூடி ஒன்றாமாறுஞ் சிறை முறிந்தவழி யாற்றுநீர் கடனீரோடு கூடி ஒன்றாமாறும் போலெனச் சிவாத்துவிதங் கூறுவார் மதமும் மறுக்கப்பட்டன. ஆகமங்களின் அவ்வாறு அவற்றை எடுத்துக்காட்டியது ஒற்றுமைப்படச் சேர்தன் மாத்திரைக்கு ஒருபுடையொப்புமையாதல்பற்றியே பிறிதில்லை என்க.

* சிவப்பிரகாசம், உண்மை, எ. † சிவஞானசித்தி, கக-ம் சூ. கக.

இன்னும், "தற்றருமதருமி" என்றோதியதனை மீளவும் விரித்துணர்த்துவான் புகுந்து, முற்றுணர்தன் முதலியனவாக எண்வகைப்படுத்தோதியவற்றான், அநாதிபோதமென்றொரு குணம் முற்றுணர்வு முதலியவற்றின் வேறுவைத்தெண்ணப்பட்டது; படவே, அஃதுஅநாதிமுத்தத்தன்மையென்னுங் குணத்திற்குப் பரியாயப் பெயராய் அநாதியே ஞானம் விளங்குதல் எனப் பொருடருவதேயாமாகலின், அக்குணம் அநாதி முத்தனாகிய சிவனுக்கன்றி இடையே முத்திபெற்ற ஆன்மாவுக்கில்லையென்பது உனக்குமொத்தலான், அநாதிபோதனல்லாத ஆன்மாவுக்கு அநாதிபோதத்தன்மைகூறியது மாணிக்கவொளிமுழுவதுந் தன்னைச்சார்ந்த படிகத்தில் விளங்கினாற்போலச் சிவனுக்குரியதருமந் தன்னைச்சார்ந்த ஆன்மாவின்மாட்டு விளங்குதன்மாத்திரையேபற்றியாகலின், ஏனைக் குணங்கள் ஆன்மாவிற் கோதியதூஉம் அவ்வாறேயாமென்பது தெளியக்கிடந்தவா றறிக.

இன்னும், பௌட்கரம் மதங்கம் முதலிய சிவாகமங்களிற் சிவனுக்குரிய எண்குணங்களே யன்றி அவற்றோடொப்ப வேறாய் ஆன்மாவுக்கு எண்குணங்களுளவென யாண்டானும் ஓதாமையானும், "தற்றருமதருமி" என்பதற்குத் தற்றருமமே தனக்குத் தருமமாகவுடையனென்னாது தற்றருமமாகிய சிவத்துவத்தோ டொப்ப அதனின் வேறுதருமமாகிய சிவத்துவமுடையனெனப் பொருள்செய்தல் அவசித்தாந்தமென் றொழிக.

அதுவதுவேயாய் நின்றறிதல் ஆன்மாவி னியல்பாகலின், ஆன்மா மலமுழுவதும் நீங்கிச் சிவத்தைச்சார்ந்தவழித் தன்னறிவு முன்போல ஏகதேசமாதலின்றி வியாபகமாய் விளங்கினும், மாணிக்கத்தை முழுவதும்பற்றிய படிகம் அம்மாணிக்க மாத்திரையே யன்றி மற்றொன்றனையும் பற்றாதவாறுபோல, அச்சிவத்தையேயன்றி மற்றொன்றனையும் அறியுமாறில்லை எனவும், மாணிக்கத்தினொளி படிகத்தின் முழுவதும் விளங்காதவழி விளங்காத பாகத்தான் மற்றொன்றனைப் பற்றுமாறுபோலச் சிவத்துவமாகிய எண்குணங்களும் தன்பால் முழுவதும் விளங்காதவழி மற்றொன்றனையும் அறியும்; அறியவே அதுவதுவாய் அழுந்துந் தன்மையானது பந்தத்திற் கேதுவாமாகலின், அங்ஙன மாகாமைப் பொருட்டுச் சிவத்துவம் முழுவதுந் தன்பால் விளங்கும்படி சிவோகம்பாவனையில் உறைத்துநிற்றல் வேண்டும் எனவும் அறிக.

அற்றாகலினன்றே சிவதீக்கையிற் *பிராசாதநெறியானே ஆன்மாவைச் சிவனிடத்தில் †யோசித்துப், பின்னுஞ் சிவனுடைய எண்குணங்கள் அதன்மாட்டு முழுவதும் விளங்கும்படி ஒரோவொன்றனை மும்மூன்றாகுதியான் விளக்குவித்துச் சிவசமமாகச் செய்வதூஉமென் றுணர்க.

இவ்வாறன்றிச், சிவன்குணத்தோ டொப்ப வேறுகுணமுடைமையே சிவசமமென்னுஞ் சொற்குப் பொருளென்பாரைக் குணங்க ளொருபுடையொத்தலாற் சிவசமமோ? முழுவது மொத்தலாற் சிவசமமோ? எனக்

---

* பிராசாதநெறி-பிராசாதமந்திரத்தை உச்சரிக்கும் மார்க்கம். † யோசித்தல்-சேர்த்தல்.

கடாயினர்க்கு, ஒருபுடை யொத்தலாற் சிவசமமென விடுப்பின், ஒருபுடை யொக்குமென்பது எல்லாவாதிகட்கும் உடம்பாடாகலின், அதனான் உனக்குப்போந்ததொன் றின்மையானும், முழுவது மொத்தலாற் சிவசமமென விடுப்பின், முழுவதுமொத்தவழி ஒன்றேயாகலின் இருபொருளாய்நிற்குமா றின்மையானும், குணங்களான் வேற்றுமை யின்றாயினுங் குணிப்பொருள் வேறுதல் அமையுமெனின், சைவசித்தாந்தத்திற் குணமே குணியுமாய் நிற்பதாகலின் அதனை மறந்து நையாயிகர் மதத்தில் வீழ்ந்து குணமுங் குணியுந் தம்முள் வேறெனக்கொண்டு இரண்டிற்குங் குணங்களொன்று குணியான் வேறென்றல் பொருந்தாமையானும், குணங்களின் வேற்றுமை யில்வழிக் குணிகளின் வேற்றுமை பெறப்படாமையானும், நித்தப் பொருள்களின் வேறுபாடு தெரிப்பதற்கு விசேடமென்றொரு பதார்த்தம் உண்டெனத் தார்க்கிகர் கொண்டதுபோலச் சைவசித்தாந்தத்திற் கொள்ளாமையின், இலக்கண வேறுபாடே இலக்கியத்தின் வேறுபாட்டைத் தெரிவிப்பதாத லானும், இதனானே அதுவதுவாய்நின் றறிதலாகிய பொதுவிலக்கணமாத்திரையே யன்றி ஆன்மாக்களுக்குத் தனித்தனி சிறப்பிலக்கணங்களுளவென்பதும் பெறப்படும்; அற்றாகலினன்றே மலசத்திகள் பலவாயின; அவை இவை யென்பது உண்மையதிகாரத்திற் காட்டப்படுமாகலின், அதுபற்றி ஆசங்கை யின்மையானும், இன்னும், சிவமும் ஆன்மாவும் இலக்கணத்தானொன்றாய வழிப் பதி பசு என வேறுவைத்தெண்ணுதல் பொருந்தாமையானும், பசுத்துவசாதி வேறாகலின் அதுபற்றி வேறெண்ணியதெனிற் பசுத்துவம் உபாதியாதலன்றிச் சாதியாகாமையின் அங்ஙனங் கூறுதல் சாதி இது உபாதி இது என் றறியாதார் கூற்றேயாகலின், அதுபற்றி வேறெண்ணுதல் பொருந்தாமையானும், இதனானே பசுவாய்நின்ற ஆன்மசாதி வேறு, சிவமாய்நின்ற ஆன்மசாதி வேறெனக்கொண்டு அவ்விரண்டற்கும் அத்துவிதங் கூறுதல் சர்வஞானோத்தரத்தின் கருத்தெனத் தமக்குரிய நயத்தைவிட்டு மாயாவாதி மதம்பற்றி உரைசெய்தலும் போலியாகலானும், இன்னும், சிவனும் ஆன்மாவும் இலக்கணத்தான் ஒன்றாயவழிச் சிவனை மறைக்கமாட்டாத ஆணவ மலம் ஆன்மாவுக்கு * ஆவாரகமாதல் செல்லாமையானும், ஞாயிற்றை இருள் மறைத்தல் கண்டிலமாதலானும், சிவனுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை என எல்லாச் சிவாகமங்களும் முழங்குதலானும், பிறவாற்றானுஞ், சிவசமமென்னுஞ் சொற்கு அதுபொருளன்மை உணர்ந்துகொள்க.

இங்ஙனஞ் சிவாகமங்களையும் பொருந்துமாறுகளையும் முன்னொடுபின் மலைவறநோக்கிப் பொருண்மை துணியமாட்டாதார், ஐந்தொழிலி னேவப்பட்டுப் பிணிப்புண்டு முன்னின்ற பரதந்திரத்தை நோக்கி முத்திபெற்றவான்மாச் சுதந்திரனென் றோதப்படும்; அங்ஙனமாயினும் அதுவதுவாய் நிற்குமியல்பானே உபாதியினீங்கிச் சிவமேயாயவழிச் சிவமொன்றனையே அறிந்து நிற்பதாகலிற் சிவனுக்கடிமையாமென்னும் உணர்வு நிலைபெறும்படி சிவதீக்கையினுஞ் சிவபூசையினும் மந்திர முதலிய மூன்றானுந் தானஞ் செய்தளித்த பொருளாகலான் அதனை நோக்கிப் பரதந்திரனேயாமென்பது

* ஆவாரகம்-மறைத்தல்.

முணராது, *"துன்பமா மெல்லாம் பரவசனாய்த் தான்றுவளி—லின்பமாந் தன்வசனா யேயிருக்கில்" என்றதும் இக்கருத்தேபற்றி ஓதியதென்பதற்கு ஆண்டுத் "துவளில்" என்றதே சான்றாமென்பது முணராது, மாசு நீங்கிய வழி ஆடையின் வெண்மை ஆடை முழுவதும் விளங்கினாற்போல மலநீங்கிய வழி ஆன்மவியாபகம் முழுதினும் விளங்குகின்ற ஆன்மஞானம் முன் ஏக தேசத்தின் விளங்கிச் சிற்றறிவாய்நின்றதனைநோக்கப் பேரறிவெனப்படும்; அங்ஙனமாயினும் வியாபகமுழுதினுஞ் சிவமாய் நின்று சிவமொன்றனையே அறிவதன்றி மற்றொன்றனை அறியுமாறின்மையின், முழுதும் ஒருங்கே யுணரும் பேரறிவாகிய சிவஞானத்தை நோக்கச் சிற்றறிவேயாமென்பது முணராது, †"பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்—பெருகி" என்றதும் இக்கருத்தேபற்றியோதியதென்பதற்கு †"நாயகன்றன் பாதம் பெறுவது சுத்தமாமே" என ஆண்டோதியதே சான்றாமென்பதுமுணராது, சிவத்துவ முழுவதுந் தன்மாட்டுவிளங்குதலாற் சிவனதாகிய சுதந்திரமும் முற்றுணர் வுந் தானுடையனாயினும், ‡"ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலி—னாழிமுக வாது நானாழி" என்னும் நியாயத்தாற் றன்னால் அறியற்பாலது சிவ மொன்றேயென்பதுமுணராது, தனக்குவேண்டும் பெரும்பயனிற் சிறிதுங் குறைவின்மையின் ஏனையவற்றை அறியாமை பற்றி ஒருதாழ்வில்லை யென் பது முணராது, அதுவதுவாய்நின் றநுபவிக்கும் ஆன்மா ஏனையவற்றையும் அறிவுழிச் சிவாநுபவ விளைவிற் குறைபடுமாதலின் ஏனையவற்றை யறிதல் முத்திப் பெரும்பயனுக்கு இடையூறென்பதூஉம் ஏனையவற்றையறியாமையே முத்திப்பெரும்பயனுக்குச் சிறந்த காரணமென்பது முணராது, இக்கருத்தே பற்றியன்றே §"இன்பங் கொடுத்தலிறை யித்தை விளை வித்தன்மலம்" என் றோதியதென்பதூஉ முணராது, எண்குணங்களின் அநாதிபோதமென முற் றுணர்வின் வேறுவைத்தெண்ணியது அநாதிமுத்தத் தன்மைக்குப் பரியா யப் பெயரேயாகலின் அதுவும் அதனோடுடனெண்ணிய ஏனைக்குணங்களும் அநாதிமுத்தனாகிய சிவனுக்கே யுரியகுணங்களென்பது முணராது, அக் குணங்கள் முழுவதும் படிகம்போலப் பற்றியதன்வண்ணமாய்நிற்கு மியல் புடைய ஆன்மாவின்மாட்டு விளங்கிய உபசாரத்தால் அவையே ஆன்மாவிற் குரிய குணங்களுமாமென்பது முணராது, ¶"வளம்பட வேண்டாதார் யார் யாரு மில்லை" என்னும் முறையானே முடவன் மலையிற்றேனை அவாவி வாயூறினாற்போலச் "சிவனோ டொப்ப யாமும் எல்லாமறிந்து ஐந்தொழில் செய்வேமாக" என் றெண்ணும் ஆசைமிகுதிப்பாட்டாற் சிவாகமங்களின் ஓரோரிடங்களின் ஆன்மா முத்தியிற் சுதந்திரனெனவும், முற்றுணர்வின னெனவும், எண்குணமுள்ளானெனவும், சிவசமமாவனெனவும் மேற்கூறிய முறைமைபற்றியோதிய வாக்கியங்கண்மாத்திரையே எடுத்துக்கொண்டு தமக்குவேண்டியவாறெல்லாம் வலியுறுத்தி உரைசெய்து, சிவகதி, சிவலயம், சிவயோகம், சிவசாயுச்சியம், சிவாநந்தியம், சிவதாதான்மியம், சிவைக்கியம் என்பனவும் ஆகுபெயராற் சிவசமமென்னும் பொருள் பயக்குமென மாறிக் கூறித் தாமே தம்மை வியந்துகொள்வர். அதனாற் றம் மாணாக்கரை வஞ்சித் தன் மாத்திரையேயன்றித் தம்மாசை நிரம்புமாறில்லை யென்றொழிக.

* திருக்களிற்றுப்படியார், ௪௯. † சிவஞானசித்தி, ௪-ம் சூ. ௪௦. ‡ வாக் குண்டாம். ௧௧. § உண்மைவிளக்கம். ௫௦. ¶ நாலடியார், பழவினை. ௩.

அற்றேல், ஆன்மாச் சிவனோ டத்துவிதமாய்நிற்பனென்பது பெறப் படுமாயினன்றே அதுபற்றிச் சிவசமமென்று உபசரித்துக் கூறியதென்ற தமையும்; அத்துவிதமாய் நிற்குமா றெங்ஙனமெனின், அஃது அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருளுணரவே இனிதுவிளங்கும். அற்றேல், அதற் கென்னையோ பொருளெனின், காட்டுதும்:- அத்துவிதம் என்னுஞ் சொல் லின் நகரம் இன்மை அன்மை மறுதலை என்னும் மூன்றனுள் ஒருபொருள் பயக்கும். அவற்றுள், இன்மைப்பொருள் கொண்ட மாயாவாதிகள் இரண் டின்மை ஒருபொருண்மாத்திரையினன்றி இரண்டு முதலியவாயெண்ணப் படும் பொருள்களி னில்லாமையான் அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருள் ஒன்றென்பதேயாமெனவும், ஒருபொருளாயினுங் குண குணி யென வேற்றுமை தோன்ற நிற்பிற் கேவலம் ஒன்றாதலின்மையின் அத்து விதமென்பது உபசாரச் சொல்லாய் முடியுமாதலாற் றன்னின் வேறு யொரு பொருளு மின்றித் தானுங் குணமுடைப் பொருளென விசேடிக்கப்படுத லின்றி நிருவிசேடமாய் நிற்கும் பரப்பிரமப் பொருளென்பது அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருளெனக் கோடலின், அவர் "கேவலாத்து விதிகள்" எனவழங்கப்படுவர்.

இராமாநுசர் சிவாத்துவிதசைவர் முதலியோரும் அவ்வாறே இன் மைப்பொருள்பற்றி ஒன்றெனப் பொருள்கொண்டு, சத்திசங்கற்ப முதலிய குணங்கள் பரப்பிரமப் பொருட்கு உளவென்று உபநிடதங்களிற் கூறுதலா னும், அவை செயற்கைக் குணமென்றற்கோ ரியைபின்மையானும், பசு பாசங்களதுண்மையும் உபநிடதங்களு ளோதப்படுதலானும், அவற்றொடு முரணிக் கேவலாத்துவிதமெனக் கோடல் பொருந்தாமையிற் றன்னொடியை புடைய பசு பாசங்களானும், தன்குணங்களாகிய சத்திசங்கற்பமுதலியவற் றானும், விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின்ற பரப்பிரமம் இரண்டில்லை; ஒன்றென்பதே அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருளென விசிட்டாத் துவிதங்கோடலின், அவர் "விசிட்டாத்துவிதிகள்" என வழங்கப்படுவர்.

பேதவாதிகள் மறுதலைப்பொருள்பற்றி இரண்டன் மறுதலையாகிய ஒன் றெனப் பொருள் கொண்டு, அங்ஙனங் கொள்ளவே அவ்வொன்றன்மறுதலை யாகிய இரண்டாவது முண்டென்றற் கிழுக்கின்மையின், அத்துவிதமென்ப துந் துவிதமென்னும் பொருளைப் பயக்குமென்று போவர். அவரெல்லாரும் அத்துவிதமென்ற சொற்குப் பொருள் ஒன்றென்பதேயாமெனக் கொண்டு தத்தம் மதங்களோடு முரணாமைப்பொருட்டுக் கேவலமென்றும், விசிட்ட மென்றும், மறுதலையென்றும் அடை கூட்டி இடர்ப்பட்டுப் பொருள் கொள்வர். அவருள், மாயாவதிகள் கூறுங் கேவலமும், பேதவாதிகள் கூறும் மறுதலையுஞ் சுருதிகளோடு முரணுதலின், ஈண்டைக் கேலாவாம். ஏனை யோர் கூறும் விசிட்டமென்பது பொருந்துமாயினும் அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருள் ஒன்றெனக் கோடல் பொருந்தாது; என்னை? ஒன் றென்பது பொருளாயின் ஒன்றெனவே விளங்கக் கூறலமையும்; அவ்வா றன்றி "அத்துவிதம்" என உய்த்துணரவைத் தோதவேண்டாமையானும், ஒன்றெனப் பொருள் கொள்ளின் மகாவாக்கியப் பொருள் பயப்பதோர்

விசேட மின்மையின் "அத்துவிதம்" என்றதுபற்றி ஆண்டொரு பயன் படாமையானுமென்க.

மற்றென்னையோ அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருளெனின், சித்தாந்தசைவ ருரைக்குமாறு காட்டுதும்: "அது நீ ஆகின்றாய்" எனவும், "அது நான் ஆகின்றேன்" எனவும் "அது இது ஆகின்றது" எனவும் மூவிடம்பற்றி நிகழுந் "தத்துவமசி" முதலிய மகாவாக்கியங்களைக் கேட்டவழி, அது என்பது ஒருபொருள் நீ என்பது ஒருபொருளாகலின், ஒரு பொருள் மற்றொருபொருளாமா றியாங்ஙனமென்னும் ஐயம் நீக்குதற் கெழுந்ததாகலின், அது இதுவாதற் கேதுவாய் அவ்விரண்டற்கு முளதாகிய சம்பந்தவிசேடமுணர்த்துதலே அத்துவிதமென்னுஞ் சொற்குப் பொருளென் றுணர்ந்துகொள்க.

அற்றேல், அத்துவிதமென்னுஞ் சொல்லாற் பெறப்படுஞ் சம்பந்தம் ஐக்கியமோ? தாதான்மியமோ? சமவாயமோ? சையோகமோ? சொரூபமோ? வேறோ? எனக் கடாயினார்க்கு, யாற்றுநீருங் கடனீருந் தம்மிற் சேர்ந்தாற்போலவும், குடாகாயமும் மகாகாயமுந் தம்மிற் சேர்ந்தாற் போலவும் ஐக்கியமெனின், அங்ஙனஞ் சேர்ந்தவழி ஒருபொருளேயாகலின், ஒன்றெனவே அமையும்; அத்துவிதமென்று உய்த்துணரவைத் தோத வேண்டா; அன்றியும் ஒன்றாயவழி அதுவதுவாய்நின்றறிதலாகிய ஆன்மாவி னிலக்கணம் முத்திகாலத் தில்லையெனப்பட்டு வழுவாமாகலின், அது பொருந் தாமையானும், குணகுணிகட்குத் தம்மினுளதாகிய சம்பந்தம்போலுந் தாதான்மியமெனின், ஆன்மா முதல்வனைப்போலக் குணிப்பொருளாய் நிற்பதன்றி முதல்வனுக்குக் குணமாகாமையின் அவ்வாறியைதல் கூடாமை யானும், தாதான்மியத்தின் வேறாய் நையாயிகர் கூறுஞ் சமவாயமென்ப தொன் றின்மையானும், விரலும் விரலுஞ் சேர்ந்துநின்றாற்போலச் சையோக மெனின், அவ்வியாப்பிய விருத்தியாகிய சையோகம் வியாபகப் பொருள் கட்குக் கூடாமையானும், யாதானுமோ ரியைபுபற்றிக் கூறப்படுஞ் சொரூப மெனின், அது மகாவாக்கியப் பொருளை வலியுறுத்துதற் கெழுந்த அத்து விதமென்னுஞ் சொற்குப் பொருளாகாமையானும், சொரூபசம்பந்தமாத்தி ரையாற் சிவாநந்தத்தை அநுபவித்தல் கூடாமையானும், இவற்றின் வேறாய் இன்னதென் றறியவாராத அநிர்வசனமெனின், அங்ஙனங் கூறுதல் மாயா வாதி கூற்றாய் வழுவாமாகலானும், அவையெல்லாம் ஈண்டைக் கேலாமை யின், வேறு விடுக்குமா றென்னையெனிற் கூறுதும்:—

ஒருபொருளே அவயவ அவயவிகளாயாதல் குணகுணிகளாயாதல் வேற்றுமைப்பட்டு இரண்டாய் நிற்றற் கேதுவாகிய தாதான்மியமும், அது போல இருபொருளே அதுவதுவாய் ஒற்றுமைப்பட் டொன்றாய்நிற்றற் கேதுவாகிய தாதான்மியமுமெனத் தாதான்மியசம்பந்தம் இருவகைப்படும். அவற்றுள், முன்னையது தாதான்மியமென்றும் பின்னையது அத்துவித மென்றும் வழங்கப்படும்; அத்துவிதமென்னுஞ் சொல்லியல்பு மேற்கூறிய வாற்றான் வேறுபொருள் தருமாறின்றி அன்மைப்பொருள்பற்றி இரண்டன் றென வேற்றுமைப்படாமையை விளக்கிநிற்றலானென்க. இதுவே ஆசிரியர்

கருத்தென்பது, * "அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்து மாயிட்டு" என்றதனானும், புடைநூலாசிரியர், † "பிறிவருமத் துவித மாகுஞ்—சிறப்பினதாய்" என்று உடம்பொடுபுணர்த்தோதியத னானும் அறிக.

இவ்வத்துவிதம், அபேதசம்பந்தமாகிய ஐக்கியமுமன்றிப், பேதாபேத சம்பந்தமாகிய தாதான்மியமுமன்றிப், பேதசம்பந்தமாகிய சையோகமு மன்றிக், கலப்பும் உடனாதலும் வேறாதலுமாகிய மூன்றுந் தன்கட் டோன்ற நிற்றல்பற்றி அம்மூன்றற்கும் பொதுவாகக் கூறப்படுமாகலான், இவ்வத்து விதத்திற்கு ஒரோரிடங்களின் ‡ "அலைகடலிற் சென்றடங்கு மாறுபோல்" எனவும், § "வானகத்தில் வானும் மணத்தின் மணமும்போல்" எனவும் அபேத வுவமையும், ¶ "பண்ணையு மோசையும் போலப் பழமதுவு—மெண் ணுஞ் சுவையும்போல்" எனவும், ο "நீரு மிரதமும்போ—லாங்கா ணரனு ரருள்" எனவும் பேதாபேத வுவமையும், ** "இரும்பைக் காந்தம் வலித் தாற் போலியைந்து" எனப் பேதவுவமையும் ஒருபுடையொப்புமைபற்றி எடுத்துக்காட்டுபவாகலின், இங்ஙனந் தம்முண் முரணுவனபோல வேறு வேறெடுத்துக் காட்டுதல்பற்றி மலையற்க; இம்மூன்றியையபுந் தன்கட் டோன்ற இவற்றிற்கு வேறாய் நிற்கும் அத்துவிதத்திற்குச் சிறந்தெடுத்துக் காட்டப்படும் உவமையாவது ஆன்மபோதமுங் கண்ணொளியுந் தம்முள் அத்துவிதமாய்நிற்றலாமென்க. †† "காணுங் கண்ணுக்குக் காட்டு முளம் போற்—காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்" எனவும், ‡‡ "காட்டக் கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்—கேயுமுயிர் காட்டிக்கண் டிடுமா போல் வீசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன்" எனவும், † "அறிவொளி போற் பிறிவருமத் துவித மாகும்" எனவும் மூன்று நூலாசிரியருஞ் சித் தாந்த முடிபுணர்த்தும்வழி இதனையே எடுத்துக்காட்டியவா றறிக.

இவ்வத்துவிதம், ஏனையோர்கூறும் அத்துவிதம்போலக் கேவலமென் றுதல், விசிட்டமென்றுதல், மறுதலையென்றுதல் யாதானு மொன்றான் விசே டிக்கப்பட்டுநின்று பொருளுணர்த்தாது சுத்தமாய் நின்றே பொருளுணர்த் துதலிற் சுத்தாத்துவிதமென வழங்கப்படும். ஈண்டுச் சுத்தமென்றது யாதானுமொன்றான் விசேடிக்கப்படாது நிற்றலை; அது "விசிட்டசத்தை" "சுத்தசத்தை" எனத் தார்க்கிகர்கூறும் வாய்பாட்டானு மறிக. ஏனையோர் கூறும் அத்துவிதங் கேவல முதலியவற்றான் விசேடிக்கப்படாதவழி அவர்

* இந்நூல் இரண்டாஞ்சூத்திரம், முதலதிகரணத்தின் ஏது. † சிவப்பிரகாசம், பாயிரம், எ. ‡ இந்நூல், அ-ம் சூ. ச-ம் அதிகரணத்து உதாரணம்,க. § திரு களிறுபோதம், ருஎ. ¶ இந்நூல். உ-ம் சூ. க-ம் அதிகரணத்து உதாரணம், ௩. ο திருகளிறுபோதம், ௩கூ. ** சிவஞானசித்தி, கக-ம் சூ. கஉ. †† இந்நூல், கக-ம் சூ. ‡‡ சிவஞானசித்தி, கக-ம் சூ. க.

கூறும் பொருடருதற் கேலாமையின், அவையெல்லாஞ் சுத்தாத்துவித மாகாமையுங் காண்க.

இங்ஙனம் ஒருபொருள் இருதன்மையான் வியாபகமும் வியாப்பியமு மாய் வேற்றுமைப்பட்டுநிற்குந் தாதான்மியம்போல, வியாபகமும் வியாப் பியமுமான இருபொருள் ஒருதன்மையான் ஒற்றுமைப்பட்டு நிற்குந் தாதான்மிய சம்பந்தம் ஒன்றுண்டெனவும், அதுவே அன்மைப்பொருள் பற்றி அத்துவிதமென்னுஞ் சொல்லா னுணர்த்தப்பட்டதெனவும் அறிய மாட்டாதார் அத்துவிதமென்னுஞ் சொற்குத் தத்தமக்கு வேண்டியவாறே பொருள் செய்வாரும்; * "திலத்தின்கண்ணே தயிலம்போல முதல்வ னெல் லாப் பொருளினு மகமும் புறமுமாய் விரவிநிற்பன்" என்னுஞ் சுருதியும், † "ஆன்மா எதனை எதனைப் பற்றினன் அதனதன்வண்ணமே தன்வண்ண மாதக்கொண்டு அதுவதுவாய் நிற்பன்" எனத்தொகுத்து ஒருவார்த்தையிற் றெளிய வுணர்த்துஞ் சுருதியும், "முப்பொருளுஞ் சமவியாபகமாயினும் நீரும் எண்ணெயும் போல ஒன்றற்கொன்று தூல சூக்குமங்களா மியல் புடைமையின் அதுபற்றி வியாப்பியமும் வியாபகமுமாய் நிற்பனவாம்" என்னுஞ் சுருதியும், இன்னும் இவைபோல்வன பிறவும் பயின்றறியாமையிற் ‡ "கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற்—பெற்றதாம் பேதையோர் சூத்திர—மற்றதனை—நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்—புல் லறிவு காட்டி விடும்" என்னும் முறைமையாய்த் தாங்கற்றதுகொண்டு முன் னொடுபின் மலைவற நோக்குமாறின்றிச், சிவதீக்கையின் அத்துவசுத்தி செய்தபின் ஆன்மாவைத் துவாதசாந்தத்திற் சிவனோடு சம்பந்தப்படுத்திச் சிவனுக்குரிய எண்குணங்களையும் ஆன்மாவின் மாட்டு விளக்கிச் சிவசம மாகச்செய்த முறைமையும் மறந்து, சாங்கியர்மதத்தில் வீழ்ந்து, முப் பொருட்குஞ் சந்நிதிமாத்திரையே சம்பந்தம் பிறிதில்லை யெனத் தம்மறி வின்மையைப் புலப்படுத்திச், சுத்தாத்துவிதமெனச் சைவத்திற் கூறும் வாய்பாட்டோடு முரணுமைப்பொருட்டு அநாதிமுத்தனாகிய சிவனும் இடையே முத்தனாகிய ஆன்மாவும் சுத்தமாதற்சாதியொருமையே பற்றிச் சுத்தாத்துவிதமென வழங்கப்படுமென்று போவாரு மாயினா ரென் றொழிக.

முப்பொருள்களுள், ஆன்மாச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்கு மியல் புடைமையின் எவ்வெவற்றைச் சார்ந்தான் அவ்வவற்றோடு சார்தன்மாத்தி ரையே அத்துவிதமாய்த், தத்தம் வண்ணமாகச் செய்யும் அவ்வவற்றை நோக்கத் தூலமாதலுடைமையின் அவ்வவற்றின் வியாப்பியமேயாய் நிற்ப

* திலேஷு தைலவச்சிவ ஸிக்ஷா பஹிரந்தர்வ்யாப்ய ஸ்திதஃ | இதன்பொருளை, "கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி—கள்ளும் வண்டு மருமலர்க் கொன் றையா—னள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளு—மெள்ளு மெண்ணெயும் போனின்ற வெந் தையே" என்னுந் திராவிடசுருதியினுந் தெளிக; (திருவாசகம், திருச்சதகம், ௪௬.)
† இதனை, ௩௧௬-ம் பக்கத்திற்காண்க. ‡ நாலடியார், அவையறிதல். ௪,

னென் றுணர்க. இப்பொருளே பயப்ப * "வசித்திட வரும் வியாபி" என்றார் வழிநூலாசிரியரும். அங்ஙனம் நிற்குமுறைமையுள்ளுந் தனக்கு அந்நிய சாதியாகிய ஏகதேசப்பொருள்களைச் சார்ந்து அவற்றின் வியாப்பியமாய் நிற்றல் மலத்தானாகிய செயற்கை யெனவும், சார்ந்ததன்வண்ணமாய் நின்றறியும் அறிவாகிய தன்னை நோக்கச் சூக்குமமாய்த் தன்சாதியாகிய சிவத்தைச் சார்ந்து அதனின் வியாப்பியமாய் நிற்றல் இயற்கையெனவுந் தெரிந்துணர்ந்து கொள்க. இவ்வாறன்றித் தன்சாதியாகிய சிவத்தின் வியாப்பியமாய்நிற்றலும் ஏனையவற்றின் வியாப்பியமாதல்போலச் செயற்கை யென்றல், சார்ந்ததன்வண்ணமாய் நின்றறிதல் செயற்கையென்பார் கூற்றே ஆகலின், அது பொருந்தாமை மேற்காட்டியவாற்றான் அறிக.

அற்றேல், ஈண்டு ஓதியனவெல்லாம் ஒக்கும்; முத்தியில் ஆன்மாச் சிவாநந்தத்தை அநுபவிப்பனென்றற்குப் பிரமாணமென்னையெனின், † "சிவாநுபவம்சுவாநுபூதிகமாம்" என்றற்றொடக்கத்துச் சுருதியே பிரமாணமென்க. இன்னும், "சிவாநந்தம் ஆன்மாவால் அநுபவிக்கப்படுவது, ஆநந்தமாகலின்; உலகாநந்தம் போல" என்னும் வழியளவையும் பிரமாணமாதல் கண்டுகொள்க.

அற்றேல், அநுபவிக்கப்படுவனவெல்லாஞ் சடமாதல் காண்டுமாகலின், அதுபோலச் சிவாநந்தமுஞ் சடமாவான் செல்லும்பிறவெனின், அவ்வாறே அறியப்படுவனவெல்லாஞ் சடமாதல் காண்டுமாகலின், அதுபோலச் சிவமும் அறியப்படிற் சடமாவான் செல்லுமென்பதுபற்றிச் சிவம் ஞேயப்பொருளன்றென்றல் வேண்டும்; வேண்டவே, உணராதபொருள் சூனியமெனப்பட்டு அவசித்தாந்தமாமாதலின், அது கடாவன்றென்க.

அற்றேல், சத்தாகிய சிவம் ஏனையபோலன்றிச் சுட்டிறந்துநின் றறியப்படும் வேற்றுமை யுடைமையான் அவைபோலச் சடமாவான் செல்லாதெனின்,—நன்று சொன்னாய்! சுட்டிறந்துநின் றறியப்படும் பொருள் சுட்டிறந்துநின் றறிந்தே அநுபவிக்கப்படுவதாகலிற் சுட்டியறிந் தநுபவிக்கப்படும் ஏனையபொருள்கள்போலன்றி வேற்றுமை யுடைமையான் அவைபோலச் சடமாவான் சேறல் யாண்டையதென்க. இன்னும், ஆன்மாவாலறியப்படும்பொருளெல்லாம் அவனால் அநுபவிக்கப்படும் பொருளேயாமென்னும் அவிநாபாவத்திற்கு யாண்டும் இழுக்கின்மையானும் ஆன்மாவால் அறியப்படுஞ் சிவாநந்தம் அவனால் அநுபவிக்கப்படுமென்றற்கு ஐயமென்னை யென்றொழிக.

இதனானே சிவாநந்தம் அநுபவப் பொருளாயிற் போக்கியரூபமோ போகரூபமோவென்று ஆசங்கித்துக்கூறுவார் கூற்றும் போலியாயவாறு

* சிவஞானசித்தி, ௪-ம் சூ. ௨௦.   † ஷை, அ-ம் சூ. ௩௪.

காண்க. ஆன்மாவுக்குப் பிரமேயரூபமாய் ஞேயமெனப்பட்டன வெல்லாம் அவனுக்குப் போக்கியமா மென்க.

அற்றேல், இம்முறைமைபற்றிச் சிவனுக்கு ஞேயமெனப்பட்ட பசுபாசங்கள் அவனுக்குப் போக்கியமாம்போலு மெனின்,—அறியாது கூறினாய். அறிந்த பொருளில் அழுந்துதலே சார்ந்ததன்வண்ணமாயறிதல்; அதுவே அநுபவமென்னுஞ் சொற்குப் பொருளாகலின், அவ்வியல்பு ஆன்மாவிற்கே யன்றிச் சிவனுக் கின்மையாற் சிவனுக்கு எல்லாப் பொருளும் அறியப்படும் ஞேயமாதன்மாத்திரையே யன்றி அநுபவிக்கப்படும் பிரமேயரூப மாத லின்மையிற் போக்கியமாவான் செல்லாமை உணர்க.

இன்னும், பிரமாணரூபமாகிய ஆன்மசிற்சத்தி சிவனுக்காக, தனக்காக, தன்னேடொத்த பிற ஆன்மாக்களுக்காக மெய்யாகிய நினைவுணர்விற்கு விடயமாதல் போல்வதோர் ஞேயமாதன்மாத்திரையே யன்றிப் பிரமேயமாதலில்லை யென்பதற்குப் பௌட்கரத்தில், *"ஆன்மாவே பிரமாதா, வியஞ்சகத்தால் விளங்குவதாகிய ஆன்மஞானமே பிரமாணம், அதனறிதல்வியாபாரமே பிரமிதி, ஏனையவெல்லாம் பிரமேயம்" என்னுஞ் சுருதியும், † "ஒருவாற்றானும் பிரமாணம் பிரமேயமாகாது; பிரமேயம் பிரமாணமாகாது" என வரைசெய்துவைத்தோதி, இதனானே ‡ "பிரமேயமாய் அறியப்படுவனவாகிய ஐம்பொறி முதலியவற்றைப் பிரமாணமென்றல் பொருந்தாது" என நையாயிகர் முதலியோரை மறுத்துச் சித்தாந்தம் வலியுறுத்திய சுருதியுமே சான்றாகலான், ஒருவாற்றான் ஞேயமாயினும் பிரமேயமாதல் பெறப்படாத ஆன்மசிற்சத்தி, தன்னானுதல் பிறிதோரான்மாவானுதல் சிவசத்தியானுதல் அநுபவிக்கப்படும் போலுமென்று ஆசங்கித்தற்குச் சிறிது மேலாமை அறிக.

அற்றேல், இன்பமெல்லாம் வினையின்பயனாதல் காண்டுமாகலிற் சிவாநந்தமும் இன்பமாயின் அதுவும் வினையின்பயனாய் முடியுமாலெனின்,— அறியாது கூறினாய். என்னை? தோன்றியழியுஞ் சடவின்பமாத்திரையே வினையின் பயனாவதன்றி அதனின் வேறாய் நித்தியாநந்தமான சித்தின்பம் அதுபோல வினையின்பயனாம்போலுமென் றெண்ணுதற்கோ ரியைபின்மையா னென்க.

---

* பௌட்கரம், பிரமாணபடலம்,—

ஶ்ரீவ்யக்திஸ்த வ௱ாவெக்ஷா வொயவவ நவாவ௱: |
நதவஸ்யாஹிஊ¬வீ ஜ்ஞா_நம் ஊா_தாஊா_நம் வ௱ொ_ந¬வழ |
வ௱ம் வ்ரெஊயம் ஹாவாஹி வ்யாவா௱: ஷஊஷிஷ்யதெ |
† யகூவ்ரஊாணம் நதவெ_நயம் ஊயாஹாவ: வ¬நஹி_த: |
யவெ_நயம் நஹி_த_நா_நம் யவெ_தாஊா_நந ஊீயதெ |
‡ நகஷவஸ்யாவி வஷாயஸ்ய யஷிநாஹவதிவ்ரஊா |
தஊெவ ஊா_நஊெஷவ்யம்வக்ஷ¬௱ாஹி நதாஷ்ரஶழ |

அற்றேல், சிவாநந்தம் இன்பப் பொருளென்றற்குப் பிரமாணம் என்னை? ஆநந்தமென்னுஞ் சொல்லே பிரமாணமெனின், ஆநந்தமென்னும் வடசொற்கு நிறைதல் என்பதே பொருளாகலின், அது பிரமாணமாகாதாலெனின்,—அற்றன்று; தாதுக்கள் பலபொருள் விளக்கும் என்பது வடநூலார் துணிபாகலின், உண்மை யுணர்த்திநிற்கும் "பவம்" என்னுஞ் சொல் அநுபவம் பரிபவம் விபவம் என உபசர்க்கங்களோடு கூடியவழி வேறு வேறுபொரு ளுணர்த்திநின்றாற்போல நிறைதலை யுணர்த்திநிற்கும் "நந்தம்" என்னுஞ்சொல் ஆ என்னும் உபசர்க்கத்தோடு கூடியவழி இன்பம் என்னும் பொருளுணர்த்தி நிற்றல் சாலும். அற்றாகலினன்றே, இன்பம் ஆநந்தம் என்பன ஒருபொருட் கிளவியாகவைத்து யாண்டும் வழங்கப்பட்டன; ஆகலான், அதுவே பிரமாண மென்க.

இன்னும், சர்வஞானோத்தர முதலியவற்றின் ஆநந்தமென்னுஞ் சொன்மாத்திரையானன்றி "முத்தியிற் * பரமசுக முண்டெனச் "சுகம்" என்னுஞ் சொல்லானும் பெரும்பாலும் ஓதுதலின் ஆநந்தத்திற்குப் பொருள் இன்பமன்றெனக் கொண்டதனானும் நின்கருத்து நிரம்புமாறில்லை யென்க.

அற்றேல், உலகத்தில் இன்பமென்னும் பொருளாவது புறப்பொருள்களைப்பற்றி வந்த புத்திதத்துவத்தின் பரிணாமத்தாகிய சத்துவகுணத்தின் விளக்கமே; வேறொன்றன்றாகலின், முத்தியினும் முற்றுணர்வு முதலிய எண்குணங்களின் விளக்கமே இன்பமாவதன்றி வேறாய் இன்பமென்ப தொன்றில்லை யெனின்,—நன்று சொன்னாய்; ஆன்மாவின் வேறாகிய மூலப்பகுதியின் கண்ணதாகிய சாத்துவிககுணம் ஆன்மாவின்மாட்டு மேற்பட்டு விளங்குதலே உலகவின்பம்; அதுவதுவாய் அழுந்திநின்றறிதலே அநுபவமெனப்படுமாகலின், அதுபோல ஆன்மாவின் வேறாய்ச் சிவன்கண்ணே யுளவாகிய முற்றுணர்தன் முதலிய எண்வகைக் குணங்களும் ஆன்மாவின் மாட்டு மேம்பட்டு விளங்கும் விளக்கமே சிவாநந்தவின்பம்; ஆன்மா அதுவாய் அழுந்திநின்று அவ்விளக்கத்தை அறிதலே அநுபவ மெனப்படுமென்பது எம்மனோர் சித்தாந்தமாகலின், அதனான் உனக்குப் போந்ததென்னை என்பது.

அற்றேல், சாத்துவிககுணம் ஆன்மாவின் குணமே மூலப்பகுதியின் குணமன்றென்றாற்படு மிழுக்கென்னையெனின்,—அது சிவாகம வழக்கோடு முரணுவார் கூற்றா மென மறுக்க.

அற்றேல், பசுத்துவமாய்நின்ற ஆன்மஞானமே சிற்றின்ப மெனப்படும்; அதுபோலச் சிவத்துவமாய்நின்ற ஆன்மஞானமேமுத்தியின்பமெனக்

* சர்வஞானோத்தரம், தசு ஸூவம் வாஂ வெர்ாகூூ|

கோடுமெனின்,—அற்றன்று; ஆன்மாவின் ஞானமே இன்பமாயின் அதனை யறிந்து அநுபவிக்கும் ஞானம் வேறியாதோவெனக் கடாயினர்க்குக் குணியாய் நின்ற ஞானமே அதனையறிந்து அநுபவிக்குமென விடுப்பின், குணியாய்நின்ற ஞானம் அறிவுமாத்திரையாய் நிற்பதன்றி எதிர்முகமாய் நிற்றலின்மையானும், எதிர்முகமாகாமையும் ஆதலுமாகிய வியல்புபற்றியே ஞாதா வெனவும் ஞான மெனவும் பகுத்தோதியதனை மறந்து ஞாதாவும் அதனை எதிர் முகமாகுமென முரணிக் கூறின், ஞாதாவும் ஞானமாவான் சென்று இலக்கண வழுவா மாகலானும், அதுவும் ஞானமே யாயவழி ஞாதா வென்பதொன் றின்றாய் முடியுமாகலானுங் குணகுணிகளிரண்டற்கும் இடையே பொதுவாக ஒரு ஞானமுண்டு; அதுவே ஆண்டு ஞாதா வெனப்படுமெனின், மேலும் அவ்வாறு * அநவத்தையாய் முடியு மாகலானும், ஒருபொருள் குணகுணியென்று இருபகுதிப் படுவதன்றி............

இரண்டாமதிகரணமுடிந்தது.

இலக்கணவோத்தின் மூன்றும்பாதமாகிய

## ஆறுஞ்சூத்திரமுடிந்தது.

இலக்கணவியன் முற்றிற்று.

## பொதுவதிகார முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

{ ஆறுஞ்சூத்திர பாடியத்திறுதியிற் சிறிது பாகங்கிடைத்த பிரதியில் இல்லை. }

* அநவத்தை-முடிவுபேறின்மை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உண்மையதிகாரம்.

## சாதனவியல்.

### ஏழாஞ்சூத்திரம்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

இவ்வதிகாரம், தூலாருந்ததி நியாயம் பற்றி மேலையதிகாரத்தில் முப்பொருள்களின் பொதுவியல்பு பிரமாணமுகத்தானும் இலக்கணமுகத்தானும் உணர்த்திய ஆசிரியர் அவற்றது சிறப்பியல்பு, சாதனமுகத்தானும் பயன்முகத்தானும் உணர்த்துவான் எடுத்துக்கொண்டாராகலின், உண்மையதிகாரம் என்னும் பெயர்த்து. சிறப்பியல்பு பொதுவியல்புபோல் இடையே நீங்குதலின்றி எக்காலத்தும் ஒருதன்மைத்தா யுள்ளதுபற்றி உண்மையெனப்படுமாகலின், அப்பெயர்த்தாயிற்று. இதனானே அதிகாரவியைபும் இனிது விளங்கும்.

இதனுள் இம்முதலோத்து, மேற்பொதுவியல்பாற் பெறப்பட்ட முப்பொருள்களினுள்ளும் விள்ளற்பாலதனை விண்டு அதனான் வருந் துன்பத்தினீங்குதலும், கொள்ளற்பாலதனைக் கொண்டு அதனான் வரும் இன்பத்தை உறுதலுமாகிய பயன்பெறுதற் கேதுவாகிய சாதனஞ் செய்யுமா றுணர்த்துதலின், சாதனவியல் என்னும் பெயர்த்து. * "உழப்பின் வாரா வுறுதிகளுளவோ—கழப்பின் வாராக் கையற வுளவோ" என்பவாகலின், பெரும் பயன், பெறுதற்குரிய முயற்சிசெய்தபின்னர்த்தேயாகலின், இவ்வோத்து முன் வைக்கப்பட்டது. ஒருபொருட்கு இலக்கணமுணர்ந்தவழி அதனான் வரும் பயன்பெறுதற்குரிய சாதனஞ்செய்யுமாறு யாங்ஙனமெனச் சாதனத்தை யவாவுதல் ஒருதலையாகலின், அவ்வவாய்நிலைபற்றிய வியைபானே ஒத்தியைபு கண்டுகொள்க.

* திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, க௦.

இதனுள், இம்முதற்பாதமாகிய ஏழாஞ்சூத்திரம் நுதலியபொருளென்னையோவெனின், அஃதாசிரியர் தாமே உரைக்கின்றமையின், இனிது விளங்கும்.

வரலாறு:—

எ-து. சூ-ம். எ-னின். மேலதற்கோர் புறனடை யுணர்த்துத னுதலிற்று.

எ-து. க-ரை. எ-னின். சூத்திரக் கருத்துரைக்கின்றது.

இ-ள். மேலைச் சூத்திரத்தின், உணருரு வசத்து எனவும் இருதிறனல்லது சிவசத்து எனவும் வரைசெய் துணர்த்தியவழி, அவ்வாறுணரும் பொருள் அவ்விரண்டினி லொன்றோ வேறோவென்று ஆசங்கை நிகழுமன்றே: அதனை நீக்கி அச்சூத்திரத்திற்குப் புறனக எடுத்து ஒரொழிபாகிய சதசத்தினியல்பு வரைசெய்துணர்த்து முகத்தானே மேற் பொதுவியல்பு கூறிப்போந்த ஆன்மாவுக்குச் சிறப்பியல்பு கூறுதல் நுதலிற்று இச்சூத்திரமென்றவாறு.

அதிகாரம் வேறாய வழியும் பாதவியைபுணர்ந்து கோடற்கு இவ்வாறுரைசெய்தா ரென்பது.

இப்புறனடையை வடநூலார் வாக்கிய சேடம் என்ப. இதனுட் கூறப்படும் மூன்றதிகரணமும் மூன்று புறனடைபோலுமென மலையாமைப் பொருட்டு ஓர் புறனடை என்றார். முன்னையவிரண்டும் இறுதி யதிகரணத்தைச் சாதித்தற் கேதுவாய் ஒருபொருண்மேல்வந்தனவேயாமென்பது கருத்து.

ஒன்றனை அறிந்தவழி அதனான் வரும் பயன்பெறுதற்குரிய முயற்சி செய்யலுறுவார்க்கு அதனைச் சாதிக்குமாற்றல் தமக்குண்டென்பதூஉம், சாதித்தால் வரும் பயன் இது என்பதூஉம், அதனைப் பயப்பித்தற்குச் சிறந்த சாதனமாவது இது என்பதூஉம், அது வருவாயும் உணர்ந்தாலன்றி அதன்கண் மனவெழுச்சி செல்லாமையின், ஈண்டோதப்படுஞ் சாதனஞ் செய்து பயன்பெறுதற்குரிய அதிகாரியை உணர்த்துவதாகிய இது, சாதனவோத்தின் முன் வைக்கப்பட்டது.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—மேலைச்சூத்திரத்துட் கூறிய இரண்டனுள், வாக்கு மனாதீதமாகிய சிவசத்தின் சந்நிதியில் உணருருவாகிய அசத்தெல்லாம் பாழே. ஆகலாற் சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை யறிந்து அநுபவியாது; அசத்தாகிய பாசம் அறிவில்லாத சடமாகலிற் சத்தாகிய சிவத்தை யறிந்து அநுபவியாது; ஆகலாற் பாரிசேடவளவையானே இருதிறனறிவுளதொன் றுண்டென்பது பெறப்படுதலின், அதுவே சத்தாதற்றன்மையும் அசத்தாதற் றன்மையுமாகிய இரண்டுமன்றிச் சதசத்தாயுள்ள ஆன்மாவா மென்றவாறு.

இரண்டனுள் ஒன்றனைப் பிரிக்கின்றமையிற் சத்தே என்னும் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. அசத்திலதாகலின் என்றுரைக்க.

அசத்துச் சத்தை அறியாமைச்குஞ் சத்தெதிர் சூனியமாதலே ஏது வாதல் அமையுமாயினும் வலியுறுத்துதற்பொருட்டு வேறுமோரேதுக் கூறினர். இக்கருத்தே பற்றிச், * "சத்தின்மு னிலாமை யானுந்—தனைக்கொடொன் றுணர்த லானும்" என இரண்டனையு முடனெடுத்தோதினர் வழிநூலாசியரு மென்க.

அறிதல்-ஈண்டு அநுபவித்தல் மேற்று. † 'இனைத்தென வறிந்த பொருட்கு வினைபடு தொகுதிக்கண் வேண்டப்படும் முற்றும்மை' விகாரத்தாற் றொக்கது.

இதனுள், யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலிற் சத்தே யறியாது என்றது ஓரதிகரணம்; அசத்திலதறியாது என்றது ஓரதிகரணம்; இருதிறனறிவுளதிரண்டலா வான்மா என்றது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச் சூத்திரமென் றுணர்க.

---

## முதலதிகரணம்.

அவற்றுள், ‡ "மண்டிய வுணர்வு யிர்க்காய் மன்னிநின் றறியும்" என்னுஞ் சிவாத்துவித சைவரை மறுத்தற் கெழுந்தது முதலதிகரணம்.

அஃதாமாறு:—சிவாத்துவிதசைவர் மேலைப் பொதுவதிகாரத்திற் கூறியவாறே பதிபசுபாசங்கள தியல்பும், தத்துவங்களுக்குத் தோற்ற வொடுக்கங்களும், அஞ்சவத்தைப்படும் வேறுபாடுகளும் அனைத்துஞ் சித்தாந்தசைவரோ டொப்பக் கொண்டு, பசுபாசங்கள் பதிவியாபகத்தின் வியாப்பியமாய் நிற்பனவன்றித் தனித்த முதலன்மையின் முப்பொருட்குந் தம்முள் வேற்றுமை குணகுணிகட்குத் தம்முளுளதாகிய வேற்றுமைபோல உட்பேதமேயன்றிப் புறப்பேதமின்மையான், மரத்தின் வியாப்பியமான கவடு கோடு முதலியன வெல்லாம் மரமேயாமாறுபோலச் சதசத்தும் அசத்துமாகிய அனைத்துஞ் சத்தெனவே படுமெனவும், படவே, பதித்தன்மையின் வேறாய்ப் பசுவுக் கறியுந்தன்மை யுண்டென்னிற் றனித்த முதலெனப்பட்டு வழுவாமாகலின், சத்தாகிய பதிப்பொருளே ஆன்மாவினிடமாகநின்று அறியுமெனவும், அனைத்துஞ் சத்தாயவழிச் சத்தின் வேறாய் அறியப்படும் பொருளொன்றின்மையின் அஃதறியுமாறியாங்ஙனமெனக் கடாயினர்க்குப், புறப்பேதமாயின்றாயினும் அகப்பேதமாகி அசத்தாகிய பாசமுண்மையின், அதனை அஃதறிதல் கூடுமெனவும், சத்தின் முன்னர் அசத்தெல்லாஞ் சூனியமாகலின், அஃததனை அறிதல் கூடாதெனின், சத்தின்முன் அசத்துச் சூனியமென்றல், § "தந்திடுஞ் சிவன வன்றன் சந்நிதி தன்னி னின்றே" எனவும், ¶ "கூடுமொளி வளர் குடிலை மாயை மேவி" எனவும், ௦ "தாரகமா—மத்தன்றுணிற்றல்" எனவும், ** "விமல னுக்கோர்—சத்தியாய்" எனவும், †† "உலகமே யுருவமாக" எனவும், ‡‡ "அத்துவா மூர்த்தியாக" எனவும், §§ "இருநிலனாய்த்

---

* சிவஞானசித்தி, எ-ம் சூ. க. † தொல்காப்பியம், கிளவியாக்கம், ஙங. ‡ சிவப்பிரகாசம், உண்மை, கரு. § சிவஞானசித்தி, க-ம் சூ. கக. ¶ சிவப்பிரகாசம், பொது. உ. ௦ இந்நூல், க-ம் சூ. உ-ம் அதிகரணத்து உதாரணம், உ. ** சிவஞானசித்தி, உ-ம் சூ. ருங. †† ஷை, ரு-ம் சூ. எ. ‡‡ ஷை, க-ம் சூ. ருகூ. §§ திருநாவுக்கரசுநாயனார் தேவாரம், பொது, நின்ற திருத்தாண்டகம், க.

தீயாகி நீரு மாகி'' எனவும் வரும் இத்தொடக்கத்துச் சுருதிகளோடு முரணி மாயாவாதிகூற்றுய் முடியுமன்றே யெனவுங் கூறுவாராகலான், அதனை மறுத்துச் சத்தே யறியாது என்னும் மேற்கோளைச் சாதித்தற்கு எடுத்தோதிய ஏதுவை வலியுறுத்துகின்றது இவ்வதிகரணமெனக் கொள்க.

அதிகரணவியைபுபற்றியுந் தலைமைபற்றியுஞ் சத்தினியல்பு முதற்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது.

ஈண்டுச் சத்தினிடத் தசத்துப் பிரகாசியா தென்றது எனவரும்.

வாக்குமனாதீதகோசரமாய்ச் சுட்டுணர்வின்றிநின்றறியப்படுஞ் சிவசத்தின்முன்னர்ச் சுட்டியறியப்படும் அசத்தாகிய பாசம் விளங்கித்தோன்றாதென்பதாம்.

ஈண்டுச் சூனியம் என்றது விளங்காமைப்பொருட் டென்பார், பிரகாசியாது என்றுரைத்தார். *''முனைத்திடாது'' என்றார் வழிநூலாசிரியரும். முனைத்திடாமையாவது இது குடம் இஃதாடை என நம்மனோராற் சுட்டியறியப்படுமாறுபோல முதல்வனாற் சுட்டி யறியப்படுவதாய் வேறு நில்லாமை என்க. எனவே, ஈண்டுச் சத்தேதிர் யாவையுஞ் சூனியம் என்றது கொண்டு †''தந்திடுஞ் சிவன வன்றன் சந்நிதி தன்னி னின்றே'' என்றற்றொடக்கத்துச் சுருதிகளோடு முரணுதலும், மாயாவாதி கூற்றாதலு மின்மையின், இவ்வேதுவானே இது குடம் இஃதாடை என்று இவ்வாறு அசத்தின்கண் நிகழுஞ் சுட்டுணர்வுடையது சிவசத்தென்றல் பொருந்தாமையின், சத்தே அசத்தை யறியுமாறு யாங்ஙன மெனச் சிவாத்துவிதசைவரை மறுத்தவாறு காண்க.

அற்றேல், அசத்து விடயமாய் விளங்குதற்குரிய சிற்றுணர்வு சிவசத்துக் குண்டென்றாற்படு மிழுக்கென்னை யென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான் எனவரும்.

ஆன்மாவுக்குச் சிவத்தைச் சார்ந்து சுட்டிறந்தறிவதாகிய தன்னியல்பு விளங்கினவிடத்துச் சுட்டியறிவதாகிய பொதுவியல்பு விளக்கமின்றி நிற்றலான் ஈண்டுச் சத்தினிடத் தசத்துப் பிரகாசியாது என மேற்கொண்டதென்றவாறு.

எனவே, முத்திநிலையின் ஆன்மாச் சிவத்தைச்சார்ந்து தன்னியல்பைத் தலைப்பட்டவழிச் சுட்டுணர்வு நிகழாதென்பது இருவர் மதத்தினு மொக்குமாகலான், ஆன்மாவுக்கு ஆண்டுச் சுட்டுணர்வு நிகழாமை பிறிதொன்றாற் பெறப்படாமையின், அநாதிமலமுத்தனாகிய முதல்வனுக்குச் சுட்டுணர்வில்லை யென்பது பெறப்படுதலின், அத்தன்மையனாகிய முதல்வனிடத்து

* சிவஞானசித்தி, எ-ம் சூ. க. † ஷை, க-ம் சூ. கக.

அசத்துச் சுட்டியறியப்படுவதாய் விளங்கி வேறுநிற்பது யாங்ஙன மென மேற்கோளைச் சாதித்தவாறு காண்க.

எக்காலத்தும் நிலைபெற்றுள்ளதாகிய தன்னியல்பே மெய்யெனப் படும், இடையே விளங்கி மறைவதாகிய பொதுவியல்பே பொய்யெனப் படும் என்பது, மேலையதிகரணத்தும், சற்காரியவாதத்தும், அபாவவாதத் தும் உரைத்தாம்; கடைப்பிடிக்க.

மேய்யினிடத்து-மெய்பிரகாசித்த விடத்து என உரைக்க. மெய்பிரகா சித்த விடத்தெனவே ஆன்மாவுக்கென்பது பெற்றும். இவ்வாறுரைக்க அறியாதார் மேற்கோளும் ஏதுவும் ஒரு பொருளே பயப்ப உரைசெய்வர்; அவ்வாறுரைப்பின், "மலை தீயுடைத்து; தீயுடைமையான்" என்பது போல மேற்கோளைச் சாதிக்கு மேதுவாதல் செல்லாமை அறிக.

அற்றேல், இதுபற்றி முதல்வன் அசத்தை யறியானெனின் அவனது முற்றுணர்வுடைமைக்கு இழுக்காமா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

அன்னியமி லாமை யரற்கொன் றுணர்வின்று
மன்னியமி லானசத்தைக் காண்குவனே—லன்னியமாக்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று

எனவரும்.

தன்னுள் வியாப்பியமான பசுபாசங்களோடு வேற்றுமையில்லாத முதல்வனுக்குச் சுட்டியறியக் கிடப்பதொன் றில்லையாகலான், அத்தன்மை யனுகிய முதல்வன் அசத்தை அறியலுறுவானுயிற் சுட்டுணர்வின்றிநின்ற வாறே அறிவானன்றி எம்மனோர்போலத் தனக்கு வேருகச் சுட்டியறிவா னல்லன்; நன்மையில்லாத அசத்து ஞாயிற்றின்முன் இருள்போல அவ னெதிர் விளங்குதலில்லை ஆகலானென்க.

எனவே, சுட்டுணர்வு முற்றுணர்வைத் தடுப்பதாதலான் அஃதில்லாமை முற்றுணர்வுக்கு மேம்பாடாவதன்றி இழுக்கன்மையான் அதுபற்றி ஆசங் கையில்லை என்பது வலியுறுத்தவாறு காண்க.

*"மாயா தநுவிளக்காம்" எனவும், †"ஆதலா லிரண்டுஞ் சோதி யிரு ளென வேரும்" எனவும், ‡"இகலிவரு மிவையுணரி லிருள்வெளியாந் தன்மை" எனவும் ஓதுதலின், மாயையும் அதன் காரியமும் மலம்போல முதல்வனுக்கு மறுதலைப்பொருளன்மையான், ஈண்டுக் கதிர்முன்னிருள் போல என்றது விளங்காமைமாத்திரைக்கு ஒருபுடையுவமையாக எடுத்துக் காட்டியதேயாமென அவற்ருேடு முரணுதவாறு காண்க.

* இந்நூல், ச-ம் சூ. உ-ம் அதிகரணத்து உதாரணம், க. † சிவஞானசித்தி, உ-ம் சூ. அச. ‡ சிவப்பிரகாசம், பொது, உரு.

மற்று-அசை. மற்றுக் காண்குவனேல் என மேலே கூட்டியுரைத்து வினைமாற்றின்கண் வந்ததெனினு மமையும். மாணு என்பது பெயரெச்ச வெதிர்மறை. இன்மை-இன்மையான் என்க.

முதலதிகரணமுடிந்தது.

---

## இ ர ண் டா ம தி க ர ண ம்.

மேலையதிகரணத்திற் சிவாத்துவிதசைவரை மறுத்துச் சத்தே யறியாது என்றதனைச் சாதித்தவழி, அதனை யுடன்பட்டுச் சிவசங்கிராந்தவாதசைவர் ஆன்மா விளக்கம்போல விகாரமின்றி அறிவுமாத்திரையாய்நிற்பதன்றி ஒன்றனை அறியுமாறில்லை; அவ்வான்மாவின் சந்நிதியிற் காந்தபசாசம்போல உடலியங்குமாறு அதன்கணின்று கருவிகளே விடயங்களை அநுபவிக்கு மெனவும், மலநீங்கும்வழிக் கண்ணாடியின் முகவொளி தோற்றுமாறுபோல முதல்வன்றிருவருள் ஆன்மாவின்மாட்டுச் சங்கிரமித்துத் தோன்றுமெனவும், அவ்வழி உப்பளத்திட்டவை யெல்லாம் உப்பாமாறுபோல ஆன்மாச் சிவமேயாய் அவ்வான்மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுகரணங்களுஞ் சிவகரணங்களாய் மாறிச் சிவத்தை அறியு மெனவுங் கூறுவர். அவற்றுட் சந்நிதிமாத்திரையானே கருவிகள் விடயங்களை அறியு மென்பது, ஐம்பொறிகள் ஆன்மாவாலுணருமெனச் சாங்கியரை மறுத்த அதிகரணத்தானே மறுக்கப்பட்டமையின், அவையே சிவகரணங்களாய்ச் சிவத்தை அறியும் என்பதனை மறுத்து, அசத்தறியாது என்றதனைச் சாதித்தற்கெடுத்தோதிய ஏதுவை வலியுறுத்தற் கெழுந்தது இரண்டாம் அதிகரணம்.

இவ்வதிகரணம் முன்வைக்கற்பாலதாயினுஞ் சத்து அதிகாரப்பட்டமையின், அவ்வியைபுபற்றி அதனை முன்வைத்தா ரென்பது.

இனி அசத்தினுக் குணர்வின் றென்றது

என வரும்.

ஈண்டு அசத்து என்றது தத்துவப்பிரபஞ்சத்தை; ஏனைப்பிரபஞ்சத்திற்கு அறிவுண்டெனக்கொள்வார் யாருமின்மையான் ஆண்டு ஐயப்பாடு நிகழாமையின், அதனை ஓரதிகரணமாகவைத்துச் சாதிக்கவேண்டாமையான் என்பது. சூத்திரத்தில் இலது என்றது அறிவிலதென்னும் பொருட்டென்பார், உணர்வின்று என உரைத்தார்.

அற்றேல், ஆன்மசந்நிதி யில்வழித் தத்துவங்களுக்கு உணர்வில்லை யென்றதொக்கும், அஃதுள்வழியும் அவற்றிற்கு அறிவில்லை யென்றல் பொருந்தாது; என்னை? பதிஞான பசுஞானங்களோ டொப்பப் பாசஞான மொன்றெனவைத் தெண்ணுதலின், அவற்றிற்கு அறிவுண்டென்பது பெறப்படுமாலென்று ஆசங்கைநிகழ்ந்தவழி, அதனை நீக்கி, மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

அதுதான் நிரூபிக்கி லின்றாகலான்

என வரும்.

அவ்வசத்தாகிய தத்துவப்பிரபஞ்சமானது பொதுமையான் நோக்கும்வழி அறிவுடையதுபோலத் தோன்றினும் ஐயந்திரிபின்றி மாசறுகாட்சியான் ஆராயும்வழி அறிவில்லதாதலான் அசத்தினுக்கு உணர்வின்று என மேற்கொண்டதென்றவாறு.

எனவே, பாசம் வாயிலாக நிகழும் பசுஞானமே பாசஞானமென்று உபசரித்துக் கூறப்படும்; அதனைப் பாசத்திற்குள்ள ஞானமெனக் காண்டல் நிருபியாதவழிப்படும் மடமையே, பிறிதில்லை யென்றவாறாயிற்று.

அற்றேல், உள்ளதுபோலத் தோன்றி இல்லதாதல் யாங்ஙனமென்னும் ஆசங்கையை உவமைமுகத்தா னீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

பேய்த்தேர் நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் கா ணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதெனக் காண்
எனவரும்.

பாலைநிலத்தின்கட் காணப்படும் பேய்த்தேரை நீரென்றுகருதி அதனை உண்ண வருகின்ற நீர்வேட்கையுடைய மடவோனுக்கு அதனை அடுத்தவழித் தன்னாலணையப்பட்ட அப்பேய்த்தேர் நீராதலின்றி அசத்தாந்தன்மைபோலக், குரவ னறிவுறுக்கும் உபதேசமொழி கிடைப்ப அவ்வசத்தி னியல்பை ஆராய்ந்தறிவாரின்றி அறியமாட்டாதாருள்வழி அவர்க்கு அவ்வசத்தின்கண் அறிவில்லதாய் அசத்தாந்தன்மையின்றி, அறிவுள்ளதாய்ச் சத்தாந்தன்மையே காணப்படும்; குரவ னறிவுறுக்கும் உபதேசமொழி கிடைப்ப அவ்வசத்தி னியல்பை ஆராய்ந்தறிய வல்லார்க்கு அஃதறிவில்லதேயாமென்று அறிவாயாக என்க.

மற்று-வினைமாற்றின்கண் வந்தது. மை-பகுதிப்பொருள்விகுதி. இன்-உவமவுருபு. வாய்த்தல்-கிடைத்தல். இல்வழியின் என்பதூஉம், அசத்தின்மை என்பதூஉம் மறுதலைப்பொருளுணர நின்றன. நான்கனுருபு விகாரத்தாற் றொக்கது; *"ஐந்தவித்தானாற்றல்" என்புழிப்போல. 367

இரண்டாமதிகரண முடிந்தது.

## மூன்றாமதிகரணம்.

மேலை யதிகரணங்களாற் சிவசத்தின்றன்மையே ஆன்மாவுக்குத் தன்மையன்றி வேறில்லை யென்னுஞ் சிவாத்துவிதசைவரையும், ஆன்மாவுக்குத் தன்மையென்ப தொன்றில்லை யென்னும் சிவசங்கிராந்தசைவரையும் மறுத்துச், சத்தும் அசத்துந் தம்முள் ஒன்றனையொன் றறியுமா றில்லை யெனச் சாதித்தவழி, இரண்டும் இவ்வாறாயின் இவற்றை யறியும்பொருள் வேறென்னை யென்னும் ஆசங்கையை நீக்கிப் பாரிசேடவளவையாற் சதசத்

* திருக்குறள், ௩-ம் அதி. நீத்தார்பெருமை, ௫.

தாகிய ஆன்மாவி னியல்பை வரைசெய்துணர்த்துதற் கெழுந்தது மூன்று மதிகரணம்:—

இனி இருதிற னறிவுள திரண்டலா வான்மா வென்றது

எனவரும்.

ஈண்டுச் சத்தெதிர் நில்லாத அசத்துஞ் சத்துந் தம்மு ளொன்றுனென் றறியப்படாமையான் ஆன்மாவாலும் அறியப்படாதவழி அவை பயப்பாடின்றிச் சூனியமாய் முடியுமாகலான், இரண்டலா வான்மா இருதிற னறிவுளதேயாம்; தம்முளொன்றுனென் றநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையும் அநுபவிக்குங் கண்போலுமென அநுமானங் கூறிக் காண்க.

ஈண்டு இருதிறனறிவுளது என்னுந் தொகைச்சொல் விரியுங்காற்படும் பொருள் வேறுபா டுரைக்குமுகத்தானே ஆன்மாவினியல்பு வேறுவேறு கூறுஞ் சமயங்களெல்லாவற்றையும் மறுத்தவாறுணர்த்தற்கு எழுந்த பொழிப்புரை:—

இவ்விரண்டினையு மறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலு முளதாயுள்ள அதுவே அவ்வான்மாவா மென்றது

எனவரும்.

மேற்கூறிப்போந்த சத்து மசத்துமாகிய இவ்விரண்டினையு மறியுந்தன்மைத்தாய், அறிவிக்க வறிவதாகிய வுபதேசியாய், நிலைபெற்ற சத்தசத்திரண்டன்பாலும் அநுபவ வறிவுளதா யுள்ள அதுவே சத்து மசத்துமல்லாத சதசத்தாகிய ஆன்மா என்றவாறும். இருதிறனறிவுள திரண்டலாவான்மா என மேற்கொண்டதென்றவாறு.

ஆய் என்னும் வினையெச்சமிரண்டும் நின்ற என்னும் பெயரெச்சவினையோடு தனித்தனி முடிந்தன. நின்ற என்னும் பெயரெச்சம் உள்ள என்பதன் முடிபாகிய அது என்னும் பெயர்கொண்டு முடிந்தது. இருதிறனறிவு என்னுந் தொகைச்சொல் ஈண்டு மூன்று பொருளின் மயங்கிற்றென்னுங் கருத்தான் இவ்வாறுரைக்கப்பட்டது. அவற்றுள், இருதிறனையு மறியும் அறிவு என்னும் இரண்டாம்வேற்றுமைத்தொகைப்பொருள் பற்றி இரண்டினையு மறிவதாய் நின்ற அது எனவும், இருதிறனுல் விளங்கிய அறிவு என்னும் மூன்றும்வேற்றுமைத் தொகைப்பொருள் பற்றி உபதேசியாய் நின்ற அது எனவும், இருதிறனிலுமுள்ள அறிவு என்னும் ஏழாம்வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி இரண்டன்பாலு முளதாயுள்ள அது எனவும் உரைத்தாரெனக் கொள்க.

இரண்டினையு மறிவதாய் நின்ற அது என இரண்டாம்வேற்றுமைத் தொகைப்பொருள் பற்றி இரண்டு மிவ்வாறுயின் இவற்றை அறியும் பொருள் வேறென்னை யென்னும் வினுவுக்கு விடைகூறி அவ்விருவர் மதங்களையும், அவற்றோ டொருதன்மையவான புறச்சமயங்களையும் மறுத்தவாறு.

உபதேசியாய் நின்ற அது என மூன்றும்வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி ஆன்மா அறிவிக்க வேண்டாது தானே அறியுமியல்பிற்றென்னும் சமவாதசைவர் ஈசுரவவிகாரவாதசைவர் ஐக்கியவாதசைவர் மதங்களையும், அவற்றோ டொருதன்மையவான புறச்சமயங்களையும் மறுத்தவாறு.

இரண்டன்பாலு முளதாயுள்ள அது என ஏழாம்வேற்றுமைத் தொகைப் பொருள்பற்றி ஆன்மாவினறிவு சத்தோடு கூடுமாறில்லை யென்னும் பாடாணவாதசைவர் பேதவாதசைவர் மதங்களையும், சத்தினோடு கூடியவழி ஒன்றாய்ப் போதலேயன்றி அதன்பா லுளதாமாறில்லை யென்னுஞ் சுத்த சைவர்மதத்தையும், அவற்றோ டொருதன்மையவான புறச்சமயங்களையும் மறுத்தவாறு.

இவ்விரண்டினையு மறிவதாய் எனவே, அவ்வறியுந்தன்மை இவ்விரண் டன் றன்மைபோலன்றி *"இரு ளொளிய லாக்கண் டன்மை" போல வேறாயதோர் தன்மை என்பதூஉம், உபதேசியாய்நின்ற எனவே, அத் தன்மை ஆகாயத்தன்மையாகிய ஓசைபோலத் தன்னை விளக்குவதாகிய வியஞ்சகமுள்வழியே விளங்குவதோர் தன்மை என்பதூஉம், இரண்டன் பாலு முளதாய் எனவே,அது படிகம்போலச் சார்ந்ததன்வண்ணமாய் அழுந் துவதோர் தன்மை என்பதூஉம் பெற்றாம்.

இனி, இம்மூன்றனுள் இரண்டினையு மறியும் என்றதனை வலியுறுத்தி இரண்டலாமையை உணர்த்துதற்கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்றாகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றெக்கு

　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　எனவரும்.

நுணுகியநூல்களை ஆராயும் ஆன்மாவே அருவாகிய சத்தினையும் உருவாகிய அசத்தினையும் அறிவதுதலான், அஃது அவ்விரண்டுமன்றி வேறு மென்க.

அற்றேல், அவ்வான்மாத் தன்னையறியுமோ? அறியாதோ? எனக் கடாயினார்க்கு அறியுமெனில், தன்னோடுளப்பட மூன்றனையும் அறிவதென் றாது அவ் விரண்டினையு மறிவதாய் என்றல் பொருந்தாது; அறியாதெனின் அறியாதபொருள் சூனியமெனப்பட்டு வழுவாமாலெனின், ஆன்மாவினுண் மைத்தன்மை சத்தும் அசத்தும்போல விளங்கித்தோன்றியவற்றோடொப்ப நிற்பது மன்றாய், விளங்கித்தோன்றாது சூனியமாய் நிற்பதுமன்றாய் மலரின் கண் வாசம் இவ்விருவகையுமன்றி அதன்கணடங்கித்தோன்றுமாறுபோலச் சத்தினு மசத்தினுஞ் சார்ந்ததன்வண்ணமாய் அடங்கித்தோன்றுவதோ ரியல்பாம்; ஆகலான், அஃது அவ்விரண்டினையும் அறியுமுகத்தான் அறி யப்படுவதன்றி அவைபோலத் தனித்தனி யறியப்படுவதொன்றன் றென்க.

* சிவப்பிரகாசம், உண்மை, எ.

ஆகலான் அஃது அவ்விரண்டினையும் அறியுமுகத்தா னறியப்படுவ தன்றி அவைபோலத் தனித்தனி அறியப்படுவதொன்றன்றென்பது குறிப்பெச்சம்.

சுட்டியுணரப்படாமைபற்றிச் சத்தை அரு என்றும், சுட்டப்படுதல் பற்றி அசத்தை உரு என்றுங் கூறினர். *"உணருருவசத்து" என்புழி உரு என்றதும் அதுபற்றி. அறிதலான் அன்றாகும் எனக் கூட்டுக. இழை நூலாகலான் ஈண்டுச் சாத்திரத்தை புணர்த்திற்று. ஆய்தல்-நுணுகுதல்; †"ஒய்த லாய்த னிழத்தல் சாஅ—யாவயி னுன்குமுள்ளத னுணுக்கம்" என்றார் தொல்காப்பியனாரும். ஆயிழை எனப் பொருளினுணுக்கம் நூன்மேலேற்றப்பட்டது. இழையை என இரண்டாவது விரித்துரைக்க.

ஆன்மாவுக்கு அறியுந்தன்மை உண்டாகலானன்றே வேதாகம முதலிய நூல்கள் உளவாயினவென அதனை வலியுறுத்துவார், ஆயிழையாயான்மா என உடம்பொடுபுணர்த்தோதினர். ‡"பலகலை யுலகி னிலவுத லானும்" என்றார் புடைநூலாசிரியரும். இவ்வாறன்றி ஆயிழையாய் என்பதனை மகடூஉமுன்னிலையாக வைத்துரைப்பின் இவ்வுதாரணம் மேலதனை வலியுறுத்துதற் கெழுந்ததன்றாய்க் கூறியதுகூறலென்னுங் குற்றப்படுமென் றொழிக.

அருவுருவாய் என்புழி ஆக்கச்சொல் உவமப்பொருள்குறித்து நின்றது; §"ஆள்வா ரிலிமா டாவேனோ" என்புழிப்போல. தோக்குத் தோன்றல் எனக் கூட்டுக.

அற்றேல், ஆன்மாவுக்கு அவ்வறியுந்தன்மை சிவசத்தோ டொப்பச் சுதந்திரமா யுண்டென்றாற்படு மிழுக்கென்னை யென்னும் ஆசங்கையை நீக்கி உபதேசியாய் என்றதனை வலியுறுத்தி இரண்டலாமையை உணர்த்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர் நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்
எனவரும்.

நீ அறியும் முறைமை சொல்லில் அறிவை விளக்குதற்குரிய வியஞ்சகமில்வழி ஒரு விடயத்தை இன்னதென் றறியமாட்டாது மயக்கத்தை யுற்றும், பசிநோய்க்கு அன்னம்போல அம்மயக்கநோய்க்கு மருந்தாகிய வியஞ்சக முள்வழி அம்மயக்கம் நீங்கி அதனை இன்னதென நிச்சயித்தும் இங்ஙனம் அறிவுழியும் ஒருங்கே அறியமாட்டாது ஒருவிடயத்திற் சென்ற அறிவை மாற்றி மற்றொரு விடயத்தை அறிந்து வருகின்றாதலின், இவ்வாறு மாறிமாறி யொன்றொன்றா யுணர்கின்ற நீ எல்லாவற்றையும் ஒருங்கே ஒரியல்பா னுணர்வதாகிய சத்தின்றன்மை யுடையா யல்லை. அற்றேல்,

* இந்நூல் சூ-ம் சூ. † தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல். ௩௪. ‡ சங்கற்பநிராகரணம், நிமித்தகாரண பரிணமவாதி நிராகரணம், ௪அ-ம் அடி. § திருவாசகம், கோயின்மூத்ததிருப்பதிகம், ௭.

வியஞ்சக முள்வழியன்றி, அறியமாட்டாத யான் அசத்தின்றன்மை யுடையே னவேனெனின், வியஞ்சக முள்வழியும் நீ முன்னறிந்து செய்த வினைகளை இப்பொழுது நீயே அறிந்தநுபவிக்கின்ற யன்றி அசத்தாகிய பிரபஞ்சம் அறிந்தநுபவித்தலின்மையான் அவ்வசத்தின்றன்மை யுடையாயுமல்லை; வியஞ்சகமுள்வழி அறிதலொப்புமையாற் சத்தாதலும், அஃதில்வழி அறிவு நிகழாமை யொப்புமையால் அசத்தாதலுமாகியதோர் தன்மையுடைய நீ அவ் விரண்டினும் வேறாகிய சதசத்தாவை யென்க.

பேசில் நீ சத்தாகாய் துய்யாமையால் அசத்துமலை வேறு எனக் கூட்டுக.

வியஞ்சக மில்வழித் தலைப்பட்டும் அஃதுள்வழி நீங்கியும் நிற்பதாகிய மயக்கம், உண்டியில்வழித் தலைப்பட்டும் அஃதுள்வழி நீங்கியும் நிற்பதாகிய பசியோடொத்தலின் அதனைப் பசிநோயாகவும், தீர்த்தலொப்புமை பற்றி வியஞ்சகத்தைப் பசிதீர்க்கும் மருந்தாகவும் உருவகஞ்செய்தார். இஃதேக தேசவுருவகம். மருந்து எனப் பொதுப்பட உருவகஞ் செய்தாராயினும் பசிநோய் தீர்க்கும் மருந்தே ஈண்டைக்கேற்புடையதாகலின், ஏற்புழிக்கோடலான் அவ்வாறுரைக்கப்பட்டது. அது பகுதிப்பொருள்விகுதி. தான் என்பது முன்னையது எழுவாயுருபுபட நின்றது. பின்னையது அசைநிலை. துவ்வாமை துய்யாமை என மரீஇயிற்று.

அற்றேல், இம்மயக்கம் ஆன்மாவுக்கேயன்றிச் சிவத்துக்கில்வழி இரண் டிற்குந் தம்முளியைபு கூடாதாகலிற் சிவசத்துக்கும் அஃதுண்டெனக் கோடல் வேண்டுமென்னும் ஆசங்கையை உவமமுகத்தான் நீக்கி ஆன்மா இரண்டின்பாலு முளதாதலை வலியுறுத்தி இரண்டலாமையை உணர்த்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போற்
றானே யுளமுளவாய்த் தான்

எனவரும்.

மேலை வெண்பாவிற் பெறப்பட்ட மயக்கமாகிய அறியாமை வியஞ்சக மில்வழித் தலைப்பட்டும், அஃதுள்வழி நீங்கியும் இவ்வாறு நிலைபேறில்ல தாகலான், அஃதெப்பொழுதும் ஒருதன்மைத்தாய் நிலைபெற்று விளங்கும் ஞானமாகிய சிவசத்தின்கண்ணே நிகழாது, மெய்ஞ்ஞானமாகிய அச்சிவசத் துள்ள அநாதியேதானே, குளிர்ந்த கடலின்கண் மருவாது கடலிடத்துள தாகிய நீரின்கண் மருவும் உப்புப் போலத், தான் பொருந்துதற்குரிய சத சத்தா மியல்புடைய ஆன்மாக்களும் உள்ளனவாக அவ்வான்மாக்களைப் பொருந்துமாற்றை அறிவாயாக என்க.

அஞ்ஞான மசத்தாகலான் மெய்ஞ்ஞானந் தன்னில் விளையாது, மெய்ஞ் ஞானம் உள அன்றே தானே என்புழித் தானே என்பது கட்டுரைக்கண் வந் தது. தானே யுளமுளவாய்த் தான் என்புழித் தான் என்பது முன்னையது

எழுவாய்; பின்னையது அசைநிலை. ஏயுளம்-வினைத்தொகை. ஆய் அணைதல் எனக் கூட்டுக. ஆயணைதல் என்பது "மழைபெய்து குளநிறைந்தது" என்றாற்போலக் காரணகாரியப் பொருட்கண் வந்தது. கடல் என்றது நீர்க் கிடங்கொடுத்து நிற்கும் ஆகாயம். உப்புத் தான் மருவுதற்குரிமையில்லாத கடலின்க ணின்றிக் கடலோ டியைபுடைத்தாயுந் தான் மருவுதற் குரிமையுடைய நீரின்கண்ணே உளதாயினாற்போல, அஞ்ஞானமுந் தான் மருவுதற் குரிமையில்லாத மெய்ஞ்ஞானத்தின்கணின்றி அம்மெய்ஞ்ஞானத்தினோடு அநாதியே இயைபுடைத்தாயுந் தான் மருவுதற் குரிமையுடைய ஆன்மாவின்க ணுளவாகல் அமையுமென்பார், தண்கடனீருப்புப்போல் என்றார். இதனானே வியாபக வியாப்பியங்களாமாறும் பெறப்பட்டது. இதனுள், ஆன்மாவுக் கிரண்டன்கண்ணும் இயைபுடைமை கூறவே, இரண்டின்பாலுமுள தாதலை வலியுறுத்தியவாறு காண்க.

இவ்வதிகரணத்தில் இருதிறனையுமறியு மறிவுளது எனவே, இருதிறனாகிய சத்தும் அசத்தும் எனப்பட்டனவெல்லாம் பிரமேயம், அவற்றையறியும் ஆன்மாவே பிரமாதா, ஆன்மாவி னறிவாகிய சிற்சத்தியே பிரமாணம், அவ்வறிவுநிகழ்ச்சியே பிரமிதி என்பதூஉம்; இருதிறனால் விளங்குமறிவுளது எனவே, இரண்டனுள் அசத்தான் விளங்கும்வழித் தனக்கு வேறாய் நின்று விளக்குங் காட்சியும். அநுமானமும் ஆகமமும் எனப்படும் அசத்தாகிய பாசஞானம் மூன்றுந் தனக்கு வியஞ்சகங்களாம், சத்தான்விளங்கும் வழி அன்னியமின்றித் தனக்காதாரமாய் உடனின்று விளக்குஞ் சிவஞானந் தானே வியஞ்சகமாம், ஆகலின், அதுபற்றி அவையும் பிரமாணமென்று உபசரித்துக் கூறப்படுமென்பதூஉம்; இருதிறனிலும் அறிவுளது எனவே, ஈரிடத்துங் கேடின்றி அசத்தான்விளங்கி அசத்தையறிவுழி அசத்தின்பாலும், சத்தான் விளங்கிச் சத்தை யறிவுழிச் சத்தின்பாலும் அதுவதுவாய் நின்றுளதென்பதூஉம் பெறப்படும். இவ்வாறன்றி வியஞ்சகங்களையே பிரமாண மென்னுந் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் பொருந்தாமையும், அவ்வியஞ்சகங்களான் நிகழும் பிரமிதிவேறுபாடுகளும், அவற்றதியல்புகளும் ஈண்டு விரிக்கிற் பெருகும். பௌட்கர முதலிய சிவாகமங்களிற் காண்க.

மூன்றாமதிகரண முடிந்தது.



சாதனவோத்தின் முதற்பாதமாகிய

## ஏழாஞ்சூத்திர முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# எட்டாஞ்சூத்திரம்.

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

எ-து. சூ-ம். எ-னின். ஞானத்தினை யுணரு முறைமையினை உணர்த்துத னுதலிற்று.

மேலைச் சூத்திரத்தாற் சாதித்தற்குரிய அதிகாரந் தனக் குண்டென்றறிந்த ஆன்மாவுக்குச் சாதித்ததனாற் பெறப்படும் பயன் இது என்பதூஉம், அதற்குச் சிறந்தசாதனமாவது இது என்பதூஉம், அது வருவாயும் உணர்த்துமுகத்தானே அவ்வான்மாவின் ஞானம் மேல் இருதிறனென்றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின்பா லுளதாய் அசத்தினை அறிந்து நின்றவாறும், சத்தான் விளங்கிச் சத்தின்பா லுளதாய்ச் சத்தினை அறிந்து நிற்குமாறுந் தரிசிக்கும் முறைமையினை உணர்த்துதல் சாதனவியலின் இரண்டாம் பாதமாகிய இவ்வெட்டாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

மேல் இருதிற னறிவுளது என்றவழித், தம்முன் மாறுபட்ட பொருளிரண்டன்பாலும் அறிவுளதாமா றியாங்ஙனமென்னும் ஆசங்கையை ஈண்டு நீக்குதலின், அவ்வாசங்கைபற்றிய வியைபானே அதிகரணவியைபும், மேல் ஆன்மரூப முணர்த்தி ஈண்டு அதனைத் தரிசிக்குமாறுணர்த்துதல் முறைமையாகலின், அம்முறைமைபற்றிய வியைபானே பாதவியைபும், மேலைச்சூத்திரத்தாற் சாதித்தற்குரிய அதிகாரியை உணர்ந்தவழி, எனைப் பயனுஞ் சாதனமும் வருவாயும் யாவையென இவற்றை அவாய் நிற்றலின், அவ்வவாய்நிலைபற்றிய வியைபானே ஒத்தியைபும் பெறப்பட்டன.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—ஆன்மா முன்னே செய்துகொள்ளப்பட்ட புண்ணியவிசேடத்தால் இப்பொழுது தமக்கு அந்தரியாமியாய் உண்ணின்று இதுகாறும் உணர்த்திவந்த பரம்பொருளே குருவடிவமுங்கொண்டு எழுந்தருளிச் சிவதீக்கைசெய்து, "மன்னவகுமாரனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடரோடு கூடி வைகி வளர்ந்து நின்பெருந்தகைமை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய்; நின்பெருந்தகைமையாவது இவ்வியல்பிற்று" என்றறிவுறுப்ப, அறிந்தமாத்திரையே அவரைவிட்டு நீங்கி, அந்நியமின்றி * அநந்நியமாந்தன்மையி னிலைபெற்று, அம்முதல்வன் றிருவடிகளையணையும் என்றவாறு.

* அநந்நியம் - அத்துவிதம்.

ஆன்மா என்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது. தவத்தினிற் றம்முதல் குருவுமாய் ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்த விட்டு அன்னியமின்மையின் அரன் கழல் செலும் எனக் கூட்டுக.

மன்னவ குமாரனாகிய நீ என்பது தோன்றாவெழுவாயாய் நின்றது. புலன்-ஆகுபெயர். வளர்ந்தயர்ந்தனை என்பது "ஈந்து புகழ்பெற்றான்" என்புழிப்போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது. அயர்த்தல்-மறத்தல். தம்முதல் என்றது வேறு முடிபாகலின், "யான் எம்மூர் புகுவன்; நீ நும்மூர் புகுவை" என்புழிப் போலப் பால்வழுவின்மை கண்டுகொள்க. குருவும் என்ற உம்மை இதுகாறும் உயிர்க்குயிராய் உண்ணின்றுணர்த்திய தூஉமன்றி என இறந்தது தழீஇயிற்று; சிறப்புமாம். அன்னியமின்மையின் என்பது *"அயராவன்பின்" என்பதுபோலச்சேறற்கேதுவாய் நின்றது; அன்னிய மின்றாந் தன்மையுடையவனாகிச் செல்லும் என்பதாம். அரன் என்பது சுட்டுப்பெயர்மாத்திரையாய் நின்றது; † "கற்பா டழித்த கனமா மணித் தூண்செய் தோளான்" என்புழிப்போல.

வெண்கொற்றக்குடையும், நவமணிமுடியும், சிங்காதனமும் மன்னவர்க்கே யுரிய சிறப்படையாளமாம். அதுபோலப், பிரபஞ்சமெல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய ஒருபெரு வெண்கொற்றக்குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒருபெருஞ் சுடர்முடியும், எவற்றினையும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்து மியல்பாகிய ஒருபெருஞ் சிங்காதனமும் பிறர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமைபற்றிப், பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலான் அரனென்னுந் திருப்பெயருடைய முதல்வனை மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வ முழுதுந் தனதேயாகக்கொண்டு அநுபவிக்குஞ் சுதந்திர முடைமையுஞ் சித்தெனப்படுஞ் சாதியொப்புமையும் பற்றி ஆன்மாவை மன்னவகுமாரனாகவும், அவ்வான்மாவை அறிவுப்பெருஞ்செல்வம் முழுவதும் ‡ ஆறலைத்துக்கொண்டு சிறுமையுறுத்துதலும் விதிவிலக்கை இழப்பித்து இழிதொழிலில் நிற்பித்தலுமாகிய இயல்புபற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்தார். இஃதேகதேசவுருவகம். §"மன்னவன்றன் மகன்வேட ரிடத்தே தங்கி" என வழிநூலாசிரியர் ஓதியது முற்றுருவகம். ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தென எனவே, ஐம்புலவேடரின் வளர்ந்தயர்தலும் அநுவாதமுகத்தான் ஈண்டே பெற்றாம்.

இதனுள், தவத்தினி லுணர்த்த என்பது ஓரதிகரணம்; தம்முதல் குருவுமாயுணர்த்த என்பது ஓரதிகரணம்; ஐம்புல வேடரினயர்ந்தனை வளர்ந்து என்பது ஓரதிகரணம்; விட்டன்னியமின்மையி னரன்கழல் செலும் என்பது ஓரதிகரணம்; ஆக நான்கதிகரணத்தது இச்சூத்திரமென் றுணர்க.

---

* இந்நூல், ௧௧-ம் சூ. † சீவகசிந்தாமணி, பதிகம். ௧௪. ‡ ஆறலைத்தல்-வழிப் பறித்தல். § சிவஞானசித்தி, ௮-ம் சூ. ௧.

## முதலதிகரணம்.

அவற்றுள், ஈண்டைக்குச் சிறந்த சாதனம் இது என்பதூஉம், அது வருவாயும் உணர்த்துதற் கெழுந்தது முதலதிகரணம்:—

**ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞான நிகழு மென்றது**

என வரும்.

இவ்வான்மாக்களுக்கு-சாதிக்கும் ஆற்றலாகிய அதிகாரமுள்ளன வென மேலைச்சூத்திரத்தாற் பெறப்பட்ட ஆன்மாக்களுக்கு. ஞானம்-சாதனமாகியஞானம் என்க.

ஆளுடையபிள்ளையார் முதலிய நாயன்மார்க்குத் தவமின்றியும் ஞானம் நிகழ்ந்ததாலோ வென்னும் ஆசங்கையை நீக்குதற்கும், படிமுறையானன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே அமையாதென்பது உணர்த்துதற்கும் முற்செய் தவம் என விசேடித்தார்.

ஈண்டு ஞானமென்றது, குரவனுணர்த்தியவாறு சிவஞானங் கண்ணுகக் கொண்டறிவதாகிய அறிவினை.

நிகழ்தல்-ஐயந்திரிபின்றி விளங்குதல்.

அற்றேல், *"மும்மைநற் பதிக டம்மின் முளைத்தவர் முடிந்தோர் மூவாச்—செம்மலர்க் கழல்கண் டோர்கள் சிவத்தினைச் சேர்வர்" எனவும், †"செறிந்தடிகாணச் சிவன் முத்தராய்த் திரியலாமே" எனவும், ‡"சிவார்ச்சனமார்ச் சனமாகிற்—பவமகலும் பரபோகம் பெறலாகும்" எனவும், §"ஆதார யோகநிராதார யோகமென—மீதானத் தெய்தும் விதியிரண்டே" எனவும், பிறுண்டும் இவ்வாறேதுதலின், வீடுபேற்றிற்குக் காரணம் இத்தன்மையவாகிய தவங்களுளொன்றே யமையும், அன்றி ஞானங் காரணமெனினும் இவற்றே டொப்பதொரு காரணமே யென அமையும்; அவ்வாறன்றிச் சிறந்த சாதனமென்றற்குப் பிரமாணமென்னை யெனவும், ¶"பொருவினிருவாண......மறுவகையு மொருவிகினை வரிதாம் பரபதத்துளுயிர்விரவப் பயிற்றும்" என இவ்வாறு சிவாகமங்களினுந் தீக்கையே வீடுபேற்றிற்குச் சிறந்தகாரணமென் றேதுதலின், அதுவே அமையும், ஏனைச் சரியை கிரியா யோக ஞானங்களெல்லாந் தீக்கைக் கங்கமாக விதிக்கப்பட்டன வெனக் கோடல் பொருத்தமுடைத்து; அதனையொழித்து ஞானமேவீடுபேற்றிற்குச் சிறந்தகாரண மென்றற்குப் பிரமாணமென்னை யெனவும் ஆசங்கை நிகழ்வுழி அதனைநீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

**மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்**

என வரும்.

---

* கோயிற்புராணம், இரணியவன்மச்சருக்கம், ௬௭. † மேற்படி சருக்கம், ௬௮. ‡ மேற்படிபுராணம், வியாக்கிரபாதச்சருக்கம், ௪. § திருக்களிற்றுப்படியார், ௨௨. ¶ சிவப்பிரகாசம், பாயிரம், ௬.

தவமெனப்பட்டன இவை யென்பார், சரியை கிரியா யோகங்களை என விதந்துரைத்தார். கிரியாயோகங்கள் என்னும் உம்மைத்தொகை வடநூன் முடிபு. சரியை என்பது தொகைநிலைச்சொல். கிரியாயோகமிரண்டற்குந் தீக்கை ஒன்றென்பது தோன்ற அவ்விரண்டினையுந் தொகுத்தோதிச் சரியையை வேறு வைத்தார். மேற்கோளில் முற்செய்தவத்தான் என்றதற் கேற்ப ஈண்டும் மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி என்றார். மேலாகிய உண்மைச் சரியை கிரியாயோகங்களை யென்றுரைப்பினு மமையும். கோடா என்னும் பயனிலைக்கு எழுவாய் அவை என்றெடுத்துக்கொள்க. காட்டிக்கொடுக்கும் எனற்பாலதனை இரண்டெதிர்மறையாற் கூறினார், ஞானத்தினையின்றி யமையாமை உணர்த்துதற்கு. சரியை கிரியா யோகங்களைச் செய்துழி என்றது உபலக்கணமாகலின், தீக்கை செய்துழி அதுவும் ஞானத்தைக்காட்டி யல்லது மோட்சத்தைக்கொடா எனவும் உரைத்துக் கொள்க. அவையெல்லாம் ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடாமையை வலியுறுத்துவார், நன்னெறியாகிய என ஞானத்தை விசேடித்தார். நன்மையெனப்படுவன எல்லாவற்றுள்ளுஞ் சிறந்த நன்மை யெனப்படுவது வீடுபேறென்ப. அதனைத் தலைப்படுதற்கு ஏதுவாய்ச் சிறந்த நெறியாகலின், ஞானம் நன்னெறி எனப்பட்டது.

விழுச்சுடர்ச் செம்பொன் மேருமால்வரையைத் தலைப்பட லுறுவாராய்த் தென்றிசைக்கணின்றும் வழிவினவிக்கொண்டு சென்று நாவலந்தீவிற் பாரத வருடத்தினை எய்தி, ஆண்டு நின்று நெறிவினவினார்க்கு அஃதறிந்துள்ளார் ஆண்டுக்காட்டிய நெறியே அதற்குச் சென்னெறியாயினும் அந்நெறி இமயத்தை இடையிட்டுக் கிம்புருட வருடத்திற் செலுத்தும்; ஆண்டு நின்றுஞ் செல்லும் நெறி ஏமகூடத்தை இடையிட்டு அரிவருடத்திற் கொண்டு செலுத்தும்; ஆண்டு நின்றுஞ் செல்லும் நெறி நிடதத்தை இடையிட்டு இளாவிருத வருடத்திற் கொண்டுசெலுத்தும்; ஆண்டுநின்றுஞ் செல்லும் நெறி இடையீடின்றி மேருமால்வரைக்கே கொண்டுசெலுத்தும். இவ்வாறு நாற்றிசையுள் யாண்டுநின் றெய்தினும் நாவலந்தீவினைத் தலைப்பட்டு இளாவிருத வருடத்திற் கொண்டுசெலுத்தும்: ஆண்டுநின்றுஞ் செல்லும் நெறி இடையீடின்றி மேருமால்வரைக்கே கொண்டுசெலுத்தும். இவ்வாறு நாற்றிசையுள் யாண்டுநின்றெய்தினும் நாவலந்தீவினைத் தலைப்பட்டு * இளாவிருத கண்டத்தினைத் தலைப்பட்டன்றி மேருமால்வரையை எய்தல் கூடாதென்பதூஉம், கூடாதாயினும் அவையெல்லாம் இளாவிருதகண்டத்திற் செலுத்து முகத்தான் மேருமால்வரைக்கு வழியேயா மென்பதூஉம் எல்லார்க்கு மொப்பமுடிந்தது. அதுபோல, வீடுபேற்றைக் காதலித்து அவ்வச்சமயந் தோறு முளவாகிய † "பந்தமும் பிரிவுந் தெரிபொருட் பனுவற் படிவழி சென்றுசென் றேறிச்" சைவத்தி னெய்தப்பெற்றோர், ஆசிரியன் காட்டுஞ் சைவாகமநெறியிற் சமய தீக்கையுற்றுச் சரியைநெறியைத் தலைப்பட்டு, அது முற்றியபின்னர் விசேட தீக்கையுற்றுக் கிரியைநெறியைத் தலைப்பட்டு, அது முற்றியபின்னர் யோகநூல் கேட்டு யோகநெறியைத் தலைப்பட்டு, இம்

* இளாவிருதகண்டம்-மேருமலையைச் சூழ்ந்திருக்குங் கண்டம். † கருவூர்த்தேவர்திருவிசைப்பா, திருவிடைமருதூர், ௫.

மூன்றும் முறையான் முற்றியபின்னர் நிருவாணதீக்கைபெற்று ஞானநெறியைத் தலைப்பட்டு வீடுபேறடைவர். இவ்வாறன்றி வீடுபேறடைதல் கூடாதென்பதூஉம், கூடாதாயினும் அவையெல்லாம் ஞானத்திற்கு நிமித்தமாமுகத்தான் ஏதுவாதல்பற்றி அவையவையே வீடுபேறடைவிக்கு மென்பதூஉஞ் சாலுமென்றுணர்த்துவார், நெறி என்று உருவகஞ் செய்தார். இக்கருத்தேபற்றிப், *"புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம—வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்—சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்—திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" எனவும், †"சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கம்......ஞானம்" எனவும் ஓதினர் வழிநூலாசிரியரும். நன்னெறி சன்மார்க்கம் என்பன ஒருபொருட்கிளவி.

* "சென்றாற் சைவத்—திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" எனவும், ‡"படிவழி சென்றுசென் றேறி" எனவும் ஓதியதனானே முதல்வன் வியாபகமாய்நின்றவாறே விளக்கினும் ஆன்மாக்களினறிவு தூலவறிவாகலின் அவ்வாறு விளங்கமாட்டாது தத்தமக்கேற்ற சோபானமுறையே சிறிதுசிறிதாக ஏகதேசமாய் விளங்கிவிளங்கி மேம்பட்டுவந்தே வியாபகமாய் விளங்குவதோரியல்பிற்றென்பதூஉம், அத்தன்மைநோக்கி அதற்கேற்பச் சோபானமுறையாய்த்தானே முதல்வனது சிற்சத்தியும் முற்பக்கத்திற் றிங்கள்போலத் திரோதானசத்திரூபமாய்நின்றறிவிக்கு மென்பதூஉம், எனவே, ஆன்மாக்களினறிவு அங்ஙனம் விளங்காதவழி நிகழும் அறியாமையாகிய மலமும் அதற்கேற்ற பலபல சத்திகளுடைத்தாய் அம்முறையே சிறிதுசிறிதாக முற்பக்கத்திருள்போலக் கீழ்ப்பட்டுத் தேய்ந்துதேய்ந்து முடிவின்கட் பற்றறக் கழியுமென்பதூஉம், அதுதேயத்தேய அதற்கேற்பத் திரோதானசத்தியும் அம்முறையே சிறிதுசிறிதாகத் தன்றன்மை நீங்கிச் சிற்சத்திரூபமாய்ப் பதிந்துபதிந்து முடிவின்கண் அதிதீவிரசத்தியாய்ப் பதியுமென்பதூஉம், அது பதியப்பதிய அம்முறையே விடயவெறுப்புண்டா மென்பதூஉம், அஃதுண்டாக வுண்டாக அம்முறையே வீட்டின்கண் விருப்பம் நிகழுமென்பதூஉம், அது நிகழநிகழ அதற்கேற்ப ஆண்டாண்டுப் பலவேறுவகைப்பட உபதேசங்கள் சோபானமுறையான் மேற்பட்டுளவா மென்பதூஉம், அதற்கேற்ப ஆன்மாவின்கண் அநுபவஞானங்களும் அவ்வாறே மேற்படுமென்பதூஉங் கண்டுகொள்க.

இனித், தீக்கையும் ஞானத்திற்கு அங்கமாய்நின்றே வீட்டினைக் கொடுக்குமென்பதூஉம் பாயிரத்திறுதியிற் காட்டினும்; கடைப்பிடித்துக் கொள்க.

அற்றேல், காரணமுள்வழிக் காரியநிகழ்ச்சிக் கிடையீடின்மையின், முற்செய்த சரியை கிரியா யோகங்கள் ஞானத்தைக்காட்டும் நிமித்தமென்

* சிவஞானசித்தி, அ-ம் சூ. கக. † மேற்படி சூ. கஅ. ‡ கருவூர்த்தேவர் திருவிசைப்பா, திருவிடைமருதூர், ௫.

பார்க்கு அவை செய்துகொண்டபொழுதே இடையீடின்றி ஞானம் நிகழ்தல் வேண்டும்; அவ்வாறன்றி மற்றொரு பிறவியின் ஞானம் நிகழு மாறென்னை யென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெழுந்த உதாரணம்:—

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றோர்சூழ் சொல்லுமாங் கண்டு

எனவரும்.

சரியை கிரியா யோகங்களாகிய தவத்தினைச் செய்தவர் ஒருதலையாக அவ்வத் தவப்பயன்களை எய்துதற்குரிய உலகத்தினை எய்தி ஆண்டு அவற்றை நுகர்ந்து வைகி மீள நிலத்தின் வந்து பிறத்தலைச் செய்தே எஞ்சிய வினைப் பயன்களை நுகர்ந்து விடயப் பற்றறுத்தற்பொருட்டு அவ்வாறு தவஞ்செய்து தோன்றிய நல்லினத்தின் வந்து பிறந்து அவற்றான் விடயப்பற்றறுத்து ஞானத்தினைத்தலைப்படுவரென்பதனை வீட்டுநூலையுணர்ந்தாரது சூழ்ச்சி அந் நூலின் கருத்துணர்ந்து சொல்லும் என்க.

நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதல் தவமுதிர்ச்சி யுடையார்க் கன்றிக் கூடாதென்பார், தவஞ்செய்தார் என்றும், தவமாக, பிறிதொன்றாக இவ்வுலகத்து உடம்பொடுநின் றீட்டிய வினைகள் அவ்வுலகத்திற் செலுத்தித் தத்தம் பயன் நுகர்விக்கப்படுதலை ஒருஞான்றும் பிறழமாட்டாரென்பார், என்றுந் தவலோகஞ் சார்ந்து என்றும், அத்தவஞ் செய்துழியும் ஞானம் நிகழ்ந்தாலன்றி ஏகதேசப்பற்றறுதல் கூடாமையின் அதுபற்றி அவ்வுடம்பு இறக்கு ஞான்று மனம் ஒருவிடயத்திற் சென்று பற்றியதாயின் அதனை அநு பவித்தற்குத் துணையாகி எஞ்சிநின்ற உடல்வினையோடும் ஆண்டுப் பிறந்து அநுபவித்தன்றி அவ்விடயப்பற்றறுதல் கூடாதென்பார், பவஞ் செய்து பற் றறுப்பாராக என்றும், தவஞ்செய்தார்மனம் நல்விடயங்களினன்றிப் பற்றுத லின்மையின் அவற்றை அநுபவித்தற் குரித்தாய்ச் சிறந்தபிறவி எய்துவ ரென்பார், தவஞ்செய்த நற்சார்பில்வந்துதித்து என்றும், தவமுதிர்ச்சி யுடை யார்க்கெழுந்த நுகர்ச்சி மெலிதாய்க் கழிந்தொழிவதன்றி ஏனோர்க்குப் போல முறுகுதலின்மையின் இடையீடின்றி ஞானம் நிகழுமென்பார், ஞானத்தை நண்ணுதலை என்றும், இவையெல்லாம் வேதாகமநூற்றுணி பென்பார், கற்றோர் சூழ் கண்டு சொல்லுமாம் என்றுங் கூறினார்.

ஆக என்னுஞ் செயவெனெச்சம் "உண்ணவந்தான்" என்புழிப்போலத் தற்பொருட்டாய் நின்றது. கற்றோரது சொல்லுதற்றொழிலைச் சூழ்ச்சிமே லேற்றிக் கூறினார். கற்றோர் தமதுசூழ்ச்சியான் உணர்ந்து சொல்லுவரென் பது. ஆம்-அசை.

தவஞ்செய்தாரென்றுந் தவலோகஞ் சார்ந்து எனப் பொதுப்படக் கூறினா ராயினும், சரியைக்குச் சாலோகமுங் கிரியைக்குச் சாமீபமும் யோகத்திற்

குச் சாரூபமுமாமென்பது,*"சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய சாரூப்பிய சாயுச்சிய மென்றுசதுர் விதமாம்" எனவும், †"உண்மைச்—சரியைகிரி யாயோகத் தன்மையோர்க்குச் சாலோக சாமீப சாரூ பங்கண்—மருவியிடும்" எனவும், வழிநூலாசிரியரும் புடைநூலாசிரியரும் விரித்தோதிய வாற்றானறிக.

அற்றேல், ‡"பால்போ—லொருதன்மைத் தாகு மறவினை யாபோ—லுருவு பலகொள லீங்கு" என்பவாகலின், நல்வினையெனப்பட்டனவெல்லாம் புண்ணியங்களா மன்றே: அவற்றுள் ஏனையவற்றை யொழித்துச் சரியைகிரியா யோகங்கண்மாத்திரையே ஈண்டுத் தவமென விதந்தெடுத்துக் கொண்டோதியது என்னையோவென்னும் ஆசங்கையைநீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெழுந்த உதாரணம்:—

> பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
> மிசைதது வருவினையி லின்ப—மிசைத்த
> விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
> மருவுவனு ஞானத்தை வந்து

எனவரும்.

நல்வினை செய்யத் தொடங்கி அறநூலை ஆராய்வாரது உணர்விற்கு விடயமாய் வரும்பொழுதே தம்மாற் றலைப்படுங் காமியப்பயன்களைக் கூறிக் கொண்டே வருவனவாகிய புண்ணியங்களா னுளவாய இன்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுண்டியான் வரும் இன்பத்தை யொக்குமாகலான், ஒருவனுக்குப் பந்தமுறுத்துதற்கட் பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முட் சமமாகச் சொல்லப்பட்ட புண்ணிய பாவங்களிரண்டுந் தம்மைப்போற் கெடுதலில்லாத சரியை கிரியா யோகங்களானே துலையொப்ப நேராயின், அத்தவங்களின் பயனாகிய பதமுத்திகளை அநுபவித்து வைகு மாண்டேதானே ஞானநெறியைத் தலைப்படுவன். அவை அங்ஙனம் நேராகாவிடின் மீள நிலத்தின்கண் வந்து பிறந்து வினையொப்பு நிகழ்ந்து குரவன் றிருவருள் பெற்று ஞானத்தைத் தலைப்படுவன் என்க.

பொருளுக்கோதிய பயனை உவமையினுங் கூட்டி உரைக்க.

அறநூலிற் கூறப்படும் நல்வினையின் பயனெல்லாம் அழிவெய்துவன என்பதற்கு அவ்வறநூலே சான்றென்பார், இசைத்துவருவினை என்றார். எனவே, வேள்விமுதலியனவற்றை விதித்த அறநூலே, அவற்றிற்குப் பயன் காமியமென்பதூஉ முடன் கூறுதலின், காமியப்பொருளெல்லாம் அழிவெய்துமென்பது எல்லார்க்கு மொப்பமுடிந்தமையான் அவ்வழிவெய்துவனவற்றைப் பயப்பனவாகிய புண்ணியங்கள் அழிவின்றி நிலைபேறுடைத்தாகிய ஞானத்தைப்பயக்கமாட்டா வென்றவாறாயிற்று.

இசைத்து வருதல் - "ஆடி வருதல்" "பாடி வருதல்" போல உடனிகழ்ச்சிவினை; நூலின்வினை வினைமேலேற்றப்பட்டது.

---

* சிவஞானசித்தி, அ-ம் சூ. கஅ. † சிவப்பிரகாசம், பாயிரம், கo. ‡ நாலடியார், மெய்ம்மை, அ.

சரியை கிரியாயோகங்களான் வரும் பயன் இவைபோல் அழிவெய்துவ தன்றென வேற்றுமை கூறுவார், இறப்பிறவம் என்றார். இசைத்து வரு வினையி லின்பம் நிலைபெறாமை, பசித்துண்டு பின்னும் பசிப்பார்க்கு அவ் வுண்டியான் வரும் இன்பத்தை ஒக்குமெனவே, இறப்பிறவத்தான் வரும் இன்பம் நிலைபேறுடைமை, பசித்துண்டு பின்னர்ப் பசியாதாராகிய கடவு ளர்க்கு அவ்வமிழ்தவுண்டியான்வரும் இன்பத்தை யொக்குமென்பதூஉ மாயிற்று. சரியை முதலியவற்றிற்குச் சிறந்த பயன் ஞானமேயாகலாற் சாலோகமுதலிய பதமுத்திகள் அவாந்தரப்பய னென் றுணர்ந்துகொள்க.

பின்னும் என்ற உம்மை இறந்ததுதழீஇயது. ஒப்பில் என்பது செயின் என்னும் வினையெச்சம். தவத்தான் என்பதனைத் தவத்து ஆன் எனப் பிரித்து, தவத்து என்பதற்கு ஏதுப்பொருட்கண் வரும் இன்னுருபு விரித் துரைக்க. ஆன்-அவ்விடம்; *"ஆன்வந் தியையும் வினைநிலையானும்" என் றார் தொல்காப்பியனாரும். ஒப்பில் என்றதனால் ஒவ்வாவிடில் என்பது வரு வித்துரைக்கப்பட்டது. ஆம்-அசை. தவத்தான் எனக் கூட்டி எழுவாயாக வைத்துரைப்பாரும், ஆனுருபேற்ற சொல்லாக வைத்துரைப்பாருமுளர்.

ஈண்டுக் கூறப்பட்ட இருவேறு புண்ணியங்களுள் இசைத்துவரு வினை களெல்லாம் பசுக்களை நோக்கிச் செய்யப்படுதலிற் பசுபுண்ணிய மெனவும், இறப்பிறவங் களெல்லாஞ் சிவனையே நோக்கிச் செய்யப்படுதலிற் சிவபுண்ணி யம் எனவும் பெயர்பெறும்.

அற்றேல், †"யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே--மாதொரு பாக னார்தாம் வருவர்" என்பவாகலிற், பசுக்களை நோக்கிச் செய்த வும் சிவபிரானே ‡ஏன்றுகோடலிற் பசுபுண்ணியமுஞ் சிவபுண்ணியமாகு மாலோ வெனின்,—அறியாது கூறினாய்; ஈண்டுப் பசுபுண்ணியஞ் சிவபுண் ணியமெனப் பகுத்தது செய்வாரது கருத்துவேறுபாடு பற்றியே யன்றி ஏன்றுகோடல்பற்றியன்று; செய்வாரது கருத்துவேறுபா டுணர்ந்து அவற் றிற் கிசையவே முதல்வன் பயன் கொடுப்ப னாகலானென்பது. அற்றாகலி னன்றே, மகவெனப் பல்லுயிரனைத்தையு மொக்கப் பார்க்கும் மெய்ஞ் ஞானிகள் பசுக்கண்மேல் வைத்த கருணையான் அவற்றின்கட் செய்தனவுஞ் சிவபுண்ணியமே யாயினவாறு. அற்றாயினும், தண்ணீர்ப்பந்தர் முதலிய உலகவினைபோலன்றி வேள்வி முதலிய வைதிகவினை சிவனை நோக்கி அவிப் பாகங் கொடுத்தலும் வழிபடுதலுமுடைமையின், அவை சிவபுண்ணியமுமா மென்றற்கு இழுக்கென்னை யெனின்,—அற்றன்று; ஆண்டுச் சிவபிரானுக்கு அவிப்பாகங் கொடுத்தலும் வழிபடுதலும் பசுக்களாகிய ஏனைக் கடவுளரோ டொப்பவைத்துச் செய்தலேயன்றிப் பொதுநீக்கிப் பசுபதியென்னுங் கருத் தாற் செய்தலின்மையின், அவையெல்லாங் கருத்துவகையாற் பசுபுண்ணி யமேயாம். ஆண்டுச் சிவபுண்ணியமும் அபுத்திபூர்வமாய் நிகழ்தலின், அது புத்திபூர்வமாய் இனிச்செய்யக் கடவனவாகிய சிவபுண்ணியங்களுக்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், ௩௫. † சிவஞானசித்தி, உ-ம் சூ. உ௫. ‡ ஏன்றுகோடல்-ஏற்றுக்கொள்ளல்.

கேதுவாதன்மாத்திரையாற் பயன்படுதலுடைத்தென்க. அவ்வேள்வி முதலியனவுஞ் சிவபிரானை நோக்கிப் பொதுநீக்கிச் செய்யின், அஃது ஏனைய போலப் பசுபுண்ணியமாதலின்றி முன்னர்க் கூறப்படும் பொதுச் சிவபுண்ணியமாமெனக் கொள்க. இஃதுலகவினைக்கண்ணு மொக்கும். *"வேம்பினொடு தீங்கரும்பு விரவியெனைத் திற்றி" என்றோதியதூஉம் இவ்வியல்பு நோக்கி யென்க.

இனிச், சிவபுண்ணியம் அபுத்திபூர்வம் புத்திபூர்வமென்று இருவகைப் படும். அவற்றுள், அபுத்திபூர்வம் வேள்வி முதலியவற்றுட்போலப் பொது நீக்கி யறியுமாறின்றிச் சிவபிரானை நோக்கிச் செய்வதூஉம், அந்நோக்கமுமின்றி †மாவலி முன்னைப் பிறப்பிற் செய்ததுபோலச் செய்தவினை யாதானுமோராற்றாற் சிவபிரானுக்குரிய பணியாய் முடிவதூமென இருவகைப்படும்.

இனிப், பொதுநீக்கிச் செய்யப்படுவதாகிய சிவபுண்ணியமும் பொது, சிறப்பு என்று இருவகைத்து. அவற்றுட் பொதுவாவது சிவபுண்ணியத்திற்கு அங்கமாகிய சிவதீக்கையின்றி அவ்வாறு செய்வது. சிறப்பாவது சிவபுண்ணியத்திற்கு அங்கமாகிய சிவதீக்கையுடையராய் அவ்வாறு செய்வது. இவ்விரண்டும் பத்திகாரணமாக உண்மையாற் செய்வதூஉம், புகழ் முதலிய உலகப்பயனை நோக்கிச் செய்வதூஉமென வெவ்வேறிரு வகைப்படும். அச்சிறப்புச் சிவபுண்ணிய மிரண்டுஞ் சரியையுங் கிரியையும் யோகமும் அவற்றான் நிகழும் ஞானமு மென ஒரோவொன்று நந்நான்காய் அந்நான்கினுள்ளுஞ் சரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், கிரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், யோகத்திற் சரியை கிரியை யோகம் ஞானம், ஞானத்திற் சரியை கிரியை யோகம் ஞானமென ஒரோவொன்று நந்நான்காய் முப்பத்திரண்டு வகைப்பட்டு விரியான் இன்னும் பலதிறப் படுமென் றுணர்க.

## சரியையிற் சரியை முதலியன.

அவற்றுள், திருக்கோயில் அலகிடல், மெழுகல், முதலியன சரியையிற் சரியை. ஐயைந்து மூர்த்திகள் விநாயகக்கடவுள் முதலிய ஆவரணமூர்த்திகளில் ஒரு மூர்த்தியைப் பூசித்தல் சரியையிற் கிரியை. நெஞ்சின்கண் உருத்திரக்கடவுளைத் தியானஞ்செய்தல் சரியையில் யோகம். அத்தியான பாவனையின் உறைப்பான் ஓரநுபவ வுணர்வு நிகழ்தல் சரியையில் ஞானம்.

## கிரியையிற் சரியை முதலியன.

சிவபூசைக்கு வேண்டப்படும் உபகரணங்களெல்லாஞ் செய்துகோடல் கிரியையிற் சரியை. சிவாகமத்தில் விதித்தவாறே ஐவகைச்சுத்தி முன்னுகச்

* சுந்தரமூர்த்திநாயனார்தேவாரம், திருநாகைக்காரோணத்திருப்பதிகம், கொல்லிக்கௌவாணம், ௨. † மாவலி முன்னைப்பிறப்பிற் செய்த வினையை, "நிறை மறைக் காடு தன்னி னீண்டெரி தீபந் தன்னைக்—கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட—நிறைகடன் மண்ணும் விண்ணு நீண்டவா னுலகு மெல்லாங்—குறைவறக் கொடுப்பர்போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே" என்னுந் தேவாரத்தானுமறிக; திருநாவுக்கரசுநாயனார், திருக்குறுக்கைவீரட்டம், அ.

சிவலிங்க வடிவிற் செய்யும் பூசனை கிரியையிற் கிரியை. அகத்தே பூசை ஓமந் தியானம் மூன்றற்கும் மூவிடம் வகுத்துக்கொண்டு செய்யப்படும் அந்தரியாகங் கிரியையில் யோகம். அவ்வந்தரியாக உறைப்பின்கண் நிகழும் ஓரநுபவவுணர்வு கிரியையில் ஞானம்.

## யோகத்திற் சரியை முதலியன.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் என்னும் நான்கும் யோகத்திற் சரியை. பிரத்தியாகாரமுந் தாரணையும் யோகத்திற் கிரியை. தியானம் யோகத்தில் யோகம். சமாதி யோகத்தில் ஞானம். இந்த யோகஞ் சகளஞ் சகளநிட்களங்களைப்பற்றி நின்று செய்யுஞ் சாலம்பயோகமும், நிட்களத்தைப்பற்றி நின்று செய்யும் நிராலம்பயோகமுமென் றிருவகைப்படும். இயமம் முதலிய அட்டாங்கங்களின் இயல்பெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும்; சிவாகமங்களுட் காண்க.

## ஞானத்திற் சரியை முதலியன.

இனிக், கேட்டன் முதலிய நான்கனுள், கேட்டல் ஞானத்திற் சரியை. சிந்தித்தல் ஞானத்திற் கிரியை. தெளிதல் ஞானத்தில் யோகம். நிட்டை கூடல் ஞானத்தில் ஞானமென்றுணர்ந்து கொள்க.

இவற்றுள், உபாயச்சரியையிற்சரியைமுதல் உபாய ஞானத்தில் ஞானமீறாகிய பதினாறு வகையினின்றும் பல வேறுவகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன், அவ்வவற்றிற் கேற்பக் காலாக்கினியுருத்திரர் முதல் குணதத்துவமத்தகத்திற் சிகண்ட புவனத்தின் கீழுள்ள உருத்திரரீறான அவ்வப் புவனபதிகளுலகத்திற் சாலோகமுதலியவற்றைப் பெறுதலாம். உண்மைச்சரியையிற்சரியை முதல் உண்மையோகத்தின்ஞானமீறாகிய பன்னிருவகையினின்றும் பல வேறுவகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன், அவ்வவற்றிற் கேற்பச் சிகண்ட புவன முதற் சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப்புவனபதிகளுடைய சிவலோகத்துச் சாலோக முதலிய பதமுத்திகளைப் பெறுதலாம். உண்மைஞானத்திற் சரியை முதலிய மூவகையினின்றும் பலவேறுவகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்கட்கெல்லாம் பயன், அவ்வவற்றிற் கேற்பச் சுத்தவித்தை முதலிய அதிகாரதத்துவம் போகதத்துவங்களில் வைகும் மந்திரர் மந்திரமகேசர் முதலியோர் புவனத்துச் சாலோக முதலிய அபரமுத்தியைப் பெறுதலாம். இனிப் பலவேறு வகைப்பட்டு விரியும் ஞானத்தின் ஞானங்களுள் முடிவாகிய ஞானத்திற்குப் பரமுத்தியே பயன். ஏனையவற்றிற்கு இலயதத்துவத்திற் பலவேறுவகைப் பட்ட அபரமுத்தி பய னெனக் கொள்க.

உண்மைச்சரியை முதலியவற்றிற்குச் சுத்தவித்தை முதலிய தத்துவத்துச் சாலோக முதலியவற்றிற் சேறல் பயனென்றுரைப்பாருமுளர். சிவதத்துவ புவனங்கள் ஆணவமல நீங்கி வாசனைமாத்திரமுடையவரான் எய்தப்படும் அபரமுத்தித்தானமன்றி ஏனையோரெய்தும் பதமுத்தித்தான மன்றென்பது சிவாகமங்களுக்கெல்லா மொப்பமுடிந்ததாகலின், ஞானத்திற்

றலைப்பட்டன்றி மலநீங்குதல் கூடாமையானும், *"ஈசனியோ கக்கிரியா சரியையினி னின்றோ—ரூனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லா மொடுங் கும்போ தரன்முனிலா தொழிலினுற் பவித்து—ஞானநெறி யடைந்தடைவர் சிவனை" எனப் பதமுத்திகளைப் பெற்றோர்க்கு மீட்சி கூறுதலிற் சுத்த வித்தை முதலிய தத்துவபுவனங்களின் எய்தியோர்க்கு ஆண்டுநின்றவாறே பரமுத்தியைத் தலைப்படுதலன்றி ஒருவாற்றானும் மீட்சியில்லை யென்பது சிவாகமநூற்றுணிபாகலானுஞ் சிவாகமங்களோடு முரணி அவ்வாறு கூறுதல் பொருந்தாமை யறிக. சரியை முதலியவற்றில் நின்றோர்க்குப் பயன் சுத்ததத்துவபுவனத்துச் சுத்தசாலோக முதலாயினவெனச் சில விடங்களிற் கூறியது ஞானத்திற் சரியை முதலியவற்றில் நின்றோர்க்கென்னுங் கருத்தே யாமென் றொழிக.

## சரியை.

சரியை முதலியவற்றின் இயல்பு என்னையெனிற் கூறுதும்:—அகண்டாகாரநித்த வியாபக சச்சிதாநந்தப் பிழம்பாகிய சிவபிரான், உயிர்கள் சோபானமுறையானுணர்ந்து உய்தற்பொருட்டுத் தூலமாகவுஞ் சூக்குமமாகவும் அதிசூக்குமமாகவும் மூவடிவங் கொண்டருளி அவ்வடிவங்களின் வழிபடும் முறைமையும் வேதாகமங்களில் அவனால் வகுத்தருளிச்செய்யப்பட்டனவாகலான் அம்மூவகை வடிவின்வைத்துப் பக்குவமுறைமையான் மேம்பட்டு நிகழும் நுண்ணுணர் வின்மையிற் சகளமாகிய தூலவடிவமாத்திரத்தைப் பொருளென்றுணர்ந்து காயத்தொழின் மாத்திரையான் ஆகமத்தின் விதித்தவாறு வழிபடுவது சரியை.

## கிரியை.

அஃது அடிப்பட்டுவரவர நிகழும் பக்குவவிசேடத்தான் நுண்ணுணர்வுடையராய்ச், சகளநிட்களமாகிய சூக்குமவடிவமேபொருள், சகளவடிவம் அதனை வழிபடுதற்கிடமாகிய திருமேனியென்று இவ்வாறுணர்ந்து புறத்தொழிலானும் அகத்தொழிலானும் விதித்தவாறே வழிபடுவது கிரியை.

## யோகம்.

அஃது அடிப்பட்டுவரவர நிகழும் பக்குவவிசேடத்தான் அதிநுட்பவுணர்வுடையராய், நிட்களமாகிய அதிசூக்குமவடிவமே பொருள், சகளமுஞ் சகளநிட்களமும் அதனை வழிபடுதற்கிடமாகிய திருமேனியென்று இவ்வாறுணர்ந்து அகத்தொழின் மாத்திரையான் ஆண்டைக்கு விதித்தவாறே வழிபடுவது யோகம்.

## ஞானம்.

மூன்றும் இவ்வாறு முறையே அடிப்பட்டுவரவர நிகழும் பக்குவமுதிர்ச்சியானே உள்ளவாறுணர்வு விளங்கி, அகண்டாகார நித்தவியாபக சச்சிதாநந்தப்பிழம்பே சொரூபம், ஏனைச்சகள முதலிய மூன்றுந் தூலாருந்ததிநியாயமாக அதனை உணர்தற்பொருட்டும் வழிபடுதற்பொருட்டுங்

* சிவஞானசித்தி, அ-ம் சூ. உ௫.

X "ஞானநூலின யோக லோதுவிய்ப்"



கொண்ட திருமேனியென் றிவ்வாறுணர்ந்து, காயத்தொழின் மனத்தொழி லிரண்டனையுங் கைவிட்டுக் X கேட்டன் முதலிய அறிவுத்தொழின்மாத்திரை யான் வழிபடுவது ஞானம்.

ஆகலான், அறிதலொப்புமையாற் சரியை முதலிய நான்கும் ஞானமே யாமெனவும், ஆயினும், *"அரும்பு மலர் காய் கனி" யாதல்போலச் சோபானமுறையாகிய தம்முள் வேறுபாட்டான் முறையேஒன்றற்கொன்று அதிகமாய் நான்காமெண்ணுமுறைமைக்கணின்ற ஞானமே முடிவாகிய ஞானமாமெனவும், எனவே, இந்நான்கினும் அறிவு நுணுகிவரவர அறியாமையாகிய மலமும் அம்முறையே தேய்ந்துதேய்ந்து வருதலின், இவற்றின் பயனாகிய சாலோக முதலிய நான்கும் முத்தியேயா மெனவும், ஆயினும் அம்மலநீக்கமும் அவ்வாறு நிகழுஞ் சோபானமுறையானே அவை ஒன்றற் கொன்று ஏற்றமாய் அவற்றுள் நான்கா மெண்ணுமுறைமைக்கணின்ற சாயுச்சிய மொன்றே முடிவாகிய முத்தியா மெனவும் உணர்ந்து கொள்க.

## சாலோகம்.

சாலோக முதலிய நான்கனுள் அவ்வச்சரியைக் கேற்ப அவ்வப் புவனபதியுலகங்களினெய்தி,ஒருவர் மனையிற் பணிசெய்யும் அகத்தொண்டர்க் குளதாகிய உரிமைபோல, அவ்வ வுலகத்துள் யாண்டுந் தடையின்றி இயங்கி அவ்வப்போகங்களை நுகர்ந்து வாழ்வது சாலோகம்.

## சாமீபம்.

அவ்வளவினன்றி, மைந்தர்க்குளதாகிய உரிமைபோல அவ்வப்புவனபதிகளுக்கு † அணுக்கராய் வைகி அவ்வப் போகவிசேடங்களை நுகர்ந்து வாழ்வது சாமீபம்.

## சாரூபம்.

அவ்வளவினன்றித், தோழர்க்குரிய உரிமைபோல அவ்வப் புவனபதிகளோ டொத்த வடிவமும், ஒத்த அணிகலனும், ஒத்த போகநுகர்ச்சியும் பெற்று வாழ்வது சாரூபம்.

இம்மூன்றும் உரிமை விசேடம்பற்றி முறையே தொண்டர் முதலியோரியல்பை ஒத்தலின், இவற்றை அடைதற்கு நெறியாகிய சரியை முதலிய மூன்றுந் தாதமார்க்கம், புத்திரமார்க்கம், சகமார்க்கமெனப் பெயர்பெற்றன வென்பது.

## சாயுச்சியம்.

இனிச், சரியையின்ஞானமுதல் யோகத்தின் ஞானமீறாகிய ஞான விசேடங்கட்குப் பயனெனப்படுஞ் சாயுச்சியமாவது, ஒத்தவடிவினராய் வாழ்தன்மாத்திரையேயன்றி அவ்வப்புவனபதிகளான் அதிட்டிக்கப்பட்டு அவ்வவதிகாரங்களை அவ்வவர்போலவே செய்துகொண்டு வாழ்வதென்றுணர்க.

---

* தாயுமானசுவாமிபாடல், பராபரக்கண்ணி. கருள, † அணுக்கர் - சமீபத்துள்ளவர்,

அற்றேல், இவ்வாறன்றிப் புவனபதிகளுடைய சாயுச்சியமாதலாவது அவ்வப்புவனபதிகளான் அதிட்டிக்கப்படுதலின்றியே அவரோடொப்ப அதிகாரஞ் செய்யும் ஆற்றலுடைமை யென்றுரைப்படுமிழுக்கென்னையெனின்,— நன்று சொன்னாய்! அவ்வச் சாயுச்சியத்தினின்றோர் அவ்வப் புவனபதிகளான் அதிட்டிக்கப்படுதலின்றியே அவரோடொப்ப அதிகாரஞ் செய்யும் ஆற்றலுடையராயவழி, வறிதே யிருப்பரோ? அதிகாரஞ்செய்துகொண்டிருப்பரோ? எனக் கடாயினார்க்கு வறிதேயிருப்பரென விடுப்பின், அவ்வாற்றலாற் போந்த பயனென்னை? அல்லதூஉம், வீடுபயக்கும் மெய்யுணர்வு நிகழுங்காறும் மேன்மேல் அவாச்சேறலொருதலையாகலின், ஆற்றல் பெற்றுழி வறிதேயிருத்தல் கூடாது. இனி அதிகாரஞ் செய்துகொண்டிருப்பரென விடுப்பின், அவ்வப்புவனபதிக ளதிகாரத்தை மாற்றி முழுவதுந் தாமே அதிகாரஞ் செய்வரோ? அவருமதிகாரஞ் செய்யத் தாமுமதிகாரஞ் செய்வரோ? அவரதிகாரத்தை மாற்றித் தாமே அதிகாரஞ் செலுத்துவரெனின், அவ்வப் புவனபதிகளாதலே சாயுச்சிய மெனப்பட்டு வழுவாம்; அன்றியும், பிரளயாகலர் விஞ்ஞானகலரிற் புண்ணியப்பே றுடையார்க்கன்றிச் சகலரிற் புண்ணியப்பே றுடையார்க்குப் புவனபதிகளாதல் கூடாது. அவ்வாறின்றி அவருமதிகாரஞ் செலுத்தத் தாமு மதிகாரஞ் செலுத்துவரெனின், ஒரு கம்பத்தில் இரண்டானைபோலவும், ஒருநகரியில் இருவேந்தர் போலவும் மாறுதலையன்றி அவ்வதிகாரம் இனிது செல்லாது; அல்லதூஉம், தமக்குப் பாதியதிகாரமாய் முடியும், அப்புவனபதிகட்குப் பாதியதிகாரங் குறையும் என்று இவ்வாறெல்லாம் எள்ளலாய் முடியுமாகலின், அவ்வப்புவனபதிகளோடொத்த ஆற்றலுடைமை அவ்வச்சாயுச்சியமென்றல் போலியென் றொழிக.

இனி, முடிவாகிய ஞானத்திற்குப் பயனெனப்படுஞ் சாயுச்சியத்தினியல்பு முன்னர்க் காட்டுதும். சரியை முதலியவற்றிற்குச் சாலோக முதலியன அவாந்தரப் பயனெனவும், ஞானமொன்றே உண்மைப் பயன் எனவுங் கொள்க.

## சத்திநிபாதம்.

இனித், தவம் இவ்வாறு சரியை முதல் நால்வகைப்பட்டு அவற்றுள்ளும் பலவேறுவகைப்பட்டு நிகழ்தற்கேற்பப், பக்குவமாதற்பொருட்டு மலத்திற்கு அநுகூலமாய் நின்று நடாத்திய திரோதானசத்தி மலம் பரிபாக மெய்தியவழி அக்கருணைமறமாகிய செய்கை மாறிக் கருணையெனப்படும் முன்னைப் பராசத்திரூபமேயாய் ஆன்மாக்கண்மாட்டுப் பதிதலாகிய சத்திநிபாதமுஞ், சோபானமுறையான் மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரமென நால்வகைப்பட்டு, அவற்றுள்ளும் பலவேறுவகைப்பட்டு நிகழுமெனக் கொள்க. எனவே, சத்திநிபாதத்திற்குக் காரணம் மலபரிபாக மென்பதூஉம், அதுவும் அவ்வாறு பலவேறுவகைப்பட்டு நிகழுமென்பதூஉம் பெறப்பட்டன.

சத்திநிபாதமென்னுஞ் சொல்லியல்பு சத்தியினது வீழ்ச்சி என்றவாறு. நி என்பது ஏற்றமாக என்னும் பொருள்குறித்துநின்றதோரிடைச்சொல்,

ஓரவைக்களத்தின் நடுவே ஒருகல் வந்து வீழ்ந்தால் அவ்வீழ்ச்சி அவ்வவைக் களத்துள்ளாரை ஆண்டுநின்று மகல்விக்கும். அதுபோலச் சத்திநிபாதம் நிகழ்ந்தமாத்திரையே அஃது அவ்வான்மாவை மனைவி மக்கள் முதலிய உலகத் துழனியின் அச்சநிகழ்ந்து அவ்வுலகவாழ்க்கையினின்று வெரீஇப் போந்து உண்மைக்குரவனை நாடிச் செல்லுமாறு செய்வித்தலின், அவ் வொப்புமை தோன்றச் சத்திநிகழ்ச்சியென்னுது சத்திவீழ்ச்சி யென் றோதப்பட்டது.

## மலபரிபாகம்.

மலபரிபாகமாவது மலந் தனதுசத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்க ளெல்லாவற்றோடுங் கூடுதலேயாம்.

## இருவினையொப்பு.

இனி, இறப்பிறவத்தான் நிகழும் இருவினையொப்பாவது யாதெனிற் கூறுதும்: சஞ்சிதமாய் ஈட்டப்பட்டுக் கிடந்த இருவினைகளும் பக்குவமுறை யானே பயனாய் வரும்வழி, நல்வினையுண் மிக்கதாகிய பரிமேத வேள்விப் புண்ணியமும், தீவினையுண் மிக்கதாகிய பிரமக்கொலைப் பாவமும் ஒருங்கே பக்குவமெய்திப் பயன்படுதற்கண் ஒத்தனவாயின், அவை தம்முள் ஒன்றோ டொன்றடிக்கப்பட்டுச் *சுந்தோபசுந்தநியாயமாய்க் கெட்டொழியுமாகலின், அவை அவ்வாறு தம்முளொத்தலே இருவினையொப்பென்பர் ஒரு சாரார். சஞ்சிதமாய்க்கிடந்த புண்ணியங்களும் பாவங்களும் மிகுதி குறைவின்றித் தம்முளொத்தல் இருவினையொப்பென்பர் ஒருசாரார். மிக்க வினை இரண்டுந் தம்முளொத்துக் கெட்டனவாயினும் அவையொழித் தொழிந்த புண்ணிய பாவங்கள் தத்தம் பயனைத் தருதற் கிடையீடின்மையானும்; இருவினைகண் முழுதுந் தம்முளொக்குமாறில்லை, ஒக்குமெனினும் அதுபற்றி ஆணவமலம் நீங்குமாறின்மையான் விஞ்ஞானகலராவாரன்றி முத்தியெய்துதல் கூடா மையானும்; இவ்வாறு பௌட்கரத்துளெடுத்தோதி அவ்விரண்டனையும் மறுத்தலானும் ஈண்டோதிய இருவினையொப்புக்கு அவை பொருளல்ல வென்றொழிக.

இனி, இவ்விரண்டும் இவ்வாறாக; வேறு பொருள்படுதற் கேலாமை யானும், சிவப்பிரகாசத்தில் †"எதிர் வினையுமுடி வினையுதவு பயனு னேராக" என ஏனைவினைகள்போல ஆகாமியவினையும் முடிவினையும் ஒத்தல்வேண்டு மென் றோதுதலின், அஃதொத்தல் பிறிதோராற்றாற் பெறப்படாமையா னும், மலபரிபாகக்குறி சத்திநிபாதக்குறி சிவபுண்ணியக்குறிக ளெல் லாம் ஆன்மவறிவின்கண் விளங்குமாறுபோல இருவினையொப்புக்குறி யுந் தன்னறிவின்கண் விளங்குமாறில்லையாயின் அது முத்திக்கேதுவாதல் கூடாமையானும், ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலின்றிப் புண்ணியபாவமிரண்டினும், அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு

* சுந்தோபசுந்தநியாயமாவது சுந்தன் உபசுந்தன் என்னும் அசுரரிருவருந் திலோத்தமை என்னும் பெண்பொருட்டாக ஒருவரை ஒருவர் கொன்றதுபோன்ற ஒரு நெறி. † சிவப்பிரகாசம், பொது, ௩௦.

நிகழ்ந்து விடுவோனதறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறொப்ப நிகழ்தலே ஈண்டு இருவினையொப் பென்றதற்குப் பொருளென நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

*"எதிர்வினை......நேராக" எனப் புடைநூல் செய்த ஆசிரியர், இஃதறியாது வேறுவேறுரைப்பாரை நோக்கியன்றே, †இருவினை தூக்க வருவினை நில்லா—வொருவினை புரிகா லிருவினை யாகா—வொப்புறு மாறு செப்புக" எனச் சங்கற்பநிராகரணத் தோதியதூஉமென்க. *"இனையபல பிறவிகளின்" என்னுஞ் செய்யுளில் "எதிர்வினையும்" என்பதற்கு வேறுமுடிபாக வைத்துத் தமக்கு வேண்டியவாறே உரைப்பாருமுளர். அதுபொருந்தாமை சொற்கிடக்கைமுறை நோக்கி உணர்க. ஆண்டு இருபயனும் என்ற உம்மை ஏனையிரண்டும்மைகளோடொப்ப எண்ணும்மையாதலே பொருத்தமுடைத்தாகலின், அதனை வேறுபிரித்து முற்றும்மையாகக் கொண்டுரைத்தலும் பொருந்தாமை யறிக. இன்னும், அவர் ‡"உம்முந் தாகு மிடனுமாருண்டே" என்னுஞ் சூத்திரவிதிபற்றி, §"நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து" என்றாற்போல "நுகரும்" என்னும் பெயரெச்சத்தை "நுகருந்து" என வைத்தோதிய ஆசிரியர்கருத்துணரா து "நுகர்" என்பதனை முதனிலைப் பெயராக்கிக் கண்ணுருபு விரித்திடர்ப்பட்டுரைப்பர். "ஒருகாலத்து" எனவும், "முந்து" எனவும் ஓதிய சொற்குறிப்பும் அறிந்திலர்போலும். அன்றியும், அவ்வாறுரைப்பார்க்கு, "அந்தமுறவந்தவினையும்" எனவே அமையுமாகலின் "ஒருகாலத்தருந்த முந்துநுகருந்துபயன்" என்ற சொன்முழுவதும் வெற்றெனத்தொடுத்தலாய் முடியுமாகலானும் அவ்வுரை போலியென் றொழிக.

இனி, இருவினைகள் பசுநல்வினை தீவினை யென்றுஞ் சிவநல்வினை தீவினை என்றும் இருவேறுவகைப்படும். எனவே, இருவினையொப்பும் அவ்வாறு பசுநல்வினை தீவினைகள் தம்முளொத்தலாகிய இருவினையொப்பென்றும், சிவநல்வினை தீவினைகள் தம்முளொத்தலாகிய இருவினையொப்பென்றும் இருவேறுவகைப்படுமென்பதூஉம் பெற்றாம். சிவநல்வினை தீவினைகள் தம்முளொத்தலாவது, சிவநல்வினையுந் தீவினைபோலத் தமதுமுதலுபகாரத்தை மறந்து பிறவிக்கேதுவாய்ப் பசுபோதம் முனைத்துச் செய்யப்படுவதொன்றெனத் தெளிந்து உவர்த்துவிடுவோனது அறிவின்கண் அவ்வாறிரண்டுமொப்ப நிகழ்தல். இவ்விருவகை யிருவினையொப்புள், முன்னையது பக்குவத்தானிகழும் பசுபுண்ணியத்தினும் நிகழ்வனவாயுளவென மேற்கூறப்பட்ட அபுத்திபூர்வம் புத்திபூர்வமென்னும் பொதுச்சிவபுண்ணியத்தான் உண்டாவதாய், மலபரிபாகத்தைத் தோற்றுவிக்கு முகத்தானே மந்ததரமெனப்படும் முதற்சத்திநிபாதத்தில் நிகழும். பின்னையது பலதிறப்படுவனவாகிய நால்வகைச் சத்திநிபாதத்தான் அவ்வாறே நால்வகைப்பட்ட முறையான் நிகழ்ந்து முடிவின்கண் ஞானத்திற்கேதுவாமென் றுணர்க.

---

* சிவப்பிரகாசம, பொது, ௩௦.　† சஙகற்பநிராகரணம், சைவவாதி நிராகரணம், ௨௨, ௨௩, ௨௪-ம். அடிகள்.　‡ தொல்காப்பியம், சொல்லதிகாரம், இடையியல், ௪௪.　§ புறநானூறு, ௩௯௫.

இனி, ஞானத்திற்குக் காரணஞ் சரியை முதலியன வென்பதூஉம், சரியை முதலியவற்றிற்குக் காரணம் மந்ததர முதலிய சத்திநிபாதமென்ப தூஉம் யாண்டும் இனிதுவிளங்கக்கிடந்தன. இவையெல்லாவற்றிற்கும் மூல காரண மெனப்பட்ட பக்குவமாவது தமக்குரிய சோபானமுறையானன்றி அறியமாட்டாததோ ரியல்புடைய ஆன்மாக்களுக்கு அம்முறையான் நிக ழும் அறியவல்லுதலேயா மென்பது மேல் ஆண்டாண்டுக் கூறியவாறுபற்றி உணர்ந்துகொள்க. அவ்வல்லுதற்குக் காரணங் கேவலக்கிடையினும் நீங் காது உடனாய் நின்று நோக்கிவரும் முதல்வனது கருணைநோக்கத்தின் அடிப்பாடென அறிக.

முதலதிகரணமுடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

மேலையதிகரணத்தின் உயிர்க்கு வீடுபயக்கும் நல்லறிவு தவத்தின லேயே வருமெனச் சாதித்தவழி, அற்றேல், மேற் சரியை கிரியா யோகங் களைச் செய்துழிப் பிறிதுகாரணம் வேண்டாது அவைதாமே ஞானத்தைக் காட்டும் போலுமென்னும் ஆசங்கையை நீக்குதற் கெழுந்தது இரண்டா மதிகரணம்:—

**இனி இவ்வான்மாக்களுக்குத் தமதுமுதறுனே குரு வுமா யுணர்த்துமென்றது**

எனவரும்.

இது, மேலையதிகரணத்தோதிய சரியை முதலியவற்றான் நிகழும்ஞானங் குரவனையின்றியமையாதவாறும், அக்குரவன தியல்பும் உணர்த்துகின்றது.

இனி என்பது சரியைமுதலிய மூன்றுஞ் செய்து முற்றியபின் என்ற வாறு. இவ்வான்மாக்களுக்கு என்பது இம்முற்றுப்பேறுடைய ஆன்மாக் களுக்கு என்றவாறு.

தமக்கு முதலாய் இதுகாறும் உண்ணின் றுணர்த்திவந்த பரம் பொருட்கன்றி ஏனையோர்க்கு அவ்வியல் பறிந்து உணர்த்துதல் கூடாதென் பார், தமதுமுதறுனே என்றார். ஏனையோரிற் பிரித்தமையின், ஏகாரம் பிரி நிலைக்கண் வந்தது. இக்கருத்தேபற்றி, *"அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி யதனைச்—சகத்தவருங் காண்பரோ தான்" என்றார் புடைநூலாசிரிய ரும். இனித், தானே என்பதனைத் †"தானே தருபவன்" என்புழிப்போலக் கொண்டு உரைத்தலுமொன்று. இதனானே கருணைமிகுதி கூறியவாறா யிற்று. உம்மைக்குப் பொருள் மேலுரைத்தாம். ஈண்டுக் குரு என்றது மாநுடவடிவினை.

அற்றேல், ‡"மாயாவுருவன் மாயாவுருவினை யேயான்" எய்வனுயின் எம்மனோரி லொருவனுய் முடியும்; அல்லதூஉம் ஆகமங்களில் ஆசான் மூர்த்தியாகிய ஆதாரத்தை அதிட்டித்துநின் றுணர்த்துவன் முதல்வ

* திருவருட்பயன், அருளுருநிலை, ௨. † கோயிற்புராணம், பதஞ்சலிச்சருக் கம், ௫அ. ‡ சங்கற்பநிராகரணம், சைவவாதி நிராகரணம், ௨௬-ம் அடி.

X ௩௫௰ - ௨-ம் பிரிவு.

"தமக்குத் தலைமையாய்ப் பதியில்லை யன்னார்க்கு"

னென வேற்றுமைப்படுத் தோதுதலின், ஈண்டிவ்வாறு கூறுதல் அவற்றோடு முரணுமாலென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

*அவன் அந்நியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்*

எனவரும்.

அம்முதல்வன் வேற்றுமையின்றி உடலின்கண் உயிர்போல்வதோர் கலப்பினால் ஆன்மாவே திருமேனியாகவுடையனாய் நிற்றலான் இனி இவ்வான்மாக்களுக்குத் தமதுமுதறனே குருவுமா யுணர்த்தும் என மேற்கொண்ட தென்றவாறு.

முதல்வன் கலப்பினால் அவையேயாதல் பொதுவதிகாரத்துட் பெறப்பட்டமையின், ஈண்டு அதனை ஏதுவாகவைத்து மேற்கோளைச் சாதித்தார். ஈண்டுச் சைதன்னியம் ஆன்மாவென்பது *"அறிவொளிபோல்" என்றற்றொடக்கத்துப் போல ஏற்புழிக்கோடலாற் பெறப்படும். இவ்வாறன்றி அறிவுசொரூபியாய் எனப் பொதுப்படவுரைப்பின் அவ்வேது ஆன்மாக்கண் மாட்டுஞ் சேறலின், ஈண்டெடுத்துக் கொண்ட மேற்கோளைச் சாதிக்க மாட்டாது † அநைகாந்திகமாய் முடிவதூஉமன்றி மேற்கூறிய ஆசங்கைக்கு விடையாகாமையு முணர்க.

அற்றேல், இது விடையாமாறு யாங்ஙனமெனிற் கூறுதும்:—சில ஆகமங்களிற் குருமூர்த்தியாதாரத்தை அதிட்டித்துநின் றுணர்த்துமென்றது பொருட்டன்மையாற் றனேயாமென மேலோதிய வியைபுபற்றி; ஈண்டுத் தம்முதலே குருவுமா யுணர்த்துமென்றது கலப்பினால் அவையேயாமென்றோதிய வியைபுபற்றி யாகலின், இரண்டுந் தம்முண் முரணுமா றின்மையானும், ‡"மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவாருயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" என்பவாகலின், முதல்வனுக்குத் திருமேனியாகிய சைதன்னியம் முதல்வனைச் சார்ந்து அவ்வண்ணமாயவழி அவ்வுடம்பும் அவ்வா றருண்மயமே யாகலின், இழுக்கின்மையான் அவ்வுடலிடங் கோடல் பொருத்தமுடைமையானுந் தமது முதறனே குருவுமா யுணர்த்தும் என மேற்கொண்டது சாலுமென விடுத்தவாறென் றறிக. ‡"மாயைமா மாயை" என்னுஞ் செய்யுள் வேறுபொருள் படுதற் கேலாமை மேல் இருவினை யதிகரணத்தின் விரித்துரைத்தாம்; கடைப்பிடிக்க.

அற்றேல், சில ஆன்மாக்களுக்குக் குருவடிவங்கொண்டுணர்த்துதலின்றியும் ஞானம் நிகழ்த லுண்மையின், ஈண்டுக் குருவடிவங்கொண்டுணர்த்தியபின்னன்றி ஞானம் நிகழாதென வரைந்தோதியது யாண்டுஞ் செல்லாதாலென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

---

* சிவப்பிரகாசம், பாயிரம், எ.   † அநைகாந்திகம்-ஒருதலைப்படாதது; அஃதேதுப் போலிகளு ளொன்று.   ‡ சிவப்பிரகாசம், உண்மை, உ௦.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்

எனவரும்.

விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும் அன்றிப் பிரளயா கலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும அஞ்ஞான அச்சகலர்க்கு அக் குருவாய்ப் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும் என மாறுக.

எளிதின் அடப்படுதலைநோக்கி "அரிசி தானே யட்டது" என்றாற்போல எளிதின் விளைவிக்கப்படுதனோக்கி மெய்ஞ்ஞானந் தானேவிளையும் என்றார். "அரசனெடுத்த ஆலயம்" என்புழிப்போல விவ்விகுதி குன்றி நின்ற தென்றலு மொன்று. இவ்வாறுரையாது வியஞ்சகமின்றித் தானே விளையுமென் றுரைப்பிற் சிவாகமமெல்லாவற்றோடும் முரணுமென் றொழிக. தானே விளைதலாவது வேறிடத்தினில்லாது தன்மையி னின்றே விளைப்ப விளைதல்' *"உண்ணின் றறுத்தருளி" என்றார் புடைநூலாசிரியரும்.

பிரளயாகலருக்குத் தான் குருவாய் நின்று முன்னுணர்த்துதலாவது விஞ்ஞானகலர்க்கு உள்நின்றுணர்த்தியவாறுபோலன்றி நாற்றோளும் முக்கண்ணும் கறைமிடறும் முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்திநின்ற தனதியற்கைவடிவே குருவடிவாகக் காட்டி முன்னின்று உபதேசமுகத் தான் உணர்த்துதல.

சகலர்க் கக்குருவாய்ப் பின்னுணர்த்துதலாவது அவர் வடிவுபோலுங் குருவடிவாகிய மானுடப்போர்வையின் மறைந்துநின்று உபதேசமுகத் தான் உணர்த்துதல்.

மெய்ஞ்ஞானம்-வீடு பயக்குமுணர்வு. ஈண்டு அஞ்ஞானம் என்றது அவிச்சையை; சகலர்க்கே விசேடணமா யோதுதலானென்பது. அச்சகலர்-மேற்கூறிய சரியை கிரியா யோகங்கள்செய்து முற்றிய சகலர். அக்குரு-மேறகோளிற் கூறிப்போந்த குருவென்க. எனவே, ஈண்டுச் சரியை கிரியா யோகங்களைச் செய்தோர்க்குத் தம்முதல் குருவுமாயுணர்த்துமெனச் சகலர் வர்க்கமே எடுத்துக்கொண்டோதியதாகலின, அஃது ஏனைப் பிரளயாகலர் விஞ்ஞானகலா வர்க்கத்துச் செலலாமைபற்றி இழுக்கில்லை யென விடுத்த வாறுணர்க. செய்யுளிறுதியின் முன் என்றது முன்னாகிய முதல்வனென எழுவாயாய் நின்று, உணர்த்தும் என்னும் பயனிலைகள் கொண்டது.

இம்மூவருட் சகலர்க் குணர்த்துங்கால் இயற்கைவடிவை யொழித்துப் பிறிதொரு மானுடவடிவ மாதாரமாக நின்றுணர்த்துதலின், அது சாதாரமென்றும், ஏனையிரண்டும் அன்னவல்லவாகலான் நிராதாரமென்றுங் கூறப்பட்டன.

அற்றேல், மூவகை யான்மாக்களுக்கும் ஓரியல்பாய்நின்றுணர்த்தல் அமையும்; அவ்வாறன்றி விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும், பிரளயாகலர்க்கு

* போற்றிப்பஃறொடை, அடி, ௧௨௦.

முன்னிலையினும், சகலர்க்குப் பின்னிலையாகிய படர்க்கையினும் நின்று இவ்வாறுணர்த்துதல் எற்றுக்கென்னும் ஆசங்கையை, ஆன்மாக்களது சிறப்பியல்பும் அவற்றிற்குத் தம்முள் வேறுபாடும் உணர்த்துமுகத்தான் நீக்கி, அவ்வேறுபாட்டிற்கேற்ப வெவ்வேறாய் நின்றுணர்த்துதலே அமைவுடைத்தென அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு

எனவரும்.

ஆன்மாக்கள் அதுவதுவாய்ச் செறிந்தறிவனவன்றி முதல்வன்போலச் செறியாது நின்றறிவனவல்லவாகலான், அம்முதல்வன் வியஞ்சகமாய் நின்று படிவழிபோல வைத்து முறையான் விளக்கினாலன்றி அவற்றதறிவு விளங்காதென்பது பெறப்படும். அவ்வறிவுகள் அவ்வாறு படிவழிமுறைபோல விளங்குதலும் ஒருதன்மையானன்றிக் கல்விக்குறைவுடைய கணக்காய்வார் போல முன்னும் பின்னுமாய் விளங்குந் தாரதம்மியமுடையனவாம். ஆகவே, அவ்வறிவுகள் விரியாற் பல வேறுபாடுகளுடையவாயினும் அவ்வாறுணர்தற் கேற்ப நிகழும் பந்தவேறுபாடுபற்றி விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என வகையான் முத்திறப்படுமென்பதூஉம் பெறப்பட்டது. அவ்வான்மாக்களுட் பலவாற்றானுங் கேட்டுச் சிந்தித்தன்றித் தெளியப்படாத குறைபாடுடைய நூல்வேண்டாத நுண்ணுணர்வுடையார்க்கு முதல்வனாற் கொள்ளப்படும் உண்மை மாத்திரையானே முத்திகூடுமென்றறிவா நிராதாரம் யாக. நூல்வேண்டுந் தூலவறிவுடைய சகலர்க்கு ஞானத்தாற் குறைபாடில்லாத சகத்தின்கணுளனாகிய குரவனால் முத்தி கூடுமென்றறிவாயாக என்க.

உளங்கள் செறியுமாம் ஆகலான் நெறியின் அறிவிக்கவன்றி யறியா எனக்கொண்டு கூட்டி உரைக்க. அறிவித்தற்கு எழுவாய் மேலை வெண்பாவினின்றும் வருவிக்கப்பட்டது. அன்றி அறியா என எதிர்மறையாற் கூறினார், இன்றியமையாமை யுணர்த்துதற்கு. நெறியின் இன்-உவமவுருபு. முன் பின்னாக என ஆக்கச்சொல் வருவித்துரைக்க. குறைவுடையார்களைக் குறைகள் என உபசரித்தார். போல என்பது சொல்லெச்சம். சோல்லுஞ் சூழும் ஆகுபெயர். கொள்ளார்க்கு என நான்கனுருபு *"ஐந்தவித்தானாற்றல்" என் 34-1 புழிப்போல விகாரத்தாற்றொக்கது. பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட்கிளவி. ஈண்டு உண்மை என்றது நிராதாரத்தை. ஈண்டுச் சகம் என்றது நிலவுலகத்தை. சகனால் என்க. வீடேன் என்பதனை ஈரிடத்துங் கூட்டுக. நூல் குறைவுடையதாயினும் அதனைக் கேட்பித்துச் சிந்திப்பித்துத் தெளிவிக்குங்குரவனதறிவாற்றலிற் குறைபாடின்மையிற் றெளிந்து வீடெய்தல் கூடுமென்பார், குறைவில் சகன் என விசேடித்தார். குறைவில்சகன் என்புழிச் சீர்சிதையாமை †"முற் செய்வினை மாயை" என்பதற்கு

* திருக்குறள், ௩-ம் அதி. நீத்தார்பெருமை, ரு. † பக்கம், ௧௧௦,

உரைத்தவாறுபற்றி உணர்ந்துகொள்க. கொள்ளார் கொள்பவர் என ஆறூஉ வறிசொல்லாற் கூறியது வடமொழிமதம்பற்றி.

ஆன்மா அதுவதுவாய்ச் செறியுமாறும், அதனானே அறிவிக்கும் வியஞ் சகத்தையின்றி அமையாதவாறும், வியஞ்சகத்தான் அறிவு விளங்கும்வழி யும் ஒருங்கே முழுவதும் விளங்காது படிவழியேற்றம் போல அடிப்பட்டு வரவர மெல்லமெல்ல விளங்குமாறும், அவ்வாறு விளங்கும் அறிவுகளும் ஒன்றுபோலன்றிக் கணக்காய்வார் அறிவின் மந்த தீவிரங்கள் போல முன் னாகவும் பின்னாகவும் விளங்குமாறும், அதற்கேற்ப மலசத்திகளும் பலவா மாறும் ஆண்டாண்டு விரித்துரைத்தாம்; கடைப்பிடித்துக் கொள்க.

இதனாற் போந்தது, தத்தமக்கேற்ற சோபானமுறையான் அறிவு விளங்குதலுடைய மூவகை ஆன்மாக்கண்மாட்டும் விரவி நிற்கும் மூலமல மாகிய அறியாமைப்பொருள் ஒன்றேயாயினும் அவ்வான்மாக்களது பக் குவாபக்குவ தாரதம்மியங்கட் கேற்பப் பலவேறுவகைப்படப் பிணிக்கும் மலசத்திகள் சூக்கும தூல தூல *தர வேறுபாட்டாற் பலவேறுவகையவாக லின், அவற்றின் விஞ்ஞானகலர்க்குப் பிணிப்பாகிய மலசத்தி சூக்குமம், பிரளயாகலர்க்குப் பிணிப்பாகிய மலசத்தி தூலம், சகலர்க்குப் பிணிப்பாகிய மலசத்தி தூலதரமாம்; அற்றாகலினன்றே, விஞ்ஞானகலர்க்கு மாயை கன் மங்களுளவாகவும் அவர் அவற்றாற்பிணிப்புண்டு மயங்குதலின்றி மலமாத் திரையாற் பிணிப்புண்டதூஉம், பிரளயாகலர்க்கு மாயை யுளதாகவும் அவ ரதனிற் பிணிப்புண்டு மயங்குதலின்றி ஏனை இருமலத்தானும் பிணிப்புண்ட தூஉம், சகலர் அவ்வாறின்றி மூவகையானும் பிணிப்புண்டதூஉம், ஆக லான் அம் மூவகை மலசத்தியுட் சூக்குமமலசத்தி உண்ணின்றுணர்த்திய வாறே எளிதினீங்குதல் கூடுமாகலானும், தூலமலசத்தி எதிர்நின்று உபதேச முகத்தாற் றெரித்துணர்த்தியவழியன்றி நீங்குதல் கூடாமையானும், தூல தரமலசத்தி உபதேசமுகத்தானும் நூன்முகத்தானும் அநுபவமுகத்தானும் பலவேறுவகைப்பட வலியுறுத்தி உணர்த்தியவழியன்றி நீங்குதல் கூடாமை யானும், அவ்வேறுபாட்டிற்கேற்பத் தம்முள் இருவேறுவகைப்படும் நிரா தாரமாயுஞ் சாதாரமாயும் நின்றன்றி உணர்த்துவானல்லன் முதல்வனென மேலைவெண்பாவிற் கூறிய பொருளை வலியுறுத்தியவாறு மென்க.

அவ்வாறுணர்த்தும்வழிச், சூக்குமமலமுடைய விஞ்ஞானகலர்க்குந் தூலமலமுடைய பிரளயாகலர்க்கும் மலபரிபாகத்திற்கேற்ப நாலாஞ் சத்தி நிபாதந் தீவிரமாயுந் தீவிரதரமாயும் நிகழுமாகலின், அவ்விருவகைச் சத்தி நிபாதம்பற்றியுணர்த்தித், தீவிரத்தானுணர்த்தப்பட்டார்க்கு அபரமுத்தியுந் தீவிரதரத்தா னுணர்த்தப்பட்டார்க்குப் பரமுத்தியும் பயக்குமெனவும், தூலதர மலமுடைய சகலர்க்கு அம்மலபரிபாகத்திற்கேற்ப மந்ததர முத லிய நால்வகைத்தால் நிகழுமாகலின், அந்நால்வேறுவகைச் சத்திநிபாதம் பற்றியுணர்த்தி, மந்ததரத்தாற் சாதகநிலையும், மந்தத்தாற் சீவன்முத்திநிலை யும், தீவிரத்தால் அபரமுத்திநிலையும், தீவிரதரத்தாற் பரமுத்திநிலையும்

* தரம் என்பது அதிகம் என்பதை உணர்த்தும் ஒருவிகுதி.

பயக்குமென்றறிக. ஈண்டுச் செய்யப்படுந் தீக்கையி னியல்பெல்லாம் மேற் பாயிரத்துள் விரித்துரைத்தாம்; கடைப்பிடிக்க.

இவ்வெண்பாவிற்கு இவ்வாறன்றி ஆன்மாக்கள் அறிவித்தாலன்றி அறியாவாகலான் அவற்றிற் கறிவிக்கவே முந்துநூல்க ளேனைய வெல்லாம் அவ்வச்சமயநெறியின் முன்னொடுபின் னிணங்காது மாறுபடுங் குறைகள் செறிவனவாமாகலின் அக்குறைபாடுடைய நூல்களைக் கொள்ளாது குறைபாடில்லாத முதல்வனது சித்தாந்த நூல்களைக் கொள்பவர்க்குக் கொண்ட பிறவியிற்றானே வீடுபேறுமென்று உரைப்பாருமுளர்.

அற்றேல், நூல்கொள்பவராகிய சகலர்க்கு அந்நூலானே அறிதலமையுமாகலாற் குரவன் மிகையாமா லென்னும் ஆசங்கையை நீக்குமுகத்தால் தமது முதற்றானே குருவாமாற்றை உவமையின்மேல் வைத்துத் தெளிவித்து வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்நிழல்போ—லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று

எனவரும்.

தவத்தான் நன்மையுடைய மாணுக்கனே! ஏந்திய இழைகளையுடையாட்குக் குழவிமாட் டுளதாகிய அருவாகிய அன்பினை வெளிப்படுத்தற்கு அவ்வன்பின் வடிவாகிய முலைப்பாலுங் கண்ணீருங் குழவியைக் காணுமுன் அவண்மாட் டில்லாவாய்ப் பின்னுளவாம். அதுபோல, நீரின்கண் நிழல்போல் ஆன்மாவின்மாட்டுப் பொருந்தி வெளிப்படுதலில்லாத அருவமாய் நின்ற முதல்வனை யார்தாம் அறிவார்? அம்முதல்வன்றானே குருவடிவாய்த் தோன்றிநின்று உணர்த்தானாயின் என்க. ஒருவரு மறிவாரில்லையென்பதாம்.

ஆகவே, அருவாய் நின்ற முதல்வனை அறிவித்தற்கு நூன்மாத்திரையான் அமையாமையின், அம்முதல்வனே குருவாய்த் தோன்றி உணர்த்தல் வேண்டுமென விடுத்தவாறாயிற்று.

எதிர்மறையாற் கூறினார் இன்றியமையாமை உணர்த்துதற்கு. பொருள் வினையை உவமையினுங் கூட்டி உரைக்க.

முலைப்பாலுங் கண்ணீரும் அன்பை விளக்குமென்பது, *"சுரந்த திருமுலைக்கே துய்யசிவ ஞானஞ்—சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த--தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த--மனமுடையா ளன்பிருந்த வாறு" என்பதனானும், †"அன்பிற்கு முண்டோ வடைக்குந்தாழார்வலர்—புன்கணீர் பூச றரும்" என்பதனானு மறிக. அவ்விரண்டும் அன்பின்வடிவே பிறவல்ல என்பது அன்பை வெளிப்படுத்தற்குரிய காரணமுள்வழி வெளிப்பட்டு, அஃதில்வழி வெளிப்படாத ஒற்றுமைநோக்கிக் கண்டு

* திருக்களிற்றுப்படியார், ௫௪. † திருக்குறள், அ-ம் அதி. அன்புடைமை, ௧.

கொள்க. இவ்வொற்றுமை உணர்த்துவார், இல்லாவா யுளவாம் என்றார். இல்லா என்பது வினையெச்சக் குறிப்புமுற்று. ஆல்-அசை.

இவ்வுவமையானே முதல்வன் குருவாதல் கூடுமாறு யாங்ஙனமென்னும் ஆசங்கையும் நீக்கப்பட்டது. இஃதெடுத்துக்காட்டுவமை.

நீர் அகத்தியங்கு முயிர்கட்கு இடங்கொடுத்தலுண்மையான் நீரின்கண் வெளியுண்டென்பதூஉம், உண்டாகவே, ஆண்டு நீருக்கு நிழலுண்டென்பதூஉம் பெறப்பட்டன. அந்நிழல் வேறுநில்லாது நீரின்கண் விரவிநிற்றலின், நீர்போலப் புலப்படாதாயிற்று. அதுபோலச் சிவசைதன்னியமும் யானெனும் உணர்விற்கு விடயமாய்ப் புலப்படும் ஆன்மசைதன்னியத்தோடு விரவிப் புலப்படாது நிற்பதொன்றென்பார், நீர்நிழல்போல் உற்று இல்லா அருவாகி நின்றானை என்றார். அருவப்பொருள்போற் புலப்படாத இயல்பு பற்றி முதல்வனை அரு வென்றல் சாலுமென்பார், இல்லாவருவாகி என்றார். நீர்நிழல் தோன்றாமைமாத்திரைக்கு ஒருபுடையுவமையாகலாற் றோன்று தற்குவமை வேறு கூறினார்.

இரண்டாமதிகரணமுடிந்தது.

## மூன்றாமதிகரணம்.

இரண்டாமதிகரணத்தில் உயிர்க்கு முதல்வனே சற்குருவாய் வந்து உணர்த்துவனெனச் சாதித்தவழி, அற்றேல், இதுகாறும் பசுகரணமாய் விடயங்களை உணர்த்தி நின்றன ஐம்பொறிமுதலிய கருவிகளா மன்றே! அவை பாகம் வந்துழிச் சிவகரணமாய் நின்று உண்மைஞானத்தினை உணர்த்துதற் கமையுமாகலின், தம்முதல் குருவுமா யுணர்த்துதல் மிகையாமாலென்னும் ஆசங்கையை நீக்குதற் கெழுந்தது மூன்றாமதிகரணம்:—

**இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மையுணரா வென்றது**

எனவரும்.

இனி என்றது இவ்வியை புணர்த்துதற் பொருட்டு. இவ்வான்மாக்கள்-தம்முதல் குருவுமாயுணர்த்த உணருமியல்புடைய ஆன்மாக்கள். ஐவகையுணர்விற் கேதுவாகிய பொறிகளை ஐயுணர்வு என்றுபசரித்தார். ஐம்பொறி என்றது உபலக்கணம். மயங்கி யுணரா என்றது "ஓதி யுணர்ந்தான்" என்பதுபோலக் காரணகாரியப்பொருட்டாய் நின்றது.

அற்றேல், சகசமலத்தால் உணர்வின்றி நின்ற ஆன்மாக்கள் கருவிகளான் அறிவுவிளங்கி அறியுமென்பது மேற் பொதுவதிகாரத்துட் கூறிப் போந்தமையின், ஈண்டு ஐயுணர்வுகளால் ஆன்மாக்கள் மயங்குமென்றன் முரணுமாலென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது;—

X "ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் - பேதையிற் பேதையா ரில்." என்பதில் ஓதியுணர்ந்தென்பது மது

அவைதாம் பளிங்கி லிட்ட வன்னம்போற் காட்டிற் றைக் காட்டி நிற்றலான்

என்வரும்.

பளிக்குக் கல்லிற் சேர்த்திய பலவேறுவகைப்பட்ட நிறங்கள் அப் பளிங்கினொளி தோன்ருதவாறு அடக்கித் தம்மால் அதன்கண் விளக்கப் பட்ட தத்தமியல்பினையே விளக்கி நிற்குமாறுபோல, அவ்விந்திரியங்கடாம் ஆன்மசொரூபம் விளங்காதவாறு அடக்கி அவ்வான்மாவின்மாட்டுத் தம் மால் விளக்கப்பட்ட தத்தம் விடயமாத்திரையே விளக்கி நிற்பன வாகலான் இனி இவ் வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா என மேற்கொண்ட தென்றவாறு.

விடயங்களுள்ளும் அவ்வவ் விடயமாத்திரையே அவ்வவிந்திரியங் காட்ட வல்லுமென்பார், காட்டிற்றை என ஒன்றறிசொல்லாற் கூறினர்; கூறவே, * "ஒன்றறிந்த தொன்றறியாதாகிப்" பளிங்கிலிட்ட வன்னம்போல் ஆன்மாவி னியல்பை மயக்கி விடயக்காட்சிக்கே ஏதுவாகிய கருவியான் ஆன்மாவி னியல்பு விளங்குமாறில்லையென அவற்ற தியல்பைத் தெரித்துக்காட்டி ஆன்மசொரூபத்தை உணர்த்துதற்குக் குரவன் ஒருதலையான் வேண்டுமென மேலை யதிகரணத்தை வலியுறுத்தவாறு. இங்ஙனம் உரையாதார்க்கு இனி என்பதனு னுணர்த்தப்படும் மேலையதிகரணத்தோ டுளதாகிய இயைபு கூடாமை அறிக.

அற்றேல், குருவாகிவந்து உணர்த்தியவழியுங் காட்டிற்றையே காட்டி நிற்கு மிந்திரியங்க ளுள்வழித் தன்னியல்பு விளங்காது, அவை நீங்கியவழிக் கேவலமாய் முடியுமாகலின், அறியுமாறு யாங்ஙனமென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்துபொய்பொய்யாமெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு

எனவரும்.

தன்னைச் சார்ந்த பலவேறுவகைப்பட்ட வன்னங்களையே தன்மாட்டுக் காட்டு மியல்புடைய படிகம்போல ஆன்மாத் தன்னைச் சார்ந்த இந்திரியங் களி னியல்பையே தன்மாட்டு விளக்குவதாகிய தனது சார்ந்ததன்வண்ண மாந் தன்மையை முன்னர்ச் சிந்தித் துணர்ந்துகொண்டு, பின்னர்ப் பல வேறுவகைப்பட்ட இயல்புடைய பொதுவியல்பைச் செய்யும் இந்திரியங் களைத் தனக்கு வேருகக் கண்டு, அவற்ருனாகிய பொதுவியல்பு பொதுவியல் பேயா யொழியுமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தானாயின் அவன் பரம் பொருளாகிய சிவத்துக் கடிமையாய் அப்பரம்பொருளி னியல்பு தன்மாட்டு விளங்கச் செய்வன். அப்பொழுது முன் விளங்கிய பொதுவியல்பு தனக்கு வேருயொழியு மென்க.

* இந்நூல், ௩-ம்-சூ- ௩-ம்-அதி-௩-ம்-வெ-

ஆம் என்பதனைப் பின்னுங் கூட்டுக. ஈண்டுப் போய் மெய் எனப்பட்டன அப்பொருளவாதல் *மேலே காட்டினும்; கடைப்பிடிக்க. ஆக என்பது கடைக் குறைந்தது. போய்போய்யாக என்பது "நிலம் வலிதாயிற்று" என் பதுபோலக் கொள்க.

இதனாற்போந்தது கருவிகள் செயற்படாது தன்னி னீங்கியவழியே கேவலமாம்; அவ்வாறின்றி அவை தத்தந் தொழிற்பாட்டின் மடங்காது நிற்புழி அவற்ற தியல்பைக் குருவாய்வந் துணர்த்த உணர்ந்து தான் அவற்றைவிட்டு நீங்கியவழிச் சுத்தமாதல் கூடுமாகலான் அவை காட்டிற் றைக் காட்டி நிற்றல்பற்றி ஆண்டுத் தன்னியல்பு விளங்குதற்கு இழுக்கில்லை என வலியுறுத்தவாறு மென்பது.

மூன்றுமதிகரண முடிந்தது.

## நான்காமதிகரணம்.

மூன்று மதிகரணத்தில் உயிர் பஞ்சேந்திரியங்களிற் பற்றுகையாற் றன்னை யறியமாட்டாதெனக் கருவிகளி னியல்பு கூறி, அதனானே குருவாய் வந்து உணர்த்துதல் ஒருதலையான் வேண்டுமென இரண்டாமதிகரணத்திற் போந்த பொருளை வலியுறுத்தியவழி, அற்றேல், குருவாய்வந் துணர்த்தி னும் இனையவையொழிய அறிகுவ தெவ்வாறு? அறியினும் விட்டுச் செல்லு மாறுதான் எவ்வாறு? என்னும் ஆசங்கையை நீக்குதற் கெழுந்தது நாலா மதிகரணம்:—

இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையு மென்றது

எனவரும்.

ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா எனப்பட்ட ஆன்மாச் சித் தாய் வியாபகமாகிய தன்னியல்பைச் சடமாய் ஏகதேசமாகிய இந்திரியத் தின் வேறாக வுணரும் வியாக வுணர்விற்கு இந்திரியத்தா னுகைக்கடவதொன் றின்மையிற் சற்குரவனால் அவ்வாறுணரவே பிறிதுகாரணம் வேண்டாது தனக்காதாரமாகிய முதல்வனது திருவடியினைத் தலைப்படு மென்பதாம்.

தமது முதல் என்பது வேறு முடிபாகலின், வழாநிலையாதல் அறிக.

அற்றேல், அவ்வாறுணர்தல் கூடுமாயினுஞ் சேறற்குரிய முயற்சியின்றி அறிந்தமாத்திரையே செல்லுமாறு யாங்ஙனமென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

ஊசல் கயிறற்றாற் றாய்தரையேயாந் துணையான்

எனவரும்.

ஒருவன் ஏறியிருந் தாடாநின்ற ஊசல் கயிறற்றதாயின் அவனுக்கு உற்றுழியுதவுந் தாய்போல் ஆண்டுத் தாரகமாவது நிலனே யன்றிப் பிறி

* பக்கம், ௩௩௯.

தில்லை யென்னும் ஒப்புமையால் இனி இவ்வான்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமதுமுதல் சீபாதத்தை யணையும் என மேற்கொண்ட தென்றவாறு.

இதனாற் போந்தது கருவிகள் ஆன்மாக்களான் அறியப்படாது நீங்கிய வழி மலந் தாரகமாம். அறியப்பட்டு நீங்கியவழிச் சிவமே தாரகமாம். ஆகலின், ஆண்டுச் செய்யக் கடவதோர் முயற்சி வேறில்லை யென்பதாம்.

அற்றேல், கருவிகளி னீங்கி மலந் தாரகமாய்க் கேவலப்பட்ட வுயிர், மீளவுங் கருவிகளைக் கூடிச் சகலப்படுமாறு போலக் கருவிகளி னீங்கிச் சிவந் தாரகமாய்ச் சுத்தப்பட்ட உயிரும் மீண்டுங் கருவிகளைக் கூடும்போது மென்னும் ஆசங்கையை உவமைமுகத்தா னீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று

என வரும்.

சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளஞ் சிறைவிட்டு அலைகடலிற் சென்று அடங்கும் ஆறுபோல் சிறை செய் புலனுணர்விற் றீர்ந்து உலைவில் அரன் பாதத்தை யுற்று மீளாது எனமாறுக.

ஒருவன் அணையை உயர்த்துக் கட்டித் தடைசெய்ய ஆண்டுத் தடையுண்டு தேங்கி நின்ற நீர்போலக் கருவிகளானாகிய பாசஞானந் தனது வியாபகத்தைத் தடுப்ப அதன்கண்ணே ஏகதேசமாய்த் தடையுண்டு நின்ற ஆன்மா அவ்வணைமுறிந்து தடை விட்டொழிந்தவழி இடையீடின்றிக் கடலிற் சென்றடங்கி அந்நீரேயாய்ப் பின்பு மீளுதல் செய்யாத ஆற்றுநீர் போலக், கருவிகளானாகிய பாசஞானத்தடையினின்றும் நீங்கியவழிச் சிவபிரானது திருவடியைப் பொருந்தி அத்திருவடிநிறைவேயாய் அடங்கிப் பின்பு மீளுதல் செய்யாது நிலைபெறு மென்க.

புனலின் இன்-உவமவுருபு. தேக்கத்தின்மிகுதி உணர்த்துவார், செழும்புனல் என்றார். மலசத்திக்குக் கேடின்மையிற் கேவலப்பட்ட உயிர் கருவிகளின் மீளுதல் கூடும், சிவசத்திக் கவ்வாறு கேடின்மையிற் சுத்தப்பட்ட உயிர் அதுபோன் மீளுதற்கோ ரியைபில்லை யென்பார், உலைவிலரன் என விசேடித்தார். அடங்கும் என்னும் உவமவினையைப் பொருளினும், மீளாது என்னும் பொருள்வினையை உவமையினுங் கூட்டி உரைக்க.

அற்றேல்,*"மருவுபசு கரணங்கள் சிவகரண மாகத்—துன்னியசாக்கிரமதனிற் றுரியா தீதந் தோன்றமுயல்" எனவும், †"மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா றுயிரின் மேவு மருளெனி லொளியாய் நிற்கும்" எனவும் இவ்வாறோதுதலின், ஆண்டுப் பசுகரணம்போலப்

* சிவஞானசித்தி, அ-ம் சூ. ௩௪. † சிவப்பிரகாசம், உண்மை, ௨௦.

பாசஞானமுஞ் சிவஞானமேயாமென்பது பெறப்படுதலின், *"ஆற்று லலே கடற்கே பாய்ந்தநீ ரந்நீர்மை—மாற்றியவ் வாற்ருன் மறித்தாற்போல்" உலே விலரன் பாதத்தை யுற்ற வுயிர் புலன்வழிமீளினும் அதனுற் போந்த இழுக் கென்னே யென்னும் ஆசங்கையை நீக்கி அதனே வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

எவ்வுருவுந் தானெனன்னி லெய்துவா ரில்லேதா
ளிவ்வுருவின் வேறே லிறையல்ல—னெவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்

எனவரும்.

இனி, ஈண்டுக் கூறுவது பதிப்பொருட்கே யன்றிப் பசுபாசங்களுக்கு ஒரு தன்மையில்லே யெனக்கொண்டு இவ்வாருகலிற் பசுஞான பாசஞானங் களுஞ் சிவஞானமேயா மென்பதோ? அன்றிப் பசுபாசங்களுக்குப் பதிப் பொருளேயன்றித் தமக்கென ஒவ்வொருதன்மை யுளவெனக்கொண்டு இவ் வாருயினும் †"உப்பளத்தடுத்த புற் ‡பலாலங்கள்" அவ்வுப்பேயாமாறு போலப் பசுஞான பாசஞானங்களிற் சிவஞானஞ் சங்கிரமமாய்ப் பற்றுத லான் அவையுஞ் சிவஞானமேயா மென்பதோ? சொல்வாயாக. பசுபாசங் களி னுளவாகிய தன்மைகளெல்லாம் பதிப்பொருளின் தன்மையே பிறி தில்லேயெனிற் பசுவுக் கொருதன்மை யில்வழிப் பசுக்கள் பாசத்தைவிட்டுப் பதியினே யடையுமாறில்லேயாய்ப், §"பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினே யடைய முத்தி" என்னும் வேதாகம வசனங்களோடு முரணும். இனிப் பதிப்பொருளேயின்றி அமையுந்தன்மை அவற்றிற்கு வேறுளவெனக் கொள் ளின் அப்பொழுது பசுபாசங்களின் தன்மைகட்குச் சிவனு லாகப்படுவ தொன் றின்மையிற் சிவனுக்கு இறைமை யின்ருய் முடியும்; ஆகலின், அவ் விரண்டுங் கூடா. வேறென்னேயோ விடுக்குமாறெனின், ஆன்மாவையின்றி யமையாவாய் ஆன்மாவால் அதிட்டிக்கப்படும் ஐவகையுறுப்புக்களுள்ளும் மெய் வாய் மூக்குச் செவி என்னும் நான்குறுப்புக்களுந் தம்மாட்டுவந்த விடயங்களே இயைந்தறியுந் தன்மையனவன்றிக் கண்ணுறுப்புப்போலச் சேய்மைக்கண் ணுளதாகிய விடயத்தையும் வியாபித்தறியுந் தன்மையுடை யனவல்ல. கண்ணுறுப்பு அவ்வாறின்றிச் சேய்மைக்கண்ணும் ஒளியாற் சென்று இயைந்தறியுந் தன்மைத்து. அற்றேல், ஒளிமழுங்கிய கண்ணுக்கு ஏனேயுறுப்புக்களோடொப்பத் தன்கண் வந்த விடயத்தைமாத்திரமே காண் பதன்றிச் சேய்மைக்கண்ணும் வியாபித்துக் காணுமா றில்லேயாலெனின், மாசுமிகுதியாற் கண்ணொளியிழந்தார் கண் பெற்றவிடத்து அவ்வியல்பிற் ருகிய கண்ணினது வெற்றிப்பாட்டைக் காண்பாயாக என்க. எனவே, அது போல முதல்வனேயின்றி யமையாவாய் முதல்வனுல் அதிட்டிக்கப்படும் பசு பாசஞானங்களுட் பாசஞானம் ஏகதேசமாய்விளங்கு மியல்பிற்றன்றிப்

* திருக்களிற்றுப்படியார், கக. † சங்கற்ப நிராகரணம், சங்கிராந்தவாதி நிரா கரணம், உஎ-ம் அடி. ‡ பலாலம்-வைக்கோல். § சிவஞானசித்தி, பரபக்கம், பாஞ் சராத்திரிமத மறுதலே, ௨௫.

பசுஞானம்போல வியாபகமாய் விளங்கு மியல்பிற்றன்று. பசுஞானம் அவ்வாறின்றி வியாபகமாய் விளங்குமியல்பிற்று. அற்றேல், பசுஞானம் பாசஞானம்போல் ஏகதேசமாயன்றி விளங்கக் கண்டிலமா லெனின், பசுத் துவத்தால் அவ்வான்மஞானத்தை யிழந்தார் பசுத்துவம் நீங்கி ஆன்ம ஞானத்தைப் பெற்றவழி வியாபகமாய் நிகழும் அதனது வெற்றிப்பாட்டை அறிவாயாக எனப் பொருளினும் உரைத்துக்கொள்ளப்படும்.

இஃது * ஒட்டென்னும் அலங்காரம்.

இஃதென் சொல்லியவாறோ வெனின், ஆன்மாப் பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் பெற்றவழிப் பசுகரணமுஞ் சிவகரணமாயவாற்றான் அவ்வழிப் பசுஞானத்தோ டொப்பப் பாசஞானமும் உப்பளத்தடுத்த பொருள்போலச் சிவஞானமேயா மென்பது சிவாகமநூற் றுணிபாகலின், அவ்வைம்பொறி யின் மீளினும் இழுக்கின்மையின் மீளாதென மேலை வெண்பாவிற் கூறியது எற்றுக்கென்னுஞ் சங்கிராந்தவாதசைவரை மறுத்து, முதல்வனே பசுபாச மென்று அபேதங் கூறுதலும் முதல்வன் வேறு பசுபாசம் வேறெனப் பேதங் கூறுதலும் ஏலாமையின், முதல்வனுக்கும் பசுபாசங்கட்குஞ் சரீர சரீரிபாவத்தான் அபேதங் கூறுதல்வேண்டும்; வேண்டவே, சரீரசரீரிபாவத் தின் ஆன்மா ஐம்பொறிகளோடு அபேதமாய் நிற்பினும் அவை தத்தந் தன் மையிற் றிரியாவாய் விடயங்களை நின்றியைந் தறிதலும் சென்றியைந் தறி தலுமாகிய இருவேறியல்புடைமையாகிய பேதம், கண் ஒளிமழுங்கியவழிக் காணப்படாதாயினும் ஒளிபெற்றவழிக் காணப்படுதலின், அவ்வாறே பசு ஞான பாசஞானங்களிற் சிவஞானம் அபேதமாய் விளங்கினும் அவை தத்த மியல்பிற் றிரியாவாய்ப் பாசஞானத்திற்கு ஏகதேச விளக்கமும் பசுஞானத் திற்கு வியாபக விளக்கமுமாகிய பேதமுடைமை பசுத்துவம் நீங்காத பெத்த நிலைக்கண் அறியப்படாதாயினும் பசுத்துவம் நீங்கிய முத்தி நிலைக்கண் அறி யப்படு மாகலின், அவ்வியல்பிற்றாகிய ஆன்மஞானம் அவ்வியல்பினவாகிய ஐயுணர்வுகளை மீளப் பற்றுமாறில்லை யென மேலைவெண்பாவின் பொருளை வலியுறுத்தவாறு மென்க. இவ்வாறுரையாதார்க்குச் சொற்கிடக்கைமுறை ஏலாமையும், மேலைவெண்பாவினோ டியைபின்மையும் உணர்க. †“எங்குந்தா னென்னினு மெய்த வேண்டா” என்னும் வழிநூலும் இவ்வாறே பொருள் படுமாறுணர்ந்து உரைத்துக்கொள்க. ஏனை நான்கிந்திரியமும் அவ்வவிடங் களி னின்றாங்குநின் றியைந்தன்றி அறியமாட்டாமையும், கண்ணிந்திரியம் அவ்வாறன்றிச் சேய்மைக்கண்ணுஞ் சென்றியைந்தறியும் வெற்றிப்பாடுந் தத்துவங்களி னியல்புரைப்புழிக் காட்டினாம்; கடைப்பிடித்துக் கொள்க.

உரு என்றவற்றுள் முன்னைய இரண்டும் பொருட்டன்மையை உணர்த் தின. பின்னையது உறுப்பின்மேற்று. உறுப்பாதாரமாக நிற்றலானும் உறுப் புப் போறலானும் இந்திரியங்களை உறுப்பு எனவும், கழலணிதற் கேது வாகிய வெற்றிப்பாட்டைக் கழல் எனவும் உபசரித்தார். கழல்-காலணி

* இதனை, “கருதிய பொருடொகுத் ததுபுலப் படுதற்—கொத்ததொன் றுரைப் பினஃ தொட்டென மொழிப” என்னுஞ் சூத்திரத்தா னுணர்க; தண்டியலங்காரம், சூ. ருக.　　† சிவஞானசித்தி, அ-ம் சூ. ௩அ.

மணிவடம். சுட்டுச் சிறப்பின்கண் வந்தது. காண்-முன்னிலையேவல். பேறே என்னும் ஏகாரம் ஏழனுருபின் பொருளுணர நின்றது. ஒற்றிரட்டியாமை இலேசாற் கொள்க.

அற்றேல், *"நெடுந்தகை நீயென்னை யாட்கொள்ள யானும் புலன்கள் கொண்டு—விடுந்தகை யேனை விடுதி கண்டாய்" எனப் பிறாண்டும் இவ்வா றோதுபவாகலின் ஒழிவிலரன் பாதத்தை யுற்றோர் மீளுதலு முண்மையின், மீளா தென்பது அமையாதா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலி யுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

ஐம்பொறியி னல்லையெனு மந்த தரசிவனை
யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி
னீங்கானை நீங்கு நினைந்து

எனவரும்.

நீ, நின்னால் அதிட்டிக்கப்பட்ட வழியும் ஏகதேசவறிவைச் செய்வன வாகிய ஐம்பொறிகள்போ லல்லை, அவற்றின் மேம்பட்டு வியாபகமாய் அறி யும் வெற்றிப்பாடுடையை என மேலைவெண்பாவால் உணர்த்தப்படுந் தீவிர தரத்திற் றீவிரதரமான சத்திநிபாத முடையோனே! அவ்வியல்பினவாகிய ஐம்பொறிகளைக் கைவிட்டே சிவன் திருவடியை எய்தி முன் அவ்வைம் பொறியி னின்றாங்கு அதுவாய் உறைத்து நிற்பாயாக. அவ்வா றணைந்து நின்றாயாயிற் சகலனை ஐம்பொறி விட்டுநீங்காதவாறுபோல அச்சிவன் உன்னை விட்டுநீங்கான். கல்லெறிவழி நீங்கி அல்லுழிப் பரக்கும் நீரின்கட் பாசிபோல, நீ அவ்வாறுறைத்து நிற்புழி நீங்குவனவாகிய மல கன்ம மாயைகள் உலகப் பயிற்சிவயத்தான் ஒரோவழி அந்நிலை நெகிழ்ந்தமை பற்றி வந்து கூடுமாயின் நின் நிலை குலைந்தவழியும் நின்னை விட்டுநீங்காத அம்முதல்வனை உணருமாறு முன்னர்க் கூறப்படும் உபாயத்தினின்று சாதித்து அவற்றை நீக்கிக்கொள்க வென்க.

ஐம்பொறியி னல்லையெனு மந்தர என மேலைவெண்பாவிற் போந்த பொருளை அநுவதித்து, விட்டன்றிச் சேறல் கூடாதென்பார், விட்டு அணை என்றும், சிவனை ஐம்பொறியின் விட்டவழி மீளாமையை வலியுறுத்துவார், சகல னைம்பொறியி னீங்கான் என்றும், ஒரோவழி மீட்சி யுளதாயின் அதற் குக் காரணம் இஃதென உவமைமுகத்தா னுணர்த்துவார், நீர்ப்பாசி போல் என்றும், ஐம்பொறியின் மீளுமாயின் அவற்றிற்கு மூலமாகிய மல கன்ம மாயைகளும் அது பற்றாக வந்து தலைப்படுமென்பார், மலகன்மம்வரின் என் றும், அம்மீட்சியை நீக்குதற்கு உபாயங் கூறுவார், நீங்கானை நினைந்து நீங்கு என்றுங் கூறினார்.

இன் இரண்டும் உவமவுருபுகள். அந்தம் என்றது நான்காஞ் சத்தி நிபாதத்தை. அதுவும் நால்வகைப்படு மாகலின், அவற்றுள்ளும் மேம்பட்ட

* திருவாசகம், நீத்தல்விண்ணப்பம், கஉ.

சத்திநிபாத முடையாய் என்பார், அந்ததர என்றார். சகலனை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. மல கன்மம் எனவே இனம்பற்றி மாயையுங் கொள்ளப்படும். நீங்கானை நீங்கு நினைந்து எனவே வருகின்ற பாதத்திற்குத் தோற்றுவாய் செய்ததூஉ மாயிற்று; *"மங்கல மென்ப மனை மாட்சி மற்றத—னன்கல னன்மக்கட் பேறு" என்புழிப் போல.

இம்மூன்று பாட்டும் முறையே திருவடிஞானத்தைப் பெற்ற உயிர் மீளப் பாசஞானத்திற் சேற லில்லை யெனவும், பாசஞானத்தின் மீளுதல் இழுக்கெனவும், ஒரோவழிப் பயிற்சிவயத்தான் மீளுமாயின் மீளாது செய்து கொள்ளற்பாற் றெனவுங் கூறித் தாய்தரையேயாம் என்னும் பிரிநிலையேகாரப் பொருளை வலியுறுத்தி ஒருபொருண்மேல் வந்தவாறு காண்க.

நான்காமதிகரண முடிந்தது.



சாதனவோத்தின் இரண்டாம்பாதமாகிய

## எட்டாஞ்சூத்திர முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



* திருக்குறள், ௬-ம் அதி. வாழ்க்கைத் துணைநலம், ௧0.

சிவதரிசனம்; ஆன்மசுத்தி.

திருச்சிற்றம்பலம்.

# ஒன்பதாஞ் சூத்திரம்.

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே

எ-து. சூ-ம. எ-னின். ஆன்மசுத்தி பண்ணுமா றுணர்த்துத னுதலிற்று.

மேற் பொதுவதிகாரத்துட் கூறிப்போந்த முப்பொருள்களுள் விள்ளற்பாலதனை விண்டு அதனான் வருந் துன்பத்தி னீங்குதலும், கொள்ளற்பாலதனைக் கொண்டு அதனான் வரும் இன்பத்தைப் பெறுதலு மாகிய வீடுபேறடைதற்குரிய இயல்பு தனக்குண்டென ஏழாஞ்சூத்திரத்தாற் பெறுவிக்கப்பட்ட ஆன்மாவுக்கு அவ்விடுபேற்றைப் பயப்பித்தற்கட் சிறந்த சாதனமாவது விள்ளற்பாலதாகிய பகைப்பொருள் இது கொள்ளற்பாலதாகிய நட்புப்பொருள் இது எனக் குருமுகத்தான் விவேகித்தறியும் ஞானம் ஒன்றேயாம் எனவும், அவ்வறிவு பாசப்பற் றற்றாலன்றி நிகழாமையிற் பாசஞானத்தாலெய்தற்பால தன்றெனவும் மேலைச் சூத்திரத்தான் உணர்த்தியவழி, அற்றேல், பாசஞானம் ஏகதேசவுணர்வாகலின் அதனால் வியாபகப்பொருளை அறியும் விவேகஞானம் நிகழா தாயினும், பசுஞானம் வியாபகவுணர்வாகலின் அதுவே அதற்கமையுமென்னும் ஆசங்கையை நீக்குவதாகிய ஆன்மசுத்தி செய்யுமாறு உணர்த்துமுகத்தானே அச்சாதகத்தைநிகழ்விப்பது இது என்பதூஉம், அதனைப்பெறுமாறும் அது நிலைபெறுமாறுமாகிய சாதிக்குமுபாயம் இது என்பதூஉம் வகுத்துணர்த்துதல் சாதனவோத்தின் மூன்றாம் பாதமாகிய இவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

மேலைச் சூத்திரத் திறுதியதிகரணத்தாற் பாசஞானப் பற்றற்றா லன்றி அறியக்கூடா தென்றவழி, அற்றேல், பசுஞானத்தா லறிதல் கூடும்போலும் என்னும் ஆசங்கையை ஈண்டு நீக்குதலின், அவ்வாசங்கைபற்றிய வியைபானே அதிகரண வியைபும், மேல் ஆன்மதரிசனமாமா றுணர்த்தி ஈண்டு ஆன்மசுத்தியாமா றுணர்த்துதல் முறைமையாகலின், அம்முறைமைபற்றிய வியைபானே பாதவியைபும், மேற் சாதனமாவது இதுவென் றுணர்த்திய வழி, அதனைச் சாதிக்குமாறு யாங்ஙனமென்று அவாய்நிற்றலின், அவ்வவாய் நிலைபற்றிய வியைபானே ஒத்தியைபும் பெறப்பட்டன.

அற்றேல், பசுத்துவமுடையனுயவழியே ஆன்மாப் பசுவென நிற்பதாகலின் பாசப்பற்றறுதி கூறவே பசுப்பற்றறுதியும் பெறப்படுதலின், ஆசங்கை

நிகழாதாலெனின், அவ்வியல்பு முன்னர்க் கூறப்படுதல் நோக்கி நிகழு மென்ப துணர்ந்துகொள்க.

அஃதங்ஙனமாக; சிவப்பிரகாசத்தில் *"தான்பணியை நீத்தலே" ஆன்ம சுத்தி என்றோதுதலின், அத்தன்மைத்தாகிய ஆன்மசுத்தி வருகின்ற சூத் திரத்தின் "இறைபணி நிற்க" என்பதனாற் பெறப்படுவதெனவே கொள்ளற் பால தாகலானும், அழுக்கு நீங்குதலே †அறுவைக்குச் சுத்தியாமாறு போலப் பாசக்ஷயம் பண்ணுதலே ஆன்மாவுக்குச் சுத்தியாமாகலானும், அதனை ஆன்மசுத்தி பண்ணுமா றுணர்த்திற்றெனல் வேண்டும்; அவ்வா றுரையாது பதியைநாடி எனவும், தண்ணிழலாம்பதி எனவுஞ் சிவதரிசனம் பண்ணுமாறே உணர்த்துதற் கெழுந்த இச்சூத்திரத்தை ஆன்மசுத்திபண் ணுமா றுணர்த்திற்று என்றல் மலைவாம்பிறவெனின்,—ஆகாது; சிவதரிசனம் பண்ணுமா றுணர்த்திற்றென்பது சூத்திரத்தா னினிது விளங்குதலின், அதனை எடுத்துரையாது சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்மசுத்தியென்னும் உடனிகழ்ச்சி யுணர்த்துதற்கும், தம்முள் வேறுபாடு சிறுபான்மை யுடை யனவாகிய இவ்விருசூத்திரமும் ஒருபொருண்மேலன வென்பது உணர்ந்து கோடற்கும் அவ்வா றுரைத்தாராகலின்.

அஃதங்ஙனமாக; "ஆன்மாத் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்" என்றமையின், தமதுமுதல் சீபாதத்தை அணைதற்கு ஆன்மதரிசனமே யமையும்; ஆன்மசுத்தி வேண்டுவ தெற்றுக் கெனின்,—அஃதொக்கும்; திரியக்காண்டலும், இரட்டுறக்காண்டலும், தெளியக்காண்டலுமெனக் காட்சி மூவகைப்படும். இம்மூன்றும் அதிபரி பக்குவமுடையார்க்குக் கேட்டமாத்திரையே ஒருங்கு நிகழும்; ஏனையோர்க் குச் சோபானமுறையாற் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் இம்மூன் றூனும் முறையே நிகழ்வனவாகலின், ஆன்மதரிசனத்தைப் பயக்குஞ் சிவ ரூபத்தின்பின் ஆன்மசுத்தியைப் பயக்குஞ் சிவதரிசனம் ஒருதலையான் வேண்டப்படுமென்று உணர்ந்துகொள்க. இதனானே உருவ தரிசன சுத்தி கட்குத் தம்முள் வேறுபாடுங் காண்க. ‡"நேசமுடன் றிருவடிக்கீழ் நீங் காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி—யாசையொடு மங்குமிங்கு மாகியல மருவோ ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்" என வழிநூலாசிரியர் கூறியதும் இக்கருத்தேபற்றி யென்க. இம்மூவகைக் காட்சியுமே உருவம், தரிசனம், சுத்தி எனப்படும் என்பது.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—பசுஞானத்தானும் பாசஞானத் தானும் அறியப்படாத முதல்வனை அம்முதல்வனது ஞானக்கண்ணானே தன்னறிவின்கண்ணே ஆராய்ந்தறிக. அப்பதிஞானத்தைப் பெறுமாறு யாங்ஙனமெனின், நில முதல் நாதமீறாகிய பாசக்கூட்டம் நின்றுழி நில்லாது பரந்து திரிதற்கண் அதிவேகமுடைய பேய்த்தேரி னியல்பிற்றாய்க் கழிவ தென்றறிந்து நீங்கவே அப்பதிஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். அங்ஙனம் விளங்கிய ஞானத்

* சிவப்பிரகாசம், உண்மை, உக. † அறுவை-ஆடை. ‡ சிவஞானசித்தி, அ-ம் சூ. ௩௬.

தான் ஞேயத்தைக் கண்டகாட்சி சலியாமைப்பொருட்டு அப்பொருள்பயக்குந் திருவஞ்செழுத்து அவ்விதிப்படி அறிந்து கணிக்கப்படும் என்றவாறு.

நாடி என்பது *"நன்றும னதுநீ நாடாய் கூறி" என்புழிப்போல இகரவீற்று முன்னிலை ஏவல். நாடி எண்ணும் எனக்கூட்டி வினையெச்ச முடிபாக வைத் துரைப்பினும் அமையும். சிந்தையின்கண் என்னும் ஏழனுருபுதொக்கது. உரா - முதனிலைத் தொழிற்பெயர். கண்ணுருபு விரித்துரைக்க. "பறவாக்குளவி" "பாயாவேங்கை" என்றாற்போல ஒருவரான் ஊரப்படாத வேகத்தையுடைய தேரெனச் செயப்படுபொருட்கண் வந்த பெயரெச்சமறையாகவைத் துரைப்பினும் அமையும். இப்பொருட்குத் †"திருத்தார் நன்றென்றேன் றியேன்" என்புழித் தியேன் என்பதுபோல ஊரா என்பது குறுக்கல் விகாரம். பின்வந்த பதி ஆகுபெயர்.

ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி எனவே ஏனை ஞானங்களா னறியவாராமை பெறப்படுமாயினும் இனிது விளங்குதற்பொருட்டு அதனை அறவாத முகத்தான் ஓதினர்.

உணரா பதியை என்பதனை வேறுதொடராக வைத்து முற்றுப்பொருள் படவோதுவாருமுளர். அஃது ஆசிரியர்கருத்தாயின் அதனை வேறோரதிகரணமாக வைத்துரைப்பர். அவ்வாறுரையாமையானும், ஞானக்கண்ணினினாடி எனவே ஏனை ஞானங்களான் நாடப்படாமை தானே பெறப்படுதலின் அதனை விதிமுகத்தான் ஓதவேண்டாமையானும், வடமொழிச் சூத்திரத்திற்கும், ‡"பாசஞானத் தாலும் பசுஞானத் தாலும் பார்ப்பரிய பரம்பரனை" என்னும் வழிநூற்கும் ஏலாமையானும் அது பாட்டன்மை யறிக.

இதனுள், ஊனக்கண் பாசமுணராப் பதியை ஞானக் கண்ணினிற்சிந்தை நாடி என்பது ஓரதிகரணம்; உராத்துனைத் தேர்த்தெனப் பாசமோருவத் தண்ணிழலாம்பதி என்பது ஓரதிகரணம்; விதியெண்ணு மஞ்செழுத்தே என்பது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென் றுணர்க.

---

## முதலதிகரணம்.

அவற்றுள், முதலதிகரணம் பாசஞானத்தா லறியப்படாதென் மேற்கூறிப் போந்த முதல்வனைப் பசுஞானத்தால் அறிதல் கூடுமென்னுஞ் சிவசமவாத சைவரை மறுத்தற் கெழுந்தது:—

**ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணினாலே காண்க வென்றது**

எனவரும்.

அம்முதலை - ஊனக்கண் பாசங்களா னுணரப்படா தெனப்பட்ட முதலை. ஊனக்கண் பாசங்களை எடுத்தோதி விலக்கினமையின் ஈண்டு ஞானக்கண் என்றது சிவஞானத்தை எனக்கொள்க. ஏனைஞானங்களிற் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

---

* அகநானூறு, உருஅ. † 'பன்மாடக்கூடல்' என்னுஞ் செய்யுள். ‡ சிவஞான சித்தி, கூ-ம் சூ. க.

× வாக்கு என்றது வாக்காதிய ஞானமுடிவான பாசஞானங்களை.
† மனம் என்றது அவற்றின் வேறாகிய பசுஞானங்களை.



அற்றேல், பாசஞான பசுஞானங்களான் அறியப்படாத பரம்பொருள் சிவஞானத்தான் அறியப்படுமென்றற்குப் பிரமாணம் என்னை யென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

அவன்×வாக்கு†மனாதீத கோசரமாய் நிற்றலான்

எனவரும்.

இதன்பொருள் * சத்ததிகாரத்திற் காட்டினும்.

வாக்குமனாதீதகோசரமாய்நிற்றல் ஆண்டுப் பெறப்பட்டமையின், அதனை ஈண்டு ஏதுவாகவைத்து மேற்கோளைச் சாதித்தார். வாக்குமனாதீதமாயுங் கோசரமாதல்பிறிதொன்றாற் பெறப்படாமையிற்சிவஞானத்தானே அறியப் படும் என்பது தானே போதருமென அருத்தாபத்தியளவை காட்டியவாறு.

அற்றேல், வாக்குமனாதீதப் பொருள் கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாதென்ற தென்னை? பசுத்துவமுள்வழிச் செயற்கையான் ஏக தேசத்தின் விளங்கும் பசுஞானம் அப்பசுத்துவம் நீங்கியவழிச் சிவஞானத் தோ டொப்ப எங்கும் வியாபகமாய் விளங்குமென்பது சிவாகமநூற் றுணி பாகலின், அவ்வழிச் சுட்டிறந்தறிவதாகிய பசுஞானத்திற்குக் கோசரமாதல் பெறப்படுமாலென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத் துக் காட்டும் உதாரணம்:—

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணா
ரென்னா மெனவறிவா ரின்று

எனவரும்.

† நாடி முதலியவற்றுள் யான் யார்? என்னைத் தேடியும் அறிகின்றி லேன் என்று இவ்வாறு தேர்கின்ற தேர்ச்சிக் கூறுபாட்டை இங்ஙனம் ஒன் றிற் றெளிவு பிறவாது மயங்கி நின்று சூழுஞ் சூழ்ச்சிக் குறைவுபாட்டான் நமக் கெய்தியதென்றாராய்ந்து பார்த்து, அங்ஙனம் பார்த்தவழி, ‡ "உன் னறிவை நீயே யுணர்வையே யாமாகி—லிந்நெடுநாட் பாசத் திசையாயே—யுன்னறிவை—நீங்கா வறிவாகி நீரு மிரதமும்போ—லாங்கா ணரனு ரருள்" என்பவாகலின் அத்தன்மைத்தாகிய சிவஞானத்தைப் பெருமையால் எய்

* பக்கம், ௪௦ரு. † மேவிய புன்மயிர்த் தொகையோ வம்மயிர்—பாவிய தோலின் பரப்போ தோலிடைப்—புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை—யூறு முதிரப் புனலோ கூறுசெய்—திடையிடை நிற்கு மெலும்போ வெலும்பிடை—முடை கெழு மூளை விழுதோ வழுவழுத்—துள்ளிடை யொழுகும் வழும்போ மெள்ளநின்—றூரும் புழுவி னெழுங்கோ நீரிடை—வைத்த மலத்தின் குவையோ வைத்தூக்—கட்டிய நரம் பின் கயிறோ வுடம்பிற்குட்—பிரியா தொறுக்கும் பிணியோ தெரியா—தின்ன தியா னென் றறியே னென்னை—யெங்குந் தேடினன் யாதிலுங் காணேன்" என்னுந் திருவாக் கும் ஈண்டுச் சிந்திக்கற் பாலது; திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, ௬௩. ‡ துகளறுபோதம், ௪௬.

தியதென அறிந்து குருவருளான் உணரப்படுஞ் சிவஞானத்தானே சிவனை அறிந்தவர் அச்சிவனில் வியாப்பியமாய் நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய தம்மையும் அறிவர்; அப்படி அறியாதார் மற்றெவ்வியல்பினரென்று தம்மை அறிய வல்லுவர் இம் முத்திகாலத்து? என்க.

நாடி என்றது இடை பிங்கலை சுழுமுனை முதலிய தசவகை நாடியை. நரம்பு எனவே அடங்குமேனுந் தலைமை பற்றி வேறு கூறினர். சீ-புண்ணீர். கோழை-ஐ. ஓகாரம்-தெரிநிலை. நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ என்றது உபலக்கண மாகலின், ஏனைத் தத்துவ தாத்துவிகங்களையும் அவ்வாறு தெரிதல் கொள்ளப்படும். என்று என்பது சொல்லெச்சம். ஒற்றுமை பற்றி அரனது ஞானத்தை அரன் என்று உபசரித்தார். உம்மை எதிரது தழீஇயது. எவன் என்னும் வினுவினைக் குறிப்புப்பெயர் ஈண்டு ஆகுபெயராய் என் என மரீஇயிற்று. ஆம்-அசை.

இது, தம்மை அறியுமாறு கூறுமுகத்தானே தலைவனை யறிந்தபின் அறியப்படுவதாகிய தம்மறிவுகொண்டு தலைவனை அறியுமாறு யாங்ஙனமெனச் சிவசமவாதசைவரை மறுத்துச் சிவஞானத்தானன்றி அறியப்படாமையை வலியுறுத்தவாறு.

அற்றேல், நாடி எலும்பு நரம்பு முதலிய தத்துவ தாத்துவிகங்களை அறிதற்குச் சிவஞானத்தை யின்றி அமையு மான்மாச் சிவனை யறிதற்கண்ணும் அவ்வாறமையு மென்றற் கிழுக்கென்னை? எதிர்முகத் தொருபொருளைக் கண்ட கண்ணே மறித்து நோக்கியவழிப் பிற்பக்கத்துப் பொருளையுங் காண்டற்கமையுமால் என்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

காட்டிய கண்ணே தனைக்காணு கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணு—காட்டிய
வுள்ளந் தனைக்காணு வுள்ளத்தின் கண்ணுய
கள்வன்ரு னுள்ளத்திற் காண்

எனவரும்.

எதிர்முகத்துப் பொருள்போல வெரிந்புறத்துப் பொருளும் புறத்துத் தோன்றும் விடயமேயாகலிற் கண் அவ்விரண்டனையும் ஒப்பக் காண்டல் அமையும். காண்கின்ற தன்னைக் காணமாட்டாது. தனக்குக் காட்டாய் உண்ணின்று செலுத்தும் உயிரையுங் காணமாட்டாது. அதுபோலத் தனக்கு வேருகிய நாடி எலும்பு முதலிய தத்துவ தாத்துவிகங்களைத் தற்போதத்தால் அறிகின்ற உயிருந் தன்னை அறியமாட்டாது. தன்னைச் செலுத்தும் முதல்வனையும் அறியமாட்டாதுதானே. அங்ஙனமாயினுங் கண்போல் உயிர் சடமன்மையிற் கண்ணிடத்து உயிர் நிற்குமாறுபோ லன்றி உயிர்க்கு அதனறிவாகி உடனின்ற கள்வன் அம்முதல்வ ஞகலான், அவனை உன்னறிவின்கட் காண்பாயாக என்க.

காட்டிய என்பது தன்வினைப்பொருள்பட நின்றது; *"வாணிக மொன்றுந் தேற்றாய்" †"தேற்றா வொழுக்கம்" ‡"தேற்றாதார் மாட்டு" என்புழிப் போல. ஏகாரம் அசைநிலை. காணாது என்னுந் துவ்வீறு தொக்கு நின்றது, §"முறைகாக்கு முட்டாச் செயின்" என்புழிப் போல. ஒருமைப்பன்மை மயக்க மென்பாருமுளர். கண்ணாய-அறிவாய என்க. உடனின்றும் பசுஞான பாசஞானங்களா னறியப்படாமை பற்றிக் கள்வன் என்றார்; ¶"கண்ணாகிக் கரணங்கள் காணும னிற்பன்" என்றார் வழிநூலாசிரியரும். தான்-அம்முதல்வன். காட்டாய வுள்ளத்தைக் கண் காணா என உவமைக்கோதியவாறு பொருளினும் வருவித்துரைத்துக்கொள்க. இஃது எடுத்துக் காட்டுவமை.

முதலதிகரணமுடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

மேலை யதிகரணத்தில் இந்திரியத்தின் வேறாவான் காணப்பட்ட தன்னறிவின்கண்ணே சிவஞானத்தாற் சிவனைக் காண்டலொன்றே சிவப்பேற்றிற்குச் சிறந்த சாதனம் என்றுணர்த்தியவழி, அற்றேல், சிவஞானத்தைக் காணுமாறு யாங்ஙனமென்னும் அவாய்நிலையை நீக்குதற்பொருட்டு மேலதற்குப் புறனடையாக எழுந்தது இரண்டாமதிகரணம்:—

இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென்றுணரற் பாற்று எனவரும்.

படிகசொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற வேற்றுநிறங்களை இவை நிலையுதலிலவாகிய வேற்றுநிறங்களெனக் கண்டு நீத்தவழி நிலையுதலுடைத்தாய் விளங்கி நிற்கும் படிகசொரூபம்போல, நிலையுதலுடைய ஞானத்தினுடைய சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையுதலிலவாயுள்ள பிரபஞ்சத்தை இவை நிலையுதலுடையவல்ல என்று விவேகித்தறியின் அவ்வழி நிராலம்பமாய் விளங்கித் தோன்றுவது அச்சிவஞானத்தின் சொரூபமென்று அறியும் பான்மைத்து என்றவாறு.

வன்னபேதங்கள் சித்திரம் எனப் பொருள் கொண்டவழி, நிலையுதலுடைய பித்தியின் சொரூபத்தைக் காட்டாதுமறைத்துநிற்கும் நிலையுதலிலவாயுள்ள சித்திரங்களை இவை நிலையுதலுடையவல்ல என்று கண்டவழி ஒருதன்மையாய் விளங்கித் தோன்றும் பித்திபோல என்று உரைத்துக் கொள்க.

ஆசிரியர் சொற்பல்காமைப்பொருட்டு இவ்வாறு ஏகதேசவுருவகமாக வைத்து உடம்பொடுபுணர்த்தோதிய ஏதுவை ஏனை யதிகரணங்களுட்போல மேற்கோளின் வேறுவைத்துக் காட்டுமாறு:—

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையார் இலம்பகம், உஎஅ. † நாலடியார், பொறையுடைமை, ரு. ‡ திருக்குறள், கoசு-ம் அதி. இரவு, சு. § மேற்படி, ருரு-ம் அதி. செங்கோன்மை, எ. ¶ சிவஞானசித்தி, கூ-ம் சூ. ரு.

[இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்றுகாண உளதாய் நிற்பது ஞானசொரூப மென்றது, வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல் பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாந் துணையான்]

எனவரும்.

[வன்னபேதஞ் சித்திரபேத மெனப் பொருள்கொள்ளின் வேற்றியல்பாகிய சித்திரங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது பித்தியின் சொரூபமாந் துணையான்] என்பதாம்.

ஈண்டுப் பாசம் என்றது காரியப்பிரபஞ்சத்தை யென்பார், அசத்தாயுள்ள என்றும், ஏதுப்பொருளை உடம்பொடு புணர்த்துக் காட்டுவார், பிரபஞ்சத்தை என்னுது வன்னபேதங்களை என்றும், வியாபகப் பொருளுக்கு ஒருவுதலாவது காட்சிவிசேடமேயா மென்பார், அசத்தென் றொழிய என்னுது அசத்தென்று காண என்றும், தண்ணிழலாய்நிற்றல் புதிதன்றென்பார், உளதாய் நிற்பது என்றும், ஈண்டுப் பதி என்றது பதிஞானத்தை என்பார், ஞானசொரூபம் என்றும், இஃது அநுபவத்தி னன்றிச் சொல்லளவையின் அறிய வாரா தென்பார், உணரற்பாற்று என்றும் உரைத்தார். அசத்தினியல்பு இதுவென்பது*அசத்ததிகாரத்திற் காட்டப்பட்டது; கடைப்பிடிக்க.

அசத்தெனப்பட்ட காரியரூபப் பிரபஞ்சத்தை அசத்தென்று காண்டலாவது ஆசிரியன் அறிவுறுத்த உபதேசப்பொருளி னுறைத்துநின்று †"அட்ட குணமெட்டுச் சித்தி கோகனதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்—வெறுத்துநெறி யறுவகையு மேலொடுகீ ழடங்கக்" காரண ரூபத்தின் இல்லாமையான் வெறும்பொய்யென நினைந்திருத்தல்.

அற்றேல், அதனை அவ்வாறு கண்டவழித் தோன்றுவது இன்னதென்றறிய வாராத சூனியமே யன்றிப் பிறிதில்லையாலோ வென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

நிர்க்குணனுய் நின்மலனுய் நித்தியா நந்தனுய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
லானு வறிவா யளவிறந்து தோன்றுனே
வானே முதல்களையின் வந்து

எனவரும்.

அசத்தெனப்பட்ட மூவகைப் பிரபஞ்சத்துள், அசுத்தப் பிரபஞ்சமெல்லாம் முக்குணமயமாகலிற் சத்துவகுண விருத்தியாகிய பிரகாசரூபஞ் சாந்தரூபஞ் சுகரூபமாகத்தான், இராசதகுண விருத்தியாகிய பிரவிருத்திரூபங் கோரரூபந் துக்கரூபமாகத்தான், தமோகுணவிருத்தியாகிய நியமனரூபம் மூடரூபம் மோகரூப மாகத்தான் அளவிட்டறியப்படும்; முதல்வன் இம்முக் குணங்களுங் கடந்தவனுகலான் இவற்றுளொன்றுக அறியப்படானென்பார், நிர்க்குணனுய் என்றும்; மிச்சிரப்பிரபஞ்சம் முக்குணங்களைக்

* பக்கம், ருoo. † சிவஞானசித்தி, கூ-ம் சூ. சு.

கடந்து நிர்க்குணமாய் உள்ளதொன்றாயினும் மலகன்மங்களோடு விரவி நிற்ற லின் மல காரியமாகிய மோக முதலிய எழுவகை யுருவமாகத்தான், கன்ம காரியமாகிய சுகரூபந் துக்கரூபமாகத்தான் அளவிட்டறியப்படும்; முதல் வன் மலகன்மங்களையுங் கடந்து நிற்றலான் அவற்றுள்ளும் ஒரியல்பு பற்றி அறியப்படான் என்பார், நின்மலனாய் என்றும்; சுத்தப்பிரபஞ்சம் மல கன்மங்களையுங் கடந்து நின்மலமாயுள்ளதொன்றாயினுங் காரியப்பட்டு அநித்தமா மியல்புடைமையிற் சாதிசயாநந்தரூபமாய் அளவிட்டறியப்படும்; முதல்வன் காரியப்பாட்டினது உபசாரத்தையுங் கடந்தவனாகலான் அவ்வா றும் அறியப்படான் என்பார், நித்தியாநந்தனாய் என்றும்; ஆன்மாவும் இம் மூவகைப் பிரபஞ்சத்துட்பட்டுச் சகுணனாயுஞ் சமலனாயுஞ் சாதிசயாநந்த னாயும் பொதுவியல்புபற்றி அறியப்படும்; முதல்வன் அவ்வாறும் அறியப் படான் என்பார், தற்பரமாய் நின்ற என்றும்; அங்ஙனம் நின்றநிலை ஒன் றோடு உவமித்தறியப்படாமை பற்றித், தனி முதல்வன் என்றும்; இத்தன் மையனாகிய முதல்வன் நில முதல் நாதமீறாகிய பிரபஞ்சங்களை அசத்தென்று களைந்தவழிப் பயின்றறியாமையின், இன்னதென் றறியவாராத சூனியம் போலச் சுட்டறிவி னளவினைக் கடந்து தோன்றிப் பின்னர்ச் சுட்டிறந்தறியு மறிவின்கண்ணே *"சோதிக்குட் சோதியாய்" வெளிப்பட்டுத் தானே விளங்கித் தோன்றுவன் என்பார், வானே முதல் களையின் அற்புதம் போல் அளவிறந்து ஆனா அறிவாய் வந்து தோன்றானே என்றுங் கூறினார்.

ஈண்டுக் குணம் என்றது முக்குணங்களை. அவ்வாறின்றி நிர்க்குணன் என்பது ஒருகுணமு மில்லான் என்றுரைப்பின் அது தன்வயத்தனாதல் முத லிய எண்குணங்களை இயல்பாக வுடைய முதல்வனுக் கேலாமையின், மாயா வாதி முதலியோர் கூற்றாய் முடியுமென் றொழிக.

தற்பரன்-தனக்குப்பரன் என நான்கனுருபு விரித்துரைக்க. தன் என் றது ஆன்மாவை. அற்புதம் என்பது ஈண்டுச் சூனியத்தின்மேற்று. ஆனா அறிவு-தன்னறிவின்கண் நீங்காது நிலைபெறு மறிவு. ஓகாரம் எதிர்மறை.

வானே முதல் என்றதனானே தோற்றமுறைபற்றி வானுக்குக் கீழுள்ள பூதங்களும், ஒடுக்கமுறைபற்றி வானுக்கு மேலுள்ள தத்துவங்களும் உடன் கொள்ளப்படும்.

ஏகாரம் அசைநிலை. முதல்-ஆகுபெயர். நிர்க்குணனாய் நின்மலனாய் நித் தியாநந்தனாய்த் தற்பரமாய் என்புழி ஆக்கச்சொல் உண்மை குறித்து நின் றது வடமொழிமதம். ஆனா வறிவாய் என்புழி ஆக்கம் முன்னர்ச் சூனியம் போற் றோன்றுவோன் பின் ஆனா வறிவாய்த் தோன்றுவான் என வேறு பாடு குறித்து நின்றது. குணகுணிகட்கு வேற்றுமையின்மையின், முதல்வ னது ஞானத்தை முதல்வன் என்று உபசரித்தார்.

அற்றேல், வானேமுதல் களைந்தவழி அங்ஙனந் தோன்றும் பொருளும் வேறொன்றெனக் கோடும்; ஞானசொரூபமே அது என்றற்குப் பிரமாண

* சிவஞானசித்தி, அ-ம் சூ. ௲அ.

மென்னை யென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண்—சுட்டி
யுணர்ந்த நீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம்

எனவரும்.

ஏகதேசவுணர்வாற் சுட்டியுணரப்படும் நிலமுதற் சிவமீறாகிய பிரபஞ்சத்தை அசத்ததிகரணத்திற் கூறிய வியல்புபற்றி ஒரோவொன்றாகச் சுட்டி அசத்தென்று கண்டு கழித்துக்கொண்டு சென்றவழி, முடிவின்கட் கோசரமாவது வேறின்மையிற் பாரிசேடவளவையான் அது சத்தேயாமென்று செம்மையே அறிவாயாக. அற்றேல், அசத்தின் வேறாய் அங்ஙனங் கோசரமாவது சத்தேயாமென்றதொக்கும்; அது முதல்வனன்று; உயிரேயா மென்றாற்படும் இழுக்கென்னை யெனின், நிலைபேறின்றி ஒரோவொன்றாகச் சுட்டியறிந்துவந்த நீ என்றும் ஒருதன்மைத்தாய் நிலைபெற்று நிகழும் அறிவாகிய சத்தாவாயல்லை; அசத்தை அசத்தென்று கண்டு நீக்கியவழி உளதாகிய சத்தினை நீ அடிமையாகச் சென்று தலைப்பட்டதினாற் சுட்டியறிவதாகிய ஏகதேச வறிவைச் செய்யும் பொதுவியல்பு நின்னை விட்டுநீங்கும், ஆகலின் அசத்து மல்லை என்க.

ஆகலின் அசத்து மல்லை என்பது குறிப்பெச்சம். எனவே, *"அசத்தைச்-சத்துட னின்று நீக்குந் தன்மையாற் சதசத்தா"வை என்பதாம்.

†"மயக்கம துற்று மருந்திற்றெளிந்தும்" என்றவெண்பாவாற் பெறப்பட்டதனையே ஈண்டுக் கடைப்பிடித்தற்பொருட்டுச் சுட்டி உணர்ந்த நீ சத்தல்லை உண்மையைத் தைவம் புணர்ந்ததனாற் போய் விட்டுப்போ மாகலின் அசத்து மல்லை என வேறோ ராற்றானுந் தெளிவித்தாராகலின், இது கூறியது கூறலன்மையுணர்க. சட்ட என்பது செப்பப் பொருட்டாயதோர் அகரவீற் றிடைச்சொல். அது "சட்டம்" என இழிவழக்கில் மகரவீறாய் மரீஇயி ற்று.அசத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. தேவனதுடைமை தைவம் என்பது வடமொழி. வாதனையு மின்றிப் பற்றறக் கழியு மென்பார், விடும் என்னாது விட்டுப்போம் என்றார்.

இனி, அசத்தை அசத்தென்று கண்டு நீங்குமாறும் நீங்கியவழி உண்மையைத் தைவம் புணருமாறும், புணர்ந்தவழிப் பொய் விட்டுப்போமாறுந் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா
யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த

* சிவப்பிரகாசம், உண்மை, எ.　† இந்நூல், எ-ம் சூ. ௩-ம் அதி. உ.

ஊனத்தைத் தான்விடுமா றுத்தமனி னெண்கருட
சானத்திற் றீர்விடம்போற் றான்

எனவரும்.

சுட்டுணர்விற்கு விடயமாகிய பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்று என ஒரோவொன்றாகச் சுட்டி அசத்தாகக் கண்டு விட்டுநீங்கி அங்ஙனம் அறிந்து நீங்கிய தன்னறிவின்கண்ணே சுட்டுணர்விற்கு விடயமாகாத முதல்வனை ஆராய்ந்து, அச் சிவஞானத்தானே ஆசாரியன் "சிவோயம்" எனத் தன்னுள்ளே பாவித்துச், "சிவத்துவமசி" என் றறிவுறுக்குஞ் சித்தாந்தமகாவாக்கியப் பொருளை நாடோறும் பயின்று "சிவோகம்" எனப் பாவிப்பானாயின், அந்தப் பாவகத்தின் விளங்கும் முதல்வனால் அநாதியே கூடிய பொதுவியல்பையும், அதற்கேதுவாகிய மல மாயா கன்மங்களையுந் தான்விட்டு நீங்குமாறு, ஒள்ளிய கருடதியானத்தில் விளங்குங் கருடனால் அப்பாவகன் விடத்தைத் தீர்த்துக்கொள்ளுமாறுபோலா மென்க.

ஆக என்பது ஆய் எனத் திரிந்து நின்றது. தான் - முன்னையது எழுவாய்; பின்னையது அசை. உத்தமனது ஞானத்தை உத்தமன் என்று உபசரித்தார். சானம்-பாகதச் சிதைவு. இதனானே வருகின்ற அதிகரணத்துக்குத் தோற்றுவாய் செய்ததூஉ மாயிற்று.

ஈண்டுக் கருடபாவனை யென்றது யாதெனிற் கூறுதும்:—ஆதிபௌதிக கருடன் ஆதிதைவிக கருடன் ஆத்தியான்மிக கருடன் எனக் கருடன் மூன்றுவகைப்படும். இவ்வாறு பொருடோறுங் கண்டுகொள்க. அவற்றுள், உலகத்திற் காணப்படுங் கருடன் ஆதிபௌதிக கருடன். அதற்கு அதிதெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்தில் அதுபோல வைத்துத் தியானஞ்செய்து கணிக்கப்படும் மந்திரம் ஆதிதைவிக கருடன். அம்மந்திரத்தி னிடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடனெனப்படும். அவற்றுள், ஈண்டுக் கருடனென்றது கருடனுக்கதி தெய்வமாய் மாந்திரிக னுளத்திற் காணப்படும் மந்திரரூபமாகிய ஆதிதைவிக கருடனை. அதனைப் பாவித்தலாவது நாடோறும் பயின்று வந்த பயிற்சிவிசேடத்தால் அம்மந்திரரூபமே தானாக அநந்நியபாவனை செய்து தன்னறிவு அதன் வசமாம்படி உறைத்து நிற்றல். அங்ஙனம் நின்று அம்மந்திரக்கண்கொண்டு பார்ப்பவே அஃது அவ் விடவேகத்தை மாற்றுதல் ஒருதலையாகலின், அப்பாவனை ஈண்டைக்கு உவமையாயிற்று. இதனானே கருடபாவனை சத்தியமா மென்பதூஉம், அதனை அசத்திய மென்பார் மதம் போலி யென்பதூஉந் தெற்றெனவுணர்க. புள்ளு விலங்கு மரம் முதலிய சராசரங்களுக் கெல்லாம் அதிதெய்வ மந்திரம் உள வென்பதூஉம், படிகம்போல அதுவதுவா மியல்புடைய ஆன்மா அவற்றுள் எவ்வெம் மந்திரங்களைக் கணிப்பினும் அவ்வம்மந்திர சொரூபி யாவா னென்பதூஉஞ் சர்வ ஞானோத்தர முதலியவற்றுட் காண்க.

இரண்டாமதிகரண முடிந்தது.

X கருடபாவனை; அர்த்தநாரிஸ்வரம், 190½

## மூன்றுமதிகரணம்.

மேலை இரண்டதிகரணங்களானுந் தன்னை இந்திரியத்தின் வேறுவான் கண்ட ஆன்மா, அக்காட்சி நிலைபெறுமாறு அசத்தாயுள்ள பாசத்தை அசத்தென்று கண்டு ஒருவுக; ஒருவியவழி உளதாய் நிற்கும் ஞானக் கண்ணினால் ஒருவிய தன்னறிவின்கண்ணே தனக்கு ஞேயமாகிய முதல்வனை நாடுக; இவ்விரண்டும் அக்காட்சியை நிலைபெறுத்தி அரன் கழல் சேறலாகிய சிவாநந்த போகப் பயனைப் பயப்பித்தற்கு முறையே சாதனமாம் என்று உணர்த்திய வழி, அற்றேல், அப்பயனைப் பயப்பித்தற்குரிய இவ்விரண்டினையுஞ் சாதித்தோர்க்கு இனிச் சாதிக்கக்கடவதொன் றில்லைபோலுமென மாணாக்கனுக்கு நிகழும் ஆசங்கையை நீக்குதற் கெழுந்தது மூன்று மதிகரணம்:—

**இனி இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றது**

எனவரும்.

இனி என்பது இயைபுணர்த்தற்பொருட்டென மேலேயுரைத்தாம்; கடைப்பிடிக்க. இவ்விடத்து என்பது ஆன்மாப் பாசமொருவி ஞானக்கண்ணினால் ஞேயமாகிய முதல்வனைக் கண்டவிடத்து என்றவாறு. ஸ்ரீ பஞ்சாக்கரத்தை என்பது முத்திபஞ்சாக்கரத்தை என்றவாறு. விதிப்படி உச்சரிக்க என்பது ஆன்மாப் பாசமோருவி ஞானக்கண்ணினிற் பதியைச் சிந்தை நாடுக என ஈண்டு விதித்த விதியின்படியே ஓதுக என்றவாறு. பஞ்சாக்கரத்தாற் சாதிக்கப்படும் பொருளும் அதுவேயாகலான் வேறு வகுத்துக் கூறாது விதிப்படி என மாட்டெறிந் தொழிந்தார். இங்ஙனம் ஆசிரியர் மாட்டெறிந்ததூஉ முணராதார் சாதித்துநிற்குமுறை வேறே ஓதுமுறை வேறே யெனச் சித்தாந்த வழக்கொடு முரணிக் கூறுவர். * நிற்குமுறையும் ஓதுமுறையுந் தம்முள் இயைபில்வழி அஃது அதற்குச் சாதனமாமாறி யாண்டையதென் றெழிக. இன்னும் இதனியல்பனைத்தும் உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றில் விரித்தோதுதலின், அவையெல்லாம் ஆண்டுக் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும். மானதம் மந்தம் உரை என உச்சரிக்குமாறு மூவகைப்படும். அவற்றுட் சுத்தமானத மெனப்படும் அறிவாற் கணித்தலே ஈண்டு உச்சரித்த லென்பார், சூத்திரத்துள் உச்சரிக்க என்னாது எண்ணுக என்றார். வடமொழிச் சூத்திரத்துத் "தியானிக்க" என்றது மது.

அற்றேல், மேலையதிகரணங்களில் ஓதியவாற்றாற் பாசமொருவி ஞானம் பிரகாசித்து ஞேயத்தைக் கண்டுழி, அவ்வளவி னமையாது திருவஞ்செழுத்தானும் அதனைச் சாதிக்க என்றல் மிகையுமாய்ச் சித்தசாதனமுமாமால் என்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

* நிற்குமுறையும் ஓதுமுறையும் விளங்கத் தேற்றுநூல் பண்டாரசாத்திரங்களுளொன்றாகிய பஞ்சாக்கரப் பஃறொடை.

இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கெனக் கொள்க

எனவரும்.

வேம்பு தின்ற புழு அதனை நீத்துக் கரும்பினிற் றலைப்பட்டு அதன் சுவை தெரிந்துழியும் பயிற்சிவயத்தான் முன்னர்த் தான் நோக்கிய வேம்பின் சுவையை நோக்கி நிற்குமாறுபோல, மேலையதிகரணங்களிற் கூறிப் போந்த சாதகங்களைச் செய்து முற்றிய ஆன்மாக்களுக்கு அச்சாதகங்களான் ஞானம் விளங்கி ஞேயங் காட்சிப்பட்ட விடத்தும் பயிற்சிவயத்தான் முன்னர்த் தான் நோக்கிய பாசத்தை நோக்கி நிற்குமாகலின், அந்நோக்கமாகிய வாசனையை நீக்குதற்குரிய சாதக மதுவாகலான் இனி இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க என்று மேற்கொண்டதெனக் கொள்க என்றவாறு.

எனவே இரண்டும் ஒருதன்மையவாயினும் மேலே விதிக்கப்பட்ட சாதகருக்குப் பயன் ஞானம் பிரகாசித்து நிலைகூடுதலும், ஈண்டு விதிக்கப்படுஞ் சாதகத்திற்குப் பயன் அது கூடியவழியுந் தாக்குவதாகிய வாசனையை நீங்குதலுமாகிய பயன்வேறுபாடுண்மையின், ஒருதலையாற் சாதிக்கக்கடவதாகிய திருவஞ்செழுத்தோதுதல் மிகையாகலுஞ் சித்தசாதனமாகலும் யாண்டையவென மாணாக்கனுக்கு ஆசங்கையை நீக்கியவாறாயிற்று. ஆகவே, அந்நிலை கூடப் பெற்றவர்க் கன்றி ஏனையோர்க்கு இஃது ஏலாதென்பது கண்டு கொள்க. ஈண்டு நோக்கு என்றது மனவெழுச்சிவிசேடத்தை; *"வானோக்கி வாழு முலகெல்லாம்" என்புழிப்போல.

அற்றேல், இச்சாதகம் வாசனையை நீக்குமாறு யாங்ஙனமென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம் :—

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை
யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு

எனவரும்.

ஆன்மாச் சிவனுக்கு அடிமையாதலை அஞ்செழுத்தை உச்சரிக்கும் முறைமையில் வைத்துக் கண்டு, தன்னுடம்பி னகத்தே இதயம் நாபி புருவநடு என்னும் மூன்றனையும் முறையே பூசைத்தானம் ஓமத்தானந் தியானத்தானமாகக் கருதிக்கொண்டு புறம்பே ஞானபூசை செய்யும் முறைப்படி இதயகமலத்திற் சிவனை அவ்வஞ்செழுத்தா னமைந்த திருமேனியில், கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறுமை இரக்கம் அறிவு மெய் தவம் அன்பு என்னும் அட்ட புட்பங்கொண்டு அவ்வஞ்செழுத்தாற் பூசைசெய்து, குண்டலித்தானமாகிய நாபியில் ஞானவனலை எழுப்பி அதன்கண் அத்திருவைந்

* திருக்குறள், ருரு-ம் அதி. செங்கோன்மை, உ.

தெழுத்தானே விந்துத் தானத் தமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடி ஆகிய சுருக்குச் சுருவங்களால் ஓமஞ் செய்து, விந்துத் தானமாகிய புருவநடுவில் சிகார யகார வகாரங்கள் முறையே தற்பதப் பொருளுந் துவம்பதப் பொருளும் அசிபதப் பொருளுமாம் முறைமையின் அவ்வஞ்செழுத்தாற் சிவோகம் பாவனை செய்யின் அப்பொழுதே அங்ஙனம் விளங்கித் தோன்றும் முதல்வனுக்குச் சேடசேடிய பாவத்தால் ஆகற்பாலதாகிய அடிமையா மென்க.

ஓமித்தலுந் தியானித்தலும் பூசைக்கு அங்கம்; பூசை அங்கியென அறிக.

கோதண்டஞ் சானிக்கில் என்புழிக் கண்ணுருபும், அண்டனும் என்புழிக் குவ்வுருபும் விரித்துரைக்க.

ஆளாம் முறைமை வருகின்ற சூத்திரத்திற் பெறப்படும். சுட்டறிவிறந்து *ஞானத்தான் †ஞேயத்தைக் கண்டு எங்குந் தானாக நிட்டை கூடிய வழியுந் தொன்றுதொட்டு வரும் ஏகதேசப் பழக்கம் பற்றிப் புறத்தே விடயத்திற் சென்று பற்றுவதாகிய தன்னறிவை அங்ஙனஞ் செல்லாது மடக்கி, அகத்தே ஒருகுறியின்கண் நிறுத்தி, நிட்டைகூடி நிற்கும் முறைமையை அஞ்செழுத் தோது முறைமையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்கச் சிவதரிசனத்தை விளக்கி வாதனைவயத்தாற் புறத்திற் சென்று பற்றும் ஏகதேச வறிவைப் பற்றறத் துடைத்துப் பூரணநிலையிற் கொண்டு செல்லுமாகலான் அது வாசனை நீக்குதற்குரிய சிறந்த சாதனமாத லறிக.

அங்ஙனம் அஞ்செழுத் தோதுமுறையான் ஒருகுறியின் வைத்தன்றி முதல்வனைக் காண்டல் செல்லாதவாறும், அவ்வாறு கண்டவழி முதல்வன் தன்மாட்டு விளங்கித் தோன்றுமாறும், தோன்றியவழித் தான் அம்முதல்வனுக்கு அடிமையாமாறும் உவமையில்வைத் துணர்த்தி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

இந்துவிற் பானுவில் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் றோன்றிக் கனல்சேரிரும்பென்ன
வாட்டாணு மோதஞ் செழுத்து

எனவரும்.

அந்தரத் தியங்கும் நவக்கோள்களுள், ஏனைக்கோள்கள் போலக் காணப்படாத இராகு கேதுக்களை ‡உபராகத்திற் சந்திராதித்தரிடத்திற் காணுமாறு போலப், பதிபசுபாசங்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் உணர்விற்கு விடயமாகக் காணப்படும் பசுபாசங்களோடொப்ப வேறுகாணப்படாத பதிப் பொருளாகிய முதல்வனைத் தன் இதயத்தின்கண் அஞ்செழுத்தோது முறையாற் காணுமாயின், கோலை நட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடையவே காட்டத்தி னின்றுந் தோன்றும் அங்கி போல் அம்முதல்வன் ஆண்டுத்தோன்றி அறிவுக் கறிவாய் விளங்கி நிற்கும்.

* ஞானம்-காட்சி. † ஞேயம்-காட்சிப்பொருள். ‡ உபராகம்-கிரகணகாலம்,

அப்பொழுது தானுங் கனலைச் சேர்ந்த இரும்பு போலத் தன் சுதந்திரத்தை விட்டு அம்முதல்வனுக்கு அடிமையா மாகலான் அவ்வஞ்செழுத்தை ஒரு தலையா னோதுக என்க.

கேது சாயாக்கிரக மாகலின் வேறு கூறாது இராகுவை யென்றொழிந்தார். கண்-அறிவு. தோன்றி ஆம் எனக் கூட்டுக. உந்துதல் ஈண்டுக் கடைதன்மேற்று. காட்டாக்கினியின் என்பது காட்டாக்கின் என விகாரமாயிற்று. இன்-உவமவுருபு. தான்-எழுவாய். ஈண்டும் ஓதஞ்செழுத்து என்றது வலியுறுத்துதற் பொருட்டு.

அற்றேல், தத்துவம் முப்பத்தாறுக்கும் அப்பாற்பட்ட முதல்வனை இதயத்துட் கண்டு பூசிக்குமாறு யாங்ஙன மென்னும் ஆசங்கையை நீக்கி, *"அண்டபிண்ட மவைசம மாகலால்" அண்டத்தில் உள்ளன வெல்லாம் பிண்டத்துள்ளுஞ் சூக்குமரூபமாய் உண்மையின், அண்டவடிவாகிய முப்பத்தாறு தத்துவங்களும் இதயத்திற் கமலரூபமாய் விளங்குமாகலின், முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேற்பட்டு அங்ஙனம் வியாபகமாய் வயங்கும் முதல்வனை அவ்விதய கமலத்தின்மேலாகக் கண்டு பூசித்தல் அமைவுடைத்தெனத் தெளிவித்தற் பொருட்டு அவ்விதயகமலத்தினியல்புணர்த்தி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

மண்முத லளமலர் வித்தை கலாரூப
மெண்ணிய வீசர் சதாசிவமு—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதிலா மச்சிவன்று ணோர்

எனவரும்.

இதயகமலத்தின் இயல்பை உற்றறியப் புகின் நில முதலிய இருபத்து நான்கு தத்துவமும் நாபியினின்றுந் தோன்றும் எண்விர லளவைத்தாகிய நாளவடிவும், வித்தியாதத்துவ மேழுஞ் சுத்தவித்தையுமாகிய எட்டும் எட்டிதழ் வடிவும், அவற்றின்மேற் கருதப்பட்ட ஈசுர தத்துவமுஞ் சதாசிவ தத்துவமும் அறுபத்துநான்கு கேசரவடிவும், சத்தி தத்துவம் அக்கேசரங்களுக்கு உள்ளாகிய பொகுட்டுவடிவும், சிவதத்துவம் அப்பொகுட்டினுட் காணப்படும் ஐம்பத்தொரு பீசவடிவு மாகலான், அம்முப்பத்தாறு தத்துவமும் ஆசனமாகக் கொண்டு அவற்றின்மேல் நிற்கும் முதல்வன்றிருவடிகள் அவ்விதயகமலத்தின்மேல் நிற்கும். அதனை அறிந்து பஞ்சாக்கரத்தாற் பூசை செய்வாயாக என்க.

வித்தை என்பதனை இரட்டுற மொழிந்துகொண்டு, வித்தியா தத்துவ மெனப்படுங் கலாதியுஞ் சுத்தவித்தையும் என்றுரைத்துக் கொள்க. †"மூட்டு மோகினி சுத்தவித்தை" என்னுஞ் சிவஞானசித்தியில் "மோகினி" என்றதூஉம் ஆகுபெயரான் அதன் காரியமாகிய கலாதிகளின் மேற்று.

இனி, இவ்வாறன்றி நில முதலிய முப்பத்தொரு தத்துவமெனப்படும் எட்டுக் கொத்தும் எண்விர லளவடிவம், அவற்றிற்கு மேலாகிய அசுத்த

* கோயிற்புராணம், பதஞ்சலிச்சருக்கம், எ0. † சிவஞானசித்தி, கூ-ம் சூ. க.

மாயா தத்துவம் நாளத்துக்கும் மலருக்கும் நடுக் கண்டமாகிய கிரந்திவடிவம், அதற்குமேற் சுத்தவித்தையில் வாமை முதலிய எட்டும் எட்டிதழ் வடிவமாம் என்றுரைப்பாரும்; அசுத்த மாயை கிரந்தியின் அதச் *சதனம், சுத்தவித்தை ஊர்த்துவச்சதனம் என வைத்து, அதற்குமேல் ஈசுரதத்துவத்தில் அனந்தன் முதலிய எட்டுமே எட்டிதழ் வடிவம், சதாசிவதத்துவமொன்று மாத்திரமே கேசர வடிவம் எனக் கொண்டு அதற்கியையக் கொண்டுகூட்டி உரைப்பாரும்; கலாரூபம் என்றது நிவிர்த்தி முதலிய கலைகளை எனவும், அஃது யாண்டுங் கூட்டி உரைக்கப்படும் எனவுங் கொண்டு, அவ்வாறு கோடலான் மண்ணும் மண்ணை முதலாக வுடைய ஏனை இருபத்துமூன்று தத்துவமு மாகிய கலாரூபமாவன நிவிர்த்தியும் பிரதிட்டையுமே ஆகலான் அவையிரண்டும் முறையே நாளமும் மலருமாம், வித்தியா தத்துவமாகிய கலாரூபமாவது வித்தியாகலை சுத்தவித்தையோடு கூட்டி எண்ணப்பட்ட ஈசர் சதாசிவமாகிய சாந்திகலையாகலான் அவை இரண்டும் முறையே கலையெனப்படுங் கேசரமுங் கலைக்குள்ளுருவெனப்படும் பொகுட்டுமாம், நாதமுஞ் சத்தியுமாகிய கலாரூபமாவது சாந்தியதீதகலையாகலான் அது பொகுட்டின்கண்ணதாகிய பீசமாம் என்று இவ்வாறு உரைப்பாருமுளர். இவையெல்லாம் அவ்வவாகம பேதம்பற்றிக் கொள்ளப்படும்.

கலை அறுபத்துநான் காகலான் அஃது அறுபத்துநான்காகிய கேசரங்களுக்குத் தொகைபற்றிக் கூறப்படும் ஆகுபெயராயிற்று. ஈசர் என்றது ஆகுபெயராய் அவரான் அதிட்டிக்கப்படுந் தத்துவத்தை உணர்த்திற்று. கலையுரு-கலைக்குள் உரு என உள்ளுருபு விரித்துரைக்க; கலைக்குள் உரு-கேசரங்களுக்கு நடுவாய் விளங்கும் பொகுட்டென்பது. கலையுருவாஞ் சத்தி நாத மதன் கண்ணும் என மாறி உரைக்க. ஆம் என்பதனை நாளம் மலர் கலாரூபம் என்பனவற்றோடுங் கூட்டி யுரைக்க.

இது நாள முதலாக மேனோக்கித் தோன்றும் உலகத்திற் கமலம் போலாது கண்முதலாகக் கீழ்நோக்கித் தோன்றுந் திவ்விய கமலமென்க.

மூன்றுமதிகரண முடிந்தது.

சாதனவியலின் மூன்றும்பாதமாகிய

## ஒன்பதாஞ் சூத்திர முடிந்தது.

## சாதனவியன்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

* சதனம்-இதழ்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பயனியல்.

## பத்தாஞ் சூத்திரம்.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

எ-து. சூ-ம். எ-னின். பிரசக்ஷயம் பண்ணுமா றுணர்த்துத னுதலிற்று.

மேலை ஒத்துள் மூன்று பாதத்தானும் முறையே சாதிக்கும் பொருளினியல்பும், சாதித்துப் பெறப்படும் பொருளினியல்பும், சாதிக்குமாறும் உணர்த்தி, ஈண்டு அச்சாதகத்தானாகிய பயனியல்பு வகுத்துக் கூறுவான் எடுத்துக்கொண்டமையின், இவ்வோத்துப் பயனியல் என்னும் பெயர்த்து.

பாசவீடுஞ் சிவப்பேறு மெனப் பயன் இருவகைப்படு மாகலான், அவ்விரண்டனுட் பாசவீடாகிய பயனைப் பெறுமா றுணர்த்து முகத்தானே ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கும்வழிச் செய்யற்பாலது இதுவென அஞ்செழுத் ததிகரணத்தின் ஒழிபாய்வைத்துணர்த்துதல் பயனோத்தின் முதற் பாதமாகிய இப்பத்தாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

மேற் சாதக முணர்த்தியவழிச் சாதகத்தாற் பெறப்படும் பயன் யாதோ வெனப் பயனை அவாய் நிற்றலின், அவ்வவாய்நிலைபற்றிய வியைபானே ஒத்தியைபும், ஆன்மசுத்தி கூறிப் பின் ஆன்மலாபங் கூறுதல் முறைமையாகலின், அம்முறைமை பற்றிய வியைபானே பாத வியைபும், விதிப்படி பஞ்சாக்கரத்தை உச்சரித்தால் வாசனாமலம் போம் என்றவழி, அங்ஙனம் உச்சரிக்குங்கால் நிற்கு நிலையும் இவ்வாறாகற்பாற் றென்பது கூறாக்கால் உச்சரித்தார்க்கெல்லாம் வாதனாமலம் போதல்வேண்டு மென்னும் ஆசங்கை நிகழ்தலின், அவ்வாசங்கைபற்றிய வியைபானே அதிகரணவியைபும் பெறப்பட்டன.

அற்றேல், *"விட்—டன்னிய மின்மையி னரன்கழல் செலும்" எனப் பயனும் ஆண்டே கூறிப் போந்தமையின், ஈண்டு அதனை அவாவுமாறு யாங்ஙனமெனின்,—பயனை அறிவித்தா லன்றிச் சாதகஞ் செய்தற்கண் மன

* இந்நூல், அ-ம் சூ.

வெழுச்சி செல்லா தென்பது பற்றி ஆண்டுப் பொதுவகையாற் கூறிப்போந் ததனை ஈண்டுக் கிளந்தெடுத் தோதாக்கால் விடுமாறு யாங்ஙனம்? செல்லு மாறு யாங்ஙனம்? என்று அவாய் நிற்றல் ஒருதலை யென விடுக்க. ஏனைய வும் உய்த்துணர்ந்துகொள்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு:—ஞானக் கண்ணினிற் சிந்தை நாடப்பட்ட அம்முதல்வன் பொருட்டன்மையால் வேறேயாயினும் வேறு காணப்படாது யானே கண்டேன் என்னும்படி உயிர்தானேயாய் நின்ற அப்பெத்தநிலைபோல ஈண்டுத் தானென வேறுகாணப்படாது அம்முதல்வ னேயாம்படி ஒற்றுமைப்பட்டு அவ்விறைபணியின் வழுவாது நிற்பின் உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவிய்வழியும் வாசனையால் வந்து தாக்கும் மலம் மாயை என்னும் இரண்டனுடனே வலிய கன்மமலமும் இல் லையாய்ப் பற்றறக் கழியும் என்றவாறு.

ஏகாரம்-தேற்றம். நெறி-உவமவுருபு. வினையை வேறு பிரித்தமையின், இன்றே என ஒன்றறிசொல்லாற் கூறினார். "சிவப் பொடு நேசனை செல்லாத"

ஈண்டு ஏகனாகி ஒற்றுமைப்படுதலாவது, குடமுடைந்தவழிக் குடாகாய மும் மகாகாயமும் ஒன்றுதல் போல ஒற்றுமைப்படுதலோ? அன்றி இப் பியை வெள்ளி யென்பதுபோலத் திரிவுகாட்சியான் ஒற்றுமைப்படுதலோ? அன்றி மண்ணே குடம் என்பதுபோல ஒன்றுதிரிந்தொன்றாய் ஒற்றுமைப் படுதலோ? அன்றி வெள்ளையுந் தாமரையும் போலக் குணகுணித் தன்மை யான் ஒற்றுமைப்படுதலோ? அன்றித் தீயும் இரும்பும் போல ஒன்றி னொன்று விரவுதலான் ஒற்றுமைப்படுதலோ? அன்றிப் பாலும்நீரும்போலப் பிரிக்கப்படாத சையோகத்தான் ஒற்றுமைப்படுதலோ? அன்றிக் கருட னும் மாந்திரிகனும் போலப் பாவனை மாத்திரத்தான் ஒற்றுமைப்படுதலோ? அன்றிக் காய்ச்சிய இரும்பின் நீர்போல ஒன்றினொன்று இலயமாய் ஒற்று மைப்படுதலோ? அன்றிப் பேயும் பேய்பிடியுண்டவனும் போல ஆவேசத் தான் ஒற்றுமைப்படுதலோ? அன்றிக் காட்டத்தின் எரிபோல விளங்கா மையான் ஒற்றுமைப்படுதலோ? அன்றி ஞாயிற்றி னொளியின் விளக்கொளி போலச் சத்தி கெட்டு நிற்றலான் ஒற்றுமைப்படுதலோ? அன்றித் தலைவ னுந் தலைவியும் போல இன்பநுகர்ச்சிமாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ? அன்றி நட்டோர் இருவர் போல நட்பின் மிகுதியான் ஒற்றுமைப்படு தலோ? அன்றி ஆவும் ஆமாவும் போல ஒப்புமைமாத்திரையான் ஒற்று மைப்படுதலோ? என அவ்வச் சமயவாதிகள் மதம்பற்றி நிகழும் இன்னோ ரன்ன ஆசங்கைகளை யெல்லாம் நீக்குதற்பொருட்டு, அவனேதானே யாகிய வந்நெறி என உவமை எடுத்துக் காட்டி ஓதினார்.

அற்றேல், ஈண்டுச் சம்பந்த மென்னை யெனின், அது வருகின்ற சூத்தி ரத்தில் உவமைமுகத்தான் ஓதுகின்றாராகலின், ஆண்டுக் காட்டுதும்.

இதனுள், அவனே தானே யாகிய வந்நெறி யேகனாகி என்பது ஓரதிகர ணம்; இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை யின்றே என்பது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென் றறிக.

---

## முதலதிகரணம்.

அவற்றுள் முதலதிகரணம், மேலைச் சூத்திரத்தில் வாசனைமலம் நீங்கி ஆன்மசுத்தி யாதற்பொருட்டு ஸ்ரீபஞ்சாக்கரத்தைப், 'பாச மொருவிப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடுக' எனச் சிவதரிசனம் பண்ணுமாறோதிய விதிப்படியே மகாவாக்கியப் பொருள் பயப்ப உச்சரிக்க என்று உணர்த்தியவழி, வாசனைமலம் நீங்குதற்கு அவ்வாறு உச்சரித்தன்மாத்திரையே அமையும் போலுமென்னும் ஆசங்கையை நீக்கி மேற் செய்யுமாறு இது என்பதாய சித்தாந்தம் உணர்த்துதற் கெழுந்தது:—

ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத் தேகனாகி நிற்க வென்றது

என்வரும்.

ஏகனாகி நிற்றலாவது, *''திரண்டாம் பயனெனுந் திருவருடெளியிற்—சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றா—மென்றிறை யியற்கை யியம்புத றகும்'' எனச் சங்கற்பநிராகரணத்துப் பரமசித்தாந்தமாக முடிவின்கண் ஓதியவாறே திருவைந்தெழுத்தின் உய்த்துணர்ந்து நிற்றல் என்றுணர்க.

அற்றேல், வாசனைமலம் நீங்கி ஆன்மசுத்தி பண்ணுதற்கு ஸ்ரீபஞ்சாக்கரத்தை அவ்விதிப்படி உச்சரித்தலே அமையும்; அதன்மேலும் ஏகனாகி நிற்றல் எற்றுக்கென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

அவ்வாறு நிற்கவே யானெனதென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணையு மாகலான்

எனவரும்.

ஏகனாய் அப்படி நின்றாலே யன்றி யானெனப்படும் † ஞாதாவும், எனதெனப்படும் ஞானமும், அதற்கு விடயமாய் எனதெனப்படும் ஞேயமும் எனப் பகுத்துக் காணும் மயக்க வுணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை நீங்காது; அது நீங்கினாலன்றி முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தை அநுபவித்தல் கூடாது. ஆகலான், அம்மலவாசனை நீங்கிச் சிவானந்தத்தை அநுபவித்தற்கு அதுவே சாதனமென்பது பெறப்படுதலான், ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத் தேகனாகி நிற்க என மேற்கொண்டது என்றவாறு.

செருக்கு-ஆகுபெயர்.

அற்றேல், ஞாதிரு ஞானம் ஞேயம் எனப் பகுத்துக் காணுங் காட்சி மயக்க வுணர்வாமாறு யாங்ஙனமென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

* சங்கற்பநிராகரணம், சைவவாதி சங்கற்ப நிராகரணம், அடி, ௬௧—௬௩.

† ஞாதா - காண்போன்.

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத
ருனெனவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானு மிறை

எனவரும்.

யானென்றும் அவனென்றும் பகுத்தறிந்து நிற்பார்க்கும் யானே யென நிற்பார்க்குப்போல நாடுகின்ற ஆன்மபோதம் முனைத்துத் தோன்றும் ஆதலால் அது தோன்றும்வழித் தானென்று ஒருமுதல் காணப்படுமாறின்றித் தான் அவ்வுயிரேயாய்க் காணப்பட்டும், யானென்று ஒருமுதல் காணப்படுமாறில்லை யென்றறிந்து தானே முழுவதுமெனக் காண்பவரை அவ்வாறே வேறு காணப்படுமா றில்லையென்று தனது திருவடிவியாபகத்துள் அடங்கிநிற்கச் செய்து தானே முழுவதுமாய்க் காணப்பட்டும் நிற்பன் இறைவன் என்க.

ஆய் ஆம் எனக் கூட்டுக. ஆய் ஆம் என்புழிச் செய்தெனெச்சங் காலமுணர்த்தி நில்லாது, "மற்று—நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க் கமிழ் தொக்குமிவன்" என்புழிப்போலத் தன்வினைமுத லாதன்மாத்திரையே உணர்த்தி நின்றது.

தூலவொளியாகிய கண்ணொளியுஞ் சூக்கும வொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலை பிரித்தறிய வாராமையின், கண்ணொளியாய்க் காணுங்காற் காணுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின், அவ்வழி விளக்கொளி இருந்து மில்லை; விளக்கொளியாய்க் காணுங்காற் காட்டுந் தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின், அவ்வழிக் கண்ணொளி இருந்து மில்லை. கண்ணொளியும் விளக்கொளியுமெனப் பகுத்துக் காணப் புகினுங் காணுந் தன்மையே முற்பட்டுத் தோன்றுதலின், விளக்கொளி திரிவுபுலனைக் காட்சிப்படுவ தல்லது தெளிவுபுலனைக் காட்சிப்பட்டு நிற்பதில்லை. அதுபோலத் தூலவறிவாகிய உயிருஞ் சூக்குமவறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையும் பிரித்தறிய வாராமையின், உயிராய்க் காணுங்காற் சிவமில்லை. சிவமாய்க் காணுங்கால் உயிரில்லை. இரண்டுமாய்க் காணப்புகினுந் தற்போதம் முற்பட்டு நிற்றலின், அவ்வழியுஞ் சிவம் ஐயக்காட்சிக்குப் புலனாய்நிற்ப தல்லது தெளிவுகாட்சிக்குப் புலனாய் நிற்குமா றில்லை. ஆகலான், நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத—ருனெனவொன் றின்றியே தானதுவாய் என்றார்.

உம்மை இறந்ததுதழீஇயிற்று. இக்கருத்தே பற்றிக், *"காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை—காண்பார்க ணான்முத்தி காணார்கள்" என்றோதிய புடைநூலாசிரியர் மீளக், *"காண்பானுங்—காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்—வாட்டுநெறி வாரா தவர்" எனவும், †"கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன் றன்றே" எனவுங் கூறினார் என்பது.

* வினாவெண்பா, கக. † சிவப்பிரகாசம், உண்மை, அ.

அற்றேல், இக்காட்சி இரண்டனுள் யாது திரிவு காட்சி, யாது தெளிவு காட்சியெனின், கூறுதும்:—கண்ணொளியானது எவ்வெவ்வொளியோடுகூடினும் அவ்வவ் வொளிவடிவாய்க் காணப்படு மியல்பிற்றன்றி ஒருபெற்றியாய்க் காணப்படு மியல்பிற் றன்மையின், அவ்வவ் வொளிகள் கண்ணொளியோடு கூடிய வழியும் ஒருபெற்றியனவே யெனப்படு மியல்பினவாகலின், அவ்வியல்பறியாது அங்ஙனம் அவ்வவ் வொளிவடிவாய்க் காணப்படு மியல்பிற்றன்றி ஒருபெற்றியாய் விளங்காத கண்ணொளியைத் தனித்துக் காண்டல் திரிவுகாட்சி யெனவும், ஒருபெற்றியனவாய் விளங்குவனவாகிய அவ்வொளிகளைத் தனித்துக்காண்டல் தெளிவுகாட்சியவேயாமெனவும் நுண்ணுணர்வானோக்கி உணர்ந்துகொள்க.

அற்றேல், காட்டுமொளியின் வேறாய்க் கண்ணுக்கு ஓரொளிக்குணம் உண்டென்றற்கு ஏது வென்னை? உண்டெனின் மின்மினித்துணையாயினுந் தானே விளங்குமாதல் வேண்டுமாலெனின்,—ஆகாயத்தின்கண்ணதாகிய சத்தகுணம் முரசு *குணிற் சையோக முதலிய வியஞ்சகங்களான் விளக்கப்பட்டுழி விளங்குதலே யன்றித் தினைத்துணையானுந் தானேவிளங்குமா றின்றென்பது பற்றி, வியஞ்சகத்தான் விளங்கி எதிரொலிவடிவாய்த் தோன்றும் அவ்வோசையை ஆகாயத்தின்குண மன்றென்பார் யாருமில்லை. அது போலக், கண்ணின்கண்ணதாகிய ஒளியும் வியஞ்சக முள்வழி விளங்கி அல்லுழி விளங்காமைமாத்திரையே பிறிதில்லை யாகலான் அதனைக் கண்ணின் குண மன்றென்றல் அறிவிலார் கூற்றேயாமெனவும், அக்கண்ணொளி தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப் பொருள் ஏகதேசமாயின் ஏகதேசத்து விளங்கியும், அது வியாபகப்பொருளாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்கு மியல்பிற்றெனவு முணர்க.

அற்றேல், அஃதங்ஙனமாக; †"கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும்" என்றற்குப் பிரமாண மென்னை? ஒரு விடயத்தின்மேல் வீழ்ந்த பல கண்ணொளிகட்குத் தம்முளியைபில்லாதவாறு போல ஒருவயிற் பட்ட கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முளியைபில்லை யென்றலே பொருத்தமுடைத்தாலெனின்,—அறியாது கூறினாய்; ஒருவிடயத்தின்மேல் வீழ்ந்த கண்ணொளிகள் தம்முள் ஒன்றனையொன்று காணுமாறில்லை; ஒன்றுக்கொன்று காட்டு மாறுமில்லை; ஆகலான் அவை தம்முட் கலத்தற்கு ஓரியைபின் றென்ப தொக்கும்; அவ்வா றன்றிக் கண் விளக்கினைக் காண்டலும் விளக்குக் கண்ணுக்குக் காட்டுதலு மாகிய இயைபுண்மையின், இவ்வியைபு தம்முட் பெறப்படாத கண்ணொளிமுதலாயின ஈண்டைக்கு உவமையாதல் செல்லாமையானும், இந்திரியங்கள் தத்தம் விடயங்களோடு இயைந்தன்றிச் சந்நிதிமாத்திரையான் அவற்றை அறிதல் செல்லாதென்பதே ஆகமங்கட்கெல்லாந் துணிபாகலானும், அத்தன்மையவாகிய கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முட் கலப்பில்லை யென்றல் சிவாகமவழக்கோடும் உலகவழக்கோடும் முரணுவார் கூற்றேயாமென உணர்க. இங்ஙனம் உவமைக்கு ஓதியன வெல்லாம் பொருட்கண்ணுமாமாறு உணர்ந்து உரைத்துக்கொள்க.

---

* குணில்-குறுந்தடி. † சிவப்பிரகாசம், உண்மை, அ.

அற்றேல், இவை அனைத்தும் ஒக்கும்; ஈண்டு எடுத்துக்காட்டிய கண்கள் ஒன்றனையொன்று காணுமா றின்மையின், அதுபோல ஆன்மாக்களும் பிற ஆன்மாக்களை அறியுமாறில்லைபோலுமெனின், அறியாது கூறினாய்; கண்கள் தம்முள் ஒன்றனையொன்று காண்டலில்லை என்றது விளக்கினையும் விடயத்தினையுங் காணுமாறு போலத் தனித்த முதலாய் வேறுகாணுமாறில்லை என்றதுணையே யன்றிப் பிறிதின்மையின், கண் விளக்கொளியைக் காணுங்கால் அதுவேதானாக நின்று தன்னையும் அவ்விளக்கொளிவண்ணமாய்க் காண்டலுண்டென்பது கண்கூடாக அறியக் கிடத்தலின், ஏனைக்கண்களையும் அவ்வாறு காண்டல் அமையுமாகலான், அதுபோல ஆன்மாவும் பிறவுயிர்களைத் தனித்த முதலாய்ப் பிரித்தறியுமா றில்லையாயினுஞ் சிவத்தைத் தரிசிக்கும் வழித் தான் அதுவாய்நின்று தன்னை அறியுமாறுபோலப் பிறவுயிர்களையும் அச்சிவத்தின் வண்ணமாய்க் கண்டறிதல் அமைவுடைத்தாகலா னென்பது. அற்றாகலினன்றே, *"தன்னாலே தனைய றிந்தாற்—றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே" எனவும், †"அந்நிலை கரண மாகா வகையதி லறிவடங்கி—மன்னிட வியாபி யாய வான்பயன் றோன்றும்" எனவும், புடைநூலாசிரியர் ஓதியதூஉம், ‡"என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்—நின்னிலை யனைத்தையுங் கண்டே னென்னே—நின்னைக் காணு மாந்தர்—தன்னையுங் காணாத் தன்மை யோரே" என மும்மணிக்கோவையி னோதியதூஉம், பிறாண்டும் இவ்வாறே ஓதியதூஉ மென்க.

முதலதிகரணமுடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

முதலதிகரணத்தின், மேலைச் சூத்திரத் தோதிய ஸ்ரீபஞ்சாக்கரத்தை அவ்விதிப்படி உச்சரிக்கின்றுழி அதன்கண் விளங்கும் ஞாதிரு ஞான ஞேயப் பகுப் பிறந்துநின்று உச்சரித்தாலன்றி மலவாசனை அறாமையால் அஃது அறும்வண்ணம் முதல்வனிடத்து ஏகனாகி நிற்றல் வேண்டுமென மலவாசனையறுதற்கு உபாயங் கூறியவழி, அற்றேல், ஆன்மா அவ்வாறு நிற்புழி அதன் குணமாகிய அறிவிச்சைசெயல்கள் கெட்டொழியுமோ? கெடாதுநிற்குமோ? என்றார்க்குக் கெட்டொழியுமெனிற் குணகுணிகட்கு வேற்றுமை யின்மையாற் குணங்கெடவே குணியுங் கெடுமெனப்பட்டு முப்பொருளும் நித்தமென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணி அவசித்தாந்தமாம்; கெடாது நிற்குமாயின், ஏகனாதல் செல்லாதாலென்னும் ஆசங்கையை நீக்கு முகத்தானே ஏனை மாயா கன்ம வாசனை அறுதற்கு உபாயங் கூறுதற்கெழுந்தது இரண்டாமதிகரணம்:—

இனி இறைபணி வழுவாது நிற்க வென்றது

என வரும்.

---

* சிவப்பிரகாசம், ௨௨. † மேற்படி ,, ௨௮. ‡ பதினொராந்திருமுறை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, ௧௩.

நிற்றலாவது, சலியாது நிலைபெறுதலென்பார், வழுவாது நிற்க என்றார். ஈண்டு இறைபணி என்றது யாதெனின், அஃது ஆசிரியர் தாமே முன்னர்த் தெரித்துரைக்கின்றமையின், இனிது விளங்கும்.

அற்றேல், அவ்விறைபணி வழுவாது நிற்பின் ஆன்மாச் சுதந்திர னல்லனாய்ப் பரதந்திரனெனப்பட்டு முத்தியும் பெத்தமெனப்பட்டு வழுவாம்; *"பரதந் திரியங் கரைகழி பந்தம்" எனச் சிவாகமங்களினோதுதலா னென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

அவனருளா லல்ல தொன்றையுஞ் செய்யானாகவே
அஞ்ஞானகன்மம் பிரவேசியா வாகலான்

எனவரும்.

கண்ணொளிக்குக் காட்சி விளக்கொளியை யின்றி யமையாமையிற் காண்பன வெல்லாம் அதன் செயலே யெனக் கண்டு தானென வேறு முனைக்குமாறின்றி அவ்விளக்கொளியின் அடங்கி நிற்பின், ஏனை விடய மொன்றுங் கண்ணுக்குத் தாக்குமா றில்லை; அதுபோலத் தன்னுடைய இச்சாஞானக்கிரியைகளின் தொழிற்பாட்டுக்கு முதலவனது இச்சாஞானக் கிரியைகளை யின்றி யமையாத ஆன்மாவும் அவ்வியைபு பற்றி நிகழ்வன வெல்லாம் முதல்வனது இச்சாஞானக்கிரியைகளது நிகழ்ச்சியே யெனக் கண்டு அம்முதல்வன் வியாபகத்துக்குள்ளாக அடங்கி நிற்பிற் பிரபஞ்சஞ் சிறிதுந் தாக்குமா றில்லை. அஃதின்றாகவே, அது காரணமாக மேலைக்கு வினை ஏறுமாறு மில்லை. அல்லுழி யெல்லாம் பிரபஞ்சந் தாக்கா தொழியாது. அஃதொழியாதவழி, அது காரணமாகவரும் விருப்பு வெறுப்பு ஏறா தொழியாது; அஃதேறுமாயிற் பிறவிக்கு வித்தாய் மீளப் பெத்தநிலையிற் செலுத்திவிடும். ஆகலான், அங்ஙன மாகாதவாறு மாயை கன்மங்களின் வாசனை அறுதற்கு உபாயம் இதுவே யாகலான் இறைபணி நிற்றல் ஒருதலையான் வேண்டு மெனபார், அவனருளா லல்ல தொன்றையுஞ் செய்யானாகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியா வாகலான் இனி இறைபணி வழுவாது நிற்க என மேற்கொண்டது என்றார்.

எனவே, *"பரதந் திரியங் கரைகழி பந்தம்" எனச் சிவாகமங்களில் ஆண்டாண் டோதியது இவ்விறைபணி நிற்றலை யன்று; மற்றுச் சிவானந்தத்தை அநுபவித்தற்கட் செல்லு மியல்பிற்றாகிய தன்னிச்சைவழி விடாது மலத்தினால் ஐந்தொழிலில் அகப்படுத்துச் சுழல்விக்குங் காரணமூர்த்திவழி நிற்றலையேயா மெனக் கொள்க. சிவாநந்தத்தை அநுபவித்தற்கு ஏதுவாய இறைபணி நிற்கை, தன்னிச்சைவழி நிற்றலேயா மாகலின், அஃது அதனை நோக்கச் சுதந்திரமேயாமென்பது.

மலவாசனை யறுதல் மேலையதிகரணத்தாற் போந்தமையின், ஈண்டு அஞ்ஞானம் என்றது மாயையின் காரியமாகிய மயக்க வாசனையையேயா மெனவும், சஞ்சிதந் தீக்கையானும் பிராரத்தம் அநுபவத்தானும் அறுதலின், ஈண்டுக் கன்மம் என்றது ஆகாமியவாசனையையேயாமெனவுங் கொள்க.

* ஞானாமிர்தம், கஉ.

அஞ்ஞான கன்மம்-உம்மைத்தொகை.

அற்றேல், அவனருளா லல்ல தொன்றையுஞ் செய்யாதவழி அஞ்ஞான கன்மம் பிரவேசியாதவாறு யாங்ஙனம்? *"பிற்செயா தநுப விப்ப தின்மையிற்" பிராரத்தம் அநுபவிக்கும்வழி ஆகாமிய மேறுதல் ஒருதலையாமா லென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மரனுடைமை—யாமென்னி
னெத்தநுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்

எனவரும்.

செவி வாய் முதலிய இந்திரியங்கள் முதல்வனது உடைமையாகிய மாயேய மெனப்படுவன வன்றி ஆன்மாவாகிய யாமெனப்படுவன வல்ல; அவை தொழிற்படுதலும் முதலவன்வயத்தா னன்றி நம்வயத்தா னல்ல; அவ்விந்திரியங்கள் சத்தாதி வாக்காதிகளை விடயித்தற்கு வழியாகிய தநு கரணபுவனபோகங்களும் அம்மாயேய மாவன வன்றி யாமாவன வல்ல; அவை சேட்டித்தலும் முதல்வன்வயத்தா னன்றி நம்வயத்தா னல்ல; அவற்றோடு கூடி நின்று வினைகளை ஈட்டி நுகர்ந்து வருகின்ற யாமும் ஞானக்கிரியைகளை முதல்வன் விளக்கியவழி விளங்கியும் அல்லுழி விளங்காதும் இவ்வாறு முதல்வனை யின்றி யமையுமா றின்மையான், அம்முதல்வனது உடைமையாவே மல்லது சுதந்திரராவே மல்லேம் என்று இங்ஙனம் பசுபாசங்களினியல்புகளை உள்ளவா றுணர்ந்து செய்வன வெல்லாம் அவன் அருளின்வழி நின்று செய்யுஞ் செயலாய்க் கண்டுகொண் டிருப்பராயின், அவ்விறைபணியாகிய அடிமைத்திற முடையார் எவ்வுடம்பி னின்று எவவினைகளைச் செயினும் அவை அவர்க்குப் பந்தமாத லில்லை. அவ்வாகாமிய வினையை அவிநாபாவமாய் உடன் கொண்டு வருவதாகிய பிராரத்தவினையுந் தன்னைக் கூட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியில் உடலூழா யொழிவதன்றி ஏனையோர்க்குப் போல அவர்க்காத லில்லையாகலா னென்க.

நம்வழியி னல்ல என்பதனை மேலுங் கூட்டுக. தருவான் முன்னும் எனக் கூறிக்கொள்க. ஆம் என்பது சொல்லெச்சம். சஞ்சிதவினை ஆசாரியன் தீக்கை செய்த மாத்திரையே எரிசேர்ந்த வித்துப்போலக் கெட்டொழிதலின், ஈண்டு முற்செய்வினை என்றது பிராரத்தவினையை எனக் கொள்க. தருதல்-இடவழுவமைதி.

அற்றேல், இறைபணியார்க் குளதாகிய வினை அவரைச் சாருமா றின்றி உடலூழா யொழியுமாறும், ஏனையோர்க்குளதாகிய வினை உயிரூழாய் வந்து வருத்துமாறும் இங்ஙனஞ் செய்யும் இறைவன் நடுவுநிலைமையின்றிக் கோட்ட

* சிவஞானசித்தி, உ-ம் சூ. கக.

× "தன்னை யடைந்தார் வினைதீர்ப்பான் மேலுலகாயவர் தங்கட வுதான்" என்றுஞ் சுருதியுமது.



முடைய னெனப்படுமா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக்காட்டும் உதாரணம்:—

"சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கல்லால், நலமிலன் பொறுநல்குவானல்லன்." என்பதூஉம்

× சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச்—சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு
"சலமிலனாய் ஞானத்தாற்றமை யடைந்தார்க்கு" என்பதுமது.

எனவரும்.

தம்பால் அடைக்கலமெனச் சார்ந்தாரைக் காப்பது உத்தமராயினார்க்குக் கடமை யாகலான், முதல்வன் தன்னைச் சார்ந்தவரையே பாதுகாப்போனாகியும் அதுபற்றிக் கோட்டமுடைய னல்லனாய்த் தன்னைச் சார்ந்து தன்னடிப்பணியின் நிற்கவல்ல அடியார் தானேயாய் நிற்குமாறு நிறுவி, அவர்க்கு வரும் ஆகாமியவினையைக் கெடுத்து, அது செய்ய *வல்லாத பிறர்க்கு வரும் ஆகாமியவினையை அவர்க்குக் கொடுப்ப னாகலான் அவ்விருதிறத்தோர்க்கும் உணவாகி நுணுகி வந்து பொருந்தும் பிராரத்த வினையும் அவ்வாறே செய்வோர் செய்திக்குத் தக்க பயனை இருவேறுவகைப்படச் செய்வ னென்க.

சாராதாரை ஒழித்துச் சார்ந்தவரையே பாதுகாப்பது நடுவுநிலை யன்றென்பாரை நோக்கி அவ்வாறு கொள்ளினும் அஃது ஆண்டைக்குத் தலைமைக் குணமாவதன்றி இழுக்கன்மையான் அமையுமென்பார், "சார்ந்தாரைக் காத்த றலைவர் கடன்" எனப் பழமொழி எடுத்துக் காட்டி, உண்மையான் நோக்க வல்லார்க்கு அது நடுவுநிலைமையே, கோட்ட மன்றென அறிவுறுத்துவார், சார்ந்தடியார் தாந்தானாச் செய்து பிறர்தங்கள் வினை தான் கோடுத்தல் என வேறுபடுத்துக் காட்டினார். சார்ந்தடியார் தாந் தானாச் செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் உண்டென்பதூஉம், அது நடுவுநிலைமையே கோட்டமன் றென்பதூஉம் ஏனைச் சமயத்தார்க்கும் உடம்பாடாகலின், அஃது ஈண்டைக் குவமையாயிற்று.

உம்மை சிறப்பின்கண் வந்தது. சார்ந்த என்னும் பெயரெச்சம் ஈறு திரிந்தது. தான்-முதல்வன். ஆதல் கோடுத்தல் என்புழி ஆனுருபு விகாரத்தாற் றொக்கது. ஆய் என்னும் வினையெச்சங் கோடுத்தல் என்னுந் தொழிற் பெயரோடு முடிந்தது. ஆய்ந்து-நுணுகி. †"ஒய்த லாய்த னிழத்தல் சாஅயாவயி னான்கு முள்ளத நுணுக்கம்" என்றார் தொல்காப்பியனாரும். ஆர்-வினைத்தொகை. பிராரத்தவினை சூக்கும வினையாகலின் அது கூடும் முறைமை அறிதல் அரிதென்பார், ஆய்ந்தார்முன் செய்வினையும் என்றார். உம்மை இறந்தததழீஇயிற்று. ஆங்கு-அதுபோல என்க.

இதனானே மேலை வெண்பாவின் முற்செய் வினையுந் தருவான் என்றது பற்றிய ஆசங்கையை நீக்கியவாறு.

* வல்லாத-மாட்டாத. † தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், கூச.

அற்றேல், இறைபணியி னிற்கும் ஞானிகட்கும் பிராரத்தவினை தாக்க லுண்டெனச் சிவாகமங்களின் ஆண்டாண்டோதுதலின், அவற்றோடு முரணி அஃது அவர்க்குத் தாக்கா தென்றல் அமையாமையின், அது தாக்கும்வழி ஆகாமிய வினையும் ஏறுதொழிதல் யாங்ஙனமென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபான்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுட னில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே
யாயவத னாலுணரு மச்சு

எனவரும்.

தன்பால்வைத்து எடுக்கப்பட்டொழிந்த காயத்தினின்றும் அதன் வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாத்திரத்தில் அவ்வாசம் மங்கிப் போய் மெலிதாய்க் கந்திக்குமாறுபோல நானவனென் றெண்ணிச் சிவோகம்பா வனை செய்தறியும் ஞானிக்கு நாடுமுளமுண்டாதலுமுண்மையின், அதுபற்றி அவன்மாட்டுப் பிராரத்தவினையும், அதற் கிடனாகிய உடம்பு முதலிய மாயே யமும் வாசனை மாத்திரையாய் மெலிதாய் வந்து தாக்குமாயினும் அவ்வழி ஏறுவதாகிய ஆகாமியவினை மேலைக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுத லின் றித் தனக்குப் பற்றுக்கோடாகிய மாயேயத்தினோடுங் கெட்டொழியும். அந்த ஞானி பின்னர்ப் பகுத்துணர்வு மிறந்து ஏகனாகி இறைபணி நின்று சத்தாயுள்ள சிவமே யாகிய வாற்றால், ஒரோவழி அவ்வாதனைபற்றிப் பிறழி னும் பிறழவொட்டாத அவ்வச்சினையே உணர்ந்து நிற்ப னாகலா னென்க.

எனவே, ஒளி இருளைத் துரக்குமாறு போல அவ்வுணர்வு அவ்வாகாமி யத்தைத் துரக்குமென்பதாம். உளி-ஐந்தாம்வேற்றுமை உருபு; *"மரபுளி வழா" என்புழிப்போல. முற்றுகரங் கெடுதல் இலேசாற் கொள்க. உம்மை சிறப்பின்கண் வந்தது. மற்று-வினைமாற்று. அவன் - மேற்கூறிப் போந்த ஞானி. தான் என்பது அநுவாத முணர நின்றது. பிறழ விடாமைபற்றி மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ் செய்தார். இஃது இனவெது கைத் தொடை.

இதனாற் கூறிப் போந்தது சிவாகமங்களில் ஆண்டாண்டு ஞானிகட்குப் பிராரத்தவினை தாக்குமென்றது இங்குளி வாங்குங் கலத்தைப் போல வாதனை மாத்திரையாய் மெலிதாய்வந்து தாக்குமென்னுந் துணையே யாக லின், அவ்வாறு வரும் பிராரத்த வாதனை நுகர்ச்சியின் ஏறும் ஆகாமியவினை அவ்வுணர்வின் முன்னர்க் கெட்டொழிவதன்றிப் பிராரத்தநுகர்ச்சியினே றும் ஆகாமியம் போலப் பிறவிக்கு வித்தாய் நிலைபெறுமாறில்லையென ஆசங்கையை நீக்கிய வாறாமென்க.

அற்றேல், வாதனைபற்றிப் பெயர்ந்துழியும் நிலையிற் றிரியவொட்டாத அவ்வச்சினையே உணர்ந்து நிற்குமாறு யாங்ஙனமென்னும் ஆசங்கையை

* திருமுருகாற்றுப்படை, திருச்சீரலைவாய், கஅ-ம் அடி.

உவமைமுகத்தா னீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமரா மாச்செலுத் தும் பாகரினு—மெண்ணி
யரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்று
மவர்திற னீங்கா ரதற்கு

எனவரும்.

நண்ணனல் வேவாமைக் கேதுவாகிய அங்கித்தம்பனை வல்லார் அவ்வனலிற் குளிப்பினுந் தந்திறலி னீங்காதவாறு போலவும், பண்ணமர மாச்செலுத்துதற்குரிய பாகுநூல் கற்றுவல்லார் அப்பாய்மாவின் வேகத்துட்படினுந் தந்திறலி னீங்காதவாறு போலவும், ஐம்புலன்கள் தமக்கு வியாப்பியமாய் அடங்கத் தாம் அவற்றை வியாபித்து மேற்பட்டு நிற்கும் முறையை ஆராய்ந்து தாம் அரனடியாகிய அச்சினை இறைபணியினின் றுணர வல்லோர் அவ்வைம்புலனிற் சென்றும் அதனானே தந்திறல் நீங்குத லிலரென்க.

நள்ளனல் நண்ணனல் என மரீஇயிற்று; *"நீணுலகெலாம்" என்புழிப்போல. நண்ணனல்-†"கீழ்நீர்" போல முன்பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத்தொகை. தம்மால் நண்ணப்படும் அனல் என்றுரைப்பினும் அமையும். பண்-பண்ணப்படுங் கதிகள். செலுத்துதல்-ஊர்தல். இன்-உவமவுருபு. உம்மை எண்ணும்மை. சென்றும் உம்மை சிறப்பு. ஐம்புலன்-உபலக்கணம். திறல்-வெற்றிப்பாடு. அதற்கு என்பது உருபு மயக்கம்.

அற்றேல், அசத்தோடு சார்ந்தவழியுஞ் சத்தோடு சார்ந்தவழியும் அது வதுவேயாய்ச் சதசத்தா மியல்புடைய ஆன்மாக்கள் ஐம்புலனாகிய அசத்தைச் சார்ந்தும் அவர் திறல் நீங்காமை யாங்ஙனமென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி
னிதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமிக்
கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி
னருகணையார் சத்தணைவா ராங்கு

எனவரும்.

சத்தோடு கூடியவழிச் சத்தாயும் அசத்தோடு கூடியவழி அசத்தாயும் இவ்வாறு சதசத்தா மியல்புடைய தன்னுண்மை உணர்ந்தோன் சத்தாகிய முதல்வன் றிருவருளா னல்ல தொன்றையுங் காணாய் அவ்வருளின்வழி நின்று காணுமாயின் அவ்வழிப் பாசமாகிய அசத்தின் இதஞ்செய்த லின்மையாற் சத்தாகிய அம்முதல்வனைத் தலைப்படுவோர், சிற்றமிக் கெரியாநின்ற ஒளியின் முன் அந்தகாரம் போல, அச்சத்தினெதிர் தனது சத்தியை ஏற்க மாட்டாத அசத்தாகிய பாசத்தின்மாட்டு எய்துவாரல்லர் என்க.

* திருநாவுக்கரசுநாயனார்தேவாரம், கோயில், திருக்குறுந்தொகை, ௪. † திருக்குறள், கூ௩-ம் அதி, கள்ளுண்ணாமை, கூ.

வேறுமுடிபாகலின், ஒருமைப் பன்மை மயக்கமன்மை யுணர்க. அருளின் என்னும் ஐந்தாமுருபு ஏதுப் பொருட்கண் வந்தது. இதமித்தல் என்புது பெயரடியிற் பிறந்த வினைப்பெயர். இதஞ்செய்தல்-பற்றுச் செய்தல். இன்றி-இன்மையா னென்க. இன்மைக்கு ஏதுக் கூறுவார் கதமிக் கேரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்து என்றார். அசத்தைச் சார்ந்து அசத்தாய் நிற்றல் இயற்கையன்றென்பது, *"ஒன்று மிகினு மொளிகவரா தேலுள்ள—மென்று மகலா திருள்" எனப் புடைநூலாசிரியர் ஓதியவாற்றானு மறிக. ஆங்கேலா அசத்து எனக் கூட்டுக. ஒப்புமை பற்றிக், கதமிக் கேரிகதிர் என்றார். ஒப்புமை யாதல் †"எல்லை யில்லவ னெரிதுள்ளி னுலென வெகுண்டான்" என்பதனானும் அறிக.

இவ்வைந்து வெண்பாவானும் முறையே இறைபணியி னிற்பார்க்குப் பிராரத்தவினை முதல்வன் சந்நிதியில் உடனாழாய் ஒழிவதாகலின் மேலைக்கு வினை யேறுமா றில்லை யென்றும், அது செய்வோர்செய்திப்பயன் விளையுமாற்றாற் பெறப்படுமென்றும், செய்வோர்செய்திப்பய னன்றியும் விளைவது வாதனைமாத்திரையே யாகலான் அதுபற்றிவரும் வினை ஞானத்தா னழிவெய்துமென்றும், அந்த ஞானம் வாதனை பற்றிச் சலிக்குமா றில்லை யென்றும், அது சலியாமைக் கேது இதுவென்றும் எடுத்துக் காட்டி அஞ்ஞான கன்மம் பிரவேசியா மையை வலியுறுத்தவாறு காண்க.

ஏகனாகி நிற்றலான் மலவாதனை இன்றாகலும், இறைபணி நிற்றலான் மாயா கன்மங்களின் வாதனை இன்றாகலும் பெறப்பட்டமையின், மலமாயை தன்னொடு வல்வினை யின்றே என்பதனை வேறோரதிகரணமாக வைத்து ஓதல் வேண்டா வாயிற்று. அற்றாயினும் அவை இலவாதற்கணுளதாகிய ஐயப்பாடு முதலாயின இறுதிச் சூத்திரத்தின் "மும்மலங் கழீஇ" என்னும் அதிகரணத்துட் பெறப்படும்.

இரண்டாமதிகரணமுடிந்தது.



பயனோத்தின் முதற்பாதமாகிய

## பத்தாஞ்சூத்திர முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



* திருவருட்பயன், இருண்மலநிலை, கூ. † பெரியபுராணம், அமர்நீதிநாயனார் புராணம், உசூ.

நிட்டை; ஞானத்து ஞானம்.

திருச்சிற்றம்பலம்.

# பதினோராஞ் சூத்திரம்.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

என்-து. இ-ம். எ-னின். பரமேசுரனது சீபாதங்களை யணையுமா றுணர்த்துத னுதலிற்று.

ஆன்மலாபம், மேலைச்சூத்திரத்தின் இறைபணி வழுவாது நிற்க என்ற வழிச், *"சிவன்முதலே யன்றி முதலில்லை யென்றுஞ்—சிவனுடைய தென்னறிவ தென்றுஞ்—சிவனவன—தென்செயல தாகின்ற தென்று மிவையிற்றைத்—தன்செயலாக் கொள்ளாது" அவ்வாறு நிற்கும் ஆன்மாவினுடைய அறிவிச்சைசெயல்கள் அவ்விடத் தொன்றனை விடயிக்குமா றில்வழிப் புத்தர் கூறும் "ஆலய விஞ்ஞானம்" போலச் சூனியமாய் முடியுமாலென்னும் ஆசங்கையை நீக்கி அவற்றிற்கு விடயம் இது வென்ப துணர்த்து முகத்தானே ஆன்மலாப மிரண்டனுள் முடிவாய் எஞ்சி நின்ற சிவப்பேறு கூடுமா றுணர்த்தி, அதற்கு ஏதுக் கூறு முகத்தானே ஏகனாகி அவ்வாறு நிற்புழிப் பெறப்படுஞ் சம்பந்தம் இது வென்பது காட்டி, மேற் கூறிப்போந்த பாச நீக்கத்துட் பெறப்படாது எஞ்சி நின்ற பிராரத்த வாசனையி னொழிபுங் கைமுதிகநியாயத்தான் உணர்த்துதல் பயனோத்தின் இரண்டாம் பாதமாகிய பதினோராஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

ஆசங்கை பற்றிய வியைபானே அதிகரணவியைபும், ஆன்மலாபமெனப்படும் பயனிரண்டனுள் பாசநீக்க முணர்த்திய பின்னர்ச் சிவப்பேறுணர்த்துதல் முறைமை யாகலின் அம்முறைமை பற்றிய வியைபானே ஓத்தியைபும், 'ஏகனாகி யிறைபணி நிற்க' என்றவழி அவ்வாறு நிற்பித்தற்குரிய சம்பந்தமென்னை யெனவும், 'மலமாயை தன்னொடு வல்வினை யின்றே' என்புழி வினை என்றது ஏற்புழிக் கோடலான் ஆகாமியவினையாகவே ஏனைப் பிராரத்தவாசனை கழியுமாறு யாங்ஙன மெனவும் அவாய் நிற்றலின், அவ்வவாய்நிலைபற்றிய வியைபானே பாதவியைபும் பெறப்பட்டன.

அற்றேல், ஏகனாகி இறைபணி நின்றார்க்கு இனிச் செய்யக்கடவதொன்றின்மையானும், இருணீக்கமும் ஒளிவிளக்கமும் உடனிகழ்ச்சியாமாறு போலப் பசுத்துவ நீக்கமுஞ் சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடனிகழ்வனவாமாகலின் வேறோத வேண்டாமையானும், வடமொழிச் சிவஞானபோதத்துட் சுவாநுபூதியாகிய சிவப்பேற்றைப் பத்தாஞ் சூத்திரத்

* திருக்களிற்றுப்படியார், ௬௪.

துட் பாச நீக்கத்தோடு ஒருங்குவைத் தோதுதலானும், அதனை ஈண்டு வேறுவைத் தோதுதல் அமையுமா றென்னை யெனின்,—அறியாது கூறினாய்; ஏகனாகி யிறைபணி நிற்பது துரியநிலை யெனப்படும் அருணிலையே யாகலின், ஆண்டு மலநீங்கியதுணையானே சுகப்பிரபை மாத்திரையே விளங்குவ தன்றி அதீதநிலைக்கண்ணதாகிய சிவத்துவ விளக்க மெனப்படும் பரமசுகந்தோன்றாமையின், அது விளங்குதற்கு அவனருளா லல்ல தொன்றையுஞ் செய்யாமை மாத்திரையான் அமையாமையின், வேறும் ஆண்டுச் செய்யக் கடவ துண்டென்பது தானே போதருதலானும், இருணீக்கத்தில் ஒளிவிளக்கம் போலப் பசுத்துவ நீக்கத்தில் அருள்விளக்க மாத்திரை உடனிகழ்வ தன்றி ஆநந்தவிளக்கம் உடனிகழாமையானும், அருள்விளக்கத்திற்கும் ஆநந்தவிளக்கத்திற்குந் தம்முள் வேறுபாடு முன்னர்க் காட்டப்படு மாகலானும், வடமொழிப் பத்தாஞ் சூத்திரத்திற் பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்தியவழிப் பாசநீக்க மாத்திரையே முத்தி யென்னுஞ் சமயத்தாரை மறுத்தற் பொருட்டுப் "பாசநீக்கம் பெற்றோன் சுவாநுபூதி யுடையனாவன்" எனப் பதினோராஞ் சூத்திரஞ் செய்தற்குத் தோற்றுவாயாந் துணையே செய்து கொண்டு, சுவாநுபூதி நிகழ்ச்சிக்கண் ஓதற்பாலன வெல்லாம் பதினோராஞ் சூத்திரத்தே கூறிப் போந்தமையின், ஒன்பதாஞ் சூத்திரத்தி லெடுத்துக் கொண்ட ஆன்மசுத்திபண்ணுமாறு பத்தாஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முடிவு பெற்றாற் போலப் பத்தாஞ் சூத்திரத்தி லெடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலை பதினோராஞ் சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெறுதலென்பதின் மலையாமைப் பொருட்டு ஆசிரியர், "சுவாநுபூதிமானாவன்" என்பதனையும் அரன் கழல் செலும் எனப் பதினோராஞ் சூத்திரத்திற்றானே ஒருங்குவைத் தோதினா ராகலின் அது மாறன்மையானும், அவ்வாறன்றி மொழிபெயர்த்தல்யாப்பான் நூல்செய் துரைப்பான் புகுந்த ஆசிரியர் வேறுபடச் செய்துரையார் ஆகலானு மென்பது.

இஃதறியாதார் பத்தாஞ் சூத்திரம் பாசக்ஷயம் பண்ணுமா றுணர்த்திற்று எனவும், பதினோராஞ் சூத்திரம் பரமேசுரனது ஸ்ரீ பாதங்களை யணையுமா றுணர்த்திற்று எனவும் ஆசிரியர் தாமே கிளந்தெடுத் துரைத்த கருத்துரையும் நோக்காது, பத்தாஞ்சூத்திரத்தானே அதீதநிலையுங் கூறியொழிந்தா ரெனக் கொண்டு பதினோராஞ் சூத்திரம் பன்னிரண்டாஞ் சூத்திரம் போலச் சீவன்முத்திநிலையின் நிகழும் அணைந்தோர் தன்மையே கூறிற்றா மெனத் தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. அது போலியென் றொழிக. வடமொழிப் பத்தாஞ்சூத்திரத்துச் "சுவாநுபூதிமா னாவன்" என்பதனைப் பதினோராஞ் சூத்திரத்துப் பத்திசெய்க என்றதன் பின்னாகக் கொண்டுகூட்டிவைத் துரைப்பதே அதன் கருத்தென்பது தெற்றென வுணர்ந்துகொள்க; அஃது ஆண்டுக் கூறியவா றுணர்ந்து பத்தி செய்தவழி யன்றிப் பெறப்படாமையின். அஃதாமாறு முன்னர்க் காட்டுதும்.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு:—காட்டக் காண்பதாகிய கண்ணுக்கு உருவத்தைக் காணுமாறு பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று அதற்கு அதனைக் காட்டித் தான் காண்கின்ற ஆன்மாவைப் போல, அறிவிக்க அறிவ

தாகிய அவ்வான்மா விடயத்தை அறியுமாறு, முதல்வன் பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று அதற்கு அதனை அறிவித்துத் தான் அறிந்து வருதலான், இவ்வாறு அத்துவிதமாய் நின்று உதவி செய்துவரும் பெருங்கருணையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே அம்முதல்வன் திருவடியாகிய சிவாநந்தாநுபூதியைத் தலைப்படும் என்றவாறு.

காணும் என்னும் உவமையடையைப் பொருளினும், கண்டு என்னும் பொருள் வினையை உவமையினுங் கூட்டிக், காண என்பதனை ஈரிடத்துங் கூட்டிக், கண்டு காட்டல் என்பதனை *"வேர்த்து வெகுளார் விழுமியோர்" என்புழிப் போலக் காட்டிக் காண்டல் என மாறிவைத்து உரைத்துக் கொள்க. அயராமைக்குச் செயப்படுபொருள் அதனை என்று எடுத்துக் கொண்டு உரைக்க. அயரா வன்பு-அயராமையானாகிய அன்பு என "ஆறு சென்ற வெயர்" போல நின்றது. இக்கருத்தே பற்றி, †"இத்தை—யாயு மறி வுடையனு யன்பு செய்ய" என்றார் வழிநூலாசிரியரும். உள்ளத்தை என்பது உருபு மயக்கம்.

அறிவிச்சை செயல்களின் நிகழ்ச்சியாகிய அயராமையும் அன்பும் அரன்கழல்சேறலும் முறையே காரண காரியங்களாய் அவ்வொரு பொருண்மேல் ஒருங்கு நிகழு மென்பார், அயரா வன்பி னரன் கழல் சேலுமே என்றார்.

இஃ தென்சொல்லியவாறோ வெனின், ஆன்மாவை யின்றி யமையாத கண் ஒருருவத்தைக் காணுங்கால், ஆன்மபோதங் கண்ணொளி யெனத் தானென வேற்றுமை யின்றி உடனாய் விரவிநின்று கண்ணுக்குக் காட்டிய உருவத்தைக் கண் கண்டதென்றும், கண்ணை அதிட்டித்து நின்ற ஆன்மாக் கண்டதென்றும் பிரித்தறியப்படுமா றின்றி இருவகைக் காட்சியும் ஒன்றனை யொன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே நிகழும் முறைமை போல, முதல்வனை யின்றி யமையாத ஆன்மா ஒரு விடயத்தை யறியுங்கால், அம்முதல்வனது சிற்சத்தி, ஆன்மசிற்சத்தியெனத் தானென வேறின்றி உடனாய் விரவி நிற்ப, முதல்வனும் ஆன்மாவில் அவ்வாறு விரவிநின் றறிவித்த விடயத்தை ஆன்மா அறிந்ததென்றும் ஆன்மாவை அதிட்டித்துநின்ற தானறிந்தானென்றும் பிரித் தறியப்படுமா றின்றி, இருவகை யறிவும் ஒன்றனை யொன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே விடயித்துச் செல்லுமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தம் முத்தி யிரண்டினும் ஒரு பெற்றித்தா யுண்மையின், ஏனையவற்றை யெல்லாங் கைவிட்டு முதல்வனிடத்து ஏகனாகி அவனருளா லல்லது ஒன்றையுஞ் செய்யானாய் நின்ற ஆன்மா, முதல்வன் அவ்வாறு அத்துவிதமாய் உடனின்று கருணையான் உபகரித்து வரும் உரிமையை நோக்குந்தோறும் அப்பொருளின்கட் செல்லும் இச்சை அடங்காது மீதூர்தலின், அவ்விச்சையே தானாக விளங்கித் தோன்றும் பேராநந்தத்தை அநுபவிக்கப் பெறுமென மேற் கூறிய ஆசங்கையை நீக்கி, அறிவிச்சைசெயல்கள் மூன்றும் இம்முறைமையான் அம்முதல்வனை ஒருங்கே விடயித்து நிற்குமாறு விளக்கி, அதீதநிலையி னியல்பு கூறியவாறு

* நாலடியார், சினமின்மை, ச.　† சிவஞானசித்தி, கக-ம் சூ. க.

மென்க. இக்கருத்தே பற்றி, *"அறிவொளிபோற் பிறிவருமத் துவிதம்" என்றார் புடைநூலாசிரியரும். †"அங்கியு மொன்றிற் றங்கினின் றல்லது தன்றொழில் நடத்தாது" ஆகலின், அது போல முதல்வனும், செய்யுந் தொழில் அனைத்தும் ஆன்மாவினிடத்துத் தங்கி நின்றே செய்வனென்பது உணர்ந்துகொள்க.

இதனுள், காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல் எனவே அவ்விரண்டற்கு முளதாகிய சம்பந்தம் அத்துவிதமென்பது பெறப்படுதலின், அதுவே 'அவனே தானே யாகிய வந்நெறி ஏகனாகி' நிற்றற்கண்ணுளதாகிய சம்பந்தமென்பதூஉம், காட்டிக் காணும் எனவே "கைமுதிக நியாயத்தான்" முதல்வனேயே விடயிக்கும் ஞானிகளுடம்பி னிகழும் பிராரத்தம் முழுவதும் அவர்களிடமாய்நின்று முதல்வனே என்றுகொள்வனாகலின், அவருக்கு அவ்வாதனை தாக்குமாறு இல்லையென்பதூஉம் பெறப்பட்டமையின், அவாய்நிலையை நிரப்பியவாறு மறிக. அத்துவித மாதல் இவ்வியல்பிற்றென்பது பொதுவதிகாரத் திறுதியில் விளங்கக் காட்டினும்; கடைப்பிடித்துக்கொள்க.

இவ்வாறன்றிக், காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் காண வுள்ளத்தைக் கண்டு காட்டல் என்பதற்குக் காட்டிவரு முபகார முணர்த்துதலே கருத்தென் றுரைப்பாரு முளர்; அது, ‡'விளம்பியவுள்ளத்து' என்னுஞ் சூத்திரத்துத் திரோதானசத்திய திலக்கணங் கூறு முகத்தாற் கூறிப்போந்தமையின், அதுவே ஈண்டுக் கூறிற்றெனிற் கூறியதுகூறலாய் முடியுமாகலானும், கண்ணழித் துரைப்புழி 'அவனும் அவற்றது விடயத்தையுணரும்' எனக் காணு முபகார மாத்திரையே எடுத்துக்கொண் டுரைத்த ஆசிரியர்க்கு அது கருத்தன் றென்பது தெற்றென விளங்குதலானும், காணு முபகாரங் காட்டு முபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழுமென்பது உணர்ந்துகோடற்பொருட்டு அதுவும் உடன்கூறப்பட்ட தன்றி அதனான் ஈண்டைக்காவதோர் பயன் வேறின்மையானும் அவர் உரைப்பன வெல்லாம் போலியென் றொழிக. அற்றேல், வடமொழிப் பதினோராஞ் சூத்திரத்திற் "காட்டுவான்" என்பது மாத்திரையே யன்றிக் "காண்பான்" என்பதும் உடன் கூறிற்றில்லையாலெனின்,—அறியாது கூறினாய்; ஆண்டுக் "காட்டுவானும்" என்ற உம்மை "காண்பானும்" என எதிரதுதழீஇ நிற்றலிற் கூறாமை யாண்டைய தென்க. அவ்வும்மைக்கு அப்பொருள்⊗காண மாட்டாதார்×பாடம் வேறாகக் கொண்டோதுப.

இதனுள், காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் காண வுள்ளத்தைக் காட்டிக் காண்டல் என்பது ஓரதிகரணம்; அதனை அயரா வன்பி னரன் கழல் சேலுமே என்பது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரமென் றுணர்க.

---

* சிவப்பிரகாசம், பாயிரம், எ. † சங்கற்பநிராகரணம், சிவசமவாதி சங்கற்பநிராகரணம், அடி, சுடு. ‡ இந்நூல், டு-ம் சூ.

⊗ ×

## முதலதிகரணம்.

அவற்றுள், ஈசுரவவிகாரவாதி முதலியோரை மறுத்து ஆன்மா ஒன்றனை விடயிக்குங்கால் முதல்வன் செய்யும் உபகாரங் கூறு முகத்தானே அத்துவிதநிலை உணர்த்துதற் கெழுந்தது முதலதிகரணம்:—

ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை யுணருமென்றது எனவரும்.

அவன்-முதல்வன். அவற்றது-ஆன்மாக்களது. ஆறுவது அறிதற் கிழமைக்கண் வந்தது *"அன்னபிறவும்" என்றதனாற் கொள்க. உம்மை ஆன்மா வுணர்தலே யன்றி முதல்வனும் அதனை யுணருமென இறந்தது தழீஇயிற்று. விடயம் பெத்தத்திற் பிரபஞ்சமும், முத்தியிற் சிவமுமாம். ஆகவே, முதல்வன் தன்னை யறிதலும் ஆன்மாவின் பொருட்டு ஆன்மாவிற் றங்கிநின் றறியு மென்பதாயிற்று.

அற்றேல், கண் சடமாகலானும், காண்டற்பயன் ஆன்மாவுக்கே யாகலானுங் கண் காண்புழி ஆன்மாவும் உடனின்று காண்டல் பெறுதும்; கண்போல் ஆன்மாச் சடமன்மையானும், அறிதற்பயன் ஆன்மாவுக்கே யன்றி முதல்வனுக் கின்மையானும், முதல்வனும் அவற்றது விடயத்தை உடனின் றறியு மென்றற்குப் பிரமாண மின்றாலென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது:—

இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந் தொன்றையும் விடயியா வாகலான்

எனவரும்.

கண்ணொளிக்கு விளக்கொளி தன்னோடுங் கலந்து தன்னொடு கூட உருவத்தினுங் கலந்தாலன்றி அவ்வுருவத்தைக் காணும் முறைமை யின்மையின், அதுபோல அறிவித்தா லன்றி அறியுமியல் பில்லாத ஆன்மாக்களும் முதல்வனதுணர்வு தம்மொடு விரவி நின்று தம்மொடு கூடச் சென்று விடயத்தும் விரவி நின்றால் அறிவு விளங்கி அவ்விடயத்தை அறியு மியல்பின வன்றித் தனித் தமையவும்மாட்டா; தனித் தொன்றை விடயிக்கவும்மாட்டா. ஆகலான், அறிவு விளங்குதன் மாத்திரைக்கே யன்றி விடயத்திற் சென்று பற்றுதற்கண்ணும் முதல்வன் உடனிற்றல் பெறப்படுதலான் ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை யுணரும் என மேற்கொண்டது என்றவாறு.

அமைந்து விடயியா என்பது †"உரத்துத்தரியாது" என்றாற்போல வேறு வினையாய் நின்றமையின், இன்றி என்பது ஈரிடத்துங் கூட்டி யுரைக்கப்பட்டது. அவனையின்றி யமையாமையிற் காட்டு முபகாரம் விளங்கினாற் போல அவனை யின்றி ஒன்றையும் விடயித்த லின்மையாற் காணுமுபகார மினிது விளங்கு மென்பார், அவனையின்றி யமைந் தொன்றையும் விடயியா என்றார். உம்மை முற்றும்மை. விடயியா என்றது பெயரடியிற் பிறந்த எதிர்மறை வினை. இவ்வேதுப் பொருளையே எடுத்துக்கொண்டு வழிநூலாசிரியர்:—

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல், கஉ.

† உரத்துச் சரிநூடயாது.

*"எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை யறிந்தியற்றி யிடாவுயிர்க ளீசன் றானுஞ்—செவ்விதினி துளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப—னிவ்வுயிர்க ளோற் றும்போ தவனையின்றித் தோற்றா விவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லா மாய் நிற்கு—மவ்வுயிர்போ னின்றிடுவ னாத லானு மரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே" என விரித்தோதியவாறு பற்றி யுணர்ந்து கொள்க.

இதனுள், 'எவ்விடத்தும்' என்றது பெத்தம், முத்தி இரண்டினும் என்றவாறு. 'அரனடியை யகன்று நிற்பது' என்றது அரனடியை விட்டுத் தனித்து நின்றறிவது எங்கே! ஓரிடத்து மில்லை என்றவாறு. 'இறையடியை யின்றி அறிந்தொன்றை இயற்றியிடா வுயிர்கள்' எனவும், 'ஈசன்றானெங்கு மாய்ச் செறிந்து நிற்ப' னெனவுங் கூறியது விடயத்தின்கட்படும் நிகழ்ச்சிக்கு எனவும், 'இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்றா' எனவும், 'அவ்வுயிர்போ னின்றிடுவன்' எனவுங் கூறியது ஆன்மாவின்கட் படும் நிகழ்ச்சிக்கு எனவுங் கொள்க. அவ்வாறு கொள்ளாக்கால் இருகாற் கூறுதல் புனருத்தியாய் முடியு மென்றொழிக. விளக்கொளி கலத்தல் ஈரிடத்தும் வேண்டப்படு மென்பது, †"விளக்கொளி கலந்த வற்றை" எனவும், †"விளக்கின்சோதி கலந்திடும்" எனவும் புடைநூலாசிரியர் வகுத் தோதியவாற்றானும் அறிக.

அற்றேல், அஃதங்ஙனமாக; பரமுத்தியில் ஆன்மாவுக்கு விடயமாவ தொன் றின்மையின், எவ்விடத்தும் அவற்றது விடயத்தை முதல்வ னுணரு மென்றல் செல்லாதா லெனின்,—அறியாது கூறினாய்; ‡"சுத்தவநு போகத் தைத் துய்த்தலனு" எனவும், §"ஒன்றிநின் றுணரு முண்மை" எனவும், பிறாண்டும் இவ்வாறே யோதுதலின் ஆன்மாப் பரமுத்தியிற் சிவாநந்தாநு பூதியை விடயித்த லுண்மையான், அதுவும் முதல்வனை யின்றி யமையாமை யின், முதல்வனும் அவ்வநுபூதியை அவ்வான்மாவிற் றங்கிநின் றுணர்த லுண்மையின். இக்கருத்தேபற்றி யன்றே சில ஆகமங்களில் முதல்வனுந் தன் ஆநந்தத்தைத் தானநுபவிப்ப னென்று ஓதியதூஉ மென்க. ஆண்டு அநுபவிப்பன் என்பதற்குத் தாற்பரியம் அறிவன் என்பதேயாம்.

அக்கருத்தறியாத சிவாத்துவிதசைவர் முதலியோர் முதல்வனுந் தன் னாநந்தத்தை அநுபவிப்ப னெனக் கூறுப. அழுந்தி யறிதலே அநுபவித் தல் என்னுஞ் சொற்குப் பொருளாகலின், அவ்வியல்பு ஆன்மாவுக்கே யன்றி முதல்வனுக்கில்லை யென மேற் காட்டிப் போந்தமையானும், ஆநந்த ரூபமே முதல்வனாகலிற் றானே தன்னைப் புதிதாக அநுபவித்தல் வேண்டா மையானும், முதல்வன் செய்யுஞ் செயலெல்லாந் தன்பொருட்டன்றி ஆன் மாவின் பொருட்டேயா மென்பது மேற் கூறிப்போந்தமையானும் அவர் மதம் போலியென் றொழிக.

அற்றேல், முதல்வன் காட்டுதன் மாத்திரையா னமையுமாயினன்றே ¶'காந்தங் கண்ட பசாசத் தவையே' என்றவாறே விகாரமெய்தாமை பெறு

* சிவஞானசித்தி, கக-ம் சூ. எ. † சிவப்பிரகாசம், உண்மை, அ. ‡ உண்மை விளக்கம், ருo. § சிவப்பிரகாசம், உண்மை, கள. ¶ இந்நூல், ரு-ம் சூ.

தும், அவ்வளவினன்றி ஆன்மாக்களுட னின்று அவற்றோ டொப்பக் காண்டலுஞ் செய்யுமாயின், ஆன்மாக்கள் போலக் * கட்டுற்று விகாரியாவான் சேறல் ஒருதலையாமா லென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்து தற்கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தும்போ னின்றுணரு மாகலா—னைந்தினையு
மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து

எனவரும்.

ஆன்மாச் † "சுவையொளி யூறோசை நாற்றம்" என்னும் ஐவகை விடயங்களை யுணரும் உணர்ச்சிக்கண்ணே தன்னியல்பு இது என வேறு காணப்படுமாறின்றி அவ்வவ்விடயங்களேபோல அதுவதுவாய்ச் செறிந்துநின்றறியும் இயல்பிற் றாகலான், அவ்வைந்து மொருங்கே அறியமாட்டாது ஒரோவொன்றாக அறிந்து அநுபவிப்பது ஆன்மாவேயாம். அது போலச் சதசத்தாய்ப் பல தன்மைப்படும் இயல்பின்றி என்றும் ஒருபெற்றித்தாகிய பரம்பொருள் எல்லாவான்மாக்களுடைய விடயங்களையும் ஏகமாய் ஒருங்கே பொதுவகையான் அறிந்து அவ்வான்மாக்களுட னின்று சிறப்புவகையான் அறியும்; ஆகலான் உடனின்றறிதலே பற்றி ஆன்மாப் போலப் பரம்பொருள் விகாரியாவான் சேறலின்றென்பது.

ஆகலான் உடனின்றறிதலேபற்றி ஆன்மாப் போலப் பரம்பொருள் விகாரியாவான் சேற லின்றென்பது குறிப்பெச்சம்.

இது "சொற்பொருட்பின்வருநிலை." உணராது உணர்வது என இயையும். அவற்றுணர்வது எனச் ‡ "சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையாது" வந்தது இலேசாற் கொள்க. உணர்வது என்றது தொழிற்பெயர்மாத்திரையாய் நின்றது; § "உறங்குவதுபோலும்" என்றாற்போல. ¶ வினைசெய்யிடத்தில் வரும் ஏழாவது விரித்துரைக்க.

அற்றேல், ஈண்டுக் கூறிய முறைமைபற்றி ஆன்மாக்களுக்கு விடயமாவதொன்றனையே முதல்வன் சவிகற்பமாய் உணர்வ னன்றி ஏனையவற்றை அவ்வாறுணர்வா னல்லனெனின், மேல் இறைபணி யதிகரணத்தில், ○ 'முற்செய்வினை யுந்தருவான் முன்' என்றது சாலாதாய் முடியும்; அன்றிச் சீவன் முத்தருக்குப் பிராரத்தவினை தாக்காது உடலூழா யொழியுமெனவும், ஒரோவழித் தாக்கினும் வாதனையாய் நொய்தின்வந்து தாக்குதன்மாத்திரையேயா மெனவுங் கூறுதலின், அது தருவான்முன்னுதற்கோ ரியைபில்லையா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

* கட்டுற்று-பந்தமுற்று. † திருக்குறள், ௩-ம் அதி. நீத்தார்பெருமை, ௭. ‡ தொல்காப்பியம், எழுத்ததிகாரம், தொகைமரபு, ௧௫. இதில் மெய்பெற என்றது இலேசு. § திருக்குறள், ௩௪-ம் அதி. நிலையாமை, ௯. ¶ தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல், ௨௦. ○ இந்நூல், ௧௦-ம் சூ. ௨-ம் அதி. ௧.

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினு—னேகமா
யுள்ளத்தின் கண்ணுனு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணுனே வுற்று

எனவரும்.

முதல்வன் றிருவடிகளில் நானென வொன்றில்லென்று தானே யென ஏகமாகி நின்றுகொண்டே பிராரத்தவினைக் கீடாக வரும் விடயத்தை உணர்வாராயின் அதுதான் அச்சீவன்முத்தர்க்கு வினைப்பயனுதலின்றிச் சிவபோகமாய் விளைகின்ற பொலிவானே அவ்வாறு உணர்வாரா லுணரப்படும் விடயத்தை அவ்வுணர்வி னிடத்தாற் பொருந்தி அறிந்து தனக்காக்கிக் கொள்ளான் கொல்லோ? பெத்தம் முத்தி இரண்டினும் அத்துவிதமாய் அவ்வறிவின்கண் நீங்காது உடனின்று உணர்த்தியும் உணர்ந்தும் வரும் அம்முதல்வன் என்க.

ஏகமாய் உள்ளத்தின் கண்ணுனன் உள்குவா ருள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணுனே என்க. இசையெச்சத்தால் அவ்வாறுரைக்கப்பட்டது. நில்லாதுணர்தலைப் பிரித்தமையின், ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. இணையடிகள் என்புழிக் கண்ணுருபு தொக்கது: *"ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்—மெய்யுருபு தொகாஅ விறுதி யான" என்ப வாகலின். உணர என்னுஞ் செயவெனெச்சம் "மழைபெய்யக் குளநிறையும்" என்புழிப்போலக் காரணப் பொருட்டாய் நின்றது. தெளிவுபற்றி விளைந்த என இறந்தகாலத்தாற் கூறினர். விளைந்த போற்பினன் என்றமையிற் போகஞ் சிவபோக மாதல் பெற்றும். †"செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்" ‡"ஆக்கந் தானே காரண முதற்றே" என்ப வாகலின், ஆக்கமுங் காரணமு மடுத்து வந்தன. ஆனுமை-நீங்காமை. ஓகாரம்-எதிர்மறை.

இஃது இவ்வதிகரணப் பொருள்பறறி §"முற்செய்வினை யுந்தருவான் முன்' என மேற் கூறிப் போந்ததன்கண் ஆசங்கை நிகழாமைப் பொருட்டு அதனை வலியுறுத்துதற் கெழுந்த தென்பது.

இணையடிகளில் ஏகமாய் நின்று ¶"கண்டதோர் பொருளை யந்தக் கருத்திறற் காண்" பார்க்கு அது சிவபோகமாய் விளையுமென்பது ०"பெற்றசிற்றின்பமே பேரின்பமாய்" எனவும், **"உடம்புடைய யோகிகடா முற்றசிற்றின்ப—மடங்கத்தம் பேரின்பத் தாக்கில்" எனவும், ††"காணுங் கரணங்களெல்லாம்பே ரின்பமெனப்—பேணு மடியார்" எனவும் பிறுண்டும் இவ்வாறே ஓதியவாற்று னுணர்க.

இனி, இவ்வெண்பாவிற்கு ஒன்றெனப்படும் ஆன்மா ஏகமாய் நின்று இணையடிகளை உணரவே போகமாய் விளைந்த பொற்பை யுடையான் அது

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், உஉ. † மேற்படி, கிளவியாக்கம், உ௦. ‡ மேற்படி, உக. § இந்நூல், க௦-ம் சூ. உ-ம் அதி. க. ¶ சிவப்பிரகாசம், உண்மை, சசு. ० திருவுந்தியார், ௬௩. ** திருக்களிற்றுப்படியார், எசு. †† திருவாசகம், பண்டாயநான்மறை, சு.

வேயு மன்றி ஆன்மாவுக்குக் கண்ணெனப்படும் அறிவு மாயினன் ஆகலான் அம்முதல்வன் உள்குவா ருள்கிற்றை யுள்ளத்தாற் காணுனே என்றுரைப் பாரு முளர். அஃது அதிகரணத் தெடுத்துக்கொண்ட பொருளோ டியை யாது வெற்றெனத் தொடுத்தலாய் முடியுமென்பது உணர்ந்துகொள்க.

இவ்வதிகரணத்தாற் போந்த பொருள், * 'அவையே தானே யாய்' என முதல்வன் தூல வைந்தொழில் செய்யுமா றுணர்த்து முகத்தானும், †'தாந்த முணர்வின் றமியருள்' என அதிசூக்கும வைந்தொழில் செய்யுமா றுணர்த்து முகத்தானும் பொதுவகையாற் பெறப்பட்ட அத்துவித நிலையை அவ்வதிசூக்கும வைந்தொழிற்கட் படும் விசேடத்தின்மேலிட்டுச் சிறப்பு வகையாற் பெறுவிக்கு முகத்தானே பெத்தம் முத்தி இரண்டினும் ஆன்மாக் களுக்கு வரும் பயனை முதல்வனே உடனாய் நின்று ஏன்று கொண்டு அவ ரவர் செய்யுஞ் செய்திக்குத்தக்க பயன் விளைத்து நிற்பனென்பது விளக்கிய வாறுமென்க. இஃது ஆசிரியர்தாமே வருகின்ற அதிகரணத்தில் விளக்கு கின்றவாறு பற்றியும் உணர்ந்து கொள்க.

பெத்தர்க்கு வரும் பயனும் உடனாய் நின்று ஏன்றுகொள்ளும் முதல்வ னெனவே, உடல்பொருளாவி முழுவதும் அவனுடைமை யெனக்கொண்டு தானஞ்செய் தொழித்துப் ‡ "பரமே பார்த்திருப்ப" ரன்றிப் ‡ "பதார்த் தங்கள் பாரா" ராகிய சீவன்முத்தருடம்புகொண்ட வினைப்பயன் ஒருவாற் றானும் அவர்க்குத் தமதாதல் செல்லாமையின், எவ்வாற்றானும் முதல்வன தேயா மென்பது கூறுமே விளங்குமென மேற் பெறப்படாது எஞ்சிநின்ற பிராரத்தவினைத்தொடர்பு அவர்க்கின்றுமாறு "கைமுதிகநியாய"த்தால் விளக் கியதூஉ மாயிற்று. பெத்தர்க்கு வரும் வினைப்பயனும் முதல்வனே உடனாய் நின்று ஏன்றுகொள்வ னாகலானன்றே, §"யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே—மாதொரு பாக னார்தாம் வருவர்" எனவும் ¶"அங்குநாஞ் செய்யுஞ் செய்திக் காணைவைப் பால ளிப்பன்" எனவும் ೦"அறிவா யறிகின்றான் றானே" எனவும் இவ்வா றோதியதூஉம், உலகத் தொன்றனை ஈவாரும் ஏற்பாருஞ் சிவார்ப்பண மெனக் கருதாதவழிக் குற்ற மென்று ஆகமங்கள் கூறியதூஉ மென்க.

முதலதிகரணமுடிந்தது.

## இரண்டாமதிகரணம்.

முதலதிகரணத்தின் ஏனைச் சமயத்தாரை யெல்லாம் மறுத்துச் சித் தாந்த முத்தியை நிலைபெறுத்துஞ் சுத்தாத்துவித நிலையை உணர்த்தியவழி, அதனை லதனைப் பெறுமாறு யாங்ஙன மென்னும் அவாய்நிலையை நிரப்பி, ஆன்மலாப மிரண்டனுள் எஞ்சிநின்ற சிவப்பேறு கூடுமாறு உணர்த்துதற் கெழுந்தது இரண்டாமதிகரணம்:—

* இந்நூல், உ-ம் சூ. † மேற்படி, ரு-ம் சூ. ‡ சிவஞானசித்தி, கக-ம் சூ. உ. § மேற்படி, உ-ம் சூ. உரு. ¶ மேற்படி, உசு. ೦ பதினொராந்திருமுறை, காரைக் காலம்மையார் அற்புதத்திருவந்தாதி, உ0.

இனிப் பத்தியினுன் மறவா தேத்த அவனது சீபாதத்தை யணையு மென்றது

எனவரும்.

இதன்பொருள் சூத்திரத்தி லுரைத்தவாறுபற்றிக் கண்டுகொள்க.

அறிவிச்சைசெயல்கள் மூன்றும் ஒருங்கே உடனாய் நிகழு மியல்பின் கண் எவ்வா றுரைப்பினும் அமையுமாயினும், முதற்க ணிகழும் முறைமைமேய ஈண்டு எடுத்துக்கோடலின், அதற்கேற்பச் சூத்திரத்து ளுரைத்தவாறே ஈண்டும் மறவாது பத்தியினு லேத்த என்றுரைத்தலே கருத்தாகக் கொள்க. ஏத்துதல்-ஈண்டு அருள்வழிநிற்றன் மேற்று. அன்பு பத்தி காதல் என்பன இச்சை மீதூர்தற்பொருள வாகலின், அது பரமுத்தியினும் உண்டென்ப துணராதார் பத்தியாவது சீவன்முத்திநிலைக்கே செய்யப்படுமொரு சாதகம் போலுமென மயங்கிக்கொண்டு தமக்கு வேண்டியவாறே உரைப்பர். பரமுத்தி நிலைக்கண் இச்சை நிகழாதவழிச் சிவபோக மநுபவமாதல் செல்லாமையானும், சீவன்முத்திநிலைக்கே கூறுவதொன்றாயிற் *'செம்மலர் நோன்றாள்' என்னுஞ் சூத்திரத் தொருங்குவைத் தோதவே அமையுமாகலிற் சூத்திரம் வேறு செய்யவேண்டாமையின், அஃது ஆசிரியர் கருத்தன்மையானும் அது பொருந்தாமை அறிக.

அற்றேல், ஒருபொருளை அறிந்த மாத்திரையே அதன்கண் இச்சை நிகழுமாறுபோல இச்சை நிகழ்ந்தமாத்திரையே அதனைப் பெறுதலுங் கூடுமென்பது உலகத் தின்மையால் ஈண்டுப் பத்திமாத்திரையாற் சீபாதத்தை அணையப்பெறுமாறு யாங்ஙனமென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்குக் கண்டு காட்டலின் என மேலை யதிகரணத்திற் கூறிப்போந்த தன் தாற்பரியம் விளக்குவா னெழுந்த ஏது:—

அவன் அந்நியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்

எனவரும்.

அம்முதல்வன் உலகத்தார் போலன்றிப் பெத்தம் முத்தி இரண்டினும் அத்துவிதமாய் உடனின்றுகொண்டு யார் யார் யாது செய்கின்றா ரென்று அறிந்து அவரவர்க்கு அவ்வச் செய்திக்குத் தக்க பயனை அவ்வப் பொழுதே விளைவிப்ப னாகலான் இனிப் பத்தியினுன் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணையும் என மேற்கொண்டது என்றவாறு.

அற்றேல், முதல்வன் பெத்தம் முத்தி இரண்டினுந் திரிபின்றி ஒருபெற்றித்தாகிய அத்துவிதமாய் நின்று உபகரிப்பனாயின் யாதானு மொருவாற்றாற் பசு பாசம் போலப் பெத்த நிலையினும் முதல்வன் புலனாதல் வேண்டுமாலென்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்து முகத்தானே அயராமை எனப்படும் அறிவு விளங்கும் முறைமை உணர்த்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

---

* இந்நூல், கஉ-ம் சூ.

அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீச—னருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ
னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்

எனவரும்.

படலவிசேடத்தான் ஒளிமழுங்கிய கண்ணிடத்தும் அது நீங்கி ஒளி விளங்கிய கண்ணிடத்தும் வேற்றுமையின்றி ஆதித்தன் சமமாய் நின்றாலும் அவ்வாதித்தன் ஒளிமழுங்கிக் காட்சியில்லாத கண்ணுக்கு மாலையிருட்டாய்த் தோன்றுவனன்றி ஒளி விளங்கிய கண்ணுக்குத் தோன்றுமாறுபோல விளங்கித் தோன்றான்; அதுபோல, முதல்வன் பெத்தர் மாட்டும் முத்தர் மாட்டும் அத்துவிதமாய் ஒப்ப நின்றாலும் பாசத்தானாகிய ஏகதேசவறிவுடைய பெத்தர்க்குப் பாசஞானமேயாய்த் தோன்றுவன். அப்பாசப் பிணிப்புக்கு ஏதுவாகிய அபக்குவம் நீங்கித் தனது திருவருட்பார்வையாற் பத்திசெய்து தன்னை அறிதற்குரிய பக்குவ முடையராயினார்க்குப் பாசத்தானாகிய அவ்வேகதேசவறிவை மாற்றிப் பூரணவறிவு விரியச்செய்து அவரெதிரே விளங்கித் தோன்றுவன்; தனது கிரணந் தீண்டிப் பக்குவ மெய்திய தாமரைமலருக்கு முன்னுளதாகிய கூம்புதலை மாற்றி ஆயிர மிதழும் அலரச் செய்யும் ஆயிரங் கதிர்ப் பரிதி போல என்க.

பொருள்வினையை உவமையினும் உவமவினையைப் பொருளினுங் கூட்டி உரைக்க. ஏகாரம் பிரிநிலை. தேற்றமெனினு மமையும். அல்லுங் காணாரும் பாசமும் பகலும் ஆகுபெயர். தன்னுணர்ந்தார் எனக் காரணத்தைக் காரிய மாக உபசரித்தார். தோன்றுவன் என்பது சொல்லெச்சம்.

இதனானே முதல்வன் பெத்தம் முத்தி இரண்டினும் ஒப்ப நிற்பினும் ஒப்பவிளங்காமை உவமைமேல்வைத்து துணர்த்து முகத்தானே ஆன்மாவுக்கு முத்திநிலையின் அறிவு நிகழுமாறும், அது முதல்வன தறிவாகிய அருட்கண்ணை யின்றி யமையாமையுங் கூறப்பட்டன.

இனி, இவ்வாறு பக்குவப்படுத்திப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்துவதாகிய அருட்கண் புதுவதாய் ஒருகாலத்தின் நிகழ்ந்தொழிவ தன்றெனை அதனது உபகார முணர்த்து முகத்தானே அன்பு எனப்படும் இச்சை விளங்கும் முறைமை கூறுதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான்

எனவரும்.

கண்ணின்கண் நிலைபெற்றுளதாகிய இருளைப் பிறைமதி உடனாய் நின்று முறைமுறையா னுந்தித் தள்ளியவாறு போல, ஆன்மாவைத் தனது திரு

வடிக்கட் சேர்த்துக்கோடற்குளதாகிய இச்சைமிகுதியான் அவ்வான்மாவின் கண் அநாதிமுதல் அத்துவிதமாய் நிலைபெறும் முதல்வன்றானே அவ்வான் மாவின்கண் நிலைபெற்ற ஆணவமலத்தை உந்தித் தள்ளிக், காந்தக்கல் இரும் பைத் தன்கண் ஈர்த்துக்கொண்டு தன்வசமாய்ப் பற்றச்செய்தல்போலத் தனது திருவடிக்கட் சேர்த்துத் தன்வசமாய்ப் பற்றிக்கொண்டு நிற்கும்படி பண்ணுதல் அவனுக்கு ஒருஞான்றுஞ் சலித்தொழித லில்லை. அவ்வாறு சலியாது செய்யுமாயினும் அதனால் விகாரியாவா னல்லன்; எல்லாத்தொழி லுந் தனது சந்நிதிக்கட் சத்திசங்கற்ப மாத்திரையாய்ப் பரமின்றி விளை யாட்டுப் போலச் செய்யும் அம்முதல்வன் என்க.

மதி என்றது ஈண்டுப் பூர்வபக்கத்துச் சந்திரனை. *"அந்த வருளுணக் கிங் காதார மாயல்லி—லிந்து வெனவெறித் திட்டு" என்பது மது. ஏகாரம் மலத்தைத் துரத்துதற்குக் காரணம் அவ்வன்பெனப்படும் இச்சையே யன் றிப் பிறிதில்லை யென்ப துணர்த்தி நிற்றலிற் பிரிநிலை. வான் பான் பாக்கு என்பன தொழிற்பெயர் விகுதியுமா மென்பது †"கரப்பாக் கறிந்து" என் பதனு னுணர்க. உவம வுருபு விரித்துரைக்க. செய்வானது சலிப்பின்மை செய்கைமே லேற்றப்பட்டது. சலிப்பில் என்பது பற்றி அங்ஙனம் நிகழ்வ தாகிய ஆசங்கையை நீக்குதற்கு விகாரியலன் என்பதும் உடனோதினார். தான் என்னு மெழுவாய் இசையெச்சமாகலின், அவ்வாறுரைக்கப்பட்டது. வசமாதல்-பற்றிவிடாமை.

இதனானே முத்திநிலையின் ஆன்மாவினது அன்பு நிகழுமாறும், அது முதல்வனது அன்பை யின்றி யமையாமையுங் கூறப்பட்டன.

இனி, அவ்வாறு வசமாதற்கட் படும் ஆசங்கையை நீக்கு முகத்தானே சேறல் எனப்படும் ஆன்மாவினது கிரியை நிகழும் முறைமை யுணர்த்தி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்று
நசித்திலதே லொன்றுவ தில்லை—நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்று மீசன் கழல்

எனவரும்.

மேலை வெண்பாக்க ளிரண்டினுங் கூறியவாறே பூரண வறிவு விளங்கி ஆன்மா முதல்வன் வசமாய் ஒன்றுபட்டுக் கூடுங்காற் பண்டை ஏகதேச வறிவு கெட்டுக் கூடுமோ? கெடாது கூடுமோ? எனக் கடாயினார்க்குக் கெட்டுக் கூடுமெனின், குணங் கெடவே குணியுங் கெடுதலாற் கூடமாட் டாது. கெடாது கூடுமெனின், ஏகதேசவறிவு கெடாதவழி வியாபகப் பொருள் விளங்குதலின்மையாற் கூடுமாறில்லை. மற்றெங்ஙனங் கூடுமா றெனின், ஏகதேச வறிவைச் செய்யும் ஆணவங் கன்மம் மாயை என்னும்

* துகளறுபோதம், ௯௩. † திருக்குறள், ௧௧௩-ம் அதி. காதற் சிறப் புரைத்தல், எ.

மலங்கண்மாத்திரையே கெட்டொழிய ஆன்மாத் தண்ணீரைச் சேர்ந்த உப்புப் போல முதல்வன் திருவடியைத் தலைப்பட்டு முதல்வனுக்குச் சேடமாம்; முதல்வன் றிருவடி அவ்வான்மாவை விட்டுக் கவர்த்தலின்றி இயைந்து நிற்கு மாகலானென்க.

ஒன்றுது என்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது. நசித்தணைந்து என்பது காரண காரியப் பொருட்டாய்ப் பிறவினை கோடலிற் செயவெனெச்சத் திரிபாதலறிக. *"சிற்றறிவு முற்சிதையிற் சேர்வாரின் றுஞ் சிறிது—மற்றதனி னிற்கினருண் மன்னுதாம்" எனப் புடைநூலாசிரியர் வினயது மது.

தன்கண்ணதாகிய கடினகுணம் நீங்கி அப்பினைச் சேர்ந் தொன்றாகிய உப்பு, ஆன்மா மலம் நசித்து முதல்வனைச் சேர்ந்து ஒன்றுபடுதன்மாத்திரைக்கு உவமையாயிற்று.

யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றி நிற்கும் அஃது அதற்குச் சேடமெனப்படு மாகலின், அவனருளாலல்ல தொன்றையுஞ் செய்யாதுக் கப்பின்றி யியைந்துநிற்கு மீசன்கழலையே அறிந்து இச்சித் தநுபவித்தலாகிய முதல்வனது வழிபாட்டின் பொருட்டு உரிமையெய்திய ஆன்மா முதல்வனுக்குச் சேடமாகிய வாறுணர்க. †'அவையுடைமை யாளாநா மங்கு' என ஓதுதலின் ஏனைப் பசுபாசங்களும் முதல்வனுக்குச் சேடமேயா மாயினும் அவை பொதுவியல்பு பற்றிய சேடமாவதல்லது சிறப்பியல்புபற்றிய சேடமாகாமையின், இதனை வேறெடுத் தோதினார்.

இதனானே முத்திநிலையின் ஆன்மாவினது கிரியை நிகழுமாறும், அது முதல்வனது கிரியையை யின்றி யமையாமையுங் கூறப்பட்டன.

நித்தமாகிய மலத்திற்கு நாசமாமாறும், அது நசித்தவழி ஏகதேசமாய் விளங்கிய அறிவே பூரணமாய் விளங்கி வியாபகத்தைத் தலைப்படுமாறும் உவமையின்மேல்வைத்து இனிது விளக்கி மேலதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோன்—முன்வாண்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு
மலத்திரித்துச் செல்லும் வரத்து

எனவரும்.

ஆதித்தன் முன்பு முகிற்படலத்துண் மறைந்து தனது ஒளி ‡சங்கோசமாய்ச் சிறிதே விளங்கிப் பின்பு அம் முகிற்படலத்தை வாயுத் துரப்ப அதனுன் அது சத்தி மடங்கி விட்டுநீங்கியவழி அவ்வொளி தானே எங்கணும்

* வினவெண்பா, சு.　† இந்நூல், உ-ம் சூ. ச-ம் அதி. க.　‡ சங்கோசம் - சுருக்கம்.

*விகாசமுமாய் விளங்கும் முறைமைபோல ஆன்மாவும் முன்பு மலத்தின் மறைப்புண்டு தன்னறிவு ஏகதேசமாய்ச் சிறிதே விளங்கிப் பிரபஞ்ச விடயத்தை அறிந்து அதில் அழுந்தும். பின்பு முதல்வன் றிருவருள் அம்மலசத்தியைக் கெடுத் தடக்கியவழி அவ்வறிவே பூரணமாய் விளங்கிக் கப்பின்றி அம்முதல்வன் றிருவடியைத் தலைப்பட்டு அந்த ஞேயத்தில் அழுந்துமென்க.

ஒடுங்கி எனவும் எங்குமாம் எனவும் உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டி உரைத்துக் கொள்க.

இது விளங்குதன்மாத்திரைக்கு ஏகதேச வுவமை என்பார், உலகையுண்ணும் வரத்துச் செல்லும் என வேற்றுமையும் உடன் கூறினர்.

ஏகாரந் தேற்றம். முன் வாள் என்புழி வாள்-ஆகுபெயர். இரித்து என்பது செயவெனெச்சத்திரிபு. இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

மலம் நசித்தலாவது தனது மறைத்தற் சத்தி மடங்கிக் கீழ்ப்படுதன் மாத்திரையே பிறிதன்றென்பதூஉம் உவமையாற் பெறுதும்.

இரண்டாமதிகரண முடிந்தது.



பயனோத்தின் இரண்டாம்பாதமாகிய

## பதினோராஞ்சூத்திர முடிந்தது.



திருச்சிற்றம்பலம்.



* விகாசம்-விரிவு.

திருச்சிற்றம்பலம்.

# பன்னிரண்டாஞ்சூத்திரம்.

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

எ-து. சூ-ம. என்னின். அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமா றுணர்த்துத னுதலிற்று.

மேற் கூறிப்போந்தவாறே 'அயரா வன்பி னரன் கழ' லணைந்த முத்தர்க்குச் சீவன்முத்திநிலைக்கண் அவ்வறிவிச்சைசெயல்கள் ஒரோவழிப் புறத்துச் சேறலு முண்மையின் அவை செல்லுமிடம் இவை யென்பது உணர்த்து முகத்தானே வாக்குமனதீதமாய் அயராவன்பின் அணைந்து வழிபடுகின்ற முதல்வனை வாக்குமனக் கோசரமாம்படி தெளியக்கண்டு வழிபடும் முறைமையை உணர்த்துதல் பயனுதத்தின் மூன்றும்பாதமாகிய இப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்தென்க.

'அயரா வன்பி னரன் கழல்' சென்றார்க்குச் சீவன்முத்திநிலைக்கண் அவ்வறிவிச்சைசெயல்கள் மூன்றும் புறத்தே எவ்வாறு வியாபரிக்கு மென்னும் அவாய்நிலையை நிரப்புதலின் அவ்வவாய்நிலைபற்றிய வியைபானே அதிகரணவியையும், முத்திநிலையைத் தலைப்பட்ட மெய்ஞ்ஞானிகட்கு ஈண்டுச் செய்யக்கடவதொன் றில்லை யெனச் சமயிகள் கூறும் ஆசங்கையை விதிமுகத்தா னுரைத்து மறுத்தலின், அவ்வாசங்கைபற்றிய வியைபானே பாதவியையும், மேல் முத்திநிலையினியல்பு கூறி ஈண்டுச் சீவன்முத்தி நிலைக்கட்படும் விசேடங் கூறுதல் முறைமையாகலின், அம்முறைமைபற்றிய வியைபானே ஒத்தியையும் பெறப்பட்டன.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு:—அயரா வன்பி னரன்கழலணைந்த சீவன்முத்தன், செங்கமலமலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது சீபாதத்தை அணைதற்கு உடம்படாது அயர்த்தலைச்செய்விக்கும் அவ்வியல்பினை யுடைய மும்மல வழுக்கை ஞான நீராற் கழுவித், தன்னைப்போல் 'அயரா வன்பின் அரன்கழ லடைந்த' மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி, அவ்வாறு கழுவப்பட்டு மலமயக்கு நீங்க அன்பரொடு மரீஇ அன்பு மிக்குடைய அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் முதல்வனெனவே கண்டு வழிபட்டு வாழ்வான் என்றவாறு.

சீவன்முத்தன் என்றது ஏற்புழிக்கோடலாற் பெறுதும்.

நோன்றாள்-வினைத்தொகை. நோன்றல்-பொறுத்தல். *"எடுத்துச் சுமப்பானை" என்றார் புடைநூலாசிரியரும். கழீஇ என்பது குறிப்புருவகம். மாலற நேய மலிந்தவர் என்பது அம்மலங் கழீஇ யன்பரோடு மரீஇயினார் எனப் பொருடந்து சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

நேயமலிதல் கூறவே வழிபாடும் பெறப்படும்.

தான்-அசை.

அம்மலங்கழீஇ என்றதனாற் சீவன்முத்தர்க்குப் புறத்தே அறிவு வியாபரிக்கு மிடமும், அன்பரோடு மரீஇ என்றதனால் இச்சைவியாபரிக்குமிடமும், தொழும் என்றதனாற் செயல்வியாபரிக்கு மிடமும் பெறப்பட்டமையான் அவாய்நிலை நிரப்பியவாறு கண்டுகொள்க. இம் மூன்றும் பிரிப்பின்றி உடனிகழ்ச்சியாய் ஓரிடத் தொருங்கு நிகழ்வனவாகலின் விடய வேற்றுமை யின்மையு முணர்க. தொழும் என்பது செலும் என்பதுபோலப் படர்க்கைவினை முற்றாகலின், இஃது அணைந்தோரது தன்மை யென்பது பெற்றாம். அற்றாகலினன்றே இதனைச் சாதகவோத்துள் வையாது ஈண்டு வைத்தா ரென்பது.

செல்வப் பெருக்க முடையார்க்கு உணவாகிய ஆன்பால் உடம்பு நோயின்றி வளரச் செய்யும் மருந்துமாமாறு போல, இவ்வழிபாடு மலவாசனை சிறிதுந் தாக்காது சிவாநந்தம் மேன்மேல் வளரச்செய்யுஞ் சாதகமாதலு முண்மையான் அது பற்றி ஆசிரியர் விரித்துரைத்தலுஞ் செய்தாரென்க.

இதனுள், செம்மலர் நோன்றாள் சேர லொட்டா வம்மலங் கழீஇ என்பது ஓரதிகரணம்; அன்பரோடு மரீஇ என்பது ஓரதிகரணம்; மாலற நேய மலிந்தவர் வேடமு மாலயந் தானு மரனெனத் தொழுமே என்பது ஓரதிகரணம்; ஆக மூன்றதிகரணத்தது இச்சூத்திரமென் றுணர்க.

---

## முதலதிகரணம்.

அவற்றுள், சீவன்முத்தர்க்கு ஒருதலையான் முன்னர்ச் செய்யக்கடவது இது வென்பது உணர்த்து முகத்தானே அவரது அறிவு புறம்பே வியாபரித்தலு முண்மையின், அது வியாபரிக்குங்கால் எங்ஙனம் வியாபரிக்கு மென்னும் அவாய்நிலையை நிரப்புதற் கெழுந்தது முதலதிகரணம்:—

### ஈண்டு ஆணவ மாயை கான்மிய மென்னு மலங்களைக் களைக வென்றது

எனவரும்.

கன்மம் அதன் மூலத்தை நோக்கிக் கான்மியம் எனவும் பெயர் பெறும். காமியம் எனப் பாடமோதி, †"இனிச்செய்கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்" என வழிநூலாசிரியர் ஓதுதலின், ஈண்டு மலமாயைகளோடு வைத்துக்

* திருவருட்பயன், உயிரவைவிளக்கம், ரு. † சிவஞானசித்தி, அ-ம் சூ. கO.

களைய நின்றது ஆகாமியவினை மாத்திரையே யாகலான் அதுவே ஈண்டு எடுத்துக்கொள்ளப்பட்ட தாகலின் காமியம் என்பது தலைக்குறை என் றுரைப்பாரு முளர்.

அற்றேல், ஏகனாகி யிறைபணி நின்று உண்மை ஞானத்தைத் தலைப்பட் டார்க்கு மலமாயைதன்னொடு வல்வினையு மின்றாய்க் கழிந்தொழிதலின், அவற்றான் மீளச் செய்யக்கடவதொன் றின்மையான் ஈண்டு அவற்றைக் களைதல் எற்றுக் கென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதிக்குமாறு சூத்திரத்தில் உடம்பொடு புணர்த்தோதியதனைத் தெரித்துணர்த்தி வலி யுறுத்துதற் கெழுந்த ஏது:—

அவைதாம் ஞானத்தை யுணர்த்தாது அஞ்ஞானத்தை யுணர்த்து மாகலான்

எனவரும்.

அம் மூன்று மலங்களும் உண்மைஞானத்தைத் தலைப்பட்டார் மாட்டும் யாதானுமொரு நெறியான் நுழைந்து அம் மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய அப்பண்டை விபரீத வுணர்வை மேற்படுத்துவனவா மாகலான் அஃது அவர்க் காகாமையின், ஈண்டு ஆணவ மாயை கான்மிய மென்னு மலங்களைக் களைக என மேற்கொண்டது என்றவாறு.

உணர்த்துதல்-உணர்விற்கேதுவாதல். *"அந்நியமா னவையுணர்த்தி யநநியமாய் நிறைந்த வறிவறியா மையினானும்" என்புழியு மது. ஈண்டு அஞ்ஞானம் என்றது விபரீத வுணர்வை.

இனி, அவை அஞ்ஞானத்திற் கேதுவாய் வந்து நுழையுமாறும், அஃது அவர்க் காகாமையுந் தெரித்துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு

எனவரும்.

புண்ணிய பாவங்களைப் பயக்கும் விருப்பு வெறுப்புக்களாய்ப் பொருந்து கின்ற இக்கன்ம மலமும், மண் முதல் மாயாதத்துவ மீறாய்க் காணப்படு கின்ற இம்மாயா மலமும், சுட்டி யறிவதாகிய விபரீத வுணர்வைப் பயக்கும் இவ்வாணவ மலமும் என்னும் மும்மலங்களும் மெய்ஞ்ஞானியாகிய உனக் காகா வாகலான் இவற்றை விடுத்தொழிக என்க.

எல்லா மலங்களும் பற்றறத்துடைத்து மற் றுண்மைஞானத்தைத் தலைப்பட்டார்க்கு உடம்புள்ளளவும் பிராரத்தவினை அவ்வுடம்பை யொட்டி நிற்றலான் அஃது அவர்க்கு ஒரோவழி வாதனைவயத்தால் இங்குளிவாங்குங்

* சிவப்பிரகாசம், பொது. உச.

கலம்போல வந்து தாக்குங்காற் *"பிற்செயா தநுபவிப்பதின்றாகலின், அது சார்பாக விருப்பு வெறுப்புக்க ளுளவாம்; அவை உளவாகவே †"பரமே பார்த்திருப்பார்"க்கு நில முதன் மாயாதத்துவ மீறாகிய ஏக தேசப் பொருள் காட்சிப்படும். அவை காட்சிப்படவே, அவற்றைச் சுட்டி யறிவதாகிய விபரீத வுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாம். இவ்வாறு இம் மூன்றும் அறிவற்றம் பார்த்து இம் முறையானே வந்து தலைப்படும் என்பார், கன்மம் மாயை ஆணவம் என்று இம்முறையே வைத்து, அவை காட்சிப்புலனுமாறு காட்டுவார் அவ்வக் காரிய நிகழ்ச்சிகளை எடுத்தோதிச் சுட்டிக் கூறினார்.

ஆணவ கன்மங்களைச் சுட்டிக் கூறுதலின், மாயையினும் அவ்வாறு சுட்டு வருவித்துரைத்துக் கொள்க. புண்ணியபாவம்-ஆகுபெயர். மாயை-முன்னையது தத்துவம். ஈரிடத்தும் ஆக்கச் சொல் வருவித்துரைக்க. காண் மாயை-செயப்படு பொருளொடு முடிந்த வினைத்தொகை. காட்டுதல்-உபசாரம்.

இவை சிவபோகப் பெருவாழ்வை இழப்பிப்பன வாகலான் மெய்ஞ் ஞானிக் காகா என்றார். மேன்மேன் முறுகுவனவாகிய இவற்றைத் தோன் றும் பொழுதே துடையாக்கால், ‡"களைகுநர்—கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்னும் முறைமைத்தாய் முடியுமென்பது பற்றி விடு என ஈண் டும் வலியுறுத்தப்பட்டது.

விடுதல்-அவை அம்முறையான் நிகழ்ந்தவழி இவ்வஞ்ஞானம் ஏகதேசக் காட்சியா னயதெனவும், இவ் வேகதேசக்காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தா னயதெனவும், அத்தோற்றமும் பிராரத்தவினை நுகர்ச்சிக்கட் சென்ற தற்போதத்தா னயதெனவும் அறிந்து, அங்ஙனஞ் செல்வதாகிய தற்போதம் முனையாதவாறு பரிகரித்துச் சிவஞானத்து ளடங்கிச் §"சிவா நுபவஞ் சுவாநுபூதிகமாம்" படி ஞானநிலையில் உறைத்து நிற்றல். ¶"ஓங் குணர்வி னுள்ளடங்கி யுள்ளத்து ளின்பொடுங்கத்—தூங்குவர் மற் றேதுண்டு சொல்" என்றது மது.

அஃதங்ஙனமாக; ஏதுவின்கண் மும்மலங்களும் அஞ்ஞானத்தை யுணர்த் துமெனக் கூறி, ஈண்டு ஆணவமாத்திரையே அஞ்ஞானங் காட்டு மென்றல் மலைவாமா லெனின்,—அற்றன்று; அஞ்ஞானங் காட்டுதல் மாயை கன்மங் கட்கு ஆணவமலச் சார்வானாகிய செயற்கை, ஆணவமலத்திற் கஃது இயற்கை என்னும் பொதுச்சிறப்பாமா றுணர்த்துதற்கு ஆண்டுப் பொது வகையாற் கூறிப்போந்ததனை ஈண்டுச் சிறந்தெடுத் தோதினா ராக லான் என்பது.

முதலதிகரண முடிந்தது.

---

* சிவஞானசித்தி, உ-ம் சூ. கக. † மேற்படி, கக-ம் சூ. உ. ‡ திருக்குறள், அஅ-ம் அதி. பகைத்திறந்தெரிதல். கூ. § சிவஞானசித்தி, அ-ம்சூ. ௬௪, ¶ திரு வருட்பயன், அணைந்தோர்தன்மை, க.

## இரண்டாமதிகரணம்.

முதலதிகரணத்திற் கூறியவாறு மும்மலங்களையுங் களைந்தார்க்கு அதனை நிலைபெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக்கடவது இதுவென்ப துணர்த்து முகத்தானே அவரதிர்சை வியாபரிக்குங்கால் யாங்ஙனம் வியா பரிக்கு மென்னும் அவாய்நிலையை நிரப்புதற் கெழுந்தது இரண்டா மதிகரணம்:—

இனிச் சிவபத்தர்களோ டிணங்குக வென்றது

எனவரும்.

சிவபத்தராவார் "பத்தியினுன் மறவா தேத்தி" முதல்வனது சீபா தத்தை அணைந்தோர். இணங்குதல்-நட்புச்செய்தல். சிவபத்தர்களோ டிணங் குக எனவே, ஏனையோர்களோ டிணங்கற்க என்பதூஉம் பெறப்பட்டது.

அற்றேல், உறவும் பகையு மொழித்து * "மகவெனப் பல்லுயி ரனைத் தையும் ஒக்கப் பார்க்குஞ் செல்வக் கடவுட்டொண்டர்"க்கு இவ்வாறு சிலர் மாட்டு விருப்புஞ் சிலர்மாட்டு வெறுப்புஞ் செய்துகொண்டு பகுத்துநிற் றல் சால்பின்றா லென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவ ராகலான்

எனவரும்.

அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துமாறு:—†"தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி—முனிவி லாததோர் பொருளது கருதலு—மாறு கோடி மாயா சத்திகள்—வேறு வேறுதம் மாயைக டொடங்கின—வாத்த மானு ரயலவர் கூடி—நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்—சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்—பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்—விரத மேபர மாகவே தியருஞ்—சரத மாகவே சாத்திரங் காட்டினர்—சமய வாதிக டத்த மதங்களே—யமைவ தாக வரற்றி மலைந்தனர்" என்றற் றொடக்கத்தா னறிக. மும்மலங்கள் அஞ்ஞானத்தை யுணர்த்துதல் இலக்கு வாய்த்துழி ஏதுவாதன் மாத்திரையே யாம். இவ்வாறன்றி, வாயாதவழி யும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை உபாயங்களானுந் தம்மோ டொப்ப விபரீத வுணர்விற் செலுத்தியே விடுவ ராகலான், ‡சிவபத்தி யில்லா தார் அம்மலங்களினுங் கொடியராகலின், அவரை அவற்றினும் அஞ்சி விட் டொழிதலே அறிவுடைமைக்குச் சால்பென்பதாம்.

'மகவெனப் பல்லுயி ரனைத்தையும் ஒக்கப் பார்த்'தலாவது அவைபடுந் துன்பங் கண்டுழி அதற்குப் பரிதன்மாத்திரையேயாம். §"நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்றதும் இக்கருத்தே நோக்கி யென்க.

---

* திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, எ. † திருவாசகம், போற்றித்திருவக வல், அடி, சஉ முதல் ருகூ வரை. ‡ "உரைத ளர்ந்துட லார்நடுங் காமுனம்—நரைவி டையுடை யானிட நல்லமே—பரவு மின்பணி மின்பணி வாரோடே—விரவு மின்விர வாரை விடுமினே" என்னுந் தேவாரமும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது; திரு நாவுக்கரசுநாயனார், திருநல்லம், ரு. § திருமந்திரம், திருமூலர் வரலாறு, கூ.

அற்றேல், சிவபத்தி இல்லாதாரோ டிணங்காமைமாத்திரையே அமையும்; சிவபத்தர்களோ டிணங்குதல் எற்றுக்கென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னுலுணரு
மெய்த்தவரை மேவா வினை

எனவரும்.

மும்மலங்களும் நீங்கி முதல்வன் அத்துவிதமாய் நின்று காட்டியுங் கண்டும் உபகரித்துவரும் பெருங்கருணையை மறவாது கடைப்பிடிக்கும் ஞானக்கண்ணுடைய மெய்த்தவராயினுர் அதனை மறக்குமாறு செய்து ஞானக்கண்ணை இழப்பித்துத் தீநெறிக்கட் கொண்டுசென்று மலங்களாணுய பிறவிக் குழியில் வீழ்வித்துத் துயருறுத்தும் அன்பில்லார் கூற்றிலே தொன்றுதொட்டுப் பயின்று வந்த சேர்ச்சி அறும்படி, அம்மறவியை மாற்றி ஞானக்கண்ணை விளக்கிப் பிறவிக் குழியினின்றும் எடுத்து நன்னெறிக்கட் செலுத்தி வாழ்விக்குஞ் சிவபத்தர் கூற்றிலே பேரன்புடையராய் அவ்வன்பு சார்பாக விளங்குவதாகிய சிவஞானக்கண்ணுல் அந்நிலை கடைப்பிடித்து உணரப்பெற்றவரை எல்லா அநர்த்தங்கட்கும் மூலமாய் வரும் பிராரத்தவினை வாதியா என்க.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பிலார் என மேற்சொல்லிய பொருளையே அநுவதித்து விரித்தோதினுர், அதன் எதிர்மறைமுகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமை உணர்ந்துகோடற் பயனேக்கி.

மலங்களின் வீழ்க்கும் என்பது குறிப்புருவகம். மலம்-ஆகுபெயர். எல்லாவற்றினும் அன்பு சிறந்தமையின், அது சிறப்பு எனப்பட்டது. சேர்வை-சேர்ச்சி. பத்தரினத்துப் பித்தாய் என மாறுக. பித்துப் போறலிற் பித்து என்றுர். அஃது அதனை யுடையார்மே னின்றது. ஏனைத் தவங்களெல்லாம் மெய்யாதலின்றி மல நடையாய்ப் போதலிற் பரனுணர்வினு லுணருந் தவமொன்றே மெய்த்தவம் எனப்பட்டது. வினை-பால்பகாஅஃறிணைப்பெயர்.

சிவபத்தர்மாட் டன்புசெய்து அவரது மனஞ் சொற் செய்கைவழி நிற்பார்க்கு உலகியலுணர்வு மாறிச் சிவாநுபூதியுணர்வே மேம்பட்டு நிகழும்; அஃது அங்ஙனம் நிகழவே, உடம்புள்ளளவும் நிற்பனவாய பிராரத்தவினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின், அவரை வாதிக்கமாட்டா; அவை வாதியா தொழியவே, சிறப்பிலார்தந்திறத்துச் சேர்வை பற்றறக் கழியும் என்பார், அறப் பித்துப் பத்த ரினத்தாய்ப் பரனுணர்வினு லுணரு மெய்த்தவரை மேவா வினை என்றுர். எனவே, வீட்டுணர்வை நிலைபெறுத்துஞ் சிவபத்தர்களோ டிணங்கினு லன்றித் தொன்றுதொட்டுப் பயின்று

வந்த சிறப்பிலார திணைக்கம் அருதாகலான் அஃதொருதலையான் வேண்டுமென வலியுறுத்தவா றாயிற்று.

இரண்டாமதிகரணமுடிந்தது.

---

## மூன்றுமதிகரணம்.

இரண்டாமதிகரணத்திற் கூறியவாறு சிவஞானிகளோ டிணங்கினார்க்கு அதன் பின்னர்ச் செய்யக்கடவது இதுவென்ப துணர்த்து முகத்தானே அவரது கிரியை வியாபரிக்குங்கால் யாங்ஙனம் வியாபரிக்கு மென்னும் அவாய்நிலையை நிரப்புதற் கெழுந்தது மூன்றுமதிகரணம்:—

**இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக வென்றது**

எனவரும்.

காண்டல்-ஐயுறவின்றித் தெளிதல்.

திருவேடத்தி னியல்பு, *"தூய வெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமு—நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்—பாய்வது போலன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொன்—மேயசெவ் வாயுமுடையார் புகுந்தனர் வீதியுள்ளே," †"சிந்தை யிடையறு வன்புந் திருமேனி தன்னி லசைவுங்—கந்தை மிகையாங் கருத்துங் கையுழ வாரப் படையும்—வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற்பொலிதிரு நீறு--மந்த மிலாத்திரு வேடத் தரசு மெதிர்வந் தணைய," †"கண்ட கவுணியக் கன்றுங் கருத்திற் பரவுமெய்க் காதற்—றொண்டர் திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே" என்பவற்றானறிக. இத் திருவேடங் காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறுபோல, மெய்யுணர் வுடையாரைக் காட்சிமாத்திரையானே வசீகரித்து இன்பஞ் செய்தல் பற்றித் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் என்று உபசரித்தார். அது, ‡"சேலுங் கயலுந் திளைக்குங்கண் ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்—போலும் பொடியணி மார்பிலங் குமென்று புண்ணியர் போற்றிசைப்ப" என்பதனானும் அறிக.

அற்றேல், மெய்யுணர் வுடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் பரமேசுரனெனக் காண்டலே பொருத்த முடைமையானும், நின்றதிருத்தாண்டக முதலியவற்றுள் அவ்வா றோதுதலானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி உயிர்ப்பொரு ளுயிரில்பொருள்களை யெல்லாந் தனித்தனி எடுத்தோதி வழிபாடு கூறுதலானும், ஈண்டு இவ்விடங்களின் மாத்திரையே பரமேசுரனெனக் கண்டு வழிபடுக எனப் பிரித்துக் கூறியது பொருந்தாதாலென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

---

* பெரியபுராணம், திருநாவுக்கரசுநாயனார்புராணம், ௧௭௦. † மேற்படி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், ௨௭௦, ௨௭௧. ‡ சேந்தனார் திருப்பல்லாண்டு, ௮.

அவன் மற் றிவ்விடங்களிற் பிரகாசமாய்நின்றே அல் லாதவிடத் தப்பிரகாசமாய் நிற்றலான்

எனவரும்.

அம் முதல்வன் எங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரினெய்போல விளங்கி நிலைபெற்று அல்லுழிப் பாலினெய் போல வெளிப்படாது நிற்றலான், இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவா லயத்தையும் பரமேசுரனேனக் கண்டு வழிபடுக என மேற்கொண்டது என்றவாறு.

மற்று அப்பிரகாசமாய் நிற்றல் என இயையும்.

அற்றேல், அஃது யாங்ஙனமென்னு மாசங்கையை நீக்கிப் பிரகாச மாய்நிற்குமாறும் அல்லாதாரிடத்து அப்பிரகாசமாய் நிற்குமாறுந் தெரித் துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றாம் பதி

எனவரும்.

வாக்கு மனாதீதமாய் நின்ற பரம்பொருள் உலகத்தார் தன்னை அறியும் படி கருணைசெய்து தனது வேடமாகிய திருநீறு கண்டிகை முதலிய தனது வடிவத்தைத் தன்னன்பர்க்குக் கொடுத்து அவர்களிடமாக நின்று அங் கங்கே அறிவு விளக்குதலானும், அவர் தம்மைச் சோகம்பாவனையான் உண ரச் செய்தலானும், அவரை ஒரு குறியின்க ணிறுத்தித் தனது வியாபகத் துக் குள்ளாக இருத்துதலானும், குறியிறந்து நின்று தன்னை உள்ளவா றுண ரும் அன்பாளராகிய அவர்மாட்டுத் தயிரின்கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்றும்; பாசக்கட்டுடையார்க்கு இவ்வியல் பில்லாமையான் அவர் மாட்டுப் பாலின்கண்ணதாகிய நெய்போல விளங்காது நிற்கும் என்க.

இன்மை-விளங்காமைப் பொருட்டு. பாசத்தார்க்கு என்பது உருபு மயக்கம். கொடுத்துச் செய்து இருத்தலால் நிகழும் என இயையும். செய்து என்பது சொல்லெச்சம். இருத்தல்-அல்லீற்றுப் பிறவினைத் தொழிற்பெயர். தன்னுணரும் நேசத்தார் எனப் பெயரடையானும் ஒரேதுக் கூறப்பட்டது. தன்னை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

அற்றேல், இவ்வியல்புக ளுடைய சங்கம வேடத்தினிடத்து எஞ்ஞான் றும் முதல்வன் பிரகாசமாய் நிற்பனென்பது பெறப்படும். இவ்வியல்புக ளில்லாத *தாவரத்தினிடத்து மந்திர சாந்நித்திய மில்வழிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படாதா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்து தற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

---

* தாவரம் என்றது சிவலிங்கத்தை.

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவா யன்றானன் றானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு

எனவரும்.

*விறகிற்றீ, கடைந்துழி வேறாய் விளங்கும்; அல்லுழி விளங்குவதன்று. அதுபோல, உயிர்கட்குப் புத்தி முத்தி அளித்தற் பொருட்டுக் காணப்பட்ட தாவரத்தின் அருவுருவின்கட் கலப்பினால் அதுவே தானாய் அதுவன்றி வேறு பொருளுமா மியல்புடைய முதல்வன், அதுவேதானாய்க் காணார்க்குத் தம்மால் அறியப்பட்டதொரு மந்திர சாந்நித்திய மில்வழி ஆண்டு விளங்காது நின்று அம்மந்திரசாந்நித்தியத்தால் விளங்கித் தோன்றும் பொருளாம். அவ்வாறன்றி அதுவே தானாய்க் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு எப்போதும் அப்படியே விளங்கித் தோன்றான் கொல்லோ? என்க.

காணாதார்க்கு என்பது சொல்லெச்சம். கடைந்துழி அல்லுழி என்பன ஆற்றலாற் பெற்றாம். உவமைக் கோதிய வினையைப் பொருட்கண் எதிர் நிரனிறையாக வைத்துக் கண்டுகொள்க. ஈண்டு உண்மை-விளங்குதன் மேற்று. மந்திரத்தா னுளதாம் என இயையும். ஆல்-அசை. ஆனான் என்பது பெயர். ஓகாரம்-எதிர் மறை. தானதுவா யன்றானான் என்னும் பெயரடையான் அவரவர் பாவனைக் கேற்ப விளங்குதற்கு ஏதுக் கூறப்பட்டது. தானதுவா யன்றாதல் சங்கம வேடத்தினுமொக்கு மேனுந் தாவரவுருவின்கணிகழும் ஆசங்கையை இதனா னன்றி நீக்க லாகாமையின், ஈண்டுக் கூறினார். இஃது ஈரிடத்து மொக்குமென்பது வருகின்ற அதிகரணத்திற் பெறப்படும்.

மூன்றாமதிகரண முடிந்தது.

---

## நான்காமதிகரணம்.

மேலை அதிகரணம் மூன்றானுஞ் சீவன்முத்தர்க் குரிய ஆசார முணர்த்தியவழி, அற்றேல், இவை சீவன்முத்தர்க்குத் தாமே யுளவாவனவாகிய இலக்கண மாகலின், அநுவாத முகத்தா னேதற்பாலன வாகிய இவற்றைக், களைக, இணங்குக, வழிபடுக என்று இங்ஙனம் விதிமுகத்தா னோதிய தென்னை யெனின் அறுக் கென்னும் ஆசங்கையை நீக்குதற்கு அவற்ற தொழிபா யெழுந்தது நாலாமதிகரணம்:—

இனி இவ்விடங்களின் வழிபடுக வென்றது

எனவரும்.

---

* இதனை "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்—மறைய நின்றுளன் மாமணிச் சோதியா—னுறவு கோனட் டுணர்வு கயிற்றினான்—முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே" என்னுந் தேவாரத்தானு முணர்க.

இவ்விடங்களாவன:—பத்தரது திருவேடமுஞ் சிவாலயமும் என மேற் கூறிப் போந்தன. வழிபடுக என்னும் இசையெச்சத்தால் அநுவாதமாய்க் கூற வமையுமென்பாரை மறுத்து விதித்தலை வலியுறுத்தவாறு. வழிபடுக என்பது உபலக்கணமாகலின், கண்டல் இணங்குதல்கட்கும் இஃதொக்கும்.

அற்றேல், எய்தியதனை விதித்தல் பயனுடைத்தன்றா லென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது:—

நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான்

எனவரும்.

நரம்பு நாடி இறைச்சி என்பு முதலிய தாதுக்களின்கண் வேற்றுமையின்றி அதுவது தானாய் வருகின்ற உயிர், *"நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ' என்று இவ்வாறு †'பைமறியாப்' பார்ப்பார்க்கு நரம்பு நாடி முதலியவை யாகாது அவற்றின் வேறுமாயினாற் போல, உயிர்க் குயிராகிய அம் முதல்வனுஞ் சடசித்துக்க ளெல்லாவற்றினும் அதுவதுதானாயும் அல்லனாயும் நிற்ப னாகலான், அதுவதுதானாய் நிற்றலைக் காணுங் காட்சி பற்றி எய்திய வழிபாடு அல்லனாய் நிற்றலைக் காணுங்கா லெய்தாமையின், அவ்வழியும் எய்துவிக்க வேண்டுதலான் இனி இவ்விடங்களின் வழிபடுக என விதித்தோதிய தென்றவாறு.

எனவே, எய்தாததனை எய்துவிப்பதூஉம், எய்திய திகந்துபடாமைக் காப்பதூஉம், எய்தியதனை ஒருமருங்கு மறுப்பதூஉ மாகிய விதி மூன்றனுள் இஃது எய்திய திகந்துபடாமைக் காத்த தென்றவாறாயிற்று. இது விளங்குதற் பொருட்டன்றே ஆசிரியர் இவ்விடங்களின் வழிபடுக என ஈண்டு இடமாகவைத் தோதியதூஉ மென்க. அவை யாகாவா றப்புருடனுமாம் எனவே, அவ்விடத் தெய்துவித்தல் ஒருதலையான் வேண்டு மென்பது தாற்பரியமாயிற்று. சூத்திரத்தில் தொழுமே என்னும் ஏகாரமும் இப்பொருள் குறித்து நின்ற தேற்றம். வாறு - உவமவுருபு. முதலானவற்றை என்பது உருபு மயக்கம்.

அற்றேல், முதல்வனுக்கு இவ்வியல்பு எல்லாப் பொருட்கண்ணு முண்மையின், யாங்கணும்வழிபாடு விதித்தலே பொருத்த முடைத்தென் னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு

எனவரும்.

* இந்நூல், கூம் சூ. க-ம் அதி. க, † நாலடியார், தூய்தன்மை, உ.

முதல்வன் சடசித்துக்கண் மாட்டு நிற்கும் நிலைமை அறியப் பெற்றூர்க்குக் கண் அருக்கன் போல அது இது எனப் *பக்கிசைத் தோதப்படுவதாய பேத நிலைமையனு மல்லனுய், உடல் உயிர்போல அதுவே என்றோதப்படுவதாய அபேத நிலைமையனு மல்லனுய்க், குண குணி போல அதுவாகிய இது என்று பக்கிசையாமல் ஓதப்படுவதாய பேதாபேத நிலைமையனு மல்லனுய் அம்மூன்றற்கும் பொதுமையான் அறிவொளிபோ லத்துவிதமாய் நிற்கு மாற்றுற் சடசித்துக்கண் முழுவதும் அத்தேவனது வடிவேயா மாயினும், அவற்றுள், அன்பு விளையுமிடத்தில் வழிபடுவாயாக; அவ்வத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடையோய்! என்க.

அதுவிது என்பது முன்னையது உம்மைத் தொகை. பின்னையது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அல்லான் என்பதனை மேலுங் கூட்டி என்றது என்பதனை அது என்பதனேடுங் கூட்டி உரைக்க. அல்லான் என்பது வினையெச்சக் குறிப்புமுற்று. என்றதை என்பது "ஐயீற்றுடைக் குற்றுகரம்." உம்மை இறந்தது தழீஇயிற்று. போதுவது என்புழி அது-பகுதிப் பொருள்விகுதி. ஆதல்-ஆயவாற்று னென்க. தைவம் என்பது தேவனதுடைமை என்னும் பொருட்டாய வடமொழிப் பெயர்ப் பகுபதம். ஆயினும் என்பது சொல்லெச்சம். அத்துவிதி-அண்மைவிளி. அன்பு என்றது ஆகு பெயர். ஏழாவது விரித்துரைக்க.

†"திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி" யினன்றி †"எங்கு—முருக் காணவொண்ணுத பான் முலைப்பால் விம்மி யொழுகுவதுபோல் வெளிப்பட் டருளுவ" தாகி அடிப்பட்டு வரும் அன்பு விளையாமையின், ஆண்டுச் செய்யும் வழிபாடே அத்துவிதஞானத்தை நிலைபெறுத்துதற் பயத்த தென்பார், அத்துவித மாத லகண்டமுந் தைவமே என்று அநுவதித்து, அத்துவிதி யன்பிற் றொழு என்றூர். அத்துவிதி என்பது பயனுணர நின்ற குறிப்புப் பெயர். இதனனே விதிக்குப் பயன் கூறியதூஉமாயிற்று. இனி, அது இது என்பன அருவுருவாகிய திருமேனி எனக்கொண்டு அதற்கியைய உரைப்பாரு முளர். அவர் அன்பின் என்றதனை ஏதுப் பொருட்கண் வரும் ஐந்தனுருபேற்ற இயற்பெயராகவைத்து உரைப்ப.

அற்றேல், இவ் வத்துவித ஞானம் அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்றுகண் டொருவுதலான் உளதாம் பயனுகலின், அதன்பொருட்டு வழிபாடு வேறு விதித்தல் மிகையாமா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினை தீரி னன்றி விளையா—வினை தீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு

எனவரும்.

---

* பக்கிசைத்தல்-பிரிந்திசைத்தல். † சிவஞானசித்தி, கஉ-ம் சூ. ச.

உடம்பின்கண்ணதாகிய பிராரத்த வாசனை உயிர்க்குத் தாக்குவதா யுள்ளவளவும் அதனானே வரும் விருப்பு வெறுப்புக்களும், அவை பற்றிக் காட்சிப்படும் மண் முதன் மாயைகளும், அவை பற்றி நிகழும் விபரீத வுணர்வுமாகிய அசத்துக்கள் ஒருவியவழியும் வந்துகூடி மேற்படுவன வாக லான், இவற்றிற் கெல்லாம் மூலமாகிய பிராரத்தவினைவாதனை பற்றறக் கழிந்தா லன்றி அத்துவித ஞானம் மேம்பட்டு நிகழாதாகலின், அது பற்றறக் கழிதற்பொருட்டு அம்மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடவே அவ்வினைத் தீர்வு நிகழ்ந்து அவ்வுணர்வு மேம்படும். ஆகலான் அன்பானே அவரை வழிபடுவாயாக என்க.

அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்தென்று கண்டவழி உளதாய் நிற்கும் ஞானசொரூபம் நிலைபெறுதல் அவ்வசத்தினது விளைவுக்கு வேராய வினைத்தீர்வின்கண்ண தாகலான், ஆண்டுளதாய் நின்ற மெய்யுணர்வை அவ்வினைவேரறுத்து நிலைபெறுத்துதற்பொருட்டு அங்ஙனம் அதனை நிலை பெறுத்தினார்மாட்டுச் செய்யும் வழிபாடு ஒருதலையான் வேண்டப்படும் என்றவாறாயிற்று.

அற்றேல், அவ்வாதனை நீங்கி மெய்யுணர்வு நிலைபெறுதலும் ஸ்ரீபஞ்சாக் கரத்தை விதிப்படி யுச்சரிக்கவே உளதா மென்பது அஞ்செழுத் ததிகரணத் தில் ஓதியவாற்றானும், *“பந்தமா னவைய றுத்துப் பௌதிக முழலு மெல் லைச்—சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரு—மந்தமா திகளில் லாத வஞ்செழுத் தருளி னாலே—வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே” எனப் புடைநூலாசிரியர் கூறியவாற்றானும் பெறப் படுதலின், அதற்கு அதுவே அமையுமா லெனின்,—அஃதொக்கும்; அவ் வுச்சரிப்பும் வழிபடுதலை யின்றி யமையா தென்பது விதிப்படி உச்சரிக்க என்ற துணையா னொழியா தென்பது, †‘அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை—யஞ்செழுத்தா லர்ச்சித்து’ என ஆசிரியர்தாமே அகத்து வழி பாடு கூறியவாற்றாற் பெறப்படுதலின், வழிபாடும் அதற்கு ஒருதலையான் வேண்டப்படும் என விடுக்க.

அற்றேல், அஞ்செழுத் ததிகரணத்தையும் இதனைச் சாரவைத்து ஈண் டோதுதலே பொருத்த முடைத்தெனின்,—அஃதொக்கும்; சிவப்பிரகாசந் திருவருட்பயன் முதலியவற்றினும் அஞ்செழுத்தருணிலையை இன்புறுநிலைக் குப் பின்னாக அணைந்தோர்தன்மையைச் சாரவைத்துக் கூறியவாற்றானும் அதுவே பொருத்த முடைத்தாயினும், அஞ்செழுத் தோதும் முறைமை சொற்பல்காது விதிப்படி என மாட்டெறிந்துணர்த்தற்பொருட்டு ஆண்டே வைத்தோதிய தன்றிப் பிறிதில்லை யென்றொழிக.

இது சொற்பொருட்பின்வருநிலை. விளையாது என்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது; “உண்ணுகழியும்” என்புழிப் போல. பின்வந்த ஞானம் ஆகுபெயர். ஆனதனு லென்பது ஆனத்தால் என மரீஇயிற்று; ‡“பெற்றத்தாற் பெற்ற பயன்” என்புழிப் போல.

* சிவப்பிரகாசம், உண்மை, சo. † இந்நூல், கூ-ம் சூ. ங-ம் அதி. க. ‡ திருக் குறள், ருங-ம் அதி. சுற்றந்தழால், ச.

அற்றேல், பயன்பற்றி விதிக்கப்படும் வழிபாடு, வேள்வி முதலியன போலப் பயன் வேண்டாமையா னாக, பின்னர்ச் செய்து பெறுதுமென்றாக, ஒரோவழி ஒழியவும்படுங்கொல்லோ என்னும் ஆசங்கையை நீக்கிச், செய்யா வழிப்படுங் குற்றமும், செய்தல் கடமையாமாறும் உணர்த்தி அதனை வலி யுறுத்துதற் கெடுத்துக் காட்டும் உதாரணம்:—

தன்னை யறிவித்துத் தான்றானச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னச்செய்துந் தைவமென் றுந் தைவமே
மானே தொழுகை வலி

எனவரும்.

தன்னுண்மை யறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற் றானும் அதனைத் தெரித்துணர்த்தி எத்தனையு மெளிய அவ்வுயிரை எத்த னையுமரிய தானும் வண்ணஞ் செய்தளித்த பெரியதோ ருதவியை அதன் பின்னர் மறக்குமாயின், அஃதிதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம் போலத் தீர்திறனுடையதொரு குற்றமன் றாகலானும், முதல்வன் அங்ஙனந் தான்றானேயாகச் செய்தாலும் இதுகாறுந் தனக்குச் சுதந்திரமின்றி முதல் வனது உபகாரத்தை யின்றியமையாதாய் அடிமையாகிய உயிர் எக்காலத் தும் அவ்வா றடிமையேயா மாகலானுந் தான்றானச் செய்தளித்த அப்பெரி யோனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலியாவ தென்க.

தமதுமுதல்வனே குருவாகலின், தான்றானச் செய்தானை என்றும், முன் னைமறந்த குற்றம் அறியாதுநிகழ்ந்த தாகலிற் கழுவப்படும், இஃது அது போற் கழுவப்படுவதன்றென்பார், **பின்னைமறத்தல் பிழையலது** என்றுங் கூறினர். **பின்னை மறத்தல்** என்பதனால் முன்னைமறத்தல் பெறப்பட்டது. *"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்னுங் கருத்து நோக்கிக் கூறியதூஉமாம். **அலதும்** எனப் பாடமோதி இது பிழையாத லன்றியும் என்றுரைப்பாரு முளர்.

ஏகாரம் முன்னையது அசைநிலை; பின்னையன தேற்றம். செய்தாலென் பது செய்து எனத் திரிந்தது. உம்மை சிறப்பின்கண் வந்தது.

தான்றானச் செய்தல்-எதனை யெதனைப் பற்றினும் அதுவதுவாமுயிர் தன்னை அறிந்தவழி எண்குணங்களா னிறைந்த தன் வண்ணமாகச் செய்தல். அங்ஙனஞ் செய்தவழியும் †"உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்" தென்பார், தைவ மேன்றுந் தைவமே என்றார். தைவம் என்னுஞ் சொல்லியல்பு ‡மேலேயுரைத்தாம்.

---

* திருக்குறள், கக-ம் அதி. செய்ந்நன்றியறிதல், க0. † சிவஞானசித்தி, கக-ம் சூ. க0. ‡ பக்கம், சாஉகூ.

மானை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது; * மான் என்பது வடசொற்றிரிபு. சுட்டு வருவிக்க. வலிதருவதனை வலி என்று உபசரித்தார்.

இவ்வுதாரணங்கள் மூன்றானும் வழிபாட்டிற்கு இடத்துநிகழ் பொருண் மாத்திரையே யன்றி இடவிசேடமும் பெறல்வேண்டுமென அதனை வலி யுறுத்து முகத்தான் முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர்திருவேடத் தையுஞ், சிவதேசிகனையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

இங்ஙனஞ் சிவாகமத் துள்ள ஞானபாதப் பொருளெல்லாவற்றையும் பொது உண்மை என்று இருவகைப் படுத்துப், பிராமணவியல் இலக்கண வியல் சாதனவியல் பயனியல் என நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச் சிவஞானபோத நூலைக் கோடற் குரிய அதிகாரிகளாவார் இவரென்பது உணர்த்துதற் கெழுந்தது வருஞ்செய்யுளென்பது:—

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற்—சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந்நூன் மும்மை மலர்க்கு

எனவரும்.

தான்றானச் செய்த வாற்றாற் சீவனென்னும் பெயரினீங்கிச் சிவம் என்று ஓதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாண வகனே, ஒன்று மிரண்டுமாய மலங்களையுடைய விஞ்ஞானகலர்க்கும் பிரள யாகலர்க்கும் முறையே அறிவின்கணின்று அருட்பார்வையா னோக்குதலா னும், தேவகுருவாய் முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கு எனப்படுந் தீக்கையானும் பிறவிக் கேதுவாய பசுத்துவம் நீங்கிச் சிவத் துவம் விளங்கு மாகலான், அவரின் வேறாகிய மும்மலமுடையார்க்கே உரித்து இவ்வுலகத்து அநுபவமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச் சிவஞானபோத நூல் என்க.

அந்தம் வேதாந்தம்; அந்ததரஞ் சித்தாந்தம்; ஆகலின், அதனைப் பெற் றோரது பெருமை கூறுவார், சிவமென்னும் அந்ததர என்றார். என்னும் என்புழிப் படுசொற் றொக்கது. சிந்தை-அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க. நேர்நோக்குதல் - முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையா னோக்குதல். நோக்க-நோக்குதலானென்க. கண் வாசகங்களைக் கூறவே இனம்பற்றிப் பரிசமும் உடன் கொள்ளப்படும். பவம்-ஆகுபெயர். இந் நூல் அநுபவமுடைய தேசிகனு லன்றி விளங்காதென்பார், ஒண் குருவால் என்றார். போதிக்கப்படும் என்பது அவாய்நிலையான் வந்தது. இன்றிந்

* மோஹ ஹரிணோ என்னும் வடசொல் மான் எனத் தற்பவமாயிற்று.

**நூல்** என்பது இந்நூ லென்னும் பொருட்டு. இக்காலத்துரைக்கப்பட்ட நூலெனினு மமையும்; அது, 'தானுரைத்தான்......இன்று' என வருகின்ற வெண்பாவிற் கூறியவாற்றானு மறிக. மும்மை என்றது ஈண்டு எண்ணின்கணின்றது; *"தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல.

நான்காமதிகரணமுடிந்தது.



பயனோத்தின் மூன்றும்பாதமாகிய

## பன்னிரண்டாஞ்சூத்திர முடிந்தது.



## பயனியன் முற்றிற்று.



## உண்மையதிகார முற்றுப்பெற்றது.



திருச்சிற்றம்பலம்.



## சிறப்புப்பாயிரம்.

எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞான நூல்—சிந்தைசெய்து
தா னுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வே துதிருட் டாந்தத்தா லின்று.



சிவஞானபோதத்திற்கு

மாதவச்சிவஞானயோகிகளருளிச்செய்த

## சிவஞானபாடியம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.



* பரிபாடல்.

# கோயிற்புராணம்.

மழைவ ழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள மெங்கும் பெருகுக
தழைக வஞ்செழுத் தோசை தரையெலாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.



ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.
ஸ்ரீ சிவஞானயோகிகள் திருவடி வாழ்க.



௳

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெண்பா முதற்குறிப்பகராதி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விஷய அகராதி.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ரு | கச | றெடுத்துகொண்டு | றெடுத்துக்கொண்டு |
| ஙஎ | ச | சூனியமெவும் | சூனியமெனவும் |
| ஙகூ | உ | முடிவுமெறு | முடிவுபெறு |
| எரு | உச | விதி | விகுதி |
| க0எ | கச | செய்யுளினுள் "மான" | செய்யுளின் "உளமான" |
| கசாஎ | ஙக | ஒரோவென்று | ஒரோவொன்று |
| உ0உ | எ | திரிசரஅணு | திரசரேணு |
| உ0ச | உக | கூசுமாண்டர் | கூர்மாண்டர் |
| ,, | உங | கூசுமாண்டர் | கூர்மாண்டர் |
| உ0சா | க0 | கூசுமாண்டர் | கூர்மாண்டர் |
| உஙஅ | ககூ | எனதுட | இனி எனதுட |
| உஙகூ | ஙச | ஐம்புலன் | இனி ஐம்புலன் |
| உசா0 | உ0 | இவ்வான்மா | இனி இவ்வான்மா |
| ங0அ | ஙகூ | சூத்கிரத் | சூத்திரத் |
| ஙஉங | உசா | மாயாவால் | மாயாவாதி |
| ஙருஉ | ச0 | நெறியைப் | நெறியைத் |
| ஙருஅ | ஙரு | வற்றித்கு | வற்றிற்கு |
| ஙசாங | ங0 | போதம | போதம் |
| ஙசாசா | அ | உணர்த்தும | உணர்த்தும் |
| ஙஎஉ | உஉ | மெனறது | மென்றது |
| ஙகூஉ | உஅ | லஞ்செழுத் | லஞ்செழுத் |
| ச0ச | எ | காணுங்கால | காணுங்கால் |

